# எண்பதில் தமிழ்




பதிப்பாசிரியர்:
ச. வே. சுப்பிரமணியன்
ர. விஜயலட்சுமி

# எண்பதில் தமிழ்

பதிப்பாசிரியர் :

ச. வே. சுப்பிரமணியன்

ர. விஜயலட்சுமி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

டி.டி.டி.ஐ, தரமணி,

சென்னை-600 113.

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Eṇpatil Tamiḷ |
| Editors | : | S. V. Subramanian M.A, Ph.D.<br>Director and Chief Professor.<br>R.Vijayalakshmy D.phil (oxcn)<br>Senior Research Fellow,<br>International Institute of Tamil Studies, T. T. T. I., Taramani, Madras 600 113. |
| Publisher & Copy Right holder | : | International Institute of Tamil Studies<br>T. T. T. I., Taramani,<br>Madras 600 113. |
| Publication Number | : | 46 |
| Language | : | Tamil & English |
| Edition | : | First |
| Date of Publication | : | March 1982 |
| Paper used | : | 18 kg. D/Demy F. White Printing |
| Size of the book | : | 21×18 Cms. |
| Printing types used | : | 10 point |
| Number of Pages | : | xvi+912=928 |
| Number of Copies | : | 1200 |
| Price | : | **Rs 45/- (Rupees forty five)** |
| Printer | : | Novel Art Printers,<br>137, Jani Jan khan Road<br>Madras—600 014<br>Phone : 82731 |
| Artist | : | Anandan |
| Subject | : | Compilation of articles regarding Tamil Studies in 1980. |




**செ. அரங்கநாயகம்**
*கல்வித்துறை அமைச்சர்*

புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை - 600 009.

நாள். 30—3—82.

# அணிந்துரை

தமிழ், உலகில் முக்கியமான மொழிகளில் ஒன்று. தமிழகம் தவிர இலங்கையிலும் மலேசியாவிலும், சிங்கப்பூரிலும் இது ஆட்சி மொழியாக உள்ளது. மோரீஷியஸ், பிஜித் தீவிலும், இலண்டனிலும், தென் ஆப்பிரிக்காவிலும் மிகுதியான தமிழ்மக்கள் வாழ்கிறார்கள். உலகம் முழுவதிலும் தமிழ் மொழியும், இலக்கியமும் வளர்ந்து வருகின்றன. உலக நிலையில் தமிழின் வளர்ச்சியையும், மாற்றத்தையும் ஆண்டுதோறும் கணக்கிடவேண்டும் என்பதற்காக "எண்பதில் தமிழ்" என்ற முயற்சி எடுக்கப்பட்டுள்ளது. இம் முயற்சி வேறு எந்த மொழியிலும் இதுவரை செய்யப்பட்டதில்லை என அறிகிறேன். ஆண்டுதோறும் உலக நிலையில் தமிழ்மொழி இலக்கியம், தமிழர்கள் வாழ்வு இவைகளைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு இதுபோன்ற நூல்களை வெளியிட நிறுவனம் உத்தேசித்துள்ளது அறிந்து மகிழ்ச்சி. இம்முயற்சி பாராட்டத் தக்க ஒன்று. இந்நூலில் கட்டுரை எழுதியுள்ளவர்களை மனமுவந்து பாராட்டுகிறேன். இதுபோன்ற நூல்களை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தொடர்ந்து வெளிக்கொணர வேண்டுமென விரும்புகிறேன்.

**செ. அரங்கநாயகம்**

# Foreword

Tamil is one of the ancient languages of the world. It is also one of the main languages in Sri Lanka, Malaysia, and Singapore. Apart from these countries and Tamilakam it is also spoken by people in Mauritius, Trinidad, Fiji Islands and South Africa. Tamil being the oldest Dravidian language it is taken up as a language for research in the Universities in Europe, USSR, USA and other countries where there are Indological centres.

The International Institute of Tamil Studies, Madras, has been trying for the last few years to bring an up to date survey of publications in all fields every year in order to view about Tamil Studies going on throughout the World. This effort did not materialise until now due to various reasons. We are glad at least this year we could bring out a volume on the Tamil works of 1980 containing thirty five articles in and about Tamil on various fields of study. Though we wished to have papers on all subjects numbering to about seventy we could only receive thirty five papers from the authors who agreed to write the papers. Attempts are now being made to ensure that we cover all areas of Tamil studies in our next issue 'Eṇpattoṉṟil Tamiḻ (எண்பத்தொன்றில் தமிழ்).

The Year 1980 has important claims to make in the field of Tamil prose and poetry. Prose which is the vehicle of modern fiction in Tamil, has flourished during this year. The well-known weekly magazine **'Ananda Vikatan'** announced handsome prizes for the best novels and short stories. As a result 1980 has witnessed the creation of some of the best novels. M. Mehta's **Cōla nilā** (The moonlight of Colas) bagged the first prize for the historical novel and **Verkal** (roots) by Krisnamani won the first prize for social novels. Anuradha Ramanan's **Ciraikaḷ** got the first prize for short-

stories and 'Koṭutāṇṭāta kolaṅkaḷ' (decoration that did not stride over the line) of Pratibha Rajagopalan the second prize.

Among the novels of 1980 'Māyamāṉ Vēṭṭai' (Hunting the illusory Deer) of Indra Parthasarathy **Putiya Arttaṅkaḷ** (New Meanings) of Mahrishi, **Uḷḷukkuḷḷēyē** (In the inside) of V.A.M. are worth special mention. Short stories which fill the pages of all Magazines are abundant in number. Yet only a few of them remain in the minds of the readers while the rest get erased from memory with the passage of time. Among the short story collections published in 1980 Ki. Rajanarayana's **Appapillai Ammapillai** (Father's child Mother's child) and Sujatha's **Vāṉattil Oru Mauṉatārakai** have left deep imprints in the readers minds.

In the field of drama Sujatha's **Aṭimaikaḷ** and Merina's **Camiyāriṉ Māmiyār** stand ahead of the other plays written during this year.

Poet Kannadasan was awarded 1980 award by the Sakitya Academy. One of the remarkable works which appeared during this year is Aranka Srinivasan's epic on Mahatma-Gandhi, **Maṉiṭa Teyvam Kānti Kātai.** Karu Nagarajan's **Tamile Ellam,** sings about Tamil visualising it in fourty four different aspects. Poems written in free verse, have gained popularity in the recent times. Poets like Sajahan and Rohini deserve special mention in this connection.

Coming to biographies written in this year, **Periyāriṉ-Carittiram** by Venu and **Centamil Cenakal Ceṅkor** of Aravāṇaṉ may be considered as the most remarkable works of this year. six works have been brought out during this year under the Tamil Nadu Government's Translation programme. A. K. Adhitar has translated the **Iliad** of Homer and the National Book Trust has brought out a collection of short stories translated from the Gujarati language.

Institutions and Samayams and Publishing houses have-been taking special Interest in the Publication of new books

and old manuscripts which lie unpublished. The International Institute of Tamil Studies has published more than eighteen books, out of which five are edited from Tamil unpublished manuscripts, and six on Tamil culture and civilization. It is worth mentioning here that out of their Institute publications the following four have received prizes from the Government of Tamil Nadu for the best Publications in Tamil. **Costumes of the Tamils** (Tamiḻar Āṭaikaḷ) and **The concept of mind of the Tamils** bagged the first prizes. **Practices and beliefs of the Tamils** (Tamiḻar Paḻakkavaḻakkaṅkaḷum Nampikkaikaḷum) and the **Folk Arts of the Tamils** (Tamilaka Nāṭṭuppuṟak kalaikaḷ) were awarded second prizes. The year 1980 is an important year also for the research activities of the International Institute of Tamil Studies. Seminar on Tamil Culture held in Mauritius is another important event of this year.

I hope this volume will serve as a good informative guide for about 1980, all those who are interested in Tamil. I am thankful to all the contributers who helped us in bringing out this volume. As it is a pioneer attempt, it may have its defects. Efforts will be taken to improve the standard in the next volume.

I am very thankful to the Co-editor R. Vijayalakshmy and also others who have helped us in publishing this work.

S.V. SUBRAMANIAN

# முன்னுரை

எண்பதில் தமிழ், தமிழ் ஆய்வுலகில் ஒரு புதுமுயற்சி. இத் தொகுப்பைத் தொடக்கமாகக் கொண்டு, ஆண்டுதோறும் உலகின் பல்வேறு பகுதிகளிலும் நடைபெறும் தமிழ் வளர்ச்சிக் கான பணிகள் பற்றிய செய்திகளைத் திரட்டி, மதிப்பீடு செய்து, ஆய்வுக் கண்ணோட்டத்துடன் நூல்வடிவில் தரத் திட்டமிட் டுள்ளது இந்நிறுவனம். இங்குள்ள கட்டுரைகள் பெரும்பாலும் கொடுக்கப்பட்ட தலைப்புத் தொடர்பான செய்திகளைத் திரட்டித் தருவதுடன், அவற்றினை ஆய்வுக் கண்ணோட்டத் துடன் மதிப்பீடு செய்வதாகவும் அமைகின்றன. இதனால், ஒரு ஆண்டில் தமிழில் பல்வேறு துறைகளிலும் நடைபெற்ற முயற்சி களை ஒரே இடத்தில் பார்க்கும் வாய்ப்பு படிப்போர்க்கும் குறிப் பாக ஆய்வாளர்கட்கும் கிடைக்கின்றது.

எழுபத்தொரு தலைப்புகளில்* கட்டுரைகள் இத்தொகுதியில் இடம்பெற வேண்டும் எனத் தொடக்க நிலையில் நாம் விழைந்த போதும், முப்பத்து ஐந்து கட்டுரைகளே இங்கு இடம் பெற்றுள் ளன.

எல்லாத் தலைப்புகளிலும் எழுதுவதற்கு ஆசிரியர்கள் ஒத்துக் கொண்டபோதும் குறித்தநேரத்தில் அவர்தம் கட்டுரைகள் எமக்குக் கிட்டாமையினால் கிடைத்த முப்பத்து ஐந்து கட்டுரை களைக் கொண்டே இந்நூலை உருப்பெறச் செய்துள்ளோம். அறிவியல், வரலாறு, தத்துவம், சமயம், புதைபொருள் கல்வெட்டு ஆய்வு, திரைப்படம், தொலைக்காட்சி, விவசாயம் ஆகிய துறை கள் தொடப்படாமலே விடப்பட்டமை வருத்தத்திற்குரியதே ஆயினும், 'எண்பத்தொன்றில் தமிழ்' எனும் தொகுப்பில் இவை நிறைவுபெற நம் நிறுவனம் முயன்று வருகின்றது.

இதுபோலவே, செய்திகள் மாத்திரமே அமைந்து பொது மதிப்பீடு ஏதும் இல்லாத கட்டுரைகளும் சில இங்கு இடம்பெற் றுள்ளன. எடுத்துக்காட்டாக வானொலியும் தமிழும் பற்றிய கட்டுரை, நிகழ்ச்சிகளின் உள்ளடக்கத்தை பெற்றுக்கொள்வதில் இருந்த இடர்ப்பாட்டினால், நிகழ்ச்சி நிரல்கள் மாத்திரமே

பொருள்வாரியாகப் பகுத்துக் கொடுப்பதாக அமைந்துள்ளது. செய்திகளைப் பொறுத்தமட்டில் கட்டுரைகள் பெருமளவு நிறைவு கொண்டுள்ளன. மதிப்பீட்டு நிலையில் எல்லாமே இன்னும் முழுமை பெறவேண்டும். எதிர்காலத்தில் வெளிவரும், ஆண்டு ஆய்வுத் தொகுப்புகளின் கட்டுரைகள் முழுமைபெற்று விளங்க முயல்வோம். இயன்றவரை ஆய்வு நெறிமுறைகட்குட்பட்டே கட்டுரைகளின் அமைப்பு உருவாக்கம் பெற்றுள்ளது. குறைகளை ஆய்வுலகம் குறிப்பிடுமானால் எதிர்வரும் தொகுப்புகளில் அவை நிறைவு பெற முயல்வோம்.

கீழே தரப்பட்ட எழுபத்தொரு தலைப்புகள் தவிர்ந்த ஏனைய தலைப்புகளும் இவற்றுடன் சேர்க்கப்படலாம் என அறிஞர் உணர்ந்தால், அவற்றை எமக்குத் தெரிவித்தால், உலகம் இது போன்ற எதிர்வரும் தொகுப்புகளின் நிறைவிற்கு உதவும்.

இந்நூலை அச்சேற்றும் முயற்சியில் துணைநின்ற டாக்டர் க. காந்தி, மெய். சந்திரசேகரன் இருவருக்கும், அழகிய முறையில் அச்சேற்றிய நாவல் ஆர்ட் அச்சகத்தினருக்கும் எம் நன்றி.

*** படைப்பிலக்கியம்**

1. மரபுக்கவிதை
2. புதுக்கவிதை
3 நாடகங்கள்
4. நாவல்கள்
5. சிறுகதை
6. குழந்தை இலக்கியங்கள்

**இலக்கிய ஆய்வு**

7. இலக்கிய ஆய்வு நூல்கள்
8. இலக்கியத் திறனாய்வு நூல்கள்
9. கட்டுரைகள்
10. ஆய்வு ஏடுகள்
11. ஒப்பிலக்கியம்

**இலக்கண ஆய்வு**

12. இலக்கண ஆய்வு நூல்கள்
13. மொழியியல் ஆய்வு
14. பேச்சுமொழி ஆய்வு

**பிற**

15. தமிழ்ப் பயிற்று முறை
16. வரலாற்று நூல்கள்
17. அறிவியல் நூல்கள்
18. பயண நூல்கள்
19. இசை பற்றிய ஆய்வு
20. நாட்டுப்புற இயல் ஆய்வு
21. மொழிபெயர்ப்பு நூல்கள் கட்டுரைகள்
22. தத்துவ நூல்கள்
23. சமய நூல்கள்
24. வசனநூல்களும் உரையும்
25. புதைபொருள் கல்வெட்டு ஆய்வு
26. மருத்துவ நூல்கள்

**பதிப்புக்கலை**

27. பதிப்பகங்களும் தமிழும்
28. சுவடிகள் நூலாக வெளி வந்தவை

**ச. வே. சுப்பிரமணியன்**
**ர. விஜயலட்சுமி**

## கட்டுரை அளித்தோர்


1. இரா. குமரவேலன்
இரா குருநாதன்
தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை 600030

2. சு. வேங்கடராமன்
தமிழியல்துறை
மதுரை காமராசர்
பல்கலைக்கழகம்
மதுரை—625021

3. இரா. தமிழரசி
ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை—600113

4. வே. சீதாலட்சுமி
ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை—600113

5. ஏ. என். பெருமாள்
இணைப்பேராசிரியர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை—600113

6. வீ. அரசு
ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை 600113

7. அ. ம. சத்தியமூர்த்தி
தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்
கழகம்
சென்னை 600 005

8. செ. வைத்தியலிங்கன்
தமிழ்த்துறை
அண்ணாமலைப் பல்கலைக்
கழகம்
அண்ணாமலை நகர் 608002

9 த. அழகப்பராசு
ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை 600113

10. ஜி. ஜான் சாமுவேல்,
முதுநிலை ஆய்வாளர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை – 600113

11. இரா. பாலசுப்பிரமணியம்
ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை—600113

12. கே. எம். இருளப்பன்
எஸ் ஏ. பி. சி
கொத்தனூர்
பெங்களூர்—560077

13. சரசுவதி வேணுகோபால்
தமிழியல் துறை
மதுரை காமராசர் பல்கலைக்
கழகம்
மதுரை—625021

14. பூ. சுப்பிரமணியம்
முதுநிலை ஆராய்ச்சி
உதவியாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை—600 113

15. அ. பிச்சை
மாநில முறைசாராக்
கல்வி மையம்
18, ஆதம்ஸ் சாலை
சென்னை—600005

16. ஆ. சிவலிங்கனார்,
தொல்காப்பியத் திட்ட
முதுநிலை அலுவலர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை—600113

17. சு. திருநாவுக்கரசு
ஸ்ரீமத். சி. பா. சு. தமிழ்க்
கல்லூரி
மயிலம்

18. பூ. சொல் விளங்கும்
பெருமாள்
பேராசிரியர்
தமிழ்த்துறை
என். எம். எஸ். எஸ். வி என்.
கல்லூரி
மதுரை —19

19. கரு. நாகராசன்
உதவிப் பேராசிரியர்
குருநானக் கல்லூரி
சென்னை 600032

20. கே. பகவதி
உயர்நிலை ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை—600113

21. ஆ. கந்தசாமி,
2, மேட்டுத்தெரு
சென்னை—600001

22. மா. சு. சம்பந்தம்
81, லிங்கிச்செட்டித் தெரு
சென்னை-600 001

23. ஆர். ஆளவந்தார்
ஆராய்ச்சி உதவியாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை-600 113

24. தா. வே. வீராசாமி,
இணைப்பேராசிரியர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113

25. ம. ரா. போ. குருசாமி
'செந்தில்'
தாமு நகர், புலியகுளம்,
கோயம்புத்தூர்-146 018

26. வி. முருகன்
இணைப்பேராசிரியர்
அரசினர் கலைக்கல்லூரி
நந்தனம்
சென்னை-600 035

27. ச.வே. சுப்பிரமணியன்
பேராசிரியர், இயக்குநர்
அன்னிதாமசு
முதுநிலைஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம், சென்னை-113

28. ர. விஜயலட்சுமி
முதுநிலை ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை-600 113

29. ந. கடிகாசலம்
முதுநிலை ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை-600 113

30. எம். தங்கணமுத்து
தலைவர்
உலகத்தமிழ் பண்பாட்டு
இயக்கம், மோரீசியசு

31. க. ப அறவாணன்
15, முனிரத்தினம் தெரு
தமிழ்க்கோட்டம்
அமிஞ்சிக்கரை
சென்னை-600 029

33. எஸ். தாஸ்
வி.சி. ஜெயராம்
சிட்னி தமிழ்ச் சங்கம்
த.பெ. இலக்கம் 111,
ஆஷ்வீல்ட் 2131
ஆஸ்திரேலியா

32. இ. பாலசுந்தரம்
விரிவுரையாளர்
தமிழ்த்துறை
கொழும்புப்பல்கலைக்கழகம்
கொழும்பு, ஸ்ரீலங்கா

34. ந. சிவகாமசுந்தரி
நூலகர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை-600 113

35. இரா. தண்டாயுதம்
இந்தியப் பகுதி
மலாயாப் பல்கலைக்
கழகம்
மலேஷியா

# உள்ளே

ஆகஸ்டு 1980-ல் மோரீசியசில் நடைபெற்ற உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்க இரண்டாவது மாநாடு



மாண்புமிகு நிதி அமைச்சர் இரா. நெடுஞ்செழியன், மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம், மாண்புமிகு மோரீசியசு நாட்டுப் பிரதமர் ராம்கூலம் உலகத்தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர்

# எண்பதில் தமிழ் வார இதழ்கள்

இரா. குமரவேலன்
இரா. குருநாதன்

## மலர்ச்சி

தமிழில் வெளிவரும் வார இதழ்களின் வளர்ச்சி போற்றத்தக்க வண்ணம் உள்ளது. வேகமாக இயங்கிவரும் நாகரிகப் போக்கிற்குத் தக இதழுலகிலும் அவ்வப்பொழுது மாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன. மாறிவரும் பண்புகளை ஏற்பதும், மறுப்பதும் எல்லாக் காலங்களிலும் நிகழ்வதாகும். அவை இதழ்களில் பல்வேறு வண்ணங்களில் மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருக்கின்றன.

நிலைபேறு பெற்ற இதழ்கள், புதிய இதழ்களின் போக்கால், புதுமணம் பெறத் துடிக்கின்றன. சில புதிய இதழ்கள் மணக்கின்றன; சில மலர்ந்தவுடனே வாடியும் விடுகின்றன. இஃது இன்றைய இதழ் உலகின் இயல்பு. இதற்குக் காரணம் என்ன என்பது படைப்போருக்கும் படிப்போருக்கும் இடையே உள்ள இரகசியம்; நடக்கும் அற்புத நாடகம்.

வாரா வாரம் மலர்கின்ற சில வார இதழ்களைக் கோத்துப் புதுமைக் கவிஞர் ஒருவர் கவிதை யாத்துள்ளார்:

''எப்போதும் விகடப் பேச்சு
நெற்றியில் குங்குமம்

கூந்தலில் குமுதமலர்
கையில் சாவிக்கொத்து
ராணிபோன்ற கம்பீர நடை
இப்படியாக வருகிறாளே ஒரு தேவி
அவளிடம் என் இதயம்
பறிபோய் விட்டது!'' (ஆனந்தவிகடன் 23-3-80)

## பருந்துப் பார்வை

இன்றைய நிலையில் வார இதழ்கள் பெரும்பாலும் பணத்தையும் படிப்போரையும் எண்ணித்தான் செயல்பட்டு வருகின்றன. வார இதழ்கள் வழங்கும் செய்திகளைக் கண்டு செல்வது இக்கட்டுரையின் நோக்கம்.

எண்பதாம் ஆண்டில் வெளிவந்த வார இதழ்களின் ஒட்டு மொத்த உணர்வினைக் காணும்பொழுது திரைப்படம், அரசியல், சமூகம் ஆகிய மூன்றன் அடிப்படையில் இயங்கிவருவதைக் காணலாம். இவை தொடர்பான துணுக்குச் செய்தி, கட்டுரை, கதை முதலியன இதழ்களின் வளர்ச்சிக்கு உறுதுணை புரிவன, அனைத்து வார இதழ்களும், இவற்றின் அடிப்படையில் பொழுது போக்கினை முதன்மையாகக் கருதி உலா வருவன. திரை, அரசியல் ஆகிய இரண்டற்கும் முதன்மை தருகின்ற இதழ்களே அதிகம்.

## அரசியல் மேடை

எண்பதாம் ஆண்டின் தொடக்கமே தேர்தல் களமாக அமைந்தது. இதனால் வார இதழ்களுக்கு இதுவே முதற் பிரச்சினையாக விளங்கியது. தேர்தலுக்கு முன் இந்திராவின் நிலை குறித்தும், ஜனதா கூட்டணி குறித்தும் செய்திகள் வெளி வந்தன. பாராளுமன்ற, சட்ட மன்றத் தேர்தல்கள் அடுத்தடுத்து நடந்ததனால் ஆண்டு தொடங்கி முதல் ஆறு மாதங்களுக்கு வார இதழ்கள் தாங்கள் விரும்பிய வண்ணம் எழுதித் தம் அரசியல் பசியைத் தீர்த்துக் கொண்டன.

இந்திய அரசியல் பற்றியும், தமிழக அரசியல் பற்றியும் பல்வேறு கண்ணோட்டங்கள் செலுத்தப்பட்டன; இந்திரா வெற்றி பெற்றதைப் பல இதழ்கள் வாழ்த்தி வரவேற்றன. அலிபாபா இதழ் இந்திராவின் வெற்றியைப் பலபடப் புகழ்ந்து தேர்தலுக்கு முன்னும் பின்னும் சிறப்புறச் செய்திகளை வெளியிட்டது.

தமிழக அரசியலில் எம். ஜி இராமச்சந்திரன் (எம். ஜி. ஆர்) குறித்துப் பாராட்டும் ஏடாக உள்ள இதயம் பேசுகிறது (இ) அவருக்குத் துணைநின்றது; சாவி கலைஞருக்குத் துணைநின்றது. அலிபாபா எம். ஜி. ஆர் சார்பாகவே எழுதி வந்தது. வேறு சில இதழ்கள் நடுநிலை வகித்தன.

இந்திரா பேட்டி அலிபாபா (4-5-80) இதழிலும், தமிழக முதல்வர் பேட்டி கல்கி (26-6-80) இதழிலும் வெளிவந்தன.

தேர்தலுக்கு முன்பாக 'யாருக்கு உங்கள் ஓட்டு?' (இ) 'இளம் வாக்காளர்கள் இதயம் திறந்து பேசுகிறார்கள்' (கல்கி) முதலிய பகுதிகள் வெளிவந்தன. ராணி இதழில் திருவாளர்கள் அப்துல் சமது, குமரி அனந்தன், சுப்பு, காளிமுத்து முதலானோர் தமிழகத் தேர்தலில் யாரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதைப் பற்றி எழுதினார்கள் (ராணி 4, 11-5-80).

தேர்தலுக்குப் பின் கட்சி மாறிய பா. ராமச்சந்திரன் (பா. ரா அவர்களின் பேட்டி கல்கி (7-9-80) இதழில் வெளிவந்தது.

சென்ற ஆண்டில் மறைந்த தலைவர்களான வி.வி. கிரி, சஞ்சய் காந்தி ஆகியோரைப் பற்றி அனைத்து இதழ்களும் தலையங்கம், கட்டுரை ஆகியனவற்றை வெளியிட்டன.

## பரந்த வெளி

உலகம் நோக்கிய பார்வையில் இதழ்களின் நோக்கு விரிந்து சென்றது ஒரு பாராட்டுக்குரிய சிறப்பாகும். உலக வரலாற்றில் இடம்பெறத்தக்க நிகழ்ச்சிகள் இவ்விதழ்களில் இடம்பெற்றன. ஆப்கானிஸ்தான் மீது ருசியாவின் அத்துமீறல், ஈரான்-ஈராக் பூசல், மன்னர் ஷா மறைவு, ரீகன் வெற்றி, பிரஷ்னேவின் இந்திய வருகை, சார்லஸ் இளவரசர் வருகை, மாவோவிற்குப் பின் சீனாவின் நிலை ஆகிய முக்கிய உலக நிகழ்ச்சிகள் வார இதழ்களின் பரந்த நோக்கிற்கு எடுத்துக்காட்டாயின.

சி.ஐ.ஏ. அமெரிக்க உளவுநிறுவனத்தின் செயல்கள் (அலிபாபா 21-9-80), போர்க்களத்தில் உசேன்-கோமெனி (தேவி 13-10-80), அமெரிக்கக் கைதிகள் (ராணி 10-2-80), விஷவாயு ஆயுதங்கள் (அலிபாபா 28-9-80) முதலியன குறித்தும் கட்டுரைகள் எழுதப் பெற்றன.

## ஆன்மீக விளக்கு

சில இதழ்கள் சமய ஆன்மீகக் கட்டுரைகளை வெளியிட்டு மக்கள் மனத்தில் நல்லெண்ணத்தையும் நல்லொழுக்கத்தையும் வளர்க்க விரும்பின. கல்கி இதில் மிகுந்த அக்கறை காட்டியுள்ளது. காமகோடி பீடத்தின் அருளாசிக் கட்டுரைகள், தீபமங்கள ஜோதி என்ற தலைப்பில் வாரியாரின் அருளுரைகள் ஆகியன இதில் வெளி வந்தன. கவிஞர் கண்ணதாசன் கல்கியின் இறுதிப் பக்கத்தில் ஒவ்வொரு வாரமும் சமயக் கருத்துகள் வழங்கினார். சத்திய சாயிபாபாவைப் பற்றிய கட்டுரை (கல்கி 14-12-80) ஒன்றும் கல்கி இதழில் வெளிவந்தது. பிற இதழ்களில் ஆன்மீகத்திற்கு மிகுதியான இடம் தரப்படவில்லை. [பயணத் தொடர்கட்டுரை களின் வாயிலாகச் சில ஆன்மீகக் கருத்துகள் தெரிவிக்கப்பட்டன.

## இலக்கிய ஓடை

இலக்கியக் கட்டுரைகளை வார இதழ்களில் காண்பது அரிது இருப்பினும் சில இதழ்கள் சுவையான இலக்கியக் கட்டுரைகளைத் தர முனைந்துள்ளன. கலைஞர் மு.கருணாநிதியின் 'குறளோவியம்' குங்குமம் இதழில் தொடர்ந்து வெளியாகியுள்ளது இங்குக் குறிப் பிடத்தக்கது. வழக்கறிஞர் மு. மு இஸ்மாயில் அவர்கள் ஆனந்த விகடனில் (விகடன்) எழுதிய கட்டுரைத்தொடர் பக்திமணம் பரப்பும் தன்மையில் அமைந்தது. மயிலை இலக்கிய வட்டத்தில் சிலம்புச் செல்வர் பாரதி குறித்து நிகழ்த்திய சொற்பொழிவுத் தொடர் கல்கியின் இறுதிப் பக்கத்தை அணி செய்தது.

## நிகழ்ச்சிப் பொறி

இந்த ஆண்டில் ஓரளவு பரவலாகப் பேசப்பட்ட சில நிகழ்ச்சிகள் இதழ்களில் இடம்பெற்றன. குடந்தையில் நடை பெற்ற மகாமகம், திருப்பத்தூர் வெடிகுண்டு நிகழ்ச்சி, திரிபுர மண்டலத்தில் நடந்த கொலை, வத்தலக்குண்டு வெடிவிபத்து, பெங்களூரில் நடந்த நரபலி முயற்சி, காஞ்சி காமாட்சி யானை முதலிய செய்திகள் குறித்த கட்டுரைகளும் செய்திகளும் இதழ் களில் வெளிவந்தன. பொன்விழாவினைக் கொண்டாடிய ஆனந்த விகடன் குறித்துக் கல்கி 'அண்ணன் வீட்டுக் கல்யாணம்' (2-11-80) என்னும் தலைப்பில் கட்டுரை வெளியிட்டது. இதயம் பேசுகிறது இதழிலும் (2-11-80) இதுகுறித்த கட்டுரை ஒன்று வந்தது.

## கைகாட்டி

வெளிநாடு பற்றிய அக்கறையையும் ஆர்வத்தையும் சில இதழ்கள் பயணக்கட்டுரை வழி ஊட்டின; காட்டின. கல்கியில் அகிலனும், தினமணிக் கதிரில் க. இராசாராமும், குங்குமத்தில் ஜெயகாந்தனும், இதயம் பேசுகிறது இதழில் மணியனும் பயணக் கட்டுரையைத் தொடர்ந்து எழுதி வந்துள்ளனர். வடநாட்டுப் பயணம் பற்றித் திருமதி சௌந்தரா கைலாசம் கதிரில் எழுதி யுள்ளார். சாவி இதழில் ஆசிரியரின் மேல்நாட்டுப் பயணம் குறித்த கட்டுரைகள் வெளிவந்தன. ஓவியக் கலைஞர் தாணு, இயக்குநர் ஸ்ரீதர், சூரியர் தமிழ்ப்பதிப்புப் பொறுப்பாளர் மணவை முஸ்தபா, இசைக்கலைஞர் சீர்காழி கோவிந்தராசன், டி.எம். சௌந்தரராசன் முதலானோர் தாங்கள் சென்றுவந்த நாடுகளைப் பற்றிக் கட்டுரைகள் எழுதியுள்ளனர்.

## புண்ணிய நெறி

தமிழ் வார இதழ்கள் சில பக்தர்களை ஈர்க்கப் புனிதப் பயணங்களை மேற்கொண்டுள்ளன. விகடனில் பரணீதரனின் 'கேரளவிஜயம்' வெளிவந்தது; சத்தியின் பெருமைகளைத் 'தேவி தரிசனம்' ஆக்கிப் பொன். பாஸ்கர மார்த்தாண்டன் இதயம் பேசுகிறது இதழில் எழுதினார். இவற்றோடு புகைப்படங்களும் ஓவியங்களும் வெளிவந்தன.

## சிக்கலுக்குள் சிந்தனை

அன்றாடம் உள்ள பிரச்சினைகளைக் கட்டுரையாக்கித் தருவதில் வார இதழ்களுக்குப் பெரும்பங்கு உண்டு. சர்க்கரை, மண்ணெண்ணெய், எரிபொருள் தட்டுப்பாடு, விலைஉயர்வு ஆகியன குறித்துக் கட்டுரைகளும் செய்திகளும் துணுக்குகளும் பல இதழ்களில் வெளிவந்தன. மக்கள் உணர்வுகளைக் காட்டும் வாயில்களாக இவை அமைந்தன.

சென்னைக் கடற்கரை-தாம்பரம் தொடர் மின்வண்டிப் பாதையை 'அகலப்பாதையாக மாற்றினால் சென்னை மக்களின் நெருக்கடிச் சிக்கல் தீரும் என்பதை (இ. 30-1-80) ஒரு கட்டுரை விளக்கியது. பெண்கள் வேலைக்குப் போவதில் உள்ள சிக்கல் களைக் குறித்து (இ. 7-12-80) மற்றும் ஒரு கட்டுரை வெளியானது.

'நாலு பேர்சொல்கிறார்கள்' என்ற தொடர் பகுதியைத்தினமணிக் கதிர் வெளியிட்டு, அதில் அன்றாடச் சிக்கல்கள் பற்றிய செய்தி களை வெளியிட்டது.

## பொருளாதாரப் பூக்கள்

நாட்டுப் பொருளாதாரத்தைக் குறித்துச் சில இதழ்களில் கட்டுரைகள் வெளிவந்தன. வாணிக வருமானம் குறித்த கட்டுரை ஒன்றைக் குங்குமம் (14-12-80) 'சினேர்ஜியம்' என்ற தலைப்பில் வெளியிட்டிருந்தது. ஆறு வங்கிகளின் அரசுடைமை பற்றிய கட்டுரைகள் கல்கியில் (1-4-80, 1-6-80) இடம்பெற்றன. பெட்ரோலுக்கு மாற்று எரிபொருள் பற்றிய செய்தி குங்குமம் (7-12-80) இதழில் காணப்படுகிறது. மக்கட் பெருக்கத்திற்கு எதிரான போர் பற்றிக் கல்கி (25-5-80) கட்டுரை தந்தது. கொரியா நாட்டுப் பொருளாதாரம் குறித்து, அந்நாடு சென்று திரும்பிய பா. நடராசன் (ராணி 13-1-80) ஒரு கட்டுரை வடித் துள்ளார்.

## மோதல் அலை

ஒரு கருத்தின் அடிப்படையில் இரண்டு பேரை மோதவிட்டுக் காண்பது இதழ் வளர்ச்சியில் ஒரு நிலை. குமுதம், கல்கி, விகடன் ஆகிய இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளில் இதனைக் காண முடிகிறது. உலகத்தமிழ் மாநாட்டிற்குக் கலைஞர் அவசியம் வர வேண்டுமா? வேண்டாமா என்ற கட்டுரை குமுதம் இதழில் வந்தது, ஓர் எடுத்துக்காட்டு.

## வாழ்வின் வடிகால்

வாழ்வில் சொந்த அனுபவங்களைக் கட்டுரையாக்கித் தருகின்ற போது படிப்போருக்குச் சுவை உண்டாகும். உமா கேசவன் எழுதிய 'தங்கச் சுரங்கத்தில் நானும் என் கணவரும்' என்ற பகுதி (குமுதம்) இந்த வகையினைச் சாரும். இலங்கை எழுத்தாளர் டொமினிக் ஜீவாவின் வாழ்க்கையிலிருந்து சில சுவை யான நிகழ்ச்சிகளைக் குமுதம் (6-11-80) வெளியிட்டிருந்தது. தீபாவளிச் சிறப்பிதழில் அக்கட்டுரை முப்பது பக்கங்களில் அமைந்திருந்தது. நாஞ்சில் மனோகரன் தம் அரசியல் அனுபவங் களைத் தேவி (8-10-80) இதழில் வெளியிட்டார். கலைஞர் தம்மைப் பற்றிய அனுபவங்கள் சிலவற்றைக் குறித்துத் தேவியில்

(12-11-80) எழுதினார். கவிஞர் கண்ணதாசன் தம் வாழ்க்கை) வரலாற்றின் ஒரு பகுதியைக் கல்கி இதழில் 'மனவாசம்' என்ற; தொடரில் எழுதி வந்தார். வாழ்க்கை வரலாறு பகுதிகளில் ராஜாஜி, சஞ்சய் காந்தி ஆகியோர் பற்றிக் கட்டுரைகள் கல்கியில், தொடர்ந்து வந்தன.

## நினைவில் நின்றவை

திரைப்படக் கலைஞர்கள் தம் வாழ்க்கை அனுபவங்களை வார இதழ்களில் எழுதிவந்துள்ளனர். 'ஆலுப்ரியா சொல்கிறேன்', என்ற தலைப்பில் சாவி இதழில் நடிகை ஸ்ரீப்ரியா தொடர்ந்து எழுதினார்; நடிகர் கமலஹாசன் குமுதத்தில் தம் கடந்த கால வாழ்வினைக் குறித்துத் தொடர் கட்டுரையாக வெளியிட்டார் இது முடிவு பெறாமல் நின்றது. இசைக்கலைஞர் இளையராஜா சாவியிலும், நடிகை வித்யா கல்கியிலும் தத்தம் வாழ்க்கை பற்றித் தொடராக்கியுள்ளனர். ஏ. வி. எம். சரவணன் கதிரில் 'நினைத் தேன் சொல்கிறேன்' என்ற தலைப்பில் திரையுலக அனுபவங் களைத் தொடர்ந்து எழுதியுள்ளார். இயக்குநர் காஜா தமக்குப் பிடித்த கலைஞர்கள், எழுத்தாளர்கள் பற்றி அலிபாபா (7-9-80) இதழில் எழுதினார். 'என் தோட்டத்தில் மலர்ந்த ஐந்து ரோஜாக்கள்' என்னும் தலைப்பில் தம் கீழ்ப் பணியாற்றிய இயக்குநர் ஐவரைப் பற்றி மாதவன் கல்கியில் (22-6-80) எழுதி யுள்ளார்.

எழுத்தாளர் சிலர் தங்கள் வாழ்க்கையில் அவ்வப்போது நிகழ்ந்த சில சுவையான நினைவுகளைச் சில இதழ்களில் வழங்கி யுள்ளனர். லக்ஷ்மி, சிவசங்கரி, இந்துமதி ஆகியோர் தங்கள் தலை தீபாவளி நன்னாளைக் குறித்துக் குமுதம் தீபாவளிச் சிறப்பிதழில் எழுதியுள்ளனர்.

## பட்டிமன்றம்

வார இதழ்களில் நடப்புச் சிக்கல்களைப் படிப்போரிடையே விவாதித்து வெளியிடுகின்ற போக்கும் காணப்படுகின்றது. சமூகம் கலை, அரசியல் தொடர்பான கருத்துக்கள் இதில் இடம்பெற லாயின. இதழ்களைப் பொறுத்தவரை நடுவர் இல்லாத பட்டி மன்றம் இது. 'கந்தசஷ்டியில் ஆபாசமா?' (குங்குமம்), 'குழந்தை யாரிடம் வளர்வது நல்லது' (குமுதம்), 'பாங்குகள் அரசுடை

மையா?' (கல்கி), 'சிவாஜி சகாப்தம் முடிந்துவிட்டதா?' (கல்கி), முதலியன வார இதழ்களைப் பட்டிமன்றங்களாக ஆக்கின. 'சிவாஜிக்கு அரசியல் தேவையா?' என்பதை வெளியிட்டது இதயம் பேசுகிறது. 'திரைக்கதை என்றால் என்ன?' என்பது பற்றிக் கல்கியில் (22-6-80) இயக்குநர் ஏ. எஸ். பிரகாசம் எழுதினார். 'திரைக்கதைக்கு இலக்கணம் உண்டா?' என்பது பற்றி ஆய்ந்து எழுதியது இதயம் (21-12-80).

## நோய்நோக்கு

அறிவியற் கட்டுரைகள் சில அவ்வப்போது இதழ்களில் வெளிவந்துள்ளன. மருத்துவத்தைப் பற்றித் தொடர்ந்து சில வார இதழ்கள் கட்டுரையாக்கித் தந்துள்ளன (சான்று: கல்கி). பெண்களுக்கான மருத்துவக் குறிப்புகளைக் கல்கி 'டாக்டர் பேசுகிறார்' என்ற பகுதியில் தொடர்ந்து வெளியிட்டு வந்தது. 'பழக்கத்திற்கு அடிமையாதல்' (கல்கி 13-1-80), 'வலி இல்லாமல் சுகப்பிரசவம்' (தேவி 3-12-80), 'கழுத்தில் ஏற்படும் கட்டி' (ராணி 27- 4- 80) ஆகியன பற்றிக் கட்டுரைச் செய்திகள் வெளிவந்தன. 'கருச்சிதைவு' (கதிர் 11-5-80), உடல்நலம் மது அருந்துவதால் பாதிக்கப்படுமா?' (விகடன் 17-2-80), 'காந்த சக்தியால் தீரும்சில நோய்கள்' (24-2-80) ஆகிய பொருள்களில் மருத்துவச் செய்திகள் இதழ்களில் வந்தன. 'பாட்டி வைத்தியம்' ராணி இதழில் தொடர்ந்து வந்த மருத்துவப் பகுதி.

## பயிரியல் செய்தி

'பார்த்தினியம்' என்ற செடி வகையால் மனித உயிருக்கு ஏற்படும் தீங்கு குறித்துக் கல்கி (19-10-80) ஒரு கட்டுரை வெளியிட்டிருந்தது. குட்டையாக வளர்க்கும் மரஞ் செடிகளின் கலையான 'போன்சாய்' கலை பற்றிய செய்திகளைக் கல்கியும் (18-5-80) விகடனும் (16-8-80) வெளியிட்டன.

## உளவியல் எண்ணம்

இவ்வாண்டு இதழ்கள் சிலவற்றில் உளவியல் தொடர்பான கட்டுரைகள் வெளிவந்துள்ளன. 'கல்யாணம் ஆனவர் மீது காதல் ஏற்படுவது ஏன்?' என்பதனைத் திரைப்படக் கலைஞர்களைக் கொண்டு உளவியல் அறிஞர்களின் துணையோடு குமுதம் கட்டுரை ஒன்றனை உருவாக்கியது. பெண்கள் மனநலிவு கொள்வதை உளவியல் நோக்கில் கட்டுரையாக்கியிருந்தது கல்கி (27-4-80).

## விண்வெளி வேட்கை

விண்வெளி ஆராய்ச்சியில் இந்தியா வளர்ந்துள்ள நிலை குறித்துப் பலகட்டுரைகள் 1980-இல் தமிழ் இதழ்களில்வந்துள்ளன. பாஸ்கரா (குங்குமம் 2.11 80), 'ரோகிணி' (அலிபாபா 27- 7- 80; கல்கி 3-8-80) ஆகிய விண்வெளிக் கலங்கள்பற்றி நல்ல கட்டுரைகள் தீட்டப்பட்டன.

விண்வெளியைப் பற்றிப் பொதுவான செய்திகளைப் 'பகலில் தோன்றும் இரவு' (17-2-80) என்னும்தலைப்பிலும், 'விண்வெளியில் மனிதனின் குரல்' (30-11-80) என்னும் தலைப்பிலும் ஒரு பக்கக் கட்டுரைகளாக விகடன் வெளியிட்டிருந்தது.

## படவிழாச் சோலை

1980-இல் பங்களூரில் நடந்த 'பிலிமோத்சவ் 80' விழா சில வாரங்களுக்கு வார இதழ்களின் சிறந்த உணவாயின. எல்லா வார இதழ்களும் விழாவில் திரையிடப்பட்ட படங்கள் பற்றி எழுதின. குமுதம், குங்குமம் கல்கி, கதிர், இதயம், சாவி, தேவி ஆகியன பிலிமோத்சவ் படங்களுக்கு மிகுந்த மதிப்பினைக் கொடுத் திருந்தன.

## இசையும் ராகமும்

சங்கராபரணம் தெலுங்குப்படமாயினும் தமிழுலகிலும் அதன் பெருமை பலவாகப் பேசப்பட்டது. கல்கி, விகடன் ஆகியவை இதற்கு அட்டைப்படச் சிறப்பினையும் அளித்திருந்தன. இயக்குநர் பாரதிராஜா அலிபாபா இதழில் சங்கராபரணத்தையும் அதனை இயக்கிய விசுவநாத்தையும் மிகவும் பாராட்டி எழுதி யுள்ளார் (9- 3- 80 . புது முசங்களைக் கொண்டே வெற்றி கண்ட 'ஒருதலைராகம்' பற்றிய செய்திகளையும் கல்கி வெளியிட்டி ருந்தது; அட்டைப்படமும் வெளியிட்டது.

## பேட்டிக் கட்டுரை

திரையுலகக் கலைஞர்கள் பற்றிய பேட்டிகள் பல்வேறு வார இதழ்களில் இடம்பெற்றன; ராணி இதழில் இத்தகைய பேட்டிகள் மிகுதியாக வந்துள்ளன. நடிகைகளிடம் கேள்விகள் என்ற வகையில் 'ஸ்ரீபிரியா 80' குங்குமத்தில் இடம்பெற்றது. நடிகைகள் வித்யா, ஆலம் ஆகியோரின் பதில்கள் கதிரில் வெளிவந்தன.

## முற்றுப்புள்ளிகள்

திரையுலகில் சிறந்து விளங்கி, 1980-ஆம் ஆண்டில் மறைந்த இளம் நடிகை 'ஊர்வசி' சோபாவைக் குறித்துப் பல கட்டு ரைகளை இதழ்கள் வெளியிட்டன. அலிபாபா, ராணி, தேவி ஆகியன இவ்வகையில் முன்னின்றன. 'சோபாவும் நானும்' என்ற தலைப்பில் இயக்குநர் பாலு மகேந்திராவின் தொடர் கட்டுரை குமுதத்தில் இடம்பெற்றது. 'சோபாவின் மரணம் - சில சந் தேகங்கள், சில விடைகள்' குறித்து அலிபாபா (11-5-80) எழுதி யிருந்தது. சோபாவைப் பற்றிய கவிஞர் வைரமுத்துவின் 'முற்றுப் புள்ளி' என்னும் கவிதை விகடனில் சிறப்பாக வெளியிடப்பட்டது.

சிரிப்பு நடிகர் சுருளிராஜன், பழம்பெரும் நடிகை கே பி. சுந்தராம்பாள் ஆகியோர் மறைவு குறித்தும் கட்டுரைகளும் செய்திகளும் வார இதழ்களில் இந்த ஆண்டு வெளிவந்தன நடிகை லக்ஷ்மிஸ்ரீ கொலை தொடர்பான கட்டுரையினை விளக்க மாக வெளியிட்டிருந்தது அலிபாபா (20-7-80).

## கிசுகிசு

திரைப்பட நடிக, நடிகையரின் தனிப்பட்ட வாழ்க்கை ரகசி யங்களை ஒளிவு மறைவாக வார இதழ்கள் வெளியிட்டு வந்தன. குமுதமே இதில் முன்னோடியாகவும் முதன்மையாகவும் திகழ்ந்தது. 'கிசுகிசு' என்ற தலைப்பில் திரைப்பட உலகின் அந்தரங்கச் செய்தி இடம்பெற்றது. பல இடங்களில் 'கிசுகிசு' என்ற சொல்லாட்சி பரவியது. ஏனைய சில இதழ்களில் கிசுகிசு செய்திகள் 'கொத்சு' (கதிர்), 'மூடுமந்திரம்' (இதயம் பேசுகிறது) என்ற தலைப்புகளில் இடம்பெற்றன.

## ஆங்கில வாடை

திரைப்படச் செய்திகளுக்கு ஆங்கிலத்தில் தலைப்பளித்து இதழ்கள் வெளியிடுவது குறிப்பிடத்தக்கது. ஃபோகஸ், ஆன் திஸ்பாட் (கல்கி), சினிமினி ஜூஸ், ஸ்டுடியோரவுண்ட் (அலிபாபா), லைட்ஸ் ஆன் (குமுதம்). சினிஸ்டில்ஸூம் சிந்தனையும் (கல்கி) ஆகிய தலைப்புகள் இங்கு நினைக்கத்தக்கன.

திரைப்படச் செய்திகள் 'வானவில்' (தேவி), 'சுற்றிவந்த போது', 'சின்ன சின்ன சினிமா செய்திகள்' (கதிர்) ஆகிய தலைப்பு களிலும் வெளிவந்தன.

## ஆய்வுநெறி

திரைப்படங்களைப் பார்க்கத் தூண்டும் வகையிலோ, விமரிசனங்களைப் படிக்கத் தூண்டும் வகையிலோ திரைப்படம் பற்றிய திறனாய்வு இதழ்களில் இடம்பெற்றது. ஒவ்வோர் இதழும் தனக்கு உரிய வகையில் தனித்தனி பாணியை உருவாக்கிக் கொண்டுள்ளது.

வெளியூர்க்காரர்களைத் தேர்ந்தெடுத்து அவர்கள் வாயிலாகத் திரைப்பட விமரிசனத்தை வெளியிட்டது ஆனந்த விகடன். அதிலேயே நூற்றுக்கு இவ்வுளவு மதிப்பெண் என்று மதிப்பீடும் செய்தது. அதன்பின் திரைப்படத்திற்குப் படிநிலையில் - (கிரேடு) - வழங்கிவருகிறது. குமுதத்தில் வரும் விமரிசனம் தருமம், சலகம், கும்பம் ஆகிய மூவரால் எழுதப்பட்டு வருகிறது. நளினி சாஸ்திரி என்பவரால் எழுதப்பட்ட திரைப்பட விமரிசனம் கல்கியில் வந்தது. ராணி ஒவ்வொரு திரைப்பட விமரிசனத்திற்கும் தலைப்பிடும் முறையைக் கையாண்டு வருகிறது.

இயக்குநர் பாக்கியராஜ் தம் படமான 'பாமா ருக்மணி' படத்திற்குக் குமுதத்தில் விமரிசனம் எழுதினார் (26- 6- 80). தமிழ்த் திரைப்படங்கள் மட்டுமன்றிப் பிறமொழிப் படங்களுக்கும் விகடன், கல்கி, கதிர், சாவி ஆகியன விமரிசனம் எழுதி வந்துள்ளன.

குமுதம் இதழ் ஒன்றில் (11- 9- 80) இருபத்துநான்கு பிறமொழித் திரைப்படங்களைக் குறித்துச் சுருக்கமான செய்திகள் படங்களோடு இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

## விளையாட்டரங்கம்

விளையாட்டில் ஈடுபாடு கொண்டோரையும் மனநிறைவு கொள்ளச் செய்தன வார இதழ்கள்; அவ்வப்போது பெருமளவில் நடைபெறும் விளையாட்டுப் போட்டிகளைப் பற்றிய செய்திகளை அடிக்கடி இவை வெளியிட்டன. சென்ற ஆண்டில் நடந்த 'ஒலிம்பிக்' பற்றி அனைத்து வார இதழ்களும் செய்திக்கட்டுரை, துணுக்கு, பேட்டி முதலியனவற்றை வெளியிட்டன. ஒலிம்பிக் பந்தயம் குறித்து அலிபாபாவில் தலையங்கம் (10- 8 -80) எழுதப் பெற்றது. கல்கி 'ஒலிம்பிக் ஸ்பெஷல்' சிறப்பிதழைக் கொண்டு

வந்தது. ஒலிம்பிக் இந்திய ஆட்டக்காரரான பாஸ்கரனை நடிகை சுபாஷிணி கண்ட பேட்டி குமுதம் இதழிலும் (11-9-80), நடிகை ரூபா கண்ட பேட்டி தேவி இதழிலும் (17-12-80) இடம் பெற்றன.

உலகப்புகழ்பெற்ற விளையாட்டு வீரர்களான முகமது அலி, போர்க், யாமகூச்சி ஆகியோரைப் பற்றிய கட்டுரைகளும் அட்டைப்படங்களும் சில வார இதழ்களில் வெளிவந்தன. முகமது அலியின் பேட்டி ராணி (10-2-80) இதழில் இடம்பெற்றது.

## சிறுகதைகள்

சிறுகதைகள் பொழுதுபோக்குத் தன்மை வாய்ந்ததாய் சுவை பயக்கும் வகையில் இவ்வார இதழ்களில் வெளியிடப்பெற்றன. சிறுகதைகளின் கருப்பொருளாக வரதட்சணைக் கொடுமை, கற்பு பறிபோதல், வன்முறை சந்தேகம், அலுவலகப் பெண்கள், கள்ளக் காதல், பொருந்தா உறவு, மணவிலக்கு, பிரிந்தோர் கூடுதல், மாணவர் சிக்கல், தொழிலாளர் பிரச்சினை, மதுவின் கொடுமை, தீண்டாமை, வறுமை, இனக் கலவரம், தாழ்த்தப்பட்டவர் படும் இன்னல், கிராமியச் சிந்தனை, காதல் தோல்வி முதலியன இடம் பெற்றுள்ளன.

'பிரச்சினைக் கதைகள்' என்ற தலைப்பிலேயே இத்தகைய பல் வேறு சிக்கல்களைக் குறித்து இதயம் பேசுகிறது கதைகளை வெளி யிட்டு வந்தது.

ஆனந்த விகடனில் பொன்விழாச் சிறுகதைகள் நான்கு இடம் பெற்றன. இதுவரை எந்த இதழும் தராத வகையில் சிறுகதை களுக்குப் பரிசு அளித்ததை இங்குக் குறிப்பிடாமல் இருக்க முடி யாது. அனுராதா ரமணன் எழுதிய 'சிறைகள்' 'முதல் பரிசு பெற்றது. இரண்டாம் பரிசு பிரதிபா ராஜகோபாலன் எழுதிய கோடு தாண்டாத குலங்கள்' என்னும் சிறுகதைக்குக் கிடைத்தது. மல்லிகா ரங்கராஜன் எழுதிய 'தரும பரிபாலனம்' என்ற கதைக்கும், லட்சுமி பாலனின் 'பொதுக்கிணறு' என்னும் கதைக்கும் மூன்றாம் பரிசுகள் கிடைத்தன. சிறுகதை வளர்ச்சியில் ஆனந்த விகடனின் இந்தப்பணி பாராட்டுக்கு உரியதாகும்.

கல்வி, தினமணி கதிர் சாவி, இதயம் பேசுகிறது முதலான வற்றில் சிறுகதைகளுக்கான பரிசுப் போட்டிகள் இடம் பெற்றன. தங்கச் சாவியைப் பரிசாக அளித்தது சாவி. கேட்டு வாங்கிப் போட்ட கதை போட்டிக்கு வந்த கதைகள் (கதிர்), உங்களிடம்

ஒரு கதை இருக்கிறதா? அட்டைப்படத்திற்கு ஒரு கதை (குமுதம்) ஆகிய தலைப்புகளில் அவ்வப்போது போட்டிச் சிறுகதைகள் வெளி வந்தன. அமரர் கல்கியின் நினைவாகச் சிறுகதைப் போட்டியைக் கல்கி இதழ் நடத்தியது.

## தொடர்கதை

வார இதழ்களில் தொடர் கதைகள் மிகவும் விரும்பிப் படிக்க படுகின்றன. தொடர் கதைகளில் மேல்நாட்டுப் பாணி கலந்த புதுமைப் போக்கு நன்கு தெரிகிறது. எழுத்தாளர் சுஜாதா, புஷ்பா தங்கதுரை, ராஜேந்திர குமார், இந்துமதி ஆகியோரி டையே இந்தப் பாதிப்பு மிகுதி. இவர்களுடன் லக்ஷ்மி, சிவசங்கரி, அனுராதா ரமணன், வாஸந்தி, சாண்டில்யன் ஆகியோர் தொடர் கதைத் துறையில் முன்னணியினராக விளங்குகின்றனர். இளம் எழுத்தாளர்களான பாலகுமாரன், பட்டுக்கோட்டை பிரபாகர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். வரலாற்று நாவலுக்கான விகடன் பொன்விழாப் பரிசினைப் பெற்றவர் கவிஞர் மு. மேத்தா; இவர் ஓர் இளைய தலைமுறை எழுத்தாளர்.

## கதவடைப்பு

குமுதம் தீபாவளிச் சிறப்பிதழில் சுஜாதா எழுதிய 'கறுப்பு சிவப்பு வெளுப்பு' என்ற வரலாற்றுத் தொடர் (6-11-80) ஒரு குறிப்பிட்ட இனத்தவரை இழிவுபடுத்தியதாகப் பலர் தெரிவித் ததன் காரணமாகச் சில இதழ்களிலேயே (4-12-80) நிறுத்தப் பட்டது வருந்துதற்குரிய செய்தி. மிக அருமையாகத் தொடங்கிய ஒரு சிறப்பான கதை அரும்பிலேயே நசுக்கப்பட்டது பெரும் பாலான வாசகர்களுக்கு ஏமாற்றத்தையே கொடுத்தது. குமுதம் தனக்கு ஏற்பட்ட சிறிய இழப்பைப் பொருட்படுத்தாது கதையைத் தொடர்ந்திருக்க வேண்டும் என்றே பலரும் கருதினர்.

ஆனந்தவிகடனில் மர்மத் தொடர்கதைக்கான பரிசைப் பெற்ற அருள் சுப்பிரமணியத்தின் 'தூரத்து ஓவியங்கள்' 21-12-81 இதழிலிருந்து வெளிவரத் தொடங்கியது. ஏற்கனவே வெளிவந்த ஒரு கதையே இது என்ற செய்தி கிடைத்தவுடன் இத்தொடர் கதையும் நிறுத்தப்பட்டது.

## கலைஞர்களின் கதை

திரைப்படத் துறையில் உள்ளவர்கள் எழுதிய தொடர்கள் சில வார இதழ்களில் வெளிவந்தன. நடிகை ஜெயலலிதா 'உறவின்

கைதி' என்ற தலைப்பில் கல்கியில் தொடர்ந்து எழுதிவந்தார். இயக்குநர் மகேந்திரனின் 'மெட்டி' சாவி இதழில் தொடர்கதையாக இடம்பெற்றது. 'மௌன கீதங்கள்' இயக்குநர் நடிகர் பாக்கியராஜ் அவர்கள் எழுதிய தொடர்; குமுதத்தில் வெளியான இத்திரைப்படக்கதை முழுமையாக அதில் நிறைவு பெறவில்லை.

## மறுபிறவி

ஏற்கனவே நூலாக வெளிவந்த நாவல்களில் சில மீண்டும் இதழ்களில் தொடர்கதைகளாக வாரந்தோறும் மகிழ்ச்சியுலா வரத்தொடங்கின. தி. ஜானகிராமனின் 'அம்மா வந்தாள்' என்ற புதினம் சாவி இதழில் தொடர்ந்து வந்தது. அரு இராமநாதன் எழுதிய வரலாற்றுப் புதினமான 'வீரபாண்டியன் மனைவி' தேவி இதழில் மீண்டும் இடம்பெற்றது.

இந்த வகையில் கல்கி மற்றவர்களுக்கு வழிகாட்டியாக விளங்கியதை இங்கு நினைவுகூர்தல் வேண்டும்.

## கவிதைக் கனிகள்

எண்பதாம் ஆண்டு இதழ்கள் சிலவற்றில் மரபும் புதுமையும் கொண்ட கவிதைகள் சில இடம் பெற்றன. விகடன், குங்குமம், கதிர், சாவி, அலிபாபா ஆகியன கவிதைகளை அவ்வப்போது வெளியிட்டு இத்துறைக்கு ஆதரவு நல்கின. 'கவிதைக் கொத்து' என்ற பகுதியில் அலிபாபா புதுக்கவிதையை வாரந்தோறும் வெளியிட்டுள்ளது. கல்கி இதழ் மரபுக் கவிதைகளையும் புதுக்கவிதைகளையும் ஆதரித்தது. சிறுசிறு துணுக்குக் கவிதைகள் விகடன் மாணவர் பக்கத்தில் இடம்பெறலாயின. கலைஞர் மு. கருணாநிதி தலைமையில் நடைபெற்ற விகடன் 'பொன்விழாக் கவியரங்கம்' தொடர்ந்து அவ்விதழில் வெளிவந்தது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

கவிதைப்பக்கம் என்ற பகுதி கதிரில் இடம்பெற்றது. இப்பகுதியில் மு. மேத்தா, மதிவாணன் ஆகியோர் தொகுத்தளித்த பலரின் கவிதைகள் இடம்பெற்றன.

'நடிக்க வருமுன் உடுத்த உடையில்லை; நடிக்க வந்தபின் உடுத்த விடவில்லை' என்பது போன்ற கவிதைத் துணுக்குகள் (விகடன்) இதழ்களில் வெளிவந்தன.

தேர்தல் காலத்தை ஒட்டிய நாட்டு நடப்புகளையும், நிகழும் விளைவுகளையும் காட்டுகிறது ஒரு புதுக்கவிதை.

''ஒரு கொடிக் கம்பத்திற்கு
நடந்த சண்டையில்
அடுத்த நாள்
ஊர் முழுவதும்
அரைக்கம்பத்தில்
கொடிகள் பறந்தன'' (விகடன் 6-1-80)

புதுக்கவிதை குறித்துச் சாவி இதழில் (13-4-80) ஒரு சிறிய கட்டுரையும் வெளிவந்துள்ளது.

வார இதழ்கள் பல வெளிவந்த போதும் கவிதைக்கு மிகவும் சிறப்பான இடம்—தரப்பட வேண்டிய இடம்—தரப்படவில்லை என்றே கூறவேண்டும்.

## நாடகம் நடக்கிறது

எண்பதில் வார இதழ்களில் நாடகங்கள் மிகவும் குறைவாகவே இடம் பெற்றன. இதழ்களில் நாடகம் மெல்ல நடைபோட்டது என்றாலும் ஆனந்த விகடன் 'நாடக ஸ்பெஷல்' சிறப்பிதழை வெளியிட்டுப் பெருமை தேடிக் கொண்டது. நாடக ஸ்பெஷலில் சிறந்த நாடகாசிரியர்களான கோமல் சுவாமிநாதன், விசு, மௌலி, கிரேஸி மோகன், வெங்கட், சுஜாதா ஆகியோரின் சிறு நாடகங்கள் வெளிவந்தன.

மெரீனாவின் 'சாமியாரின் மாமியார்' விகடனில் தொடர் நாடகமாக வாரந்தோறும் வந்தது; 'சுபமுகூர்த்த பத்திரிகை' என்னும் நாடகத்தை முழுநீள நாடகமாக ஒரே இதழில் சாவி வெளியிட்டிருந்தது.

'மோடி மஸ்தான்' நாடகத்திலிருந்து சில பகுதிகளைக் குமுதமும் (25-12-80) 'கிஷ்கிந்தா காண்டத்'திலிருந்து சில பகுதிகளை விகடனும் (21-12-80) வெளியிட்டன.

விகடன், கல்கி, அலிபாபா முதலிய இதழ்கள் அவ்வப்போது நாடக விமரிசனங்களை அளித்தன.

## துணுக்குத் தோரணங்கள்

துணுக்குகள் பக்கங்களை நிரப்புவதோடல்லாமல், அறிவுக்கும் விருந்து படைப்பன. பல்வேறு செய்திகளையும் சுருங்கிய அளவில் வெளியிடுவதால் படிப்போரும் அவற்றைக் கவனிக்கத் தவறு

வதில்லை. எனவே, வார இதழ்களில் துணுக்குகளுக்குத் தனிப் பெருமை உண்டு.அரசியல், திரைப்படம், அறிவியல், கலை, மெய்ஞ் ஞானம், விளையாட்டு, மருத்துவம் முதலானவை குறித்த துணுக்குச் செய்திகள் வார இதழ்களின் பக்கங்களில் மேலும் கீழும், இடமும் வலமும், மூலைப் பகுதிகளிலும், கிடைக்குமிடந் தோறும் வெளிடப்பெற்றன. இவற்றில் திரைப்படம் பற்றிய துணுக்குச் செய்திகளே மிகுதி.

இன்றைய வார இதழ்களின் இன்றியாமையாத பகுதியாக இது விளங்குகிறது. உ. ராஜாஜி போன்ற பலர் இத்துறையில் சிறந்து தம் பெயரை நிலைநாட்டியுள்ளனர்.

## காதோடு காதாக

குமுதத்தில் ‘காதோடு’ என்ற பகுதியில் அரசியல் துணுக்கு இடம்பெற்றது. ‘யோசனையும் கீசனையும்’, ‘சில்லி கேள்வியும் சென்ஸிபிள் பதிலும்’ முதலானவை பொதுவான துணுக்குப் பகுதி களாகக் குமுதத்தில் வெளிவந்தன. காற்று வாக்கில் (விகடன்), முத்தாய்ப்பு (கதிர்), சிண்டு (இதயம்) முதலிய தலைப்புகளில் பொதுத் துணுக்குகள் இடம்பெற்றன.

## சிரிப்பு மணிகள்

நகைச்சுவைத் துணுக்கு இல்லாத வார இதழ்களே இல்லை. குமுதத்தில் மட்டும் சிரியுங்கள் 45 தடவை’, ‘பூர்த்தி செய்து சிரி யுங்கள்’, ‘இதற்கு ஒரு ஜோக் எழுதுங்கள்’, ‘எருமை பற்றிய நூறு நகைச்சுவைத் துணுக்குகள்’ ஆகியன வெளிவந்தமை நகைச் சுவைக்கு இதழ்கள் தந்த சிறப்பிடத்தை விளக்குவதாகும். சாவி இதழின் ‘சிரிப்புச் சந்தை’ பகுதி குறிக்கத்தக்க ஒன்று. ராணியில் வாரந்தோறும் ‘சிரிப்புக்கொத்து’ என்னும் நகைச்சுவைப் பகுதி இடம்பெற்றது.

## நகைச்சுவை நாயகர்கள்

குறிப்பிட்ட ஒருநபரைக் கற்பனையில் கேலிச் சித்திரமாக்கித் துணுக்கு நாயகர்களாக உலவ விடுவது எண்பதில் வெளிவந்த சில வார இதழ்களின் போக்கு. இதில் விகடன் முதலிடம் வகிக்கிறது. ‘சிரிப்புத் திருடன் சிங்காரவேலன்’, ‘வீட்டு புரோக்கர் புண்ணிய கோடி’, ‘ரெட்டைவால் ரெங்குடு’ முதலிய பெயர்களில் படங் களோடு இவர்கள் பவனிவந்தனர்; நடுப்பக்கத்திலும் இடம்பெற்ற

ஓவியர் மதன், வாணி, ஸ்ரீதர் ஆகியோர் விகடனில் சிரிப்பு மலர்களை வண்ண ஓவியமாக்கித் தந்தனர். 'பெயிண்டர் பெல்லி 'யப்பா' (குமுதம்), ஜீனியஸ் ஜம்பு' (குங்குமம்), 'வம்பன் வெங்கு', 'பியூன் முனுசாமி', 'தரகர் தணிகாசலம்', 'ஆட்டோ ஆறுமுகம்' (கல்கி) முதலிய நகைச்சுவை நாயகர்கள் ஏனைய இதழ்களில் இடம்பெற்றனர்.

## வாண வேடிக்கை

நடப்பு நிகழ்ச்சிகளுக்கு ஏற்றாற்போல் துணுக்குச் செய்திகள் மலர்கின்றன. சென்னைக் கண்நோய், தேர்தல், தேர்வுக்காலம், கிரிக்கெட், வெங்காய விலை உயர்வு, கல்லூரி நுழைவு, விண்வெளிப்பயணம், ஏப்ரல் முதல் நாள் முதலியன அவ்வக் காலங்களில் நகைச்சுவைத் துணுக்கிற்குப் பொருளாயின. வார இதழ்களில் நகைச்சுவை விருந்தளிப்பதில் உ. ராஜாஜி, வெ. சீதாராமன் ஆகியோர் முன் நிற்கின்றனர்.

## வண்ண உலகம்

எண்பதாம் ஆண்டு இதழோவியங்களில் ஏற்பட்ட மாறுதல்களை இங்குக் குறிப்பிட்டாக வேண்டும். கறுப்பு வெளுப்பு ஓவியங்களிடையே வண்ண நிறத்தில் வரையப்பட்ட ஓவியங்களையும் காணமுடிகிறது. குமுதம், விகடன், இதயம், கல்கி ஆகிய இதழ்களில் வரும் பல வண்ண ஓவியங்கள் இதழுக்கு அழகு சேர்ப்பனவாய் உள்ளன.

## ஜெ'யின் சிறப்பு

வார இதழ்கள் அனைத்திலும் ஓவியர் ஜெயராஜின் (ஜெ) ஓவியங்கள் இடம்பெற்றுள்ளன. குங்குமம், குமுதம், கல்கி, கதிர், ராணி, தேவி, அலிபாபா, சாவி ஆகிய இதழ்களில் ஜெ'யின் கவர்ச்சி ஓவியங்கள் வெளிவந்தன. இவற்றில் வெள்ளை, கறுப்பு நிறங்களில் 'கேக் வாஷ்' செய்யப்பட்டுக் கவர்ச்சியோடு கதைகளைப் படிக்கத் தூண்டும் வகையில் அமைந்துள்ளன. பாலுணர்ச்சியை ஊட்டுவனவாய் அமைந்த இவரின் ஓவியங்கள் பற்றி இதயம் பேசுகிறது இதழில் (12-10-80)ஒருவர்,''ஒரு வரிக்காக ஓவியம் போடும் ஜெயராஜ்...அந்த ஒரு வரியை, அந்தக் கதையில் தேடுவதற்காகவே அக்கதையைப்படிப்பது'' என்பதை நினைவூட்டி எழுதியிருந்ததை இங்குக் கூறுவது பொருந்துவதாகும்.

ஓவியர்களில் மணியன்செல்வன், ராமு, மாருதி, லதா, வர்ணம், ஸோபியா முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

## கருத்துப் படங்கள்

அரசியல் கருத்துப்படங்கள் நடப்பு நிலையைச் சுட்டிக்காட்டுவதற்காக வார இதழ்களில் தொடர்ந்து வருகின்றன. ஓவியர்கள் தாணு, கோபுலு, ஸ்ரீதர், பீட்டர், கணு ஆகியோர் கருத்துப் படங்களை வழங்குவதில் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். ஒவ்வொருவரும் தங்கள் நோக்கில் அரசியல் தலைவர்களை வரைந்துள்ளனர். ''அமரர் மாலிதான் இந்தியாவிலேயே அரசியல் கார்ட்டூன்களை முதன்முதலில் கொண்டு வந்தவர்'' என்று குறிப்பிடத்தக்க செய்தியினை ஓவியர் கோபுலு இதயம் பேசுகிறது (2-11-80) இதழில் தெரிவித்துள்ளார். சென்ற ஆண்டில் தேர்தல் பற்றிய கேலிச் சித்திரங்கள் மிகுதியாக வரையப்பட்டன.

## வாசற்கால்

இதழ்களில் தலையங்கம் குறிப்பிடத்தக்க அம்சம். உலக, இந்திய, தமிழக அரசியல்-சமூகம் குறித்த பல்வேறு தலையங்கங்கள் வார இதழ்களில் வெளிவந்துள்ளன. சில வார இதழ்கள் தலையங்கப் பகுதியை மிக அக்கறையோடு அணுகியுள்ளன. இந்திரா, எம். ஜி. ஆர். அரசுகள் குறித்து ஆதரவோடும் அக்கறையோடும் எழுதிய இதழ் அலிபாபா. சில இதழ்கள் துணிவான சில கருத்துகளை முன்வைத்து எழுதின. கட்சி மாறிகளின் தேசம் (தினமணி கதிர் 8-2-80) மண்ணின் மைந்தர்கள் (குமுதம் 10-4-80) ஆகியன குறித்தும் சில இதழ்கள் எழுதின. கல்கி இதழ் அமரர் பாரதி, வ. வே. சு. ஐயர் ஆகியோரின் நூற்றாண்டை நினைவுபடுத்தி எழுதியிருந்தது. ''பாரதி பெயரில் ஒரு பல்கலைக் கழகம்'' என்பதனை தினமணிகதிர் (19-9-80) வெளியிட்டிருந்தது.

கல்கியில் அவ்விதழைக் குறித்தே ஒரு தலையங்கம் வெளிவந்திருப்பதைக் குறிப்பிட்டாகவேண்டும். ''கல்கிக்கு எப்படி எழுத வேண்டும் என்று இவர்களுக்குத் (சிவசங்கரி, புஷ்பா தங்கதுரை...) தெரியும். தப்பித் தவறி வரம்பு மீறினால் சிவப்பு மை நிரம்பிய பேனாக்களுடன் கல்கி ஆசிரியர் குழாம் காத்திருக்கிறது. எந்த எழுத்தாளரையும் ஒதுக்கத் தேவையில்லை. இளம் தலைமுறையினரை அணைத்துப் போக வேண்டும். புதிய ஆற்றல்களைக் கண்டுபிடித்து வழங்க வேண்டும்'' என்பது பத்திரிகை ஸ்தாபக

ஆசிரியர்கள் கருத்து (10-8-80). இதழுக்கெனத் தனிப்பாணி உண்டு என்பதனை இத்தலையங்கப் பகுதி உறுதி செய்கிறது.

உலக அரசியல் பற்றிய செய்திகள் அவ்வப்போது தலையங்கத்தில் இடம்பெற்றன. இந்திய-சோவியத் உறவு, ஈரான்-ஈராக் சண்டை முதலானவை குறித்து அலிபாபா தலையங்கத்தில் எழுதியிருந்தது. கல்கி, விகடன், கதிர், இதயம் ஆகிய இதழ்கள் உலக அரசியல், இந்திய அரசியல் குறித்து விளக்கம் தந்தன. சாவி இதழில் எப்போதாவது தலையங்கம் இடம் பெறும். குங்குமம், ராணி ஆகியவற்றில் தலையங்கம் எழுதப் பெறுவதில்லை.

## பதில்கள் பலவிதம்

எண்பதில் வார இதழ்களில் கேள்வி-பதில் மிகுதியாக இடம் பெற்றுள்ளது. 'அரசு பதில்கள்' அளித்த ஆக்கத்தால் குங்குமம், சாவி, இதயம் பேசுகிறது ஆகிய இதழ்களில் கேள்வி-பதில் பகுதி இடம் பெற்றதெனலாம். ஒவ்வோர் இதழும் பதில்கள் தருவதில் தனிப்பாணியைக் கையாண்டுள்ளது. ஆசிரியர்களின் இயற் பெயரிலும் புனைபெயர்களிலும் பதில்கள் வந்தன. மணியன் பதில்கள் (இதயம்), சாவி பதில்கள் (சாவி), மணிவண்ணன் பதில்கள் (கதிர்). பராசக்தி பதில்கள் (குங்குமம்), கடுகு பதில்கள் (கல்கி) என இதழ்கள் கேள்வி-பதில் பகுதியை வெளியிட்டன.

சாவி இதழில் மட்டும் தமிழன் பதில்கள், இரட்டையர் பதில்கள் எனக் கேள்வி-பதில்கள் இடம்பெற்றன. அலிபாபா பதில்கள் அவ்விதழில் தொடர்ந்து வருகிறது. நீண்ட நாட்களாக ராணி இதழில் 'அன்புள்ள அல்லி' கேள்வி-பதில் வெளிவருகிறது. குமரி அனந்தன் பதில்கள், ஜெயகாந்தன் பதில்கள், கங்கை அமரன் பதில்கள் எனப் பிறரைக்கொண்டு எழுதச் செய்தது தேவி இதழ்.

அரசு பதில்களும் பராசக்தி பதில்களும் ஆர்வமூட்டும் வகையில் சிறப்பாக அமைந்தவை.

## பக்கங்கள் பேசுகின்றன

குறிப்பிட்ட செய்திகளை வழக்கமான இடத்தில் இதழ்கள் வெளியிடுகின்றன கருத்துப்படம் அதனைத் தொடர்ந்து, அடுத்த பக்கத்தில் தலையங்கம் என்பதனை விகடன் வழக்கமாகக் கொண்டுள்ளது.

'ஷாப்பிங் பேஜ்' என்று முதல் நான்கு பக்கங்களுக்கு முன் அல்லது பின் கருத்துப்படம், தலையங்கம் ஆகியன அமைத்தல்

கல்கியின் பாணி. 'ஹலோ' என்ற ஆசிரியரின் பக்கத்தை அடுத்துத் தலையங்கச் செய்தி தருவது அலிபாபா. கதிரில் முதல் நான்கு பக்கங்களுக்குள் கருத்துப்படம், தலையங்கம் ஆகியவை இடம் பெற்றன.

விகடனில் நடுப்பக்கத்தில் பெரும்பாலும் படங்களோடு கூடிய நகைச்சுவைத் துணுக்கு வெளிவந்தது. ஏனைய இதழ்கள் நடுப் பக்கத்தில் திரைப்படச் செய்திகள் அல்லது பொதுச்செய்திகள் ஆகியவற்றிற்கு இடமளித்தன. சில வார இதழ்களின் கடைசிப் பக்கங்களில் ஒரு பக்கக் கட்டுரை இடம்பெற்றது சோ கதிரிலும் கவிஞர் கண்ணதாசன் கல்கியிலும் கடைசிப் பக்கத்தினை நிறைத் தனர்.

## இடமும் எண்ணமும்

ஓரிடத்தையோ அன்றித் தெரிந்த மனிதர் ஒருவரைப் பற்றியோ எழுதுவதனை வழக்கமாகக் கொண்டுள்ளன சில வார இதழ்கள். கதிரில் 'இந்த வாரம் இந்த இடம்' என்ற பகுதி இடம்பெற்றது. தன்னோடு தொடர்பான நண்பர்களைப் பற்றிக் கவிஞர் கண்ணதாசன் 'இந்த வாரம் சந்தித்தேன்' (குமுதம்) பகுதியில் எழுதினார். தனிமனிதரிடம் காணப்பெறும் பண்பு களைக் காட்சித் தலைவர்களிடம் பிடித்த/பிடிக்காத பண்புகளைக் குறித்துக் குமுதம் வெளியிட்டிருந்தது.

'அவரவர் கஷ்டம்' என்ற தலைப்பில் அன்றாட வருவாய்க்கு உழைக்கும் மக்களில் சிலரை வெளிப்படுத்தியிருந்தது குமுதம். முன்னாள் ஆளுநர்கள் ஷா, பட்வாரி, முன்னாள் இராணுவத் தலைவர் மானக்ஷா ஆகியோர் குறித்து சனார்த்தனம் இதயம் பேசுகிறது இதழில் எழுதியிருந்தார்

## இசை களஞ்சியம்

இசை, நடனம் முதலான கலைத் துறைகளில் சிறந்தோரை ஆண்டாண்டு அறிமுகப்படுத்தி வார இதழ்கள் எழுதின இசைக் கலைஞர் டாக்டர் சங்கரைப் பற்றிச் சாவி (6-1-80) எழுதியது. விருது பெற்ற நால்வர் என்ற தலைப்பில் டி. என். கிருஷ்ணன், சோமு, எஸ். வி. சகஸ்ரநாமம், சித்ரா விஸ்வேஸ்வரன் ஆகி யோரைப் பற்றி விகடனில் செய்திக் கட்டுரை (21-12-80) வெளி வந்தது. மகரிஷி ரமணரின் புகழ்பரப்பும் பாடகி குமாரி சாரதா, சுலோசனா நடராசன் ஆகியோரைப் பற்றிக் குமுதம் (31-7-80)

ஒரு கட்டுரை எழுதியிருந்தது. நடனக் கலைஞர்களான குமாரி ஸ்வர்ணமுகி பற்றி விகடனிலும் (21-12-80), சித்ரா விஸ்வேஸ்வரன் பற்றிக் கல்கியிலும் (14-12-80) கட்டுரைகள் வெளிவந்தன. இசை யுலகில் இரட்டையர்கள் பற்றிக் கல்கி (28-12-80) எழுதியது; சோமு பற்றிய தலையங்கம் (21-12-80) கல்கி இதழில் இடம் பெற்றது. டி. கே. ஜெயராமன் பற்றியும் ஒரு கட்டுரையைக் கல்கி (10-8-80) வெளியிட்டிருந்தது.

## கனி கொய்தல்

வார இதழ்கள் சில நூல்களைப் பற்றிய செய்திகளையும் அவ்வப்போது வெளியிட்டுள்ளன. நூல் மதிப்புரை கல்கி தவிரவேறு எந்த ஓர் இதழிலும் இடம்பெறவில்லை. 'நாலு பேரிடம் நாலு நூல்கள்' என்ற பகுதியில் நூல் மதிப்புரைகளைச் சுருக்கமாக வெளியிட்டுள்ளது கல்கி. கல்கியின் 'அலைஓசை' புதினத்தைப் பற்றிய விரிவான திறனாய்வுக் கட்டுரைகள் (20-1-80;30-3-80) அச்சானது மகிழ்ச்சி தரும் செய்தியாகும்.

'பாரதிதாசனைப் பற்றிய சில விஷயங்கள்' என்ற தலைப்பில் குமுதம் (28-8-80) அவரைப் பற்றிய நூல் ஒன்றிலிருந்து செய்திகளைத் திரட்டித் தந்துள்ளது. இந்தியப் புதினங்களில் அதிகப் பக்கங்களைக் கொண்ட 'அவகாசிகா' என்னும் மலையாள நூலை அறிமுகப்படுத்தியிருந்தது குமுதம். 'வலை' என்ற கவிதை நூலில் இருந்து 'கருவாட்டு முனி' என்ற நீண்ட புதுக்கவிதையினைச் சாவி வெளியிட்டிருந்தது.

## நூல் நுவல்பவை

முகமது யூனஸ் எழுதிய 'பெர்சன், பேஷன்ஸ் அண்ட் பெர்சனாலிடி' என்ற அரசியல் வரலாற்று நூலை 'அரசியல், ஆட்கள், ஆவேசங்கள்' என்னும் தலைப்பில் தொடராக வெளியிட்டு வந்தது குமுதம் இதழ்.

பி. என். ஓக் எழுதியுள்ள 'தி தாஜ்மகால் எ டெம்பிள் பேலஸ்' என்னும் நூலை மொழிபெயர்த்துத் தொடர் கட்டுரையாக வெளியிட்ட குமுதம் (17-4-80 முதல் 19-6-80) அதனைத் தொடர்ந்து மறுப்புக் கட்டுரையையும் வெளியிட்டது (26-6-80 முதல் 11-9-80).

'எடெர்னல் இந்தியா' என்ற நூலிலிருந்து இந்திரா பற்றிய கருத்துகளைக் குமுதம், இதயம் பேசுகிறது ஆகிய இதழ்கள் வெளி

யிட்டன. சுஜாதாவும் இராசாராமும் எழுதிய 'காசளவில் ஓர் உலகம்' என்ற 'கம்ப்யூட்டர்' பற்றிய விஞ்ஞான நூலின் சில பகுதி களை விகடன், குமுதம் ஆகியவை அச்சிட்டன.

## காலக் கணக்கு

சில வார இதழ்கள் வருங்காலத்தைப் பற்றிய நம்பிக்கையைச் சோதிடத்தின்வழியே காட்டிவந்துள்ளன. பீட்டர் வீடால் கதிரில் பிறந்த நாள் பலனையும், வாரப் பலனையும் எழுதி வருகிறார். எண் கணிதப்படி அமையும் பலன்களை வாரந்தோறும் வெளியிடு கிறது இதயம் பேசுகிறது. 'இந்த வாரம் எப்படி' என்ற பகுதி ராணியில் இடம்பெற்றது. 'ரீகன் வெற்றி பெறுவாரா?' என்பதைச் சோதிடத்தின் துணைகொண்டு ஆராய முற்பட்டது குமுதம் 23-10-80). சோதிடத்தின் வழி சஞ்சய் மரணத்தை முன் கணித்த பாபுராவ் படேலின் கட்டுரை குமுதம் இதழில் (31-7-80) வெளி வந்தது.

## வாயும் வீச்சும்

எழுத்தாளர்களிடையே மோதலை ஏற்படுத்திக் கருத்து வேறு பாடுகளை அறியக் காரணமாயிருந்தன சில இதழ்கள். 'சாகித்ய அகாதெமி' பற்றி இராஜம் கிருஷ்ணன் தெரிவித்த கருத்திற்கு மாறான செய்திகளை ஹேமா ஆனந்ததீர்த்தன் கல்கி இதழில் வெளியிட்டார். கதைகளில் காமச்சுவை குறித்து அகிலன் மணியன் மோதல் இதயம் பேசுகிறது (12-10-80) இதழில் வெளிவந்தது. இதழ்களிடையே போட்டி மனப்பான்மை உருவாகும் வகையில் இதயம் பேசுகிறது, குங்குமம், சாவி ஆகிய இதழ்கள் களத்தில் இறங்கின.

## சிறுவர் உள்ளம்

சில இதழ்கள் சிறுவர்களுக்கான பகுதிகளை வெளியிட்டு அவர்களையும் கவர்ந்தன. வேடிக்கைத் துணுக்குகள், விளை யாட்டுகள், படக்கதை ஆகியன இவற்றில் வெளிவந்தன. ஆறு வித்தியாசங்கள், பூர்த்தி செய்துவிட்டுச் சிரியுங்கள் ஆகியன குமுதத்தில் இடம்பெற்றன. கல்கியில் வெளிவந்த வேடிக்கை விளையாட்டு, 007, ஒற்றன் 4 1 ஆகியன சிறுவர்களை மகிழ்வித்த பகுதிகளாகும். குமுதமும் படக்கதைகளை (மியாவ் மீனா, நடராஜுவின் கண்டுபிடிப்புகள்) வெளியிட்டு அவர்களை மகிழ்

வித்தது. கதிரில் 'புதருக்குள்' என்னும் படக்கதை இடம்பெற்றது. ஜெயராஜின் 'ஸ்வாம் நட்டி' (சாவி) பெரியோர், சிறியோர் ஆகிய இரு திறத்தாரையும் கவர்ந்தது. ராணி சிறுவர் பகுதி என்ற தலைப்பில் சிறுவர்களுக்கு ஏற்ற தந்திரக் கணக்கு, கவிதை, விடுகதை, சிரிசிந்தி ஆகியனவற்றைத் தொடர்ந்து வெளியிடுகிறது.

## இளைய தலைமுறை

பள்ளி, கல்லூரி மாணவர்களைத் தம் பக்கம் இழுக்க முற்பட்டு, அவர்கள் படைப்புத் திறனுக்கு ஊக்கம் அளித்தன சில இதழ்கள். விகடன், கல்கி, இதயம் ஆகிய இதழ்கள் மாணவர்களுக்கு முக்கிய இடம் அளித்தன. சிறுகதை, புதுக்கவிதை, துணுக்கு ஆகியவற்றை மாணவர்கள் விகடனின் 'மாணவர் பக்கம்' என்ற பகுதியில் எழுதி வருகின்றனர். குமுதம் 'ப்ளஸ் 2' மாணவர்களுக்காக மாதிரி வினாத்தாளை வெளியிட்டது. பள்ளிக் கல்வி முறையில் பாடத்திட்டங்களின் உள்ள குறைகள் குறித்து அலிபாபாவில் (30-11-80) ஒரு கட்டுரை வெளிவந்தது. கல்கி கல்லூரி மாணவர்களுக்காக 'வினாடி-வினா' நிகழ்ச்சியைத் தொடர்ந்து நடத்திவந்தது. அறிவு வளர்ச்சிக்குப் பயன்படும் வகையில் அது விளங்கியது. கதிர் அறிவுத்திறன் போட்டிகள் நடத்தி வந்துள்ளது 'கல்லூரியில் முதல்நாள் அனுபவம்' என்ற பகுதி கதிரில் தொடர்ந்து இடம்பெற்றது. இளைய தலைமுறையினரிடையே 'காந்தி மகாத்மாவா?' என்ற பிரச்சினையைக் கிளப்பி அவர்களையே சிந்திக்க வைத்துக் கட்டுரை எழுத வைத்தது சாவி. கல்லூரி மாணவர்களுக்கான சிறப்பிதழ்கள் வெளிவந்தன (விகடன், கல்கி). 'கராத்தே கற்றுக்கொள்ளுங்கள்' என்ற பகுதி படவிளக்கங்களோடு தொடர்ந்து கல்கியில் வெளியிடப்பெற்றது.

## பெண்களுக்காக

பெண்களுக்காகத் தனியே வார இதழ்கள் இல்லாவிடினும் பெண்களின் தேவையை நிறைவேற்றி அவர்களுக்கும் மன நிறைவு தர முன்வந்தன சில வார இதழ்கள். பெண்மைச் சிறப்பிதழ் (கதிர் 15-2-80), மகளிர் சிறப்பிதழ் (கல்கி 17-2-80) ஆகியன சென்ற ஆண்டில் வெளிவந்தவை. 'டாக்டர் பேசுகிறேன்' என்ற பகுதியில் பெண்களுக்கு ஏற்படும் பல்வகை நோய்களைப் பற்றி விளக்கியது கல்கி. பெண்களுக்கான உடற்பயிற்சி குங்குமம் இதழில் தொடர்ந்து வெளிவந்தது.

உலகம் சுற்றும் இரட்டைப் பெண்கள் (ராணி 16-3-80). துப்பாக்கி சுடுவதில் சிறந்த வரலட்சுமி (ராணி 9-?-80), பெண் களுக்குப் பாதுகாப்புக் கோரி டெல்லியில் நடத்தப்பட்ட ஊர்வலம் (ராணி 30-3-80), இந்தியாவில் பணிபுரியும் ஜப்பானியப் பெண் ணுடன் பேட்டி (குங்குமம்) முதலியன பெண்டிர்க்கு வார இதழ்கள் அளித்த சிறப்பிடத்திற்குச் சான்றுகளாகும்.

அலிபாபா இதழில் 'சமையல் குறிப்பு, அழகு டிப்ஸ்' என்ற பகுதி தொடர்ந்து வெளிவந்தது. சமையற்பகுதி ராணியிலும் இடம்பெற்றுள்ளது. பலவகையான கோலங்கள் தேவியில் தொடர்ந்து வரைந்து காட்டப்பெற்றன.

'பெண்கள் அழகாகப் புடவை கட்டிக்கொள்வது எப்படி?' என்பதனைப் படங்களோடு குமுதம் (30-10-80) வெளியிட்டிருந் தது. 'ஏழு நாட்கள் ஏழு அலங்காரம்' (19-6-80) என்ற தொடரில் குமுதம் ஆடை அணிவதைப் பற்றிய செய்திகளைத் தந்திருந்தது.

கதிர், பெண்மைச் சிறப்பிதழில் ஒவ்வொரு துறையிலும் சிறந்த பெண்களைப் பற்றிச் சுருக்கமான தகவல்களையும், புகைப் படங்களையும் வெளியிட்டு மகளிரை மகிழ்வித்தது.

## பரிசுப்போட்டி

படிப்போருக்கும் பரிசுகளை வழங்கி அவ்வப்போது அவர்களை ஊக்கப்படுத்தின சில வார இதழ்கள். இதில் குமுதம் முதனிலை வகிக்கிறது.

'திரைப்பட வாக்கியப் போட்டி', 'தீபாவளி சம்பாத்தியம்' (கடவுள் துணை கண்டுபிடிப்பு)' 'பத்துப் பிரதிகளில் உள்ளவை', 'பெயர்கள் ஒற்றுமை', 'யார்? 'தொடர் கதையின் ஆசிரியர் யார்?' முதலிய பல்வேறு நிலைகளில் குமுதம் போட்டி வைத்துப் பரிசு வழங்கியுள்ளது. வாசகர் பரிசுத் திட்டம் (விகடன்) வட்டத்துக் குள் சிக்கிய ஒருவருக்குப் பரிசு (சாவி), மாதாந்திரப் பரிசுத் திட்டம், நட்சத்திர வடிவப்போட்டி (கல்கி), திரைப்புதிர்ப் போட்டி, 'அன்பே ஆருயிரே', 'ஆசைக்கும் ஆஸ்திக்கும்' (தேவி) ஆகிய போட்டிகள் இதழ்களில் வெளிவந்தன. விகடனில் 'வாசகர்'களுக்கு என்று தனியே போட்டி நடந்தது. சிறந்த கேள்விகளுக்கும் அவ்வப்போது சில இதழ்கள் பரிசளித்தன (கதிர், கல்கி, ராணி).

## படிப்போர் உறவு

படிப்போரையும் படைப்போரையும் நேரடியாக ஒருங்கிணைக்கும் பொருட்டு 'உங்களிடம் ஒரு கதை இருக்கிறதா?' என்ற பகுதியைக் குமுதம் சென்ற ஆண்டு வெளியிட்டது. சு. சமுத்திரம், சவீதா, பாலகுமாரன் முதலியோர் படிப்போர் வாழ்வில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைக் கேட்டறிந்து எழுதிய இப்பகுதி ஒரு புதிய முயற்சியாகும்.

குமுதம் மக்கள் நலனில் அக்கறை காட்டுவதற்காக ஏற்படுத்திய 'பிரார்த்தனை கிளப்' என்ற பகுதி மிகவும் புதுமையானது. கல்கியும் இதேபோல் 'கல்கி நற்பணி மன்றம்' என்ற ஒன்றனை நடத்தி வருகிறது.

## சிறப்பிதழ்கள்—மலர்கள்

எண்பதாம் ஆண்டைச் 'சிறப்பிதழ்கள் ஆண்டு' என்று அழைக்கும் அளவிற்கு வார இதழ்கள் சிறப்பிதழ்களை மிகுதியாக வெளியிட்டுள்ளன. இவற்றில் முறையே கதிர், கல்கி, விகடன் ஆகியவை முன்னணியில் நிற்கின்றன. கல்கியும் விகடனும் பொதுவான சில சிறப்பிதழ்களை அவ்வப்போது வெளியிட, கதிர் சமூகத்தில் உள்ள குறிப்பிட்ட சாதியினரைப் பற்றிய சிறப்பிதழ்களை வெளியிட்டது. சென்ற ஆண்டில் சௌராட்டிர சமுதாயத்தினர், ராஜா சமூகத்தினர், கொங்குவேளாளர், நகரத்தார் ஆகிய வகுப்பினருக்குச் சிறப்பிதழ் எடுத்தது கதிர். அந்தந்த இன மக்களின் சடங்குகள், விழாக்கள், பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், சமுதாய மக்களில் உயர்ந்தோர், சமுதாயப் பின்னணிக் கதைகள் முதலியன அவ்வச் சிறப்பிதழ்களில் வெளிவந்தன.

விகடன் 'கலை ஸ்பெஷல்', 'மாணவர் ஸ்பெஷல்' ஆகியவற்றை வெளியிட்டது. மகளிர் சிறப்பிதழ், கிரிக்கெட் ஸ்பெஷல், நகைச்சுவைச் சிறப்பிதழ், திகில்—மர்மச் சிறப்பிதழ், திரைக்கதைச் சிறப்பிதழ், மின்மினிச் சிறப்பிதழ், விடுமுறைச் சிறப்பிதழ், மாணவர் சிறப்பிதழ், ஒலிம்பிக் சிறப்பிதழ், வாசகர் சிறப்பிதழ் ஆகிய பத்துச் சிறப்பிதழ்கள் சென்ற ஆண்டில் கல்கி வெளியிட்ட சிறப்பிதழ்களாகும் இதயம் பேசுகிறது 'ஹஜ்' சிறப்பிதழ் (19-10-80) வெளியிட்டது. குமுதம் தீபாவளிச் சிறப்பிதழ் என்று ஒரே வாரத்தில் இரண்டு குமுதம் இதழ்களைப் படிப்போருக்கு வழங்கியது.

சிறப்பிதழ்கள் ஒரு குறிப்பிட்ட பொருள் பற்றிய தகவல் களைத் தொகுப்பாக ஒரே இதழில் பெற வைக்கிறது. ஆய்வுக்கும், சுவைக்கும் ஏற்ற வகையில் இவை அமைவது பாராட்டத் தக்க தாகும்.

## புதிய விடியல்

புதிய புதிய கலைஞர்களுக்கு வார இதழ்கள் இடந் தந்துள் ளன. புதிய எழுத்தாளர்கள், புதிய ஓவியர்கள் எனப் பலரைக் குங்குமம் அறிமுகம் செய்துள்ளது. 'தேவிக்குச் சிறப்புச் சேர்க்கும் பேனா மன்னர்கள்' என்ற வரிசையில் அவ்விதழில் எழுதுவோரை அறிமுகம் செய்திருந்தது தேவி. பரிசுபெறும் புதிய எழுத்தாளர் களின் சிறுகதைகளை மேலும் வெளியிட்டு அவர்களுக்கு ஊக்கம் அளித்துள்ளது விகடன். விகடன் மாணவர் பக்கச் சிறுகதைகளில் இளந் தலைமுறையினரின் எண்ணங்களைக் காணலாம்.

## கடந்துவந்த பாதை

விகடன் தொடக்க நாள் முதல் ஐம்பது ஆண்டு கால அளவில் ஒவ்வோர் ஆண்டிலும் வெளியான சுவையான பகுதிகளைத் தொடர்ந்து அளித்தது. 'விகடனுக்கு ஐம்பது வயது' என்ற பகுதியில் வாரந்தோறும் வெளிவந்தவற்றைச் சுருக்கி வழங்கி வந்தனர். ஒரு நீண்ட நெடுங்கால மரபில் அவ்விதழ் வளர்ச்சி பற்றி அறிய இது வாய்ப்பாக உள்ளது. மரபிற்கும் புதுமைக்கும் உள்ள நீண்ட இடைவெளி பற்றி உணரவும் கணிக்கவும் இதனால் முடிகிறது.

## இதழ்களின் துடிப்பு

புதிய இதழ்களைக் கொண்டு வருவதில் சில இதழ்கள் ஆர்வம் காட்டியுள்ளன. 'மயன்' என்ற பெயரில் வெளிவர இருக்கும் வார இதழ் பற்றி 'இதயம் பேசுகிறது' இதழில் (9 டிசம்பர் 80) மணியன் இரண்டு கட்டுரைகள் எழுதியுள்ளார். 'சுஜாதா' என்னும் மாதமிருமுறை இதழைப் பற்றிக் குங்குமம் இதழில் கட்டுரைச் செய்தி வந்துள்ளது. 'திசைகள்' என்ற வார இதழ் பற்றிய செய்திகளைச் சாவி அறிமுகப்படுத்தியிருந்தது.

## பகட்டுச் சந்தை

வார இதழ்கள் பெரும்பாலும் பொழுதுபோக்கு நிறைந்தன வாக உள்ளன. சில இதழ்கள் வணிக நோக்கு மிக்கவை. கதை

களில் பொழுது போக்குத் தன்மையிருந்தாலும், குப்பைக் கதைகளும் பகட்டுச் சந்தையில் மலிந்துள்ளன. சில இதழ்கள் தங்கள் தன்மை கெடாது பாதுகாத்துக் கொண்டிருக்கின்றன.

## பருவ மகரந்தங்கள்

எண்பதில் வார இதழ்களைக் கண்ணோட்டம் செலுத்தினால், ஒவ்வோர் இதழும் தத்தமக்கென்று தனித்தனிப் பாணியை மேற்கொண்டுள்ளது புலனாகும் புதுமையான பகுதிகளை அறிமுகப் படுத்துவதில் அனைத்தும் முனைகின்றன. கவர்ச்சியை முன்னிறுத்திக் கதைகளும் படங்களும் வருவது கால வேகத்தில் உள்ள மயக்கத்தைக் காட்டுகிறது. இளைஞர், குடும்பம் இந்த இரண்டு நிலைகளில் பாதிப்பு ஏற்படுத்துகிறதோ என்று ஐயுற வேண்டியுள்ளது.

## தனித் தன்மைகள்

வார இதழ்களின் தனித்தன்மையையும் நாம் கணித்தறிய வேண்டும். எந்தெந்தச் செய்திகளை எப்படிச் சொன்னால் விற்பனையும் படிப்போர் தொகையும் பெருகும் என்பதை அனைத்து வார இதழ்களும் அறிந்து வைத்துள்ளன. தமிழ் வார இதழ்களிலேயே மிக அதிகம் விற்பனையாகும் வார ஏடு குமுதமே யாகும் (ஏறத்தாழ ஐந்நூறு ஆயிரங்கள்); இதனை யடுத்து விற்பனையாகும் வார இதழ் ராணி (ஏறத்தாழ நானூறு ஆயிரங்கள்). இவ்விரண்டையும் நோக்குவோம். குமுதம் மேல் மட்ட கீழ்மட்டங்களில் விரும்பி ஏற்கப்படுகிறது. அதற்கு ஏற்றாற்போல் செய்திகள் இடம்பெற்றுள்ளன. மேலும் அதற்கிணையான அளவுள்ள பிற வார இதழ்களின் விலையை விடக் குமுதத்தின் விலை குறைவு. பக்கமும் சற்றுக் கூடுதல் (காண்க அட்டவணை). குறிப்பிட்ட காலம் வரை ஒரு புதுமுறையைப் பின்பற்றும்; புதுப்பகுதிகளை அறிமுகப்படுத்தும். திடீரென்று அதனை நிறுத்திவிட்டு வேறு ஒரு பகுதியை அறிமுகப்படுத்தும். இதனை வழக்கமாகக் கொண்டிருக்கிறது குமுதம். பல்வகையான துணுக்குகளை வெளியிடுவதில் குமுதமே முன்னோடி. படிப்போரிடம் நெருங்கிய தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ளவும், விற்பனைக்காகவும் பல பரிசுப்போட்டிகளை அடிக்கடி குமுதமே வெளியிடுகிறது அரசு கேள்வி—பதில் அதன் தனித் தன்மை,

ராணி இதழ் சாதாரண வருவாய் உள்ளவர்களிடம் மிகுந்த செல்வாக்குப் பெற்றுள்ளது. கிராமப்புறங்களில் இதன் விற்பனை அதிகம். ஓரிரு சிறுகதைகள், இரண்டு தொடர்கதைகள், திரைப் படச் செய்திகள் முதலியனவற்றைப் பாமரர்கள் விரும்பி ஏற்கும் வகையில் தருகின்றது. இதன் விற்பனைக்குத் தினத்தந்தியின் பின்புலமும், பக்கபலமும் ஒரு காரணம். பழைய பாணி முறை யிலேயே தொடந்து கதைகள், படங்கள், கேள்வி பதில்கள், கருத்துவிளக்கப் படங்கள் வந்தாலும் படிப்பவர்கள் பழமை மாறாமல் இதனைப் படித்தே அதனில் படித்துவிட்டவர்கள்; தங்களை அதற்குப் பழக்கப்படுத்திக் கொண்டுவிட்டனர்.

ஆனந்தவிகடன், கல்கி, கதிர் ஆகிய மூன்றும் ஒருநிலையில் எண்ணத்தக்கன. ஓரளவு தரமிக்க சிறுகதைகளைப் படைத்துத் தருவன இவை. தங்கள் பாணியை அவ்வப்போது மாற்றிக் கொண்டும், பழமைப் பண்பை விடாமலும் இதழுலகில் நடை போடுகின்றன. அளவான சிறுகதைகள், தொடர்கதைகள், துணுக்குச் செய்திகள், திரைப்படச் செய்திகள் முறையே மூன்ற னுள்ளும் காணப்படுகின்றன. விகடனில் முன்பிருந்த நகைசுவைத் திறன் அண்மைக்காலங்களில் ஓரளவு குறைந்துள்ளது ஒரு பெருங் குறை. சிறுகதையில் விகடனின் திறமை கூடியுள்ளது பெருமைக் குரியது ஏனைய இதழ்களில் இடம்பெறும் கேள்வி—பதில்கள் விகடனில் இல்லாததும் குறிப்பிடத்தக்கது. பொன்விழா ஆண்டில் தன் பெருமையை மீண்டும் நிலைநாட்டி விட்டது ஆனந்தவிகடன்.

கல்கி பழமை கலந்த புதுமையில் நாட்டங் கொண்டுள்ளது. வார இதழ்களில் அனைத்துப் பொழுதுபோக்குத் தன்மைகளும் முறையாக நிறைந்திருக்க வேண்டும் என்பதற்குச் சான்று கல்கி (காண்க அட்டவணை 1). அளவால் பிற வார இதழ்களிலிருந்து சற்று வேறுபட்டது. சமய அருள்நெறிக் கட்டுரை வார இதழ் களில் கல்கியில் மட்டுமே வெளிவருகிறது அனைவரும் விரும்பிப் படிக்கும் வகையில் கல்கி இதழ் அமைந்துள்ளது காலத்திற்கேற்ற வகையில் புதுமைகளையும் தழுவியுள்ளது. கல்கி, ராஜாஜி, சதாசிவம் ஆகியோரின் பெயர்களுக்கு இழுக்கு வராமல் தன்னை இன்றளவும் காப்பாற்றிக் கொண்டு வருகிறது.

கதிர் நல்ல பொழுதுபோக்கு இதழ். இதில் சில நல்ல சிறு கதைகளும் இடம்பெற்றுள்ளன. எல்லா வகையினரையும் நிறைவு படுத்தும் வகையில் திரைப்படச் செய்திகளும் பிறவும் அமைந் துள்ளன. நா. பார்த்தசாரதி (நா. பா.) ஆசிரியர் ஆனபின் சில

மாறுதல்கள் கதிரில் காணப்பட்டாலும் அதன் வளர்ச்சி போது மானதாக அமையவில்லை.

குங்குமம், இதயம் பேசுகிறது, சாவி ஆகிய வார இதழ்கள் ஒருங்கு வைத்து எண்ணத்தக்கன. கதைப்போக்குகள் இவற்றில் தொடர்புடையதாக உள்ளன. காதல், கொலை, கொள்ளை, கற்பழிப்பு போன்றவற்றைக் கதைப்பொருளாகக் கொண்ட பல கதைகள் இவற்றில் வருவதால் அந்த ஒற்றுமை நிலவுகிறது என லாம். குங்குமத்தில் மட்டும் சிறுகதைகள் ஓரளவு மிகுதியாக இடம்பெற்றுள்ளன (காண்க அட்டவணை 3). இதயம் பேசுகிறது இதழில் சிறுகதைகள் மற்றவற்றை நோக்கக் குறைவு. ஆனந்த விகடனில் வெளிவந்த பயணக் கட்டுரையின் தொடர்ச்சி போல இதயம் பேசுகிறது இதழில் வெளிவருகிறது.

குங்குமத்தின் மறுபதிப்புப் போலவே சாவி விளங்குகிறது. ஆசிரியர் சாவி முதலில் குங்குமம் இதழின் ஆசிரியராக இருந்து அதிலிருந்து விலகிப் பின்னர் சாவி இதழ் ஆசிரியராக இருப் பதனால் ஒற்றுமைகளை இவ்விரண்டு இதழ்களிடையே காண முடி கிறது. எனினும் குங்குமத்தின் அளவைச் சாவி எட்டவில்லை. இதயம் பேசுகிறது வண்ண ஓவியங்களை கொண்டிருப்பது தனித் தன்மை; இன்னும் அதிகமான சிறுகதைகள் இதில் வரவேண்டும்.

ராணி, தேவி, அலிபாபா ஆகிய இதழ்கள் அளவால் ஒன் றோடு ஒன்று தொடர்புடையன. ராணிக்கும் தேவிக்கும் அதிக வேற்றுமையில்லை. ஒரே வண்ணத்தில் இடம்பெறும் ராணியின் அட்டைப்படம், மூவண்ண நிறங்களில் 'ஆப்செட்' முறையில் அமைந்துள்ளது தேவியின் அட்டைப்படம். மற்ற வகையில் அமைப்புமுறை, அளவு முதலியவற்றில் பெரும்பாலும் ஒற்றுமை காணப்படுகிறது. ராணியில் குறிப்பிட்ட சிலர் எழுதுவது வழக்கம், இந்த முறை தேவியில் இல்லை.

அலிபாபா இதழ் ராணி, தேவி இவற்றைக் காட்டிலும் சற்று வேறானது. எழுத்தாளர் பலரைப் புதிதாக எழுத வைத்தது. எண்பதில் அலிபாபாவில்கதைகள்மிகுதியாக வந்துள்ளன.எனினும் சிறுகதைகள் அவ்வளவு தரமானவை என்பதற்கில்லை. சில கதை களில் முற்போக்குத் தன்மை காணப்படுகின்றன. புதுக் கவிதை யைச் சென்ற ஆண்டில் மிகுதியாக வெளியிட்ட பெருமை இதற்கு உண்டு. இதுவே இதன் சிறப்பு. உலகச் செய்திகளை நடு நிலையோடு இந்த இதழ் வெளியிடுவதற்குக் காரணம் டி. ஆர். இராமசாமி (டி. ஆர். ஆர்.) அவர்கள்.

எண்பதற்கு முன் வெளிவந்து இன்றும் நடைமுறையில் இருக்கும் வார இதழ்கள் இவை. மூக்குத்தி முதலான வார இதழ்கள் முன்னர் இருந்து நின்றுபோய் விட்டன. கல்கண்டு கேள்வி பதிலும் துணுக்குச் செய்திகளும் மிகுதியாகக் கொண்ட ஓர் ஏடு; மற்ற பொழுதுபோக்கு ஏடுகளோடு ஒரு சேரவைத்து எண்ணுவதற்கில்லை என்பதனால் இக்கட்டுரையில் சேர்க்கப்பட வில்லை.

சில இதழ்களில் எழுதியோர் ஒரே இதழில் மட்டும் எழுது வதையும், சிலர் பல இதழ்களில் எழுதுவதையும் காண முடிகிறது. எண்பதில் வெளிவந்த இதழ்கள் பலவற்றுள்ளும் ராஜேஷ்குமார் எழுதியது மிகுதி. ஆண்டுதோறும் வார இதழ்களில் சிறுகதையின் வளர்ச்சியும் எண்ணிக்கையும் மிகுந்து கொண்டு வருவதற்குப் படிப்போரும் காரணம்; படைப்போரும் காரணம்.

ஆனந்த விகடன் சிறுகதைக்கு என்று கொடுத்த பொன் விழாப் பரிசு ரூ. 20000, வேறு எந்த ஓர் இதழும் தராத அள விற்குச் சிறப்பு வாய்ந்தது. இரண்டாம் பரிசு பெற்ற 'கோடு தாண்டாத கோலங்கள்' என்னும் பிரதிபா ராஜகோபாலனின் கதை கருவாலும், கதை சொல்லப்பெறும் திறனாலும், பண் பாட்டுக் களனாலும் முதற்பரிசு பெற்ற கதையைவிடச் சிறப்பாக அமைந்துள்ளதை இங்குச் சுட்டிக் காட்ட வேண்டுவது நம் கடமை

கிராமத்தின் 'மண்மணம்' கமழும் வகையில் வட்டாரப் பாங்கோடு சில சிறுகதைகள் வார இதழ்களில் வெளிவந்துள்ளமை மனத்திற்கு மகிழ்ச்சி தருவதாகும். இலக்கியத் தரம் வாய்ந்த கதைகளைவிடப் பொழுதுபோக்கு அம்சங்கள் கொண்ட கதைகளே மிகுதி. வீண் வருணனைகளை விட்டு உரையாடல் போக்கில் கதை எழுதப்படுவது போற்றத்தக்கது. சிறுசிறு சொற் றொடர்களால் ஆன சிறுகதைகளையும் காண முடிகிறது. சிறு கதைக்கே உரிய பண்பின் உத்திகளைச் சில கதைகளில் தெரிந் தெடுக்க முடியும்.

வார இதழ்கள் திரைப்படங்களைப் பற்றி வெளியிடுவது போல, நாடகம் முதலானவற்றிற்கு ஆக்கம் அளிக்க முன்வர வில்லை. ஆனந்த விகடன் மற்றும் இதற்கு விதிவிலக்கு மனோகரின் நாடகங்கள் பற்றி ஞானி எழுதிய கட்டுரை (நாடக ஸ்பெஷல்-விகடன்) இங்கு நினைவுகூரத் தக்கது.

வாரந்தோறும் வெளிவரும் இவ்விதழ்களில் இலக்கியம் பற்றிய நுகர்ச்சி மிகவும் குறைவாகவே உள்ளது. பொழுதுபோக்கு அம்சம்

வணிக நோக்கிற்குத் தேவையெனினும், பண்டைய தமிழ் இலக்கிய வளத்தைக் காலத்திற்கேற்றவாறும், சிந்தனையைத் தூண்டும் வகையிலும் புதிய வார்ப்பில் தர இதழ்கள் முன்வர வேண்டும். சிறுகதைக்கும் தொடர்கதைக்கும் தரும் மதிப்பினைப் பிற இலக்கிய வகைகளுக்கும் தருதல் வேண்டும். நாடகம், கவிதை ஆகியனவற்றை வளர்ப்பதும் இதழ்களின் கடமை.

வார இதழ்கள் தரத்தோடும் தகுதியோடும் விளங்கச் சில சிந்தனைகளை முன்வைக்கலாம்.

1) ஏழை எளியவர்களின் குறைகளைக் கண்டறிந்து, அவர்தம் குறைகளைய ஓரளவு பாடுபடுதல்; கிராமியச் சிந்தனையை வளர்த்தல்; இவற்றைப் பற்றிய கட்டுரைகள், பேட்டிகள் ஆகியவற்றை வெளியிடுதல்.

2) பண்டைய தமிழ் இலக்கியத்தைத் தற்காலச் சூழ்நிலையில் எல்லோரும் விரும்பி ஏற்கத்தக்க வகையில் எடுத்துரைத்தல்.

3) மொழிக்கு வளம்சேர்க்கும் வகையில் புதிய கலைச் சொல்லாக்கங்களை உருவாக்குதல்.

4) அறிவியல், மருத்துவச் செய்திகளை எளிய முறையில் மகளிரும் அறிந்து பயன்பெறத் தக்க வகையில் விளக்கி எழுதுதல்.

5) நம்நாட்டு, மேனாட்டுப் பெரியோர்களின் வாழ்க்கை வரலாற்றை வெளியிட்டுப் பண்பாட்டை வளர்த்தல்.

6) நிலம், நீர், வான் ஊர்திகளின் வரலாறு, விண்வெளி ஆய்வு, புதிய கண்டுபிடிப்புகள் முதலியவற்றைப் படக்கதைகளாக்கி இளைஞர் உள்ளத்தில் அறிவியல் உணர்வை ஊட்டுதல்.

7) மேல்நாட்டு, நம்நாட்டு இலக்கியங்களில் உள்ள சுவையான செய்திகளை வெளியிட்டு இலக்கியம் பற்றிய ஆர்வத்தை மாணவரிடையே/மக்களிடையே வளர்த்தல்.

8) பிற மொழிகளில் உள்ள சிறந்த கதைகளை/புதினங்களை வெளியிட்டுச் சிந்தனையை/அறிவைத் தூண்டச் செய்தல்.

9) புதுமைச் சிறுகதைகளை இலக்கிய மணம் கமழ எழுதுதல்.

## இதய உலகம்

இப்படித்தான் இதழ் இருக்கவேண்டும் என்பதைக் கடைப்பிடித்து, நல்லனவற்றை வெளியிடும் உறுதிமனம் இதழ்களுக்கு

வேண்டும். இது வார இதழின் வளர்ச்சி மட்டுமல்ல; இந்த மண்ணின் பண்பாட்டு வளர்ச்சி. ஓய்வு நேரத்தில் சிந்திக்கவும் வேண்டும்; எண்ணங்களை வீணே சிதறடிக்க விடவும் கூடாது. சிரிக்கலாம்; அது மனத்திற்கு மகிழ்ச்சி. சிந்திக்க வைக்கலாம்-அது மூளைக்கு உரம். சிதறடிக்க விட்டால் அது வாழ்வின் தேய்மானம். வார இதழ்களுக்கு இதயம் உண்டு. சிந்தனைக்கொரு கோபுரமாகவும், செயலுக்கொரு மாமணியாகவும், எண்ணத்திற்கு ஓர் ஏணியாகவும் இதழுலகம் மேன்மேலும் மாற வேண்டும்; மாற்றியமைக்க வேண்டும். அவ்வாறு மாறும்போது நாம் காண்பது இதழுலகம் அல்ல; இதயமுள்ள உலகம்!

# அட்டவணை 1

எ—3

| பொருள் | அலிபாபா | ஆனந்த விகடன் | இதயம் பேசுகிறது | கல்கி | குங்குமம் | குமுதம் | சாவி | தினமணி கதிர் | தேவி | ராணி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| அரசியல் | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| திரைப்படம் | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| சிறுகதை | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| தொடர்கதை | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| குறுநாவல் | 1 | x | x | 1 | 1 | x | 1 | 1 | x | x |
| நாடகம் | x | 1 | x | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | x |
| கேள்விபதில் | 1 | x | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| தலையங்கம் | 1 | 1 | 1 | 1 | x | 1 | x | 1 | x | x |
| துணுக்கு | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| கருத்துப் படம் | x | 1 | 1 | 1 | 1 | 1 | x | 1 | x | 1 |
| கடிதம் | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| கவிதை | 1 | 1 | x | 1 | 1 | x | 1 | 1 | 1 | 1 |
| வண்ண ஓவியம் | x | 1 | 1 | 1 | x | 1 | x | 1 | x | x |
| கட்டுரை | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 | 1 |
| படக்கதை | x | x | 1 | 1 | x | 1 | 1 | 1 | | 1 |

## அட்டவணை 2

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| விலை | 0.75 | 0.75 | 0.90 | 0.75 | 0.90 | 0.55/65 | 0.90 | 0.75 | 0.60 | 050 |
| பக்க அளவு | 42 | 80 | 72 | 64 | 72 | 80 | 72 | 64 | 34 | 34 |
| இதழ் அளவு செ. மீ. | 26 | 20.5 | 19.7 | 23.7 | 19.8 | 19.7 | 19.7 | 27.3 | 26 | 26 |
| விற்பனை (சுமார்) | 50,000 | 2,60,000 | 80,000 | 70,000 | 1,00,000 | 5,80,000 | 80,000 | 65,000 | 60,000 | 4,70,000 |

## அட்டவணை 3

| இதழ்கள் | சிறுகதை | தொடர்கதை | படக்கதை | நாடகம் |
|---|---|---|---|---|
| அலிபாபா | 311 | 4 | x | x |
| ஆனந்த விகடன் | 233 | 6 | x | 1 தொடர் நாடகம் |
| இதயம் பேசுகிறது | 108 | 3 | x | x |
| கல்கி | 211 | 7 | 2 | 2 |
| குங்குமம் | 232 | 4 | x | x |
| குமுதம் | 213 | 6 | 2 | 2 |
| சாவி | 210 | 5 | 1 | 1 முழுநீள நாடகம் |
| தினமணி கதிர் | 190 | 5 | 1 | x |
| தேவி | 112 | 2 | 1 | 1 |
| ராணி | 107 | 2 | 1 | x |

# எண்பதில் சிறுகதை

சு. வேங்கடராமன்

## நுழைவாயில்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதாம் ஆண்டில் வெளியான சிறுகதைகளின் மதிப்பீடாக இவ்வாய்வு அமைகிறது. இவ்வாய்வின் முதற்பகுதி இவ்வாண்டில் வெளியான சிறுகதைகளைத் தொகுத்துத் தருவதாகவும் பிற்பகுதி அவற்றை மதிப்பீடு செய்வதாகவும் அமைகிறது. எண்பதாம் ஆண்டில் முதற்பதிப்பாக வெளியான சிறுகதைத் தொகுப்புக்களை மட்டுமே இவ்வாய்வு திறனாய்கிறது. மறுபதிப்புக்களாக வெளிவந்தவற்றை இவ்வாய்வில் சேர்த்துக்கொள்ளவில்லை. எண்பதாம் ஆண்டில் பல்வேறு இதழ்களில் வெளியான சிறுகதைகளையோ பல்வேறு மலர்களில் வெளியான சிறுகதைகளையோ இவ்வாய்வில் சேர்த்துக்கொள்ளவில்லை. இதே காலகட்டத்தில் தமிழர் வாழும் பிறநாடுகளில் வெளியான சிறுகதைத் தொகுப்புக்களையோ, பிறநாட்டுத் தமிழ் எழுத்தாளர்கள் படைத்துத் தமிழ்நாட்டில் வெளியான சிறுகதைகளையோ இவ்வாய்வு தன்னுள் உட்படுத்திக் கொள்ளவில்லை. இதற்கு அடிப்படையான காரணம் **எண்பதில் தமிழ்** என்னும் இத்தொகுப்பு நூலின் அடிப்படையாகும். நூலில் பல்வேறு தலைப்புக்களில் இடம்பெறும் ஆய்வுகளில் எங்கும் கூறியது கூறல் இடம் பெறலாகாது என்ற விழிப்புணர்வே இதன் வரையறைக்குக் காரணமாகும்.[1] எனவே, எண்பதாம் ஆண்டில் தமிழக எழுத்தாளர்களின் படைப்புக்களாகத் தமிழ்நாட்டில் முதற்பதிப்பாக வெளிவந்த சிறு

கதைத் தொகுப்புக்கள் மட்டுமே இவ்வாய்வின் அடிப்படைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

## ஆய்வின் அணுகு முறை

இவ்வாய்வு முற்கூறியபடி முதற்பகுதியில் இக்காலகட்டத்தில் வெளிவந்த சிறுகதைத் தொகுப்புக்களைத் தொகுத்துத்தரும் பாங்கிலும் பிற்பகுதியில் இக்கதைகளைத் திறனாய்வு செய்யும் போக்கிலும் அமைகின்றது. தொகுத்துத்தரும் பகுதியின் பொது வான போக்குகள் சில சுட்டப்படுகின்றன. இக்காலகட்ட வாசகர் களின் படிப்பார்வம், எழுத்தாளர் மனநிலை, வெளியீட்டாளர் நிலை என்ற மும்பரிமாண அமைப்பைத் தெளிவாகப் புரிந்து கொள்ள இப்பாங்கு உதவும். இப்பாங்கின் அடிப்படையில் பின் வரும் திறனாய்வை அறிந்துகொண்டால் இக்காலகட்ட தமிழ்ச் சிறு கதைகளின் போக்கையும் நோக்கையும் உணரமுடியும். சிறுகதை களைத் திறனாய்வு செய்யும் பகுதியில் அவற்றின் உருவம், உள் ளடக்கம், உத்தி ஆகியவை பற்றிய மதிப்பீடும் பொதுவான போக்கும் காணப்படும். சிலவிடங்களில் பொதுப்பாங்கும் சில இடங் களில் தனிப்பாங்கும் விவாதிக்கப்படும். ஒவ்வொரு தொகுப்பை யும் தனித்தனியே அலசி ஆராயாமல் இவ்வாறு வரையறுத்த தன்மைகளில் திறனாயும் போக்கிலே இவ்வாய்வு அமைகிறது. எண்பதாம் ஆண்டில் தமிழ்ச்சிறுகதைகளின் நோக்கும் போக்கும் எப்படி இருந்தன என்று இனம் பிரித்துக்காட்டும் பாங்கு இவ்வாய் வின் அடிப்படை ஆகின்றது.

## இக்கால கட்டத்தில் வெளியான சிறுகதைத் தொகுப்புக்கள்

எண்பதாம் ஆண்டில் முதற்பதிப்பாக வெளிவந்த தமிழகப் படைப்பாளர்களின் சிறுகதைத் தொகுப்புக்கள் என்ற வரையறை யுடன் அணுகியபோது பொதுவாகத் துணுக்குறக்கூடிய நிலை ஏற்பட்டது. மேற்கூடிய வரையறைகளுக்குட்பட்ட தொகுப்புக்கள் பதினொன்று ஆகும். கொ. மா. கோதண்டத்தின் **மலையின் மைந்தர்கள்**, சுஜாதாவின் **வானத்தில் ஒரு மௌனத்தாரகை**, சிவசங்கரி எழுதிய கழுகு.பு ராங்கால், ஆலந்தூர் கோ.மோகனரங்கம் படைத்த **கோணமலை கோவிந்தன் கொக்கு பிடித்த கதை** கி. ராஜநாராயணனின் **அப்பா பிள்ளை அம்மா பிள்ளை**, அருணா சண்முகம் படைத்த **ஊமைப்படம் ஓடுகின்றது**, ஸ்ரீதர் சாமா

படைத்த **நிழல் மனிதர்கள்**, அழகாபுரி அழகப்பன் எழுதிய **தெய்வம் பார்த்துக் கொண்டிருக்கிறது**, முத்துக்காளத்தி எழுதிய **பொக்கிஷம்**, வானதி பதிப்பகமும் இலக்கியச் சிந்தனையும் இணைந்து வெளியிட்ட **அற்ப ஜீவிகள்** (எண்பதாம் ஆண்டின் பன்னிரண்டு சிறந்த சிறுகதைகள்) ஆகியன ஆகும்.[2] இவை இக் கட்டுரைக்கு அடிப்படைச் சான்றாதாரங்களாகும். இவை தவிர இக்காலத்தில் மறுபதிப்புக்கள், மொழிபெயர்ப்புக்கள், நேஷனல் புக் டிரஸ்டிற்கான தொகுப்பு, தமிழர் வாழும் பிற நாடுகளிலுள்ள தமிழ்ப்படைப்பாளர்கள் எழுதித் தமிழகத்தில் வெளியான சிறு கதைத் தொகுப்புகள், **தெனாலி ராமன் கதை**[3], **பாரதியார் கதைகள்**[4] போல்வன என்ற வகைகளில் வெளிவந்துள்ளன. இவற்றையும் ஒருசேர வைத்துப் பார்க்கையில் எண்பதில் வெளி யான சிறுகதைத் தொகுப்புக்களின் எண்ணிக்கை மிகவும் குறை வாக உள்ளது. இக்காலகட்டத்தில் தமிழ்ப்புத்தகாலயம் (சென்னை), மீனாட்சி புத்தக நிலையம் (மதுரை) ஆகியன முழு வதும் மறுபதிப்புக்களே வெளியிட்டுள்ளன. பொதுவாக, நாவல் விற்பனையாகும் அளவிற்குச் சிறுகதைத் தொகுப்புகள் விற்பனை யாவதில்லை என்பது பதிப்பாளர் சார்பில் கூறப்படும் காரணம் நல்ல சிறுகதைகளை இதழ்களில் காணமுடிவதில்லை என்பது வாசகர் சார்பில் கூறப்படும் காரணம். படைப்பாளர்களும் நாவல் (தொடர்கதை) எழுதுவதில் காட்டும் ஈடுபாட்டைச் சிறுகதை படைப்பதில் காட்டுவதில்லை. இதழ்களும் தொடர்கதை களுக்குக் கொடுக்கும் இடத்தைச் சிறுகதைகளுக்குக் கொடுப்பது இல்லை. சிறுகதை சின்னஞ்சிறுகதையாகவும் ஒருபக்க 'மினி' கதை யாகவும் ஆகிவிட்டது இக்காலத்தின் குறிப்பிடத்தக்க இயல்பு. இதழ்களின் ஆசிரியர்கள் செய்த இப்பரபரப்பான பழக்கத்திற்கு எழுத்தாளர்களும் ஆட்பட்டு ஒருபக்க சின்னஞ்சிறு கதை எழுத லாயினர் (எண்பதாம் ஆண்டு வெளிவந்த தொகுப்புக்களுள் ஒன்றான முத்துக்காளத்தியின் **பொக்கிஷம்** என்ற சிறுகதைத் தொகுப்பில் இடம்பெற்றுள்ள கதவை இடித்த கடமை என்ற கதை இதற்கு நல்ல சான்று. இக்கதை முதலில் குமுதம் இதழில் வெளிவந்தது). எனவே சிறுகதை தன் கலைத்தன்மைகளை இழந்து வெறுங்கதை ஆனதற்கு இப்போக்கு ஒரு வலுவான காரணம்.

இவ்வாறான ஒருபக்க சின்னஞ் சிறுகதைகளே இதழ்களில் இடம்பெற, விற்பனையை நோக்கமாகக் கொண்ட இதழ்கள்

போட்டிபோட்டுக் கொண்டு இப்போக்கினை ஊக்குவிக்கலாயின. தொடர்கதை, தொடர் கட்டுரை, தொடர் நாடகம் என்ற தொடர்களைக் கொண்டு வாராவாரம் தம் இதழ்களை வாங்க வேண்டும் என்ற வியாபார எண்ணம் சிறுகதைகளின் இடத்தைக் கணிசமான அளவு குறைத்தது. இவற்றின் விளைவாக மிகுதி யாக விற்பனையாகும் இதழ்களில் சிறுகதையின் அளவு, எண்ணிக்கை, கலைத்தன்மை ஆகிய அனைத்திலும் ஊனம் ஏற்பட்டது. சிறு அளவில் விற்பனையாகும் இதழ்களில் சிறுகதை கள் வெளிவந்த போதிலும் அவற்றை வாங்கிப் படிப்போர் மிகக் குறைவு. வாசகர்களிடையே இதழ்களைப் பொழுதுபோக்கிற் காகப் படிக்கும் ஆர்வம் இருக்கின்றதே தவிர, சிந்தனைவளத்திற் காகப் படிக்கும் ஆர்வம் காணப்படவில்லை. இதனால் சிறுகதை களை வெளியிடும் இதழ்கள் தம் போக்கை மாற்றி கொள்ளக் லாயின.

''சிறுகதை சின்னஞ்சிறு குங்குமச் சிமிழில் செய்யும் வேலைப் பாடு''[5] என்பர். சிறுகதை படைப்பது மிகவும் கடுமையான பணி. சிறுகதைக்குச் செய்யும் உழைப்பை தொடர்கதைக்கு ஆற்ற வேண்டியது இல்லை. வாராவாரம் தம் படைப்பு வாசகரை எட்டும் வாய்ப்பு இருக்கையில், எப்போதோ ஒருமுறை தலை காட்டிச் சிறுகதை படைப்பதை—அதற்காகக் கடுமையாக உழைப்பதை—படைப்பாளர்களும் அதிகம் விரும்புவதில்லை போலும். படைப்பாளர்களும் வாசகர்களின் சுவைப்போக்கு இதழ்களின் விருப்பு வெறுப்பு ஆகியவைகளுக்கு ஏற்பத் தம் படைப்புத் திறனை அமைத்துக்கொள்ள விழைகின்றனர். இவற்றின் விளைவாகச் சிறுகதை ஆசிரியர்களாக அறிமுகமாகி, தொடர்கதை எழுத்தாளர்களாக - நாவலாசிரியர்களாக—வாசகர் களிடையே புகழ்பெற்ற படைப்பாளிகள் சிறுகதை படைப்பதைக் குறைத்துக் கொண்டனர். எண்பதாம் ஆண்டில் வெளிவந்த நாவல், சிறுகதைகளை ஒப்பிட்டதில் இதனை உணர முடிந்தது. சிறுகதைகள் படைப்பதில் குறைவு ஏற்பட்டதற்கு இதுவும் ஒரு காரணம்.

வாசகர்களுடைய படிக்கும் ஆர்வத்தில் ஏற்பட்ட மாற்றமும் சிறுகதை வளர்ச்சிக்குக் காரணம் ஆகிறது. பொதுவாக, நூல் களை வாங்கிப் படிக்கும் பழக்கம் தமிழர்களிடையே குறைவு. அதிலும் சிறுகதைத் தொகுப்புக்களை வாங்கிப் படிப்பது மிகவும்

குறைவு. இதன் காரணமாக வெயீட்டாளர் சிறுகதைத் தொகுப்பு வெளியிட முன்வருவதில்லை. பொழுதுபோக்கிற்காக இதழ்களை வாங்கிப் படிக்கும் அளவிற்கு நூல்களை வாங்கிப் படிப்பதில்லை. அப்படியே வாங்கினாலும் நாவல்களை வாங்கும் அளவிற்குச் சிறுகதைகளை வாங்குவதில்லை. இதனால் வெளியீட்டாளர் நாவல்களை வெளியிடுமளவிற்குச் சிறுகதை வெளியிட முன் வருவதில்லை. பொதுவாக வாசகர்களிடையே காணப்படும் எதையும் எளிதாக எடுத்துக் கொள்ளும் மனப் பான்மை காரணமாக, கலைத்தன்மை மிக்க இலக்கிய வடிவமான சிறுகதை படைப்பில் குறைவு ஏற்படலாயிற்று. இதன் விளைவாக வரக்கூடிய ஓரிரு சிறுகதைகளிலும் இப்போக்கு காணப்பட லாயிற்று. சிறுகதை தன் உருவம் (Form) உள்ளடக்கம் (Content) உத்தி (technique) மூன்று நிலைகளிலும் நீர்த்துப் போய் மிகக் குறைந்த அளவிலே இலக்கியத்தரமிக்க கதைகள் வெளிவரலாயின. இதழ்களில் வெளிவரும் கதைகளே தொகுப்புக் களாக வெளிவருவதால் அவற்றில் இதழின் போக்கை (trend of a journal) நன்கு காணமுடிகிறது. இவ்வாறு சிறுகதை எண்ணிக்கையிலும் கலைத்தன்மையிலும் குறைவுபட்டுக் காணப் பட, அத்திபூத்தாற்போல ஓரிரு கதைகள்—தொகுப்புக்களே, கால வெள்ளத்தை நீந்திக் கரையேறும் ஞானசம்பந்தக் கதைகளாயின. கரையேறும் இவையே சிறுகதை வரலாற்றிலும் இடம்பெறும்.

எண்பதாம் ஆண்டில் வெளிவந்து உள்ள தொகுப்புக்களிலும் மேற்கூறிய பாங்குகள் அனைத்தையும் காணமுடிகிறது. நல்ல கனமான கதைக்கரு (theme) ஒன்றை எடுத்துக்கொண்ட போதிலும் அதைச் சரிவர வெளியிடாமை, இயற்கைக்கு இயைந்து வராத முறையில் கதை முடிவை அமைக்கும் முறை, கதைமாந்தர் பண்பு நலன்களை வளர்த்துக் காட்டாத முறை, கதைமாந்தர் சூழலுக்கேற்ப அமையும் பிறமொழிக் கலப்பின்றி ஆசிரியர் நடையிலே தமிழும் ஆங்கிலமும் கலந்த புதுவகை மணிப்பிரவாள மான நடையில் எழுதும் முறை (சுஜாதா, சிவசங்கரி ஆகிய இருவர் கதைகளிலும் இப்பாங்கு மிகுதி) ஆகிய பல்வேறு பாங்கு களைச் சிறுகதைகளில் காணமுடிகிறது. எழுபத்தி ஒன்பதாம் ஆண்டில் வெளிவந்த கதைகளில் சிறந்த கதைகளாகத் திறனாயப் பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பட்டுத் தொகுப்பாக எண்பதாம் ஆண்டில் வெளிவந்த கதைகளிலே (அற்பஜீவிகள் என்ற தொகுப்பு) இக்குறைபாட்டைக் காணமுடிகிறது. திறனாய்ந்து

மதிப்பிடப் பெற்ற கதைகளே இப்படி என்றால் ஏனையவற்றைப் பற்றி என்ன கூற உள்ளது. இருப்பினும் ஒரு சிலதரமான கதைகளை அனைத்து நிலைகளிலும் முழுமையான சிறந்த சிறுகதைகளை இத்தொகுப்பில் காணமுடிகிறது. இக்கதைகளே பின்னர் தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் இடம்பெறத் தக்கவை.

இக்கால கட்டச் சிறுகதை ஆசிரியர் சிலர் நடையில் தமிழும் ஆங்கிலமும் கலந்த புதுவகை மணிப்பிரவாளத்தைப் பின்பற்றினர். சிறுகதையில் இடம்பெறும் மாந்தரின் பண்பிற்கும் கதையின் சூழலிற்கும் எடுத்துக்கொண்ட கருப்பொருள் விளக்கத்திற்கும் ஏற்ப மொழிநடையை ஆளுகையில் பிறமொழிக் கலப்பு ஏற்படுவது இயல்பு. அது கதைக்கு நடப்பியல் பாங்கைத் தரும். சிறுகதையில் (நாவலிலும்) நடை என்பது மாந்தர் பேச்சையும் ஆசிரியர் கூற்றாக அமைவதையும் உள்ளடக்கியதாகும். மேலே குறிப்பிட்ட வண்ணம் கதையின் மாந்தர் இயல்பிற்கேற்ப அவர் தம் உரையாடலில் பிறமொழிக் கலப்பு இடம் பெறலாம். ஆனால் ஆசிரியர் கூற்றிலே—கதை எடுத்துரைக்கும் இடங்களிலே ஆங்கிலமும் தமிழும் கலந்த ஒருவகை மணிப்பிரவாள நடையை அண்மைக்காலமாகப் படைப்பிலக்கிய உலகில் நாம் கண்டு வருகிறோம். இப்போக்கை எண்பதில் வெளிவந்த தமிழ்ச் சிறு கதை ஆசிரியர் சிலரிடமும் காணமுடிந்தது. இலக்கியம் பொது மக்களைச் சென்று அடைகிறது. குறிப்பாக மிகுதியான அளவில் விற்பனையாகும் இதழ்களில் இடம்பெறும் படைப்புக்களில் இக் கலப்பு நடையைக் காணமுடிந்தது. படிப்பவர் அனைவராலும் இத்தகைய கலப்பு நடையை—ஆங்கிலமும் தமிழும் கலந்த புது வகை மணிப்பிரவாள ஆசிரிய நடையை—புரிந்து கொள்ள முடியுமா என்பது விவாதத்திற்குரியது. ஆனால், இதுபற்றிய சிந்தனையின்றி எழுத்தாளர்கள் தம் நடையில் இக்கலப்பை மிகுதியாகவே ஆள்கின்றனர் 'ப்ரிவியூ'வுக்குத் தன் கணவன் பாஸ் கொண்டு வர முடியாதவன் என்பதிலே அவளுக்குப் பெரிய வருத்தம்'[6] என்றும், ''அண்ணி இப்படியெல்லாம் பேசுவதே ஒரு 'எஸ்கேப்' என்கிற மாதிரி சிலருக்குத் தோணும்'' என்றும் வருமிடங்களைக் கூறலாம். சுஜாதாவின் ''ஃபில்மோத்ஸவ்''[8] சிவசங்கரியின் ''டிரங்கால்',[9] ஸ்டெல்லா புரூஸின் ''ஐ லவ் எவ்ரி திங் அண்டர் தி ஸன்''[10] ஆகிய சிறுகதைகளில் கதைகளின் தலைப்புக்களே ஆங்கிலத்தில் உள்ளன. இவற்றைவிட ஒரு படி மேலே போய் முழுவதுமே ஆங்கிலத்திலே சில வாக்கியங்களை

அமைக்கும் பாங்கைத் "தேனிலவு"[11] என்ற கதையில் சுஜாதா கையாண்டுள்ளார். எடுத்துரைக்கும் ஆற்றலுக்கும் (narrative skill) தம்முடைய கூர்மையான நோக்கரிய நோக்கிற்கும் (keen observation) வாசகர்களிடம் பெரும் வரவேற்புள்ளதை அறிந்த அவர், கணவன்-மனைவி தேனிலவுக்குச் சென்ற இடத்தில் படித்துக் கொண்டிருந்த சூழலை விளக்குகையில் இவ்வாறு சில சொற்றொடர்களையே முழுவதும் ஆங்கிலத்தில் தருகின்றார் படைப்பாசிரியர் தம்முடைய எழுத்துக்கள் சாதாரண வாசகர்களுக்கும்—எழுதப் படிக்கத் தெரிந்த எளிய மக்களுக்கும்—செல்ல வேண்டும் என்பதைப் பற்றியோ தமிழில் எழுதுகிறோம் என்பதையோ மறந்து செயல்படுகின்றனர். சிறுகதையில் ஆசிரியர் எடுத்துரைக்கும் நடையில் இவ்வாறு பிறமொழிக் கலப்பு காணப் படுகிறது.

ஆசிரியரின் நடையில் மாந்தரின் மன உணர்வு, கதைக்கரு, சமுதாயத்தைச் சாரும் மென்மையான நகைச்சுவை மிக்க அங்கதப் புலப்பாடு, பின்னணியை எடுத்துக்காட்டல் ஆகிய தன்மைகள் வெளிப்படும் பாங்கை இக்காலச் சிறுகதைகளில் காணமுடிகிறது. சுஜாதா, கொ. மா. கோதண்டம், கி. ராஜநாராயணன், நாஞ்சில் நாடன், மலர்மன்னன் ஆகியோரை இவ்வகையில் குறிப்பிட வேண்டும். "எதிர்ப்புறத்தில் பழங்காலத்து மரக்கட்டிடத்தின் உச்சாணியில் இருந்த வினோத கடிகாரத்தையே பார்த்துக் கொண்டு பத்துப் பதினைந்து பேர் ஒன்பது அடிக்கக் காத்திருந் தார்கள் மணியடிக்கும்போது இரண்டு பொம்மை ஆடுகள் ஒன்றை ஒன்று முட்டிக்கொள்ளுமாம். மஹாராஜா செயலாக இருந்தபோது வாங்கிப்போட்ட கடிகாரம். இப்போது மஹா ராஜாவே அந்த பதினைந்து பேரில் ஒருவராக இருந்தால் ஆச்சரிய படக்கூடாது என்று சோமசுந்தரம் எண்ணினான்"[12] என்பதில் செயலாக இருந்து இப்போது தேய்ந்துபோன திருவனந்தபுரம் அரசரைக் காட்டி விடுகிறார் சுஜாதா. "நாராயணின் குறிக்கோள் நவீன சினிமாவின் மைல்கல்களை தரிசித்துவிட்டு விமரிசனம் செய் வதல்ல. அதற்கெல்லாம் பண்டிதர்கள் இருக்கிறார்கள். அவனைப் பொறுத்தவரை ஒரு பெண்ணாவது ஏதாவது ஒரு சமயம் உடை யில்லாமல் ஓரிரண்டு ஃபிரேமாவது வரவேண்டும். அப்போது தான் கொடுத்த காசு ஜீரணம்"[13] என்று வருமிடத்தில் மாந்தரின் மன உணர்வை ஆசிரியரின் நடை நன்கு காட்டுகிறது. "பாது காப்புக் கருதி ஜன்னலே இல்லாமல் கட்டப்பட்டிருந்த அந்த

வீட்டில், கண்கெட்டு விடும் என்ற காரணத்துக்காக மின்சார விளக்கும் கிடையாது. வீட்டின் கீழ்ப் படிப்பறையில் தெற்குப் பக்கம், சுந்தரத்தின் தகப்பனார் தூணில் சாய்ந்து மகன் படிப் பதைக் கவனிப்பார். மேலே தாழ்வார உத்தரத்தில் கொக்கியில் தொங்கும் அரிக்கேன் விளக்கு வெளிச்சத்தில் சுந்தரம் படிக்கத் துவங்குவான்'[14] என்று இட வருணனை ஆசிரியர் நடையில் நன்கு புலனாகிறது. 'இரண்டு மலைகளுக்கு இடையிலான அந்த அடர்ந்த ஆரண்யத்தின் நடுப்பகுதி போலிருந்த அந்த இடம் மட்டும் மரங்களின்றி ஒரு பெரிய புல்திரட்டாக அமைந்திருந்தது. கீழ மலையின் அடிவாரத்திலிருந்து பத்து மைல் தூரத்தில் இருக்கும் ஊரிலுள்ள செல்வந்தர்களின் மாடுகளை அங்கே கிடையாக வைத்து அந்தத் தொழிலாளர்கள் அவற்றை மேய்த்து வளர்த்து வந்தார்கள்'[15] என்று மண்வாசனையுடன் கூடிய இடவருணனை ஆசிரியரின் மண் உணர்வுமிக்க நடையைக் காட்டும். 'மூஞ்சியைப் பார்த்துச் சுமார் என்று சொல்லக்கூடிய ஓர் ஓட்டலில் நுழைந் தார்கள். கல்லாவில் ஊதுபத்திப் பட்டைகள் அடுக்கியிருந் தார்கள். பத்திரிகைகளின் இந்த வார அட்டைப்படப் பெண்மணி கேரளத்து தேங்காய்களை நினைவு படுத்தினாள். குலைகுலை யாகச் செக்கச் சிவந்த வாழைப்பழங்கள் தொங்கின மரவள்ளியும் பலாவும் வறுவலாகப் பாலித்தீன் பைகளில் அடங்கியிருந்தன. கமலஹாசனுக்குக் கீழே மலையாளத்தில் நண்டு நண்டாக ஏதோ எழுதியிருந்தது.

"எந்தா வேண்ட," என்றான். காதில் பென்சில்
"எனக்கு மலையாளம் தெரியாது. தமிழ்தான்".
"சாரமில்லா. பரயு..." '[16]

என்று காட்டும் திருவனந்தபுர இடப்பின்னணி வருணனை அவ் விடத்தின் மக்களுடைய மொழி கலை, சுவை, வாழ்வியல் பற்றிய வருணனையாக உள்ளது. ஆசிரியரின் கூர்ந்த நோக்கரிய நோக்கும் நுட்பமான வெளியீடும் கலந்து எடுத்துரைக்கும் பாங்கை உயிருள்ள தாக்குகிறது. இத்தகைய, ஆசிரியரின் நடைநலமிக்க சிறுகதை களும் இக்காலத்தில் வெளிவந்துள்ளன.

சிறுகதையில் இடம்பெறும் உத்திகள் என்பவற்றுள் கதையின் தலைப்பு, தொடக்கம், முடிவு, கதைகூறும்முறை, ஆர்வநிலை, மறைபொருள் சுவர்ச்சி (Suspense) நோக்குநிலை (point of view), பின்னோக்கு (Flash back). ஒருமைப்பாடு (Unity) என்ற பலவற்

றையும் அடக்குவர். சிறுகதையில் அனைத்து உத்திகளும் இடம் பெற வேண்டும் என்பதில்லை. எடுத்துக்கொண்ட கருப்பொருளை விளக்கும் வண்ணம் உத்திகள் ஆளப்படவேண்டும். ஒருசில உத்திகள் கூடியும் குறைந்தும் அமைந்தாலும் இடம்பெறும் உத்திகள் அனைத்தும் கதையின் மையமான கருப்பொருளைப் புலப்படுத்துவதாக ஒருமைப்பாடு சிதையாமல் அமையவேண்டும். ''கலைவடிவில் மேற்கொள்ளப்படும் ஒவ்வொரு கலைத்திறனும் (உத்தியும்) கதையின் அடிநாதமாக ஒலிக்கும் கருப்பொருளினை விளக்கி எதிரொலி செய்யும் வண்ணமே எடுத்தாளப்படும்''[17] என்னும் திறனாய்வாளரின் கூற்று இங்கு அறியத்தக்கது. எண்பதாம் ஆண்டுச் சிறுகதைகளில் உத்திகள் நல்லமுறையில் ஆளப்பட்டுள்ளன. என்றாலும் பின்னோக்கு என்ற உத்தியைப் பெரும்பாலான ஆசிரியர்கள் ஆள்கின்றனர். தமிழ்ச் சிறுகதையின் மூல முதல்வரான வ. வே சு. ஐயரின் **குளத்தங்கரை அரசமரம்** கதையில் இருந்து தொடங்கிய இவ்வுத்தியை இன்றளவும் தமிழ் சிறுகதை படைப்பாளிகள் விடாது சிக்கெனப் பிடித்துள்ளனர்.

கதைகூறும் முறையில் படிப்பவர்களுக்குச் சுவை ஏற்படுத்தும் நோக்கத்தை மையப்படுத்தி எழுதும் சுஜாதாவின் இக்காலச் சிறுகதைகள் குறிப்பிடத்தக்கன. படைப்பாளரின் குரல் (narrator's tone) இதனால் இவர் கதைகளில் பல இடங்களில் ஒலிக்கிறது. கி. ராஜநாராயணன், நாஞ்சில் நாடன், கொ. மா. கோதண்டம் ஆகியோரின் சிறுகதைகளில் எவ்வித உத்தியும் தாமாக நுழைக்கப்படாத இயல்பானகதைகூறும் முறை மண்ணின் மணம் கமழும் பிரதேச உணர்வுப்பாங்கு மிக்க கூற்றுமுறை-சிறப்பாக இடம்பெற்றுள்ளது.

பொதுவாகச் சிறுகதையில் ஆசிரியரோ கதை கூறுபவரோ (narrator) இருக்கின்றார் என்ற உணர்வே ஏற்படாமல் கதை படைக்கப்படல் வேண்டும். எந்தவொரு இடத்திலும் ஆசிரியர் குறுக்கீடு இருத்தல் கூடாது. கதையில் கூறியது குறைவாகவும் அதன் வழியே வாசகரைச் சிந்திக்க வைப்பது மிகுதியாகவும் இருத்தல் வேண்டும். தேவையற்ற எந்த ஒன்றுமே சிறுகதையில் இடம் பெறல் ஆகாது. ''கதையில் இடப்படும் சாற்புள்ளி, அரைப்புள்ளி என்ற நிறுத்தற்குறிகளும் புள்ளியிடாமல் விடப்படும் வெற்றிடங்களும் பேசாதன பேசிக் காட்டாதன காட்டும் ஆற்றல் உடையனவாக விளங்குகின்றன''[18] என்னும் ஆய்வாளரின்

கூற்றால் இதனை உணரலாம். இதனால் சிறுகதையில் திட்பமும் நுட்பமும் எவ்வாறு இழையோட வேண்டும் என அறியலாம். ஆயின், பெரும்பாலான சிறுகதை ஆசிரியர்கள் இதனை அறியாது பல இடங்களில் தாமே தலைகாட்டி, ''அஹோ வாரும் பிள்ளாய்'' என்று விக்கிரமாதித்தன் கதைப்பாங்கில் பேசத் தலைப் படுகின்றனர். இவர்களின் இக்குறுக்கீட்டால் கதையின் ஒருமைப் பாடு சிதைகிறது. இக்காலகட்டச் சிறுகதைகள் பலவற்றிலும் இப்பாங்கைக் காணமுடிகிறது.

பின்னோக்கு தொடங்குமிடத்தில், ''நான்கு நாட்களுக்கு முன்...''[19] என்று கூறித் தொடங்கும் ஆசிரியர், அடுத்து நான்கு நாட்களுக்கு முன் நடந்ததைக் கூறுவதை விடுத்து, ''நான்கு நாட் களுக்கு முன் நடந்ததைச் சொல்லவேண்டுமென்றால் நான்கைந்து வருஷங்களாகவே நடந்து வருவதைச் சுருக்கமாகவாவது சொல்ல வேண்டும். அப்போதுதான் விளங்கும்''[20] என்று விரிவுரை நிகழ்த்துகிறார். ஆசிரியர் குறுக்கிட்டு வாசகர்களை விளித்துப் பேசும் போக்கிற்கு இது சிறந்த சான்று. தம் கதையைப் படிக்கும் வாசகருக்கு இது தெரியாது என்று நினைத்து, **சுருக்கமாகவாவது சொல்ல வேண்டும். அப்போதுதான் விளங்கும்** என்று கூறு கிறார் ஆசிரியர் (விரிவாகக் கூறினால் இதனைச் சிறுகதையாக ஏற்கமாட்டோம்). சிறுகதையின் ஓட்டத்தை இது தடுத்து நிறுத்தி ஒருமைப்பாட்டைச் சிதைக்கிறது.

சிறுகதை முடிவில் இருமாந்தர்கள் உரையாடுமிடத்தில் உரையாடல் வழியே கருத்து புலப்படுத்தப்பட்டு விடுகிறது. ''ஒரு தொழிலாளி பணக்காரனாகி விடுகிறதால் தொழிலாளர் பிரச்சினை கள் தீர்ந்துவிடாது. தொழிலாள வர்க்கத்தினருடைய அடிப்படைப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப்படணும். உழைக்கிறவனுக்கு உழைப்பில் பங்கு இருக்கணும்......''[21] என்று வருமிடத்தில் கதைக்கரு புலனாகிறது. இத்துடன் சிறுகதை முடிந்திருப்பின் அது இயல்பான முடிவாகப் படிக்கும் வாசகரைச் சிந்திக்கத் தூண்டு வதாக இருக்கும். இதற்குமேல், ஆசிரியர், ''உண்மைதான்! காலம் கனியுமா?''[22] என்று கூறி விரிவுரை செய்வது கதையின் ஓட்டத்தைத் தடைசெய்கிறது. இதே தன்மையில் முடிவில் ஆசிரியர் பேசும் பாங்கிற்கு இன்னுமொரு சான்று:

''ஸாரி பெரியம்மா! உங்களுக்கு ஹெல்ப் பண்ண முடியாத நிலையில் இருக்கேன்!' சோமசுந்தரம் கியர் மாற்றக் கார் வேகம் பிடித்தது.

அதன் கண்ணாடி வழியாக மூவரும் நிற்பதைப் பார்த்தாள் ஈஸ்வரி. புடவைத் தலைப்பில் அழுதுகொண்டு அலமேலு; சங்கிலியைக் கடித்துக்கொண்டு காலால் தரையில் கோடிட்டுக் கொண்டு கோமதி; சற்றுத் தூரத்தில் அவர்களை வா என்று கூப்பிடும் அந்த சைக்கிள் தாடி''[28] என்று கதையின் இயல்பான ஓட்டத்தில் மாந்தர்களின் பண்போவியப் படப்பிடிப்பின் வழியே கதையின் கரு புலப்படுத்தப்பட்டு விடுகிறது. கதையின் தலைப்பான 'நிபந்தனை' என்பதை இணைத்துப் பார்க்கையில் இம்முடிவு இன்னும் வலிமை பெறுகிறது. இதற்குப் பிறகு ஆசிரியர் குறுக்கிட்டு, ''கருணைக்கும் சில நிபந்தனைகள் உண்டு''[24] என்று பேசுவது கதையின் ஓட்டத்தைத் தடுப்பதுடன் வாசகனைச் சிந்திக்கத் தூண்டும் கதையின் முடிவை நீர்த்துப் போக வைக்கிறது. படிப்பவர்களின் சிந்தனை ஆற்றலை மழுங் கடித்து மரத்துப் போகவைக்கும் இதழ்களின் போக்கால் இது விளைந்ததா அல்லது இறுதிக்காட்சியில் அத்திரைப்படத்தின் கதைச்சிறப்பை அல்லது பெயர்ப்பொருத்தத்தை எடுத்துப் பேசி அமைதி காணும் தமிழ்த்திரைப் படத்தின் தாக்கத்தால் ஏற்பட்டதா என்று ஆராயவேண்டும்.

கதையின் இறுதியில் நீண்ட விளக்கம் தரும் பாங்கைச் சுஜாதாவின் ஒரு சிறுகதையில் காண்கிறோம். ''இந்தக் கதையின் இறுதிப் பகுதிக்கு வந்து விட்டோம். நம் சமுதாய நியதிகளின்படி சத்யமூர்த்தி செய்வது தப்புத்தான் என்று தோன்றுகிறது. சிறு கதையில் இதற்குச் சுலபமாக சத்யமூர்த்திக்குத் தண்டனை கொடுத்துவிடலாம். யாராவது கண்டுபிடித்துச் சொன்னால் ஐ.பி.ஸி.யில் இதற்குப் பரிகாரம் இருக்கிறது. அந்த ஏழைக்குப் படிக்கத் தெரியாத காரணத்திற்கு இவ்வளவு பெரிய இழப்பு வேண்டாம். கதைகளில் இதையெல்லாம் நிவர்த்தி செய்து விடலாம். சத்யமூர்த்தி மாரடைப்பால் இறந்து போய் விடலாம். அல்லது அந்த லாட்டரி டிக்கெட் போலி என்று சொல்லிவிடலாம். அல்லது பணத்திற்குரிய செக்கை வாங்கித் திரும்புகையில் எலக்டிரிக் ரயிலில் அல்லது டாக்ஸியில் பாலம் கடக்கையில் காற்றடித்து செக் பறந்து போய் ஆழமாக ஜலத்தில் விழுந்தது என்று சொல்வதற்குச் சௌகரியமான இடங்கள் சென்னையில் உள்ளன. இப்படி எல்லாம் ஒன்றும் நிகழவில்லை. நிஜவாழ்க்கை

யில் காரண காரியங்கள் அவ்வளவு சுலபமாக அமைவதில்லை.''[25] இந்தப் பகுதி முழுவதும் தம் கதையின் முடிவை வாசகர்களிடம் நியாயப்படுத்துவதற்காக அவர்களை விளித்து ஆசிரியர் பேசுவதாகும். கதையின் ஓட்டத்தை இயல்பான போக்கை இது பாதிக்கிறது. சிறுகதை முடிவு எப்படி இருக்கும் என்பது பற்றிய ஆசிரிய விமர்சனம் சிறுகதையில் இடம்பெறலாகாது. தாம் எழுதுவது எதுவாயினும் இலக்கியமாகிவிடும் என்ற ஆசிரியரின் எண்ணத்தால் ஏற்பட்டது இது.

இவ்வாறே அக்கதையின் முடிவில் அந்த மாந்தருக்கு ஏற்பட்ட முடிவை, ''சரியாக ஒரு வருஷத்தில் மனைவி மக்கள் பணம் எல்லாம் ..''[26] என்பதோடு விட்டுவிட்டிருந்தால் அது படிப்பவரைச் சிந்திக்கத் தூண்டுவதாக இருக்கும். இதன்பின், ''அது வேறு கதை''[27] என்று பேசுவது முடிவிற்கு அப்புறம் ஆசிரியர் குறுக்கிட்டுப் பேசுவதாக ஆகிவிடுகிறது.

சிறுகதையின் அமைப்பு (Structure) என்ற நிலையில் பார்க்கையில் இக்காலச் சிறுகதைகளில் பெரும்பாலும் எளிய நிலையிலான அமைப்பைக் கொண்டவையாக உள்ளன. ஒரு நிகழ்ச்சி, ஒரு மாந்தரின் பண்பு வெளிப்பாடு, ஒரு கரு புலப்பாடு என்ற அடிப்படையில் சிக்கலின் தோற்றம், வளர்ச்சி, உச்சநிலை, முடிவு என்ற நான்கு நிலைகளில் சிக்கலைக் காட்டும் அமைப்பிலோ உச்சநிலை அடைவதே முடிவாக வைத்து மூன்று நிலைகளில் காட்டும் அமைப்பிலோ அக்கதைகள் அமைந்துள்ளன. மலர் மன்னனின் **அற்பஜீவிகள்**, கொ.மா. கோதண்டத்தின் சிறுகதைகள் ஆகியன அமைப்பில் மாறுபட்டவை. ஏனைய கதைகள் பெரும்பாலும் இதழ்களின் போக்கிற்கும் வாசகர்களின் எளிய போக்கிலான பொழுதுபோக்குச் சுவைக்கும் ஏற்ப எளிய அமைப்பிலானவை.

சிறுகதையின் அமைப்பை அதன் நீளத்தை வைத்து முடிவு செய்ய இயலாது. எனினும் எந்த ஒன்று கதையில் கருப்பொருளாக அமைகிறதோ அதனை முழுமையாகப் புலப்படுத்துமாறு கதைப் பின்னலின் முழுநிலை வெளிப்படையாக அது அமைய வேண்டும். அவ்வாறன்றி, கதையின் இறுதியில் வரும் திடுக்கிடச் செய்யும் முடிவை நோக்கி வளர்க்கும் ஆர்வ நிலை ஒன்றையே மையமாக்கி ஒருபக்க அளவில் அமையும் சின்னஞ்சிறு கதையில் அமைப்பு என்ற எதுவும் இல்லை. இதற்குக் ''கதவை இடித்த கடமை''[28] என்ற கதை நல்ல சான்று. கதை செயற்கையாக அமைகிறது இதே பாங்கில் ''இளங்கன்று இடமறியாது'' என்பதும் உள்ளது.

இக்காலகட்டச் சிறுகதைகளில் ஆண்டின் இயல்பு, பெண்களின் மனஉணர்வுப் போராட்டம், தலைமுறை இடைவெளியால் ஏற்படும் சிக்கல், மனிதநேயம், பழைய வாழ்க்கை மரபுகள் சமுதாய மதிப்புகள் உடைதல், உழைப்பவன் உழைப்பைச் சுரண்டுபவர்களின் போக்கால் உழைப்பவன் வாடுதல், ஏழ்மை அவலம், வரதட்சணைக் கொடுமை, பாலுறவு போன்ற பல செய்திகள் கதைக்கருவாக இடம்பெற்றுள்ளன. மனிதமன உணர்வுகளை நுட்பமாகச் சல்லடையிட்டு அலசும் பாங்கில் பல கதைகள் உள்ளன. சமுதாய அமைப்பு, சமூகம் இப்படி ஆனதற்குரிய காரணம், இப்படிப்பட்ட சமூக அமைப்பில் இத்தகு மனிதர்களே விளையக் கூடும் என்ற பொது விதிகளைப் புரிந்து கொண்டு எழுதப்படும் கதைகளை மருந்துக்குக்கூட இக்காலத்தில் காணமுடியவில்லை. இதன் விளைவாகக் குறிக்கோள் வாதமிக்க நாயகர்கள் படைப்புகள் வெளிவருகின்றன. பாலுணர்வை மையமிட்டு எழுதும் கதைகள், மனிதமன விகாரங்களைப் பெரிதுபடுத்தும் கதைகள் பல இக்காலத்தில் காணப்படுகின்றன.

இதழ்களின் பாதிப்பு, வாசகர்களை எளிய பொழுது போக்கிற்கே இட்டுச்செல்லல், திரைப்படத் தாக்கம் போன்றவற்றையும் மீறி நல்ல வலுவான கருவும் அமைப்பும் உருவமும் மிக்க கதைகளும் இக்காலத்தில் வெளிவந்துள்ளன.

## குறிப்புகள்

1. 1980-இல் **தமிழ்** என்ற தொகுப்பின் தொகுப்பாசிரியரும் சென்னை, உலகத்தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநருமான டாக்டர் ச.வே. சுப்பிரமணியனார் கட்டுரையாளருக்கு 21-4-81 அன்று எழுதிய மடல்.

2. (i) கோதண்டம், கொ. மா., **மலையின் மைந்தர்கள்,** சிவகங்கை, அகரம்.

(ii) சுஜாதா, **வானத்தில் ஒரு மௌனத் தாரகை,** நாகப்பட்டினம், குமரிப்பதிப்பகம்.

(iii) சிவசங்கரி, **கழுகு,** சென்னை, வானதி பதிப்பகம்.

(iv) **டிரங்கால்,** சென்னை, வானதி பதிப்பகம்.

(v) மோகனரங்கம், கோ. ஆலந்தூர்., **கோணமலை கோவிந்தன் கொக்கு பிடித்த கதை,** சென்னை, வசந்தா பதிப்பகம்.

(vi) ராஜநாராயணன், **அப்பா பிள்ளை அம்மா பிள்ளை**, சிவகங்கை, அகரம்.

(vii) அருணா சண்முகம், **ஊமைப்படம் ஓடுகின்றது**, கோவை, நந்தினி வெளியீட்டகம்.

(viii) ஸ்ரீதர்-சாமா, **நிழல் மனிதர்கள்**, சென்னை, கலைஞன் பதிப்பகம்.

(ix) அழகப்பன், அழகாபுரி., **தெய்வம் பார்த்துக் கொண்டிருக்கிறது**, சென்னை, வசந்தா பிரசுரம்.

(x) முத்துக்காளத்தி, மு., **பொக்கிஷம்**, சென்னை, பாரி நிலையம்.

(xi) **அற்ப ஜீவிகள்**, சென்னை, இலக்கியச் சிந்தனை — வானதி பதிப்பகம்.

3. தெய்வசிகாமணி, நெ. சி. (தொ. ஆ), **திக்கெல்லாம் புகழும் தெனாலி இராமன் கதைகள்**, சென்னை, பைலட் பப்ளிகேஷன்ஸ்.

[தெனாலி இராமன் கதைகளைப் பலரும் தொகுத்து வெளியிட்டுள்ளனர். அவ்வரிசையில் இதுவும் ஒன்று]

4. தங்கமணி, **பாரதியாரின் பகுத்தறிவுக் கதைகள்**, சென்னை, செந்தில் பதிப்பகம்.

[பாரதியாரின் கதைகளைப் பல்வேறாகப் பகுத்து வெளியிடும் முயற்சிகளில் இதுவும் ஒன்று. பாரதி நூற்றாண்டு விழாவை ஒட்டி வெளியாகும் பாரதி நூல் வரிசையில் இதுவும் ஒன்று]

குறிப்பு 3, 4 ஆகியவற்றில் காணப்படும் நூல்களைச் சிறு கதைத் தொகுப்புக்களாக இவ்வாய்வில் கொள்ளவில்லை.

5. அகிலன்' "உலகம்" என்னும் இதழில் (16-11-1965 நாளிட்ட உலகம் இதழ், ப. 12) அளித்த பதில்கள் பகுதியில் காணப்படும் கூற்று.

மேற்கோள், வேங்கடராமன் சு., **அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு**, சென்னை, தமிழ்ப்புத்தகாலயம், ப. 170.

6. மெய்யடியான், "ஏக்கங்கள்... பெருமூச்சுகள்", **அற்ப ஜீவிகள்** (தொகுப்பு), ப. 67.

7. ஸ்டெல்லா புரூஸ், "ஐ லவ் எவ்ரிதிங் அண்டர் தி ஸன்" **அற்பஜீவிகள்** (தொகுப்பு), ப. 101.

8. சுஜாதா, ''ஃபில்மோத்ஸவ்'' வானத்தில் ஒரு மௌனத் தாரகை, ப. 97

9. சிவசங்கரி, ''டிரங்கால்'', டிரங்கால்.

10 ஸ்டெல்லா புரூஸ், ''ஐ லவ் எவ்ரி திங் அண்டர் தி ஸன்'', அற்பஜீவிகள், ப. 99.

11. சுஜாதா, ''தேனிலவு'' வானத்தில் ஒரு மௌனத் தாரகை, பக். 52-53.

12. சுஜாதா, ''நிபந்தனை'', வானத்தில் ஒரு மௌனத் தாரகை, ப. 26.

13. சுஜாதா, ''ஃபில்மோத்ஸவ்'' வானத்தில் ஒரு மௌனத் தாரகை, ப.98.

14. நாஞ்சில் நாடன், ''முரண்டு'', அற்பஜீவிகள், ப. 135.

15. கொ. மா. கோதண்டம், ''மலைக் காட்டிடையே ஒரு மாட்டுக்கிடை'', மலையின் மைந்தர்கள், ப. 17.

16. சுஜாதா, ''நிபந்தனை'', வானத்தில் ஒரு மௌனத் தாரகை, ப. 27.

17. வேங்கடராமன், சு., அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப. 153.

18. மேற்படி, ப.153.

19. கிருஷ்ணன், சு. திருப்பூர்., ''கடைசி நெருப்பு'' அற்பஜீவிகள் (தொகுப்பு), ப. 33.

20. மேற்படி ப. 33.

21. முருகானந்தன், ச., ''மீன்குஞ்சுகள்'' அற்பஜீவிகள் (தொகுப்பு), பக் 97-98.

22. மேற்படி, ப. 98.

23. சுஜாதா, ''நிபந்தனை'', வானத்தில் ஒரு மௌனத் தாரகை, ப. 37.

24. மேற்படி, ப 37.

25. சுஜாதா, ''A 12662901'', வானத்தில் ஒரு மௌனத் தாரகை, ப. 45.

26. மேற்படி, ப. 46.

27. மேற்படி,. பக். 47.

28. காளத்தி, மு., பொக்கிஷம்

29. மேற்படி,

# வாழ்க்கை வரலாற்று நூல்கள்

இரா. தமிழரசி

ஒருவரை உலகிற்கு அறிமுகப்படுத்தும் வகையிலும், அவரது பண்புகள் மற்றவர்க்கு வழிகாட்டியாய் விளங்கக்கூடும் என்ற எண்ணத்திலும் வாழ்க்கை வரலாற்று நூல்கள் தோன்றுகின்றன. தமிழில் முழுமைபெற்ற வாழ்க்கை வரலாற்று நூல்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான் தோன்றியது எனினும் சங்க இலக்கியம் முதல் அதைப்பற்றிய எண்ணம் இருந்து வந்துள்ளது. அதியமானை ஔவையார் பாடிய பாடல்கள், பாரியைக் கபிலர் பாடியவை ஆகியன இதில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இவை ஓரளவு அவ்வரசர்களின் வாழ்க்கையை உணர்த்துகின்றன **பதிற்றுப் பத்திலும்** கோவூர்கிழார், பெருஞ்சித்திரனார், நக்கண்ணையார் ஆகியோர் பாடல்கள் இப்பண்பினைக் கொண்டுள்ளன. **சிலப்பதிகாரமும்** ஒருவகையில் வாழ்க்கை வரலாற்றை இயம்பும் போக்கில் உள்ளது. இதனையடுத்து தேவாரம், திருத்தொண்டத்தொகை, பரணி, உலா, பிள்ளைத்தமிழ் போன்றவற்றிலும் வாழ்க்கை வரலாற்றைக் கூறும் பண்பு அடங்கியுளளது. மெய்க்கீர்த்திகளும் இவ்வகையில் குறிப்பிடத்தக்கன. பின்னர் வந்த தனிப்பாடல்களிலும் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள் அடங்கிய ஒரு சில பாடல்கள் உள்ளன.

இவ்வாறு சிறுசிறு குறிப்புகளாக மட்டுமே இடம்பெற்ற வாழ்க்கை வரலாற்றுத் தன்மை, தமிழ் இலக்கிய வரலாற்றில், பத்தொன்பதாம் நூற்றாண்டில் முழுமை பெற்ற தனி நூல்களாக உருவெடுத்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டு தொடங்கி

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதாம் ஆண்டு வரை தமிழில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட வாழ்க்கை வரலாறுகள் தோன்றியுள்ளன. உரை நடை வளர்ச்சி பெறத் தொடங்கிய காலம் முதல் இந் நூல்களும் வளர்ச்சி பெறத் தொடங்கியுள்ளன. இதில் கி.பி. 1871 ஆம் ஆண்டில் கதிர்வேலுப்பிள்ளை என்பவர் பதிப்பித்த **'கிளைவ் சரித்திரம்'** முதன்மையானதாகக் கருதப்படுகிறது[1]. ஆயிரத்துத் தொள்ளாயிரத்துக்குள் நாற்பது வாழ்க்கை வரலாற்று நூல்கள் வெளிவந்துள்ளதாகத் தெரிகிறது. இவையனைத்தும் சமய அடிப்படையில் எழுந்தனவாக உள்ளன. ஆங்கில ஆட்சியில் அவர்களது மதத்தையும் மக்களிடைப் பரப்ப முனைந்தனர். இந் நோக்கில் பல கிறித்துவ வரலாறுகள் தோன்றலாயின. இதற்கு எதிராக இந்துமத் அடியார்களைப் பற்றியும் வரலாறுகள் எழுதப் படத் தொடங்கின. இச்சூழல் சமய வரலாறுகள் மட்டும் தோன்ற ஏதுவாயிருந்தது எனலாம். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பதாம் ஆண்டு வரை தமிழ்ப் புலவர்களைப் பற்றிய வாழ்க்கை வரலாற்று நூல்கள் மிகுந்துள்ளன. 1930—40க்கு இடைப்பட்ட ஆண்டுகளில் இந்திய அரசியலிலும், தமிழ்ச் சமுதாயத்திலும் குறிப்பிடத்தக்க பெரியார், மீனாட்சி சுந்தரம் பிள்ளை, தாமோதரம்பிள்ளை, நேரு, சேதுப்பிள்ளை ஆகியோரது வரலாறு எழுதப்பட்டுள்ளது. 1941-50க்கு இடைப்பட்ட ஆண்டுகளில் திரு வி. க நாமக்கல் கவிஞர், வ. உ. சி, உ. வே. சா ஆகியோரின் தன்வரலாற்று நூல்கள் எழுந்துள்ளன. இதற்கடுத்த காலப்பகுதிகளில் மதச்சார்புடையவை குறைந்து அரசியல், தமிழ் என்பது தொடர்பான வாழ்க்கை வரலாறுகள் மிகுந்து காணப்படுகின்றன. அவ்வப்போது சமுதாயத்தில் நிகழும் அரசியல் மாற்றங்கள், மதஉணர்வு இவையும் வாழ்க்கை வரலாற்று நூல்கள் தோன்றுதலில் இன்றியமையாத இடத்தைப் பெற்றிருந்தன என்பதை இங்கு நன்கு உணர இயலுகிறது.

தனி வாழ்க்கை வரலாற்று நூலாகத் தொடங்கிய காலம் முதல் எழுபது வரை எண்ணிக்கையில் பெருகிக் கொண்டே வந்த வாழ்க்கை வரலாற்று நூல்கள் 1970-80க்கும் இடைப்பட்ட பத்து ஆண்டுக் காலத்தில் வீழ்ச்சி பெற்றுள்ளது. 1960-70க்கு இடைப் பட்ட பத்து ஆண்டுக் காலத்தில் முந்நூற்று இருபத்தைந்து நூல்களாக இருந்தவை அடுத்து பத்து ஆண்டுக் காலத்தில் நூற்று எண்பத்தாறு நூல்களாகக் குறைவுபட்டுள்ளன. எண்ணிக்கையில் குறைவுபடினும் பண்பில் முழுமையுற்ற

வரலாறுகள் பலவும் இக்காலத்தில் எழுந்துள்ளன. அரசியல், தமிழ் என்பது தொடர்பான வரலாறுகளே இக்காலப் பகுதியில் மிகுந்து காணப்படுகிறது. எஞ்சியவை வெளிநாட்டு அறிஞர்கள், விளையாட்டு வீரர்கள், அறிவியல் அறிஞர்கள், சமயத்தலைவர்கள் பற்றி உள்ளன. முழு விளக்க வரலாறு களோடு பலரது வாழ்க்கை வரலாற்றுத் தொகுப்புகளும் இக்காலப் பகுதியில் பெருகிக் காணப்படுகிறது. உலகில் தோன்றிய பெயர்பெற்றவர்களின் வாழ்வில் நிகழ்ந்த ஒரு சிறு நிகழ்ச்சி யனைத்தையும் தொகுத்துத் துணுக்குகளாக அமைக்கப்பட்ட நூல் களும் உள்ளன. **மேதைகள் வாழ்விலே, உலகைக் கவர்ந்த முக்கிய நிகழ்ச்சிகள்** என்பன இதற்குச் சான்றாகும். வளர்ந்து வரும் பரபரப்பு மிகுந்த உலகில் முழு வரலாற்றை விடச் சுருக்க வரலாறுகளை விரும்பினர் எனக் கொள்ளவும் இங்கு இடமுண்டா கிறது. 'நிமிடக் கதைகளும் துணுக்குகளும் படித்துப் பழகிய மக்கள் வாழ்வை முழுமையாகக் கண்டு இலட்சிய வீறு பெறும் இலக்கிலிருந்து வழுவி, சுவையான குறிப்புக்களைப் பொழுது போக்குக்காகப் படிக்கும் நிலைக்கு வந்து விட்டார்கள் என்ப தையே இதுகாட்டுவதாக'வும் கூறுவர்.[2] எண்பதில் சுருக்கவரலாறு களாக ஒன்பது நூல்கள் தோன்றியுள்ளன. இவற்றில் சிறுவர்க் காக எழுதப்படுவனவும் உண்டு. ஒருவரைப் பற்றி பல வாழ்க்கை வரலாற்று நூல்கள் தோன்றிய பின்பு மீண்டும் மீண்டும் எழுதுவது கூறியது கூறலாக அமைவதும் இத்தகைய சுருக்க வரலாறு எழுதற்குக் காரணமாயுள்ளது. புகழ்பெற்றவரின் நினைவுநாள் போன்றவைகளிலும் பலரது கருத்துகளைக் கொண்டு தொகுத்த சுருக்க வரலாறுகள் வெளியிடப் படுகின்றன. எண்பதில் தோன்றிய **பாரத ரத்னா ராஜாஜி, மரணத்தை வென்ற மகாகவி உலகப்பெரியார் புத்தர், பாவேந்தர்பாரதிதாசன், பெருமை** ஆகியவை இத்தன்மையன. எழுபது முதல் எண்பது வரையுள்ள காலப்பகுதியில், பிறர் கூறிய கருத்துகளோடு, பத்திரிகைச் செய்திகளையும் தொகுத்துக் கூறும் தன்மை காணப்படுகிறது. **அண்ணாவின் கடைசி நாட்கள், பத்திரிகையாளர் நெஞ்சில் காமராஜ்** என்பன இதற்குச் சான்று. நேரில் கண்டு உரையாடிய உரையாடல்களைத் தொகுத்து வெளியிடும் வகையிலும் இந் நூல்கள் அமைக்கப்படுகின்றன. **நேரு தம்மைக் குறித்துத் தம் சொற்களில்** என்ற நூலில் அவரது உரையாடல்களைக் கொண்டே அவரைப் பற்றிய செய்திகளை விளக்கியிருப்பதைக் காணலாம்.

பாரதியாரின் மகளாகிய சகுந்தலா பாரதி போன்றோர் தம் தந்தையாரைப் பற்றி எழுதியுள்ளமையைக் காண்கிறோம். ஆயின் வெளியுலகத்தால் அறியப்படாவிடினும் அன்பு மிகுதி காரணமாகத் தமது தாயைப் பற்றிய வரலாற்றை எழுதும் தன்மையும் காணப் படுகிறது. தாயைச் சுடராக உருவகிக்கும் அடிப்படையில் **தியாகச்சுடர்** ஒரு குறிப்பு என்ற இந்நூல் எழுபத்தேழாம் ஆண்டு வெளிவந்துள்ளது. தாய் தமது முன்னேற்றத்திற்கு எவ்வா றெல்லாம் காரணமாயிருந்தாள் என்பது விளக்கப்படுகிறது. இங்குத் தாயின் அன்பை விளக்கும் வழி நூலாசிரியர் வரலாறும் விளக்கப்பட்டுள்ளது. தன் வரலாற்றை எழுதுவதில் கையாண்ட உத்தியோ என எண்ணும் வகையிலும் இந்நூல் உள்ளது. அற நூல்களை அடிப்படையாகக் கொண்டு அந்நெறியில் சான்றோர் எவ்வாறு வாழ்ந்துள்ளனர் என்று காணும் முறையிலும் வாழ்க்கை வரலாறுகள் அமைந்துள்ளன குறள் சொல்லாட்சிகளை வைத்தே வாழ்க்கையை விளக்கியிருக்கும் **குறள் நெறியில் அறிஞர் அண்ணா** என்ற நூல் இதற்குக் காட்டாகும். மேற்காட்டியது போன்ற புதிய முயற்சிகள் எவையும் எண்பதில் மேற்கொள்ளப்படவில்லை. நூலைச் சுவைபட விளக்கிச் சென்றிருப்பினும் ஒருசில நூல்களைத் தவிர பொருள் வெளிப்பாட்டிற்கென எவ்வகை உத்திகளும் கையாளப்படவில்லை.

நூல் அமைப்பில், உரைநடை வடிவிலன்றி காப்பிய அமைப்பு, பிள்ளைத்தமிழ் போன்ற பழைய இலக்கிய வடிவைக் கருவியாகக் கொண்டு செய்யுள் வடிவில் அமைந்த நூல்களும் ஒருசில உள்ளன. ஆயின் இந்நூல்கள் முழுவாழ்க்கை வரலாற்றுக்குரிய பண்பு களோடு இலங்கவில்லை. படைப்பாளனின் தனிப்பட்ட மன நிலையைப் பொறுத்து இவ்வடிவம் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

நூல் தலைப்பிலும் **வ.ரா.வின் தம்பி** (நாரணதுரைக்கண்ணன்) **ரத்தம் தோய்ந்த அந்த நாட்கள்** (நாட்டுத்தலைவர்கள் வரலாறு), **விடுதலையின்** விடிவெள்ளி (சுபாஷ் சந்திர போஸ்), **நஞ்சு உண்டவர்** (சாக்ரடீஸ்) என்பன போன்று உருவகமாக அமைந்த பெயர்கள் எண்பதிற்கு முன் மிகுதியாக மேற்கொள்ளப்பட்டுள்ளன. எண்பதில் **புரட்சிக்கனல் பெரியார்**, **பாட்டுக்குயில் கண்ணதாசன்** எனப் பெயரடையாகவன்றி வேறு எத்தன்மையும் மேற்கொள்ளப் படவில்லை

எண்பதில் பெரும்பான்மையான நூல்கள், நூல் தலைவனை நன்கு அறிந்தவர்களும், தலைவனோடு நன்கு பழகியவர்களும் எழுதியனவாக உள்ளன எஞ்சியவை செவிவழிச் செய்திகளைக் கொண்டு விளக்குகின்றன. தமது நூலுக்குச் சான்றாக உள்ள வைகளை நூலைத் தொடங்குதற்கு முன்பே கூறிய பின்னர் நூலைத் தொடங்கும் முறையை இவ்வாண்டு நூல்களில் சிறப்பாகக் காண இயலுகிறது.

சிறுவர்க்கென ஒருசில நூல்களே தோன்றியுள்ளன. மொழி நடையில் அனைவரும் புரிந்து கொள்ளக்கூடிய எளிய அமைப்பினையே எல்லா நூல்களும் கொண்டுள்ளன.

இராசகோபாலாச்சாரியாரின் நாட்குறிப்பை வைத்து வெளி வந்த **சிறையில் தவம்**, சாமிநாத சர்மாவின் கடிதம் மூலமாக எழுதிய **அவள் பிரிவு** என்பன போன்ற வாழ்க்கை வரலாறுகள் எதுவும் எண்பதில் தோன்றவில்லை.

அரசியல் சார்ந்ததை விட இலக்கியப் புலவர்களைச் சார்ந்த தன்மை மிகுந்துள்ளது. இவையும் இலக்கிய ஆய்வாளர்க்குப் பயன்படும் நோக்கில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. ஒருசில சமயச் சார்புடையன. இவற்றிலும் இசுலாமிய சமயத்தைச் சார்ந்தவை மிகுந்துள்ளன

'அன்று தொடங்கி இன்றுவரை மதப்பிரச்சாரம், தமிழ்ப் பேரார்வம், விடுதலை வேட்கை, தமிழ்த் தேசிய உணர்ச்சி, பதவியாளர்களைப் புகழ்ந்து சுயநலம் பேணுதல் என்பவற்றில் ஏதாவது ஓர் உணர்ச்சி நமது எழுத்துக் கலைஞர்களை ஆட்கொண்டே வந்துள்ளது. இந்த உணர்ச்சிகள் நமது வாழ்க்கை வரலாறுகளில் பெரும்பாலானவற்றை ஒருதலைச் சார்புடையவாக்கின; எழுத்தின் ஆற்றலில் நம்பிக்கையும் ஈடுபாடும் இல்லாத சிலர் பொழுது போக்கு முறையிலேயே வாழ்க்கை வரலாறுகளையும் எழுதினார்கள்; பாடப்புத்தகமாக வைக்கும் நோக்கில் எழுதப்படும் வரலாறுகளில் உண்மைகளையோ வாழ்க்கை முழுமையையுமோ சொல்ல முடிவதில்லை. இத்தனை பிடிகளுக்கும் ஆட்பட்ட தமிழில் ஒருசில நல்ல வரலாறுகளே தோன்ற முடிந்தது. என்பதில் வியப்படைய ஒன்றுமில்லை'[3] என எழுபதாம் ஆண்டு வரையுள்ள நிலை கூறப்படுகிறது ஆயின் எண்பதில் இந்த நிலையை முழுதுமாக ஏற்றுக்கொள்ள இயலாது. மிகச்சிறந்த வாழ்க்கை வரலாறுகள் என்று கூற இயலாவிடினும், பதவியாளர்களைப்

புகழ்ந்து தன்னலம் பேணுதல், பொழுதுபோக்கு என்ற முறையில் எவையும் காணப்படவில்லை.

அமைப்பில் புதிய முறைகள், வெளிப்பாட்டில் புதிய உத்திகள் என்பன கையாளப்படினும்,தெரிந்த உண்மைகளை எளியமுறையில் வெளிப்படுத்த வேண்டும் என்பது இவ்வாண்டு நூல்களின் நோக்கமாக உள்ளது செங்கோர், சில இசுலாமிய வள்ளல்கள் ஆகியோர் தமிழுலகிற்குப் புதிதாக அறிமுகப்படுத்தப் பட்டுள்ளனர் பாரதி, பெரியார் ஆகியோருக்குத் தனித்தனியே இரண்டு நூல்கள் வெளிவந்துள்ளன. மக்களுக்கு இவர்களிடத் துள்ள ஈடுபாட்டை உணர்த்துவதாகவும் இதனைக் கருதலாம். எண்பதில் மொத்தம் இருபத்தொன்பது நூல்கள் தோன்றி யுள்ளன. மறுபதிப்புகளாக எட்டு நூல்கள் உள்ளன. தன் வரலாறாகக் கருதும் வகையில் ஒரு நூல் மட்டும் உள்ளது. எழுபதாம் ஆண்டிற்குப் பிறகு இவ் எண்பதாம் ஆண்டிலேயே மிகுந்த நூல்கள் தோன்றியுள்ளன.

## விளக்க வரலாறுகள்

### அன்னை சாரதாதேவி வரலாறு

தோற்றம் முதல் ஒவ்வொரு நிகழ்ச்சியும் விளக்கமாக விளக்க பட்டுள்ளன. இவ்வரலாறு இதற்குமுன் எழுதப்பட்டிருப்பினும் பக்தி உணர்வின் அடிப்படையில் மீண்டும் எழுதப்படுகிறது எனலாம். வாழ்க்கை நிகழ்ச்சிகளை விளக்குதலோடு இடை யிடையே அவரது கருத்துகளும் விளக்கப்பட்டுள்ளன.வரலாற்றைக் கற்பதோடு நல்லெண்ணங்களையும் பெறவேண்டும் என்ற நோக்கில் இம்முறை கையாளப்பட்டுள்ளது.

## ஸ்ரீ விடயபுரம் மகான் சரிதமும் மஹாமாயா விலாச விளக்க உரையும்

மிக விளக்கமான வரலாறாக உள்ளது. இம்மகானிடத்துக் கொண்ட பக்தியுணர்வின் அடிப்படையிலும், அறியாதவர்க்கு அவரைப்பற்றி உணர்த்தும் நோக்கத்திலும் இந்நூல் எழுதப் பட்டுள்ளது. விடயபுரம் மகானோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர் வாயிலாகக் கேட்டறிந்து எழுதியதாக முன்னுரையில் கூறப்படுகிறது. முதலில் அவரது ஆற்றல், தவச்செயல்கள் போன்றன விளக்கப்பட்டுப் பின்னர் பிறப்பு முதலிய நிகழ்ச்சிகள்

விளக்கப்படுகின்றன. மகானைப்பற்றி அறியச் செய்வது நோக்மாதலால், அவரிடத்துக் கற்போர் மனதை ஈடுபடுத்த இத்தகு தொடக்கம் அமைந்துள்ளது.

'பெரியவர்களின் சரிதத்தைப் பொதுமக்களின் பிரயோஜனத்திற்காக எழுதுவது கத்திமேல் நடப்பது போலாகும். அதில் உண்மைகள் மட்டுமே இடம்பெற முடியும். கற்பனைச் சிறகடித்துக் கண்டபடி எழுதுகோலை இயக்கி, அசத்தியம் புக இடமேற்பட்டு விட்டால் அதைவிட பேரபசாரம் வேறில்லை

நமக்குப் பிடித்தமான ஒன்றைப்பற்றி மிகைப்படுத்திக் கூறுவதோ அல்லது பிடிக்காத ஒன்றைக் குறைவுபடுத்திப் பேசுவதோ, நம்மைச் சுற்றி நாம் கேட்கும் அன்றாட அனுபவமாகும். இவ்விதக் குறைக்கு ஆட்பட்ட எந்தச் சரித்திரமும் என்றென்றைக்குமே சர்ச்சைக்குரிய ஒரு பலவீன நிலையை அடைந்து விடும். அப்படியொரு குறைபாடின்றி உண்மையை அதன் முழுப்பரிமாணத்தில் காணும்படி வடிப்பதற்கு, யாரைப்பற்றி எழுதுகிறோமோ, அப்பெரியாரின் பூரண ஆசியும், அன்னாரிடம் நமக்குள்ள தூய்மையான பக்தியுமே துணைசெய்ய முடியும்.'[4] எனும் ஆசிரியரிடை கூற்று இத்தகைய வரலாறு எழுதுவதில் அவர் கொண்ட மனப்போக்கை உணர்த்துகிறது.

## கலைத்தந்தை கருமுத்து தியாகராசர்

பதினெட்டு இயல்களாகப் பகுத்துக் கொண்டு இந்நூலில் வாழ்க்கை நிகழ்ச்சிகள் விளக்கப்பட்டுள்ளன. தொழில் துறையில் சிறந்தவர் என்ற முறையிலும், அவரிடத்துத் தமக்குள்ள மதிப்பைக் காட்டும் வகையிலும் இவ்வரலாறு எழுதப்பட்டுள்ளது. ஒவ்வொரு செய்தியும் சான்றோடு விளக்கப்பட்டுள்ளது. தொழில் மேதை என்ற வகையில் இது குறிப்பிடத்தக்க வரலாறாகும்.

## வரலாறு கண்ட வைக்கம் வீரர்

பெரியாரைப் பற்றிய வாழ்க்கை வரலாற்றை இயம்புவது இந்நூல். இவரது வரலாற்றைத் தொடங்குதற்கு முன், இவரது தாய் தந்தையின் வரலாறு விரிவாக விளக்கப்பட்டுள்ளது. பிற்காலத்தில் பெரியாரது வாழ்க்கைக்கும், அவர் பிறந்த குடும்பத்தின் சூழலுக்கும் உள்ள வேறுபாட்டைச் சுட்டிக் காட்டும் வகையில் அவரது பெற்றோர் வரலாற்றிற்கு இன்றியமையாமை அளிக்கப்

பட்டுள்ளது. நூலிலும் ஆங்காங்கு இவ்வேறுபாட்டைக் குறிப்பிட்டு ஒருசில நிகழ்ச்சிகள் விளக்கப்பட்டுள்ளன. சோர்வூட்டாது நிகழ்ச்சிகள் சுவைபட உணர்த்தப்பட்டுள்ளன. **வரலாறு கண்ட வைக்கம் வீரர்** என்ற பெயருள்ளமையால் அதற்கேற்ப அவரது பெற்றோர் பற்றிய வரலாறு சற்று விரிவாக விளக்கப்படுவதாக ஆசிரியர் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். இவரது வரலாறு தமிழகத்தின் வரலாற்றையும் உள்ளடக்கியதாயுள்ளது. தமிழகத்தின் நிலை, மக்களின் மனப்போக்கு ஆகியவற்றை இந்நூல் வழி நன்கு உணரலாம். தமிழக வரலாறு, சமுதாயநிலை என்பன போன்றது பற்றி ஆய்வோர்க்கு இந்நூல் பெரிதும் பயனளிப்பதாயமையும். ஒருசில இடங்களைத் தவிர, பெரும்பான்மையான இடங்களில் பண்பு வருணனையே மிகுதியும் இடம் பெற்றுள்ளது. சிறந்த வாழ்க்கை வரலாற்றிற்குரிய இன்றியமையாப் பண்புகளில் ஒன்றாகும் இது. ஒரு சார்பின்றி அவரது எல்லாப் பண்புகளும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

## பெரியார் ஒரு சரித்திரம்

இதற்கு முன் குறிப்பிட்ட நூலைப் போன்றே இதுவும் பெரியாரின் வாழ்க்கையை விரிவாக விளக்குகிறது. இந்நூலில் அவரது கருத்துகளுக்கும் கொள்கை விளக்கங்களுக்கும் மிகுந்த இடமளிக்கப்பட்டுள்ளது. பெரியார் பெர்னாட்ஷாவுடனும், சாக்ரடீசுடனும் ஒப்பிட்டுக் காட்டப்பட்டுள்ளார் 'இருபதாம் நூற்றாண்டின் சாக்ரடீஸ்' என அழைக்கப்பட்டுள்ளார். பெரியாரது வரலாறு தமிழகத்தின் வரலாறு எனக் கருதும் இவ்வாசிரியர் இக்குறிப்பை உணர்த்தும் வகையில் நூற்பெயரை அமைத்துள்ளார். இந்நோக்கிலேயே வரலாற்றையும் எழுதியுள்ளார். 'அத்தகு பெரியாரின் வரலாறு ஒருதனி மனிதனின் வீரபராக்கிரமங்களை வெளிப்படுத்தும் தொகுப்புமன்று. வேறு இனத்தவர்கள் ஆடுமாடு மேய்த்துக் கொண்டிருந்த காலத்தில் சிறப்பாக வாழ்ந்து பின்னர் தாழ்ந்து போனவர்களின் எழுச்சியைக் கோடிட்டுக் காட்டும் வரலாறு ஆகும். சுருக்கமாகக் கூறவேண்டுமானால் பெரியாரின் வாழ்க்கை வரலாறுதான் இந்த நாட்டின் உண்மையான வரலாறு' எனும் அவரது கூற்றும் இதனை உணர்த்தும். இறுதியாக அவர் இறந்தது பற்றி நன்கு விளக்காது அச்செய்தி மட்டும் சுட்டப்பட்டுள்ளது. இதன் பின்னர் அவரது கொள்கைகளையெல்லாம் சிறிதளவு விளக்கி, இறுதியாக அவரது

கூற்று ஒன்றை எடுத்தாள்வதின் வழி நூல் முற்றுப் பெற்றுள்ளது. இங்கு பெரியார் மறைந்தாலும் அவரது கருத்துகள் மறையாது என்பதைச் சொல்லாமல் சொல்லி விளக்க இத்தன்மையைக் கையாண்டுள்ளார் எனலாம்.

## பன்மொழிப்புலவர் மு.ச.சிவம் வாழ்க்கைக் குறிப்புகளும் தமிழுக்குச் செய்த ஆக்கப்பணிகளும்

தமிழுலகிற்கு ஆய்வு நோக்கில் பல படைப்புகளைத் தந்துள்ள மு. சதாசிவம் என்பாரது வாழ்க்கை வரலாற்றைக் கூறுவது இந்நூல். இப்பெயர் சுருக்கமாக மு ச. சிவம் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. நூலின் ஒருபாதி இவரது வரலாற்றையும் மறுபாதி இவரது படைப்புகளைப்பற்றியும் விளக்குகிறது. 'வாழ்க்கை குறிப்பு, எனக் கூறப்பட்டிருப்பினும் முழு வாழ்க்கை வரலாறும் விளக்கப்பட்டுள்ளது. நூலாசிரியரிடம் கேட்டறிந்த செய்திகளையும், அவருடன் பழகியதனால் அறிந்து கொண்ட செய்திகளையும் கொண்டு இந்நூல் எழுதப்பட்டுள்ளது. நூலின் பிற்பாதியில் நூற்றுக்கும் மேற்பட்ட இவரது நூல்கள் ஒவ்வொன்றும் சிறு குறிப்பாக விளக்கப்பட்டுள்ளது. நன்கு அறியாத நூல்கள் பல இதில் உள்ளன. இவற்றுள் அகராதி வகையின் மிகுதியாக உள்ளது. ஆய்வாளருக்குப் பெரிதும் பயனளிக்கும் வகையில் இக்குறிப்புகள் உள்ளன. வாழ்வில் எவ்வாறெல்லாம் முன்னேறினார் என்பதற்கு இன்றியமையாமை அளித்து வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இலக்கியப்படைப்பாளன், திறனாய்வாளன் ஆகியோரது வரலாறுகள் இந்நூலைப் போன்று வரலாறு, படைப்பு என்ற இரண்டிற்கும் இடமளித்து அமைதல் சிறப்புடைத் தாகும்.

## காரைக்கால் மஸ்தான் சாஹிப் வரலாறு

இசுலாமிய சமயத்தினரைத் தவிர வெளியுலகினரால் அறியப் படாத காரைக்கால் மஸ்தான் சாஹிப் வரலாற்றைக் கூறுவது இந்நூல். தனிப்பட்டவரின் பெருமையை உணர்த்துவது என்பது தவிர வேறு எந்நோக்கமும் இல்லை. பிறநூல்களைக் காட்டிலும் சிறிய அளவினது இந்நூல்.

## வள்ளல் பெருமகன், நவாப் சி. அப்துல் ஹக்கீம் அவர்களின் வாழ்க்கை வரலாறு

உருது மொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது இந்நூல். கீழ்விசாரத்தில் பிறந்து வள்ளலாக வாழ்ந்த நவாப் சி. அப்துல் ஹக்கீம் அவர்களது வாழ்க்கை வரலாற்றை இயம்புவது இந்நூல் இவரது வள்ளண்மையை உலகுக்கு, உணர்த்தும் நோக்கில் இந்நூல் எழுந்துள்ளது. இது தவிர வேறு எந்நோக்கமும் இல்லை. இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபட்டமை, கல்வித் துறை முன்னேற்றத்திற்குப் என்பன விளக்கப்பட்டுள்ளன நூல் இறுதியில் இவரது கருத்துகள் அனைத்தும் தொகுத்துத் தரப் பட்டுள்ளன. அறிந்து கொள்ளாதவரைப் பற்றி அறிதற்கு இத்தகு நூல்கள் சிறந்த வாய்ப்பாகும்.

## செங்கோர்

இதுவரை தமிழரால் அறியப்படாத தமிழார்வம் உடைய ஒரு வெளிநாட்டாரைத் தமிழருக்கு அறிமுகப்படுத்துவது இந்நூல் ஆப்பிரிக்க நாட்டு அதிபரும், கவிஞருமான 'செங்கோர்' என்பவரைப்பற்றியவாழ்க்கைவரலாற்றுநூல் நூலின்பொதுமுன்னுரை, பொருள் முன்னுரை என்ற இரண்டினை அடுத்து பிறப்பு, பெற்றோர் சமயம்,பெயர்,என்ற தலைப்புகளில் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் இளைஞர், பேராசிரியர், பட்டாளவீரர், குடும்பத் தலைவர், அரசியல் அறிஞர், பிரெஞ்சுமொழிக் கவிஞர் என்ற நிலையில் அவரைப்பற்றி விளக்கப்படுகிறது. தமிழைத்தம்நாட்டுப் பல்கலைக் கழக அளவில் இரண்டாம் மொழியாக அமைத்து தமிழின்பால் அவர் காட்டிய ஆர்வம் காரணமாக தமிழர் சார்பில் அவருக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்ளும் நோக்கில் இந்நூல் இயற்றப்பட்டதாக ஆசிரியர் தமது முன்னுரையில் குறிப் பிட்டுள்ளார். தமது முன்னுரையிலேயே செங்கோரைப் பற்றிய முழுவரைகோட்டைச் சுருக்கமாகக் காட்டிவிட்டுப் பின்னரே நூலைத் தொடங்குகிறார்.

'தமிழ் நாட்டிற்கு அப்பால் இருந்து கொண்டு தமிழின் மீதும், தமிழர்மீதும் பேரன்பு காட்டிய வேற்றுப்புலவேந்தர் ஒருவர் தமிழக வரலாற்றில் முன்பும் இல்லை; பின்பும் இல்லை; இன்றும் இல்லை! ஆப்பிரிக்கக் கண்டத்திலும் பிரஞ்சு பேசப்பெறும் நாடுகளிலும், தமிழர்வாழ் பாண்டிச்சேரியில் தன் குடியிருப்புக் கால்

களைக் குடை விரித்துக் கோலோச்சிய பிரான்சிலும் தமிழுக்குப் பல்கலைக் கழக அளவில் இடம் இல்லாதபோது, செங்கோர் ஒருவரே செந்தமிழைத் தம்நாட்டுப் பல்கலைக் கழகத்தில் இரண்டாம் மொழிநிலைக்கு ஏற்றினர்.'

'தமிழர் தொகையாக இல்லாத ஆப்பிரிக்க நாட்டின் அதிபராக இருந்தும், நாற்பது லட்சம் கொண்ட சிறுநாடாக இருந்தும் இந்தியாவினின்று குறிப்பிடத்தக்க அரசியல் பொருளாதார ஆதாயங்கள் தம்நாட்டிற்கு இல்லாதிருந்தும், தமிழ் மாநாட்டைத் தம்நாட்டில் நடத்தலாம் என்ற அன்பழைப்பு அனுப்பிய ஒரே தலைவர் செங்கோர்.'

'தமிழர்கள் ஏறத்தாழ முற்றுமாக 'வயிற்றுத் தமிழராக' மாறிவிட்ட, அல்லது மாறிவருகிற 'பரிதாபத்தையே தாயகத் திலும், குடியேறியுள்ள வெளிமாநிலங்களிலும் வெளிநாடுகளிலும் நேரில் கண்டேன்; காண்கிறேன்.'!

'இந்த இயல்பு கொண்ட தமிழர்க்குச் செங்கோர் வரலாறு ஒரு வழிகாட்டி!' என நூலின் பொது முன்னுரையில் ஆசிரியர் நூல் தலைவனைச் சுட்டிக்காட்டுகிறார். நூல் தலைனை அறிமுகப் படுத்துவதோடு, ஆசிரியரது தமிழுணர்வும், இவ்வரலாற்றை உணர்த்துதல் வழி இதனைக் கற்போரும் தமிழுணர்வு பெற வேண்டும் எனும் ஆசிரியரின் எண்ணமும் இங்கு வெளிப்படுவதா யுள்ளது. நூலின் பொது முன்னுரையில் தமிழுலகிற்கேற்ப அறிமுகப்படுத்தி, நூற்பொருளுக்கென 'ஆப்பிரிக்காவின் காந்தி' என்ற தலைப்பில் ஒரு முன்னுரையை அமைத்து அதில் செங் கோரின் தனிப்பட்ட உருவத்தைக் காட்டுகிறார்.

'ஆப்பிரிக்காவில் ஏன் உலகிலேயே இலக்கியத் துறையிலும் அரசியல் துறையிலும் ஒருசேரக் கொடிகட்டிப் பறக்கும் பெருமை செனகல் நாட்டுச் செங்கோருக்கு உண்டு. நாளும் ஒரு புரட்சி, பொழுதும் ஒரு காழ்ப்பு என இராணுவக் கலகங்களின் விருப்ப பூமியாக இருக்கும் ஆப்பிரிக்காவில், 1960-லிருந்து இருபது ஆண்டுகளாக-அலைகளற்ற கடலில் மிதக்கும் இனிய படகுபோலச் செனகாலை அழைத்துச் சென்று கொண்டிருக்கிறார் செங்கோர்!'[5]

'செங்கோர் பொதுவுடைமைக்காரர் அல்லர்; முதலுடைமை வாதியும் அல்லர். தமக்கெனத் தம்நாட்டிற்கெனத் திட்டவட்ட மான கொள்கைகளை வகுத்துக்கொண்ட, சம நெறியாளர் (socialist).'[6]

'எளிய சிற்றூரில் பிறந்து வளர்ந்து, தாயகத்திலும், பிரான்சிலும் கல்வி கற்றுப் பிரஞ்சுப் பேராசிரியராய்ப் பணியாற்றி, கவிஞராகப் பெயர்பெற்றுச் சொந்த நாட்டின் பொது நலனுக்காகத் தன் பேராசிரியப் பதவியை உதறித் தள்ளிவிட்டு அரசியலுக்கு வந்துஉயர்ந்தவர்'[1], என இவரது பண்புகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. முன் அறியாத புதியவரின் வரலாற்றைக் கற்கப்புகுமுன், அவரைப் பற்றிப் புரிந்து கொள்வதற்கு இத்தகு முன்னுரை இன்றியமையாததாகும். வாழ்க்கை வரலாற்றை அடுத்து 'செங்கோர்தம் கருத்து மணிகள்' என்ற தலைப்பில் அவரது சிறந்த கருத்துகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இறுதியாகச் 'செங்கோரின்' படைப்புகளில் ஒன்றான 'சகா' என்பதன் தழுவலாகத் துன்பியல் நாடகப் பாவியம் ஒன்று தரப்பட்டுள்ளது. எண்பதில் தோன்றிய வாழ்க்கை வரலாற்று நூல்களில் சிறந்ததாக இதனைக் கூறலாம்.

## சுருக்க வரலாறுகள்

### நிகழ்ச்சித் தொகுப்புகள்

அவ்வப்போது நடந்த இன்றியமையாத நிகழ்ச்சிகளை மட்டும் தொகுத்துக் கொடுப்பதாக இந்நூல்கள் அமைந்துள்ளன.

### பாட்டுக் குயில் கண்ணதாசன்

நூல் தலைவன் கவிதைத் துறையோடு, திரைப்படத் துறையிலும் ஈடுபட்டிருப்பதால் அதன் தொடர்பாக நிகழ்ந்த நிகழ்ச்சிகள் சில தொகுக்கப்பட்டு, அதன் வழிக் கவிஞரின் இயல்பும் திறமையும் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

'கவியரசு என்று மக்களால் புகழப் பெறுபவர்—அரசுக் கவியாக அரசால் நியமிக்கப் பெற்றவர்-சிறந்த இலக்கிய வாணர் என்ற பெருமையை எய்தியுள்ளவர்-திரைப்பட உலகில் பாடல் துறையில் புதிய வரலாற்றை உருவாக்கியவர்' எனக் கவிஞரின் அகப்பண்பு வருணனைகளைக் கொண்டு நூல் தொடங்கப் பெற்றுள்ளது.

'கவிஞர் 'சுயசரிதை' என இதுவரை எழுதவில்லை. **வனவாசம்** என ஒரு நூல் எழுதியுள்ளார். அதில் அவரது வாழ்க்கை ஏட்டின் பல திருப்பங்களை-பல முக்கியமான நிகழ்ச்சிகளையெல்லாம் அவர் எடுத்துக் கூறியிருக்கிறார்; என்றாலும் தன்னடக்கம் கருதிப் பல்வேறு நிகழ்ச்சிகளை அவர் கூறாது விடுத்திருக்கிறார். சமீப

காலமாக, **கல்கி**, **குமுதம்** போன்ற ஏடுகளில் ஒருசில கட்டுரை களைத் தீட்டுவதன் வாயிலாகத் தமது வாழ்க்கை நிகழ்ச்சிகளில் ஒன்றிரண்டையும் தமக்குப் பிடித்தமான நண்பர்கள் ஒருசிலரை யும் குறித்துத் தெளிவாக எழுதியிருக்கிறார் என்றாலும் அவரது நினைவில் இருக்க முடியாத சில சில நிகழ்ச்சிகளை-அடக்க உணர்வின் காரணமாக அவரால் தெரிவிக்க முடியாத சில நிகழ்ச்சி களை அவரிடம் 1954 முதல் 1965 வரை பணிபுரிந்தவன் என்ற முறையில்-இன்றும் நெருங்கிப் பழகுபவன் என்ற விதத்தில் ரசிகன் என்ற முறையில் எனக்குத் தென்பட்ட நிகழ்ச்சிகளை நூலாக எழுதுவது நியாயம் என்பதை உணர்ந்து அம்முயற்சியில் இறங்கி யுள்ளேன்; அதன் ஆக்கம் தான் '**பாட்டுக் குயில் கண்ணதாசன்** எனும் இந்நூல்' என நூலாசிரியர் தமது முன்னுரையில் குறிப் பிட்டுள்ளார். நூலின் நோக்கையும் போக்கையும் இது ஓரளவு புலப்படுத்துவதாயுள்ளது. தன் வரலாறு எழுதுவதில் நேருறி சிக்கல், ஒருவரது வரலாற்றைப் பிறர் எழுத வேண்டுவதன் இன்றி யமையாமை என்பதும் இங்கு உணரப்படுகிறது.

## புதுவையில் பாரதி

பாரதியாரின் புதுவை வாழ்க்கையை மட்டும் இந்நூல் கூறு கிறது. இவ்வாறு ஓர் இடத்தில் மட்டும் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறுதல் என்ற வகையில் இது ஒரு புதிய நோக்கு எனலாம். மேலும் இந்நூலில் கூறப்பட்ட நிகழ்ச்சிகள் அனைத்தும் இதுவரை எவரும் தொடாத, அறியாத பல உண்மைகளை, செய்திகளை வெளிப் படுத்துவதாகப் பதிப்பாசிரியர் முன்னுரையில் குறிப்பிடப்பட்டுள் ளது. இவ்வகையில் இது ஓர் இன்றியமையாமை வாய்ந்த நூலாக உள்ளது. ஆராய்ச்சி மாணவர்க்கும், பாரதி அன்பர்க்கும் இது அரிய புதையலாகும் எனும் பதிப்பாசிரியர் கருத்திற்கேற்ப, இந்நூல் பாரதியின் கவிதைகள் விளைந்த பின்புலம், சூழல், இடம், ஆகிய வற்றோடு அவருடைய இயல்பையும் விளக்கிச் செல்கிறது. பாரதி யாருடன் உடன் பழகிய ஒருவரால் இந்நூல் எழுதப்பட்டுள்ளதாக நூல் முன்னுரையால் தெரிய வருகிறது. 'பாரதியார் புதுவையில் பாடிய கவிதைகள்', 'பாரதியாரும் அரவிந்தரும்' என்பன போன்ற பதின்மூன்று கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. பெரிதும் சுதந்திரப் போராட்டத் தொடர்பான செய்திகளும், கவிதை பற்றிய செய்தி களும் உள்ளன. இலக்கிய ஆய்வாளர்க்குப் பயன் மிகுந்த நூலாக இது விளங்குகிறது.

தனி ஒருவர் எழுதுவதன்றி உடன்பழகியவர், உடனிருந்தவர் உறவினர் என் போராது நினைவுகள், கருத்துக்களின் தொகுப்பாக அமைவது இவ்வகை.

## பாவேந்தர் பாரதிதாசன் பெருமை

'ஒருவரைப் பற்றி ஒருவரே நூற்றுக்கணக்கான பக்கங்களை எழுதி, வாசகர்களைத் திணற அடிப்பதைக் காட்டிலும் அறிஞர் பலர் பல கோணங்களில், பல நிகழ்ச்சிகளை எடுத்துரைப்பது வாசகர்களுக்கு அறுசுவை விருந்தாக இருக்கும் என்று கருதுகிறேன்' எனத் தொகுப்பாசிரியர் தமது முன்னுரையில் கூறயிருப்பது நூலின் நோக்கத்தை உணர்த்தும். ஐம்பத்தேழு தலைப்புகளில் கட்டுரைகள் தொகுக்கப்பட்டுள்ளன. முதலில் அவரது வாழ்க்கை நிகழ்ச்சிகள் அனைத்தும் பட்டியலாகத் தொகுத்துக் கொடுக்கப் பட்டுள்ளது பாரதியார், திரு.வி.க., பெரியார், மறைமலையடிகள் அண்ணா, அறிஞர் வ. ரா முதலான பலர் அவரைப் பற்றித் தாங்கள் உணர்ந்த செய்திகளைக் கூறியுள்ளனர்.

## மரணத்தை வென்ற மகாகவி

பாரதியாரைப்பற்றி பலரும் எழுதிய பத்தொன்பது கட்டுரை களின் தொகுப்பாக இந்நூல் விளங்குகிறது. இதில் பாரதியாரின் மனைவியும், மகளும் எழுதியுள்ள, 'என் கணவர்', 'என் தந்தை' என்ற கட்டுரைகள் குறிப்பிடத்தக்கன. பாரதியாரின் பல பண்பு களை விளக்குவதாக இந்நூல் உள்ளது.

## பாரத ரத்னா ராஜாஜி

முதலில் ராஜாஜி பற்றிய சுருக்கமான வாழ்க்கை வரலாறும் பின்னர் அவரால் எழுதப்பெற்ற 'என் பிறந்தநாள் கணக்கு, என்னைப் பற்றி' என்ற இரு சிறுகுறிப்புகள் உள்ளன. இதனை அடுத்து முப்பத்து அறுவர் எழுதிய கட்டுரைகளும், கருத்துகளும் தொகுக்கப்பட்டுள்ளன. அதனை அடுத்து அவரது உரைகள் சில கடிதங்கள் என்பனவும் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நூல் ராஜாஜியைப் பற்றிய செய்திகளோடு அக்காலத்து அரசியல் நிலையையும் உணர்த்துவதாயுள்ளது.

மேற்கூறப்பட்ட இவ்வகைத் தொகுப்பு நூல்கள் ஒரு நிகழ்ச்சியை மட்டும் விரிவாகவும், ஆழ்ந்தும் விளக்கும் தன்மை யுடையவாயிருப்பதால் ஆய்வாளர்க்கு ஏதேனும் ஒருவகையில்

பயனளிப்பதாய் அமையும். ஆனால் ஒருவரைப்பற்றி முன்னமேயே முழுமையான வரலாறு எழுந்துள்ளவைகளுக்கே இவ்வகை ஏற்புடைத்தாகும்.

## பலரது வாழ்க்கை நிகழ்ச்சித் தொகுப்பு

பலரது சுருக்கமான வாழ்க்கை நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கூறுவது இவ்வகை.

## நான் கண்ட வலிமார்கள்

இசுலாமிய இனத்தில் புகழ்பெற்ற பதினெண்மரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் இதில் கூறப்படுகின்றன இவர்களைப்பற்றி வழிவழியாக வந்த செவிவழிச் செய்திகள் சிறுசிறு துணுக்குகளாக விளக்கப்பட்ட மிகச் சிறிய நூல் இது. விளக்கப்பட்ட நிகழ்ச்சிகளில் அவர்களுக்கு இறைவன் செய்த அற்புதச் செய்திகள் தலையாய இடம் அளிக்கப் பட்டுள்ளது. பக்தி உணர்வை ஊட்டுதல் என்பது தவிர வேறு நோக்கம் இல்லை.

## முஸ்லிம் வள்ளல்களின் வாழ்விலே

பல இசுலாமிய வள்ளல்களின் வாழ்க்கை, அவர்களது வள்ளண்மைப் பண்புக்கு இன்றியமையாமை அளித்து விளக்கப் பட்டுள்ளது. இதுவரை தமிழில் வராத செய்திகளைக் கூறுவதாக நூல் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளது. வள்ளல்களை அறிமுகப் படுத்துவது தவிர வேறு பயன் இல்லை.

## ஈழத்துச் சித்தர்கள்

ஈழத்தில் வாழ்ந்த பதினாறு சித்தர்களைப் பற்றிக் கூறுவது இந்நூல். முழுவாழ்க்கை வரலாறு என்ற முறையில் அமையாது அவர்களைப்பற்றிக் கிடைத்த குறிப்புகளையெல்லாம் திரட்டி அமைக்கப்பட்டுள்ளது. சித்தர்கள் செய்த சித்து விளையாட்டுகளை யெல்லாம் தொகுத்துத் தருவதோடு சித்தர்களின் பண்புகளையும் விளக்குகிறது.

## பண்பு விளக்க வரலாறு

பிறப்பு வளர்ப்பைக் கூறாது, அதே நேரம் நிகழ்ச்சிகளின் தொகுப்பாகவும் அமையாது எழுதப்படுபவர்களின் பண்புக்கு முதலிடம் அளித்து அதை அடிப்படையாகக் கொண்டு பின்னப் பட்டவை இத்தன்மையன.

## புரட்சிக்கனல் பெரியார்

பெரியாரின் புரட்சிகரமான சிந்தனைப் பண்பை அடிப்படையாக வைத்து அவர் வாழ்வில் நடந்த சில நிகழ்ச்சிகள் விளக்கப் பட்டுள்ள, சிறிய நூல் இது.

'இந்தப் ''புரட்சிக்கனல் பெரியார்'' அவரைக் குறித்த புகழ் மாலையா; விமர்சனமா, வரலாறா அல்லது அத்தனையும் குழைத்தவொரு அற்புதக் கலவையா?-என்பதைப் படிக்கப் போகும் உங்கள் முடிவுக்கே விட்டுவிட்டாலும் ஒன்றை மட்டும் இங்கே குறித்தேயாக வேண்டும்.

உண்மையின் 'திண்மையினை உணர்ந்து அதனை உலகறிய எடுத்துச்சொல்லிப் போராடிய அந்த ஞானப் பழத்தினைக் குறித்த இந்நூலில் உண்மைக்கு மாறான ஒன்றையும் காண்பதற் கில்லை என்பதே அது' எனும் பதிப்புரை இந்நூலின் தன்மையை நன்கு விளக்குகிறது. நூல் சிறியதாக இருப்பினும் செறிவுமிக்க அமைப்புடையதாகவும், நூல் தலைவனை அறிமுகப்படுத்தும் தன்மையிலேயே அத்தலைவனது தலையாய பண்பை இனங் காட்டுவதாகவும் உள்ளது.

'அமைதியான இரவு நேரம். அந்த அழகூரின் அருவருப்பான ஒதுக்குப் புறம்' எனச் சிறுகதை போன்ற தொடக்கம். சேரிப் பகுதியில் நடந்த தீவிபத்து, நிகழ்ச்சி, திருமண நிகழ்ச்சி, கோயிலில் நடக்கும் நிகழ்ச்சிகள் என்பன பற்றிய சிறுசிறு நிகழ்ச்சிகள் கதை போல் விளக்கப்படுகின்றன. இங்கு நூல் பெயருக்கும் பொருளுக்கும் தொடர்பில்லாதது போன்ற உணர்வு தோன்றும் நேரத்தில்,

'இதுவரை படித்த காட்சிகளெல்லாம் என்ன?

அங்கிங்கெனாதபடி எங்கெங்கும் ஒரு நூற்றாண்டு காலத்திற்கு முந்திய தமிழகத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் சிலவற்றின் படபிடிப்பு.

அப்படிப்பட்ட நிலைமை—நிகழ்ச்சி—இப்போது கிடையாதா? இப்போதும் உண்டு, அங்கும் இங்குமாய் பெருமளவில் குறைந்து!

இந்த மாற்றத்திற்குக் காரணம்?

பெரியார்! ஆம்; இந்த வியத்தகு மாற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் பெருங்காரணம் பெரியாரே'. எனப் பெரியார் அறிமுகப்படுத்தப்

படுகிறார். இங்குப் பெரியாரது செயல், பண்பு அனைத்தையும் சுருக்கி ஒரு சிறு வட்டத்திற்குள் முழுமைபெற அமைத்துக் காட்டியிருக்கிறார் ஆசிரியர்.

## தியாகச்செம்மல் இமாம் ஹுசைன் ரலி

இசுலாமிய வரலாற்றில் பெயர்பெற்றவரைப் பற்றியது இந்நூல். ஜனநாயக முறையைக் காப்பதற்கு, எஜீதின் முடியாட்சியை, எதேச்சதிகார ஆட்சியை-எதிர்த்துப் போரிட்டுத் தமது பரிசுத்த குடும்பத்தாருடன் மரணம் எய்திய நிகழ்ச்சியை விளக்குகிறது இந்நூல். போர் உண்டாதற்கான சூழல்கள், போர்த் தோற்றம், போர் நிகழ்ச்சிகள் என்பவற்றை விளக்கும் சிறிய நூலாக உள்ளது.

## வாழ்க்கை வரலாற்றுத் திறனாய்வு

பிற சான்றுகள் இல்லாத விடத்து இலக்கியங்களைக் கொண்டு ஒருவரைப் பற்றி அறிய முற்படுவது இவ்வகை. முழுமையான வரலாற்றை உணர்த்தாவிடினும் ஒரு சில செய்திகள் மட்டும் இதன்வழி அறியப்படும்.

## உலோச்சனார்

சங்க இலக்கியப் புலவர்களுள் ஒருவரான உலோச்சனாரைப் பற்றியது இந்நூல். இவரது பெயர், சமயம், நாடு, ஊர் என்பன பற்றி அவரது பாடல்களைக் கொண்டே உய்த்தறியப்பட்ட கருத்துகள் தரப்பட்டுள்ளன. நூலின் சிறுபகுதி இக்கருத்துகளை உணர்த்தி விட்டு, பிற அவரது படைப்புகளைத் திறனாய்வு செய்வதாய் உள்ளது. வரலாறு எழுதி வைக்கப்படாதவர்களைப் பற்றி அறிய இது ஒரு நல்ல முயற்சி எனலாம் வாழ்க்கை வரலாற்று நூல்களுக்குரிய முழுமையான பண்பைப் பெறாவிடினும் அதற்கான அடிப்படைக் குறிப்புகளாக விளங்குகிறது.

## அப்பர் பெருமான் வாழ்வும் வாக்கும்

அப்பரது பாடல்கள், பெரியபுராணம் இவற்றிலிருந்து அறியப்படும் அப்பர் வரலாற்றைத் தொகுத்துக் கூறி, அவரது பாடல்களையும் உடன் இணைத்துத் தருகிறது. அவரது வாழ்வையும் வாக்கையும் ஒரே சமயத்தில் தொடர்பு படுத்திக் காணும் எளிமைக்காக இந்நூல் எழுதப்பட்டதாகப் பதிப்பாசிரியர் முன்னுரையிலிருந்து தெரிய வருகிறது.

## சிறுவர்க்காக எழுதப்பட்டவை

பெரியோர் வாழ்க்கையைச் சிறுவர்களும் படித்துப் பயன் பெறுதற்கு மிக எளிய நடையிலும் சுருக்கமாகவும் வாழ்க்கை வரலாறுகள் எழுதப்படுகின்றன.

## சீருடை கண்ட செம்மல்

நெ.து. சுந்தரவடிவேலு அவர்களின் வாழ்க்கை வரலாற்றையும், கல்வித்துறையில் அவர் செய்த சீர்திருத்தங்களையும் உரையாடல் முறையில் விளக்கியுள்ளார் ஆசிரியர். அன்பு, அருள் என்ற இரு குழந்தைகள் தங்கள் பாட்டனாரை வினவுவதாகவும், அதற்கு அவர் விடையளிக்கும் வகையிலும் செய்திகள் விளக்கப் பட்டுள்ளன.

## உலகப் பெரியார் புத்தர்

'புத்தர் அடிச்சுவட்டில்', அவரது போதனைகள், தத்துவம் என்ற தலைப்புகளில் பலரது கட்டுரைகளின் தொகுப்பாக அமைந்துள்ளது. மிக எளிய உரைநடையில், மிகச்சுருக்கமாகக் கருத்துகளை விளக்கும் சிறிய நூல்.

## வாழ்க்கை வரலாற்றுப் புதினம்

வேதங்களின் சாரத்தையும் உட்பொருளையும் வகுத்துத்தந்த வியாசரின் வரலாற்றைப் புதின வடிவில் கூறும் 'வேத வித்தகர் வியாசர்' எனும் நூல் இத்தன்மையது. கற்பதற்குப் புதினம் போன்றே தோன்றும் இந்நூல், பதிப்பாசிரியரின் பதிப்புரையிலிருந்து வாழ்க்கை வரலாற்று நூல் என்பது தெரியவருகிறது. டாக்டர் கே.எம். முன்ஷியின் கிருஷ்ணாவதாரம் என்ற தலைப்பில் வந்த ஏழுபுத்தகங்களில் ஒரு பகுதியின் ஆங்கில மொழிபெயர்ப்பு இது. எனவே நூலின் முடிவு, முடிவுபெறாதது போன்ற அமைப்பைக் கொண்டுள்ளது.

## செய்யுள் வடிவின

பழைய இலக்கிய வடிவைக் கையாண்டு தனது புலமைத் திறனை வெளிக்காட்டி அமைவன இவ்வகை. **மனித தெய்வம் காந்திகாதை, பாளையம் கேசியெம் பிள்ளைத்தமிழ்** என்பன இத்தன்மையன. இவை உண்மைச் செய்திகளேயாயினும்,

வருணனை மிகுதி கொண்டு நெகிழ்வுத் தன்மையுடையனவா யுள்ளன. வாழ்க்கை வரலாற்றை எழுதுதற்கு இத்தன்மை பெரிதும் பொருந்துவதன்று.

## தன் வரலாறு

தமிழில் தன் வாழ்க்கை வரலாறுகள் மிகவும் குறைவாகவே தோன்றியுள்ளன. எண்பதிலும் இந்நிலைதான் காணப்படுகிறது. முழுமைபெற்ற தன்வரலாற்று நூல்கள் எவையும் தோன்ற வில்லை. **ஓர் இலக்கியவாதியின் கலையுலக அனுபவங்கள்** என்ற நூல் மட்டும் இவ்வகையில் கருதத்தக்கதாக உள்ளது. இந்நூல் முழுவாழ்க்கை வரலாற்றை இயம்பாவிடினும், சமுதாயத்திற்கும் தமக்கும் உள்ள உறவுமுறை என்ற அடிப்படையில் தனக்கு நேர்ந்த அனுபவங்களை விளக்கும் வகையில் ஆசிரியரது வாழ்வில் நேர்ந்த இன்றியமையாத நிகழ்ச்சிகள் விளக்கப்பட்டுள்ளன. பிறரது வாழ்க்கை வரலாற்றிலும் இன்றியமையாத நிகழ்ச்சிகளை மட்டும் தொகுத்துக் கூறும் நூல் அமைப்பைப் போன்று இதனையும் கருதலாம்.

மேற்குறிப்பிட்ட நூல்கள் அனைத்தையும் தவிர நேஷனல் புக் டிரஸ்ட் (National Book Trust)டின் தொடர் வெளியீடாக வரும் **புரந்தரதாசர்** என்ற நூலும், **விடுதலைக்கு வித்திட்ட வித்தகர், முஸ்லிம் தமிழ்ப்புலவர்கள், பேரறிஞர் அண்ணாவின் பெருவாழ்வு, ஸ்டாலின், ரமணமகரிஷி, சர்தார் வல்லபாய் படேல், பெர்னாட்ஷாவின் வாழ்வும் வாக்கும்** என்ற மறுபதிப்பு களும் எண்பதின் வெளியீடுகளாக உள்ளன.

தனிமனிதனின் வாழ்க்கை வரலாறு கற்போர்க்குத் தன்னம்பிக்கை, விடாமுயற்சி போன்ற நற்பண்புகளை ஊட்டக் கூடியது. சமுதாயத்தில் பெயர்பெற்றவரின் வரலாறு நற்பண்புகளோடு நாட்டு வரலாற்றையும் பதிவு செய்வதா யுள்ளது. தன் வரலாறுகளில் விளக்கப்படும் அனுபவங்கள் வளர்ந்து வரும் சமுதாயத்திற்கு உணர்த்தும் அறிவுரைகளாகவும் உள்ளன. எனவே சமுதாயத்தின் வளர்ச்சிக்கு வாழ்க்கை வரலாற்று நூல்களும் ஒரு கருவியாய் விளங்குகின்றன என்பது உறுதி. இதுவரை வெளிவந்த வரலாறுகளைக் காணும்பொழுது தமிழ்ச் சமுதாயத்தில் வாழ்ந்தோரின் வரலாறுகள் முழுமையாக வெளியிடப்படவில்லை, தோன்றவில்லை என்பது தெளிவாகிறது. இவ்விடுபட்ட, குறைவுபட்ட வரலாறுகள் முயன்று எழுதப்பெறின்,

அது தமிழர் பெருமை நன்கு வெளிப்பட ஒரு வாய்ப்பாக அமையும் எனலாம்.

## குறிப்புகள்

1) சாலினி இளந்திரையன், வாழ்க்கை வரலாற்று இலக்கியம், ப. 160.
2) ,, ப. 185.
3) ,, ப. 230.
4) கல்யாண், ஸ்ரீ விடயபுரம் மகான் சரிதமும் மஹாமாய விலாச விளக்க உரையும் ப. 17.
5) க.ப. அறவாணன், செங்கோர், ப. 18.
6) ,, ப. 20.
7) ,, ப. 21.

## பயன்பட்ட நூல்கள்

சாலினி இளந்திரையன், **வாழ்க்கை வரலாற்று இலக்கியம்**, (சென்னை தமிழ்ப்புத்தகாலயம், 1974)

**வாழ்க்கை வரலாற்று நூல்கள்**

1. அப்துற்—ரஹீம், **முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள்**, இரண்டாம் பதிப்பு, (சென்னை, யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ் அண்ட் புக் ஹவுஸ் 1980).

2. அம்புஜம்மாள். எஸ்., (மொழிபெயர்ப்பாசிரியர்), **வேத வித்தகர் வியாசர்** (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

3. அறவாணன். க.ப., **செங்கோர்**, (சென்னை, பாரி நிலையம், 1980).

4. ஆரிது. நாஞ்சில். ஆ., **பாளையம் கேசியெம் பிள்ளைத் தமிழ்**, (நாகர்கோயில், பாபு வெளியீடு, 1980).

5. இராமகிருஷ்ணன். எஸ், **ஸ்டாலின்**, (சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 980 (திருத்திய பதிப்பு).

6. இலக்குவன். அரு., (பதிப்பாசிரியர்), **அப்பர் பெருமான் வாழ்வும் வாக்கும்**, (மேலையூர், பூம்புகார்ப் பேரவைக் கல்லூரி வெளியீடு, 1980).

7. இளவழகன். ப., புரட்சிக்கனல் பெரியார் (பெங்களூர், செல்வராசன் பதிப்பகம், 1980).

8. எதிராஜ். நா., பெர்னாட்ஷாவின் வாழ்வும் வாக்கும், மூன்றாம் பதிப்பு, (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

9. கமலா. எஸ்., விடுதலைக்கு வித்திட்ட வித்தகர்கள் இரண்டாம் பதிப்பு, (சென்னை, மீனா புத்தக நிலையம், 1980).

10. கல்யாண், ஸ்ரீ விடயபுரம் மகான் சரிதமும் மறாமாய விலாச விளக்க உரையும், (சென்னை, த்ரிசக்தி பதிப்பகம், 1980).

11. குழந்தைநாதன். சு, கலைத்தந்தை கருமுத்து தியாகராசர், (சென்னை, விசாலாட்சி பதிப்பக வெளியீடு, 1980).

12. கோதண்டராமன். ப., புதுவையில் பாரதி, (சென்னை, பழனியப்பா பிரதர்ஸ், 1980).

13. சதக்கத்துல்லாஹ், வள்ளல் பெருமான் நவாப். சி. அப்துல் ஹக்கீம் அவர்களின் வாழ்க்கை வரலாறு, (மேல் விசாரம், அப்துல் ஹக்கீம் கல்லூரி ஆட்சிக்குழு வெளியீடு, 1980).

14. சாயபு மரைக்காயர். மு, காரைக்கால் மஸ்தான்சாஹிப் வரலாறு, (காரைக்கால், பாத்திமா பதிப்பகம், 1980).

15. சித்தலிங்கையா. டி.பி., (தமிழாக்கம்), புரந்தரதாசர் (புதுடில்லி, நேஷனல் புக் டிரஸ்ட், 1980).

16. சீனிவாசன். அரங்க, மனித தெய்வம் காந்திகாதை, (திருச்சி, திருவள்ளுவர் பதிப்பகம், 1890).

17. தமிழ்ப்பித்தன், பாட்டுக்குயில் கண்ணதாசன், (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

18. துளசி ஜெயராமன் (தமிழாக்கம்), சர்தார் வல்லபாய் படேல், (புதுதில்லி, நேஷனல் புக் டிரஸ்ட், 1980 மறுபதிப்பு).

19. நடராஜன். அலெ., அன்னை சாரதாதேவி வரலாறு (வேதாரண்யம், கஸ்தூர்பா காந்தி-கன்யா குருகுலம் வெளியீடு 1980).

20. பாத்திமா. எம். ஆர். எம்., முஸ்லிம் வள்ளல்களின் வாழ்விலே, (சென்னை, யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ் அண்ட் புக் செல்லர்ஸ், 1980).

21. பாத்திமா எம். ஆர். எம்., நான் கண்ட வலிமார்கள், (சென்னை, யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ் அண்ட் புக் செல்லர்ஸ், 1980).

22. மங்கையர்க்கரசி, **வரலாறு கண்ட வைக்கம் வீரர்,** (சென்னை, மருதமலையான் பதிப்பகம், 1980).

23. மறைமலையான். அ., **பேரறிஞர் அண்ணாவின் பெரு வாழ்வு,** நான்காம் பதிப்பு, (சென்னை, வானதி பதிப்பகம், 1980.)

24. முத்துச்சாமி. க., **உலோச்சனார்,** (மதுரை, ஏரக வெளியீடு, 1980).

25. முத்தையா. நா., **ஈழத்துச் சித்தர்கள்,** (நாவலப்பிட்டி (இலங்கை), ஆத்மஜோதி நிலைய வெளியீடு, 1980.)

26. முத்தையா. முல்லை. பி எல்., **பாவேந்தர் பாரதிதாசன் பெருமை,** (சென்னை, அபிராமி பப்ளிகேஷன்ஸ், 1980).

27. முத்தையா. முல்லை., **உலகப் பெரியார் புத்தர்,** சிதம்பரம், மணிவாசகர் நூலகம், 1980).

28. ரங்கராஜன். லா. சு. (தமிழாக்கம்), **ரமண மகரிஷி,** (புதுதில்லி, நேஷனல் புக்டிரஸ்ட், 1980 (மறுபதிப்பு) ).

29. வடிவேலன் இரா., **மு. ச. சிவம் வாழ்க்கைக் குறிப்புக் களும் தமிழுக்குச் செய்த ஆக்கப் பணிகளும்,** (ஈரோடு, மீரா நிலையம், 1980).

30. விசுவநாதன். சீனி., (தொகுப்பாசிரியர்), **பாரத ரத்னா ராஜாஜி,** (சென்னை, புவனேஸ்வரி பதிப்பகம், 1980).

31. விசுவநாதன். சீனி. (தொகுப்பாசிரியர்), **மரணத்தை வென்ற மகாகவி,** (சென்னை, புவனேஸ்வரி பதிப்பகம், 1980).

32. வெங்கட்ராம். எம்.வி., **சுரேந்திரநாத்பானர்ஜி,** மூன்றாம் பதிப்பு, (சென்னை, பழனியப்பா பிரதர்ஸ், 1980).

33. வேணு. ஏ.எஸ்., **பெரியார் ஒரு சரித்திரம்,** (சென்னை, பூம்புகார் பிரசுரம், 1980).

34. வேலுசாமி. ந., **சீருடை கண்ட செம்மல்,** (சென்னை, வள்ளலார் நிலைய வெளியீடு, 1980).

35. ஜமால், **தியாகச் செம்மல் இமாம் ஹுசைன்அலி,** (சென்னை, பயனீர் பதிப்பகம், 1980).

36. ஜெயகாந்தன், **ஓர் இலக்கியவாதியின் கலையுலக அனு பவங்கள்,** (சென்னை, கலைஞன் பதிப்பகம், 1980).

# எண்பதில் குழந்தை இலக்கியம்

வே. சீதாலட்சுமி

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதில் வெளிவந்த குழந்தை இலக்கியங்களுள் கைக்குக் கிடைத்தனவற்றில் 11 நூல்கள் சிறுகதைத் தொகுப்புகளாகக் காணப்படுகின்றன.

சகுந்தலா மெய்யப்பன் **அற்புதச் சிறுகதைகள்** என்ற தலைப்பில் இருபத்தொரு கதைகளை அமைத்திருக்கிறார். இதில் ஜோரா அடிங்க, இனிமை, திருமண ஆலோசனை, தேன் துளி, பேராசை, பெயர் மாற்றம் முதலியன சமுதாயக் கதைகள். நாளை வருகிறேன், சக்ராயுதம், பாஞ்சசன்யம், பழமும் கொட்டையும் இறைத் தொடர்பான கதைகள். கைராசிக்காரர், பாதிப்பேர் கழுதைகள், இளவரசன், மகாராணியும் ஒரு மனைவியே, மனைவியே சரணம் என்பன அரசியலார் தொடர்பானவை இரண்டு துவாரங்கள் அறிவியல் அறிஞர் பற்றிய கதை. மகாத்மா கேட்ட பிச்சை தாகூருக்கும், மகாத்மாவிற்கும் இடையில் நடந்த ஓர் நிகழ்ச்சி பற்றியது. இரண்டு நாரைகளும் ஓர் ஆமையும், நாவல் பழத்தால் ஏற்பட்ட நட்பு என்ற இரண்டும் விலங்கினங்களைப் பற்றிய கதைகள். இச்சிறுகதைத் தொகுப்பில் வரலாற்று நிகழ்ச்சிகளையும், புராணக் கதைகளையும், கற்பனைக் கதைகளையும் கலந்து தந்திருப்பதைக் காணலாம்.

**துப்பறியும் பாலு** என்ற நூல் லெ. இராமநாதன் என்பவரால் அளிக்கப்பட்ட சிறுகதைத் தொகுப்பு நூலாகும். இதில் துப்பறியும் பாலு, இரு சகோதரர்கள், உண்மை விளங்கிய பின், அன்புத் தங்கை, கடவுளுக்கு நன்றி ஆகிய கதைகள் அடங்கியுள்ளன.

**கரடி மனிதன்** என்ற சிறுகதைத் தொகுப்பை வாண்டு மாமா எழுதியுள்ளார். இதில் கரடி மனிதன், கழுகு வீரன், மலையரசன், அங்கதனின் பந்து விளையாட்டு, பொம்மை நகரத்தில், ராஜகுமாரி சலீமா என்ற 6 கதைகள் அடங்கியுள்ளன.

**வேடிக்கைக் கதைகள்** என்னும் சிறுகதைத்தொகுப்பு சரோஜா சண்முகம் என்பவரால் சிறுவர்களுக்கென்று அமைக்கப் பட்டுள்ளது. முதல் கதையான 'ஆபத்துக்குப் பாவமில்லை' காந்திஜி, ராஜாஜி வாழ்க்கையில் நடந்த ஒரு நிகழ்ச்சி பற்றியது. மகாத்மா 1972-இல் தென்னகம் வருகை தந்திருந்தார். மைசூர் மகாராஜா அழைப்பிற்கிணங்க, மகாராஜாவின் 'குமாரபாக்' அரண்மனையில் தங்கியிருந்தார். கூட இருந்த தலைவர்களில் ஒருவர் இராஜாஜி அச்சமயம் காந்திஜிக்கு ரத்த அழுத்த நோய் இருந்ததால் உடல்நிலை தொடர்பாக ஏகப்பட்ட கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்தன. அதிகம் உழைக்கக் கூடாது, உரக்கப் பேசக் கூடாது இப்படிப் பல...ஒரு முதியவருக்குக் காந்திஜியுடன் உரையாட இரவு எட்டரை மணி முதல் ஒன்பது மணி வரை அனுமதி வழங்கப்பட்டிருந்தது. ஆனால் திடீரென்று முதியவர் ஒரு விவாதத்தை ஆரம்பிக்க, காந்திஜி அதற்குப் பதில்கூற, மிக உரத்தகுரலில் உணர்ச்சி வேகத்தோடு உரையாடல் தொடர்ந்தது. இதனால் காந்திஜியின் ரத்த அழுத்த நோய் அதிகப்படக் கூடுமென்று அனைவரும் கவலைப்பட ஆரம்பித்தனர். அவர்கள் பேச்சை நிறுத்த என்ன செய்வதென்று தெரியாமல் திணறினர். இராஜாஜி வந்தார். அவ்வூரில், இரவில் நேரத்தை அறிவிக்க ஒன்பது மணிக்கு மின்விளக்கை ஒரு தடவை அணைத்து மீண்டும் ஏற்றும் வழக்கத்தைப் பயன்படுத்தி, ஒன்பது மணி ஆக பதினைந்து நிமிடங்கள் இருக்கும்போதே விளக்கை அணைத்தார். முதியவரும் ஒன்பது மணி ஆகிவிட்டது என்று எழுந்து போய்விட்டார். ஆபத்துக்குப் பாவமில்லை என்ற கருத்தை, ராஜாஜி காந்திஜியைக் காப்பாற்ற வேண்டுமென்றே விளக்கை அணைத்த நிகழ்ச்சியினை கூறி விளக்குகிறார் ஆசிரியர். இவ்வாறு நான்கு வினோதத் திருடர்கள் போன்ற பல சிறுகதைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

புலவர் அரசுமணியின் **பாரதியாரின் நீதிக்கதைகள்** என்ற நூலில் பாரதியார் கூறிய அறிவுரைகளைக் கொண்டு, ஆசிரியர் சிறுகதைகளை அமைத்திருக்கிறார் அச்சந்தவிர், ஆண்மை தவறேல், ஈகைத்திறன், ஊண் மிக விரும்பு, சோதிடந்தனை

இகழ், மானம்போற்று, ஔடதம் குறை, ஒற்றுமை வலியாம், கேட்டினும் துணிந்து செய், பேய்களுக்கு அஞ்சேல், நையப்புடை, நேர்படப் பேசு, சாவதற்கு அஞ்சேல் என்ற பாரதியாரின் நீதிக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு கதைகள் அமைகின்றன.

தங்கமணி, **பாரதியாரின் பகுத்தறிவுக்கதைகள்** எனும் கதைத் தொகுப்பை அளித்திருக்கிறார். அந்தக் கதை மாதிரி, ஊருக்கு நல்லது சொல்வேன், கோடிப் புண்ணியம், அஞ்சி அஞ்சிச் சாவார், காலம் வந்ததே, தருமத்தின் வெற்றி என்ற தலைப்புகளில் இக் கதைகள் அமைந்துள்ளன. கதையின் மையக்கருத்து இரண்டு மூன்று வரிகளில் முதலில் கூறப்படுகிறது.

**பாரதியாரின் பகுத்தறிவுக் கதைகள்** எழுதிய தங்கமணி, **இந்திய நீதிக்கதைகள்** என்ற நூலையும் எழுதியுள்ளார். அன்பு எனும் அழகு, படிக்காத ராஜா, மூன்று ராஜாக்கள் எனும் தலைப்பில் கதைகள் இடம்பெற்றுள்ளன. ஆசை என்ற தலைப்பில் நான்கு கதைகளும், மூன்று ராஜாக்கள் எனும் தலைப்பில் மூன்று கதை களும் அமைந்துள்ளன.

அக்பரின் ஆட்சியில் ஒரு நாள் கிறித்தவர்கள் ஒரு நாயின் கழுத்தில் குரானைக் கட்டித் தெருவில் அலையவிட, அதைக் கண்ட முகலாய முதியவர் ஒருவர் அக்பரின் அன்னையிடம் முறை யிடுகிறார். அன்னை மகனை அழைத்து, பதிலுக்குக் கிறித்தவ நூலை நாய் கழுத்தில் கட்டவேண்டும் என்று கூற, அக்பர் அப்படிச் செய்வது முறையன்று என்று அன்னையை அமைதிப் படுத்துகிறார். கல்லாதவரானாலும் அக்பர் உயர்ந்த பண்புள்ளம் கொண்டிருந்ததை இது காட்டுகிறது என்று ‘படிக்காத ரோஜா’ எனும் கதையை அமைக்கிறார் ஆசிரியர். இதைப் போன்றே பிற கதைகளும் சுவையுடையனவாக உள்ளன.

**தேசபக்திக் கதைகள்** என்ற சிறுவர்க்கான சிறுகதைத் தொகுப்பு, புலவர். செந்துறை முத்து என்பவரால் எழுதப் பட்டுள்ளது. இதில் நாட்டு விடுதலைக்குப் பாடுபட்டோரின் வரலாறு கூறப்பட்டுள்ளது. இதில் காந்திஜி, நேதாஜி, லால்பகதூர் சாஸ்திரி போன்ற பலரும் குறிப்பிடப்படுகின்றனர். இதில் அவர்கள் தேசப்பற்றை வெளிக்காட்டும் நிகழ்ச்சிகள் மட்டு மல்லாமல், இளம் வயது முதல் அவர்கள் வாழ்க்கையைப் பற்றிக் கூறுகிறது. இதன் மூலம் ஆசிரியர் இளமையிலிருந்தே, அத் தலைவர்கள் எவ்வாறு துன்பப்பட்டு முன்னேறினர் என்பதையும் சிறுவர்களுக்கு உணர்த்துகிறார்.

**பீர்பால் கதைகள்** என்ற நூல் து. அசரியா செல்வராஜ் எழுதியுள்ளார். பீர்பால் தொடர்பான பல கதைகளின் குறிப் பிட்ட சில கதைகள் இந்நூலில் இவரால் கூறப்பட்டுள்ளன.

**குழந்தைகளுக்கான ஆசிய நாடோடிக் கதைகள்:** பாகம் I என்ற நூல் ஆங்கிலத்திலிருந்து கி.குருமூர்த்தி என்பவரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இந்நூலில் பங்களாதேஷ், இந்தியா, ஈரான், கொரியா, லாவோஸ், சிங்கப்பூர், தாய்லாந்து, வியட்நாம், இந்தோனேஷ்யா, ஜப்பான், க்மேர், மலேசியா, நேபாளம், பாகிஸ்தான், பிலிப்பைன்ஸ், ஸ்ரீலங்கா ஆகிய நாட்டுக் கதைகள் இடம்பெற்றுள்ளன. இந்நூல் எளிய தமிழ் நடையில், இளம் சிறுவர்களும் படிப்பதற்கேற்றவாறு அமைந்துள்ளது.

கவியழகன் **உயர் பண்புக் கதைகள்** என்ற வரிசையில் நான்கு நூல்களை எழுதியுள்ளார். இவற்றில் ஒன்று வரலாற்றுக் கதையாகவும், மற்றொன்று சமுதாயக் கதையாகவும், பிற இரண்டும் துப்பறியும் கதைபோலக் காணப்படுகின்றன.

**'தங்கத் தம்பி'** என்ற புதினத்தைக் கனிமொழி என்ற ஆசிரியர் எழுதியுள்ளார். முத்து, லெட்சுமி என்னும் பெற்றோர் களுக்குப் பாபு என்ற சிறுவனும், அவனுக்கு ஒரு தங்கையும் இருக் கிறார்கள் ஆனால் பாபு சிறுவனாயிருக்கும்போதே அவர்கள் குடும்பம் வறுமையில் அகப்படுகிறது. தந்தை இறக்கிறார். பாபு கல்விபயில முடியாத சூழ்நிலை ஏற்படுகிறது ஆனாலும் கலங் காது, உழைத்து, உழைப்போடு கல்வியையும் விடாமல் கொண்டு, வாழ்க்கையில் வெற்றி பெற்றதாகக் கதை அமைகிறது.

**வளவன் பரிசு** என்ற நூல் பூவண்ணனால் இயற்றப்பட்ட வரலாற்று நாடகமாகும். இந்நாடகத்தில் தாமரைக் கண்ணன், அன்னம் என்னும் இருவர் அஞ்சாது நின்று எதிர்த்து, பட்டினப் பாலைக்குப் பரிசாக விளங்கிய பதினாறு கால் மண்டபத்தைப் பாண்டியனின் வீரர்கள் அழிக்காமல் காத்துத் தமிழுக்கும் தமிழருக்கும் தொண்டு புரிந்தமை கூறப்பட்டுள்ளது.

இனி வரும் இரண்டு நூல்கள் கட்டுரை நூல்களாக உள்ளன. **பாரதி தமிழ்** என்ற நூல் வில்லவன் கோதையால் எழுதப்பட்டுள் ளது இது அவர் பல இடங்களில் ஆற்றிய உரைகளின் தொகுப் பாகும் பாரத நாடு பற்றிப் பாரதி கூறிய செய்திகளைச் செந் தமிழ் நாடு, இனிய தமிழ், தமிழைப் பிடித்த விதியே போன்ற பல

தலைப்புகளில் கட்டுரைகளாக வழங்கியுள்ளார். **இறைவனே ஒளி விளக்கு** என்ற நூலை எஸ் குலசேகரன் என்பவர் எழுதி இருக்கிறார். குழந்தைகளுக்கான நீதிக் கருத்துகள் பல இந்நூலில் கூறப்பட்டுள்ளன. தங்கப்பதக்கம், இறைவனே ஒளி விளக்கு, தித்திக்கும் தேன் போன்று இருபத்தைந்திற்கும் மேற்பட்ட தலைப்புகளில் இச்செய்திகள் அமைகின்றன.

வி. வி. கிரி எழுதிய **பொது அறிவுப் புதையல்** என்ற நூலும் கோ. செல்வம் எழுதிய **உங்களுக்குத் தெரியுமா** என்ற நூலும் பொது அறிவு நூல்களாக உள்ளன. முன்னது கட்டுரை வடிவிலும், பின்னது வினா-விடை அமைப்பிலும் காணப்படுகிறது.

விளையாட்டுத் துறை தொடர்பாக ஐந்து நூல்கள் காணப் படுகின்றன.

**கிரிக்கெட் கற்கலாம்** என்ற நூல் குண்டுமணி என்பவரால் எழுதப்பட்டுள்ளது. மிகுதியான படங்களைக் கொண்டு எளிதில் சிறுவர்களுக்கு விளங்குமாறு அமைக்கப்பட்டுள்ளது. உலக நாடு களில் இவ்விளையாட்டு எப்படி நடைபெறுகிறது என்பதையும், இண்டர்நேஷனல் கிரிக்கெட் என்பதைப் பற்றியும், நியூசிலாந்து, மேற்கிந்தியத் தீவு, பாகிஸ்தான், இந்தியா ஆகியவற்றில் கிரிக் கெட் விளையாட்டின் செல்வாக்கையும், சிதம்பரம் ஸ்டேடியம் பற்றியும் தனித்தனி தலைப்புகளில் இந்நூலில் கூறிச் செல்கிறார். பின்னர் இவ்விளையாட்டு ஆடும் முறையைப் படங்களாலேயே விளக்குகிறார்.

எஸ். நவராஜ் செல்லையா **கிரிக்கெட் ஆட்டத்தின் கதை**, **சடுகுடு ஆட்டம்**, **வழிகாட்டும் விளையாட்டு வீரர்கள்**, **விளையாட்டு உலகில் வீரக்கதைகள்** என்ற நான்கு நூல்களை விளையாட்டுத் தொடர்பானவையாய்ச் சிறுவர்களுக்குப் படைத் துள்ளார்.

**கிரிக்கெட் ஆட்டத்தின் கதை** என்னும் நூல் இவ்விளை யாட்டின் தோற்ற வரலாறு, அதன் விளையாட்டு முறைகளும். கருவிகளும் விதிகளும் படிப்படியே மாறி, மாறி வளர்ச்சி பெற்ற வரலாறு ஆகியனவும் இதில் கூறப்படுகின்றன. **சடுகுடு ஆட்டம்** என்ற நூலில் வரலாறும் வளர்ச்சியும், விளையாட்டு விதிகளும், திறன் நுணுக்கங்களும், பயிற்சி முறைகளும் பல தலைப்புகளில் தனித்தனியே விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

**வழிகாட்டும் விளையாட்டு வீரர்கள்** எனும் நூலில் வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்ச்சிகளை உருவாக்கித் தந்த வீரர்கள் வாழ்க்கையில் வெற்றியையும், புகழையும் அடைய மேற்கொண்ட முயற்சிகளையெல்லாம் தெளிவாகக் கூறுகிறார். இதில் பல நாட்டு வீரர் வாழ்க்கை நிகழ்ச்சிகள் பதினான்கு தலைப்புகளில் தரப்பட்டுள்ளன. **விளையாட்டு உலகில் வீர நிகழ்ச்சிகள்** என்னும் நூலில் பழங்கிரேக்க நாட்டு விளையாட்டு வீரர்கள் வாழ்க்கையில் நடந்ததாகக் கூறப்படும் நம்பமுடியாத சுவையான நிகழ்ச்சிகளைத் தொகுத்துத் தந்திருக்கிறார். மிலோ, பயிலஸ், தியாஜனிஸ் ஈதிமஸ், கிளியோடாமிஸ், பொலிடாமஸ், டியோக்கிபஸ், தயா ரஸ், டோரியஸ் ஆகிய வீரர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளன.

**சாரணீயம்** என்ற நூல் இளம் சிறுவர்கள் சாரணீயம், அது தோன்றிய வரலாறு, அதன் பயன் போன்றவற்றை அறிந்து கொள்வதற்கு எளிதில் உதவுமாறு காணப்படுகிறது. இதில் சாரணீயம் என்றால் என்ன, ஏன் வேண்டும் சாரணீயம், சாரண இயக்க வரலாறு, இளம்பாதன் சோதனைகள், சாரணர் சீருடை, சின்னம் சூட்டல் சடங்கு, சாரணர் கைக்கோல், சாரண விளையாட்டு என்ற தலைப்புகளில் சாரணீயம் பற்றிய ஒரு முழு வரலாற்றைத் தெளிவாகக் காட்டுகிறார்.

ந. வேலுசாமி **சீருடை கண்ட செம்மல்** என்ற தலைப்பில் நெ. து. சுந்தரவடிவேலுவின் வாழ்க்கையைச் சுருக்கமாகத் தருகிறார். சீருடைத்திட்டம் ஏற்படுத்தியது, அவரியற்றிய நூல்கள், கூறிய அறிவுரைகள், துணைவேந்தர் பணியேற்றமை ஆகியன கூறப்பெறுகின்றன. இவற்றிற்குப் பின், ஐந்து அடிகளில் ஒரு கவிதை இவரைப் புகழ்கிறது. இறுதி மூன்று பக்கங்களில் **சீருடை கண்ட செம்மலின்** கருத்துகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

இந்நூல்கள் பெரும்பாலும் 8 வயதிற்கு மேற்பட்ட சிறுவர்கள் படிப்பதற்கு ஏற்றனவாகவே காணப்படுகின்றன. இவற்றில் **பாரதி தமிழ், பொது அறிவுப் புதையல், உங்களுக்குத் தெரியுமா** போன்ற நூல்களும், நவராஜ் செல்லையாவின் விளையாட்டு பற்றிய இரண்டு நூல்களும் பன்னிரு வயதிற்கு மேற்பட்ட சிறுவர்களுக்கு ஏற்றனவாகக் காணப்படுகின்றன.

மேற்கூறிய நூல்களில் பதினொரு நூல்கள் சிறுவர்க்கான சிறு கதைத் தொகுப்புகளாகக் காணப்படுகின்றன. இவை அனைத்தும், சுவையான கதைகளைக் கூறினாலும், கதையின் இறுதியில் சிறுவர்களுக்கு ஒரு படிப்பினையை உணர்த்துகின்றன. இவை அனைத்தும் கதையோடு அறிவுரையைக் கூறினாலும், கூறும் வகையில் ஒன்றுக்கொன்று வேறுபட்டு விளங்கக் காணலாம்.

**அற்புதச் சிறுகதைகள்** எழுதிய சகுந்தலா மெய்யப்பன், கதையைக் கூறி முடித்தபின் இறுதியில் தனியாக, தான் அக்கதையின் வழிக்கூறவந்த அறிவுரையை எழுதியிருக்கிறார் பாரதியாரின் பகுத்தறிவுக் கதைகள் பாரதியாரின் நீதிக் கதைகள் ஆகியவற்றால் இக்கதைக்கு முன்னாள் பாரதியின் அறிவுரையை எழுதிப் பின்னர் கதையைக் கூறிச் செல்கிறார். பிற கதைகள் அனைத்தும் கதைக்குள்ளேயே அறிவுரையையும் கூறுவதாக அமைக்கின்றன.

**தேசபக்திக் கதைகள், பீர்பால் கதைகள்** ஆகியன வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடம்பெற்றவர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கூறுகின்றன. **தேசபக்திக் கதைகளில்** நாட்டுப் பற்றுடன் உழைத்து, வரலாற்றில் சிறப்பிடம் பெற்றவர்களின் வரலாறுகள் இடம்பெற்றுள்ளன. இதில் இந்திராகாந்தி, சத்திய மூர்த்தி, காமராஜ், ஜவஹர், சுபாஷ் சந்திரபோஸ், காந்தி அண்ணல், லால்பகதூர் சாஸ்திரி, ராஜகோபாலாச்சாரியார், வேதரத்தினம், வல்லபாய் படேல் மற்றும் பலர் இவ்வரிசையில் கூறப்பட்டிருக்கிறார்கள். தேசபக்தர்கள் வரலாற்றைக் கூறுமிடத்து, தேசபக்தியால் சிறப்பிடம் பெற்றவர்களை முதலில் கூறுவது ஏற்றதாகும். காந்தி அடிகள் நாட்டுப்பற்றில் சிறந்து விளங்கி உலகப்புகழ் பெற்றிருப்பது அனைவரும் அறிந்த ஒன்றாகும். முதலில் இந்திரா காந்தியையும், அடுத்த நால்வரையும் கூறி, ஆறாவதாகக் காந்திஜியைக் கூறியிருப்பது ஏற்புடைத்தாகத் தெரியவில்லை. காந்திஜியைவிட நாட்டுப்பற்றில் இவர்கள் சிறந்திருந்தனரா என்பதும், முதலில் குறிப்பிடுமளவுக்கு இந்திராகாந்தி மற்றையோரினும் தேசபக்தியில் முன்னணியில் நிற்கிறாரா என்பதும் வியப்பாக உள்ளது.

**பீர்பால் கதைகள்** மிகுந்த நகைச்சுவையுடன் சிறந்த அறிவுத் திறனை வெளிப்படுத்தக் கூடியனவாக அமைந்திருப்பதைக் காண

லாம். பீர்பாலின் மிகுந்த அறிவுத் திறனை வெளிப்படுத்த அக்பர் அறிவுத்திறன் குறைந்தவராகக் கூறப்பட்டிருக்கிறார். என்றாலும் அக்பர்போல் இருக்க முயலாமல் பீர்பால்போல் உருவாகத் தூண்டுமாறு இக்கதைகள் அமைந்துள்ளன.

''அக்பருக்குக் கதைகள் கேட்பது என்றால் கொள்ளை பிரியம்''

''இவ்வாறு சொல்லிக் கொண்டே சென்றார் பீர்பால் அக்பரும் 'உம், உம்' என்று கேட்டுக் கொண்டிருந்தார்''

இவ்வாறு சிறுவர்கள் விரும்புமாறு அவர்கள் நடையிலேயே கதைகளை அமைத்துச் சென்றிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

**குழந்தைகளுக்கான ஆசியாவின் நாடோடிக் கதைகள்** என்ற நூலில் வழிவழியே தொடர்ந்து வரும் மரபுக் கதைகள் கூறப்படுகின்றன இக்கதைகளின் தொடக்கம் 'முன்னொரு காலத்தில் ஒரு காகமும், குருவியும் நண்பர்களாக இருந்தன' என்பதுபோல் ஆரம்பமாகிறது. சிறுகுழந்தைகள் விரும்புமாறு, அவர்கள் நடையிலேயே கதையை அமைத்துச் செல்லும் பாங்கை இதில் காணலாம். சொர்க்கத்திற்குப்போன அரசர் என்ற கதையில் வரும் உரையாடலை இதற்குச் சான்றாகக் கூறலாம். அதில், 'என்னை எப்பொழுதும் நீங்கள் விட்டுப் பிரியக்கூடாது' என்று அடிக்கடி அரசர் அமைச்சரிடம் கூறுவர். அமைச்சரும் 'மாட்டவே மாட்டேன்... உங்களை விட்டுப் பிரியவே மாட்டேன்...நீங்கள் எங்கேயிருந்தாலும் சரி, சொர்க்கத்திற்குப் போனாலும் சரி, இல்லை, நரகத்திற்குப் போனாலும் சரி, நான் எப்போதும் உங்களோடு இருப்பேன்' என்று பதில் கூறுவர் (ப. 13).

**வேடிக்கைக் கதைகள்** என்ற தொகுப்பில் சரோஜா சண்முகம் மூன்று பிசாசுகள் என்ற ஒரு கதை கூறுகிறார். மூன்று பிசாசுகள் தங்கள் அறிவின்மையால் ஒரு குடியானவனுக்கு அடிமையாவதைக் கூறுகிறது இக்கதை. இது போன்ற பிசாசுக் கதைகளைக் கூடிய வரை விலக்குவது நல்லது. சிறுவர் உள்ளத்தில் பேய், பிசாசு என்பன பற்றிய எண்ணங்களை எந்த அளவு தோற்றுவிக்காமலிருக்க முடியுமோ, அவ்வளவு முயல்வது நல்லது.

இந்நூலில் தொடர்கள் சில இடங்களில் நீண்டவையாக அமைகின்றன. குழந்தைகளுக்கான இலக்கியங்களில் இயன்ற

வரை சிறுசிறு தொடர்களாலேயே அமைத்தல் அவர்கள் எளிதில் கதையைப் புரிந்து கொள்ள உதவியாக இருக்கும்.

'ஓர் உத்தம நண்பன் என்ற கதை தந்தையிடம் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற மகன், தன் நண்பனைக் கொல்லப் பலமுறை முயற்சிப்பதாகவும், அவற்றை அறிந்த அந்த நண்பன் இறுதியில் அறிவுரை கூறி அவனைத் திருத்துவதாகவும் அமைகிறது. எத்தகைய நல்ல கதைகளைக் கூற விழைந்தாலும், அதற்கு இதுபோன்ற கொலை, கொலை முயற்சி தொடர்பான கதைகளை அமைக்காமலிருப்பது மிக நல்லது. கொலை, கொள்ளை என்ற நினைவுகள் சிறுவர்களிடத்தில் பதிந்து அவர்களைக் கெட்டவர்களாக்குவதற்குத் தூண்டுகோலாக்குகின்றன. இதுபோன்று. லெ. இராமநாதனின் துப்பறியும் பாலு என்ற கதையும் பாலுவின் வீரம், தியாகம் இவற்றை வெளிப் படுத்தினாலும் கொலை, பற்றிய செய்தி இடம்பெறுவது விலக்கத் தக்கது.

**கரடி மனிதன்** என்ற வாண்டுமாமாவின் சிறுகதைத் தொகுப்பு இளம் சிறுவர்களும் படிக்கும்படியாக இருக்கிறது. கரடி மனிதன், கழுகு மனிதன் மலையரசன் போன்ற கதைகள் சிறுவர்க்கு வீர உணர்வை ஏற்படுத்தினாலும், நம்ப முடியாத ஒரு கற்பனை உலகை, மனித வாழ்வையே இக்கதைகள் காட்டுகின்றன. அங்கதனின் பந்து விளையாட்டில் விலங்குகள் மனிதர்போல் வாழ்க்கை நடத்துவதாக பொங்கல் கொண்டாடுவதாக, கால்ப் பந்தாடுவதாகக் கற்பனையாக அமைத்திருக்கிறார். பொம்மை நகரத்தில் என்ற அடுத்த கதையிலும் பொம்மைகளைக் கொண்டு ஓர் நகரத்தைப் படைத்து, அவற்றை உயிருள்ளவைபோல் உலவ விட்டிருக்கிறார். இவ்விரு கதைகளும் சிறுவர்களுக்கு நகைச்சுவை உணர்வினையும், மகிழ்ச்சியையும் ஏற்படுத்தக்கூடியன.

'ராஜகுமாரி சலீமா' என்ற இறுதிக் கதையில் சிறுவருக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்த வேண்டும் என்று அரசர் மிட்டாய்கள் சாப்பிடுவதாகக் காட்டியிருக்கிறார் குழந்தைகள் கதையோடு ஒன்றிப்போக வேண்டும் என்ற உணர்வினால் குழந்தைகளின் உணர்வு நிலைகளையும், செயல்களையும் அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறார். இளவரசி தன் ஆட்டுக்குட்டியைக் அழைத்து வரத் தோழி லைலாவை அனுப்பியபோது அவள்

வழியில் மூன்று பெரிய மிட்டாய்கள் இருந்ததைக் கண்டதும் மிகுந்த ஆவலுடன் ஒன்றை எடுத்து யாருக்கும் தெரியாமல் தின்று விட்டதாகக் காட்டியிருப்பதை இவ்வகையில் கூறலாம்.

நாற்பது மிட்டாய்களும் தீருவதற்குள் அப்துல் வராவிட்டால் அவனை நாட்டை விட்டு வெளியேற்றி விடுவதாகக் கூறியிருந்த அரசர், லைலா தின்றதை அறியாமல், மறுநாள், இன்னும் ஒரு மிட்டாய்தான் பாக்கி என்று கூற, சலீமா 'நேற்று மூன்று மிட்டாய்கள் இருந்ததே அப்பா' என்று கத்தினாள் என்று கூறுகிறார். இதில் கத்தினாள் என்ற ஒரு சொல் வழி, ஒரு சிறுமி தனக்கு ஒரு படபடப்பான, வியப்புக் கலந்த அச்ச உணர்வு தோன்றினால் எப்படி நடந்து கொள்வாள் என்பதை அப்படியே உணர்த்துகிறார்.

குழந்தைகளைச் சிரித்து மகிழ வைக்க வேண்டும் என்ற நோக்கத்தை முதன்மையாகக் கொண்ட ஆசிரியர், மொழி நடையில் பல வடமொழிச் சொற்களையும் ஆங்கிலச் சொற் களையும் கலந்து அமைத்திருப்பதைக் காணலாம். இயன்ற வரை இச்சொற்களை விலக்குவது நன்று.

'**இந்திய நீதிக் கதைகள்**' என்ற நூலில் அரசர்கள் பற்றிய கதைகளோடு, சமுதாயக் கதைகளும் கலந்து காணப்படுகின்றன. ஆசிரியர் நடை மற்றையோர் நடையினின்று மாறுபட்டுக் காணப் படுகிறது. இவர் பல இடங்களில் ஒரு தொடரின் இறுதிச் சொல்லை முடிக்காமல் பாதியில் நிறுத்திச் செல்லும் முறையைக் கையாளுகிறார்.

"அதற்கப்புறம் மரம் வெட்டுவார். பிறகு இரும்புப் பட்டறையில் புகுந்து நெருப்பு உலையில் இரும்பைக் காய்ச்சி அடித்..." (ப. 16). இவ்வாறு புள்ளிகள் வைத்து அதை முடிக் காமல் விட்டுவிடுகிறார். மாறுபட்ட முறை என்றாலும் சிறுவர் களால் இதை எளிதில் புரிந்துகொள்ள முடியாது என்றே தோன்று கிறது.

கதையின் நடுநடுவே எவர்? ஏன்? எதற்காக? எங்கு? என்று பல கேள்விகளைக் கேட்டுப் பதில் கூறுவதுபோல் அமைத்திருக்கும் முறை சிறுவர்கள் கதைப்போக்கைப் புரிந்து கொள்ளப் பயன்படும்.

இவர் நூலைத் தொடங்கும்போது 'உதாரணமாக ஒரு கதையை வெளியிடுகிறேன்' என்று கூறுகிறார். இதில் 'வெளி

யிடுகிறேன்' என்பது போன்று கூறுவதை விட, கூறுகிறேன், சொல்கிறேன் என்று குழந்தைகளுக்கு விளங்குமாறு எளிய தமிழிலேயே அமைக்கலாம். இத்தொடரில் உதாரணமாக என்று கூறியிருப்பதை விட எடுத்துக்காட்டாக என்றோ, சான்றாக என்றோ கூறியிருக்கலாம். சிறுவர்களைப் பொறுத்த வரை, உதாரணம் என்ற சொல்லும் புதிதுதான். எடுத்துக்காட்டு, சான்று போன்ற சொற்களும் புதிதுதான் ஆகவே முடிந்த அளவு அவர்களுக்கு இளம் வயதிலேயே தமிழ்ச் சொற்களைக் கூறுவது நல்லது. தமிழ் மொழி நன்கு வளர இது உதவும். ஆகாயம், சமுத்திரம், பவித்திரம், வியாபித்தல், சோகம் போன்ற பல சொற்களை இவ்வகையில் நாம் காணலாம். சிறுவர் இலக்கிய எழுத்தாளர் அனைவருமே இம்முறையை மேற்கொள்வது நலம் பயக்கும்.

'உயர் பண்புக் கதைகளி'ல் முதல்நூலில், மகாபலிபுரத்திற்குச் சுற்றுலா சென்ற மாணவர், ஆசிரியர் குழுவுக்கு அங்குள்ள ஒருவர் சிற்பியின் கதையைக் கூறுவதுபோல அமைத்திருப்பது, சிறுவர்களுக்குத் தாங்களே அங்கு சுற்றுலாச் சென்று அக்கதையைக் கேட்பது போன்ற உணர்வைத் தோற்றுவிக்கக் கூடும் இதனால் இக்கதையைப் படிக்கும் ஆர்வம் மிகுதியாவதைக் காணலாம்.

கனிமொழி எழுதிய **தங்கத்தம்பி** சிறுசிறு தொடர்களால், எளிய சொற்களால் சிறுவர்க்கேற்றவாறு கூறப்பட்டுள்ளது. கதையின் நடுநடுவே, சிறுவன் பாபுவைப் பற்றி வருமிடத்தில் எல்லாம்,

'அவனுக்கு இருந்தது அறிவுப் பசி. படிக்க வேண்டும் என்ற ஆர்வம்...'

'அவனது கவனம் எல்லாம் படிப்பின் மீதே இருந்தது?'

உனக்கு இங்கே எப்படி இருக்கிறது?' என்று தந்தை கேட்டவுடன் 'நன்றாகப் பாடம் சொல்லித் தருகிறார்கள்' என்று கூறிப் பிறகு உணவு போன்றவை பற்றிய செய்திகளைக் கூறுவது, என்று அமைப்பதால் இதைப் படிக்கும் சிறுவர்களுக்குத் தாமும் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தைத் தூண்ட முயற்சிக்கிறார்.

ஆனால் பாபுவின் தந்தை இறந்தபின், தாய் மறுமணம் செய்து கொண்டதாகக் காட்டியிருக்க வேண்டாம். வளரும் சிறுவர்களுக்கான கதையில் மறுமணம் போன்ற செய்திகள்—அதை அவர்களால் புரிந்து கொள்ளவும் முடியாது—தேவையுமில்லை.

**வளவன் பரிசு** என்ற நாடக நூல், தமிழ்ப்பற்றும், வீர உணர்வும் ஊட்டக் கூடியது. மன்னர் கால வாழ்க்கையைக் காட்டுவதால் நடை வேறுபட்டிருந்தாலும், சிறுவர்கள் புரிந்து கொள்ளுமாறு எளிதாகவே இருக்கிறது.

**'இறைவனே ஒளிவிளக்கு'** நூல் முழுதும் சிறுவர்களுக்கான அறிவுரைச் செய்திகளாக இருக்கிறது. கதைகளைக் கூறி, அவற்றின் வழி, அறிவுரைகளை வழங்கும் அமைப்புக்களுக் கிடையே, நூல் முழுவதும் கருத்துரைகளை, நடுநடுவே, வரலாற்று நிகழ்ச்சிகளோடும், உவமைகளோடும் கூறியிருப்பது மாறுபட்டதொரு முயற்சியாகும்.

'குழந்தைப் பருவம் முதலே நமக்குப் பரந்த மனம் வேண்டும். விரிந்து நிற்கும் ஆலமரத்தின் நிழலில் தான் பலரும் வெயிலுக்கு அமர ஆசைப்படுவார்களே தவிர, சுருங்கி நிற்கும் பனைமரத்தின் கீழே யாராகிலும் அமருவார்களா?'

'காலம் அறிந்து நாம் செயல்பட வேண்டும். நம்முடைய பெற்றோர்கள் உழவுத்தொழிலில் ஈடுபட்டிருந்தால், அவர்கள் காலமறிந்து தானே பயிரிடுகின்றனர். காலமறிந்து செய்யாத எந்தச் செயலும் சிறக்காது'

என்பன போன்ற உவமைகள் சிறுவர்கள், ஆசிரியரின் கருத்தை எளிதில் உணருமாறு உதவுகின்றன. சில இடங்களில் ஆசிரியர் சிறுவர்களுக்குத் தொடர்பில்லாத செய்திகளுக்குப் போய் விடுகிறார். அச்செய்திகளை விலக்குவது நன்று.

குழந்தைகள் எப்போதும், எதற்கும் தன்னோடு ஒரு துணையை விரும்பும். இந்நூலில் ஆசிரியர் தம்மையும் குழந்தை களோடு ஒருவராக உளப்படுத்தி, 'நாம் பள்ளிக்குச் செல்ல வேண்டும்', 'நாம் உழைக்க வேண்டும்' என்று அமைத்திருப்பது குழந்தைகளைக் கவரக் கூடிய ஒன்றாகும்.

இளமைப் பருவம், சிறுவர்கள் தாங்கள் புதிதாக அறியும் சொற்களையும், அவை எந்தெந்தப் பொருள்களில் எந்தெந்த இடங்களில் கையாளப்படுகின்றன என்பதையெல்லாம் மனதிற்குள் பதித்துக் கொள்ளும் பருவம். ஆகவே ஏற்ற சொற்களை ஏற்ற இடத்தில் அமைக்கவேண்டும் இந்நூலில் ஓரிடத்தில்,

'தாழ்வு என்பது சிறந்த பண்புகளுள் ஒன்றாகும். நமக்குத் தாழ்ந்து நடக்காதவர்களிடத்தும் நாம் தாழ்ந்து நடத்தல் நல்ல தாம். தாழ்வான குணம் இல்லையேல் நாம் செருக்குடையவர் களாய்—செழிப்பற்றவர்களாய் இருப்போம். பெரியோர்கள் அனை வரும் தாழ்ந்த குணம் உடையவர்கள்...'

என்று கூறுகிறார். இப்பகுதியில் 'தாழ்வு' என்ற சொல் இழிந்த என்ற பொருள் தருவதுபோல் தோற்றுகிறது. எனவே இச்சொல்லுக்கு மாறாகப் 'பணிவு' என்னும் சொல்லை அமைத்தல் ஏற்புடைத்தாய்த் தோன்றுகிறது.

தமிழ்த்தொண்டு என்ற தலைப்பில் (பக். 68- 69) திரிகூட சுந்தரம் என்பவரைக் கூறும்போது, அவர் செய்த தமிழ்த் தொண்டுகளைக் கூறாமல், அவரது உயர்ந்த, எளிய வாழ்வு, நற்சிந்தனை பற்றியே குறிப்பிட்டிருப்பது அப்பகுதயில் தேவை யானதாகத் தெரியவில்லை.

மற்றொரு இடத்தில்,

'முன்பு புலவர்கள் வறுமையுற்றதால் ஒருவனுக்கு இல்லாத குணங்களைச் சொல்லிப் பரிசு பெறுவது இயற்கையாக இருந்தது. எழுதப் படிக்கத் தெரியாதவனை ஆதிசேடன் என்பர். பிறருக்கு எதையும் கொடுக்காதவனைக் கர்ணன் என்பர். அழகற்ற கோர உருவம் கொண்டவனைக் காமன் என்பர். ஆண்மையற்றவனை வீரத்தில் சிறந்த விசயன் என்பர். பொய் சொல்பவனை அரிச் சந்திரன் என்பர்.

இல்லாத கொடுமைக்குப் பாவலர்கள் அரசர்களைப் புகழ்வது பண்டை வாழ்வாக இருந்தது. புகழ்ச்சிக்கு அடிமையாகிப் புலவர்கள் சிலரைப் புரலலர்கள் ஆதரித்தனர்...' (ப. 62)

என்று கூறுகிறார். இக்கூற்றுச் சரியில்லை. சங்க இலக்கியப் பாடல்கள், பண்டைத் தமிழ்ப் புலவர்களின் வறுமையிலும் செம்மையான வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டியிருப்பதைக் காணலாம். காலப்போக்கில், இடைக்காலத்தில் ஒரு சிலர் அப்படி இருந்திருப்பர். அதற்காகப் பண்டைப் புலவர் எல்லோருமே அப்படிப்பட்டவர்கள்' என்று கூறினால், அது சிறுவர் மனத்தில் முன்னோர் வாழ்வைப் பற்றிய தப்பெண்ணத்தை உண்டாக்கும். இவ்வாறு சிறுவர்கள் நூலில் நம் முன்னோர் பற்றி இழிவான— உண்மையில் நடக்காத—இத்தகைய செய்திகளைக் கூறுவது கட்டாயமாக விலக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.

நவராஜ் செல்லையாவின் நான்கு நூல்களில் இரண்டு விளை யாட்டுப் பற்றியதாகவும் இரண்டு விளையாட்டு வீரர்கள் பற்றிய தாகவும் அமைந்துள்ளது. கிரிக்கெட் ஆட்டத்தின் கதை என்ற நூல்தலைப்பில் கூறியுள்ளதுபோல், கிரிக்கெட் ஆட்ட வரலாற்றைக் கதை வடிவில் தந்திருக்கிறார். பல சுவையான நிகழ்ச்சிகள் இதில் அமைந்துள்ளன. இவ்விளையாட்டில் பந்தைக் கீழாகக் கொண்டு எறிந்த முறையை மாற்றி மேலாகச் சுழற்றி யெறியும் முறையை முதலாகக் கொணர்ந்தவர் ஜான் வில்லிஸ். அவரது சகோதரி கிறிஸ்டினா தான் இம்முறையை அவருக்குக் கற்பித்தவர். கிறிஸ்டினா அவ்வாறு ஆடக்காரணம் அவரது உடை, முழங்கால் பகுதிக்குக் கீழே குடைராட்டினம்போல விரிந்த அமைப்புள்ள தன்மையில் தைக்கப்பட்டிருந்ததால், கீழாக எறியும் போது அது தடுத்ததால், கையை மேலே தூக்கி எறிந்து ஆடினா ராம்.

சுவையான நிகழ்ச்சிகளை, நகைச்சுவையுடன் தருவதை இவரிடத்துக் காணலாம்.

'கிரிக்கெட் ஆட்டத்தின் ஆரம்ப காலத்தில் பந்தாடும் மட்டைக்கென்று எந்தவித வடிவமும் இல்லை. எந்தவித உருவமும் இல்லை. இப்படி அமைந்திருக்க வேண்டும் என்ற விதி முறைகளும் உருவாக்கப் படவில்லை. ஆட விரும்பியவர்கள் தாங்கள் விரும்பியதற்கேற்றவாறு உருவாக்கிய மட்டைகளுடன் பிரசன்னமாகி விளையாடிவிட்டுப் போய்விடுவார்கள். அவ்வளவு தான். ஏனென்று கேட்பாரில்லை.' சிறுவர்கள் மிகுதியாக விரும்பும் நகைச்சுவையை இவரது நூல்கள் நான்கிலும் காணலாம்.

கிரிக்கெட் ஆட்டம் முதலில் சூதாட்டமாக இருந்ததைக் கூற வந்த ஆசிரியர் இரண்டு கருத்துக்களைக் கூறுகிறார்.

'பொழுதுபோக்குக்காக விளையாடிய கிராமத்தார்கள், தங்களுக்கிடையே இருந்த ஆட்டம் விறுவிறுப்பாகவும், உற்சாக மாகவும் அமைய வேண்டும் என்ற ஆசையில் பந்தயம் கட்டிக் கொண்டும் விளையாடி மகிழ்ந்திருந்தனர். கிராமத்தில் உள்ளவர் களுக்குப் பண வசதி ஏது? அதனால் குறிப்பிடத்தக்க பந்தயத் தொகை அதிகமாக இல்லை. அவர்களுக்கு என்ன கிடைக்குமோ, கையில் இருக்குமோ அதையே பணயமாகக் கட்டி ஆடினார்கள்.

...ஆனால் விளையாட்டையே பந்தயப் பொருளாகவும், விளையாட்டு மைதானத்தையே சூதாட்டுக் களமாகவும் மாற்றிய பெருமையும் திறமையும் அந்தப் பகுதியில் உள்ள செல்வாக்கு மிக்க செல்வந்தர்களுக்கே உரிமையாக அமைந்திருந்தது.

ஏழைகள் பந்தயம் கட்டி ஆடினால் அது விறுவிறுப்புக்கு, உற்சாகத்துக்கு. பணக்காரர் பந்தயம் கட்டி ஆடினால் அது சூதாடலா?

இந்நூல்களின் இறுதியில் இவ்விளையாட்டுகள் தொடர்பான கலைச்சொற்களை அமைத்திருப்பதும் நூலின் இடையிடையேகூறு வதும் வரவேற்கத் தக்கதாகும். இவ்வாறு ஒவ்வொரு துறையிலும் அத்துறையில் தேர்ச்சி பெற்றவர்கள் தங்கள் துறை தொடர்பான பிறமொழிச் சொற்களைத் தமிழாக்கம் செய்து தருவது தமிழுக்கு வளம் சேர்ப்பதாக அமையும். சிறுவர்களுக்குப் பல்துறை நூல்களை அமைப்பதால், அவர்கள் அவற்றைப் பற்றிய எண்ணங் களைத் தமிழிலேயே வளர்த்துக்கொள்ள உதவியாக அமையும்.

குண்டுமணியின் **கிரிக்கெட் கற்கலாம்** என்ற நூலும் இவ் விளையாட்டுப் பற்றியது. சொற்களால் விளக்காமல் படங் களாலேயே இவ்விளையாட்டு ஆடும் முறையைக் காட்டியிருப்பது பாராட்டுக்குரியதாம். இதனால் இளம் சிறுவர்களும் எளிதில் இவ்விளையாட்டைக் கற்றுக்கொள்ள முடியும். உலகெங்கும் செல்வாக்குப் பெற்று விளங்கும் இவ்விளையாட்டைத் தமிழகச் சிறுவர்களும் விளங்கிக்கொள்ள உதவியாக இந்நூல்கள் அமை கின்றன.

'**சாரணியம்** என்ற நூல் சாரணத்துறை பற்றித் தெளிவாக விளக்குகிறது. இத்தகைய நூல்கள் பலதுறைகளையும் பற்றிச் சிறுவர்களுக்காக எழுதப்படுவது வரவேற்கத்தக்கது.

**சீருடை கண்ட செம்மல்** தாத்தா தன் பேரப்பிள்ளை களுக்குக் கதை கூறுவதுபோல் நாடக வடிவில் வாழ்க்கை வரலாற்று நூலாக அமைந்துள்ளது. வாழ்க்கை வரலாற்று வகையில் இந்நூலின் நாடக அமைப்பு, நூலில் ஆர்வத்தை உண்டாக்குமாறு உள்ளது.

இவையன்றி பல 'காமிக்ஸ்' கதைகளும் எண்பதில் தோன்றி யுள்ளன. இக்கதைகள் சிறுவர்களுக்கு நிலையற்ற இன்ப உணர்வைப் படிக்கும் நிலையில் ஏற்படுத்தக் கூடும். ஆனால்,

அவை உண்மையில் சிறுவர் மனதிற்குக் கேடு விளைவிக்கக் கூடியன வாக உள்ளன. இவை சிறுவர்களுக்கு வீர, தீர உணர்வுகளை ஏற்படுத்தும் என்று கூறுவர். இக்கூற்று உண்மையானால், இதற்குள் நம் நாடு முழுவதும் மாபெரும் வீரர்கள், வீராங் கனைகள் பலர் தோன்றியிருக்க வேண்டும். ஆனால் நடை முறையில் காண்பதோ இதற்கு மாறாக இருக்கின்றது. எனவே, ஒரு பயனும் ஏற்படுத்த முடியாத இந்நூல்கள் தடைசெய்யப் படுவது சிறுவர் இலக்கிய வளர்ச்சியின் ஒரு படிநிலையாக இருக்கும்.

குழந்தைகளுக்காக எழுதப்படும் இதழ்களில் **அம்புலிமாமா** பல ஆண்டுகள் முன்பிருந்தே தன் அமைப்பை மாற்றாமல் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. மரபுவழி வந்த பல கதை கள் தான் இதற்கு உயிர்நாடி. இக்கதைகள் நம்ப முடியாத கற்பனை உலகத்திற்குச் சிறுவர்களை அழைத்துச் செல்கின்றன. **பொம்மை வீடு, ரத்னபாலா** போன்றவை அம்புலிமாமாவின் அமைப்பைக் கொண்டிருக்கின்றன. இவ்விதழ்களில் கதைகளோடு பொது அறிவுச் செய்திகளும் ஓரிடம் பெறுகின்றன. **தமிழ்ச்சிட்டு** என்ற இதழ் சிறுவர்களிடை மொழிப்பற்றை வளர்க்கிறது. **சாரணர்** எனுமிதழ் சாரணத்துறை பற்றிய அறிவைப் புகட்டுகிறது. இவை யன்றி **சப்தகிரி** எனும் சமய இதழ் சிறுவர் சோலை என்று ஒரு பகுதியை அமைக்கிறது. இதில் இறைத்தொடர்பான கதைகள் சிறுவர்க்கேற்ற நடையில், அறிவுரை கூறுவனவாக எழுதப்படு கின்றன.

எண்பதில் வந்த சிறுவர் நூல்களுள் கிடைத்தவற்றைக்கொண்டு காணும்பொழுது, இவ்வகையில் நூல்கள் இன்னும் நன்கு வளர்ச்சி பெற வேண்டியிருக்கிறது என்றே தோன்றுகிறது. சிறுவர் நூல்கள் பலவகைகளில் சிறுவர் மனத்தைக் கவருமாறு அமைக்கப்படலாம். சமயப்பற்று ஊட்டும் கதைகளைச் சிறுவர்களுக்கு மிக எளிய நடையில் அமைத்துத் தருவது அவர்களுக்குப் பயனளிப்பதாக அமையும். மொழிப்பற்றையும் நாட்டுப்பற்றையும் ஊட்டுவ தற்குத் தோன்றும் படைப்புகள்போல், சமயப்பற்றை ஊட்டு வதற்குச் சிறுவர் இலக்கிய உலகில் படைப்புகள் பல தோன்ற வேண்டும். தம் சமயத்தில் பற்றுடையவர்களாகச் செய்வதால், பிற சமயத்தை வெறுக்கச் செய்வதாகக் கொள்ளக் கூடாது. மேலும், அறிவியல் துறைகளில் தம் அறிவைச் செலுத்தி உலகுக்கு நன்மை

செய்யுமாறு, சிறுவர்களுக்கு அறிவியலின் பல துறைகளிலும் அறிவு தரக்கூடிய தொடக்க நூல்களும் அமைதல் நல்லது. இதற்கு அந்தந்தத் துறையில் தேர்ந்தவர்கள் முன்வருதல் வேண்டும்.

## பயன் பட்ட நூல்கள்


அசரியா செல்வராஜ். து. பீர்பால் கதைகள், சென்னை, பூம்புகார் பிரசுரம், 1980.

அரசுமணி. புலவர்., பாரதியாரின் நீதிக்கதைகள், சென்னை. மருதமலையான் பதிப்பகம், 1980.

இராமநாதன். லெ., துப்பறியும் பாலு, சென்னை, மருதமலையான் பதிப்பகம், 1980.

இராமலிங்கம். து., சாரணீயம் (இளம்பரதன் சோதனைகள்) வளவனூர், முத்துப் பதிப்பகம், 1980.

கவியழகன், உயர்பண்புக் கதைகள் (நான்கு பாகங்கள்), மதுரை, சோமு புத்தக நிலையம், 1980.

கனிமொழி, தங்கத்தம்பி, சென்னை, அருணோதயம், 1980.

குண்டுமணி, கிரிக்கெட் கற்கலாம், சென்னை, வானதி பதிப்பகம், 1980.

குருமூர்த்தி, குழந்தைகளுக்கான ஆசிய நாடோடிக் கதைகள், புதுதில்லி, நேஷனல் புக் டிரஸ்ட், 1980.

குலசேகரன் எஸ்., இறைவனே ஒளிவிளக்கு, சென்னை, மாப்பிள்ளைப் பதிப்பகம், 1980.

கிரி. பி. வி.,பொது அறிவுப் புதையல், சென்னை, புத்தகப் பூங்கா, 1980.

சரோஜா சண்முகம், வேடிக்கைக் கதைகள், சென்னை, அன்பு இல்லம், 1980.

செந்துறை முத்து (புலவர்), தேசபக்திக் கதைகள், சென்னை, மருதமலையான் பதிப்பகம், 1980.

செல்வம். கோ., உங்களுக்குத் தெரியுமா, சென்னை, ராஜ்மோகன் பதிப்பகம், 1980.

தங்கமணி, பாரதியாரின் பகுத்தறிவுக் கதைகள், சென்னை, செந்தில் பதிப்பகம், 1980.

தங்கமணி, இந்திய நீதிக்கதைகள், சென்னை, செந்தில் பதிப்பகம், 1980.

நவராஜ் செல்லையா.எஸ்., சடுகுடு ஆட்டம், கிரிக்கெட் ஆட்டத்தின் கதை, வழிகாட்டும் விளையாட்டு வீரர்கள், விளையாட்டு உலகில் வீரக்கதைகள், சென்னை, ராஜ்மோகன் பதிப்பகம், 1980.

பூவண்ணன் (புனைபெயர்), வளவன் பரிசு, சென்னை, நறுமலர்ப் பதிப்பகம், 1980.

வாண்டுமாமா (புனைப்பெயர்), கரடி மனிதன், சென்னை, வானதி பதிப்பகம், 1980.

வில்லவன் கோதை, பாரதி தமிழ், சென்னை, சக்தி பதிப்பகம், 1980.

வேலுசாமி. ந., சீருடை கண்ட செம்மல், சென்னை, வள்ளலார் நிலையம், 1980.

# ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதில் தமிழ் நாடகம்

ஏ. என். பெருமாள்

## அறிமுகம்

சமூகத்தின் தேவை, மக்களின் ஆவல், ஆசிரியர்களின் எழுச்சி, காலத்தின் இயல்பு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு புது இலக்கியங்கள் மலர்கின்றன. சில கால கட்டங்களில் குறிப்பிட்ட ஒரு வகை இலக்கியம் மக்களால் பெரிதும் விரும்பப்படுவதாயின் அவ்வகை இலக்கியங்களை அதிக அளவில் ஆசிரியர் படைத்துத் தருவதைக் காணலாம். சமுதாயச் சூழல், வாழ்க்கைப் பிரச்சனைகள், கால கட்ட உணர்வுகள் ஆகியவற்றை எவ்வகை இலக்கியங்களின் வாயிலாக அழுத்தமுடன் புலப்படுத்த முடியுமோ அவ்வகை இலக்கியங்களையே அதிகமாக எழுதுவது பயனுடைய செயலாகும். பெரும்பான்மை மக்கள் விரும்பும் இலக்கிய வகையே பெரும்பாலான ஆசிரியரால் எழுதப்படும். புதுமையைப் புகுத்தி மக்களைக் கவர்ந்து இழுப்பது படைப்புத்திறன்மிக்க ஆசிரியரின் தனிச்சிறப்பைப் புலப்படுத்தும்.

ஓர் ஆண்டில் எழுந்த இலக்கியங்களை நன்றாக ஆய்ந்து காணுவதாயின் பல அரிய உண்மைகள் மிக எளிதாகப் புலப்பட வாய்ப்பு உண்டு மக்களின் வாழ்க்கை இயல்புகள், பண்பாட்டுச் செல்வங்கள், நாட்டு நடப்புகள், கலைச்சிறப்புகள் ஆகிய அனைத்தையும் முறையாக அறிந்து கொள்ளலாம். அந்த ஆண்டானது இலக்கியத் துறையில் ஆக்கமுடன் வளர்ந்து சிறந்துள்ளதா அல்லது

தேக்கங்கொண்டு தேய்ந்துள்ளதா என்பதையும் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். எண்பதாம் ஆண்டில் தமிழ் நாடக உலகில் உருவாகியுள்ள இலக்கியப் படைப்புகள் உணர்த்தும் உண்மைகளை இங்கு காண முயலலாம்.

## நாடக வகைப்பாடு

நாடகக் கலையின் சிறப்பான வளர்ச்சிக்குத் தகுந்த அளவு ஆதரவும் ஊக்கமும் தமிழ் நாட்டில் இருந்ததாகத் தோன்ற வில்லை. அதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். இருப்பினும் எண்பதாம் ஆண்டில் சில நாடகங்கள் எழுதப்பட்டுள்ளன. அவற்றுள் பல மேடை ஏறியுள்ளன. சுமார் முப்பது நாடகங்கள் அச்சாகி வெளிவந்துள்ளன அச்சான நாடகங்கள் பலவகையைச் சேர்ந்தவையாகக் காணப்படுகின்றன. அவைகள் வார, திங்கள் இதழ்களிலும், தனி நூல்களாகவும் வெளியிடப்பட்டு மக்களுடைய கைக்கு எட்டியுள்ளன

ஒரு குறிப்பிட்ட கருத்தைக் குறுகிய கால எல்லைக்குள் படித்தறியத் துடிக்கும் இக்காலத்தில் ஓரங்க நாடகங்களுக்குச் செல்வாக்கு இருப்பதில் வியப்பில்லை. சுமார் பதின்மூன்று ஓரங்க நாடகங்கள் அச்சாகியுள்ளன. அவற்றில் ஒன்று வங்காள மொழியி லிருந்து தமிழில் மொழிமாற்றம் செய்யப்பட்டுள்ளது. அனைத்து ஓரங்க நாடகங்களும் மனித வாழ்வில் காணப்படும் முக்கியமான பிரச்சனைகளை அடிப்படையாகக் கொண்டு படைக்கப் பட்டுள்ளன. அவை ஒரு காட்சியாகச் சுருங்கியும் பல காட்சிகளாக விரிந்தும் காணப்படுகின்றன. சுஜாதாவின் **வந்தவன்** என்ற ஓரங்க நாடகம் ஒரு காட்சியையும் கௌரிராஜனின் **யுக்தி பலித்தது** என்பது ஒன்பது காட்சிகளையும் உடையன. ஓரங்க நாடகங்களுக்குக் குறிப்பிட்ட அளவு காட்சிகள் என்ற வரையறை இல்லை. ஆகையினால் பல்வேறு அளவில் நாடகங்கள் எழுதப் பட்டுள்ளன.

நீண்ட நாடகங்களாகப் பதினான்கு அச்சுருவில் கிடைக் கின்றன. அவற்றுள் மெரீனாவின் **சாமியாரின் மாமியார்,** ரேணுதேவியின் **ஆசைகள் பலவிதம்** ஆகியவை இதழ்களில் தொடர் நாடகங்களாக வெளிவந்துள்ளவை மற்றவை அனைத்தும் நூல்களாக உருப் பெற்றுள்ளன. அப்பாஸின் **கள்ளத்தோணி** அண்ணாவின் **வேலைக்காரி,** **நீதி தேவனின் மயக்கம்,** செந்துறை

முத்துவின் **வீரபாண்டிய கட்டபொம்மன்,** மோகனரங்கத்தின் **பொய்யே நீ போய் விடு** போன்ற பல நாடகங்கள் மறுபதிப்புக் களாக இந்த ஆண்டு வெளியிடப்பெற்றுள்ளன. அவை இவ்வாண்டின் நாடக வளர்ச்சியைக் காட்டாது எனக் கருதி இந்த ஆய்விலிருந்து விடப்பட்டுள்ளன.

**அடிமைகள், புல்லுருவிகள், ஸ்கைலாப் சம்பந்தி, சாமி யாரின் மாமனார், சுவரொட்டிகள், ஆசைகள் பலவிதம், மலரத் தவித்த மொட்டு** போன்ற நீண்ட நாடகங்கள் சமூகப் பிரச்சனை களைக் கொண்டு சமைக்கப் பட்டவை. ஒவ்வொன்றும் அவற்றின் ஆசிரியர்களுடைய நோக்கங்களுக்கும் அணுகுமுறைகளுக்கும் தக்கவாறு அமைப்பு முறையிலும் கருத்தழுத்தத்திலும் வேறு பட்டிருக்கலாம். பறம்பைச் செல்வனின் **புல்லுருவிகள்,** முத்து சாமியின் **சுவரொட்டிகள்** ஆகியவை புதுமையான போக்குகளுடன் சோதனை நாடங்களாக எழுதப்பட்டவை. மற்ற நாடகங்களி லிருந்து இவை மேடையேற்றும் உத்திகளில் மாறுபடுகின்றன. கருத்துக்களைக் கூறும் போக்கிலும் வேறுபடுகின்றன. ஆயினும் இந்த நாடகங்கள் அனைத்தும் சமூகச் சீர்திருத்தம் கருதியே எழுதப் பட்டுள்ளன.

பூவண்ணனின் **வளவன் பரிசு.** திருமேனியின் **வடக்கிருந்தான்** போன்ற நாடகங்கள் முன்னாளைய இலக்கியக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு ஆசிரியர்களின் கற்பனைக் குழம்பில் தோய்த்து எழுதப் பெற்றுள்ளன. தமிழ்ப் பண்பாட்டைத் தரணிக்கு உணர்த்தும் நோக்கம் இந்த நாடகங்களைப் படிக்கும் போது மிகச் சிறப்பாகத் தோன்றுகிறது.

நாட்டிய நாடகங்களும் இவ்வாண்டு தோன்றி உள்ளதைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். புத்தனேரி சுப்பிரமணியத்தின் **முத்தமிழ் காத்த முத்தழகி** நாட்டியமாடி நடித்துக் காட்டுவதற்கு ஏற்ற முறையில் சிறப்பாகப் படைக்கப் பெற்றுள்ளது. இது தவிர தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலையத்திலிருந்து எடுத்த ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்களை வேணுகோபாலன் பதித்து வெளியிட்டுள்ளார். அந்தப் பதிப்பு இந்த ஆண்டு வெளிவந்தது சிறப்பாயினும் நாடகங்கள் முன்பே படைக்கப்பட்டவை. அவற்றில் சில நூற்றாண்டுகளுக்கு முன்புள்ள தமிழர் உணர்வையே காண முடியும்.

## நோக்கமும் பொருளும்

மிகப் பெரும்பான்மையான நாடகங்கள் சமூகச் சீர்கேடுகளைத் தட்டித் திருத்தி மக்கள் வாழ்க்கையில் முன்னேற்றத்தைக் காண வேண்டும் என்ற உயரிய நோக்கத்தைக் கொண்டே எழுதப்பட்டுள்ளன. ஓரங்க நாடகங்கள் ஒரே நோக்கத்தை மிக அழுத்தமாகக் கூறுவதில் சிறப்பாக அமைகின்றன. மனித வாழ்வில் ஒருவருக்கு ஒருவர் கொடுத்து வாங்குவது மிகச் சாதாரண நிகழ்ச்சியாகும். ஆனால் வாங்கியதைத் திருப்பிக்கொடுத்தால் தான் இணைக்கும் உறவு வலுவடையும், இல்லையாயின் ஒருவருக்கு ஒருவர் எதிரும் புதிருமாகி அமைதி குலைவதற்கு இடமாகும். இத்தகைய சமுதாய உணர்வை ஊட்ட முற்படுகிறது 'பொங்கலோ பொங்கல்' என்ற நாடகம். இதில் ஆசிரியர் கௌரிராஜன் வாக்குத் தவறும் போக்கை வன்மையாகக் கண்டிக்கச் சுவையான ஓர் உத்தி முறையைக் கையாள்கிறார். வாய்மை தவறும் ஒருவனுக்கு 'சத்தியநாதன்' என்ற பெயரைச் சூட்டி அவனைக் கொண்டு பலரை ஏமாற்றி இறுதியில் அவனை ஏமாற்றமடையச் செய்து நாடகத்தை முடிக்கிறார். ஓரிடத்தில் சத்தியநாதன் தன்னைப் பற்றிக் 'குறிப்பிடும்போது சத்தியநாதன் அநாவசியமாகப் பொய் பேசமாட்டான்'[1] என்று கூறுவது மிகவும் அழுத்தமான உரையாக விளங்குகிறது. இதில் 'அநாவசியம்' என்ற சொல் எதிர்மறையாக நாடக நோக்கத்துக்கு வலிமை கூட்டுவதாகப் பயன் டுத்தப் பட்டுள்ளது.

வேலையின்றித் திரிவோர் இரக்கவுணர்வைப் பற்றி நன்றாகத் தெரிந்தும் சூழ்நிலையின் சுரண்டலாலும் சுயதேவையின் கட்டாயத்தாலும் இரக்கமற்ற செயல்களைத் துணிந்து செய்து விடுகிறார்கள் என்பதைச் சுஜாதா தன்னுடைய ஒரே காட்சி நாடகமான **வந்தவன்** என்பதில் விளக்குகிறார். மௌலியின் **மத்தாப்பு வாங்க காசு வந்துருச்சி** என்ற சிறிய நாடகம் ஏழு காட்சிகளில் போலியான 'பெரிய மனிதத்தனத்தைக்' கண்ணீருக்கு இடையில் கண்டிக்க முற்படுகிறது. தன்னிறைவற்ற வாழ்வை மறைத்துப் பிறருடைய தேவைகளை நிறைவேற்றப் பாடுபடுவது சிலருடைய பழக்கம். அதனால் வாழ்வில் எதிர்பாராத சரிவுகள் ஏற்பட்டுத் தாங்கமுடியாத துன்பத்தை வரவேற்றுக் கலங்குவர். இதனைக் கிருஷ்ணாஜி என்ற பாத்திரத்தின் வாயிலாக மௌலி படம்பிடித்துக் காட்டுகிறார்.

மாணவர்களின் இளமைத் துடிப்பில் எழும் உணர்ச்சிகளை நெறிப்படுத்தி நேர்மை வழிக்குக் கொண்டுவரும் நல்ல முயற்சியாகக் கோமல் சுவாமிநாதனின் இமேஜ் என்ற ஓரங்க நாடகத்தைக் கருதலாம் விசு எழுதிய **அம்மா அப்பா விளையாட்டு** என்ற சிறு நாடகம், வயதான பெற்றோரைப் பேணிக் காக்கும் தங்கள் கடமையை மறந்து தங்களுடைய தேவைக்காக அவர்களைப் பயன்படுத்திப் போலியாக மதிப்பதைக் கண்டிக்கிறது. **மாறிய கண்ணோட்டம்** என்ற நான்கு காட்சி நாடகத்தில் ஆசிரியர் ஐஸ்வர்யன், உண்மையான நடப்பை உணராது உலகைத் தவறாகக்காணும் சிலருடைய அறியாமையைச் சுட்டிக் காட்டுகிறார். தங்களுடைய உண்மையான போக்கையும் செயலையுங்கூட அவர்களால் சரிவர அறிய முடியவில்லை என்பதையும் சுட்டிக் காட்டுகிறார்.

'நாம யாருக்கும் எந்தக் கெடுதலும் செய்யலே' என்ற உணர்வானது ஒரு மனிதனுக்குத் தரும் மனவலிமையை உணர்ச்சியுடன் சித்திரிக்க முயல்கிறது சௌந்தர்யன் எழுதிய **கெடுதல்கள்** என்ற ஏழு காட்சி நாடகம். இது செய்த தவறுகளைச் சிந்திக்கத் தூண்டுகிறது. சமுதாயத்தின் மேற்படியில் இருப்பதாக நினைப்பவர்கள் தங்களுடைய குற்றவுணர்வு குத்திக் காட்டும்போது கீழிறங்கி, தாழ்ந்தவர்கள் என்று முன்பு கருதியவர்களின் பெருஞ் செயலுக்கு முன்னால் தலைதாழ்த்தி நிற்பதை இந்த நாடகம் படம் பிடித்துக் காட்டுகிறது.

**பாரதியைப் பார்த்தீங்களா?** என்ற நாடகத்தை ஐந்து காட்சிகளில் ஜி.கே. என்பார் எழுதியுள்ளார். திருமணமானவர்கள் பிற பெண்களை நாடும் தவறான போக்கை இந்த நாடகம் கண்டிக்கிறது. குழந்தையை இழந்து தவிக்கும் ஒரு பெண்ணை நாடகத் தேவைக்காகப் புகுத்திய ஆசிரியர் அவளுக்கு ஆறுதலாக ஒன்றும் செய்யாமல் நாடகத்தை முடித்திருப்பது குறையாகவே படுகிறது. திருமணங்களில் பரிசுகளை விரும்புவதில்லை என்று கூறும் சில போலிகளின் முகமூடிகளைக் கிழிக்கும் தரமாக வெங்கட்டின் **கல்யாணப் பரிசுகள்** என்ற ஒரு காட்சி நாடகம் அமைகிறது. கிரேஸி மோகனின் **எஸ்எல்வி மூலம்** பழமையை மிதித்துப் புதுமைக்குத் தாவும் போக்கை நகையாடுவதுடன் புதுமைக் கண்டுபிடிப்பு என்ற பெயரில் நடமாடும் போலிகளை நையாண்டி செய்கிறது.

அக்கம் பக்கம் பார்த்து அமைதியிழந்து வாழும் போக்கை கௌரிராஜன் **சோதனை** என்ற நாடகத்தின் வாயிலாகச் சுட்டிக் காட்டுகிறார். பிறரை நினைத்துப் பொறாமைப்படுவதைவிடத் தன்னை நினைத்து முன்னேற வழிகாண்பது பெரும் நன்மையைத் தரும் என்ற உண்மை வலியுறுத்திக் காட்டப்படுகிறது. தன் வீட்டு நடப்பை அடுத்த வீட்டில் சொல்லியதினால் தவறான தூண்டு தலுக்கு ஆட்பட்டு வருந்தும் ஒரு பெண்ணின் அறியாமையை **யுக்தி பலித்தது** என்ற நாடகம் ஒன்பது காட்சிகளில் விளக்கிக் காட்டுகிறது. பஞ்சகாலத்தில் பசிக் கொடுமையால் அவதிப்படும் மக்களின் மனநிலையையும் இரக்கமற்ற செயல்களையும் உணர்ச்சியுடன் விளக்கும் நாடகமாக **நகரச் சந்தியிலே**...எழுதப் பட்டுள்ளது.

பறம்பைச் செல்வன் **புல்லுருவிகள்** என்ற நீண்ட சமூக நாடகத்தை ஒரே காட்சியில் எழுதியுள்ளார். மூன்று நாட்டுப் புறத்து மக்களையும் ஒரு பதுமையையும் பாத்திரங்களாகப் படைத்துச் சமுதாயச் சிக்கல்களை அலச நாடக ஆசிரியர் முற்படு கிறார். பதுமையின் பங்கு பழைய விக்ரமாதித்தன் கதையை நினைவூட்டுவதாக உள்ளது. நாட்டுப்புறத்தில் வாழும் எளிய மக்கள் இத்தகைய உத்தியை மறுப்பின்றி விருப்புடன் ஏற்றுக் கொள்வர். அவர்களுடைய நன்மையினைக் கருத்தில் கொண்டிருப் பதினால் ஆசிரியர் கையாண்டுள்ள பாவை உத்தியை ஒப்புக்கொள் வதில் தவறில்லை. உண்மையில் நாடகத்தில் காட்டப்படும் பிரச்சனை அனைவருக்கும் பொதுவானது. இன்றைய அரசியல் வாதிகளின் தவறான போக்கையும் தந்திர உத்திகளையும் இது அம்பலப்படுத்துகிறது

அரசியல்வாதி தன் பலத்தைப் பெருக்கும் நோக்கத்துடன் மக்களுக்கு நன்மை செய்ய விரும்புவதை ஆசிரியர் விளக்கிக் காட்டு கிறார் நன்மை செய்வதற்காக இரு கட்சியினர் போட்டியிட்டுத் தங்களுடைய பகையை வளர்த்துக் கொள்வதுடன் பொது மக்களுடைய அமைதியையும் கெடுத்து விடுவதையும் நாடகம் விளக்குகிறது. பணம் படைத்தவர்களுக்குத்தான் அனைத்து உரிமைகளும் நன்மைகளும் கிடைப்பதை நயமாகச் சுட்டுகிறது. தண்ணீர் கிடையாது அவதிப்படும் அல்லி என்ற ஏழைப் பெண், 'வக்கத்த கழுதைக்கு வாண வேடிக்கை பாக்கக்கூட உரிமை இல்லடி'[3] என்று கூறுவதில் இக்கருத்தை ஆசிரியர் நுட்பமாகக் காட்டுகிறார்.

தொண்டருக்குச் சிலைவைத்து நடிகரைக் கொண்டு திறக்க முயலும் காட்சி நயமான அங்கதச் சுவையுடைய பகுதியாகும். நிலவுடமைக்காரனுக்கு அஞ்சி மக்களுக்குத் தேவையான பாதையினை அமைக்கமுடியாமல் அனைவரும் ஒதுங்கும் நிகழ்ச்சி சமுதாய நடப்பைச் சந்திக்கிழுத்து நையாண்டி செய்யும் இடமாகும். இனப்பாகுபாட்டால் காதலர் படும்பாடு விளக்கப்படுகிறது. சமுதாயப் புல்லுருவிகளை வன்மையாகக் கண்டிக்கும் நோக்கத்துடன் இந்நாடகத்தை ஆசிரியர் எழுதியுள்ளதாகக் கருதலாம். சமுதாயம் சீர்கேடடைந்து காணப்படுகிறது. அதிலுள்ள அவலங்களை மாற்றவேண்டும். இல்லையாயின் மக்களுக்கு நலமும் இல்லை நன்மையும் இல்லை என்பது நாடகத்தின் கருத்து.

**சுவரொட்டிகள்** வாயிலாக நாடக ஆசிரியர் முத்துசாமி மனித வாழ்க்கையில் காணப்படும் பொருளற்ற செயல்களைச் சுட்டிக் காட்டி வன்மையாகக் கண்டிக்கிறார். சமுதாய நிலத்தில் மக்கள் நலம் என்னும் பயிர் நன்றாக வளர, தன்னலம் பிடித்த அதிகார வர்க்கக் களையைப் பிடுங்கி எறியவேண்டும் என்பதை விளக்கிக் காட்ட 'பயிர் வளரக்களை எடுங்கள்'[3] என்று குறிப்பாகக் கூறுகிறார். உருவக முறையில் நாட்டு நடப்புகளை எடுத்துக் காட்டும் ஆசிரியர் அவற்றின் வழியாகத் தன் நோக்கங்களை வலியுறுத்த முயல்கிறார். 'சூத்திரதாரியா லட்சணமா நாடகத்தை நடத்தத் தெரியலே ஒனக்கு'[4] என்று கூறும் அடக்கக்கூற்று அவற்றுள் ஒன்று. மக்களின் இயல்பான அச்சவுணர்வை எடுத்துக்காட்டி அதைப் போக்கவேண்டும் என்ற கருத்தில் 'ஒனக்கு நீயே எதிரி'[5] என்று கூறுகிறார். நாட்டை நல்வழிப்படுத்தும் முறையாகத் தான் கருதுவதை இந்த நாடகத்தின் வாயிலாக மக்களுக்கு உணர்த்த ஆசிரியர் விரும்புகிறார்.

ரேணுதேவியின் **ஆசைகள் பலவிதம்** என்ற நாடகம் குடும்பச் சிக்கல்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது. கணவனுக்கும் மனைவிக்கும் இடையினுள்ள உறவு நெருக்கமாகவும் சுவையாகவும் இருக்க என்னென்ன முறைகளில் வாழ்க்கை நெறி அமையவேண்டும் என்பதை நாடக ஆசிரியை நாடக ஓட்டத்தின் ஊடே சிந்திக்கிறார்.

எதிரும் புதிருமான பாத்திரங்களை இணையிணையாக உருவாக்கித் தன் கருத்து விளக்கத்துக்கு உதவுமாறு அவற்றை ஆசிரியை பயன்படுத்தியுள்ளார். அவ்வாறு அமைந்த எதிராற்ற

னுடைய பாத்திர இணைகளாக வசுமதி ராதா; வசுமதி பசுபதி; பசுபதி ராஜா; சச்சிதானந்தம் எதிர்வீட்டு ஏகாம்பரம் ஆகியோரைக் கருதலாம். பெண்ணுக்குப் பெண்ணும், மனைவிக்கு கணவனும், ஆணுக்கு ஆணும் மாறுபடும் முறைகளை இத்தகைய எதிரிணைப் பாத்திரங்கள் விளக்கிக் காட்டுகின்றன.

வசுமதி கணவனைப் பார்த்து 'நீங்கள் வீட்டை ஜாக்கிரதையாப் பார்த்துக்குங்க நானும் என் பிரெண்டும் போய்ட்டு வர்ரோம்' என்று கூறுவதும், அதற்கு எதிராக ராதா வசுமதியிடம் 'அவர் கூடத்தான் நான் எப்பவும் சினிமா டிராமாவுக்குசெல்லாம் போய்ப் பழக்கம்' என்று பதில் சொல்வதும் குறிப்பிடப்பட்ட எதிரும் புதிருமான பண்புக்கு நல்ல எடுத்துக் காட்டாகும். எதிர் வீட்டு ஏகாம்பரத்தின் வாயுரையாக 'பசியா இருக்கிறவன் முன்னால் சோறு இல்லே! தின்ன முடியாம அவஸ்தைப் படறவன் முன்னாடி திண்டு திண்டா சோத்து மூட்டை'' என்று குறிப்பிடுவது உலக நடப்பியலைக் காட்சிப்படுத்துவதாக அமைகிறது. 'ஒரு குடும்பப் பெண்ணானவள் கல்யாணி இராகம் மட்டும் கற்றால் போதாது முகாரியும் கற்றிருக்கவேண்டும்'[8] என்ற கருத்தை நாடக ஆசிரியை பாத்திர உரையாடலுக்குள் புகுத்தித் தன்னுடைய படைப்பின் நோக்கத்தைப் புலப்படுத்திக் காட்டுகிறார் இல்லற வாழ்வு சுவைக்க இன்பமும் துன்பமும் கலந்தே இருக்க வேண்டும்.

ராஜா என்ற பாத்திரத்தைப் பசுபதியின் கைப்பாவை ஆக்கி அவனை வாழ்க்கையறிவு இல்லாத முட்டாளாகக் காட்டுவது சற்று முரண்பாடாகத் தோன்றுகிறது. ஆசிரியருடைய கருத்து வலிமை பெறுவதற்காக இப்படியொரு பாத்திரத்தைப் பயன் படுத்துவது நாடகத்தின் சிறப்பைக் குன்றச் செய்வதாகத் தோன்று கிறது அரசியல் சதுரங்கத்தைக் கலைப்பதும், சமுதாய, குடும்ப உண்மைகளை எள்ளி நகையாடுவதும், போலி வாழ்வை நையாண்டி செய்வதும் நாடகத்தின் பயனை நன்றாக விளக்கும். அவை சிறந்த நகைச்சுவை விருந்தாகவும் தவறுகளை உணர்த்திக் காட்டும் தந்திரவுத்திகளாகவும் உள்ளன.

**சாமியாரின் மாமியார்** என்ற நாடகம் மெரீனாவின் படைப்புத் திறனையும் வாழ்வியல் அறிவையும் விளக்கிக் காட்டுவதாகும். திருமணச் சீர்வரிசையின் கடுமையும், கொடுமையும் நாடகத்தின்

பொருளாக அமைந்து நாடகங் காண்போரின் சிந்தனைக்கு வேலை கொடுக்கிறது. அதை மிகப்பெரிய பிரச்சனையாக விளக்கி அதற்குத் தீர்வு காண ஆசிரியர் முயல்கிறார். 'இது வீட்டுப் பிரச்சனை இல்லை, நாட்டுப் பிரச்சனை'[9] என்று கூறி அதை விரிவு படுத்துகிறார்.

சேகர் என்ற இளைஞனை வெறியுடன் புகுத்தி இந்தப் பிரச்சனையை விரிவாக அலசுகிறார். சமுதாயத்தின் கடமையை வலியுறுத்திக் காட்டுகிறார். ஆனால் அந்தப் பிரச்சனைக்குத் தீர்வு காண்பதற்காக ஜெயந்தி என்ற பெண்ணை உருவாக்கி உரையாட வைக்கிறார். அவள் வாயுரையாகத் தீர்ப்பு வழங்கு வதையும் காணலாம். 'சோஷல் ஈவில், நேஷனல் பிராபிளமுன்னு சொல்லி லெக்சர் அடிக்கலாம், பேப்பர்ல எழுதலாம், அதனாலெல் லாம் இந்தக் கொடுமை போயிடாது...தனிப்பட்ட முறையிலே துணிச்சலோட இதைக் கணக்குத் தீர்த்தாகணும்.'[10] அவளைச் சொல்ல வைத்ததுடன் அமையாமல் சொன்னபடியே செய்ய வைத்து சீர்வரிசை வாங்கும் கொடுமைக்கு ஒரு முடிவை ஆசிரியர் காண்கிறார்.

மாமியாரின் கொடுமையும் நாடகத்தில் கண்டிக்கப்படுகிறது. மகனும் மாட்டுப்பெண்ணும் ஒற்றுமையாக இருந்தால் மாமியாரின் கொடுமை குறையும் என்ற உண்மையும் விளக்கப்படு கிறது.[11] மிகவும் முக்கியமான இடங்களை நகைச்சுவையுடன் விளக்கும்போது அவற்றின் அழுத்தம் குன்றாமல் வலிமை அடைவது நாடக ஆசிரியரின் திறனைக் காட்டுவதாகும்.

மெரீனாவின் **ஸ்கைலாப் சம்பந்தி** ஒரு குடும்பச் சிக்கல் நாடகமாக உள்ளது. கிருஷ்ணசாமி என்ற ஒரு பாத்திரத்தைப் படைத்து ஒரு பெரும் பரபரப்பை நாடகத்துள் ஆசிரியர் மூட்டு கிறார். திருமணத்துக்குக் காத்திருக்கும் நங்கையான அன்ன பூரணியின் வாழ்வு ஒரு பிரச்சனையாகிறது. குடும்பம் ஆடிக் காற்றில் அல்லல்படும் மரம் போன்று அசைகிறது. ஆனால் முடிவு அனைவருக்கும் இன்பமாகிறது. மலையாகத் தோன்றிய பிரச்சனை மண்ணாகப் பொடிந்து மறைந்து விடுகிறது. துன்பம் வாழ்க்கையில் வரத்தான் செய்யும். அதைக்கண்டு துவண்டு விடக் கூடாது. மனவலிமையுடன் பிரச்சனைகளை ஏற்றுத் தீர்வு காண்பதில் வாழ்வின் வெற்றி அமைந்துள்ளது.

**அடிமைகள்** என்ற நாடகத்தில் சுஜாதா மனிதன் எப்படிப் பணத்துக்கு அடிமையாகிறான் என்பதை விளக்குகிறார். இராம

நாதன் என்ற பாத்திரத்தைப் பணத்திமிரின் உருவகமாகப் படைத்துக் காட்டுகிறார். உள்ளத்தில் உண்மையின்றி மனத்தில் அமைதியின்றி அனைவரும் பணமுடையவருக்கு அடிமைகளாகிச் செயல்படுவதை அழகாக விளக்கியுள்ளார். ஆனால் அத்தகைய அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெறவே அனைவரும் நாடு கின்றனர். இதனைச் சிறப்பாக விளக்கும் நோக்கத்துடன் சாவித்திரி என்ற பாத்திரத்தின் வாயிலாக 'எனக்குக் கொஞ்சம் வெளிச்சம் தேவையா இருக்கு'[12] என்று கூறுகிறார். சேகரின் இளம் உள்ளம் சுதந்திரம் வேண்டும் என்று அலறுகிறது.[13] எவ்வளவுதான் அனுபவம் பெற்றாலும் மனிதன் அனைத்தையும் மறந்து பணத்திற்கு அடிமை ஆகிவிடுகிறான் என்பதை உணர்த்திக் காட்ட நாடகத்தின் முதற் காட்சியையும் இறுதிக் காட்சியையும் ஒன்றுபோல் அமைத்துள்ளார். ஆனால் பாத்திரங்கள் மாறி யுள்ளன. காலம் மாறும். மனிதர் மாறுவர். ஆனால் பணத்துக்கு அடிமையாகும் மனிதத் தன்மை மாறாது என்பது நாடகத்தின் கருத்து.

சமூக நாடகங்கள் பெரும்பாலும் மனிதனின் போலித் தன்மைகளை விளக்குவதாகவே எழுதப்பட்டுள்ளன. சமூக உறவு, குடும்பத்தொடர்பு, அரசியல் வாழ்வு, பெற்றோரிடம் காட்டும் பரிவு, தனிமனிதச் செயல்பாடுகள் போன்ற அனைத் திலுமே போலித்தனம் நிறைந்திருப்பதை இக்காலகட்ட நாடக ஆசிரியர் விரிவாகக் காட்டியுள்ளனர்.

தவறு செய்வதற்குத் தயங்காத மனிதர்கள் சமூகத்தில் நல்லவர் போன்று வேடமிட்டுத் திரிகிறார்கள். தங்கள் குற்றங் களை மூடிமறைத்து வாழ்கிறார்கள். அவை வெளிப்படாது இருப்பது வரை சமுதாயத்தில் மிகப்பெரிய மனிதராக வாழ்கிறார் கள். தங்கள் குறைகளை வெளிப்படுத்த முயல்வோரை எதிரி களாக மதித்து அவர்களை அழிக்கப் பாடுபடுகிறார்கள். குற்றமே செய்து குற்றவுணர்வே இன்றி நல்லவர் போன்று வாழ்ந்து சமுதாயத்தை ஏமாற்றித் திரியும் வஞ்சகர்களின் வாழ் வினையும் நாடகங்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன.

போலியாக விளம்பரம் செய்து சிறு செயலைப் பெருஞ்செய லாகக் காட்டும் போக்கை எள்ளி நகையாடும் நாடகமும் உள்ளது. இதைக் காலத்தின் கோலம் என்று கருதி விடுவதினால் சமுதாயம் அடையும் சீர்கேட்டினையும் சீரழிவையும் வருத்தத்துடன் ஆசிரியர் எடுத்துக்காட்டுகிறார்.

பிறரை ஏமாற்றல், வாக்குத்தவறல், பொய்யுரை கூறல், வேலையின்றி அலைதல், பிறரை மிரட்டிப் பணம் பறித்தல், பிற பெண்களை நாடல், மாணவ உணர்ச்சியில் வேகமாகச் செயல் படல், பிறரைக் குறைகூறல், கொடுமையாகச் சீர் வரிசை பெறல், பணத்துக்கு அடிமையாதல் முதலிய பலவிதமான குறை கள் நாடகங்கள் வாயிலாக எடுத்துக் காட்டப்படுகின்றன. நெறிப் படுத்தல், ஆறுதல் கூறல், பொறுமை வேண்டல் போன்ற அறிவோர் செயல்களும் இடம்பெற்றுள்ளன. நடப்புச் சமுதாயத் தின் போக்கை உணர்ந்து கொள்ளும் வாழ்க்கைப் படங்களாக இந்தச் சமூக நாடகங்கள் அமைந்துள்ளன. பெரும்பாலும் சமூகச் சீர்கேட்டைத்தான் இந்த ஆண்டிலுள்ள நாடகங்களில் காண முடி கிறது.

பூவண்ணன் எழுதிய வளவன் பரிசு முன்னிலக்கிய உண்மை களைத் தழுவிக் கற்பனைக் கலவையுடன் படைக்கப்பட்டதாகும். கடியலூர் உருத்திரங் கண்ணனார் பட்டினப்பாலை பாடியதற் காகக் கரிகால் சோழனால் கட்டப்பெற்ற பரிசு மண்டபத்தைப் பின்னாளில் நடந்த போரில் பாண்டியர் அழித்து விடாது இளவரசன் இராசேந்திரனும், அன்னம் என்ற பெண்ணும், தாமரைக் கண்ணன் என்ற இளம் புலவனும் காத்ததே வளவன் பரிசு நாடகமாக விரிந்து சிறந்துள்ளது. இது தமிழ் இலக்கியத் தின் பெருமை, தமிழ்மொழிப்பற்று, தமிழ் மன்னர் புலவர்களை ஆதரித்த தகைமை ஆகியவற்றை விளக்கிக் கூறுகிறது.

கி. பி. 1218 ஆம் ஆண்டு மூன்றாம் இராசகேசரி இராசராசர் சோழ அரியணை அமர்கிறார். அப்போது இராசேந்திரன் இளவரசனாக இருக்கிறான். அதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன் சுந்தரபாண்டியன் பாண்டிய மன்னனாக ஆட்சி பீடம் ஏறுகிறான். இரு நாட்டுக்கும் இடையே பகை ஏற்பட்டு விடுகிறது. ஆகையி னால் போர் மூழ்கிறது. பாண்டியன் சோழ நாட்டுக்குள் புகுந்து அனைத்தையும் அழிக்கிறான். ஆனால் கண்ணன் மண்டபத்தை அவனால் அழிக்க முடியவில்லை. இதனையே நாடகம் விளக்கு கிறது.

நாடகத்தின் இடை நடுவே ஆசிரியர் விரும்பிய கருத்துக்களை இடங்கண்டு விதைத்துச் செல்வதைக் காணலாம். பழைய பாடல் களைச் சிலர் வழுவுடன் படிப்பதைக் குறைகூறித் திருத்துகிறார். அதற்காகத் தாமரைக்கண்ணன் என்ற இளம் புலவரின் வாயி

லாகப் பேசுகிறார். 'புலவர் பாடல் பொதுச் சொத்துதான்; ஊர்க் கிணறு போல! யார் வேண்டுமானாலும் அதன் நீரைப் பருகித் தாகத்தைத் தணித்துக் கொள்ளலாம் ஆனால் அக் கிணற்றை மாசுபடுத்த யாருக்கும் உரிமை.'[14] அதேபோன்று பழம் பாடல்களைப் பாடும் உரிமை இருக்கிறதென்று யாரும் பிழைபடப் பாடுதல் கூடாது. இவ்வாறு பல கருத்துக்கள் கூறப்படுகிறது.

புத்தனேரி சுப்பிரமணியம் படைத்துள்ள நாட்டிய நாடகமான **முந்தமிழ் காத்த முத்தழகி** வேள்விக்குடிச் செப்பேடுகள் குறிப் பிடும் வரலாற்று நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டது. இந்த நாடகத்தில் இடம்பெறும் பாண்டியன் நெடுஞ்சடையன்' கொற்கை வேந்தன் நற்சிங்கன் ஆகியோர் வரலாற்றில் இடம் பெறும் பாத்திரங்கள் நற்சிங்கனின் மகளாக வரும் முத்தழகி ஆசிரியரின் கற்பனையில் பிறந்தவள். அவள் வீர முகிழ்ப்புடன் பகைவரிடமிருந்து பழந்தமிழ்ச் சுவடிகளைக் காத்துத் தந்தையின் உதவியுடன் பாண்டிய மன்னனிடம் ஒப்படைத்ததை இந்த நாடகம் விளக்குகிறது.

பாண்டியன் நெடுஞ்சடையன் இளந்தாடி வேல்மருதனாக மாறுவேடம் பூண்டு முத்தழகியைச் சந்திக்கிறான். அவனை அவள் காதலிக்கிறாள். அவளுடைய வீரத்தையும் காதலையும் ஒரே பாடலில் விளக்கிக்காட்ட ஆசிரியர் முயல்கிறார். முகமூடி யணிந்த பகைவன் பதுங்கி வந்து இளந்தாடியுடைய வேல் மருதனைக் குத்தி விடுகிறான். காயம்பட்ட கரத்திலிருந்து குருதி பாய்வதைக் கண்டு விரைந்து வருகிறாள் முத்தழகி. அவளுடைய செயலை அழகான பாடலாக ஆசிரியர் பாடுகிறார்.

'மறைந்து விட்டான் முகமூடி
மயக்க முற்றான் இளந்தாடி
உறைந்து போன உணர்ச்சியிலே
ஓடி வந்த வீரமகள்
பிரிந்து வந்து ரத்தக் காயம்
பீறிட்ட கரத்தினிலே
விரைந்து தனது துணி கிழித்து
வேகமாகக் கட்டுப் போட்டாள்'[15]

முத்தழகியின் பண்பை நற்சிங்கன் வாயிலாக விளக்கிக் காட்டும் பாடலையும் காணலாம்.

'நடனமும் பாட்டும் தெரிந்த மகள்
நாட்டுப் பற்றிலும் சிறந்த மகள்
கடமையை நன்றாய் உணர்ந்த மகள்—என்
கண்ணினும் இனியவள் முத்தழகி'[16]

என்று பாடுவதில் முத்தழகியின் கலைத்திறன். நாட்டுப்பற்று, பண்புநலன் ஆகியவை விளக்கப்படுகின்றன. செவிக்கினிய பாடல்களால் கண்ணுக்கினிய நாட்டிய நாடகம் மனத்துக்கினிய கருத்துக்களால் உருவாக்கப்பட்டுள்ளது.

இலக்கியத் தழுவல் நாடகங்கள் பண்டைத் தமிழ் இலக்கியப் பெருமையையும் பண்பாட்டையும் விளக்குவதை இன்றைய தமிழர் விரும்புகின்றனர். பழம் பெருமையை நினைத்து மகிழும் போக்கை இது காட்டுகிறது. நாட்டிய நாடகங்கள் மக்களின் கலை ஆர்வத்தைப் புலப்படுத்தும் சாதனங்களாக விளங்குகின்றன. இசை, நாட்டியம், நாடகம் ஆகிய அருங்கலைகளைச் சுவைத்து மகிழும் கலை ஆர்வலர்களுக்கு இவை நல்ல விருந்தாக அமையும்.

## கலைச்சிறப்பு

நாடகங்களில் அமைந்துள்ள கலைத்தன்மையினை அறிய மேடையே சிறந்த இடமாக உள்ளது. அச்சில் பார்க்கும் நாடகங்கள் இலக்கியச் சுவையினை மாத்திரம் ஊட்டுவன ஆகும். ஆனால் மேடையில் காணும் நாடகங்கள் பல்வேறு சுவைகளைப் பக்குவமாகப் பெருக்கி அவற்றின் கலைத்தன்மைகளை உண்மையாகப் புலப்படுத்தும். எண்பதாம் ஆண்டு பல இடங்களில் பல்வேறு நாடகங்கள் மேடை ஏற்றப்பட்டுள்ளன.

சோதனை நாடகங்களாக (பரீக்ஷா) **நாற்காலிக்காரர், முட்டை, சுவரொட்டிகள், போர்வை போர்த்திய உடல்கள்** போன்றவை நடிக்கப்பட்டன. இவற்றில் சில நாடகங்கள் குறிப்பிட்டுள்ள ஆண்டுக்கு முன்பே எழுதப்பட்டு நடிக்கப் பெற்றவை. இருப்பினும் இந்த ஆண்டும் அவை மேடையேறின. மக்கள் அவற்றைக் கருத்துகளுக்காக விரும்பினர். கலையை விடவும் இத்தகைய நாடகங்கள் கூறும் பொருளுக்கே சிறப்பிடம் கொடுத்தன. உலக நடப்பை நடப்பதுபோல் காட்டி நல்வாழ்வுக்கு வழிகாட்ட வேண்டும் என்பது இத்தகைய நாடகங்களை நடத்துவோரின் நோக்கம். பரீக்ஷா நாடகங்கள் போன்று சென்னைக் கடற்கரையில் வீதி நாடகங்கள் நடத்தப்பட்டன.

இவை திறந்தவெளி நாடகங்களாக உள்ளன. மதுரையில் நிஜ நாடகங்கள் மக்கள் மத்தியில் மிக எளிய முறையில் அரிய கருத்துக் களை ஊட்டும் தரமாக நடிக்கப்பட்டன. இத்தகைய நடிப்பு முறையைக் கொண்டே கூத்துப்பட்டறை நாடகங்கள் சென்னையில் நடத்தப்பட்டன.

இத்தகைய நாடகங்கள் மேடையை நாடுவதில்லை. நடிகர்கள் ஒப்பனையில் அதிகக் கவனம் செலுத்துவதில்லை. நாடகத்தின் துணைக் கலைகளான நாட்டியம், இசை, ஒப்பனை ஆகியவற்றுக்கு அதிக இடம்கொடுக்காமல் உணர்த்த வேண்டிய கருத்துக்களுக்கு உயரிய இடம் கொடுத்து விரும்பும் சமுதாய மாற்றத்துக்கு முயல் வதாகவே இம்மாதிரி நாடகங்கள் அமைகின்றன.

ஒலி, ஒளிக்காட்சிகள் என்ற ஒருவகை நாடகத்தைக் தமிழ்நாடு செய்திமக்கள் தொடர்புத்துறை நாட்டின் சில இடங்களில் நடத்திக் காட்டியது பெரியாரின் வாழ்க்கை வரலாறு இந்த ஆண்டு அரிய முறையில் இவ்வகை நாடக அமைப்பில் நடித்துக் காட்டப்பட்டது. பலமேடைகள் சிறிதும் பெரிதுமாக இருக்கும். ஒலி, ஒளி ஆகியவை சரியான முறையில் கட்டுப்படுத்தப்பட்டுப் பொருத்தமாக வெளியிடப்படுவதில் இத்தகைய நாடகங்களின் சிறப்பு அமைந்துள்ளது சென்னை, தஞ்சை, வேலூர், திருச்சி ஆகிய இடங்களில் ஒலி. ஒளிக் காட்சிகள் மிகச் சிறப்பாக நடத்தப் பட்டன.

## மேடையில் நாடகம்

**அடிமைகள்** என்ற நாடகத்தைச் சென்னையில் பல சபாக் ளின் ஆதரவில் பூரணம் விஸ்வநாதன் குழுவினர் நடத்தினர். மேலும் திருச்சி, கோவை, சேலம், பாண்டிச்சேரி, பம்பாய், பங்களூர், சூரத், பரோடா, அகமதபாத் ஆகிய இடங்களிலும் இந்த நாடகம் மக்களை மகிழ்வித்தது. **சாமியாரின் மாமியார்** என்ற நாடகம் சென்னையில் பலரின் பாராட்டுதலைப் பெற்றது. அதன் ஆசிரியரே நடிகர்களுக்குப் பயிற்சி கொடுத்து நாடகத்தை மேடை ஏற்றியுள்ளார். கலைக்கும் கருத்துக்கும் சிறப்புக் கொடுத் தமையால் அது விருந்தாகவும் மருந்தாகவும் அமைந்து சமூகத் துக்கு நன்மையுணர்வை நயமாக ஊட்டியுள்ளது.

சென்னையில் சிறந்த மேடையமைப்புகளுடன் செக்கு மாடுகள், சத்திய பீடம், வேலி, ஓரத்துப் பூக்கள், 61 வயதினிலே, வாஷிங்டனில் திருமணம், சுபமுகூர்த்தப்

பத்திரிகை, ஒட்டக்கூத்தர், கடல்நிலா, செக்ஷன் 302, மனிதர்கள் மாறலாம், வாய்ப்பந்தல், கல்தூண், தியாக ராஜ சரித்திரம், மகாபாரதத்தில் மங்காத்தா, எங்கிருந்தோ வந்தாள், நட்சத்திர இரவு, மண்ணின் மைந்தன், சுருதி மாறாத கீதம், அல்லாவுதீன், திடீர் மனைவி, பாட்டு ஒன்று ராகம் ரெண்டு, கீழ்வானம் சிவக்கும், யார் தருவார் இந்த அரியாசனம்?, நகரத்தில் நாரதர், ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்ட், வாணவேடிக்கை, கரைக்கு அலைகள் சொந்தமில்லை, பிப்டிபிப்டி, அழியாத பாவங்கள், ஏலேலோ ஐலசா, அன்புக்கு ஓர் அன்னை, சூரபத்மன், சனீஸ்வரன், ஒரு மனைவி உருவா கிறாள், தண்ணீர் தண்ணீர், மிட்நைட், இலங்கேஸ் வரன், மோடி மஸ்தான், மாலிக்காபூர், சாணக்கிய சபதம், பரசுராமர், எம்பெருமானார் தரிசனம், இம்சை கள், ஒரு கொலை ராகம், ரகசியம் பரம ரகசியம், வெங்கடேஸ்வர உபன்யாசம் பரிச்சைக்கு நேரமாச்சு, பட்ட மரம் துளிர்க்கும், கியர் இஸ் காசி போன்ற பல நாடகங்கள் பல்வேறு சபாக்களின் வேறு வேறு நாடகக் குழுக்களால் பலமுறை நடிக்கப்பட்டுள்ளன. இந்த நாடகங்களின் பெயர்களே அவற்றின் தரத்தினையும் சமுதாயத்தின் தன்மையினையும் ஓரளவு தெளிவு படுத்திக் காட்டும் முறையில் அமைந்துள்ளன.

கோயம்புத்தூர், காஞ்சீபுரம், மதுரை, பாண்டிச்சேரி ஆகிய இடங்களில் மகாபாரதத்தில் மங்காத்தா நடத்தப்பட்டது. **சாமியாரின் மாமியார்** ஈரோடு, கோவை ஆகிய இடங்களிலும் செக்கு மாடுகள் திருச்சி, சிவகாசி, நாகர்கோவில் முதலிய இடங் களிலும் சிறப்பாக நடந்துள்ளன. பம்பாய் நகரில் **சொர்க்கபூமி, தண்ணீர் தண்ணீர்,** செக்குமாடுகள் போன்ற நாடகங்கள் நடிக்கப்பட்டன. **சத்தியபீடம்** என்ற நாடகம் திருப்பூர், உடுமலைப்பேட்டை, பொள்ளாச்சி, கோவை ஆகிய இடங்களில் மேடையேறி நல்ல மதிப்பைப் பெற்றுச் சிறந்துள்ளது. **கீழ்வானம் சிவக்கும்** என்ற நாடகம் கோலார், பெங்களூர் போன்ற இடங் களில் மேடை ஏறின. சில தமிழ் நாடகங்கள் வெளி மாநிலங்களி லும் வரவேற்கப்பட்டிருப்பது அவற்றின் சிறப்பைக் காட்டும். சென்னையில் எத்தனையோ நாடகங்கள் அரங்கேறி இருக்க அவற்றுள் ஒரு சிலவே வேறிடங்களில் மேடை ஏறிப் புகழ்பெற்றுள்

ளன. இதிலிருந்து அவற்றின் தரத்தை ஓரளவு அறிந்து கொள்ளலாம். மக்களின் நேரத்தைப் போக்குவதற்காகவும், எந்த முறையிலாவது சிரிப்பை மூட்டிக் கொக்கரிக்கச் செய்வதற்காகவும் எழுதப்படும் நாடகங்களுக்கு ஆயுள் மிகக் குறைவு. அவை பிறந்த இடத்தை விட்டு நகருவது மிகக் கடினம். கலைத் தன்மையும் கருத்துச் சிறப்பும் நாடகத்தின் சிறப்புக்கு முக்கிய காரணங்களாக அமைகின்றன.

## நாடக சபாக்கள்

நாடகக் கலையை நன்கு ஆதரிக்கும் அமைப்புகளில் மிகச் சிறந்ததாகச் சபாக்களைக் கூறலாம். சென்னையில் சுமார் இருபத்தைந்து சபாக்கள் இருக்கின்றன. அவை இசை, நடனம், நாடகம் ஆகிய முக்கலைகளுக்கும் முழு ஆதரவு கொடுக்கும் சாதனங்களாகக் காணப்படுகின்றன. குறிப்பாக கிருஷ்ண கான சபா, ராஜேஸ்வரி பைன் ஆர்ட்ஸ், (Rajeswari Fine arts) பிரண்ட்ஸ் பாரடைஸ் (Friends paradise), பிரம்மகான சபா, கலா நிகேதன், கச்சாலீஸ்வர சபா, எக்மோர் ஆர்ட்ஸ் அகாடமி (Egmore arts academy) முல்லை கலை மன்றம், பிரபாத் கல்சுரல், (prabath cultural) நாரத கான சபா, பிரண்ட்ஸ் கல்சுரல் (Friends cultural society) சொசைட்டி, தி நகர் ஆர்ட்ஸ் அகடாமி, கலா ரஞ்சினி, சக்தி ஆர்ட்ஸ் அகடாமி போன்றவை நாடகக் கலைக்கு மிகச் சிறப்பான ஆதரவைக் கொடுக்கின்றன.

மேலும் ஈரோட்டில் ஈரோட்டு கல்சுரல் சபாவும் (cultural sabha) திருப்பூரில் தமிழிசைச்சங்கமும், உடுமலைப்பேட்டையில் உடுமலை பைன் ஆர்ட்ஸ் சபையும் (Fine arts sabha) பொள்ளாச்சியில் பொள்ளாச்சி தமிழிசைச் சங்கமும், சிவகாசியில் சிவகாசி ஆர்ட்ஸ் கிளப்பும் (arts club), மதுரையில் மதுரை சங்கீதாவும், சேலத்தில் சேலம் அமெச்சூர் ஆர்ட்ஸூம், (amateur arts) கோயம்புத்தூரில் கோவை பைன் ஆர்ட்ஸூம் (kovai fine arts) தமிழ்நாட்டில் நாடகங்களுக்கு ஆதரவு கொடுக்கின்றன. பாண்டிச்சேரியில் பாண்டிச்சேரி பைன் ஆர்ட்ஸூம், (Pondichery fine arts) பம்பாயில் தமிழ்ச் சங்கமும், பெங்களூரில் கலாராதன சபாவும் தமிழ்நாடகங்களுக்கு ஆதரவு கொடுக்கின்றன. டிசம்பர் திங்களில் நடைபெறும் கலை விழாக்களில் நாடகத்துக்கும் தகுந்த இடம் கொடுத்துள்ளதைச் சிறப்பாகக் குறிப்பிட்டுக் காட்டத்தான் வேண்டும். இவை தவிர நாடக விழாக்களைச் சிறப்பு நிகழ்ச்சியாக நடத்தியுள்ளனர். ஆயி

னும் 1965 முதல் 1975 வரையுள்ள பத்து ஆண்டுகளிலுள்ள சிறப்பு அதற்குப் பின்னால் நாடகத்துக்கு இருப்பதாகக் கூற முடியாது. அத்தகைய சிறப்பை நாடக சபாக்கள் கொடுக்க முன்வர வேண்டும் என்று விரும்புவோம்.

## நாடகக்குழுக்கள்

கலைச் சிறப்புடனும் புதுமையாகவும் நாடகங்களை நடத்த வேண்டும் என்று பல கலைஞர்கள் முயல்கின்றனர். புராண நாடகங்களைப் புது உத்தி முறைகளுடன் மேடை ஏற்றி ஆர்.எஸ். மனோகர் புகழ்பெற்றார். இவருடைய நேஷனல் தியேட்டர்ஸ் (National Theatures)குழு மிகவும் கட்டுப்பாட்டுடன் நாடகங்களை நடத்தின. ஹெரான் இராமசாமி தன்னுடைய ஹெரான் தியேட்டர்ஸின் வாயிலாகப் பல நல்ல நாடகங்களை நடத்தி வருகிறார். நமது பண்டைய சிறப்புக்கள் கலாச்சாரம் ஆகியவற்றைத் தன்னுடைய புராண வரலாற்று நாடகங்களைக் கொண்டு சிறப்பாக வெளிப்படுத்த வேண்டும் என்பது இந்தக் குழுவின் நோக்கமாக உள்ளது.

எஸ் வி.சகஸ்ரநாமம் தன்னுடைய சேவாஸ்டேஜ் குழுவைக் கொண்டு பல அரிய நாடகங்களைப் புதிய முறையில் நடத்திக் காட்டியுள்ளார். சோ, இராமசாமி ஒரு சிறந்த நாடகக் குழுவை அமைத்து அதனைக் கொண்டு நாட்டையும் அரசியலையும் சீர்திருத்தி மக்களைச் சிந்திக்கத்தூண்டும் நல்ல அங்கத நாடகங்களை மேடை ஏற்றிப் புகழ் பெற்றுள்ளார். இன்னும் சில நாடகக் குழுக்கள் பல நாடகங்களை அரங்கேற்றித் தம் பங்கைத் தமிழ் நாடக வளர்ச்சிக்குச் செய்துள்ளன.

## நாட்டுப்புறத்தில் நாடகம்

நாட்டுப்புறங்களில் பாடல்கள் நிறைந்த பல நாடகங்களை இந்த ஆண்டும் சிறப்பாக நடத்தியுள்ளனர். அம்மன் விழாக்கள் நடக்கும்போதுஇத்தகைய கூத்துக்கள் நடக்கின்றன. உடையப்பா, மணிமுத்து பாகவதர் போன்றோர் மிகவும் ஈடுபட்டுப் புராண நாடகங்களைக் கூத்தாக நடத்தி வருகின்றனர். மதுரையிலுள்ள தமிழ்நாடு நடிகர் சங்கத் தலைவரான எம். ஏ மஜீத் புராண நாடகங்களான **வள்ளி திருமணம், பவளக்கொடி, பிரகலாதா, சந்தியவான் சாவித்திரி** போன்றவற்றை, நாட்டுப்புறக் கோயில் விழாக்களில் நடத்துவதை மிகவும் ஆதரித்து வருகிறார். பழமை இவற்றின் வாயிலாகப் பாதுகாக்கப்படுகிறது. புதுமையும் இடை

யிடையே புகுத்தப்படுகிறது. தர்மராஜா கோவில், திரௌபதி யம்மன் கோவில் விழாக்களில் **பாரதக்கூத்து** நடைபெறுகின்றது.

ஏசுபெருமான் பிறப்பைக் கொண்டாடும் முகமாக அவருடைய பிறப்பு நிகழ்ச்சியைப் பள்ளிகளிலும் தேவாலயங்களிலும் நடத்து கின்றனர். பள்ளிச் சிறுவர்கள் நடிப்பது மிகவும் சுவையாக அமைந்துள்ளதைக் காணலாம். நகரங்கள் புதுமை நாடகங்களை வளர்க்கும்போது நாட்டுப்புறங்கள் பழமை நாடகங்களைக் காத்து வருகின்றன.

## நாடகத்தை ஆதரிக்கும் சாதனங்கள்

நாடகத்தை ஆதரிக்கும் பல சாதனங்கள் தமிழ்நாட்டில் உள்ளன. அவற்றில் முக்கியமாக வானொலி, தொலைக்காட்சி ஆகியவற்றைக் கருதலாம். வானொலி சிறிதும் பெரிது'மாகப் பல நாடகங்களை நடித்து மக்களின் செவிகளுக்கு எட்டும்படி செய் கிறது. தொலைக்காட்சி கண்ணுக்கும் காதுக்கும் சுவைகூட்டும் நல்ல சாதனமாக உள்ளது. உணர்ச்சிமிக்க நாடகங்கள் காட்டப் பட்டுள்ளன.

இதழ்களும் நாடகக் கலைக்கு உதவும் சாதனமாக உள்ளது. **சபாநாயகன்'** என்ற திங்கள் இதழ் நாடகக் கலைக்காகவே நடத்தப்பட்டு வருகிறது. எண்பதாம் ஆண்டு சென்னையில் நடந்த அனைத்து நாடகக் குறிப்புகளும் அந்த இதழில் இடம் பெற்றுள்ளன. வெளியூர்களில் நடந்த நிகழ்ச்சிகள் பற்றியும் தகவல் எட்டியுள்ள அளவில் செய்திகளைத் திரட்டித் தந்துள்ளது. **தினமணிச்சுடர்** வாரந்தோறும் நாடகங்கள் பற்றிய செய்திகளை யும் கருத்துரைகளையும் தருகின்றது.

**ஆனந்த விகடன்** எண்பதாம் ஆண்டு **நாடக** ஸ்பெஷல் என்று ஒரு இதழை வெளியிட்டு நாடகத்துக்குத் தன் ஆதரவைத் தெரிவித்தது. அதில் ஒன்பது ஓரங்க நாடகங்களும் சில துணுக்குச் செய்திகளும் இருந்தன. பல அரிய கருத்துக்களை எதிர்பார்த்தவர் கள் ஏமாற்றம் அடைந்தனர் என்பதைக் கூறாமல் இருக்கமுடி யாது. முன்னணியிலிருக்கும் இந்த வார இதழ் இன்னும் சிறப்பாக ஒரு நாடக மலரை வெளியிட்டு அரியபெரிய செய்திகளைத் திரட்டித் தந்து நாடகக் கலைக்குத் தன் சேவையைச் செய்யும் என்று நம்புவோம்.

அந்த ஆண்டு தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம் நாடகக் கலையை நன்றாக ஆதரித்ததைக் குறிப்பிடத்தான் வேண்டும். புதுடெல்லியில் நடந்த நடிப்புக் கலைகளின் எதிர்கால நிலைபற்றி ஆராய்ந்த மாநாட்டுக்குத் தன்னுடைய சார்பில் அறிஞர்களை அனுப்பி வைத்தது தமிழ் நாடகம்பற்றி அங்கு ஆராயப்பட்டது. கலைமுன்னேற்றத்துக்கான பல்வேறு ஆலோசனைகள் அந்த மாநாட்டிலிருந்து இந்திய அரசுக்கு அனுப்பி வைக்கப்பட்டன. நாடகக் கலைக்கு நல்ல முன்னேற்றத்தை எதிர் பார்க்கலாம். தமிழ் நாடகத்துக்கு எண்பதாம் ஆண்டானது தன்னுடைய பங்கைக் குறைவற்ற முறையில் செய்துள்ளதாகக் கருதலாம்.

## அடிக்குறிப்புகள்

1. கௌரிராஜன், 'பொங்கலோ பொங்கல்', **மஞ்சரி** (ஜனவரி, 1980) காட்சி1, பக். 27-32.

2 பறம்பைச் செல்வன், **புல்லுருவிகள்**, (சென்னை- சென்னை புக் ஹவுஸ், ஏப்ரல். 1980) ப. 28

3. முத்துசாமி, ந., **சுவரொட்டிகள்**, க்ரியா, சென்னை, (ஏப்ரல், 1980) ப. 5.

4. மேற்படி, ப. 8.

5. மேற்படி, ப. 30.

6. ரேணுதேவி. கே., **ஆசைகள் பலவிதம்**, தொடர் நாடகம், **சபாநாயகன்** [**மாத இதழ்**], (1980) காட்சி 5.

7. மேற்படி, காட்சி 11.

8. மேற்படி, காட்சி 18.

9. மெரீனா, சாமியாரின் மாமியார், தொடர் நாடகம் **ஆனந்த விகடன்** [வார இதழ்], (1980) காட்சி 3.

10. மேற்படி காட்சி 21.

11. மேற்படி காட்சி 24.

12. சுஜாதா, **அடிமைகள்**, நாகப்பட்டினம், குமரிப் பதிப்பகம் (பெப்ரவரி 1980), ப. 41.

13. மேற்படி ப 52.

14. பூவண்ணன், **வளவன் பரிசு**, (சென்னை-29), நறுமலர்ப் பதிப்பகம்,டிசம்பர், 1980) காட்சி 1., பக். 9.

15. புத்தனேரி, ரா. சுப்பிரமணியம். **முத்தமிழ் காத்த முத்தமழ** (சென்னை-தமிழ்க்குடில், டிசம்பர், 1980), ப. 33.

16. மேற்படி, ப. 45,

## பிற்சேர்க்கை

# 1980-இல் வெளிவந்த தமிழ் நாடகங்கள்

| எண் | நாடகத்தின் பெயர் | ஆசிரியர் | பதிப்பு | இடம் |
|---|---|---|---|---|
| 1. | அக்கினிப் பிரவேசம் | மு. செல்வராசன் | தமிழரசி பதிப்பகம் | சென்னை |
| 2. | அடிமைகள் | சுஜாதா | குமரிப் பதிப்பகம் | நாகப்பட்டினம் |
| 3. | அம்மா அப்பா விளையாட்டு (ஓரங்கம்) | விசு | ஆனந்தவிகடன் 17-8-1980 | சென்னை |
| 4. | ஆசைகள் பலவிதம் (தொடர் நாடகம்) | கே. ரேணுதேவி | சபாநாயகன் | சென்னை |
| 5. | இமேஜ் (ஓரங்கம்) | கோமல் சுவாமிநாதன் | ஆனந்தவிகடன் 17-8-1980 | சென்னை |
| 6. | எஸ்எல்வி மூலம் (ஓரங்கம்) | கிரேஸி மோகன் | ஆனந்தவிகடன் 17-8-1980 | சென்னை |
| 7. | ஐந்து தமிழிசை நாட்டிய நாடகங்கள் | பதி. வ வேணுகோபாலன் | தஞ்சை சரசுவதி மஹால் நூல்நிலையம் | தஞ்சாவூர் |
| 8. | கல்யாணப் பரிசுகள் (ஓரங்கம்) | வெங்கட் | ஆனந்தவிகடன் 17-8- 980 | சென்னை |
| 9. | கெடுதல்கள் (ஓரங்கம்) | சௌந்தர்யன் | ஆனந்தவிகடன் 17-8-1980 | சென்னை |
| 10. | சாமியாரின் மாமியார் (தொடர் நாடகம்) | மெரீனா | ஆனந்தவிகடன் | சென்னை |
| 11. | சுவரொட்டிகள் | ந. முத்துசாமி | க்ரியா ஏப்ரல் 198) | சென்னை |
| 12. | சோதனை (ஓரங்கம்) | கௌரிராஜன் | மஞ்சரி, மே 1980 | சென்னை |
| 13. | நகரச் சந்தியிலே... (ஓரங்கம்-மூலமொழி-வங்காளி) | தமிழாக்கம்: வாசிங்டன் | மஞ்சரி, ஆகஸ்ட் 1980 | சென்னை |

| எண் | நாடகத்தின் பெயர் | ஆசிரியர் | பதிப்பு | இடம் |
|---|---|---|---|---|
| 14. | நல்லவன் | பூதலூர் முத்து | வானதி பிரசுரம் | சென்னை-17 |
| 15. | பாரதியைப் பார்த்தீங்களா? (ஓரங்கம்) | ஜி. கே. | ஆனந்தவிகடன் 17-8-1980 | சென்னை-20 |
| 16. | பிள்ளையார் சுழி | ஜெயங்கொண்டான் | வானதி பிரசுரம் | சென்னை-17 |
| 17. | புல்லுருவிகள் | பறம்பைச் செல்வன் | சென்னை புக் ஹவுஸ் ஏப்ரல் 1980 | சென்னை-21 |
| 18. | பொங்கலோ பொங்கல் (ஓரங்கம்) | சௌரிராஜன் | மஞ்சரி, ஜனவரி 19:0 | சென்னை |
| 19. | மங்களம் உண்டாகட்டும் | பி.எல். ராஜேந்திரன் | முருகன் நிலையம் | சென்னை-20 |
| 20. | மத்தாப்பு வாங்க பணம் வந்துருச்சி (ஓரங்கம்) | மௌலி | ஆனந்தவிகடன் 17-8-1980 | சென்னை-26 |
| 21. | மலரத் தவித்த மொட்டு | விசயலக்குமி நவநீதன் | குறிஞ்சி மலர் வெளியீடு | மதுரை-1 |
| 22. | மாறிய கண்ணோட்டம் (ஓரங்கம்) | ஐஸ்வர்யன் | ஆனந்தவிகடன் 17-8-1980 | சென்னை—20 |
| 23. | முத்தமிழ் காத்த முத்தழகி (நாட்டிய நாடகம்) | புத்தனேரி ரா. சுப்பிர மணியம் | தமிழ்க்குடில் | சென்னை—18 |
| 24. | யுக்தி பலித்தது (ஓரங்கம்) | கௌரிராஜன் | மஞ்சரி, செப்டம்பர்1980 | சென்னை |
| 25. | வசந்தமல்லி | சு. சம்பந்தமூர்த்தி | தல்லாகுளம் | மதுரை—2 |
| 26. | வடக்கிருந்தான் | கு. திருமேனி | கோவல நிலையம் | திருச்சி—6 |
| 27. | வந்தவன் | சுஜாதா | ஆனந்தவிகடன் 17-8-1980 | சென்னை—20 |
| 28. | வளவன் பரிசு | பூவண்ணன் | நறுமலர் பதிப்பகம் டிசம்பர் 1980 | சென்னை—29 |
| 29. | ஸ்கைலாப் சம்பந்தி | மெரீனா | பூரம் பப்ளிகேஷன்ஸ் | சென்னை—34 |

# எண்பதில் சிறுபத்திரிகைகள்

**வீ. அரசு**

மக்கள் தம்முள் தொடர்பு கொள்வது என்பது அவர்களது தேவை அடிப்படையில் நடைபெறுவதாகும். தேவைகள் போதிய அளவில் கிடைக்காதபோது போராட்டங்கள் தவிர்க்க முடியாத தாக வடிவம் பெறும் இவ்வகையான போராட்ட வாழ்விற்கு, மக்கள் தொடர்புச் சாதனங்கள் பெரிதும் உதவுகின்றன. இவ் வகைத் தொடர்புச் சாதனங்களில் ஒன்றுதான் சிறுபத்திரிகைகள். மக்களின் சமூக பொருளாதார அரசியல் வாழ்க்கையில் பத்திரிகை கள் குறிப்பிடத்தக்க இடம்பெற்றுள்ளன. இந்திய விடுதலைப் போராட்டத்தில், 'சுதேசமித்திரன்', 'தேசபக்தன்', 'இந்தியா', தமிழ்நாடு' போன்ற பத்திரிகைகள் சிறப்பாகப் பணியாற்றின.

தமிழில் வேகமான சமூக உணர்வுடன் ஆயிரத்துத் தொள்ளா யிரத்து முப்பதிற்குப் பின்தான் பத்திரிகைகள் வரத்தொடங்கின. இதற்கு முன் மிகக் குறைந்த அளவில்தான் தமிழில் பத்திரிகைகள் வெளிவந்தன. இவ்விதம் வெளிவந்த பத்திரிகைகள் அனைத்தும் தமக்கென ஒரு குறிக்கோளை முன்வைத்துப் போராடின. 'இந்திய விடுதலை' என்பதே பெரும்பகுதி அக்குறிக்கோளாக இருந்தது. இவ்விதம் பெரும் பகுதி நாளிதழ்களாக மட்டும் இருந்த தமிழ்ப் பத்திரிகை உலகம், நாளடைவில் வார இதழ்கள், மாத இதழ்கள் என்ற போக்கில் வளர்ச்சி பெற்றன. இவ்வகைப் பத்திரிகைகளில், பெரும்பகுதி மாத இதழாக வந்தவை, சிறு பத்திரிகைகள் என அழைக்கப்படுகின்றன. சிறுபத்திரிகை என்ற தொடர் எந்தக் காலகட்டத்தில் வழக்கிற்கு வந்தது என்பதை அறுதியிட்டுக் கூற இயலாவிடினும், அத்தொடர் தரும் பொருட்

பின்புல அடிப்படையில், மிகுதியான பத்திரிகைப் பெருக்கத்திற்குப் பின்னரே வந்திருக்க வேண்டும் என்று கூற இயலும். இவ்வகைப் பத்திரிகைகளின் தனித்தன்மைகளை பிற பத்திரிகைகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டவே இத்தொடர், பயன்படுத்தப்படுகின்றது.

இப்பத்திரிகைகள் அச்சாகும் எண்ணிக்கை, படிக்கும் வாசகர் தொகை, இதழ் நடத்துவதற்கான பொருளாதாரப் பின்னணி ஆகியவற்றின் அடிப்படையிலும் 'சிறு' என்ற அடைமொழி சேர்ந்திருக்கக்கூடும். மேலும் இவை பெரும்பகுதி 'தனிச் சுற்றுக்கு மட்டும்' என்ற அறிவிப்போடு மிகக் குறுகிய காலம் உயிர் பெற்று உலவுவதும், மறைவதும், மீண்டும் வருவதும் இயல்பு இதற்கு விதிவிலக்கான சிறுபத்திரிகைகள் மிகமிகக் குறைவு. இந்த அடிப்படையிலும் இவற்றைச் சிறுபத்திரிகைகள் என்று அழைக்க இயலும்.

சிறுகதை என்ற பெயரில் உள்ள 'சிறு' என்ற அடைமொழியில் இருந்து, சிறுபத்திரிகை என்பதில் உள்ள அடைமொழி பெரிதும் வேறுபடுகின்றது. சிறுகதையில் வடிவத்தை முதன்மைப்படுத்தும் அடைமொழியாக உள்ளது. இதில் வடிவத்தை முதன்மைப் படுத்தாது, அது மக்களிடம் கொண்டுள்ள தொடர்பை முதன்மைப்படுத்துகின்றது. எந்தப் பொருளும் அது சமூகத்துடன் கொண்டுள்ள தொடர்பு அல்லது உறவு முறையால்தான் பெயர் அல்லது வடிவம் பெறுதல் இயல்பு. இந்த அடிப்படையில், இவ் வகைப் பத்திரிகைகள் கொண்டுள்ள குறைந்த அளவான வாசகர் உறவு என்பதால் சிறுபத்திரிகைகள் என்று அழைக்க இயலுகிறது. வாசகர் அளவு குறைவென்றாலும், இதன் மூலம் ஏற்படும் தாக்கங்கள், பெரும் அளவில் வாசகர் எண்ணிக்கையைப் பெற்றிருக்கும் பத்திரிகைகளைவிட அதிகம் என்பதை இங்கு நினைவில் கொள்வது நல்லது.

தனி உடைமைச் சமூக அமைப்பில் நடைபெறும் செயல்கள், தொடக்கத்தில் எந்த நோக்கத்துடன் தொடங்கப் பெற்றனவோ அவை நாளடைவில் அந்த நோக்கத்தில் இருந்து பிறழக்கூடும். அவ்விதப் பிறழ்ச்சி என்பது இலாப நோக்கில் வளர்ச்சி பெறும். இறுதியில் வணிகம் என்பதே நோக்கமாக அமையும். பத்திரிகைகள் நடத்துவதின் மூலம் நல்ல லாபம் கிட்டும் வாய்ப்பு ஏற்பட்ட போது, 'சிறந்த கம்பெனி'களாகவும் பத்திரிகை நிறுவனங்கள் செயல்படத் தொடங்கின. தனி உடைமைச் சமூக அமைப்பில் மக்களுக்கு ஏற்படுத்தப்பெறும் பலவீனங்களைப் பயன்படுத்தி

லாபம் பெறுவதில் இவ்வகைப் பத்திரிகைகள் அக்கறை காட்டுவதைப் பார்க்க முடியும். இவ்வகையான வணிக நோக்கமின்றி தாம் கொண்ட நோக்கத்தை முதன்மைப் படுத்தி எவ்விதமான சமரசமும் செய்து கொள்ளாது, வெளிவருவனவற்றைச் சிறு பத்திரிகைகள் என்று அழைப்பது சிறப்பாகும்.

இச்சிறு பத்திரிகைகள், ஓர் இயக்கம், அல்லது ஒரு குறிப்பிட்ட தத்துவப் பார்வை அல்லது குறிப்பிட்ட துறையை முன்னிறுத்தி வெளிவருவது இயல்பு. இவை அரசியல் இயக்கங்கள், கலாச்சார இயக்கங்கள் போன்றவற்றை முதன்மைப் படுத்துவதில் அக்கறை காட்டுகின்றன. இவை தனிமனிதர்கள், ஒரு குழு, அல்லது தனிப்பட்ட நிறுவனங்களால் நடத்தப்படுகின்றன. இவ்வித விளக்கங்கள் அடிப்படையில் ‘சிறுபத்திரிகை’ என்பது குறித்த வரையறையைப் பின்கண்ட நிலையில் கூறமுடியும்.

1. குறைந்த படிகளே வெளிவரும். இவை அச்சு, தட்டச்சு, கையெழுத்து என்ற எந்த வடிவத்திலும் வரும் தன்மையன.

2. வணிக நோக்கம், விளம்பரப்பற்று ஆகியவை இன்றி நடத்தப்படுவன.

3. குறிப்பிட்ட தத்துவம் அல்லது கோட்பாட்டினை அடிப்படையாகக் கொண்டு வெளிவருவன.

4. வாசகனின் ரசிகத் தன்மையை வணிகம் செய்வதில்லை. மாறாகத் தனது கோட்பாட்டை முதன்மைப்படுத்தி, வாசகனைத் தெளிவுபெறச் செய்வதில் முன்நிற்பன.

5. தொடர்ந்து இவை வருவதில்லை. நிற்பதும், பின்னர் வருவதும் இவற்றின் இயல்பு. இதற்கு விதிவிலக்கானவை மிகக் குறைவு.

6. அச்சு அமைப்பு, வடிவமைப்பு, பட விளக்கங்கள் அல்லது படக்கவர்ச்சி போன்றவற்றை முதன்மைப் படுத்தாது, மாறாக தாம் கொண்டிருக்கும் கோட்பாட்டிற்கு ஏற்ப அவற்றைப் பயன் படுத்திக் கொள்ளும் தன்மையன.

சிறுபத்திரிகைகள் பற்றிய இவ்வரையறை, இவற்றின் சமூக பொருளதார தத்துவப் பின்னணியை ஓரளவு தெளிவுபடுத்தும். இவ்வகைப் பத்திரிகைகளே தெளிவான இலக்கிய வரலாற்றுக்கு ஆதாரங்கள் ஆகும். இவ்வகைப் பத்திரிகைகளே, வணிகப்

பத்திரிகை வளர்ச்சிக்கு வழி கண்டவை எனலாம். இப்பத்திரிகை களில் அறிமுகப்படுத்தப்பட்ட நவீன செய்திகளே பின்னர் வணிக இதழ்களின் வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைகின்றன.

தமிழ்ச் சிறுபத்திரிகை வரலாற்றை கி. பி 1930-இல் இருந்து தொடங்குவது சிறப்பு. இந்திய வரலாற்றில் கி. பி. 1930 தொடங்கி நெருக்கடிகள் மிகுந்தன. இரண்டாம் உலகப்போர் உருவாகும் சூழலும், இந்திய விடுதலை எழுச்சியும் இந்தக் காலகட்டத்தில் குறிப்பிடத்தக்கவை. இவற்றைப் பிரதிபலிக்கும் நோக்கில், தமிழில் சிறுபத்திரிகைகள் தோன்றின. இதற்கு முன் வந்தவை பெரும்பகுதி, தமிழ்ப்பண்பாடு, தமிழ்மொழி போன்றவற்றை முதன்மைப்படுத்தின.[3] இந்திய விடுதலையை முன்னிறுத்தி வந்த சிறு பத்திரிகைகளில் **சுதந்திரச் சங்கு** (1933); **மணிக்கொடி** (1933) **காந்தி** (1933) போன்றவை குறிப்பிடத்தக்கவை.

> 'பாரதி பாடியது மணிக்கொடி. காந்தி ஏந்தியது மணிக் கொடி. காங்கிரஸ் உயர்த்தியது மணிக்கொடி. சுதந்திரப் போராட்டத்தில் பல்லாயிரம் வீரர்களை ஈடுபடச் செய்து அவர்களுக்கு உற்சாகம் ஊட்டியது மணிக்கொடி. மணிக் கொடி பாரத மக்களின் மனத்திடை ஓங்கி வளரும் அரசியல் லட்சியத்தின் நுனி, முனை, கொழுந்து.
>
> மணிக்கொடியின் பெயரைச் சூட்டி இன்று இந்த ''மணிக்கொடியை''த் தொடங்குகிறோம்.'[4]

என்ற 'மணிக்கொடி' முதல் இதழின் தலையங்கம் அன்றைய சிறு பத்திரிகைகள் கொண்டிருந்த நோக்கத்தைத் தெளிவுபடுத்தும். மேலும் இப்பத்திரிகைகளை நடத்தியவர்கள், விடுதலைப்போரில் நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள் என்பதும் குறிப்பிடத் தக்கது.

தொடர்ந்து வந்த வரலாற்றில் குறிப்பிடத்தக்க பல சிறு பத்திரிகைகள் தோன்றின. 'புது உலகம்? (1935)', க.நா.சு. **சூறாவளி** (1939), கு.பா.ரா. **கிராம ஊழியன்** (1943), ரகுநாதன் **முல்லை** (1946), அ. சீனிவாசராகவன் **சிந்தனை** (1947), எம்.வி. வெங்கட்ராமன்—**தேன்** (1949), வை கோவிந்தன் **சக்தி** (1949) போன்றவை 1940—50 ஆண்டுகளில், கலை இலக்கியத்தை முதன்மைப்படுத்திய சிறுபத்திரிகைகள் ஆகும். இவ்விதழ்கள் நடத்தியவர்கள் பின் நாட்களில் குறிப்பிடத்தக்க படைப்பாளர்

களாக வடிவம் பெற்று இருப்பதே இச்சிறுபத்திரிகைகளின் தன்மையைக் காட்டும். இதே காலகட்டத்தில் வெளிவந்த '**ஜனயுகம்**' (1946) **ஜனநாயகம்** (1947) போன்ற அரசியல் சித்தாந்த சிறுபத்திரிகைகள் குறிப்பிடத்தக்கவை. திராவிட இயக்கத்தார் மூலம் இக்காலகட்டத்தில் பல சிறு பத்திரிகைகள் நடத்தப்பெற்றன.

இந்திய விடுதலைக்குப்பின், தமிழகத்தில் வணிக நோக்கில் பத்திரிக்கைகள் பெருகுவதற்கான சூழல் ஏற்பட்டது. படிப்போர் எண்ணிக்கை பெருகியது. **ஆனந்தவிகடன், கல்கி, கலைமகள், குமுதம்** போன்ற வணிகநோக்கில் செயல்பட்ட இதழ்களின் பிரதிகள் விற்பனை அதிகமாகியது. சிறுபத்திரிகைகளின் அளவு குறிப்பிடத்தக்க அளவில் இல்லை. திராவிட இயக்கத்தார் நடத்திய பல சிறுபத்திரிகைகள் வெளிவந்துள்ளன. இவற்றின் மத்தியில் பல குறிப்பிடத்தக்க சிறுபத்திரிகைகளாக வெளிவந்துள்ளன. அவை பின்வருமாறு: விந்தன்—**மனிதன்** (1954) ரகுநாதன்—'**சாந்தி** (1954), விஜயபாஸ்கரன்—**சரஸ்வதி** (1955) பா. ஜீவானந்தம் **தாமரை** (1958) சி.சு. செல்லப்பா—**எழுத்து** (1959) போன்ற சிறு பத்திரிகைகள் தமிழ்ப்பத்திரிகை வரலாற்றில் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தியவை என்று சொல்லமுடியும்.[6] இச்சிறு பத்திரிகைகளே சிறுகதை, நாவல் படைப்பாளர்களையும் இலக்கிய விமரிசகர்களையும் அறிமுகப்படுத்தி வளர்த்து எடுத்தவை ஆகும்.

இந்திய விடுதலைக்குப்பின், திராவிட இயக்கத்திற்கு ஏற்பட்ட படிப்படியான மக்கள் ஆதரவு ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதுகளில் ஆட்சிப் பொறுப்பை அவர்களுக்கு அளித்தது. இந்த சமூக நிகழ்ச்சி தமிழ் இலக்கியத்தில் குறிப்பிடத்தக்க பாதிப்பை ஏற்படுத்தியது. சிறுபத்திரிகைகளைப் பொறுத்தவரை திராவிட இயக்கப் பின்னணியில் மிகுதியாக வெளிவந்துள்ளன. வேறு அணிகளில் இந்நிலை இல்லை. இந்திய தேசிய கட்சியான காங்கிரஸ் வீழ்ச்சி, இடது சாரி அமைப்புக்களில் ஏற்பட்ட உலகம் தழுவிய பிளவு போன்றவை இவ்வகைச் சிறுபத்திரிகைகள் எண்ணிக்கையைக் குறைத்தது எனலாம். இவற்றைமீறி சில சிறுபத்திரிகைகள் வெளிவந்தன. **புதிய தலைமுறை** (1964), **தீபம்** (1965) **கணையாழி** (1965), **புயற்பருந்து** (1969), **ஞானரதம்** (1969), பேராசிரியர் நா. வானமாமலை அவர்களின் **ஆராய்ச்சி** (1969), போன்றவை குறிப்பிடத்தக்கவை. தொடர்ந்து '**தாமரை**' வெளி

வந்தது. இலங்கையில் திரு. டொமினிக் ஜீவாவால் நடத்தப்பட்ட **'மல்லிகை'** (1964) என்ற சிறு பத்திரிகை இக்காலகட்டத்தில்தான் வெளிவரத் தொடங்கிற்று.

கி. பி. 1967-இல் திராவிட இயக்கம், தமிழக ஆட்சியைக் கைப் பற்றியபின், அவ்வமைப்பில் இருந்த இளைஞர்களின் 'எழுச்சி மனப்போக்கில்' தொய்வு ஏற்படும் சூழல் உருவாயிற்று. அவர் களின் முன் குறிப்பிடத்தக்க 'இலட்சியம்' இல்லாத நிலையில் மன நிலையில் 'வெறுமை' ஏற்படுவது இயல்பே. கலையிலும் இலக்கியத் திலும் தத்துவார்த்த உள்ளடக்கம் கலைநுட்பத்துடன் இயக்க இயல் முறையில் இணைக்கப்படவேண்டும். இல்லையேல் அதில் மேல் வளர்ச்சி என்பது அரிது. இந்நிலைமை ஆயிரத்துத் தொள்ளா யிரத்து எழுபதுகளில் தமிழக திராவிட இயக்கக் கலை, இலக்கியப் போக்கில் ஏற்பட்டது. இதற்குமுன் கொண்டிருந்த ஒருவகை உணர் வும் இப்போது இல்லை என்பதே இங்கு கவனத்தில் கொள்ள வேண்டிய செய்தியாகும்.[6] இந்தக் கட்டத்தில், வேறு அணிகளில், இடதுசாரி சிந்தனைமிக்க இளைஞர்களும், கலையை உன்னதமாகக் கருதுவோரும், மிகுதியான சிறுபத்திரிகைகளை நடத்தினர். இவ் விதம் எழுபதுகளில் அதிக அளவில் சிறுபத்திரிகைகள் வரத் தொடங்கின. இதன் உச்சம் 1979-80-இல் ஏற்பட்டது என்பதற்கு இந்தக் காலகட்டத்தில் வெளிவந்த மிகுதியான சிறுபத்திரிகைகளே சான்று(பார்க்க: பின்இணைப்பு). மேலும்1972-76-இல் இந்தியாவில் கொண்டுவரப்பட்ட உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்திற்கு முன்னும் பின்னும் குறிப்பிடத்தக்க அளவில் சிறுபத்திரிகைகள் வெளிவந்தன. இவ்விதழ்கள் தமக்கெனக் கொண்டிருக்கும் போராட்ட உணர்வுகளை வெளிப்படுத்த ஏதுவான காலச் சூழல் ஏற்பட்டது. இதனால்தான் இவ்வகை இதழ்கள் மிகுதியாக வெளி வந்தன. சமூகவரலாற்றின் இயக்கவியல் போக்கினை இச்செய்தி கள் உறுதிப்படுத்துகின்றன.

கே. முத்தையா **செம்மலர்** (1970), நா. கிருஷ்ணமூர்த்தி **கசடதபற** (1970), **வானம்பாடி** (1971), **தேன்மழை** (1971), **சதங்கை** (1971), **பிரச்சனை** (1972), இளவேனில் கார்க்கி (1972), தெ. சண்முகம் **உதயம்** (1973), நா. காமராசன் **சோதனை** (1973) க.நா.சு **இலக்கிய வட்டம்** (1973), **கண்ணதாசன்** (1973), **பனித் துளிகள்** (1974), வே. ஆனைமுத்து **சிந்தனையாளன்** (1974), **தெறிகள்** (1974), **வேள்வி** (1974), ச. செந்தில்நாதன் **சிகரம்** ( 974), வேணுகோபாலன் **விடியல்** (1975), த. சரவணத் தமிழன்

**தமிழோசை** (1975), **மனிதன்** (1977) **மனஓசை** (1979) போன்ற கலை இலக்கியச்சிறுபத்திரிகைகள் இக்கால கட்டத்தில் வெளி வந்தன. **நீண்ட பயணம்** (1976), **நோக்கு** (1977), **பிரகடனம்** (1978), **சமரன்** (1979) போன்ற குறிப்பிடத்தக்க அரசியல் சிறு பத்திரிகைகளும் இக்காலகட்டத்தில் வெளிவந்தன. இவற்றுள் பல இப்போது வெளிவருவதில்லை.

இவ்வகையில் படிப்படியான சிறுபத்திரிகைகளின் வளர்ச்சியை நாம் பார்க்க முடிகின்றது. இவ்வளர்ச்சி எண்பதில் குறிப்பிடத் தக்க அளவில் ஏற்பட்டதையும் பார்க்க முடிகின்றது. எண்பத் தொன்றில் இவ்வகை இதழ்களின் போக்கில் குறிப்பிடத்தக்க மாற்றத்தைக் காண முடிகின்றது.[7] இந்தப் பின்னணியில் எண்பதாம் ஆண்டு வெளிவந்த சிறுபத்திரிகைகளைப் பின்கண்ட நிலையில் பாகுபடுத்திப் பேச இயலும்.

1. இடதுசாரி இயக்கக் கருத்துக்களை முதன்மைப்படுத்தும் கலை இலக்கிய, அரசியல் சிறுபத்திரிகைகள்.

2. இடதுசாரி இயக்கக் கருத்துக்களை விமரிசனக் கண் ணோட்டத்தோடு அணுகும் கலை இலக்கிய, அரசியல் சிறு பத்திரிகைகள்.

3. இடதுசாரி இயக்கக் கருத்துக்களை விமரிசனம் செய்து தனிமனிதத்துவத்தை முதன்மைப்படுத்தும் கலை இலக்கிய அரசியல் சிறு பத்திரிகைகள்.

4. கலாச்சாரத் தன்மைகளை முதன்மைப்படுத்தும் சிறு பத்திரிகைகள்.

5. தமக்கெனத் தனிப்பட்ட கலை இலக்கிய, அரசியல் பார்வை கொண்டிராத சிறு பத்திரிகைகள்.

6. அறிவியல் போன்ற குறிப்பிட்ட துறையை முதன்மைப் படுத்தும் சிறுபத்திரிகைகள்.

இந்தப் பாகுபாடு, சிறுபத்திரிகைகள் என்பவை அடிப்படையில் பல நோக்கங்களுடன் செயல்படுவதை முன்னிருத்தி செய்யப் பட்டுள்ளது. சிறுபத்திரிகைகள் என்பவைகள் தமக்கெனக் கொண் டிருக்கும் தத்துவச் சார்புடன் போராடும் தன்மை பெற்றவை என்பதை நினைவில் கொண்டும் இப்பாகுபாடு செய்யப்பட்டுள் ளது.

1. சமூக வரலாறு என்பது இயக்கவியற் பாற்பட்டது. மனித வாழ்க்கை மாற்றங்களுக்கான காரணங்களை இயக்கவியல் தெளிவு படுத்துகின்றது. இவ்வகை இயக்கவியலை அடிப்படையாகக் கொண்டு செயல்படும் சிறுபத்திரிகைகளை இடதுசாரி இயக்கக் கருத்துக்ளை முதன்மைப்படுத்தும் சிறுபத்திரிகைகள் என்று சொல்ல முடியும்.

இச்சிறுபத்திரிகைகள், சோசலிச எதார்த்த இலக்கியப் போக்கை வளர்த்து எடுப்பதில் பெரிதும் அக்கறை கொள்கின்றன. மனித வாழ்க்கையின் பல்வேறு கூறுகளை அழகியலுடன் வெளிப் படுத்தும் பல்வேறு படைப்புக்களையும் இப்பத்திரிக்கைகள் வெளி யிடுகின்றன. (**இவ்வகைச் சிறுபத்திரிகைகளின் பெயர்களை பின் இணைப்பு அட்டவணை எண் 1-இல் பார்க்க**).இவற்றில் சிறுகதை கள், தொடர் நாவல்கள், நாட்டுப்புறப் பாடல்கள், கவிதைகள், இலக்கிய விமரிசனக் கட்டுரைகள் ஆகியவை பெரும்பகுதி இடம் பெறும்.திரைப்பட விமரிசனங்கள் துணுக்குச்செய்திகள்,பேட்டிகள் போன்றவையும் இவ்வகைச் சிறுபத்திரிகைகளில் வெளியிடப்படும். அண்மைக் காலத்தில் வளர்ந்து வரும் மூன்றாம் வகை நாடக முயற்சிகள் பற்றியும் இச்சிறுபத்திரிகைகள் செய்திகளை வெளி யிட்டுள்ளன. இச்சிறு பத்திரிகைகளோடு தொடர்புடைய இலக்கிய அமைப்புக்களான. முற்போக்கு எழுத்தாளர் சங்கம் கலை இலக்கியப் பெருமன்றம் போன்றவற்றின் பல்வேறு நிகழ்ச்சிக் குறிப்புக்களும் இவ்விதழ்களில் இடம்பெறுவது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். 1980-இல் வெளிவந்த கலை இலக்கியம் சாரா அரசியல் சிறுபத்திரிக்கைகள் இரண்டு. அவை 'மார்க்சிய ஒளி', 'லெனின்' என்பவை ஆகும்.

2. இடதுசாரி இயக்கக் கருத்துக்களை விமரிசனக் கண்ணோட்டத்தோடு அணுகும் இவ்வகை இதழ்கள், 'கலை இலக்கியம் யாவும் மக்களுக்கே' என்ற முழக்கத்துடன் வெளி வந்துள்ளன. முன் குறிப்பிட்ட இதழ்களைப் போன்றே இவை களும் சோசலிச எதார்த்த வாத இலக்கியக் கோட்பாட்டை முதன்மைப் படுத்துகின்றன. (**இவ்வகை இதழ்களின் விவரங் களை பின் இணைப்பு அட்டவனை எண் 2-இல் பார்க்க**). முன் குறிப்பிட்ட சிறுபத்திரிகைகளில் இருந்து அரசியல் நடைமுறைத் தத்துவத்தில், இவ்வகைச் சிறுபத்திரிகைகள் மாறுபட்ட கருத் தோட்டத்தை முன்வைக்கின்றன. எடுத்துக் காட்டாக, அவை இன்றைய இந்திய அரசியல் சூழலில், தற்காலிகமாக பாராளு

மன்ற ஜனநாயக அமைப்பை ஏற்றுக் கொள்கின்றன. இவை இதில் முரண்படுகின்றன. இந்தச் சார்புடன் இவ்வகைப் பத்திரிகைகளில் சிறுகதைகள், விமர்சனக் கட்டுரைகள் போன்றவை பிரசுரிக்கப்படுவதைப் பார்க்க முடியும்.

இவை, சோசலிச எதார்த்தவாதத்தோடு, புரட்சிகர சோசலிசஎதார்த்தத்தையும்முன்வைக்கும்கலைப்படைப்புக்களைப் பிரசுரிக்கின்றன. இவற்றில் எழுதப்படும் தலையங்கள், துணுக்குச் செய்திகள், மொழிபெயர்ப்புகள் போன்றவை குறிப்பிடத்தக்கவை. இவ்வகைப் போக்கில் எண்பதில் வெளிவந்த அரசியல் தத்துவச் சிறுபத்திரிகைகளில் சமரன், கேடயம், பரிமாணம், இலக்கிய வெளிவட்டம் போன்றவை குறிப்பிடத்தக்கவை.

3. இன்றைய சமூக அமைப்பின் நெருக்கடிகளைக் கண்டு இவற்றின் தீர்வு காணும் முயற்சியாக தேடலை' மேற்கொள்வதோடு, இடது சாரி இயக்கக் கருத்துக்களை விமரிசனம் செய்யும் நோக்கத்தோடு எண்பதில் வந்த சிறுபத்திரிகைகள் மிகுதியாகும். (இவ்வகை இதழ் குறித்த விவரங்களை பின் இணைப்பு அட்டவணை எண்—3 இல் பார்க்க) இப்பத்திரிகைகள் தனிமனித வாதத்தை முதன்மைப்படுத்தும் போக்கின. கலையில் பிரச்சாரம் கூடாது என்பதில் இப்பத்திரிகைகள் ஆழ்ந்த கவனம் கொண்டுள்ளன. இவற்றில், 'அந்நிய மாதல்' 'பிராய்டிசம்', 'சர்ரியலிசம்', 'எக்சிஸ்டென்சியலிசம்' போன்ற தனிமனிதத் தத்துவத்தை முதன்மைப்படுத்தும் இலக்கியப்போக்குடைய படைப்புக்களைக் காணமுடியும். இச்சிறுபத்திரிகைகளில் தனிமனித விமரிசனங்களுக்கு முதன்மை அளிக்கப்படுவது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

இவ்வகைச் சிறுபத்திரிகைகள் தமிழில் குறிப்பிடத்தக்க பல புதிய போக்குகளை உருவாக்கியுள்ளன புதிய மொழி நடை, மேலை இலக்கியச் செய்திகள் போன்றவை இப்பத்திரிகைகளின் குறிப்பிடத்தக்க அம்சங்களாகும். இவ்வகைப் போக்கில் வெளிவந்த அரசியல் பத்திரிகைகளில், யாத்ரா, கொல்லிப்பாவை, படிகள் என்பவை எண்பதில் குறிப்பிடத்தக்கவை.

4. கலாச்சாரத்தின் பல்வேறு பண்புகளை அனைத்துச் சிறு பத்திரிகைகளும், தம் நோக்கில் வெளிப்படுத்துகின்றன. அதே நேரத்தில் பிற கலை, இலக்கிய, அரசியல் படைப்புக்களையும் வெளியிடுகின்றன. ஆனால் சில சிறுபத்திரிகைகள், கலாச்சாரத்

தன்மைகளை முதன்மைப்படுத்தி, அதன் வெளிச்சத்தில், கலை இலக்கிய அரசியல் பார்வைகளைச் செலுத்துகின்றன. இவ்வகைச் சிறுபத்திரிகைகளைக் கலாச்சாரத் தன்மைகளை முதன்மைப் படுத்தும் சிறுபத்திரிகைகள் என்று சொல்ல முடியும். (இவ்வகை இதழ்கள் குறித்த விவரங்களை பின் இணைப்பு அட்டவணை எண்—4இல் பார்க்க). இவ்வகைச் சிறுபத்திரிகைகள் முன்னிருக்கும் பண்புகளை பின்கண்ட வகையில் பேசமுடியும்.

அ. மொழியை முதன்மைப்படுத்தும் போக்கில் பல சிறு பத்திரிகைகள் வெளிவருகின்றன. மொழியின் பழமையில் ஆழ்ந்த பிடிப்பும், 'பழமை வாதத்தை' முன்னிருத்தும் நிலையும் இப்பத்திரிகைகளின் குறிப்பிடத்தக்க பண்புகளில் சிலவாகும். இவற்றின் மொழிநடை எளிதில் அனைவருக்கும் புரியும் வகையில் அமைவதில்லை. தமிழ் இலக்கண இலக்கியச் செய்திகளே இவற்றில் இடம்பெறும். மொழிகுறித்த அறிவியல் கண்ணோட் டத்தை இவ்வகை இதழ்கள் கவனத்தில் எடுத்துக் கொள்வ தில்லை.

ஆ. குறிப்பிட்ட இனத்தை முதன்மைப்படுத்தியும், அந்த இனத்தின் பல்வேறு பழமைப் பண்புகளை புதுப்பிக்கும் நோக்கம் கொண்டும் பல சிறுபத்திரிகைகள் வெளிவருகின்றன. இவற்றில் வெளியாகும் படைப்புகள் கூடக் குறிப்பிட்ட இனத்தைச் சார்ந்த வரால் எழுதப்படுவதைக் காணமுடியும். இவ்வகைச் சிறு பத்திரிகைகள், தமிழகத்தில் மிகுதியாக வெளிவருகின்றன. கலாச்சாரப் போக்கின் வளர்ச்சியில் இப்பத்திரிகைகள், இனம் என்பது பற்றிய இயக்கவியல் பார்வை அற்றவை. பழமையில் ஆழ்ந்த பிடிப்புக் கொண்டவை.

இ. உலக வரலாற்றில் சீர்திருத்த வாதிகள் தொடக்ககாலம் முதல் தோன்றி மறைந்திருப்பதைக் காணமுடிகிறது. சீர்திருத்த அறிஞர்கள் உலக நடைமுறைத் தீங்குகளை விமரிசனம் செய்தார் களேயொழிய, இந்த நடைமுறைத் தீங்குகளை ஒழிப்பதற்கான சமூக மாற்றம் பற்றி எவ்விதமான திட்டத்தையும் தரவில்லை என்பது மாமேதை காரல் மார்க்ஸின் கருத்தாகும். இவ்வகைச் சீர்திருத்த வாதிகள் முதன்மைப்படுத்தும் பண்புகளில் ஒன்றே பகுத்தறிவு. இந்தக் கோட்பாட்டை முதன்மைப்படுத்தும் வகையில் தமிழில் பல சிறுபத்திரிகைகள் வந்து கொண்டிருக் கின்றன. இவற்றில் இலக்கியப் படைப்புகள் மிகக் குறைந்த

இளவில் இடம்பெறும். பகுத்தறிவுத் தொடர்பான கட்டுரைகளே மிகுதியாக இடம்பெறும். அடிப்படையில் இவை அரசியல் பத்திரிகைகளே. கலை இலக்கியத்தில் இவை அக்கறை கொள்வதில்லை.

ஈ. குறிப்பிட்ட கலாச்சார அமைப்பின் கீழ் பல சிறு பத்திரிகைகள் வெளிவருகின்றன. இவை மொழித்தூய்மை, பகுத்தறிவு, பொதுவுடைமை ஆகிய கருத்தோட்டங்களை முதன்மைப்படுத்தும் நோக்கில் வெளிவரும் அரசியல் பத்திரிகைகளே. இவற்றில் கலை, இலக்கியப் படைப்புகள் மிகமிகக் குறைவாகவே வெளிவரும். இப்பத்திரிகைகள் சார்ந்திருக்கும் அமைப்பின் செயற்பாடுகள் குறித்த விரிவான விளக்கங்களை வெளியிடுகின்றன. இவை பெரும்பகுதி தனி மனிதர்களால் நடத்தப்படுகின்றன.

5. சிறு பத்திரிகைகள் என்பவைகள் பெரும்பகுதி, ஏதேனும் தத்துவச் சார்புடன் வெளிவருகின்றன. இவ்விதம் தெளிவான சார்பு இன்றி, வெளிவரும் சிறுபத்திரிகைகள் பல உண்டு. இவற்றில் பல்வேறு தத்துவச் சார்பினரும் எழுதுவர். இப் பத்திரிகைகள் படைப்பிலக்கியத்தில் அக்கறை கொண்டு செயல் படுவதைப் பார்க்க முடியும். இவ்வகையில் எண்பதில் குறிப்பிடத் தக்க சிறுபத்திரிகை **தீபம்** என்று சொல்ல முடியும்.

6. குறிப்பிட்ட துறையில் தனிக்கவனம் கொண்டு, அத்துறை தொடர்பான செய்திகளை வெளியிடும் சிறுபத்திரிகைகள் பல உண்டு. அறிவியல் துறையின் பல்வேறு தன்மைகளை வெளிப்படுத்தும் வகையில் இவ்விதழ்கள் வருகின்றன.

அறிவியல் செய்திகளையே முதன்மைப்படுத்தும் **கலைக்கதிர்** சிறுபத்திரிகை குறிப்பிடத்தக்க ஒன்றாகும். காந்தியப் பொருளாதாரத்தை முன்னிருத்தும் **சர்வோதயம்** என்ற சிறுபத்திரிகையும் கவனத்தில் கொள்ள வேண்டிய ஒன்று. இந்தப்போக்கில் வெளிவரும் எண்ணிக்கை குறைவு எனினும், அண்மைக்காலத்தில், இவை அதிகரிக்கத் தொடங்கியுள்ளதைப் பார்க்க முடிகிறது

இவ்வகையில், எண்பதில் சிறுபத்திரிகைகள் தமிழ் இலக்கிய வளத்திற்கு பல்வேறு நிலைகளிலும் உதவியிருப்பதைப் பார்க்க முடிகிறது இலக்கிய வளர்ச்சிக்கு சிறுபத்திரிகைகளின் பங்கு என்பது மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்று. ஒட்டு மொத்த நிலையில்,

சிறுபத்திரிகைகள் கலாச்சார நிலையிலும், இலக்கிய வளர்ச்சிப் போக்கிலும் ஆற்றும் பணிகளை பின் கண்ட நிலையில் வரையறை செய்யலாம்.

1. நவீன இலக்கியங்களை அறிமுகப்படுத்தும் பணியைச் சிறுபத்திரிகைகளே முதன்முதல் செய்கின்றன.

தமிழில் புதுக்கவிதையின் தோற்றம் வளர்ச்சி பற்றி ஆய்வு செய்யும் எவரும் இதனைத் தெளிவாக உணர முடியும். சிறுகதைகள் தமிழில் வடிவம் பெறும் பணியைச் செய்தவை சிறு பத்திரிகைகளே. மணிக்கொடி தொடங்கி இன்றுவரை தரமான சிறுகதைகள் சிறுபத்திரிகைகள் வழி வெளிவருவதைப் பார்க்க முடியும்.

2. புதிய படைப்பாளர்களை அறிமுகப்படுத்தும் பணியையும் இச்சிறுபத்திரிகைகளே செய்கின்றன. குறிப்பிடத்தக்க தமிழ் எழுத்தாளர்கள் பலரும் இவ்வகைச் சிறுபத்திரிகைகள் மூலம் வெளி உலகிற்கு அறிமுகமானவைகள் என்பது நினைவில் கொள்ள வேண்டிய செய்தி.

3. மொழியில் புதிய புதிய வளங்களை கொண்டு சேர்க்கும் பணியைக் காலம்காலமாக இவ்வகைப் பத்திரிகைகளே செய்து வருகின்றன. எடுத்துக்காட்டாக அண்மைக் காலத்தில் உருவாகி வரும் மூன்றாம் வகை நாடகங்கள் போன்றவற்றை இவைகளே அறிமுகப்படுத்துகின்றன; பல்வேறு இலக்கியக் கோட்பாடுகளை அறிமுகப்படுத்தும் பணியும் சிறுபத்திரிகை மூலந்தான் ஏற்படுகிறது.

4. தத்துவார்த்த கருத்தோட்டங்கள் பற்றிய விளக்கங்களும், விமர்சனங்களும் இச்சிறுபத்திரிகைகள் வழிதான் பெற இயலுகிறது.

ஆக, சிறுபத்திரிகைகள் என்பவை கலை இலக்கிய அரசியல் போக்குகளின் பல்வேறு நிலைகளை, தொடர்புடைய காலச் சூழலுடன் வெளிப்படுத்தும் போராட்டக் கருவிகளாகச் செயல்பட்டு, 'உண்மையான' கலை இலக்கிய வளர்ச்சிக்கும், அரசியல் தத்துவப் பயிற்சிக்கும் வழி வகுக்கின்றன எனலாம்.

## குறிப்புகள்

1. ''அப்பொழுதைய தமிழ்ப் பத்திரிகை உலகம், குறுகிய விஸ்தீரணம் உடையதாகவே இருந்தது. குறிப்பிட்டுச் சொல்லக் கூடிய இரண்டு மூன்று பத்திரிக்கைகளே உலவிக் கொண்டிருந்தன''—சாமிநாத சர்மா வெ. 'எழுத்தாளன்' (1961) சிறப்பு. (மே-ள்)-சோமலெ, 'தமிழ் இதழ்கள்' ப. 20.

2. தாமரை, தீபம், கணையாழி, செம்மலர் போன்ற ஒரு சில மட்டுமே தொடங்கிய நாள் முதல் தொடர்ந்து வந்து கொண்டிருப்பவை.

3. விவேகபோதினி (1887); விநோதரச மஞ்சரி (1891); விவேக சிந்தாமணி (1892); ஞானபோதினி (1900); ஞானசாகரம் (1902); மாதர்போதினி (1911) போன்றவற்றைக் குறிப்பிட முடியும்.

4. ராமையா, பி. எஸ்., 'மணிக்கொடி காலம்,' ப.39. தீபத்தில் தொடர் கட்டுரையாக வெளிவந்த இக்கட்டுரை 'மணிக்கொடி' பற்றிய தெளிவான வரலாற்றுக்கு நல்ல சான்று.

5. வல்லிக்கண்ணன்—'சரஸ்வதி காலம்' செல்லப்பா, சி.சு, எழுத்து அனுபவங்கள்' ஆகிய கட்டுரைகள் 'தீபத்தில் தொடர்ந்து எழுதப்பட்டவை. இக்கட்டுரைகள் இக்காலச் சிறு பத்திரிகைகள் பற்றிய தெளிவான வரலாற்றைப் பேசுகின்றன.

6. போர்வாள் (1947); பூந்தோட்டம் (1947); தோழன் (1947), தீச்சுடர் (1953); பெரியார் குரல் (1954); ஈரோட்டுப்பாதை (1954); முத்தாரம் (1964); தனிஅரசு (1968); கழகக்குரல் (1970) என்ற போக்கில் வெளிவந்த மிகுதியான திராவிட இயக்க இதழ்கள் 1967-க்குப்பின் அளவில் குறைந்த நிலை இங்கு கவனத்தில் கொள்வது நல்லது.

7. 1980-இல் வந்த பல இதழ்கள் நின்றுவிட்டன. மாறாக 'Real' என்ற அமைப்பின் கீழ் பல பத்திகைகள் 1981-இல் வெளி வரத் தொடங்கியுள்ளது.

# 1980—சிறுபத்திரிகைகள்

## பின் இணைப்பு

### அட்டவணை—ஒன்று

| பெயர் | ஆசிரியர், வெளியிடப் படும் இடம் | குறிப்பு |
|---|---|---|
| 1. சிகரம் | செந்தில்நாதன், ச. சென்னை-78 | 1974-முதல் வெளிவந்தது தற்போதுவெளிவரவில்லை· |
| 2. சிந்தனை | ஆசிரியர் குழு, சென்னை-7 | தற்போது வந்து கொண் டிருக்கிறது. |
| 3. செம்மலர் | முத்தையா, கே. மதுரை-18 | 1970 முதல் வெளிவருகிறது. |
| 4. தாமரை | ஆசிரியர் குழு, சென்னை-17 | 1958-முதல் வெளிவருகிறது. |
| 5. துளிகள் | ஆசியரியர் குழு, கோவை | ஐந்து இதழ்கள் வெளி வந்தன. |
| 6. முனைவன் | ஆண்டாள் பொதிய வெற்பன் குடந்தை | 1980 முதல் வெளிவருகிறது. |
| 7. வசந்தம் வருகிறது | ஜவகர், இரா. சென்னை-8 | மூன்று இதழ்கள் மட்டுமே வந்தது. |
| 8. புதிய நம்பிக்கை | பொன். விஜயன், தேனி-31 | இப்போது சென்னையில் இருந்து வருகிறது. |
| 9. யுகவிழிப்பு | நடராசன், எம். திருப்பூர்-2 | இப்போதுவெளிவரவில்லை. |
| 10. 'ஜீவா' | செவ்வியன், சென்னை-78 | 1979-முதல் வந்தது. இப் போது வெளிவரவில்லை. |
| 11. மார்க்சிய ஒளி | சீனிவாசன், அ. சென்னை-1 | 1972-முதல் வெளிவந்து கொண்டிருக்கிறது. |
| 12. லெனின் | ஞானையா, டி. சென்னை-7 | 1980-இல் இரண்டு இதழ்கள் மட்டுமே வந்தது. |

### அட்டவணை—இரண்டு

| | | |
|---|---|---|
| 13. செந்தாரகை | ஆசிரியர் குழு, சென்னை-19 | மூன்று இதழ்கள் மட்டுமே வெளிவந்தன. |

| | | | |
|---|---|---|---|
| 14. | பருதி | நீதிக்குமணன், சென்னை-18 | மூன்று இதழ்கள் மட்டுமே வெளிவந்தன. |
| 15. | மனஓசை | முல்லை அம்பரீடன், சென்னை-20 | 1979-முதல் வந்தது இப்போது வரவில்லை. |
| 16. | இலக்கிய வெளி வட்டம் | நடராசன், ந. விருதுநகர் | 1979 முதல் வெளிவந்து. கொண்டிருக்கிறது. |
| 17. | சமரன் | சிவசங்கரன், வெ. சென்னை | 1979-முதல் வந்தது இப்போது நின்று விட்டது. |
| 18. | கேடயம் | ஞானம், மா. தர்மபுரி | 1979 முதல் வெளிவருகிறது. |
| 19. | பரிமாணம் | இரத்தினம், கோவை | 1980 முதல் வந்து கொண்டிருக்கிறது. |

## அட்டவணை—மூன்று

| | | | |
|---|---|---|---|
| 20. | எழுச்சி | ஆசிரியர்குழு. குடந்தை | 1979-முதல் வந்து கொண்டிருக்கிறது. |
| 21 | கணையாழி | கஸ்தூரிரங்கன், சென்னை-5 | 1965 முதல் வெளிவந்து கொண்டிருக்கிறது. |
| 22. | குமுறும் நெஞ்சம் | வரப்பிரசாதம், திருச்சி 2 | 1980-முதல் வருகிறது. |
| 23. | சதங்கை | வனமாலிகை, நாகர்கோவில் | 1971 முதல் வந்து கொண்டிருக்கிறது. |
| 23. | சுவடு | பாலா, புதுகை | 1978 முதல் வந்தது. இப்போது வரவில்லை. |
| 24. | தேன்மழை | ஆசிரியர்குழு, சென்னை-34 | 1971 முதல் வெளிவருகிறது. |
| 25. | மானுடம் | விஜய்குமார், திருச்சி-2 | 1980 முதல் வெளிவருகிறது. |
| 26. | வானம்பாடி | சிற்பி, கோவை | 1971 முதல் வெளிவருகிறது. |
| 27. | 'ழ' | ஆத்மநாம், சென்னை 5 | 1979 முதல் வெளிவருகிறது. |
| 28. | நவயுகக் கலாச்சாரம் | ஜாப்சன், சென்னை-10 | 1980 முதல் வெளிவருகிறது. |
| 29. | நீலமலை பனிமலர் | அரு. அய்சானுல்லா, ஊட்டி | 1979 முதல் வெளிவருகிறது. |

| | | | |
|---|---|---|---|
| 30. | ¼ | மலர்மன்னன், சென்னை-5 | 1980 முதல் வெளிவருகிறது. |
| 31. | கொல்லிப் பாவை | அ. ராஜமார்த், தாண்டன், இடையன் விளை | 1977 முதல் வெளிவருகிறது |
| 32. | படிகள் | சிவராமன், பெங்களூர் | 1979 முதல் வெளிவருகிறது. |
| 33. | யாத்ரா | சி. ராமசாமி, பண்ணை மூன்றடைப்பு | 1978 முதல் வெளிவருகிறது. |

## அட்டவணை—நான்கு

| | | | |
|---|---|---|---|
| 34. | அறிவியக்கம் | நாத்திக நந்தனார், சென்னை-48 | 1975 முதல் வெளிவருகிறது. |
| 35 | அறிவுவழி | கே. பஞ்சாட்சரம், சென்னை-29 | 1975 முதல் வெளிவருகிறது. |
| 36. | உண்மை | கோ. இமயவரம்பன், சென்னை-7 | 1975 முதல் வெளிவருகிறது |
| 37. | சிந்தனையாளன் | வே. ஆனைமுத்து, திருச்சி | 1974முதல் வெளிவருகிறது. |
| 38 | செந்தமிழ்ச் செல்வி | ஆசிரியர்குழு, சென்னை | 1926 முதல் வெளிவருகிறது. |
| 39. | தமிழ்ப் பொழில் | ஆசிரியர்குழு, தஞ்சை | 1926 முதல் வெளிவருகிறது . |
| 40. | தமிழியக்கம் | ந. அரணமுறுவல், சென்னை-94 | 1980 முதல் வெளிவருகிறது. |
| 41. | தென்மொழி | பெருஞ்சித்திரன், சென்னை-5 | 1963 முதல் வெளிவருகிறது. |
| 42. | பெண் விடுதலை | கோ. வி. சரஸ்வதி, சென்னை-28 | 1980 முதல் வெளிவருகிறது |

**குறிப்பு:** இப்பட்டியல், கட்டுரையில் பேசப்பட்டுள்ள செய்திகட்கு ஆதாரங்களாகத் தேவைப்படும் பத்திரிகைகளை முதன்மைப் படுத்திக் கொடுக்கப்பட்டுள்ளது. பட்டியலில் வராத எண்பதில் வெளிவந்த பத்திரிகைகள் இன்னும் பல உண்டு.

## சான்றாதாரங்கள்

1. செல்லப்பா. சி.சு. (மாத இதழ்), எழுத்து அனுபவங்கள்'(மாத இதழ்) தீபம் ( 971 டிசம்பர்—1976 செப்டம்பர்—தொடர் கட்டுரை முடிவு பெறவில்லை).

2. வல்லிக்கண்ணன் (மாத இதழ்) 'சரஸ்வதி காலம், தீபம் (1971 அக்டோபர் 1972 அக்டோபர் முடிய தொடர் கட்டுரை)

3. வல்லிக்கண்ணன் 'புதுக்கவிதை தோற்றமும் வளர்ச்சியும்' தீபம் (மாத இதழ்) 1971 அக்டோபர்— 975 மே முடிய தொடர் கட்டுரை).

4. ராமையா.பி.எஸ். 'மணிக்கொடி காலம்' தீபம் (மாத இதழ் (1969 ஏப்ரல் 1971 அக்டோபர் தொடர்கட்டுரை).

# எண்பதில் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆய்வேடுகள்

அ. ம. சத்தியமூர்த்தி

## முன்னுரை

ஒரு மொழியின் வளர்ச்சியில் ஆராய்ச்சியின் பங்கு மிகமிக இன்றியமையாதது. அத்தகைய ஆராய்ச்சி சிறப்பாக நடைபெற வேண்டுமாயின், நடந்தவை பற்றிய விவர அட்டவணை தேவையான ஒன்றாக அமைகிறது. அதனை விளக்குவதுடன் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதிற்குரிய சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆய்வேடுகளைத் தொகுத்து அளிப்பது இவண் கருத்தாகக் கொள்ளப் படுகிறது.

## தமிழ் ஆய்வேடுகளின் தொகுப்பு வரலாறு

சென்னைப் பல்கலைக் கழகம், அங்கு 1957-58-இல் இருந்து 1971-72 வரை பட்டம் வழங்கப்பெற்ற எம் லிட், பிஎச்.டி ஆய்வுத் தலைப்புகளை எல்லாம் தொகுத்து இரு சிறு நூல்களாக வெளியிட்டுள்ளது. தொடக்கத்திலிருந்து 1977 மார்ச்சு வரை உலகின் பல பகுதிகளில் நடைபெற்ற எம்.ஏ., எம்ஃபில்,எம்.லிட், பிஎச்.டி ஆய்வுத் தலைப்புகளைத் தொகுத்து உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் ‘Dissertations on Tamilology’ எனும் நூலை வெளியிட்டது. இது முதன் முயற்சியாகையால் இதன்கண் விடுபட்ட சில ஆய்வுத் தலைப்புகளும் உண்டு. இவையேயன்றி தமிழ் ஆய்வேடுகள் பற்றிய தொகுப்பு ஏதும் வெளிவந்ததாகத் தெரியவில்லை.

## தொகுப்பின் தேவையும் பயனும்

ஆய்வேடுகள் பற்றிய முழுமையான தொகுப்பு ஒன்று இல்லாத காரணத்தினால், ஒருவர் செய்த ஆய்வையே மற்றொருவரும் செய்ய வாய்ப்பு ஏற்படுகிறது. இதற்கான சான்று ஒன்றினை இணைப்பில் உள்ள தலைப்புகளை நோக்கினால் அறியலாம். இது போன்ற நிலைமைக்குக் காரணமாக ஆய்வாளர்களை மட்டும் கூற இயலாது. பொறுப்புகளில் உள்ளவர்கள் திட்டமிட்டுச் செயல்படுமிடத்துத்தான் இதுபோன்ற குறைகள் நிவர்த்தி செய்யப்பட வழி ஏற்படும்.

தமிழாராய்ச்சி தமிழகத்தில் சென்னைப் பல்கலைக் கழகம், மதுரை காமராசர் பல்கலைக் கழகம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ஆகிய இடங்களிலும், வெளி மாநிலங்களில் திருவேங்கடவன் பல்கலைக் கழகம், உசுமானியப் பல்கலைக் கழகம், கேரளப் பல்கலைக் கழகம், புனே டெக்கான் கல்லூரி, தில்லிப் பல்கலைக் கழகம் முதலான இடங்களிலும், அயல்நாடுகளில் இலங்கைப் பல்கலைக் கழகம், மலாயப் பல்கலைக் கழகம் முதலான இன்ன பிற இடங்களிலும் நடைபெறுகிறது. ஆனால் அவைபற்றிய முழுமையான தொகுப்பு எதுவும் வெளிவரவில்லை.

தமிழல்லாத பிற துறைகளிலும் தமிழோடு தொடர்புடைய ஆய்வுகள் நடைபெறுகின்றன. சான்றாக சென்னைப் பல்கலைக் கழக இந்திய வரலாற்றுத் துறையில் நடைபெற்ற 'Valluvars' Concept of womanhood and Sangam Age (1979) எனும் எம்.ஃபில் ஆய்வேட்டையும், தத்துவத்துறையில் நடைபெற்ற 'Philosophical Ideas as expounded in the works of Seramān perumāl Nāyaṉār, (1979) எனும் எம்.ஃபில் ஆய்வேட்டையும் இந்தித்துறையில் நடைபெற்ற திரு. சங்கர் ராஜு நாயுடுவின் 'A comparative study of kambarāmāyaṇam and Tulasirāmāyaṇam' (1959) எனும் பிஎச்.டி ஆய்வேட்டையும் காட்டலாம். எனவே, இவற்றையெல்லாம் தொகுத்துக் காணுமிடத்துதான் முழுமையான ஆய்வு செய்ய இயலும்.

## பணிகள்

1. உலகம் முழுவதும் நடைபெற்ற தமிழ் ஆய்வேடுகள் பற்றிய விவர அட்டவணை தொகுக்கப் பெறல் வேண்டும்.

2. மொழியியல், வரலாறு, தொல்பொருளியல், சமயம், தத்துவம், அரசியல், பொருளியல், சமுதாயவியல், மானிடவியல், உளவியல், அறிவியல் முதலான துறைகளில் நடைபெற்ற, தமிழோடு தொடர்புடைய ஆய்வுகள் பற்றிய விளக்க அட்டவணை தயார் செய்யப்பெறல் வேண்டும்.

3. உலகம் முழுதும் பதிவு செய்யப்பெற்று நடைபெறுகின்ற தமிழ் ஆய்வு பற்றிய குறிப்புகளைத் தமிழ் ஆராய்ச்சி செய்யும் அனைவரும் அறிந்து கொள்ளும் வகையில் அரசு இதழ் ஒன்றில் அவ்வப்போது தொடர்ந்து வெளியிட்டுக் கொண்டே இருக்க வேண்டும்.

4. தமிழகத்தின் குறிப்பிட்ட ஓரிடத்தில் தமிழ் ஆய்வேடுகள் அனைத்தையும் அனைவரும் தங்கு தடையின்றி காணும் வகையில் தொகுத்து வைத்தல் வேண்டும்.

5. தலைசிறந்த ஆய்வேடுகளை அரசே நூலாக வெளிக்கொணரவேண்டும்.

இதுபோன்ற தொகுப்புப் பணிகளைத் தனி ஒருவரால் செய்ய இயலாது. மாறாக ஒரு சில அமைப்புகளால் அரசின் உதவியுடன் தான் இதனை முழுமையாகச் செய்ய இயலும். அவ்வாறு ஒரு தொகுப்பினை வெளிக்கொணருமிடத்துதான்,

1. தமிழ் ஆய்வின் நோக்கும் போக்கும் விளங்கும்.

2. புதிதாக ஆய்வு செய்ய வருபவர் தலைப்பை எளிதாகத் தேர்ந்தெடுக்க இயலும்.

3. இவ்வனைத்திற்கும் மேலாக காலமும் உழைப்பும் வீணாகாமல் முறையான ஆய்வு செய்ய வழி ஏற்படும்.

## எண்பதில் ஆய்வேடுகள்

எண்பதில் பட்டம் வழங்கப்பெற்ற பிஎச்.டி ஆய்வேடுகள் இருபத்திரண்டு. அவற்றில் பதின்மூன்று ஆய்வேடுகள் எழுபத்தொன்பதிலும், ஒரு ஆய்வேடு எழுபத்தெட்டிலும் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப் பெற்றவை. இவற்றை இணைப்பின் இறுதியில் காணலாம் எஞ்சிய எட்டு ஆய்வேடுகளும் எண்பதில் அளிக்கப் பெற்றவை. அவை தொகுப்பில் 5, 8 29, 36, 41, 60, 93, 94, எனும் வரிசை எண்களைப் பெறுகின்றன. மேலும் எழுபத்தொன்பதில் அளிக்கப்பெற்று எண்பதில் எம்.லிட் பட்டம்பெற்ற ஆய்வேடு ஒன்றும் உண்டு.

தத்துவத்துறை (22), இந்தித்துறை (31) வடமொழித்துறை (107), மலையாளத்துறை, (108, 110) ஆகியனவற்றில் செய்யப் பெற்ற தமிழோடு தொடர்புடைய ஐந்து ஆய்வுகள் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. எஞ்சிய நூற்றுஆறு ஆய்வுகளும் தமிழ்த் துறைகளின் வாயிலாகச் செய்யப்பெற்றவை. இவை எண்பதில் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப் பெற்றவை என்ற அடிப்படையி லேயே தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றில் சிலவற்றிற்கு எண்பத் தொன்றிலும் பட்டம் வழங்கப் பெற்றுள்ளது

தொகுப்பின்கண் ஆய்வேடுகள் பதினொரு சிறு தலைப்பு களின் கீழ் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு பிரிவிலும் ஆய்வுகள் தலைப்பு அகரவரிசையில் அமைக்கப்பட்டுள்ளன.

கீழ்க்காணும் வரிசை முறையில் ஒவ்வொரு ஆய்வு குறித்த செய்திகளும் அமைந்துள்ளன.

தலைப்பு.
ஆய்வாளர் பெயர்.
ஆய்வேட்டிற்கான பட்டம்.
எம்.ஃபில் ஆய்வேடானால், அளிக்கப்பட்ட தமிழ்த்துறை.
பொருளடக்கம்.

இத்தொகுப்பின்கண் சென்னைப் பல்கலைக் கழக எல்லையில் அடங்கிய கோயம்புத்தூர் பி.எஸ் ஜி கலைக்கல்லூரித் தமிழ்த் துறை வாயிலாக 1979-80-இல் நடைபெற்ற எம்.ஃபில் ஆய்வு பற்றிய செய்திகள் மட்டும் இடம்பெறவில்லை. இத்தொகுப் பானது முன்னோடியே அன்றி முடிவானது அல்ல என்பதும் நினைவில் கொள்ளத்தக்கது.

எண்பதில் வெளிவந்த ஆய்வேடுகளைப் பொதுவாக மதிப்பீடு செய்தால்,

1. ஆய்வு செய்யக் கருவி நூல்கள் இன்றியமையாதது; அதற் கான வசதிகளை அமைத்துத் தருவது அரசின் கடமை.

2 அனைத்து ஆய்வுகளும் மேற்பார்வையாளர் ஒருவரது கண்காணிப்பில் நிகழவேண்டும்.

3. ஆய்வு நெறிமுறைகள் சிலவற்றைக் கடுமையாகப் பின் பற்ற வேண்டும்.

4. ஆய்வேட்டிற்கு வெளியார் மதிப்பீடு மிகமிகத் தேவை யான ஒன்று.

5. இவ்வனைத்திற்கும் மேலாக, ஆய்வாளரின் கடுமையான உழைப்பு அவசியம் என வரிசைப்படுத்திக் காட்டலாம்.

# இணைப்பு

## எண்பதில் அளிக்கப்பெற்ற ஆய்வேடுகள்

## I. இலக்கணமும் மொழியியலும்

1. **உடம்படுமெய் ஒரு வரலாற்று முறை ஆய்வு**
செல்வராசன் டி, எம் ஃபில், ப க.

1. அடிப்படை நிலை 2. உடம்படுமெய்களின் தோற்றம் 3. தொல்காப்பியரும் உடம்படுமெய்களும் 4. கல்வெட்டும் உடம்படுமெய்களும் 5 உடம்படுமெய்கள்-I 6. உடம்படு மெய்களின் தகுதிகள்-II 7. வினையும் பயனும் 8. இலக்கண நூல்களும் உடம்படுமெய்களும் 9. உரையாசிரியர்களும் உடம்படுமெய்களும் 10. உடம்படுமெய்கள் தவிர்தல் 12. இக்காலத்தில் உடம்படுமெய்கள்.

2. **எழுத்துச் சீர்திருத்தம்**
பாலசுந்தரம் இரா, எம். ஃபில், த து.

1. முன்னுரை 2 எழுத்துச் சீர்திருத்த ஆராய்ச்சியின் வரலாறு 3. எழுத்துச் சீர்திருத்தக் கோட்பாடு 4. உயி ரெழுத்துகளில் சீர்திருத்தம் 5. மெய்யெழுத்துகளில் சீர் திருத்தம் 6. உயிர்மெய்யெழுத்துகளில் சீர்திருத்தம் 7. பொறி களும் எழுத்துச் சீர்திருத்தமும் 8. முடிவுரை.

3. **தமிழிலக்கணம் கற்பிக்கும் முறைகள் சேனாவரையர் உரை வழி ஆய்வு'**
அம்சா ப, எம்.ஃபில், ப.க.

1. நுழைவாயில் 2. முன்னுரை 3. சேனாவரையர் வர லாறும் உரைத்திறனும் 4. இலக்கணம் கற்பித்தல் 5. சேனா வரையர் பின்பற்றிய முறைகள் 6. நிறைவுரை.

4. **தமிழில் வினையெச்சங்கள்** (வரலாற்றாய்வு)
மாதையன் பெ, பிஎச். டி, த. து.

1. முன்னுரை 2. செய்தென் எச்சம் 3. செயவென் எச்சம் 4. செயினென் எச்சம் 5. செய்யாவென் எச்சம் 6. செய்யூ

---

**சுருக்கக் குறியீட்டு விளக்கம்**

கு. அ. க—கும்பகோணம் அரசினர் ஆண்கள் கல்லூரி
த. து. —சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை.
ப. க. —பச்சையப்பர் கல்லூரி.
மா. க —மாநிலக் கல்லூரி.

வென் எச்சம் 7. செய்பென் எச்சம் 8. செய்தெனவென் எச்சம் 9. கூட்டு வினை எச்சம் 10. இக்கால வினையெச்சம் 11. வினை எச்சங்களும் காலக் கோட்பாடும் 12. நேரக்கிளவியும் வினை எச்சமும் 13. வினையெச்சங்களின் தொடரியல் செயற்பாடுகள் 14. வினை உரிகளும் வினை உரி மயக்கங்களும் 15. முடிவுரை.

5. **Diglossic Situation in Tamil**
Deiva Sundaram N, Ph. D.

1. The defination of Diglossia 2. Tamil Diglossia 3. The various function of the literary and spoken varieties of Tamil 4. Phonology 5. Morpho-Phonemics 6. Morphology and syntax...7. Mutual influence 8. Distance between the literary and spoken forms 9. Towards a common variety.

## II. சங்க இலக்கியம்

6. **கபிலர் பாடல்களில் அவலம்**
முகம்மது கௌஸ் அ, எம். ஃபில், ப.க.

1. முன்னுரை 2. கபிலர் வரலாறு 3. அவலம் 4. அகத்திணைப் பாடல்களில் அவலம் 5 நிறைவுரை.

7. **சங்க இலக்கியத்தில் ஒப்பனைக் கலை**
வரதராசன் வெ, எம்.ஃபில், த. து.

1. ஒப்பனையில் ஆடைகள் 2. ஒப்பனையில் அணிகலன்கள் 3. கூந்தல் ஒப்பனை 4. ஒப்பனையில் மலர்களும் மாலைகளும் 5. ஒப்பனையில் நறுமணப் பொருள்களும் நிறமூட்டும் பொருள்களும் 6. ஒப்பனைக்குப்பயன்பட்ட கருவி 7. இலக்கிய மாந்தர்கள் ஒப்பனைகள்.

8. **சங்க இலக்கியத்தில் தோழி**
சரளா இரா, பிஎச். டி.

1. தோழி ஓர் அறிமுகம் 2. இலக்கணத்தில் தோழி 3. தோழி தலைவி உறவுநிலை 4. தோழி தலைவன் உறவுநிலை 5. தோழி பிறர் உறவுநிலை 6. தோழியின் அறிவுத்திறன் 7. செயல்திறன்—களவு 8. செயல் திறன்–கற்பு 9. சங்க இலக்கியத் தோழியும் பிறமொழி இலக்கியத் தோழியும் 10. புல்வர்கள் கண்ட தோழி 11. வழிவழித் தோழி.

**சங்ககாலப் பண்டமாற்று நெறியும் காசுகளின் புழக்கமும்**
திருஞானசம்பந்தம் கே. ஏ, எம். ஃபில், ப. க.

1. நுழைவாயில் 2. தமிழர்களின் வாழ்க்கையும் பொருளாதார நிலையும் 3. பண்டமாற்றும் வாணிகமும் 4. காசுகள் பற்றிய விளக்கங்கள் 5. நிறைவுரை.

10. **சிலப்பதிகாரக் காலம்வரை இலக்கியங்களில் காணும் போரியல்—ஓர் ஆய்வு**
கந்தசாமி த, பிஎச். டி.

1. போர் வகையும் தலைமையும் 2. படை வகைகள் 3. அரண் வகைகள் 4. படைக்கலங்கள் 5. பழமையும் புதுமையும் 6. போரியல் நுட்பங்கள் 7. போர் மரபுகள்.

11. **பழந்தமிழ் இலக்கியத்தில் பூம்புகார்**
கருணாநிதி அ, எம். ஃபில், ப.க.

1. முன்னுரை 2. பூம்புகார் பொதுச்செய்திகள் 3. புதைபொருள்களில் பூம்புகார் 4 நாட்டுப்புற வழக்கில் புகாரும் பிறவும் 5. நகரமைப்பில் பூம்புகார் 6. சமுதாயமும் பண்பாடும் 7. பூம்புகாரும் விழாக்களும் 8 பூம்புகாரும் கலைகளும் 9. பூம்புகாரும் அரசியலும் 10. நிறைவுரை.

12. **புறநானூற்றில் பொதுவியல்திணை—ஓர் ஆய்வு**
மாணிக்கம் ஆ. எம், ஃபில், கு. அ. க.

13. **மலைபடுகடாம்—ஓர் ஆய்வு**
இளம்வழுதி அ, எம். ஃபில், த. து.

1. பெருங்கௌசிகனார் 2. நன்னன் சேய் நன்னன் 3. மலைபடுகடாம் காட்டும் சமுதாய நிலை 4. மலைபடுகடாம் காட்டும் சமய நிலை 5. அரசியல் நிலை 6. பழந்தமிழர் பண்பாடு 7. பாட்டுத்திறம்.

## III. நீதி இலக்கியம்

14. **திருக்குறள் காமத்துப்பால்—ஓர் ஆய்வு**
முருகேசன் ஜி, எம். ஃபில், கு. அ. க.

15. **நீதி சதகங்கள்—ஓர் ஆய்வு**
பாண்டுரங்கன் நா, பிஎச். டி.

1. நீதி சதகங்களின் தோற்றம் 2. சதக இலக்கியப் பொது பண்புகள் 3. நீதி சதகங்கள்—வகை தொகை 4. நீதி சதகங்

களின் இலக்கியப் பண்புகள் 5. நீதி சதகங்களில் பழந்தமிழ் இலக்கியங்களின் கருத்துகள் 6. நீதி சதகங்கள் உணர்த்தும் நீதிகளும் நாகரிகமும் 7. நீதி சதகங்களின் உயிர்க்கொள்கை.

16. **Tamil culture as revealed in Tirukural**
Muthuswamy E. S, Ph. D.

## IV. காவியம்

17. **சிலப்பதிகாரத்தில் காணும் பத்தினி வழிபாடு**
பத்மாவதி சு, எம். ஃபில், கு. அ. க.

18. **தமிழ்க் காப்பியங்களில் அவலச்சுவை**
கோபிநாத் அ, பி எச்.டி.

1. தமிழ்க் காப்பியங்கள்—பொதுநோக்கு 2. அவலச்சுவை—விளக்கம் 3. கணவர் இழப்பால் மனைவியர் அவலம் 4. மக்கள் இழப்பால் பெற்றோர் அவலம் 5. பெற்றோர் இழப்பால் மக்கள் அவலம் 6. உடன்பிறப்பாளர் நண்பர் பிற இழப்பால் அவலம் 7. அவலப் பாத்திரங்கள் 8 அவலச் சுவை வெளிப்படுத்தும் உத்திகள் 9. முடிவுரை.

19. **மணிமேகலையின் வழி நூல்கள்**
தேவராசன் எஸ், எம். ஃபில், ப. க.

1. பழமையிலே புது நினைவு பாய்ந்தெழுந்தால் போல 2. மணிமேகலை வெண்பா 3. பூங்கொடி 4. ஆபுத்திரன் அல்லது சமூக ஊழியன் 5. பொது நிறைவுரை.

20. **வில்லிபாரதத்தில் உணர்ச்சிக் கூறுகள்**
முருகேசன் கு, பி எச். டி.

## V. இடைக்கால இலக்கியம், பக்தி இலக்கியம்

21. **அப்பர், சுந்தரர் தேவாரப் பாடல்கள்—ஓர் ஒப்பாய்வு**
முரளி இரா, பிஎச். டி.

22. **The Philosophy of Tirumular with special reference to the Upadesam of the Tirumandiram**
Vimala K, Ph. D.

## VI. உரையாசிரியர்கள்

23. **இளம்பூரணரின் பொருள் இலக்கணக் கோட்பாடுகள்**
இராமமூர்த்தி எஸ், எம். ஃபில், கு. அ. க,

24. **இறையனார் களவியல் உரை—ஓர் ஆய்வு**
கோதண்டபாணி த, எம். ஃபில், கு. அ. க.

25. **நச்சினார்க்கினியரின் இலக்கிய உரைகளில் உணர்த்தும் உத்திகள் - ஓர் ஆய்வு**
அனுசுயா வி, எம். ஃபில், த. து.

1. முன்னுரை 2. உணர்த்தல்—சில அடிப்படைக் கோட்பாடுகள் 3. உச்சிமேல் புலவர் கொள் நச்சினார்க்கினியர் 4. நச்சினார்க்கினியரும் உணர்த்தும் உத்திகளும் 5. கவிதைப் பொருளும் உணர்த்தும் உத்திகளும் 6. மாட்டு 7. முடிவுரை.

26. **யாப்பருங்கலக்காரிகை.—குணசாகரர் உரை—ஓர் ஆய்வு.**
நாராயணசாமி சி. ஆர், எம். ஃபில், த. து.

1. யாப்பருங்கலக் காரிகை பதிப்புகள் 2. உரை அமைப்பு 3. உதாரண முதனிணைப்பு மரபு 4. மிகைக் கோட்பாடு 5. உரைச் சிறப்பு.

## VII. சிற்றிலக்கியம்

27. **அருணாசலக் கவிராயரின் இராமநாடகக்கீர்த்தனை—ஓர் ஆய்வு**
அலமேலு ரிஷி ஏ. ஆர், எம். ஃபில், த து.

1. அருணாசலக் கவிராயரின் வாழ்க்கை வரலாறு 2. இராம நாடகத் தோற்றம் 3. இராம நாடக வரலாறு 4. இராம நாடகத்தில் மொழிநடை 5. இராம நாடகத்தில் காணும் சில அரிய செய்திகள்.

28. **கோபாலகிருஷ்ண பாரதியின் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை-ஒரு திறனாய்வு**
சுந்தரேசன் எஸ், எம். ஃபில், கு. அ. க.

## VIII. நாட்டுப்புற இலக்கியம்

29. **தென்னார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள்**
இராமநாதன் ஆ, பிச். டி.

1. நாட்டுப்புறப் பாடல்கள் வகைகள் 2. தென்னார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள்—ஒரு பொதுக் கண்ணோட்டம் 3. குடும்ப அமைப்பு 4. சமுதாய அமைப்பு 5. நாகரிகமும் பண்பாடும் 6. முடிவுரை.

## IX. ஒப்பிலக்கியம்

30. **புறநானூறும் திருக்குறளும் காட்டும் இறைமாட்சி—ஓர் ஒப்பாய்வு**
வேணுகோபாலன் தி, எம். ஃபில், த து.

1. தோற்றுவாய் 2. வையகம் கண்ட பல்வகை அரசு முறைகளும் தமிழகமும் 3. அரசின் தோற்றம் குறித்த பல்வேறு கொள்கைகளும் பழந்தமிழர் அரசியலில் அவை பெறுமிடமும் 4. புறநானூறும் திருக்குறளும் 5. புறநானூறு காட்டும் அரசன் 6. இறைமாட்சி 7. ஒப்பாய்வு.

## X. இக்கால இலக்கியம்

31. **A Comparative study of the minor women Characters in Kambaramayanam and Talasi ramaynam.**
Ramanathan Tara, M,Phil.

32. **அண்ணாவின் சொற்பொழிவுகள் ஓர் ஆய்வு**
செல்வ கணபதி, எம். ஃபில், மா. க.

1. முன்னுரை 2. சொற்பொழிவுக் கலையும் அண்ணாவும் 3. அண்ணாவின் சொற்பொழிவுக்கலை—சில சிறப்புகள் 4. தமிழ்ப் பண்பாடும் சமயமும் 5. மொழி, இலக்கியம், அரசியல் சிந்தனைகள் 6. முடிவுரை.

33. **அப்துல் ரகுமான் பால்வீதி—ஓர் ஆய்வு**
இலலிதா தேவி க, எம். ஃபில், ப. க.

1. அறிமுகம் 2. புதுக்கவிதையின் தோற்றமும் வரலாறும் 3. அப்துல்ரகுமான் படைப்புகள் 4-8. பால்வீதி உள்ளடக்கம், வடிவம்; படிமம், குறியீடு, முடிபுகள்.

34. **அலைஓசை—ஓர் ஆய்வு**
இராதாகிருட்டிணன் தெ. சீ, எம், ஃபில், ப. க.

1. நாவல்கள் அலைஓசையைத் தேர்ந்தெடுத்த காரணம் 2. கதையும் கதைப்பின்னலும் 3. கதைப்பின்னணி காலம் இடம் 4. பாத்திரப்படைப்பு 5. சமுதாயச் சிந்தனைகள் 6. அலைஓசையும் வரலாறும் 7. ஆசிரியர் பின்பற்றும் உத்திகள் 8. கல்கியின் நடை 9. நிறைவுரை.

35. **அறிஞர் அண்ணா நாடகங்கள்—ஓர் ஆய்வு**
சாந்தாமணி வெ, எம். ஃபில், மா. க.

1. சாதி சமய பேதமற்ற சமுதாயம் காண விழையும் மாந்தர்கள் 2. சமுதாயத்தில் மகளிர் நிலை பற்றிப் பேசும் மாந்தர்கள் 3. சமநிலைச் சமுதாயம் காண விழையும் மாந்தர்கள் 4. மூடநடம்பிக்கைகளைப் போக்க அண்ணா படைத்த மாந்தர்கள் 5 இன உணர்வு, மொழி உணர்வு, நாட்டுப்பற்று வெளியிடும் மாந்தர்கள்.

36. **1947 ஆம் ஆண்டு வரையிலான இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் காணப்படும் சமுதாயச் சிக்கல்கள்**
யோகீசுவரன் பிள்ளை பி, பிஎச். டி.

1. முன்னுரை 2 இயக்கங்கள் 3. சமயம் 4. சாதி 5. பெண்கள் 5 திருமணம் 7. முடிவுரை.

37. **ஆர். சூடாமணியின் சிறுகதைகள்—ஓர் ஆய்வு**
ரீத்தா கௌரி வ. இல, எம். ஃபில், த. து.

1. பொது முன்னுரை 2. கதைத்தலைப்புகள் 3. கதை அமைப்பு 4. கதைக் கருவும் பொதுமை நோக்கமும் 5. கதை மாந்தர் 6. மொழிநடை, 7. முடிவுரை.

38. **இக்காலக் கவிதைகளில் சிலப்பதிகாரத்தின் செல்வாக்கு**
சவரியப்பன் அ, எம். ஃபில், ப. க.

1. முன்னுரை 2 கண்ணகி புரட்சிக் காப்பியம் 3. விதியோ? வினையே? 4. சிலம்பின் சிறுநகை 5. மாதவி காவியம் 6. தனிக்கவிதைகள் 7. நிறைவுரை.

39. **இந்திரா பார்த்தசாரதியின் சிறுகதைகள்—ஒரு திறனாய்வு**
சண்முகவேலு ஆர், எம். ஃபில், கு. அ. க.

40. **ஹசனின் சிந்துநதிக்கரையினிலே—ஓர் ஆய்வு**
முகம்மது அசன் நா, எம். ஃபில், ப.க.

1. முன்னுரை 2. நாவல் 3. நாவலாசிரியர் ஹஸன் 4 காலமும் களமும் 5. கதைப்பின்னல் 6. பாத்திரப் படைப்பு 7. நடை 8. வரலாற்றுச் செய்திகள் 9 பிற மொழிச் சொற்கள் 10. முடிவுரை.

41. **கண்ணதாசன் கவிதைகள்—ஓர் ஆய்வு**
வேங்கடபதி இரா, பிஎச்.டி.

1. இருபதாம் நூற்றாண்டின் தமிழ்க்கவிதைச் சூழல் 2. நாட்டொருமைப்பாடு 3. சமுதாயச் சிந்தனைகள் 4. பக்தி நெறி 5. கையறுநிலைக் கவிதைகள் 6. தத்துவம் 7. கவிதை, கவிஞன் பற்றிய கருத்துகள் 8. உவமை 9. யாப்பு,

42. **கலைஞரின் கவிதைகள்—ஒரு திறனாய்வு.**
சகுந்தலா தெ, எம்.ஃபில், மா. க.

1. கவிதையும் யாப்பும் 2—5. கலைஞரின் உவமைத்திறன், கற்பனைத் திறன், சொல்லாட்சி, மொழிநடை 6. இராமாயணமும் கலைஞரின் சிந்தனைகளும் 7. கலைஞரும் சமூகமும்.

43. **கலைஞரின் கவிதைகள்—ஒரு திறனாய்வு**
சுனந்தாதேவி சு, எம் ஃபில், த.து.

1. இலக்கிய மரபும் கலைஞரும் ?. கலைஞரும் சிலேடையும் 3. இலக்கிய உத்தியும் நடையும் 3. கலைஞரின் கவிதைகளில் சமுதாயம் 5 கலைஞர் பாடிய இலக்கிய—அரசியல் தலைவர்கள்.

44. **கலைஞரின் சிலப்பதிகாரம் நாடகக்காப்பியம்—ஓர் ஆய்வு**
பாரிஜாதம் இரா, எம். ஃபில்,மா. க.

45. **கலைஞர் கருணாநிதியின் சிறுகதைகள்—ஒரு திறனாய்வு**
ஆறுமுகசாமி க. சி., எம். ஃபில், மா. க.

1. முன்னுரை 2. நுவல் பொருள் 3. வடிவம் 4. மொழி நடை 5. முடிவுரை.

46. **கலைவாணரின் 'உதயம்'—ஓர் ஆய்வு**
கணேசன் நல், எம் ஃபில், கு.அ.க.

1. இருபதாம் நூற்றாண்டுக் காப்பிய வளர்ச்சி 2. ஆசிரியரின் வாழ்க்கையும் பிற இலக்கியங்களும் 3. உதயம் ஒரு உருவகக் காப்பியம் 4. வரலாறும் இலக்கியமும் 5. காப்பியப் புனைதிறன் 6. பா நடை.

47. **கவிஞர் சுரதாவின் 'தேன் மழை' (ஓர் ஆய்வு)**
நடேசன் இரா, எம். ஃபில், ப.க.

1. முன்னுரை 2. குறுங்காவியம் 3. சமுதாயச் சிந்தனைகள் 4. உவமை அழகு 5. இயற்கையும் கற்பனையும் 6. முடிவுரை

48. **கவிஞர் முடியரசன் கவிதைகள்—ஒரு திறனாய்வு**
நாகராசன் ஜி, எம். ஃபில், கு. அ. க.

49. **கவியோகி சுத்தானந்த பாரதியாரின் 'யோக சித்தி'—ஒரு திறனாய்வு**
அம்மையப்பன் சிவ, எம். ஃபில், ப. க.

1. கவியோகி சுத்தானந்த பாரதியார்—ஓர் அறிமுகம் 2. யோகசித்தி ஒரு விளக்கம் 3. யோகசித்தி காட்டும் அற வாழ்வு 4. யோகசித்தி கூறும் பொருள் வாழ்வு 5. யோக சித்தி—திருக்குறள்—ஓர் ஒப்பாய்வு 6. யோகசித்தி—ஒரு மதிப்பீடு 7. பின்னிணைப்புகள்.

50. **கி. ராஜநாராயணனின் சிறுகதைத்திறன்**
சுதந்திரமுத்து மு., எம். ஃபில், த. து.
1. பொருள் நிலை 2. கலைநிலை 3. திறன்நிலை.

51. **கோவி. மணிசேகரனின் 'யாகசாலை'யில் கீதா—ஒரு பார்வை**
ஜெகதாம்பாள் கு, எம். ஃபில், ப. க.

1. சமுதாயமும் பண்பாடுகளும் 2. கதைப்பின்னலும் கதைத் தலைவியும் 3. கீதாவின் வாழ்வில் விதியின் பங்கு 4. கீதாவின் பண்புநலன்கள் 5. துணைப்பாத்திரங்களின் இயக்கம் 6. அறிவுரையும் அறவுரையும்.

52. **சமுத்திரத்தின் சிறுகதைகள்—ஓர் ஆய்வு**
துரைசாமி கு, எம். ஃபில் ப.க.

1. கருதுபொருள் 2. கதைப் பின்னல் 3. கதை மாந்தர் படைப்பு 4. சமுதாய நோக்கு 5. நடை நலன் 6. இன்றைய தமிழ்ச் சிறு கதையில் சமுத்திரத்தின் பங்கு 7. ஆசிரியரின் கதைத் திறனும் கலை நலனும்.

53. **சாண பாஸ்கரின் பூகுப் ஜுலைகா—ஒரு திறனாய்வு**
காந்திமதிநாதன் டி. வி, எம். ஃபில், கு.அ.க.

54. **சுந்தரராசாமி சிறுகவிதைகள்—ஓர் ஆய்வு**
கனகராசன் டி, எம். ஃபில், கு. அ.க.

55. **ஜெகசிற்பியனின் சொர்க்கத்தின் நிழல்**
சுப்பிரமணியன் எல், எம். ஃபில், ப. க.

1. இன்றைய சமூக நாவல்களும் ஜெகசிற்பியனின் படைப் பாற்றலும் 2. சொர்க்கத்தின் நிழலில் பாத்திரப் படைப்பு 3. ஜெகசிற்பியனின் சமுதாயச் சிந்தனைகள் 4. ஆசிரியர் கையாளும் உத்திகள் 5. நடைநலம் 6. நிறைவுரை.

56. **ஜெயகாந்தனின் 'ஜயஜய சங்கர'—ஓர் ஆய்வு**
ஞானப்பிரகாசம் ஏ. சி, எம். ஃபில், ப க.

1. கதை, பின்னல், பின்னணி 2. கலைத்திறன் 3. நடை 4. பாத்திரப் படைப்பு 5. சமுதாயச் சிந்தனைகள் 6. நிறைவுரை.

57. **டாக்டர் மு. வ. வின் பெற்ற மனம்—ஓர் ஆய்வு**
சரோசினி பெ , எம். ஃபில், த.து.

1. கதையும் கதைப்பின்னலும் 2. கதைமாந்தர் சிறப்பு 3. உளவியல் கருத்துகள் 4. மு.வ.வின் சமுதாயப் பார்வை 5. புதினச் சிறப்புகள்.

58. **டாக்டர் மு.வ. வின் 'வாடாமலர்'. ஓர் ஆய்வு**
முனியம்மாள் நா, எம். ஃபில், த. து.

1. முன்னுரை 2. கதையும் மாந்தரும் 3. அறக்கருத்துகள் 4. சமுதாயம்—ஒரு கண்ணோட்டம் 5. குடும்பச் சிக்கல் 6. முடிவுரை.

59. **தமிழன்பன் புதுக்கவிதைகள்—ஓர் ஆய்வு**
அருச்சுன தட்சிணாமூர்த்தி, எம். ஃபில். ப. க.

1. புதுக்கவிதைகள் 2. அரசியற் கவிதைகள் 3. படிமங்கள் 4. குறியீடுகள் 5. முடிவுரை.

60 **தமிழில் மேடை நாடகம்** (1967—78)
தங்கராசு எம், பிஎச்.டி.

61. **தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம்**
இராசேந்திரன் சே, பிஎச்.டி.

1. திராவிட இயக்க வரலாறு 2. தமிழ் இலக்கிய வளர்ச்சியில் திராவிட இயக்கத்தின் தாக்கம் 3. தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் இயல்புகள்.

62. **தமிழ் நாவல்களில் நனவோடை**
பச்சையப்பன் எம். வீ, எம். ஃபில், ப. க.

1. முன்னுரை 2. நனவோடை 3. உத்திகள் 4. நினைவுகளும் குறியீடுகள் 5. மன ஆழம் 6. மதிப்பீடு.

63. **திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்புக்கள்—ஓர் ஆய்வு**
வனசாட்சி வி. கே, எம். ஃபில், த.து,

1. திரு.வி.க.வின் வாழ்க்கை 2. படைப்புகள் 3. திரு.வி.க. வின் வாழ்க்கைக் குறிப்பிற்கு முன்னும் பின்னும் வெளி

வந்துள்ள தன் வரலாற்று நூல்கள் 4. திரு.வி.க. வாழ்க்கைக் குறிப்பின் அமைப்பும் சிறப்பும்5-6. திரு.வி.க.வும்-அரசியலும், மொழிநடையும் 7. சமுதாயமும் வாழ்க்கை நெறியும் 8. முடிவுரை.

64. **திரு வி.க.வின் செய்யுள் நூல்கள்—ஒரு ஆய்வு**
வேலாயுதம் வை, எம்.ஃபில், கு.அ க.

65. **திரு.வி.க.வின் முன்னுரைகள்—ஓர் ஆய்வு**
இராமரத்தினம் அ, எம்.ஃபில், ,த.து.

1. முன்னுரையின் தோற்றமும் வளர்ச்சியும் 2. திரு.வி.க. வின் முன்னுரைகள் ஒரு வகை தொகை விளக்கம் 3. திரு. வி.க வின் முன்னுரைகள் நோக்கும் அமைப்பும் 4. திரு.வி.க. வின் முன்னுரைகள் உணர்த்தும் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள் 5. திரு. வி. க.வின் கருத்துகள் 6. திரு. வி. க. வின் முன்னுரை நடைப் பண்புகள்.

66. **திரு. வி. க.வும் காந்தியக் கோட்பாடுகளும்**
மகாலிங்கம் ப, எம்.ஃபில், ப. க.

1. திரு.வி.க.வும் காந்தியடிகளும் 2. தனிமனித-சமுதாய-இயற்கை வாழ்வுக் கோட்பாடுகள் 3. பெண்ணுரிமைக் கோட்பாடு 4. அரசியல்—பொருளியல் கோட்பாடு 5. மொழிக் கோட்பாடு 6. தீண்டாமை—வகுப்புவாத ஒழிப்புக் கோட்பாடுகள் 7. சமயக் கோட்பாடும் உண்மைக் கடைப்பிடித்தல் கோட்பாடும்.

67. **தோழர் ஜீவாவின் [ப. ஜீவானந்தம்] பாடல்கள்—ஓர் ஆய்வு**
கறுப்புசாமி சு, எம்.ஃபில், ப. க.

1. முன்னுரை 2. தமிழ் இலக்கியங்கள் காட்டும் சமுதாய வருக்கப் பிரிவுகள் 3. தத்துவ விளக்கங்கள் 4—6. சமுதாய பொருளாதார, அரசியல்—விடுதலைப் பாடல்கள்.

68. **நாமக்கல் கவிஞரின் மலைக்கள்ளன்—ஓர் ஆய்வு**
பரமசிவம் ந, எம்.ஃபில், ப. க.

1. தமிழ் நாவல் இலக்கியம் 2. நாமக்கல் கவிஞரும் மலைக் கள்ளன் நாவலும் 3. கதைப் பொருளும் கதைப் பின்னலும் 4. கதைமாந்தர்—பண்பு நலன் 5. சமூகப் பொருளாதார நிலைமைகள் 6. நிறைவுரை.

69. நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளையின் 'அவளும் அவனும்'—ஒரு திறனாய்வு
இளம்பெருவழுதி கா, எம்.ஃபில், ப. க.

1. முன்னுரை 2. அவளும் அவனும் கதைச் சுருக்கம் 3. காப்பியத்தில் கதை மாந்தர் படைப்பு 4. காப்பியத்தில் காந்தீயக் கோட்பாடுகள்

70. நாவலர் சோமசுந்தர பாரதியாரின் செய்யுள் நூல்கள்—ஓர் ஆய்வு
கலியபெருமாள் அ, எம்.ஃபில், கு. அ. க.

1. முன்னுரை 2. நூலமைப்பு 3. அகப்பொருள் இலக்கண அமைதி 4. கவித்திறம் 5. யாப்பு நிலை 6. ஆசிரியர் உள்ளம்.

71. பம்மல் சம்பந்த முதலியார் சமூக நாடகங்களில் நகைச்சுவை
விசாலாட்சி ப. பா, எம்.ஃபில், த. து.

1. முன்னுரை 2. சமூக நாடகங்கள் 3. சமூகச் சீர்திருத்த மாந்தர்கள் 4. நகைச்சுவை 5. நாடக உத்திகள் 6. நிறைவுரை.

72. 'பள்ளிகொண்டபுரம்'—ஓர் ஆய்வு
சடகோபன் க.ச, எம்.ஃபில் ப.க

1. நூலாசிரியர் அறிமுகம் 2. நீல. பத்மநாபன் நாவல்கள் – ஒரு பார்வை 3. கதை, பின்னல், பின்னணி 4 கதைமாந்தர் 5. கலைத்திறன் 6. சமுதாயச் செய்திகள் 7. நிறைவுரை.

73. பாரதிதாசனுக்குப் பிற்பட்ட கவிதைகளில் மனப்போராட்டம்—ஓர் அறிமுக ஆய்வு
சிவராஜ் து, எம்.ஃபில், ப.க.

1. முன்னுரை 2. மனமும் மனிதனும் 3. மனச்சிக்கல் 4. மனத்தின் உட்பகைகள் 5. மனப்போரின் போக்குகள் 6. மன நல வழிகள் 7. மனவிடுதலையும் வெற்றியும் 8. முடிவுரை.

74. பாரதியார் பாடல்களில் இயற்கை
கந்தசாமி பூ ச, எம்.ஃபில், ப.க.

1. தோத்திரப் பாக்களில் துலங்கிடும் இயற்கை 2. தேசியப் பாக்களில் திகழ்ந்திடும் இயற்கை 3. பல்சுவைப் பாக்களில் பயின்றிடும் இயற்கை 4. காவியங்களிலே கலந்துறை இயற்கை 5. தனிப்பாடல்களில் தழைத்திடும் இயற்கை 6. நிறைவுரை.

75. **பாரதியின் சமயம்**
தனுஷ்கோடி சுப, எம்ஃபில் த து.

1. மனிதனும் சமயமும் 2. பத்தொன்பதாம் நூற்றாண்டும் பாரதியார் தோற்றமும் 3. பாரதியும் வேதங்களும் 4. பாரதியும் வேதாந்தமும் 5. பாரதியும் பக்தியும்.

76. **புலவர் தி. தண்டபாணியின் 'பெருந்தேவி'—ஓர் ஆய்வு.**
கோவிந்தராசன் பெ.சு, எம் ஃபில், ப.க

1. தமிழ் வரலாற்று நாவல்கள்—ஓர் அறிமுகம் 2. பெருந் தேவி நாவலும் நாவலாசிரியரும் 3-5. பெருந்தேவி நாவலில் கரு பின்னல்-பின்னணி, கதைமாந்தர் பண்பும் பங்கும், கலைத்திறன், சமுதாயச் சிந்தனைகள் 7. நிறைவுரை.

77. **பெரியாரின் மொழிக்கோட்பாடு**
அஞ்சலா ம, எம்.ஃபில், மா.க.

1. தமிழ்மொழிச் சிறப்பும் தமிழின உணர்வும் 2. தமிழரை மேம்படுத்தும் உலகமொழி 3. தமிழும் இந்தி எதிர்ப்பும் 4. பெரியாரின் தமிழ் இலக்கியப் பார்வை 5. தமிழ்மொழிப் புதுமையாக்கம்.

78. **பெரியார் ஈ. வே. ரா. சிந்தனைகளில் பெண்கள்—ஓர் ஆய்வு**
அரசு மணிமேகலை, எம்.ஃபில், த.து.
1. தமிழ்ச் சமுதாயத்தில் பெண்கள் நிலை 2. பெண்ணடிமைக் கூறுகள் 3. விடிவுச் சிந்தனைகள் 4. பெரியார் தந்த சிறப்பு 5. பெரியாரின் புரட்சிப் பெண்.

79. **பெரியாரும் அரசியலும்—ஓர் ஆய்வு**
முத்துசாமி அ, எம்.ஃபில், மா. க.

1—2,. பெரியாரும்-தமிழக அரசியலும், காங்கிரசும் 3. தன் மான இயக்கப் பணி 4-6 பெரியாரும்-கம்யூனிசமும், நீதிக் கட்சியும், திராவிடர் கழகமும்.

80. **பெரியாரும் இயக்கங்களும்**
கலாமணி ம, எம்.ஃபில், மா.க.

1. இயக்கங்களின் இயக்கம் 2. நாட்டு விடுதலை இயக்கம் 3. பகுத்தறிவு இயக்கம் 4. மொழி விடுதலை இயக்கம் 5. இயக்கங்களின் விளைவுகள்.

81. **பெரியாரும் சமுதாய மறுமலர்ச்சியும்**
பிரபாகரி க, எம்.ஃபில், மா.க.

1. முன்னுரை 2. கல்வி 3. தொழில் 4. சமூக சமத்துவம் 5. பெண்கள் சமத்துவமும் விடுதலையும் 6. மூடநம்பிக்கைகள் 7. முடிவுரை.

82. **பெரியாரும் சுயமரியாதை இயக்கமும்**
ஆறுமுகம் பிள்ளை ப, எம்.ஃபில், மா. க.

1. சமுதாயச் சீர்திருத்த இயக்கங்கள் 2. சுயமரியாதை இயக்கத் தொடக்க கால வரலாறு 3. சுயமரியாதை இயக்கப் பாதையும் பணிகளும் 4. சுயமரியாதை இயக்கக் கொள்கை விளக்கம்.

83. **'போக்கிடம்'—ஒரு திறனாய்வு**
கோவிந்தன் கு, எம்.ஃபில், ப.க.

1. போக்கிடம் - கதை - கதைக்கரு - கதைப்பின்னல்-கதைப் பின்னணி-உத்திகள் 2. கதைமாந்தர்கள் 3. போக்கிடம் காட்டும் சமுதாயமும் வட்டார வாழ்க்கை முறையும்.

84. **மெரீனாவின் நாடகங்கள்—ஓர் ஆய்வு**
வின்சென்ட் சுதாகர் ம, எம்.ஃபில், ப க.

1. மெரீனாவின் நாடகங்கள்—ஓர் அறிமுகம் 2. நாடகத்தின் கதைப்பொருள்கள் 3. கதைப்பின்னல் 4. நாடக மாந்தர்கள் 5. நாடகத்தில் மொழி நடை 6. கலைக் கூறுகள் 7. முடிவுரை.

85. **ர. சு. நல்லபெருமாளின் 'போராட்டங்கள்'—ஓர் ஆய்வு**
நல்லமுத்து ஓ.கி, எம்.ஃபில், ப.க.

1. நல்லபெருமாளின் நாவல்கள் - ஒரு கண்ணோட்டம் 2. பின்னணி 3. கதைக்கருவும் பின்னலும் 4. கதை மாந்தர் படைப்பு 5. சமுதாயச் சிந்தனைகள் 6. உத்தி முறைகள் 7. நிறைவுரை.

86. **ரா. ராகவய்யங்காரின் 'பாரிகாதை'—ஒரு திறனாய்வு**
சுப்பிரமணியன் தி. க, எம்.ஃபில், கு.அ.க.

87. **வரலாற்று நாவல்களில் சேர நாடு—ஓர் ஆய்வு**
ஆறுமுகம் க, எம்.ஃபில், ப.க.

1. வரலாற்று நாவல்கள் 2. வரலாற்று நாவல்களின் களங்கள் 3. கதைப்போக்கும் கதைப்பின்னலும் 4. சேர நாட்டு வரலாற்று நாவல்களும் பின்புலமும் புனைவும் 5. மாந்தர்கள் 6. சேரநாட்டவர் பண்பாடு 7. நாவல் நடையும் பழந்தமிழ்ச் சொற்களும் 8. நிறைவுரை.

88. **வள்ளலார் செய்த புரட்சி**
பழநி வி. மு. எம்.ஃபில், த.து.

1. வழிபாடுகளின் தோற்றமும் பக்திப் பாடல்களின் வரலாறும் 2. காலச்சூழல் 3. வாழ்க்கை 4. புறவாழ்க்கை 5. ஆன்ம வளர்ச்சி 6. பல்துறைப் புரட்சி 7. வாழையடி வாழை 8. சமயப் புரட்சி 9. சமுதாயப் புரட்சி 10. அருட்பா மருட்பா 11. ஆய்வுத் தொகுப்பு.

89. **வாணிதாசன் கவிதைகளில் இயற்கை**
வடிவேலு ஆர், எம்.ஃபில், கு. அ. க.

90. **விந்தனின் நாவல்கள்—ஓர் ஆய்வு**
தமிழரசி மா. ரா, எம்.ஃபில், த. து.

1. விந்தன் வரலாறும் நூல்களும் 2. நாவல்களின் அமைப்பு 3. பாலும் பாவையும்—ஒரு மதிப்பீடு 4. நாவல்கள் காட்டும் சமுதாயம் 5. விந்தன்—நாவலாசிரியர்.

91. **வெ. ப. சுப்பிரமணிய முதலியார் செய்யுள் நூல்கள்—ஒரு திறனாய்வு**

திருவேங்கடம் கே. கு, எம்.ஃபில், கு. அ. க.

92. **'வேங்கையின் வேந்தன்'—ஓர் ஆய்வு**
பட்டாபிராமன் கா, எம் ஃபில், ப. க.

1. வேங்கையின் வேந்தன்-ஓர் அறிமுகம் 2. கதைப்பின்னலும் கட்டுக்கோப்பும் 3. பாத்திரப் படைப்பு 4. யாப்பும் நடையும் 5. நாடக உத்திகளும் நயங்களும்.

## XI. வரலாறு, பண்பாடு, பிற

93. **தமிழர் ஆடைகள்**
பகவதி அம்மாள் கே, பிஎச். டி.

1. ஆடை பற்றிய சொற்கள் 2. தமிழர் உடைகள்—உடுத்தும் முறை 3. பழக்க வழக்கங்கள்—நம்பிக்கைகள் 4. ஆடையும் தொழிலும் 5. முடிவுரை.

94. **தமிழரின் நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும்**
காந்தி க, பிஎச். டி.

1. தமிழரின் நம்பிக்கைகள், 2. பழக்க வழக்கங்கள், 3. நம்பிக்கை வயப்பட்ட பழக்க வழக்கங்கள், 4. மீவியல் பாற்றல்கள் பற்றிய நம்பிக்கைகள், 5. வாழ்வியல் மரபுகள்.

95. **தமிழ் நூல்களில் தமிழ்மொழி, தமிழ் இனம், தமிழ் நாடு**
கிருஷ்ணன் ப, பிஎச். டி.

1. தமிழின உணர்வின் தோற்றமும் வளர்ச்சியும் 2-8. தொல்காப்பியத்தில், சங்க இலக்கியங்களில், இரட்டைக் காப்பியங்களில், சமய இலக்கியங்களில், சிற்றிலக்கியங்களில், ஆசாரிய ஹிருதயத்தில், 19-ஆம் நூற்றாண்டில்—தமிழ் மொழி, தமிழ் இனம், தமிழ் நாடு.

96. **History of Printing and Publishing in Tamil Upto 1900 A.D.**
Mohanraj P.A, Ph. D.

**1978, 79-இல் அளிக்கப்பெற்று 1980-இல் பட்டம்பெற்ற எம்.லிட், பிஎச்.டி ஆய்வேடுகள்.**

97. **அகிலன் நாவல்களில் கதைமாந்தர்**
குருநாதன் இரா, பிஎச்.டி, 1979

1. அகிலன் நாவல்கள்—ஓர் ஆய்வு 2. நாவலும் கதை மாந்தரும் 3. தலைமைமாந்தர் பண்பு நலன்கள் 4. துணை மாந்தர் பண்பு நலன்கள் 5. சமுதாயமும் கதைமாந்தர்களும் 6. கதைமாந்தர் படைப்பில் கலைநுட்பத்திறன்.

98. **இருபதாம் நூற்றாண்டில் திருக்குறள் ஆராய்ச்சியின் வளர்ச்சி**
சத்தியம் தி.சு, பிஎச். டி. 1979

1. முன்னுரை 2. திருக்குறள் ஆராய்ச்சியின் வளர்ச்சி—சமயநோக்கில் 3. நடைமுறை வாழ்க்கைநோக்கில், 4. மொழி, இலக்கிய நோக்கில் 5. பொருளியல் நோக்கில் 6. அரசியல் நோக்கில் 7. அறிவியல் நோக்கில் 8. ஒப்பீட்டு நோக்கில் 9. திருக்குறள் கட்டுரைத் தொகுப்பு நூல்களில் 10. முடிவுரை

99. **20-ஆம் நூற்றாண்டுச் சமுதாய மறுமலர்ச்சிக்கு அண்ணாத்துரையின் சிறுகதை, புதினங்களின் கொடை**
சேது இரா, பிஎச்.டி. 1979

1. முன்னுரை 2. சமுதாயமும் மறுமலர்ச்சியும் இலக்கியமும் 3. கதைகள் புலப்படுத்தும் சமுதாயம் 4. கதைக்கலை 5. முடிவுரை.

100. **இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதைகளில் மார்க்சியக் கொள்கைகளின் தாக்கம்**
தான்யா கோ, பிஎச்.டி, 1979

1. மார்க்சியம் என்றால் என்ன? 2. இலக்கியம் பற்றி மார்க்சிய வாதிகளும் அல்லாதவர்களும் 3. ருஷ்யப் புரட்சியின் பாதிப்பு 4. பாரதியின் பாடல்களில் புரட்சிக் கருத்துகள் 5. பாரதிதாசன் பாடல்களில் மாக்சியக் கொள்கையின் வளர்ச்சியும் தேய்வும் 6. பட்டுக்கோட்டைக் கல்யாண சுந்தரமும் மார்க்சியக் கொள்கையும் 7. மனிதாபிமானமும் மார்க்சியமும் 8. ஈழத்துக் கவிதைகள் 9. மார்க்சியக் கவிஞர் கள் 10. மார்ச்சியப் பாதிப்பால் விளைந்த புதுக் கவிஞர்கள் 11. முடிவுரை.

101. **தமிழ் இலக்கியங்களில் வறுமைப் புனைவு**
அமிர்தலிங்கம் த, பிஎச் டி, 1979

102. **தமிழில் சமூக நாடகம்** (1800—1950)
கிருட்டிணசாமி வே, எம்.லிட், 1979

1. சமூக நாடகம் 2. நாடகத் தோற்றமும் வளர்ச்சியும் 3. நாடக வடிவங்கள் 4. சமூக நாடகத் தோற்றம் 5. முதல் சமூக நாடகம் 6. சமூகச் சீர்திருத்த நாடகங்கள் 7. நல்

வாழ்வு நாடகங்கள் 8. கொள்கை விளக்க நாடகங்கள் 9. நகைச்சுவை நாடகங்கள் 10. துப்பறியும் நாடகங்கள் 11. பிறமொழி நாடகங்கள் 12. குறிப்பிடத்தக்க சில நாடகங்கள் 13. முடிவுரை.

103. **தொல்காப்பியரின் இலக்கிய நெறிகள்**
இராசமாணிக்கம் வீ, பிஎச்.டி, 1978

1. இலக்கியம் 2. அகத்திணை அமைப்பு 3. கைகோள் 4. கூற்று மொழிகள் 5. இலக்கிய மாந்தர் 6. புறத்திணை அமைப்பு 7. இலக்கிய உணர்ச்சிகள் 8. இலக்கிய வடிவம் 9. வனப்பு 10. ஒலி நயங்கள் 11. உவமையின் வகைகள் 12. கற்பனை 13. சொல்லாட்சி 14. முடிவுரை.

104. **பழந்தமிழ் நூல்களில் ஒப்புமைப் பகுதிகள்**
கிருட்டிணா சஞ்சீவி திருமதி, பிஎச் டி, 1979

1. ஒப்பின் ஒலி ஒளி 2. ஒப்புரையின் உயர்வும் திருப்புரையின் திறமும் 3-5. தொல்காப்பியத் திருப்புரைகள்—முழு நூற்பாக்கள், பகுதி நூற்பாக்கள், சொற்றொடர்களும் சொற்களும் 6 தொல்காப்பியப் பாயிரமும் தொகை நூல்களும் 7. பிழிவுரை 1 நிறைவுரை.

105. **மறைமலை அடிகளாரின் இலக்கியப் படைப்புகள்**
செயப்பிரகாசு நா, பிஎச்.டி, 1979

1. அடிகளாரின் நூல்கள்—ஓர் அறிமுகம் 2. செய்யுள் நூல்கள் 3. கட்டுரை நூல்கள் 4. புதுக்கதை நூல்கள் 5 நாடகநூல்கள் 6. ஆராய்ச்சி நூல்கள் 7. அடிகளாரும் பிறபடைப்புகளும் 8. முடிவுரை.

106. **வள்ளுவமும் விவிலியமும்—ஓர் ஒப்பாய்வு**
அந்தனி ஜான் அழகையா வே, பிஎச்.டி, 1979

107. **வால்மீகி கம்பராமாயணங்களில் இயற்கை**
மணவாளன் கே. ஏ, பிஎச்.டி, 1979

1. இருவர் காட்டும் வாழ்க்கை 2 மலையும் குன்றும் 3. ஆறும் கடலும் 4. வானும் சுடரும் 5. நாடும் நகரமும் 6. நிலனும் பொழுதும் 7. உவமை 8. நீதிகள் 9. பாத்திரப் படைப்பு 10. தத்துவம்.

**108. A Comparative study of common vocabularies in Tamil and Malayalam**

Moorthy D, Ph.D, 1979

**109. Aspects of romanticism with a special reference to shelley and Bharati**

John Samuel G, ph.D, 1979

1. Introduction 2. Shelley and Bharati 3. Romantic individualism 4. The cult of womanhood and childhood 5. Romantic imagination 6. The cult of nature 7. Conclusion.

**110. Social novels in Tamil and Malayalam (1947—57) A comparative study**

Jayachandra Rabi Singh, ph.D, 1979

1. Introduction 2. Formative forces 3. Problems and social conditions during 1947—57. 4. Growth of social conciousness in Tamil and Malayalam novels 5. Society and the novel 6. View points on idealogical concepts 7. Types of problem 8, Literary attainment in relation to the social contents 9. Conclusion.

**111. The language of the Tamil dailies**

Manian T, Ph.D, 1979

# I. ஆய்வாளர்—அகரநிரல்

(எண்—வரிசை எண்ணைக் குறிக்கும்)

## II ஆய்வுத் தலைப்புகள்—அகரநிரல்

(எண்—வரிசை எண்ணைக் குறிக்கும்)

# எண்பதில் வசனநூல்களும் உரையும்

செ. வைத்தியலிங்கன்

உலகத்திலே காணலுறும் 'உள்ளது சிறத்தல்' (Evolution) என்ற கொள்கையடிப்படையில் ஏறக்குறைய எல்லாப் பொருள் களுமே வளர்ச்சியின் பாற்பட்டன எனலாம். உயிர்ப் பொருள்களே யல்லாமல், உயிரனைய மொழியும் கால இயக்க வளர்ச்சியின் பாற்பட்டதென்பது அநுபவம் காட்டும் உண்மை.

இக்கட்டுரைத் தலைப்பிற் கிணங்க எண்பதாம் ஆண்டிலே வெளியிடப்பெற்ற தமிழ் வசனநூல்களையும் உரைநூல்களையும் பற்றி ஆய்வு மதிப்பீடு புரிதல்வேண்டும்; இம் முயற்சிக்கு இயை பாக, வசனநூல்களும் உரைநூல்களும் தமிழில் தோற்றங்கொண்டு வளர்ந்து வரும் பாங்கினை முன்னோட்டமாக ஓரளவு அறிந்து கொள்ளுதல் பொருத்தமாகும். காரணம், இக்கட்டுரையாகிய கட்டடம் எழும்புதற்குப் பல்வேறு காலப்பகுதிகளிலே தமிழ்ச் சிந்தனையாளர்கள் பெரிதும் முயன்று அடிப்படையமைத்துத் தந்துள்ளனர் என்பதேயாகும்.

## உரையும் வசனமும்

மொழியின் உருவாக்கம் முதற்கண் மக்களிடையே உரை யாடலில் தொடங்கியிருக்குமென்றும், அந்த உரையாடலும் உரைநடையாக இருந்திருக்க வேண்டுமேயன்றிச் செய்யுளாக இருந்திராது என்றும் கூறுவர். அஃதாவது, உரையாடலையடுத்து இலக்கியம் உருவாகும்போது செய்யுளுக்கு முன்னதாக உரை நடையே தோன்றியிருத்தல் வேண்டுமென்றும் கூறுவர். 'தமிழ்

இலக்கியத்தில் இவ்வுரைநடை முன்தோன்ற, நெடுங்காலத்துக்குப் பின் இவ்வுரைநடைபோன்று அமைந்த சூத்திரங்கள் நூற்பாக்கள் தோன்றின. பின்னரே பாட்டுத் தோன்றிற்று எனல் பொருந்தும்'[1] எனக் கூறிச் செல்வது பொருளுரையாகும்.

மொழியானது இலக்கியமாக உருப்பெற்று வளரும்போது சில சிக்கல்கள் ஏற்பட்டன. புலவர்கள் தாம் ஆழ்ந்து சிந்தித்து வெளிப்படுத்த நினைக்கின்ற கருத்துக்களை, எழுத்தாணி கொண்டு முயன்றபோதும் சொற்செட்டு இயல்பாகத் தேவையா யிற்று; அந்த நிலையிலே உரைநடையினும் செய்யுளே தக்கதெனக் கொண்டனர். மேலும், யாப்பமைதியுடன் அமையும் செய்யு ளுறுப்புக்களும் ஓசை நலமும் நெட்டுருச் செய்யும் நினைவாற்ற லுக்குத் துணைநின்றன. பிறகு, இலக்கியங் கண்டதற்கு இலக்கணம் எழுதவேண்டிய இயல்பான தேவையேற்பட்டது. சில்வகையெழுத்திற் பல்வகைப் பொருளைச் செவ்வனாடியிற் செறித்தினிது விளக்கித் திட்பமும் நுட்பமும் அமைந்தனவாக இலக்கண நூற்பாக்கள் எழுதப்பட்டன. கருத்தூன்றிச் செய்யப் பெற்ற அந்த நூற்பாக்கள் ஒரு காலத்தில் மக்களுக்கு எளிதில் புரிந்தன; என்றாலும், காலப்போக்கில் ஓரளவே கற்றவர்க்கும் தாமே பயின்று புரிந்து கொள்ளக்கூடிய உரைநூல்கள் தேவைப் பட்டன. அஃதாவது, கற்றோர் வாயிலாகவே கேட்டுணர வேண்டியநிலையில் இலக்கியங்களும் இலக்கணங்களும் இருந்தமை யால், உரைநூல்கள் தேவைப்பட்டன.

## உரையாக்கம்

புலமை வித்தகர்கள் இயற்றிய இலக்கிய இலக்கண நூல் களைப் பொதுமக்களும் புரிந்து கொள்ளுமாறு விளக்கமாகித் துணை நின்றதே உரையெனல் தெளிவு. உரைநூல் வளர்ச்சியிலும் பல படிநிலைகள் உண்டு. சிலப்பதிகாரம் தோன்றிச் சில நூற்றாண்டுகள் வரையில் உரையெழுத யாரும் முற்படவில்லை யெனலாம். முதற்கண் **அரும்பதவுரையாசிரியர்** (இயற்பெயர் தெரியுமாறில்லை) எழுதிய **அரும்பதவுரை**. அஃதாவது, விளக்கக் குறிப்புரை வெளியிடப்பட்டது; அந்த உரையாலும் மக்கள் போதிய தெளிவும் மனநிறைவுங் கொள்ளாதபோது **அடியார்க்கு நல்லார்** தம் புலமையாற்றல் முற்றும் புலப்படும் வண்ணம் உரை கண்டார். அந்த **அடியார்க்கு நல்லாருரையால்** அக்காலக் கலை, பண்பாடு, நாகரிகம் பற்றிய நுண்கூறுகளெல்லாம் வெளிப்பட

வாய்ப்பு ஏற்பட்டது; ஒரு நேர்த்தியான உரையெழுத வேண்டு மெனின் பல்துறைப் புலமையும் வேண்டுமென்பது உணரப்பட்டது. வளர்ச்சிப் பாங்கினில் அடியார்க்கு நல்லாருரையினை அடியொற்றி நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார், பெருமழைப்புலவர் பொ. வே சோமசுந்தரனார் முதலிய பெருமக்களும் உரை யெழுதிச் சிலப்பதிகாரத்தைப் பதிப்பித்து மக்களுக்குத் தொண் டாற்றியுள்ளனர்.

இலக்கியத்திற்கும் இலக்கணத்திற்கும் தாம் தாம் கண்டு கொண்ட பார்வைக்கும் புலமைக்கும் பொருளநுபவத்திற்கும் ஏற்ப நல்லிசைப் புலவர்கள் உரைகாண்பது இயல்பு; இதனால், ஒரே இலக்கியத்திற்கும் ஒரே இலக்கணத்திற்குங்கூடப் பல்வேறு உரைகள் தோன்றலாயின. இலக்கியமாகிய திருக்குறளுக்கும் இலக்கணமாகிய தொல்காப்பியத்திற்கும் உரைநூல்கள் பலவாக இருத்தலை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

உரையமைப்பிலே **உரையின்** பொதுவிலக்கணத்தையும்,[2] **காண்டிகை உரை** இன்னதென்பதையும்,[3] **விருத்திஉரை** இன்ன தென்பதையும்[4] முதற்கண் தாம் எழுதிய நன்னூலில் பவணந்தி முனிவர் கூறிக் காட்டினார். அதனைப் பயின்ற புலவர்கள் நன்னூலுக்கே காண்டிகையுரைகளையும் விருத்தியுரைகளையும்[5] எழுதி ஆக்கம் புரிந்துள்ளனர். என்றாலும், பிற்காலத்தவர்கள் நன்னூல் விதிகளை அடியொற்றியே உரையெழுதி வருகின்றனர் என்று கூறவியலாது.

தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சேனாவரையர், தெய்வச்சிலையார் முதலிய பெருமக்கள் தத்தம் ஆய்வு நோக்கிலே நேர்த்தியான உரையாக்கங் கண்டுள்ளனர். அந்த உரைகள் தலைமுறை தலைமுறையாகப் பயிலப்பெற்று வருகின்றன; என்றாலும், அவற்றிற்கும் புலவர்களால் உரை விளக்கங்கள் எழுதவேண்டிய நிலை அண்மைக் காலத்தில் ஏற்பட்டுள்ளதைக் காணலாம்.

தொல்காப்பியமானது பெரும்புலவர் சிலரின் சிந்தனைகளைப் பெரிதுங் கிளறிவிட்டுள்ளது. மாதவச் சிவஞான சுவாமிகள் தம் ஆழ்ந்த புலமைத்திறத்தினை வெளிப்படுத்தும் பாங்கினில் **தொல்காப்பியப் பாயிரவிருத்தி**, **தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி** ஆகியவற்றை எழுதித் தமிழுலகிற்கு அளித்துள்ளார்.

தொல்காப்பியத்திலே இவரையொத்த பெரும்புலவரான சோழ வந்தான் அரசஞ் சண்முகனார் **தொல்காப்பியச் சண்முக விருத்தியின் முதலாவது பகுதியாகிய பாயிரவிருத்தி** என்ற உரை நுணுக்க நூலினை 1905-ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளார்; அதற்கு இன்று வரையில் மறுபதிப்பு வரவில்லை. தமிழகத்து அரியநூல்போற்றும் முறை இவ்வாறு உள்ளது. அந்த விருத்தியுரையானது கடிய நடையினதாய்ச் சிவஞான முனிவரது பாயிர விருத்தியுரைக்கு மறுபதிப்புரையாக அமைந்துள்ளது.

பண்டைய உரையாசிரியர்களுள் சிலர் இலக்கியங்களுக்கே யன்றி இலக்கணங்களுக்கும் தம் நுண்மாண் நுழைபுலத்துடன் உரையெழுதியிருப்பது சிறப்பாகச் சிந்தித்தற்குரியது. தொல் காப்பியத்திற்கு உரைகண்ட நச்சினார்க்கினியர், பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தாமணி ஆகிய இலக்கியங்களுக்கும் நேர்த்தியான உரைகளை வழங்கியுள்ளார்; பத்துப்பாட்டிற்கு உரையெழுதுகையில் கொண்டுகூட்டிப் பொருள்நலங் காணுதல் அவரது புலமை வித்தகத்தை நன்கியம்பும். இதனால், தமிழ்ப் பெருமக்களால் உச்சி மேற் புலவர்கொள் நச்சினார்க்கினியராகப் போற்றப்படுகின்றார்.

இலக்கியச் செறிவுள்ள இறையனாரகப் பொருளுரை வளமான உரையாகும்; 'உரைச் செய்யுள்' என்ற பாங்கில் அது போற்றப் பெறுகின்றது. தரமான **கட்டளையுரை** (Ideal Commentary) யாகவும் மதிக்கப்பெறுகின்றது.

உரைகளைத் தனித்தனியே பதிப்பிக்கும் முயற்சியின் அடுத்த கட்டமாக உரைகளைச் சேர்த்துத் தொகுத்துப் பதிப்பிக்கும் முயற்சியும் தலையெடுத்து மக்களின் வரவேற்பினைப் பெற்றுள்ளது. இவ்வாறான தொல்காப்பியம்-சொல்லதிகாரம் உரைக் கோவை, திருக்குறள் உரைவளம், திருக்குறள் உரைக்கொத்து, திருமுருகாற்றுப்படை-உரைக்கொத்து, நாலடியார்-உரைவளம், சிவஞான சித்தியார் அறுவருரை முதலிய நூல்கள் வெளி வந்துள்ளன.

சில நூல்களுக்கு உரைகள் கிடைத்தும் அவற்றை எழுதியவர் கள் யாரென்றே தெரியவில்லை; **பழைய உரை** என்ற பெயரிலே பதிப்பிக்கப் பெறுகின்றன. எவ்வாறோ பழைய உரைகளும் புதிய உரைகளுமாகத் தமிழுக்கு அணிகளாகவும் ஆக்கங்களாகவும் பொலிவூட்டுகின்றன.

உரையெழுதிப் பதிப்பிக்கும்போது ஒரு சிறப்புக் குறிப்பினைக் காணுமாறு செய்தவர் தவத்திரு ஆறுமுக நாவலர், 'பெரியபுராண சூசனம், என்ற சிறப்புக் குறிப்பினையும் எழுதிச் சைவ மெய்யன்பர் களுக்கு வழங்கியுள்ளார் (சூசனம்-குறிப்பு). இந்தச் சூசனவுத்தி யினால் நாயன்மார் புராணத்தின் சாரம்-வாழ்க்கைக் குறிக்கோள் நன்கு வெளிப்படுத்தப்படுகின்றது.

நூலுக்கு உரைகாண முயன்ற சான்றோர்களை நோக்கும் போது சில வேளைகளில் அவர்கள் மூல ஆசிரியர்களை விடக் கூர்த்த மதிநலம் வாய்ந்தவர்களாகவும் காணப்படுகின்றனர்; என்றாலும், ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்களாகவே விளங்கியுள்ளனர். உரையாசிரியர்கள் பொதுவாகப் பின்பற்றிய ஓர் உரைக்கொள்கை ஈண்டு நினைவு கூர்தற்குரியது. அஃதாவது, இலக்கணமாயினும், இலக்கியமாயினும் மூலநூலில் குறை காண்பதோ மூலநூலாசிரியருக்கு இழுக்கினைக் கற்பிப்பதோ உரையாசிரியருக்கு வழக்கமில்லையென்பதாகும்.

'வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்.'
(தொல். பொருள் 640)

என்ற விதிக்கிணங்க மூலநூலாசிரியர்களைத் தெய்வங்களாக மதித்துப் போற்றினமையால் அவர்களுடைய படைப்புக்கள் குற்றங்குறைகளுக்கு அப்பாற்பட்டனவாகவே கருதப்பெற்றன. எனவே, நூலகத்தே வெற்றெனத் தொடுத்தல், மற்றொன்று விரித்தல், நின்று பயனின்மை போன்ற குற்றங்கள் இருப்பன போலத் தோன்றினாலும், அவ்வாறுள்ள, இடங்களில் உரை யெழுதிய பெருமக்கள் நூலாசிரியருக்கு அரணாக விளக்கந் தந்தனர்; இவ்வாறு. நூலுக்குக் குறைவாராமற் காக்க முனைந்த உயரிய பண்பாட்டினை உரைகளில் காணலாம். இக்காலத்தே, மக்களாகப் பிறந்த யாரும் நிறையுடன் குறையும் புரியத்தான் செய்வர் என்ற எண்ணத்தில்-திறனாய்வுப் பார்வையில்-நிறை களையும் குறைகளையுஞ் சுட்டிச் சிலர் உரைத்திறனாய்வு புரி கின்றனர். காலவோட்டத்திலே பெரும்பாலோர் இதனையும் வரவேற்க வேண்டியவர்களாகின்றனர்.

உரைநூலைப் பொறுத்தவரையில் வைணவ வியாக்கியான கர்த்தர்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள். நாலாயிர திவ்யப்

பிரபந்தத்திற்கு உரைவகுக்கையில் பாசுரங்களிலே ஆழங்காற் பட்டுப் பொருள்வளத்தினை உய்த்துணர்ந்து வெளிக்கொணர்ந்த னர். தமிழ்மொழியும் வடமொழியுங் கலந்த **மணிப்பிரவாள நடையில்** 'ஆறாயிரப்படி' முதல் 'முப்பத்தாறாயிரப்படி' வரை யில் உரையெழுதியுள்ளனர். **உரை** என்ற பொருளைத் தரும் '**பாஷ்யம்**' என்ற பதத்தினையே தம் பெயராகச் சூட்டிக் கொள்ளு கின்ற அளவிற்கு வைணவர்கள் உள்ளனர் என்பதால் அவர் களுக்குள்ள உரையீடுபாட்டினை நன்குணரலாம்.

## வசன ஆக்கம்

உலக வழக்கினையொட்டி எளிதாக எழுதப் பெறும் நிலையி லும் பேசப்பெறும் நிலையிலும் அமையும் வழக்கியற் சொற் றொடர்கள் 'உரைநடை', 'உரைவாசகம்' என்ற பெயர்களில் வழங்கப்பெறும். " 'உரை வாசகம்' என்பது இருபெயரொட்டு. தமிழில் வசனம் என்ற வடமொழியே, சிலகாலமாய் உரை நடையைக் குறிப்பதாய்ப் பெருவழக்கினதாயிற்று. உறுதிச்சொல், ஏற்றச்சொல், பொருளுற்ற சொல் எனப் பொருள்படும் கட்டுரை என்னும் வார்த்தையும் உரைநடையைக் குறிக்கிறது. இது 'கட்டுரை வன்மை' என்பதனால் போதரும். 'கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்து' எனத் தொல்காப்பியத்திலும் வருகிறது''[6] என்று பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம் கூறிக் காட்டுதல் ஈண்டு மனங்கொள்ளத்தக்கது.

பத்தொன்பதாம் இருபதாம் நூற்றாண்டுகளில் தமிழ்மொழி அடைந்துள்ள சிறப்புக்களில் முதன்மையானது **வசன நூல்கள் கொண்ட வளர்ச்சியே**யெனக் கூறலாம். இதற்கு முன்னோடி களாக விளங்கியவர்கள் கிறித்துவச் சமயத்தைப் பரப்பவந்த பாதிரிமார்கள் எனலாம்; அவர்கள் அச்சுவாகனங்களைக் கொணர்ந்து தம் சமயநூல்களை எளிதில் படிக்கத்தக்க வண்ணம் வசன நூல்களாக எழுதி வெளியிட்டமை தமிழ் வரலாற்றில் குறிப் பிடத்தக்க செய்தியாகும்.

தமிழ்ச் சொல்லாகிய உரைநடையைக் குறிக்க வசனம் என்ற வடசொல் பயன்பட்டுள்ளது என்பது உண்மையே. என்றாலும், இரு சொற்களும் இக்காலத்தே ஓரளவு பொருள்வேறுபாட்டிலும் பயன்படுத்தப் பெறுதலை முன்கூட்டியே ஈண்டு நினைவு கொள்ளுதல் நல்லது உரைநடையென்றால் செய்யுளுக்கு மாறு

பட்ட நிலையில் அமையுஞ் சொற்றொடரமைப்பாகவே கொள்ளப் பெறுகின்றது. உரைநடையென்பது பாட்டின் விதிகளுக்கு விலக்காய் நின்று இலக்கிய நலங் கெடாவகையில் மக்களுள்ளத்தில் தோன்றும் உணர்வுகளை உலகுக்கு எடுத்துக்காட்டப் பயன்படுவது என்று கொள்ளல் பொருந்தும் 'என்சைக்கிளோபீடியா பிரிட்டானிக்கா'[7] (Encyclopaedia Britanicca) என்ற பெரு விளக்கநூல் கூறிக் காட்டும்.

வசனம் என்பது பெரும்பாலும் செய்யுளிலக்கியத்தை உரை நடைப்படுத்தி அமைப்பதாகக் கொள்ளப்படுகின்றது. செய்யுளானது கடுமையாய் அமைவதும் சிலவேளைகளில் தவிர்க்க இயலாதது; அதற்கு உரையெழுதி எளிமைப்படுத்துவதும் காலத்தின் தேவையாகிறது. என்றாலும் எளிய மக்களும் இலக்கியப் பொருண்மையை யறிந்துகொண்டு சுவைக்கும் வாய்ப்பாக **வசனம் எழுதுதல்** தேவையென உணரப்படுகிறது; விரும்பப்படுகின்றது எனவே, இந்தக் காலங்கருதிய தேவையினைப் பெரும்புலவர்களும் உணர்ந்தவர்களாய்ச் செய்யுளிலக்கியங்களை வசனங்களாக வடித்துத்தர முயன்றனர். இவ்வாறான வசனத் தொண்டு புரிந்தவர்களுள் யாழ்ப்பாணத் தமிழர்கள் முன்னோடிகளாக விளங்கினர்; அவர்களுள் நல்லூர் தவத்திரு ஆறுமுக நாவலர், ந.சி. கந்தையாப் பிள்ளை ஆகியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள் எனலாம்.

எளிதில் புரிந்துகொள்ள இயலாத சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுக்கும் பெருமுயற்சி கொண்டு தமிழறிஞர் கா. சுப்பிரமணியப்பிள்ளை எழுதிய வசனநூலும் சிறப்பாகச் சிந்தித்தற் குரியது.

சங்க இலக்கியங்களாகிய பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து முதலிய சில நூல்களை ந. சி. கந்தையாப்பிள்ளை வசன வடிவில் எழுதியுள்ளார். தவத்திரு ஆறுமுக நாவலர், திருவிளையாடற் புராணம், பெரியபுராணம், கந்தபுராணம் என்னும் பெருநூல்களை வசனமாக்கிப் பதிப்பித்துத் தந்தருளினார். மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைமைப் புலவராயிருந்த திருச்சிற்றம்பல தேசிகர் கம்பரியற்றிய இராமாயணத்தை வசன காவியமாக்கித் தந்துள்ளார்.[8] இவ்வாறு வான்மீகி இராமாயணமும் தமிழில் வசன நடையில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளது; சிறப்பாகத் திருப்பராய்த்துறை சுவாமி சித்பவானந்தரால் வான்மீகியைத் தழுவிய இராமாயணம் தமிழில் இயற்றப்பெற்றுள்ளது.[9] இவ்வாறு

தெய்வநலக் காப்பியங்களை வசனவடிவில் விளக்கமாகவும், கையடக்கப் பதிப்பில் சுருக்கமாகவும்[10] வரக் கண்ட எளியமக்கள் ஆர்வத்துடன் பயிலத் தொடங்கினர்.

வசனநூல்களாகக் காப்பியப் பெருநூல்கள் வெளிவரும் போது அவற்றிலே மூலநூற் செய்யுட்களும் இடம்பெற்றமை குறிக்கத்தக்கது. தொடக்க கால உரைநூல்களில் அமைந்ததே போன்று கதைநிகழ்ச்சிகளுக்கேற்பச் சில படங்கள் வசனநூல் களில் அமைந்து கற்போர்க்கு ஆர்வத்தை ஊட்டின.

ஒரே நூலுக்குப் பல உரைகள் தோன்றியவாறே பல வசன நூல்களும் தோன்றின. ஒரு காலத்தில் வசனமே எழுதத் தயங்கித் தளர்நடையிட்ட தமிழர்களின் மனப்போக்கு[11] இவ்வாறு இலக்கிய வுலகத்தில் ஒருவகை மாற்றங் கண்டது காலஇயக்கத்தின் நியதியை ஒட்டியதாகும்.

## எண்பதில் வசனநூல்களும் உரையும்

எத்தனையோ மாறுபாடுகளையும் சந்தித்துக்கொண்டே காலச் சக்கரத்தால் இயங்கும் தமிழ்மொழியில் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதாம் ஆண்டில் சில வசனநூல்கள் தோன்றியுள்ளன; சில உரைநூல்கள் தோன்றியுள்ளன; வசன நூல்களாகவும் உரை நூல்களாகவும் முன்பே வெளிவந்தவை மறு பதிப்புக்களாக வெளிவந்துள்ளன.

இலக்கிய இலக்கணங்களேயன்றிச் சாத்திர நூல்களும் உரை நலங் கொண்டுள்ளன.

எண்பதாம் ஆண்டில் வெளிவந்துள்ள சிலநூல்களின் விவரங் களைக் கண்டு கொண்டு, ஆய்வு நோக்கத்தில் தொடர்ந்து சில நுண் குறிப்புக்களைக் காண்பது நல்லது.

சங்கநூல்களுக்கு முன்னரே புலவர்பெருமக்கள் நல்ல உரை யெழுதியுள்ளனர். அவை தூய தமிழில் அமைந்து புலமையாளர் களே போற்றுந் தகையனவாய் உள்ளன. சென்ற நூற்றாண்டில் தோன்றிய பின்னத்தூர் நாராயணசாமி அய்யர், **நற்றிணை** எனும் தொகை நூலுக்கு நேர்த்தியான உரைகண்டு பல்லோ ராலும் பாராட்டப் பெற்றவர். அவர் எழுதிய அந்த நூல் இக் காலத்தில் கிடைக்கின்றதென்றாலும்,[12] அதனைப் புரிந்துகொள்

கின்ற அளவிற்குப் பலருக்குப் புலமையும் ஆர்வமும் இல்லை. எனவே, எளிய மக்களும் புரிந்துகொள்ளக் கூடிய நிலையில் ஓர் உரை தேவையாயிற்று. இந்நிலையில் பல இலக்கியங்களுக்கு எளிய முறையில் உரையெழுதி மக்கட்பதிப்பாக—மலிவுப்பதிப்பாக வெளியிட்டு வரும் புலியூர்கேசிகன் நற்றிணைக்கும் உரையெழுதியுள்ளார். எண்பதில் **நற்றிணை பிற்பகுதி** (201—400)க்கு உரையெழுதப் பெற்று வெளிவந்துள்ளது.

**திருக்குறள் பரிமேலழகர் உரை நுண்பொருள்மாலை** என்ற தலைப்பில் பதிப்பாய்வினைத் திருமேனி காரி இரத்தினகவிராயர் செய்துள்ளார்; அந்நூல், **கோவை-தென்மொழி நூலகம்** வாயிலாக வெளியிடப்பட்டுள்ளது. திருக்குறள்-பரிமேலழகருரைக்கு விளக்கந் தந்து ஆய்வுக் குறிப்புக்களை எழுதிய வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார், கோ. வடிவேல் செட்டியார் ஆகியோருடைய நூல்களின் அடிச்சுவட்டில் இந்த நூலும் வெளிவந்துள்ளது.

சிற்றிலக்கியங்கள் (பிரபந்தங்கள்) வரிசையிலும் **உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்** நல்ல ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் சில நூல்களை வெளியிட்டுள்ளது. தரமான தாளில் நல்ல பொலிவுடன் நயமான விலையில் நூல்களை வெளியிடும் பொறுப்பேற்றுள்ள அந்த நிறுவனம் **திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத் தமிழ்** என்ற நூலையும், **பணவிடுதூது** என்ற நூலையும், **பிரபந்தத் திரட்டு** என்ற நூலையும் தெளிவான ஆய்வுரையுடன் வெளியிட்டுள்ளது. நிறைந்த கருத்து விளக்கங்கள் கொண்ட அந்த நூல்கள் திறனாய்வுப் பார்வை கொண்ட நன்மக்களால் பாராட்டுந் தகைமையன.

**தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்** (சென்னை) **சேயூர் முருகன் உலா** என்ற பிரபந்த நூலுக்கு ஆய்வு நோக்கத்தில் உரையெழுதி வெளியிட்டுள்ளது. சேறைக் கவிராசபிள்ளை எழுதிய இவ்வுலா நூலைப் பதிப்பித்தவர் திரு. மு. அருணாசலம் ஆவார்.

**சென்னை திருவான்மியூர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்** வாயிலாகச் சேறைக் கவிராசபிள்ளை இயற்றிய **வாட்போக்கி** என்னும் **இரத்தினகிரி யுலா குறிப்புரை,** ஆராய்ச்சியுரையுடன் வெளிவந்துள்ளது.

திருமுருகன் புகழ் பாடும் **தணிகை வெண்பா** என்ற நூலும் **திருத்தணிகை சந்நிதிமுறை** என்ற நூலும் நல்ல உரையுடன் வெளிவந்துள்ளன.

**சென்னை இராஜேஸ்வரி பதிப்பகம்,** K. V. சச்சிதானந்தத்தால் விளக்கவுரை வரையப்பெற்ற **விநாயகர் கவசத்தினை** வெளியிட்டுள்ளது. இந்த விநாயக கவசம் என்ற நூல் தீங்குகளினின்றும் விலகி மனநிறைவினை மக்கள் கொள்ளுதற்கு மிகவும் பயன்படக் கூடிய நோக்கத்தில் கச்சியப்ப முனிவரால் பாடப்பெற்றது. இந்த விநாயக கவசம், இதே கச்சியப்ப முனிவரால் இயற்றப்பெற்ற விநாயக புராணத்தின் ஒரு பகுதி என்பது உளங்கொள்ளத்தக்கது. பாடல்களும் உரைநடையுமாக அமைந்துள்ள **ஸ்ரீமாங்காட்டு காமாட்சியம்மன் வரலாறும் புகழாரமும்** (தேவி மானச பூசை-108 போற்றி—பொற்பாதம் போற்றுதல் ஆகியவற்றுடன்) என்ற நூலினைப் புலியூர் கேசிகன் பதிப்பித்துள்ளார். அருள்மிகு காமாட்சியம்மை தவமியற்றிய இடமாகக் கருதப்படும் மாங்காட்டின் பெருமையும் அம்மையின் அருள் மாட்சியும் பக்தர்கள் மனங்கவரும் வகையில் போற்றப் பெற்றுள்ளமை குறிப்பிடத் தக்கது.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,** சந்தப்பாக்களாலாகிய **திருப்புகழ்ப் பெருந்திரட்டு** என்னும் நூலினை உரையுடன் வெளியிட்டுள்ளது.

**திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம்,** சைவசித்தாந்தச் சாத்திர நூல்களை உரையுடன் வெளியிட்டுள்ளது. அவற்றுள் **கொடிக் கவியும் வினாவெண்பாவும்** (உமாபதி சிவாச்சாரியர் அருளியவை)என்ற நூலும், **திருக்களிற்றுப்படியார்** (திருக்கடவூர் உய்ய வந்த தேவனார் அருளியது) என்ற நூலும் வெளிவந்துள்ளன.

சென்னைப் பல்கலைக் கழகம், **திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம்** (முதற்பகுதி) என்ற நூலினை மறுபதிப்பாக வெளியிட்டுள்ளது.

டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் பதிப்பித்துள்ள **பிரபந்ததீபம்** எனும் பாட்டியல் இலக்கண நூல், சென்னை, **தமிழ்ப் பதிப்பக**வாயிலாக வெளிவந்துள்ளது.

காப்பிய வசன வரிசையில், இத்தாலி நாட்டுப் பாதிரியார் வீரமாமுனிவர் எழுதிய **தேம்பாவணிக்கு** அதன் வசனம் வெளிவந்துள்ளது. அஃதாவது **புதுவை மாநிலத் தமிழ் எழுத்தாளர் பேரவை** வெளியீடான **தேம்பாவணி வசனம்** புலவர் மணி ஜோசப் ராயரால் எழுதப்பட்டு வெளிவந்துள்ளது.

திருப்பனந்தாள் **ஸ்ரீகாசிமடத்துப் பதிப்பாகிய திருவிளையாடற் புராணம் மதுரைக் காண்டம்** உரைநடை (மறுபதிப்பு) வெளிவந்துள்ளது.

**திருவாவடுதுறை ஆதினம், க்ஷேத்திரச் சிவநாமத் தேவார விளக்கம்** என்ற உரைநூலை வெளியிட்டுள்ளது.

**வானதி பதிப்பகம்** (சென்னை), சபரிமலை ஐயப்பன் புகழ்பாடும் **ஸ்ரீதர்ம சாஸ்தா** எனும் உரை நூலினை வெளியிட்டுள்ளது.

சித்த மருத்துவமுறையில் நன்குதோய்ந்து வீரமாமுனிவர் **நசகாண்டம்** என்ற அருமையான நூலை எழுதியுள்ளார்; அந்நூலுக்கு மா. வடிவேலு முதலியார் இனிய எளிய முறையில் உரை எழுதியுள்ளார்; அதனை **'நசகாண்டம் மூலமும்-உரையும்'** என்ற பெயரில் **புதுவை மாநிலத் தமிழ் எழுத்தாளர் பேரவை** வெளியிட்டுள்ளது; இதன் பதிப்பாசிரியர் டாக்டர். ந. கோவிந்தசாமி, கிடைத்தற்கரிய **நசகாண்டவெண்பாக்களுக்கு** முதற்கண் உரையெழுதி, அதனைத் தொடர்ந்து நோய்களின் குணங்கள், சரக்குகளின் சுத்தி முறை ஆகியவை கூறியுள்ளமை காண்க. இது மறுபதிப்பாகும்.

**திறனாய்வு நோக்கு**

எண்பதாம் **ஆண்டில்** வெளியான உரைநூல்களும் வசன நூல்களுமான தொகுதியிலே சிலவற்றைப் பற்றிச் சிறிது சிந்திப்போம்.

சேறைக் கவிராச பிள்ளை இயற்றிய **வாட்போக்கி** என்னும் **இரத்தினகிரி யுலா** என்ற சிற்றிலக்கிய நூலை எஸ். ஸ்ரீநிவாசையர் குறிப்புரை, ஆராய்ச்சியுரைகளுடன் பதிப்பித்துள்ளார். சென்னை, டாக்டர் உ. வே. சாமிநாத அய்யர் நூல்நிலைய வெளியீடாக இந்த நூல் வெளிவருவதால், டாக்டர் உ. வே. சாமிநாத அய்யரின் பதிப்புமுறைகளைப் பின்பற்றியுள்ள திறம் இதனில் காணலாம்.

தமிழ் நாடெங்கும் சுற்றிப் புலவர்களின் இல்லங்களை நாடி ஏடுகளைத் தேடி மிக நாட்டத்துடன் நூல்களைப் பதிப்பித்த பெருமை டாக்டர் உ. வே. சாமிநாத அய்யரைச் சாரும். அவர் பதிப்பித்த நூல்களில் நூல் பற்றியும் நூலாசிரியர் பற்றியும் பல செய்திகளைத் தருவதுடன் ஆராய்ச்சி முன்னுரையாக நிரம்பக் கருத்துக்களை எழுதி வழங்குதலைக் காணலாம்; பாட பேதங்களைக் குறிப்பிடும்போதும் நேர்மையைக் கடைப் பிடித்ததைக் காணலாம்.

அந்தப் பெரியவரின் அடிச்சுவட்டிலே சொல்ல நினைக்கும் மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையமும் **வாட்போக்கி** என்னும் இரத்தினகிரியுலாவினைப் பதிப்பிக்கையில், முகவுரை, நூலாசிரியர் வரலாறு, முன்னுரை, உலா இலக்கியம் பற்றிய செய்திகள் வாட்போக்கி, வாட்போக்கி உலாவின் பொருட் சுருக்கம், நூலின் சிற்றாராய்ச்சி, நூலில் வரும் புராணக் கதைகள் சில, Appendix I, Appendix II, மேற்கோள் நூற்பெயர்களின் முதற்குறிப்பகராதி, வாட்போக்கி உலா-மூலமும் உரையும், பிற்சேர்க்கை 1—4 என்று பகுத்துக்கொண்டுள்ளமை போற்றற்குரியது இவற்றால் நூல் தொடர்பாக ஏராளமான செய்திகள் தரப்பெறுகின்றன. இந்தநூல் நல்ல குறிப்புரையுடன் வெளிவருவதற்கு எழுத்துத் தொண்டாற்றியவர்களில் காஞ்சிபுரம் மகாவித்வான் திரு. அருணை வடிவேல் முதலியாரும், சென்னைப் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆராய்ச்சிப்பகுதி விரிவுரையாளர் மகாவித்வான் திரு. மு. சண்முகம் பிள்ளையும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் என்பது முகவுரையால் தெரியலாகும். சிறந்த புலவர்கள் இவ்வாறு தொண்டாற்றி இருப்பினும் "இந்நூலில் விளங்காத சில இடங்கள் இன்னும் விளக்கம் பெற வில்லை' என்று தம் ஆராய்ச்சி உரையில் திரு எஸ். ஸ்ரீநிவாசன் குறிப்பிட்டுச் செல்கிறார் இதனால், ஒரு நூலுக்கு உரை எழுதுவது என்பது எளிதான செயலன்று என்பதும் போதிய கருவிநூல்கள் இல்லாமல் பெரும்புலவர்கள் கூட உரைஎழுதச் சங்கடப்படுவர் என்பதும் அறியலாகும். தொடர்ந்து முயன்றால் ஒருகாலத்தில் ஐயப்பாடு சிறிதும் கொள்ளவேண்டாத வகையில் பதவுரையும் விளக்கவுரையும் இந்த நூலிற்குக் கிடைக்குமென நம்பலாம்.

இவ்வுலாவின் பொருண்மையாகச் **'சிவபிரான் வாட்போக்கி நாதராக உலாவருதல்'** அமைந்துள்ளது. தலபுராணச் செய்திக

ளாக இயற்கை இகந்த ஆற்றலாகிய செய்திகள் (Supernatural elements) இதனில் நிரம்பப் பயின்றுள்ளன. பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், கந்தபுராணம், காஞ்சிபுராணம், கன்றாப்பூர்ப் புராணம், உத்திரகோசமங்கைப் புராணம், திருக் காளத்திப் புராணம் முதலிய பல புராணங்களிலிருந்து புராணச் செய்திகள் பலவாக இதனுள் ஏற்ற இடங்களில் காணலாம்.

இந்த உலாவினைப் பாடிய சேறைக் கவிராசப்பிள்ளை சைவ சமயத்தவர்; சொல்லாட்சியும் பொருள்நயமும் வாய்க்க 'ஆசு கவி' பாடுதலில் வல்லவர். **சேயூர் முருகன் உலாவை** இவர் ஒரே நாளில் பாடிமுடித்த குறிப்பாக 'வெற்றிக் கருணேசன் சேறைக் கவிராச ராசன், ஒரு நாளில் சொன்ன உலா' என்பதைக் கூறுவர். 'வண்ணக்களஞ்சியம்' என்றும் அழைக்கப்பட்ட இவருக்கு எத்தகைய சொல்லாட்சி இருந்திருக்குமென எளிதில் ஊகிக்கலாம்.

சொல்லாட்சிக்குச் சான்றாகச் சிவபெருமானைக் குறிப்பிடு கையில் அகண்டன், அஞ்செழுத்தின் ஆணையான், அடலை மிகுங் காடேறி, அடியார் சகாயன், அடையாதவர்பால் அடையான், அண்டகூடத்தான் முதலிய நூற்றுக்கும் மேற்பட்ட பதங்களைக் கையாள்கிறார். எழுபருவ மகளிரைக் குறிப்பிடுகையில் நூலாசிரியருடைய வருணனைத்திறன் உச்சக்கட்டத்தை யடைதலைக் காணலாம். இவ்வாறான பாகுபாடுகளைக் குறிப்புரை யெழுதியவர்கள் உள் தலைப்பிட்டு எழுதியதால் எளிமையாய்ப் புரிந்து கொள்ளலாம். வாட்போக்கிநாதர் உலா வருகையில்,

'தடாரி துடிதிமிலை தண்ணுமை கைத்தாளம்
விடாத முரசுமணி மேளங் — குடமுழா' (124)
'சங்கு திமிரி தவில்பட நாககுர
மங்கல கீதமுதல் வாத்தியமும் —பொங்கியெழ' (125)

என்ற இருகண்ணிகளையும் குறிப்புரையாசிரியர் 'வாத்தியங்களின் முழக்கம்' என்ற உள்தலைப்பில் சுட்டிக் காட்டுகிறார்; இவற்றிற்குக் குறிப்புரை எழுதும்போது '**நாகசுர** மங்கலகீத வாத்தியம் — **நாகசுரமாகிய** மங்கல கீதம் ஒலிக்கும் வாத்தியம்' எனக் குறிப்பிடுகிறார். உண்மையில் நல்ல ஆராய்ச்சியுடன் கண்ட **நாகசுரம்** என்பதனை **நாதசுரம்** என்று தவறுதலாக இக்காலத்தில் வழங்கி வருகின்றனர். இக் கருத்திற்கு அரணாக இசை வல்லுனர் முத்துச்சாமி தீட்சதர் ஸ்ரீராகத்தில் 'தியாகராஜ மகாதுவ

—ஜாரோக' எனத் தொடங்கும் இசைப்பாடலில் **'நாகசுர மத்தளாதி வாத்தியம்'** என்று குறிப்பிடுதலைக் காணலாம்.

சேறைக் கவிராசப் பிள்ளை தாம் பாடிய பிற நூல்களிலிருந்தும் நினைவுகூரத்தக்க குறிப்புகளை இந்நூலகத்துக் காட்டுகிறார். செந்தமிழ்ப்புலவன் நக்கீரனுக்காக இறைவன் தன் திருமேனியையே தியாகம் செய்த நிகழ்ச்சி புராணங்களில் கூறப்படும் செய்தியாகும். இதனைத் **திருக்காளத்தி உலாவிலும்** இந்நூலாசிரியர்,

'கயிலை மலைபாதி காளத்தி பாதி
பயிலுமறை நூல் தெரிந்து பாடிச்—சயிலமிசை
அந்தாதி கீரனருளத் திருமேனி
இந்தாதியாக மெனத் தந்தோன்' (53—54)

எனக் குறிப்பிட்டுச் சென்றுள்ளார்: **வாட்போக்கி உலாவிலும்**

—பன்னுதமிழ்ச்
சங்கத்தோன் வேண்டச் சரீரத்தை யேயுதவித்
துங்கத் தியாகியெனத் தோன்றுமக்குச் (365)

கூறிக் காட்டுகிறார். இவற்றைக் குறிப்புரையாசிரியர் நன்கு இயைபுபடப் பார்வைக் குறிப்பாகக் காட்டிச்செல்கிறார்; **'தோன்றும் உமக்கு** என்பது **தோன்றுமக்கு** என்றாயிற்று' என்று இலக்கண அமைதியையும் எழுதிக் காட்டுகிறார்

சைவ சித்தாந்த சந்தான குரவர்களில் நான்காமவராகக் கருதப்பெறுபவர் கொற்றங்குடி **உமாபதி சிவாசாரியார்**; அநுபூதிமானாகிய அந்த அருளாளர் வியத்தகு பல செயல்களைப் புரிந்த உத்தமர்; அவர் எழுதியருளிய சாத்திர நூல்களாகச் சித்தாந்த **அட்டகம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சு விடு தூது, உண்மை நெறிவிளக்கம் சங்கற்ப நிராகரணம்** என்றவை குறிக்கப்பெறும். அவற்றுள் **கொடிக்கவி** என்ற நூலுக்கும். **வினாவெண்பா** என்ற நூலுக்கும் தெளிவுரையெழுதிக் **கொடிக்கவியும் வினாவெண்பாவும்** என்ற பெயரிலே நூலைப் பதிப்பித்துள்ளார் பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி. இந்த வெளியீட்டில் காணலாகும் பதிப்புரையால் 'இவ்விரு நூல்களுக்கும் திருவாவடுதுறை நமச்சிவாயத் தம்பிரான் சுவாமிகள் அருளிய பழையவுரை ஒன்று உள்ளது.

அவ்வுரையே சைவசித்தாந்த சமாசப் பதிப்பிலும், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திலும் வெளியிடப்பட்டுள்ளது. திரு கா. சுப்பிரமணியப்பிள்ளையவர்களும், திரு ஆ. ஈசுவரமூர்த்திப் பிள்ளை அவர்களும் இவற்றிற்கு உரை எழுதியுள்ளனர், என்பது தெரிய வருகிறது. இத்தகைய சிறப்பிற்குரிய இவ்விரு நூல்களின் ஒவ்வொரு பாடற்கும் தெளிவுரையும், விளக்கவுரையும் எழுதுகை யில் தம் நுண்மாண் நுழைபுலனைக் காட்டுகிறார் உரையாசிரியர்; நூலுள் காணக் கிடைக்கும் பாடபேதங்களையும் உரை வேறு பாடுகளையும் தக்கவாறு சுட்டிச் செல்கிறார்.

**கொடிக்கவி** வரலாறு : தில்லை நடராஜப் பெருமானது திருவிழாத் தொடக்கத்தில் தில்லைவாழ் அந்தணர்கள் கொடி யேற்றுவது வழக்கம்; அவ்வாறு கொடியேற்றுங்கால் அக்கொடி யேறாமற்போகவே அலமந்து தவிக்கின்றனர். அஃது ஏறும் பொருட்டுத் தில்லைவாழ் அந்தணர்கள் தம்மால் புறக்கணிக்கப் பெற்ற உமாபதி சிவாசாரியரிடம் மனந்திருந்தி வேண்டுகின்றனர்; அந்த அருளாளரும் **கொடிக்கவி**யைப் பாடத் தொடங்கியவுடனே தடை நீங்கி அக்கொடியும் ஏறிற்று என்பர். விழாவின் சடங்கு களுள் ஒன்றாகக் கொடியேற்றம் இருப்பினும் அதற்குத் தத்துவ உட்கிடையைச் சான்றோர்கள் கூறுவர். அந்த அடிப்படையில் 'கொடிமரத்தைச் சிவவடிவமாகவும், கொடிச்சீலையை மறைப்புச் சக்தியாகவும் அதில் வரையப்பட்டுள்ள இடபத்தை உயிராகவும், அக்கொடிக்கயிற்றை அருளாகவும், அதனோடு இணைந்துள்ள தருப்பைக் கயிற்றைப் பாசமாகவும் கூறுவர். எனவே தருப்பைக் கயிறாம் பாசத்தோடு இணைந்துள்ள கொடிச்சீலையில் இணைப் புண்டு கிடக்கும் உயிர் கொடிக்கயிறாகிய அருளின் துணைக் கொண்டு, கொடிமரமாகிய சிவத்தைச் சேரவேண்டும் என்பது இதன் உட்கருத்தாகும்' என்னும் ஆய்வு மனங்கொள்ளத்தக்கது.

முதற்பாடல் கட்டளைக் கலித்துறையாலும், ஏனைய மூன்று பாடல்கள் வெண்பாவாலும் அமைந்த மிகச் சுருங்கிய இந்த நூல் கருத்துச் செறிவால் பரந்தது; மூர்த்தி சிறிதாயினும் கீர்த்தி பெரிது என்று சொல்லத்தக்கது. இந்த நூல் உயிரின் ஈடேற்றத் திற்குத் துணைநிற்குமென்று உரையாசிரியர் கூறிக் காட்டுவது பொருளுரையாகும்.

கொடிக் கவியின் இறுதிப் பாசுரம் பெரிதும் சிந்தனைக்குரியது என்ற குறிப்பிலே சிறப்பாக உரையெழுதிச் செல்வது சிந்திக்கத்

தக்கது. 'திருவைந்தெழுத்துக்கள் மூன்று திறப்படும். ஒன்று தூல பஞ்சாக்கரம்; இது **நமச்சிவாய** என்பது. இரண்டாவது சூக்கும பஞ்சாக்கரம்; இது **சிவாயநம** என்பது. மூன்றாவது அதி சூக்கும பஞ்சாக்சரம். இது **சிவாயநம** என்பது. திருவைந்தெழுத் துக்களில் சிகரம் சிவத்தையும், வகரம் அருளையும், யகரம் உயிரை யும், நகரம் மறைப்புச் சக்தியையும், மகரம் மலத்தையும் குறிக்கும். **நகரத்தை** முன்வைத்து ஓதின் **இம்மைப்பயனும்,** சிகரத்தை முன்வைத்து ஓதின் **வீட்டின்பமும்** கிடைக்கும். ஒரு மருங்கு **ஞான நடனமும்** (சிவ) பிறிதொரு மருங்கு **ஊன நடன மும்** (நம) நிற்ப, இடையில் **உயிர்** (ய) நிற்கின்றது. **இவ்வுயிர் ஊன நடனத்தை விடுத்து ஞானநடனத்தில் நினைத்தல் வேண்டும் என்பதே உட்கருத்தாகும்.** இதனை இவர் அருளிய **திருவருட் பயனாலும்** ஏனைய ஞான நூல்களாலும் அறியலாம்' என்று விளக்கவுரை எழுதிக் கொண்டே செல்பவர், 'இத்திருவைந் தெழுத்துக்களின் வகையையும் ஓதும் நெறியையும் குருவருளால் பெற்று உய்தல் தக்கதாம்' என்றும் உணரவைப்பது சமயநெறி யூற்றத்தின் பாற்பட்டதாகும். **திருவருளுக்குக் குருவருள் தேவை** என்ற ஆன்றோர் மொழியும் ஈண்டு நினைவுகூரத்தக்கது. இத்தகைய சிந்தனை யூற்றத்திற்கு வாய்ப்பான வெண்பா வரு மாறு:

> 'அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெழுத்தும்
> பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும்—நெஞ்செழுத்திப்
> பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
> கூசாமற் காட்டக் கொடி.

ஞானநிலைப் புதிராக அமைந்த இப்பாடலுக்குத் தெளி வுரையாக 'சிவாயநம எனும் திருவைந்தெழுத்துக்களையும், ஓம் ஆம் ஔம் சிவாயநம எனும் எட்டெழுத்துக்களையும், ஓம் நம சிவாய எனும் ஆறெழுத்துக்களையும் ஓம் சிவாய என்னும் நால் எழுத்துக்களையும், முறையாக எண்ணி அதன் பயனாகப் பிஞ்செழுத்தாம் வகரமாகிய திருவருட் சக்தியையும், மேலான பெருவெழுத்தாம் சிகரமாகிய சிவத்தையும் தன்னுடைய மனத் தகத்து வைப்பின், அதன் விளைவால் பேசும் எழுத்தாகிய வகர மாம் அருட்சத்தி, தன்னுடன் பேசா எழுத்தாகிய சிகரமாம் சிவத் தையும் மிகவும் எளிதாக உயிரின்கண் பதிவிக்கும். அவ்வாறு பதிவிப்பதற்காக இக்கொடியைக் கட்டுவன் என்பதாம், என்பது **வரையப்படுகிறது.**

என்றோ ஒருநாள் விழாத் தொடக்க நிலையில் கொடியேற்றத் திற்காக உமாபதிசிவத்தை ஐந்தெழுத்தான் (பஞ்சாச்சரத்தான்) பாடுமாறு திருவுளம் பற்றினான்; உமாபதிசிவமும் ஐந்தெழுத் தால் ஆகிய **கொடிக்கவி** என்ற நூலை யருளிச் செய்தார். இற்றை நாளிலும் சிந்தித்துச் சீரிய அருளநுபவ வுரை காண வைக்கின்ற நிலையில் அஃது உள்ளது.

அடுத்ததாகிய **வினாவெண்பா** என்பது, தம் குருமூர்த்தியாகிய **மறைஞான சம்பந்தரை** உமாபதி சிவாசாரியார் வினவு முகமாகப் பல ஆழ்ந்த கருத்துகளை வினாக்களாகக் கேட்பதும் அவற்றிற்கு விடை காண முயல்வதுமாகிய அமைப்பில் உள்ளது. அதன் பதின்மூன்று வெண்பாக்களில் அமைந்துள்ள சைவசித்தாந்தச் சாத்திர நுட்பம் படித்துப்போற்றிப் பயன்கொள்ளத்தக்கது. **வினாவெண்பா**விலமைந்துள்ள சாத்திர உட்கிடையின் சீர் மைக்கு எடுத்துக்காட்டாக முதற் செய்யுளையும் உரை நலத்தை யும் ஒரு சிறிது காண்போம்.

‘நீடும் ஒளியும் நிறையிருளும் ஓரிடத்துக்
கூடல் அரிது கொடுவினையேன்—பாடிதன்முன்
ஒன்றவார் சோலை உயர்மருதச் சம்பந்தா!
நின்றவாறு எவ்வாறு நீ?’

என்பதற்குத் தெளிவுரையாகப் ‘பரந்த சோலைகள் உயர்ந்து விளங்கும் மருதநகரில் வாழும் **சம்பந்தமூர்த்தியே**! விரிந்த ஒளி யும், நிறைந்த இருளும். ஓரிடத்தே கூடுதல் இல்லை. அங்ஙன மாகவும், கொடிய வினையை யுடையேனாகிய அடியேனிடத்து மட்டும் நின்னை வழிபடும் முன்பே நீ என்னிடத்துப் பொருந்தி வாழ்வது எங்ஙனம்? என்பதாம், என்று உரையாசிரியர் எழுதிச் செல்கிறார். ‘உயிர்க்கு எஞ்ஞான்றும் அறிவு விளக்கம் தந்து ஆட்கொள்ளும் தகையன் ஆதலால் அவனை **நீடுஒளி** என்றார். உயிரின் அறிவை எஞ்ஞான்றும் மறைத்தல் பற்றி மலத்தை **நிறை இருள்** என்றார் என்றும், ஒளியும் இருளும் ஓரிடத்துக் கூடல் இல்லை அங்ஙனமாகவும், உயிர் இயல்பாகவே ஆணவ மலத் தோடு கூடி நிற்குங்கால், அதன்கண் சிவபரம் பொருளும் ஒன்றி யிருப்பது எங்ஙனம் என்பது வினாவாகும். மரத்தில் தட்பமும் வெப்பமும் ஒருங்குள்ளன. அதனிடம் தட்பம் இருக்குங்கால் நெருப்பு வெளிப்படுவதில்லை. தட்பம் உயர்ந்த பொழுது நெருப்பு வெளிப்படுகின்றது. ஆயினும், அந்த நெருப்பு அதன்

கண் பின்வந்து புகுந்ததன்று; முன்னமேயே உளது. அதைப் போன்றே உயிரினிடத்தும் ஒளியும் இருளும் அமைந்திருப்பதாகும். உயிர் திருவளால் வினை நீக்கம் பெறுங்கால் வெளிப்பட்டு நிற்கும். ஆதலின் இவ்விரண்டும் உயிரினிடத்தில் இருத்தற்கு இழுக்கில்லை என்பதாம்' என்று உரைவிளக்கம் எழுதிச் செல்வது பாராட்டுதற்கு குரியதும் போற்றற்குரியதுவாகும்.

இந்த வினா வெண்பாவினைப் பொருளுணர்ந்து கற்றல் வேண்டுமென்று வலியுறுத்தலை,

*அருளால் உணர்வார்க்கு அகலாத செம்மைப்*
*பொருளாகி நிற்கும் பொருந்தித்—தெருளா*
*வினாவெண்பா உண்மை வினாவாரேல் ஊமன்*
*கனாவின் பால் எய்துவிக்கும் காண்*

என்ற கடைசிச் செய்யுளால் உணரலாம். இதற்குத் தெளிவுரை யெழுதி உரைவிளக்கங் காண்கையில், 'சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக் கீழ்' என்னுமாறுபோல இவ் வினாவெண்பாவின் உண்மையை உணர்வார் சிவபரம் பொருளைச் சேர்ந்து வாழ்வார் என்பதாம். ஊமையன் கனாக் கண்டிருந்தும் அதனைத் தனக்குப் பேசும் திறமையின்மையால் பிறர்க்குக் கூற இயலாது நிற்பன். அவனைப்போல, இப்பாடலின் பொருளை உணராதவாறு பயில் வார் பயின்றும், அதன் பயனாகிய செம்பொருளை அடையார் என்பது கருத்தாம் கனாவின் பால்-கனாவின் தன்மை. கனாவிலே பால் குடித்ததுபோல என உரை காண்பர். நமச்சிவாயத் தம்பிரான் அவர்கள் என்று கூறிச் செல்லுதல் காண்க.

இத்தகைய உரைவிளக்கத்தின் அடிப்படையிலே சிந்தித்தால், உமாபதி சிவாசாரியருக்குத் தம் குருமூர்த்தியாகிய **மறைஞான சம்பந்தரின்** திருவுருவம் முதற் சமய குரவராகிய **திருஞானசம்பந் தரின்** திருவுருவமாகத் தோன்றியிருக்குமோ என எண்ணத் தோன்றும். காரணம் இந்த நூலகத்தே 12 இடங்களில் **சம்பந்தர்** எனும் திருநாமம் வந்துள்ளது; பன்னிரு திருமுறைக்கு வழி வகுத்த **சம்பந்தர்** என்பதும் நினைவில் தோன்றும்.

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் 19-5-1980 ஆம் நாள் திருக் **களிற்றுப்படியார்** (திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் அருளிய மெய்கண்ட சாத்திரம்) என்ற நூலினை வெளி

யிட்டுள்ளது. இதற்குத் தெளிவுரை எழுதிப் பதிப்பித்தவர் பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி. இந்நூலுக்கமைந்த பதிப்புரையால் 'திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் ஆகிய இரண்டிற்கும் அமைந்த பழைய பொழிப்புரையுடன் சைவ சித்தாந்த சமாசம் முதன்முதலில் பதிப்பித்தது. திருக்களிற்றுப்படியாருக்கு அமைந்த **கண்ணுடைய வள்ளல் அநுபூதி உரையுடன்** திரு மு. அருணாசலம் அவர்களால் 1962-இல் பதிப்பிக்கப் பெற்றது இவையன்றி நாகலிங்க முனிவரின் பதிப்பும், திருவாவடுதுறை ஆதீனப்பதிப்பும், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பதிப்பும் இதற்கு உள்ளன என்பது அறியலாகும்.

ஸ்ரீகாசிமடத்துத் தெளிவுரைப் பதிப்பினைப் பற்றிச் சிறிது சிந்திப்போம். இதற்கு அமைந்த ஆராய்ச்சி முன்னுரையால் திருக்களிற்றுப்படியாரின் பெயர்க்காரணம் அறியலாம். 'இந் நூலாசிரியர் தாழ்ந்த இனத்தவராதலின் இவர்தம் நூலும் கொள்ளற்பாலதன்று என்று சிலர் கூற, 'எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு' எனும் தகுதி உடைய சிலர் இந்நூலை நடராசபெருமான் திருவடிக் கீழ் இருக்கும் பஞ்சாக்கரப்படியில் வைத்தனர். அப்படியில் அமைந்திருக்கும் கல்யானை இந்நூலைத் தன் துதிக்கையால் எடுத்துப் பெருமானின் திருவடிக்கீழ் வைக்கப் பின் அதன் பெருமையுணர்ந்து அனைவரும் போற்றினர். பஞ்சாக்கரப்படியின் இருமருங்கும் கல்லானை நிற்றலில் அதனைத் **திருக்களிற்றுப்படி** என்பர். அதனால் இந்நூலும் இப்பெயர்பெற்றது. **திருவுந்தியாரைப்** போன்றே இந்நூலும் முன்னும் பின்னும் அடைமொழி கொடுத்துச் சிறப்பிக்கப்பெற்றுள்ளது' என்று எழுதிச் செல்வது நோக்கத் தக்கது.

திருக்களிற்றுப்படியாருக்குத் தெளிவுரை எழுதுகையில் உரை வல்லுனர்கள் மரபிலே இந்த உரையாசிரியரும் தம் பன்னூற் பயிற்சியினைப் புலப்படுத்துகிறார். எடுத்துக்காட்டாக முதற் செய்யுளுக்குத் தெளிவுரையெழுதுகையில் உயிர்கள் உய்வதற்காக இறைவனது கலந்து நிற்கும் நிலையையும் கடந்துநிற்கும் நிலையையும் எழுதிவிட்டு உரைவிளக்கம் செய்கிறார். அதனில் தன்னிலையில் நிற்கும் சிவபரம்பொருள் உயிர்களுக்கு அருளுவதற்காகக் கருணை கொள்ளும் அக்கருணையைச் சக்தி என்பர். இறைவனும் அவனிடத்திருக்கும் கருணையும் வேறல்ல. ஆதலின் சக்தியும் சிவமும் வேறல்ல. ஒரு முழுமுதற்பொருளே உயிர்களுக்கு அருளு

வதன் பொருட்டு இவ்விரு நிலையாக உருக்கொள்கிறது. சத்தியை அம்மையாகவும், சிவத்தை அப்பனாகவும் கொண்டு வணங்குதல் வழிவழியாக வந்ததொன்றாம். 'பெண்ணுரு ஒரு திறன் ஆகின்று' என்பது **புறநானூறு**. 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்னும் **திருக்குறள்** 'அம்மையொடு அப்பனாகிச் செறிவு ஒழியாது நின்ற சிவனடி சென்னி வைப்பாம்' 'மாதொரு பாகனார் தாம் வருவர்' என்னும் **சிவஞான சித்தியார்**. இதுவே தொன்மைக் கோலம் என்பர் மணிவாசகர். உயிர்களை ஆட்கொள்வதற்காக வரும் திருக்கோலம் இதுவேயாகும், ஞானசம்பந்தருக்குத் தோடுடைய செவியனாய் வந்து ஆட்கொண்டமையும் பெரிய புராணத்தால் அறியலாம்...ஞாயிறு வரத் தாமரை மலரும், குமுதம் குவியும். எனினும் ஞாயிறு இப்பொருள்களின் வேறு பாட்டால் வேறுபடுவதில்லை. அதைப்போன்றே உயிர்களும் தம் வினைக்கேற்ப உடல், கருவி, உலகு ஆகியவற்றைப் பெற்றுப் பல்வேறு வகையான இன்ப துன்பங்களை நுகரும். ஆயினும் இறைவன் இவற்றால் தொடக்குறுவதில்லை. இறைவன் உயிர்களுடன் கலந்தும் கலவாதும் நிற்கும் நிலை இதுவாகும். இதனையே, 'இப்புறத்தும் அல்லார்போல் நிற்பார் அவர் என்னும் தொடர் விளக்குகிறது' என்று உரை விளக்கம் செய்வது நேர்த்தியாகவுள்ளது. நாற்பத்து நான்கு பாடல்களில் அமைந்துள்ள திருவுந்தியாரின் கருத்துக்களைத் திருக்களிற்றுப்படியார் நூறு வெண்பாக்களால் விளக்கங் காண்கின்றதென்பர். பொருள் வகையால் உணரத்தகும் ஒப்புமையை உரையாசிரியர் இயைபுடன் பொருத்திக் காட்டுகிறார். திருக்குறள், திருமுறைகள் போன்றவற்றிலுள்ள கருத்துக்களை இந்நூலுடன் ஒப்பிட்டுக் காட்டியும், உவமை, உருவகம்போன்ற அணிநலங்களை வகுத்துக் காட்டியும் செல்லுகின்ற உரைத்திறம் பெரிதும் பாராட்டுதற்குரியது.

மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாத அய்யர் நூலகத்தில் ஓலைச்சுவடியாயிருந்த **பிரபந்த தீபம்** என்ற நூலை, டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், சென்னை, **தமிழ்ப் பதிப்பகம்** வாயிலாக வெளியிட்டுள்ளார். பதிப்பாசிரியர் தம் முகவுரையில் பாட்டியலும் பிரபந்த தீபமும், பாட்டியல் தோன்றக் காரணம், பாட்டியல் நூல்கள் பிரபந்தம், பிரபந்தங்கள் தொண்ணூற்றாறு, பாட்டியல் உணர்த்தும் பிரபந்தங்கள், பிரபந்த தீபம், நிறைவுரை என்ற உள்தலைப்புக்களில் பிரபந்தத் தொடர்பாகத் தெரிந்து கொள்ள வேண்டிய பல செய்திகளை இலக்கிய அடிப்படையிலும்

வரலாற்றடிப்படையிலும் கூறியுள்ளார். 'பிரபந்த தீபம் உணர்த்தும் பிரபந்தங்களின் விளக்கம்' என்ற தலைப்பிலும் 'தமிழ்ப் பிரபந்தங்கள்' என்ற தலைப்பிலும் குறிப்பிடும் புள்ளி விவரங்கள் ஆய்வாளர்களுக்குப் பெரிதும் பயன்படக்கூடியவை.

பாட்டியல் நூல்கள் பலவற்றைத் தொகுத்துச் சிந்திக்கும் உணர்வினை இந்த நூல் தருகிறது. பிரபந்தங்கள் தொடர்பான புதிய செய்திகளும் விளக்கங்களும் இந்நூலைப் படிப்பதால் பெறலாம். இறுதி நூற்பாவான சமுத்தி இலக்கியத்திற்குப் பிரபந்ததீப நூலாசிரியர் மட்டுமே விளக்கம் அளித்திருப்பது நினைவில் கொள்ளத்தக்கது. சமுத்தி என்பதற்கு உரை விளக்க மாகச் 'சமசை என்பதினின்றும் சமுத்தி எனும் பெயர் தோன்றியது எனலாம். சமசை என்பது, பாடிமுடிக்கும்படி ஒருவனுக்குக் கொடுக்கும் கவியுறுப்பாகும்' என்று இந்நூற்பதிப்பில் காணலாம். இவ்வாறான சிறப்பான நூலையும் உரையையும் வகுத்துத்தந்த சான்றோர் பெயர் தெரியுமாறில்லை. இத்தகைய அருமையான நூல் முழுமையாகக் கிடைக்கவில்லை; என்றாலும் ஓலைச் சுவடி யாக இருந்த அருமையான நூலை இம்மட்டிலாவது தமிழுலகத் திற்குக் கொணர்ந்த பதிப்பாசிரியரின் தொண்டு நினைவு கூர்தற் குரியது.

பகவத் விஷயம் என்று அழைக்கப்படுகின்ற திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் பகுதி-1 (முதற்பத்து) சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாக-மறுபதிப்பாக-வந்துள்ளது. முன்னரே 195 ஆம் ஆண்டிலும், 1957-ஆம் ஆண்டிலும் இது பதிப்பிக்கப்பெற்றது.

நம்மாழ்வார் எழுதிய திருவாய்மொழியில் பெரிதும் ஈடுபாடு கொண்ட இராமாநுசரின் சீடர் திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பவர் ஆறாயிரம் கிரந்தங்களில் ஆறாயிரப்படி வியாக்கி யானத்தை மணிப்பிரவாள நடையில் இயற்றினார். அவருக்குப் பிறகு ஒன்பதினாயிரப்படியை நஞ்சீயரும், பன்னீராயிரப்படியை வாதிகேசரி அழகிய மணவாள சீயரும், இருபத்துநாலாயிரப் படியை பெரியவாச்சான் பிள்ளையும், முப்பத்தாறாயிரப்படியை நம் பிள்ளை கூறியருள வடக்குத் திருவீதிப்பிள்ளையும் எழுதி வழங்கினர். இவற்றுள் முப்பத்தாறாயிரப்படியை 'ஈடு' என்ற பெயராலேயே குறிப்பர்; இதனை உபதேச ரத்தினமாலை,

'தெள்ளியதாம் நம்பிள்ளை செப்பு நெறி தன்னை
வள்ளல் வடக்குத் திருவீதிப்—பிள்ளை இந்த

நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்த(து)
ஈடுமுப்பத் தாறா யிரம்' (44)

என்று விளக்கிக் காட்டும். செந்தமிழில் நம்மாழ்வார் தம் திருவாய் மொழியை யியற்றியிருப்பினும் வியாக்கியானப் பெரியவர்கள் தத்தம் தத்துவத்திற்கும் புராணக் குறிப்புக்களுக்குமேற்பத் தமிழினின்றும் திசைதிருப்பிப் பெரிதும் வடமொழிக் கலவையாக **மணிப்பிரவாளம்** என்ற பெயரில் உரையெழுதினார்கள். பைந்தமிழில் அவை அமைந்திராவிடினும் **விசிட்டாத்துவைத** சமயச் சிந்தனையில் அவர்கள் பெரிதும் ஈடுபாடு கொண்டு தம் உள்ளுணர்வால் அவ்வாறெல்லாம் விரித்துப் பொருள் காண வேண்டுமோ அவ்வாறெல்லாம் கண்டு விண்டுரைத்தார்கள்; அவர்களது சமய ஈடுபாடு வரலாற்றில் பொறிக்கத் தக்கதாயிற்று.

ஈடு முப்பத்தாறாயிரப்படியைத் தமிழ் மக்கள் புரிந்து பயன் கொள்ளுமாறு அதனை வைணவ அறிஞர் பு. **ரா. புருஷோத்தம நாயுடு** தமிழாக்கம் புரிந்துள்ளார். அவர் தம் முகவுரையில் அரிய கருத்துக்களைப் புலப்படுத்துகிறார். மேலும், நம்மாழ்வார் வரலாறு, நம்மாழ்வாரும் திருவாய்மொழியும், சில அகச்சான்றுகள், ஆழ்வார் செய்யுள் பாடியமுறை, சமயக் கருத்துக்கள், ஆழ்வார் இறைவனிடத்து வேண்டுவன என்ற உள் தலைப்புக்களில் இந்த நூலுக்கு அரணான அருமையான கருத்துக்களைக் கூறியுள்ளார். மேலும், 'திருவாய்மொழியின் வியாக்கியானங்களும் அவை வந்த வரலாறுகளும்' என்ற தலைப்பில் உரை வந்த வரலாற்றினை மிக நேர்த்தியாக வரைந்துள்ளார்.

திருவாய்மொழியினைப் போன்றே அதற்கமைந்த வியாக்கியானங்களும் அருமை பெருமைகளை உடையன என்பது நாயுடு அவர்களின் அழுத்தமான கொள்கை. அவற்றின் பெருமையைக் குறிப்பிடுகையில் 'திருவாய் மொழியினால் வியாக்கியானங்களுக்கு ஏற்றமோ? வியாக்கியானங்களால் திருவாய்மொழிக்கு ஏற்றமோ? என்ற ஐயம் தோன்றுதலும் கூடும். இவ்வியாக்கியானங்கள் மணிப்பிரவாளநடையில் அமைந்தவை; சுவாநுபவத்தோடு செய்யப்பட்டவை யாதலின் கற்போர்க்கும் சுவாநுபவத்தை உண்டாக்கக் கூடியவை. இவற்றுள் ஈட்டின் நடையழகு தனிச் சிறப்பு வாய்ந்தது; பொருள் உணர்வோடு பயிலப்பயிலப் பேரின்பம் பயப்பது; சொல்லாற்றல் பொருளாற்றல்கள் அமைந்தது; சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் என்னும் வனப்பு வாய்ந்தது; கூறப்

புகும் பொருளை விளக்குவதற்குக் காட்டப்படும் மேற்கோள்கட்குப் பொருள் கூறும்முறை எத்தகையோரும் வியக்கத்தக்கது; பத சாரம் கூறுவதில் இவ் ஈட்டின் ஆசிரியருக்கு ஒத்தாரும் மிக்காரும் இத்தமிழ் நாட்டில் இலர்; பிறநாட்டிலும் இலர் என்றே கூறலாம்; ஒரு பதிகத்தோடு மற்றொரு பதிகத்திற்கும், ஒரு பாசுரத்தோடு மற்றொரு பாசுரத்திற்கும் உள்ள பொருள் தொடர்பைக் கூறிச் செல்லும் பண்பு வேறு எவ் உரையிலும் காண்டல் அரிது' எனக் கூறிச் செல்கிறார். இதனால், ஈடு பற்றிய உரைநுட்பத்தை இனி துணரலாம்.

ஒவ்வொரு திருவாய்மொழிப் பாசுர உரை நலத்தையும் வட-மொழி தென்மொழிப் புலமையாளராகிய ஈட்டின் தமிழாக்க ஆசிரியர் நாயுடு பெரும் பொறுப்போடு - பைந்தமிழ்ப் பாங்கோடு- ஆக்கியுள்ளார். அவரது உரைநல மாட்சியினை ஒவ்வொருவரும் பயின்றே புரிந்து கொள்ளுதல் நல்லது; ஈண்டு விரிக்கிற் பெருகும்.

செய்யுளில் அமைந்துள்ள இலக்கியங்களை உரைநடைப் படுத்திய—வசனவடிவில் கொணரப்பெற்ற—சில நூல்களைப் பற்றிச் சிறிது காண்போம்.

**பரஞ்சோதி முனிவர்** அருளிய **திருவிளையாடற் புராணத்திற்கு** 'வசன நடை கைவந்த வல்லாளர்' எனப் போற்றப்பெற்ற யாழ்ப்பாணம் தவத்திரு **ஆறுமுக நாவலரால்** முதற்கண் தரமான தமிழில் வசனம் எழுதப் பெற்றது. அஃதொரு புறமிருக்கத் திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்தின் ஆதரவுடன் சைவப் பெரும் புலவர் **தி. பட்டுச்சாமி ஓதுவரால்** எழுதப்பெற்ற உரைநடை (வசனம்) திருவிளையாடற்புராணம் முழுவதற்குமாக 1955 ஆவணி மூலத்திருநாளில் வெளிவந்தது. அந்த வசன நூலின் மறுபதிப்பாகத் **திருவிளையாடற்புராணம்—மதுரைக் காண்டம்** மட்டும் (ரௌத்திரி விஜயதசமி வெளியீடு) 19—10—1980-இல் வெளியாகியுள்ளது. இந்நூலில் இடையிடையே சிறப்பாகக் குறிப்பிடத்தக்க பாடல்கள் தரப்பெற்றுள்ளன.

மதுரைக் காண்டமானது காப்பு முதல் பதிகம் வரையிலுள்ள 11 பகுதிகள் ஒரு பிரிவாகவும், இந்திரன் பழிதீர்த்த படலம் தொடங்கி வருணன் விட்ட கடலை வற்றச் செய்த படலம் வரையிலுள்ள 18 பகுதிகள் மற்றொரு பிரிவாகவும் அமைந்துள்ளது. தொடக்கம் முதல் ஒவ்வொரு பகுதிக்கும் பொருத்தமான உள் தலைப்புக்களிட்டு நேர்த்தியான தமிழில் எளியவர்களும் கற்ப தற்கேற்ப **வசனம் எழுதியுள்ளமை** போற்றுதற்குரியது. சில

இடங்களில் புராண நிகழ்ச்சிகளை மனத்துள் வாங்கி நேரிடை உரையாடலாக நாடகப் பாங்குடன் உள்ளுறுத்திக் கதையினைக் கூறிச் செல்லுதல் கற்று இன்புறற்பாலது. எடுத்துக்காட்டாக **இந்திரன் பழிதீர்ந்த படலத்தில்** இந்திரன் சோமசுந்தரக் கடவுளைப் பூசனையுடன் வணங்கித் துதித்து வேண்டி நிற்கிறான். சிவபெருமான் அவனுக்குத் திருவருள் புரிதலைக் குறிப்பிடுகையில் ''அப்போது சோமசுந்தரக் கடவுள் கருணை கூர்ந்து இந்திரனை நோக்கி, 'அன்பனே! நீ வேனிற்காலமும், சித்திரை மாதமும், சித்திரை நட்சத்திரமும், பௌர்ணமி திதியும் ஆகிய இவை கூடிய சித்திரை மாதத்தின் சித்திரைப்பௌர்ணமி நாள்தோறும் வந்து வந்து பூசை செய்வாயாக. இதனால், முந்நூற்றறுபத்தைந்து நாளும் பூசைசெய்த பயன் கிடைக்கும். இனி, நீ சுவர்க்க லோகத்தை அடைந்து தூய பல இன்பங்களைத் துய்த்து வாழக் கடவை; பின்பு, உனக்கு மலபரிபாகம் உண்டாக. நான்முகன், திருமால் முதலிய பெருந்தேவர்களுடைய பதங்களிலும் பிறவற்றி லும் நிராசை உண்டாகும்; அப்பொழுது நாம் வீடுபேற்றை அருளுவோம்' என்று திருவாய்மலர்ந்தருளி விடை கொடுத்து இலிங்கத்துள் மறைந்தருளினார்'' என்று எழுதிச் செல்லுதலைக் காணலாம்.

வசன ஆசிரியர் உரைநடையாக எழுதும்போதும் இடையிடையே விளக்கங் கூறவேண்டிய சொற்களோ சாத்திர— இலக்கியக் குறிப்புக்களோ காணப்படின் அவற்றை அடிக்குறிப்பில் கொணர்ந்து விளக்கிச் செல்கிறார்; ஆகவே, திருவிளையாடற் புராணம்-உரைநடை பல்லோர்க்கும் பயன்படும் நல்ல நூல் எனலாம்.

**வீரமாமுனிவர்** இயற்றிய **தேம்பாவணி** என்னும் பெருங் காப்பியத்திற்கு முன்பே பகுதி பகுதியாகவும் முழுமையாகவும் நல்ல திட்பமான உரைகள் உண்டு; என்றாலும், பல்லோர் பயன் கொள்ளுமாறு இல்லை. இதனை நன்குணர்ந்த புதுவைப் புலவர் மணி **ஜோசப்ராயர்** அதற்கு வசனம் எழுதியுள்ளார்; 8-11-1980 ஆம் நாளில் அதனைத் **தேம்பாவணி வசனம்** என்ற பெயரில் வெளியிட்டுள்ளார்.

இத்தாலியப் பாதிரிமாராகிய வீரமாமுனிவர் ஆர்வத்துடன் தமிழ் பயின்று, கம்பன் காப்பியத்தை அடியொற்றிச் **சூசையப் பரின் மாட்சியுணர்த்தும்** வகையில் **தேம்பாவணி** எனும் இனிய காப்பியத்தை யருளினார்; அக்காப்பியத்தில் கற்பனை வளமும்,

அறநூற் கருத்துக்களும், அணிநலமும், உணர்ச்சிச் சித்திரிப்பும், சமுதாய வாழ்வியலும், நீதிப்பண்பாடும் அமைந்துள்ளன; இருப்பினும் அக்காப்பியம் கடியநடை கொண்டது.

முன்னரே தேம்பாவணிக் கருத்துக்களையொட்டிப் பெருந்தகை மு. ஆரோக்கியசாமிப்பிள்ளை, 'சூசையப்பர் மான்மியம்' என்ற வசன நூலை எழுதியுள்ளார்; பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனசு **'தேம்பாவணி வசனபாடம்'** என்ற சிறு நூலை எழுதியுள்ளார்; பேராசிரியர் வி. மரிய அந்தோனி **'தேம்பாவணி-சுருக்கம்'** என்ற நூலை எழுதியுள்ளார்; இவையேயல்லாமல் **தேம்பாவணி கீர்த்தனை** என்ற இசை நூலும் உண்டு. இந்த நூல்கள் வரிசையிலே தேம்பாவணிப் பெருங்காப்பியத்திற்குத் தம்மாலான சிறந்த தொண்டினைப் புரிந்திட எண்ணிய புலவர் மணி ஜோசப்ராயர் **தேம்பாவணி வசனம்** எனும் நூலை ஆர்வத்துடன் அரும்பாடுபட்டு எழுதியுள்ளார்.

தேம்பாவணிக் காப்பிய நுண் கூறுகளைச் சுவை குன்றாத வண்ணம் நேர்த்தியாக எளிமையுடனும் இனிமையுடனும் வசனம் வரைந்திருப்பது வசன நூலாசிரியரின் புலமைத்திறத்தைப் புலப்படுத்தும்.

தேம்பாவணியில் யூதேயாக் காண்டம், எகிப்துசேர் காண்டம், முத்திக் காண்டம் ஆகிய மூன்று காண்டங்கள் உண்டு; நாட்டுப் படலம் தொடங்கி முடிசூட்டுப்படலம் முடிய முப்பத்தாறு படலங்கள் உண்டு; மூவாயிரத்து அறுநூற்றுப் பதினைந்து செய்யுட்கள் உண்டு; ஒவ்வொரு படலத்தின் சுருக்கமும் புலப்படும் வகையில் அடைப்புக்குறியிலே சிறப்பான சாரமான-செய்திகளை எழுதியுள்ளார். எடுத்துக்காட்டாக, நாட்டுப் படலத்தினைக் குறிஞ்சி நிலத்தின் நீர்வளம், முல்லை நிலத்தின் நீர் வளம் மருத நிலத்தின் நீர்வளம், நெய்தல் நில நீர்வளம், நாட்டின் நீர்வளம், மனவளமும் நிலவளமும், நாட்டுச்சிறப்பு, தழுவி நிற்பன. நடன அரங்கு, ஐம்புலவின்பம் தெய்வீகநலன் என்ற உபதலைப்புக்களைக் காணலாம். இந்தப் படலத்தின் வசனத்தைக் கற்போர் ஆர்வத்துடன் மனங்கொள்ளும் வகையிலே இரத்தினச் சுருக்கமாக அடைப்புக் குறியில்—(யூதேய நாட்டின் நால்வகை நிலங்களின் நீர்வளம், நிலவளம், மனவளம், சிறப்பு முதலியவற்றை எடுத்துக் கூறும் பகுதி)—என ஆசிரியர் எழுதிப் பதிப்பித்திருப்பது பாராட்டுதற்குரியது.

தேம்பாவணியிலமைந்துள்ள மூவாயிரத்து அறுநூற்றுப் பதினைந்து செய்யுட்களில் நூற்றுமுப்பது செய்யுட்களை-விருத்தங்களை—மணிகளாகப் பொறுக்கியெடுத்து வசனத்திற்கு இடையிடையே பாங்குடன் அமைத்துள்ளார்; அவற்றை நிகழ்ச்சிச் சூழல்களுக்கிடையே பயிலும்போது மூல ஆசிரியராகிய வீரமாமுனிவரின் கை வண்ணத்தைப் பாராட்டிக் கொண்டே செல்லத் தோன்றும்.

ஒப்பாய்வுப் பார்வையிலே ஒரு குறிப்பு உண்டு; கம்பராமாயணத்தை வசனப்படுத்திய நிலையில் மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைமைப்புலவர் திருச்சிற்றம்பல தேசிகர் எந்த அளவிற்கு இராமாயணச் செய்யுட்களை இடையிடையே பயன்படுத்திக் கொண்டாரோ, அந்த அளவிற்குத் தேம்பாவணி வசனத்திலும் செய்யுட்களை ஜோசப்ராயர் பயன்படுத்திக் கொள்கிறார் என்பது சிந்திக்கத்தக்கது. (இராமாயணம் பத்தாயிரத்திற்கு மேற்பட்ட செய்யுட்களையுடையது; இராமாயண வசனத்தில் பயன்படுத்தப் பெற்ற செய்யுட்கள் முந்நூற்றுத் தொண்ணூற்றாறு என்பது காண்க). இதனால், வசனம் சிறப்பதற்கு மூலநூலிற் காணும் சிறந்த செய்யுட்கள் சிலவற்றைப் பாங்காக அளவோடு அமைத்துக் கொள்வது வரவேற்றற்குரிய தெனலாம்.

தேம்பாவணிப் பொருண்மை (Content), வடிவம் (Form), வெளியீடு (Expression) ஆகியவற்றைத் திறனாய்வுக் கண் கொண்டுணர்ந்த வசன ஆசிரியர் எந்த அளவிற்குத் தம் நூலகத்தே கவர்ச்சிக் கூறுகளைத் தரமுடியுமோ அந்த அளவிற்குத் தருகிறார். எடுத்துக்காட்டாக, வசனம் எழுதுகையில் சில இடங்களிலே நாடகப்பாங்கினைக் கையாளுதலைக் குறிப்பிடலாம். இவ்வாற்றான், பாலமாட்சிப் படலத்தில் வயோதிகனும் சூசையும் உரையாடல், சோசுவன் வெற்றிப் படலத்தில் பகையரசர் முன் ஆபன்துரை மொழிதல், சித்திரக் கூடப்படலத்தில் சூசை முனிவரும் அதிட்ட முனிவரும் உரையாடல், ஞாபகப் படலத்தில் அறப்பயன் பற்றிச் சூசை முனிவருடன் சிவாசிவன் வாதாடுதல், வேதக்கெழுமைப் படலத்தில் சூசை முனிவரும் சுாமியும் உரையாடுதல் நாபகன் குண்ணன் உரையாடல் ஆகிய பகுதிகளைக் காணலாம்.

சில காட்சிகளை வருணிக்கையில் எவ்வாறு வீரமாமுனிவர் இயற்கை நலத்திலும் தெய்வ நலத்திலும் தாம் ஒன்றியவராய்ப் பாடுகிறாரோ அவ்வாறே வசன ஆசிரியரும் ஒன்றி வசனம் எழுதுகிறார். எடுத்துக்காட்டாக, மீட்சிப்படலத்தில் வரும் சிலுவைக்

காட்சியில் எத்தகைய ஈடுபாடு மூல ஆசிரியருக்கும் வசன ஆசிரியருக்கும் உள்ளது என்பதுபற்றியும், உணர்ச்சி வெள்ளம் எவ்வாறு அந்தக் காட்சியில் பாய்ந்தோடுகிறது என்பது பற்றியும் ஒரு சிறு பகுதியைக் காண்போம்.

## சிலுவைக் காட்சி

திருமகன் வருத்தத்தை நீக்க, வானவர்கள் ஒளிவீசும் சிலுவையைக் காட்டினர். அதைக்கண்டு திருமகன் வருத்தம் நீங்கினான். ''அழகிய அணிகலனே! என் அன்பின் அறிகுறியே? என் அன்பிற்கிசைந்த தேரே! பெருமை மிக்க அணிகலனே! கதி வீட்டின் வாயிலைத் திறக்கும் திறவுகோலே! இன்ப அணியே! எல்லா உலகையும் ஆட்சி செய்ய, கையிலேந்தும் செங்கோலே! அணிகலன்களில் சிறந்த பேரணியே! எனது உயிரின் உயிரே! நீ வாழ்க'' என்று சிலுவையை வாழ்த்தினான்.

ஏரணியே, என் அன்பே; என் அன்பிற்கு இரதமிதே
சீரணியே உயர்வீட்டைத் திறக்கும் கோல்இதே; இன்பத்து
ஆரணியே எங்கணும் நான் ஆண்டு ஓச்சும் செங்கோலே
பேரணியே எனது உயிரின் பேருயிரே வாழியவே. (30:119)

'அன்பின் தூண்டலால் வானத்தெழுந்து சிலுவையைத் தழுவினான். அமுதக் கடலில் மூழ்கியதைப்போல் இன்ப நிலையில் மெய் மறந்தான். திருமகனைச் சுற்றிச் சூரியன்போல் ஒளிவீசியது. சூசைமா முனிவரும் கன்னித்தாயும் அதனைக் கண்டு உயிரற்ற உடல்போலவும் உலையில் மூட்டிய தீயில் உருகும் பாவைபோலவும் நின்றனர்' என்று வசன ஆசிரியர் எழுதிச் செல்லுதல் காண்க.

## முடிப்புரை

தமிழ் இலக்கியச் சோலையிலே ஒவ்வோர் ஆண்டும் பல இலக்கிய மலர்கள் மலர்தலைக் காணலாம். என்றாலும், அவற்றின் நறுமணமாட்சியை யுணர்ந்து—நுண்கூறுகளையுணர்ந்து போற்றுதலால்தான் மக்களுக்குப் பயன் உண்டாகும்; தோன்றிய தமிழிலக்கியச் சோலையும் இனிது வளத்துடன் என்றும் வாழும். வாழிய பைந்தமிழ்!

## குறிப்புகள்

1. பரமசிவானந்தம் அ.மு., **பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி**, தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் லிமிடெட், (சென்னை, 1966) ப. 17.
2. நன்னூல் பொதுப்பாயிரம்—21-ஆம் நூற்பா.
3. ,, ,, —22 ,,
4. ,, ,, —23 ,,
5. மயிலைநாதர் எழுதிய காண்டிகையுரை, சங்கர நமச்சிவாயர் எழுதிய விருத்தியுரை முதலிய உரைகளைக் காண்க.
6. பரமசிவானந்தம் அ மு., அதே நூல், பக். 15-16.
7. Encyclopaedia Britanicca, Vol. 18, Pp. 591—592.
8. திருச்சிற்றம்பலத் தேசிகர், கம்பராமாயணம், B. இரத்தின நாயகர் அண்டு சன்ஸ் (பதிப்பு), [திருமகள் விலாச அச்சியந்திர சாலை சென்னை.]
9. சித்பவானந்தர், **இராமாயணம்** ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம் (பதிப்பு), திருப்பராய்த்துறை, திருச்சி மாவட்டம்.
10. **திருத்தொண்டர் புராண சாரம்** (மூலமும் கதைச்சுருக்கமும்) (ஸ்ரீகாசி மடவெளியீடு, 1964), சென்னை மினர்வா வெளியீடாகவும் நிரம்பக் கதைச் சுருக்க நூல்கள் வந்துள்ளன—காண்க.
11. 'Its prose-style is yet in a forming state, and will well repay the labour of accurate scholars in moulding it properly. Many natives, who write poetry readily, cannot write a page of correct prose'—preface, **Winslow's Tamil-English Dictionary** (1862).
12. **நற்றிணை நானூறு** (மூலமும் உரையும்)-திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு.
13. திருத்தணிகை சந்நிதிமுறை, கிடைக்குமிடம், தி.கி.நாராயண சாமி நாயுடு, 2, சீதாராம நகர், கடலூர்.

# எண்பதில் மலர்கள்

த. அழகப்பராசு

இயற்கையிலே கருத்தாங்கி, இனிமையிலே வடிவெடுத்து செயற்கை கடந்து இயல்இசை நாடகமாய் இலங்கும் இனியமொழி தமிழ்மொழி அம்மொழியில் மொட்டுக்களாய் உள்ள கருத்து களை—செய்திகளை—செயல்களை—நிகழ்ச்சிகளை நிரல்பட நெறி யுடன் எடுத்துரைப்பன மலர்கள். இவை சிறப்பான இலக்கிய வகை களின் தொகுப்புகளை நல்குவதுடன் பிற சில கூறுகளையும் தன்னுள் கொண்டுள்ளன.

இம்மலர்கள் வெளியிடுவோர் வெளிப்படும் நோக்கம், வெளிப் படுமிடம் இவற்றைக்கொண்டு சிற்சில மாறுபாடுகளை எய்து கின்றன. இம்மலர்களைப் பொதுவகையால். **கால அடிப்படை மலர்கள், நிகழ்ச்சி அடிப்படை மலர்கள்** என இரண்டாக்கலாம். ஆண்டு மலர் மணிவிழா மலர், வெள்ளிவிழா மலர், பொன்விழா மலர், இதழ்மலர் என்பன காலமலர்கள் நிரையுள் அமையும். திருவிழாமலர், சிறப்புமலர் அரங்கமலர், நாள்மலர், நாளிதழ்மலர் என்பன நிகழ்ச்சி மலர்களாகும்.

## 1. கால அடிப்படை மலர்கள்

### 1.1. ஆண்டு மலர்கள்

பள்ளிகள் கல்லூரிகள் பிற கல்வி இயல் நிறுவனங்கள் ஒவ்வொரு ஆண்டு இறுதியிலும் மலர்களை வெளியிடுவதுண்டு. இத்துடன் தனியார் நிறுவனங்களும், சமய நிறுவனங்களும் ஆண்டு நிறைவு மலரை உருவாக்குகின்றன. அவ்வாண்டில் நடந்த எல்லா வகையான நிகழ்வுகளையும் தொடர்புபட ஆண்டறிக்கை

யில் தொகுத்துரைப்பர். மலரினுள் நடைபெற்ற விழாக்கள்,[1] சிறப்பான நிகழ்ச்சிகள்[2], அமைப்புகள்[3] அவை தொடர்பான செய்திகள் அமைக்கப்படும். முதன்மையானவர்களின் புகைப் படங்களை முதலில் அச்சுருவாக்குவதைச் சில மலர்கள் இயல் பாய்க் கொண்டுள்ளன. இவை தவிர முதன்மையானவர் தொடர்பான சிறப்பு நிகழ்ச்சிகளும் புகைப்பட ஆக்கம் பெறுவ துண்டு

கல்வி நிறுவன மலர்கள் அந்நிறுவனத்தின் தலைவர், ஆசிரியர்கள், அலுவலர்கள் மாணவர்கள் / மாணவிகள் போன்றோரின் படைப்புகளைத் தாங்கி நிற்கின்றன. தனியார் நிறுவன மலர்கள் நிறுவனத்தியலாரை மட்டுமன்றி பிற அறிஞர் களையும் கருத்து மழை பொழியச்செய்து அச்சுருவாக்குவர். கல்வி நிறுவனங்களின் ஆண்டுமலர்களில் பொன்மொழிகள், சிரிப்புக் கொத்துகள், கேளிக்கை வினாவிடைகள் போன்றவையும் இடம் பெறும். இந்தக் கல்வி நிறுவன மலர்களில் கவிதைகளும், சிறுகதை களும் முதலிடம் வகிக்கின்றன. அந்த ஆண்டில் நடைபெற்ற போட்டிகளில் பரிசுபெற்ற படைப்புகள் அந்தக் குறிப்புகளுடன் வெளியிடப்படுகின்றன.[4]

தனியார் நிறுவனமலர்கள் அவ்வமைப்பு இயல்பிற்கேற்பச் சில மாற்றங்களைக் கொண்டுள்ளன. வளர்கலை மன்றத்தின் இரண்டாமாண்டு மலர் முதலில் பல தலைவர்களின்—அறிஞர் களின் வாழ்த்துகளைத் தாங்கியுள்ளது. அதை அடுத்து அம் மன்றத்தின் தொடக்கம், நடத்தப்பட்ட தேர்தல்கள் நடைபெற்ற நிகழ்ச்சிகள் போன்றன தொகுத்துரைக்கப்படுகின்றன. அதன் பின்னர் கட்டுரைகள், கதைகள், கவிதைகள் போன்ற படைப்புகள் அமைகின்றன. இதில் யாதொரு விளம்பரமும் அமையாதது குறிப்பிடற்பாலது.

அறிஞர்களால் தொடங்கப்பெற்றுச் சிறப்புற நடந்துவரும் கம்பன் கழகம் வருடந்தோறும் ஆண்டுமலர்களை வெளியிடு கின்றன. இம்மலர்கள் முழுமையும் கம்பன், கம்பன் படைப்புகள் இவற்றைப் பற்றி அமைந்த ஆய்வு விளக்கக் கட்டுரைகளே இடம் பெறுகின்றன. எண்பதாம் வருட மலர்களில் புகைப்படங்களோ, கழகத்தின் நிகழ்ச்சிகளோ இடம் பெறவில்லை. நாலாம் ஆண்டு மலர் என்பதால் இவை இடம்பெறவில்லை போலும். இக்கழக மலர்கள் சிலவற்றில் பழம்பெரும் புலவர்களின் பழைய படைப்பு கள் (கட்டுரைகள்) மீண்டும் இடம் பெறுவதைக் காணலாம்.[5]

சில நிறுவனங்களால் ஆண்டு நிறைவு மலர்கள் வெளியிடப் படுகின்றன. அவை ஒவ்வோர் ஆண்டும் வெளியிடப்படுவதில்லை. குறிப்பிட்ட சில ஆண்டுகட்கு மட்டும் அவற்றை உருவாக்குவதை நிறுவனத்தார் கொள்கையாய்க் கொண்டுள்ளனர். மற்ற ஆண்டு மலர்களைப் போன்றிவை முதல் மலருக்கும் அடுத்த மலருக்கு மிடையேயுள்ள ஆண்டுகளின் நிகழ்ச்சிகளை எடுத்துரைக்கும்.

## 1.2 மணிவிழா மலர்

மணிவிழா மலரமைப்பு தனிப்பட்ட ஒரு மனிதருக்கோ நிறுவனத்திற்கோ பெரும்பான்மையும் அமைகின்றது. எண்பதில் நமக்குக் கிடைத்த மணிவிழா மலர் **தேசிக தெய்வீகச் செம்மல் எஸ். இராமசாமி அவர்களின் மணிவிழா மலர்** ஆகும். இம்மலர் இராமகிருஷ்ண பரமஹம்சருக்குக் காணிக்கை அளிக்கப் பட்டுள்ளது. திரு. இராமசாமிக்கு கற்பகக்கனி எனச் சிறப்புக் கொடுத்து அதைக் கொட்டை எழுத்துகளில் அச்சாக்கி அட்டையை (Wrapper) அமைத்துள்ளனர். இம்மலர்த் தோற்றம் கற்பகக்கனி என்னும் வகையில் அந்த ஏழுஎழுத்துகளும் பெரிதாக வும், அழகுபடவும் அமைந்துள்ளது இதில் இருபத்துமூவரின் வாழ்த்துகள் கற்பகக்கனியைப் புகழ்கின்றன. அரசியலார் ஆட்சியியலார், சமயவியலார் மூவரும் அவ்வாழ்த்துகளைத் தந்துள்ளன.

மணிவிழா என்பதற்கு விளக்கம் கூற திரு. வி.க.வின் கருத்தைக் காட்டியுள்ளனர்.[6] இதில் கட்டுரைகளே தொண்ணூறு விழுக்காடு இடத்தைப் பெறுகிறது. அவற்றுள்ளும் தெய்வம், தெய்வ நம்பிக்கைகள் போன்ற சமயத் தொடர்பான கருத்துரை களே மிகுதி.

## 1.3 வெள்ளிவிழா மலர்

**வெள்ளிவிழா, பொன்விழா, பவளவிழா** என்பன அமையும் கால அளவு மிகுதிப்படுவதால் எண்ணிக்கையில் குறைந்து காணப் படுகின்றன மயிலம் திருப்புகழ் திருப்படி வெள்ளிவிழாமலர் இவ் வகையினது. இது இறைப்பற்றாளர்களின் வாழ்த்துடன் தொடங்குகிறது. சமயச்சார்பு நிறுவனத்தால் இம்மலர் வெளி யிடப்பட்டமையின் இறைவன், இறை நம்பிக்கை, இறைபொருள், இறைநூல் போன்றன பற்றிப் பேசும் விளக்கக் கட்டுரைகளே இதன் கண் இடம்பெற்றுள்ளன. புகைப்படங்கள் ஆங்காங்கே காட்சி தருகின்றன. கந்தசஷ்டி கவசம் இடம்பெறுவதுடன் மனனம்

செய்தற்குரிய சைவத்திருமுறை, திருப்புகழ் போன்றவற்றின் பாக்களும் இங்கு தரப்பட்டுள்ளன.

தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தார் தனது வெள்ளி விழா மலரை வெளியிட்டுள்ளனர். இதில் இயல், இசை, நாடகம் பற்றிய கட்டுரைகள் மட்டுமே இடம்பெறுகின்றன.

கிடைத்த மலர்களில் எண்ணிக்கை நிறைந்த (73) கட்டுரைகள் இங்குதான் இடம்பெறுகின்றன. மற்ற மலர்கள் பெரும் பான்மையும் தமிழகத்தினரின் வாழ்த்துகளை மட்டும் பெற்று அமைகின்றன. ஆனால் இம்மலர் ஆறு மாநிலங்களின் பொறுப்பிலுள்ளோர்கள் வாழ்த்துகளைத் தாங்கி நிற்கிறது. கட்டுரைகள் அதிகமாக இடம்பெற்று இயலிசை நாடகம் தொடர்பான சிறு கூறையுங்கூட விட்டுவைக்காமல் தொட்டுக்காட்டி நிற்கிறது. இதனால் நாம் முத்தமிழின் திறத்தினைச் சற்று ஆழ்ந்து நுகர முடிகிறது.

### 1.4 பொன்விழா மலர்

ஆனந்த விகடன் பொன்விழாமலர் ஒன்றுதான் நமக்குக் கிடைத்த பொன்விழாமலர் ஆகும். இதன்கண் பழமை பற்றிய சிந்தனை, இன்றைய புதுமைப்போக்கு - நோக்கு நிறைந்த கட்டுரைகளும் இடம்பெற்றுள்ளன. இயல்பாகவே இந்த வார இதழில் கட்டுரை அமைவதில்லை. கதைகள், கருத்துப்படங்கள், சிரிப்புக் கோர்வைகள், சில அரிய செய்திகள் இவை அமையும். அவற்றுடன் சில சிறப்புக் கூறுகளையும் தாங்கி இம்மலர் வெளிவந்துள்ளது இதில் சிறுகதைகள் முதலிடம் வகுக்கின்றன. எண்பதிற்கு முன்னர் ஆனந்த விகடன் நடத்திய போட்டிகளில் பரிசுபெற்ற கதைகள் இங்கும் அச்சுருப் பெற்றுள்ளன.[7]

சிரிப்புகள் கூட அழகிய வண்ணப் படத்துடன் ஒரு பக்க அளவில் அமைந்துள்ளது. இச்சிரிப்புகளும் பழைய இதழ்கள், சிறப்பு மலர்கள் இவற்றினின்று எடுக்கப்பட்டுள்ளன.[8] இதில் பழைய இதழ்களின் கருத்துகளை ஒட்டு மொத்தமாக தொகுத்தமைக்கப்பட்டுள்ளது. புதுமையாகப் பொலிவன குறைந்து காணப்படுகின்றன. '**பேசும் சிலைகள்**' என்ற தலைப்பில் சில சிலைகளை வெளியிட்டு இன்றைய சமுதாயப் போக்கோடு சிந்தித்துச் சிலைகளுக்கடியில் குறிப்பெழுதி அமைத்துள்ளனர்.[9] விகடனின் ஐம்பது வயது வரை நடந்த சில சிறப்பு நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டியுள்ளமை நமக்குப் பயன்தரும் வகையில் அமைந்துள்ளது.[10]

## 2.0 நிகழ்ச்சி மலர்கள்

### 2.1 திருவிழா மலர்

இம்மலரை எவரும் தனியாக வெளியிடுவதில்லை. தீபாவளி, பொங்கல் போன்ற நன்னாளை முன்னிட்டு இதழியலார் மலர்களை வெளியிடுகின்றனர். தீபாவளித் திருநாளைச் சிறப்பிக்கு முகத்துப் பல இதழ்கள் பெரிய அளவில் மலர்களைச் சமர்ப்பிக்கின்றன. இம்மலர்களுக்குள் கருத்துக்கேற்பப் பல பிரிவுகள் ஏற்படுகின்றன.[11] பிரிவுகளுக்குள் கருத்துகள் ஒன்று சேர்கின்றன. மங்கையர் மலர் தனது தீபாவளி மலரில் **'சிறப்புப் பகுதி'** ஒன்றை அமைத்துள்ளது.

அதில் கதை ஆசிரியர்கள் பலரை அவர்கள் படைப்பில் அவர்கள் விரும்பிய பெண்மாந்தர்களைப் பற்றி விளக்கச் சொல்லியுள்ளனர்.[12] அப்படி விளக்கும் வண்ணம் அமைந்த இப்பகுதியால் படைப்பாளன் தன் நோக்கம் விருப்பு, வெறுப்பு, எண்ணங்கள் இவற்றை நாம் எளிதில் நுகரமுடிகிறது. இவ்வகையின் இதழ் மலர்களில், சிறுகதை மிக்கிடம்பெறுவது இயல்பாய் நிற்கிறது. இதனிடை இலங்கும் சிரிப்புக்கொத்துகள் தமக்கெனச் சில தனிப் போக்குடன் அமைகின்றன. இவற்றில்கூட போட்டிப் பரிசு தாங்கிய படைப்புகளும் முன்னிதழ்களில் உள்ள சிறப்புப்பகுதிகளும் அச்சேறுகின்றன.[13] கல்கியின் 'தீபாவளி' மலரில் பலவற்றைப் புகைப்படத்துடன் வெளியிடும் போக்கைக் காணமுடிகிறது. தலைத் தீபாவளியை விளக்கும் பொருட்டு ஒரு குடும்பத்தினரை வைத்துப் புகைப்படங்களை அமைத்துள்ளனர்.[14] சில குழந்தைகளின் மகிழ்ச்சிப் படங்களைக் கொண்டு காட்டியுள்ளனர். இதுபோன்றே பொங்கல் திருநாளைப் பற்றியும் இத்தகு நிகழ்ச்சிகளின் தொகுப்புகள் இடம்பெறுகின்றன.[15]

## சிறப்பிதழ் / இதழின் சிறப்பு மலர்கள்

இதழ்கள் சிலபோது மட்டுமே சிறப்பிதழ்களையும் சிறப்பு மலர்களையும் வெளியிடுகின்றன. ஒவ்வொரு மலருக்கு ஏற்ப சிறப்பிதழ் வெளியிடும் நோக்கம் வேறுபடுகின்றது.

**தனிநாயக அடிகளின் சிறப்பிதழ்,[16] கால்நடைச் சிறப்பிதழ்,[17] புத்தாண்டு சிறப்பிதழ்,[18] பட்டமளிப்பு விழா சிறப்பு மலர்,[19] சிறுகதை மலர்[20] யுகப் புரட்சி மலர்[21]** போன்றன அவற்றுள் சில

ஆராய்ச்சியில் சிறந்த அறிஞர் பெருமக்கள் தனிநாயக அடிகளின் வாழ்க்கைக் குறிப்பு, அவரின் சிறப்புப் பண்புகள், அனைத்து வகைச் சிறப்புகள் ஆகியவற்றை எடுத்தியம்பியுள்ளனர். இவ்விதழில் இவரைப் பற்றி ஆய்வு செய்கின்ற ஒருவர் இயம்பக் கூடிய அளவுக்கு இவரின் தொண்டையும் சீரையும் சிறப்பையும் விரிவாகவும். விளக்கமாகவும் எடுத்தியம்பியுள்ளனர் இது இவ்விதழுக்கே உரிய சிறப்பியல்பாகும். இளம் எழுத்தாளர்களின் சிறுகதைகள் (படைப்புகள்) நிரம்ப அமையப்பெற்று சிறுகதையின் சிறப்புமலராக தாமரை பொலிவு பெறுகிறது. இதனுள் பழம் எழுத்தாளர்களின் படைப்புகள் மூன்று மட்டும் அமையப் பெற்றுள்ளன.

**அரங்க மலர்கள்**

அரங்கு வைத்து ஆராயப்படும் அனைத்துக் கல்வியியல் தொடர்புகளும் இதன்பாற்படும். **கருத்தரங்கு மலர்கள், பட்டிமன்ற மலர்கள், சொற்பொழிவின் தொகுப்பு மலர்கள், மாநாட்டு மலர்கள், ஆய்வரங்க மலர்கள், கவியரங்க மலர்கள்** போன்றன இவ்வகையின.

**ஒய்.எம்.சி.ஏ. வின் பட்டிமன்ற ஆண்டு மலரும், இஸ்லாமிய தமிழ் இலக்கிய வரலாற்றின் கருத்தரங்க மலரும்,** இதற்குச் சான்றாம் தகுதியுடையன. பட்டிமன்ற மும்பத்தைந்தாமாண்டு நிறைவு விழாமலர் கடந்த முப்பத்தைந்து ஆண்டு கால நிகழ்ச்சிகள் அனைத்தையும் சுட்டும் வண்ணம் அமையவில்லை. குறிப்பிட்ட இந்த முப்பத்தைந்தாமாண்டு நிகழ்வுகள் மட்டுமே இதன்கண் இடம்பெறுகின்றன. இவ்விதழ் அந்த ஆண்டில் (1980) நடத்தப்பட்ட சொற்பொழிவுகளை அட்டவணை முறையில் பட்டியலிடுகிறது.[22] தலைமை தாங்கியோர், சொற்பொழிவாற்றியோர், நாள், நேரம், தலைப்பு இவை அவ்வட்டவணையை அலங்கரிக்கின்றன. இத்துடன் இந்த ஓராண்டு காலத்தில் மன்றம் வெளியிட்ட நூல்களும்[23] நடத்திய அறிஞர் விழாக்களும்[24] விளக்கங்களுடன் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன. தமிழ் மக்களின் எதிர்காலத்தை அலசி ஆய்ந்து ஒரு கட்டுரை வரைந்து மலரை முடித்துள்ளனர் இம்மன்றத்தார். இந்த ஒரு படைப்புத்தவிர மலர் முழுவதும் நிகழ்ச்சித் தொகுப்புகளே அமைந்துள்ளன இது கல்வியாண்டில் (Academic year) 1980 - 1981 முழுநிலையில் அமைவதால் வேறு சில செய்திகளும் இணைக்கப்பட்டுள்ளன.

வரலாற்றுக் கருத்தரங்க மலர் தமிழ் இலக்கிய நோக்கையும், போக்கையும் பேசுகின்றதொரு விளக்கமான மலராக அமைகின்றது. இதன்கண் தமிழ்மொழி வளர்ச்சி நிலைகளை ஆராயும் கட்டுரைகள் இடம்பெறுகின்றன. இதில் இஸ்லாமிய மதத்தவரின் தமிழ்த் தொண்டும், இஸ்லாமிய மதப் புலவனின் ஆற்றலும், கற்பனை வளமும் முதன்மைப்படுத்திப் பேசப்படுகின்றன. பேரிலக்கிய சிற்றிலக்கியங்கள் உட்பட்ட அனைத்து நூல்களும் (இஸ்லாம்) வரலாற்று நோக்கிலே ஆராயப்பட்டுக் கட்டுரைகள் அமைகின்றன. இதில் அமைக்கப்பட்ட படைப்புகள் கூட தொண்ணூற்று ஐந்து விழுக்காடு இஸ்லாமிய அறிஞர்களாக இருப்பது குறிப்பிடத்தக்கது. தமிழ் தன் தனிச் சிறப்பியல்புகளை ஆராயும் வகையில் இம்மலர் சிறந்து காணப்படுகிறது.

**நாள் மலர்கள்**

சுதந்திரநாள் விழா, குடியரசுநாள் விழா, பேரறிஞர்-பெருந்தலைவர் போன்ற குறிப்பிடத்தக்கோரின் பிறப்பு நாள் விழா போன்றனவற்றிற்கும் மலர் வெளியீடு நிகழ்கிறது. தாமரை இதழ், சுதந்திரநாள் மலரை வெளியிட்டுள்ளது. இம்மலரின் தொடக்கத்தில் விடுதலைநாள் பற்றிய விளக்கம், விடுதலைப்பறவை என்ற மலையாள மொழிபெயர்ப்புக் கட்டுரை, தாகூரின் சிந்தனைகள், சுதந்திர விழா பற்றிய கவிதைகள் இவை இடம் பெறுகின்றன. இவை தவிர இதன் மற்ற இதழ்களில் அமைவது போன்றே சிறுகதைகள், கவிதைகள் இவையும் அமைந்துள்ளன.

இது தவிர மற்ற நாள்விழா மலர் எதுவும் நமக்குக் கிட்டவில்லை.

**நாளிதழ்களின் மலர்கள்**

நாளிதழ்களுள் சில குறிப்பிட்ட நாள்களில் தங்களது தாள்களை மலர்களாக வெளியிடுகின்றன. இம்மலர்கள் இயல்பாக அமைவதைவிட அதிகப் பக்கங்களைக் கொண்டதாக இருக்கும். தீபாவளி, பொங்கல், ரம்ஜான், கிறித்துமஸ், ஈத் பெருநாள் போன்ற பண்டிகை மலர்கள், பெருந்தலைவர்களின் பிறந்தநாள் மலர்கள், அந்தச் செய்தித்தாளைச் சேர்ந்த சிறப்புத் தின மலர்கள் இவை இதன்கண் மலராக்கம் பெறுகின்றன.

தலைவர், சான்றோர், ஆட்சியலார், அரசியலார் போன்றோரின் பிறப்பு நாள் விழா மலர்களில் அவர்களது பிறப்பு நாள் தொடர்பான நிகழ்ச்சிகள் இடம்பெறும். அவரது படைப்புகள், தொண்டுகள், மாற்றறிஞர்களுடன் சந்திப்புகள், பிற சில சிறப்புக் கூறுகள் இதன்கண் புகைப்படங்களுடன் வெளியிடப்படுவதுண்டு. மற்ற விழாநாள் மலர்களில் அந்த விழாநாள் பற்றிய விளக்கம் இடம்பெறும். அது குறித்த விமரிசனம், வாழ்த்து போன்றன கவிதை, கட்டுரை, கதை, செய்தி, பேட்டி இவற்றின் மூலம் விளக்கப்படும். இதில் திரைப்படத் துறையினரின் வாழ்த்துக்கள் மிகுதியும் அமைவதைக் காண்கிறோம். இதழ்கள் சில தத்தம் இயல்பிற்கேற்ப அவ்வப்போது சிற்சில மாற்றங்களை நிகழ்த்துகின்றன.

அந்த இதழின் தொடர்புள்ள நாள் விழாக்களில் அதன் அதன் தொடக்கம், நடைபெற்ற சிறப்பு நிகழ்வுகள், வளர் பாதையின் கரடு முரடுகள் போன்றன பேசப்படும். அவை புகைப் படத்துடன் வெளியிடப்படும். இத்துடன் பல பெரியார்களின் வாழ்த்துகளும் இடம்பெறுவதுண்டு. இந்நாள்மலர்கள் தாம் அமைக்கப் போகின்ற மலர்குறித்து அறிவிப்புகளை அமைக்கின்றன. நடிகர், நடிகையர், பத்திரிகையியலார் போன்றோர் வாழ்த்துகள் படைக்க இருப்பதை முன்கூட்டியே முன்னறிவிக்கும் விதத்தில் இருக்கும். எத்தனை பக்கங்கள்? என்னென்ன சிறப்பு நிகழ்ச்சிகள்? என்பதைக் கூடச் சில தாள்கள் சுட்டி நிற்கின்றன. இப்படி மலர்களை வெளியிடுகின்ற இதழ்கள் அதற்கு அடுத்த நாளை விடுமுறை நாளாகக் கொண்டு செய்தித்தாளை வெளியிடுவதில்லை.

## மலர்களின் படைப்புகள்

இம்மலர்களில் இடம்பெற்றுள்ள எல்லாப் படைப்பாற்றல்களையும் முழுமையாக ஆய்ந்தறிவதென்பது கட்டுரைப்போக்கை மாற்றக் கூடும். ஆகவே பொதுநிலையில் அதன் படைப்புத் தன்மைகளை ஒட்டு மொத்தமாக நோக்கலாம்.

### கட்டுரைகள்

இவை இதழுக்கும், அமைப்பிற்கும் ஏற்ப மாறுபடுகின்றன. இவற்றுள் சில விளக்கம், ஆய்வு என்ற இரண்டு பகுப்புகளுடன் இலங்க, சில இலக்கிய நயத்தை மட்டும் பேசுகின்றன. பொதுவான

(உலக) நோக்குடன் உள்ளவை மிகச் சிலவே. சமயத் தொடர்புள்ள இதழ்கள், கம்பன் விழா மலர்கள், இயலிசை நாடக மன்றத்தின் மலர்கள் இவற்றில் அந்தந்த துறைத் தொடர்பான கட்டுரைகள் மட்டுமே இடம்பெறுகின்றன. இறை மலர்களில் தலத்தைப் பற்றிய வரலாற்று ஆய்வுக் கட்டுரைகள் புதிய செய்திகளைக் கொண்டு மிளிர்கின்றன. ஆய்வாளர்கள் தாம் எடுத்துக்கொண்ட தலத்தைப் பல புதிய கோணங்களில் பார்த்த புதிய செய்திகளை வெளியிடுகின்றனர்.

சில மலர்கள் ஒரு குறிப்பிட்ட இனத்திற்காகவும், அவ்வினத்தை மட்டும் முன்னேற்றுவிப்பதாயும், ஊக்குவிப்பதாயும் உள்ளன. சென்னை நாடார் சங்கத்தின் மலரைச் சான்றாக இயம்பலாம். இதனில் அவ்வினத்தாரின் வாழ்வையும், அவர்கள் இருக்கின்ற நிலையையும் எழுத்துரைகள் வாயிலாக எடுத்துக் காட்டியுள்ளனர். அவர்களின் வளர்ச்சி, அதற்கான வழிமுறைகளையும் இயம்பியுள்ளனர். பழம் அறிஞர்களின் படைப்புகளையும், அவர்தம் இயல்புகளையும் அவருடன் நன்கு பழகியவர்கள் கட்டுரைகளாய் யாத்து இம்மலரை அணி செய்துள்ளனர். புராண இலக்கியக் கல்வெட்டு, ஆய்வுக் கட்டுரைகளும் இதனுள் உள்ளன.

**சிறுகதைகள்**

எழுத்துலகில் தனக்கென ஒரு தனிஇடம் பிடித்துவிட்ட சிறுகதை, மலர்களின் படைப்புகளிலும் அதிகமான எண்ணிக்கையில் மிளிர்கிறது. கல்லூரி, பள்ளி மலர்களில் போட்டிக்கான மாணவர்களின் சிறுகதைப் படைப்புகள் அமைந்துள்ளன. வாழ்க்கையின் சிக்கலின் பின்னணியில் இவை அமையினும் இவைகளிற் பல சிக்கலுக்குத் தீர்வு காண விழையவில்லை. மாறாக அவர்கள் அவற்றை உள்ளவாறோ அல்லது மிகைப்படுத்தியோ காட்டியுள்ளனர். படைப்பாளர்களில் சிலர் தீர்வு காண விழைந்து தோல்வி கண்டுள்ளனர். காலக் கரங்களிலே மிதிபட்டுக் கிடக்கின்ற ஏழ்மைநிலை, அவரின் துன்ப வாழ்க்கை, அவல நிலை, காதலுணர்வுகள், மனப்போராட்டங்கள், பாசப்பிணைப்புகள், வேலையில்லாக் கொடுமைகள், சுரண்டல்கள் போன்றன இக்கதைகளின் உட்கருவாய் அமைந்துள்ளன. கருவைச் சுற்றிப் பல பின்னிகழ்வுகள் ஏற்றப்பட்டு, அவை சுவை பற்றிப் பேசுவனவாய்ச் சென்று விடுகின்றன. இதன்கண் உள்ள தலைப்புகள் படிப்போரைக் கவரச் செய்வனவாய் உள்ளன. கரு புதிய கோணத்தில் பிணைக்கப்படுகிறது. ஆனால் செய்தி பழமையானதே.

புதிய கதை ஆசிரியர்களின் படைப்புகளும் மலரின்கண் இடம் பெற்றுள்ளன. சிறுகதைகளோடு குறுநாவல்களும் இடம் வகித்துள்ளன.

குறுநாவல்கள் சில இதழ்களின் மலர்களில் மட்டுமே இடம் பெற்றுள்ளன. இவற்றில் சமுதாய சிக்கல்கள் பல இணைக்கப் பட்டுப் பேசப்படுகின்றன.

**கவிதைகள்**

**மரபுக் கவிதைகள், புதுக் கவிதைகள்** இரண்டும் இடம்பெற்றுள்ளன. மிகக்குறைந்த அளவிலே மரபுக்கவிதைகள் அமைந்துள்ளன. புதுக்கவிதைகள் இரண்டு வகையினதாக உள்ளன. ஒன்று தன்னைக் கவிஞனாக்கிடவேண்டும் என்ற எண்ணத்திற்காகக் கவிதையைப் படைப்பது. இவர்களுக்கு மரபோ, கவிதையில் அத்துணை ஆழ்ந்த பற்றோ, புலமையோ இருப்பதில்லை. மற்றொரு சாரார் மரபு அறிந்த புலமை மிக்கோர்; அவர்கள் புதுக்கவிதையின் போக்கிற்காகக் கவிதை படைத்துள்ளனர்.

தவிர்க்க முடியாத நிலைகளில் பள்ளிக் கல்லூரி மாணவ மாணவியர்களின் படைப்புகளை அந்த ஆண்டு மலர் வெளிக் கொணருகின்றது. அதனால் அவற்றுள் சில சொல்லாழம் மிகுதி யின்மையால் சொற்களின் கூட்டு இணைப்பாகவே காணப்படுகின்றன. பொதுவாகப் பல கவிதைகளை நாம் குறிப்பிடலாம். வாழ்த்துக் கவிதைகள், விருப்பத்தை உரைத்தல், தலப்பெருமை, இறைப்பெருமை போன்றனவும் கவிதையாய்ப் பல மலர்களில் இடம்பெற்றுள்ளன. அதிகம் சமுதாய ஏற்றத்தாழ்வுகள், வறுமை நிலைகள், வர்க்கப் போராட்டம் போன்றன மிகுதியும் இடம் பெறுகின்றன.

## மலர்கள் ஒரு சிந்தனை

**நோக்கம்**

பொதுவகையால் பலருக்கும் பயன்தரும் வண்ணம் மலர்களை அமைப்பது ஒருவகை நோக்கமாகும். கம்பன் கழகம், திருவள்ளுவர் மன்றம் போன்றவை வெளியிடுகின்ற மலர்கள் பெரும்பான்மையும் இலக்கிய இன்பத்தின் பொதுநோக்கம் கொண்டனவேயாகும். இம்மலர்கள் அவ்வவ்விலக்கியத்தின் சிறப்புகளைப் பல்வேறு வகைகளில் ஆய்ந்தறிந்து பட்டிமன்றங்கள், சொற்பொழிவுகள் போன்றவற்றை நிகழ்த்துகின்றன.

தனிநோக்கமுடைய மலர்கள் மற்றொரு வகையின. நிறுவனங்கள் பல தங்களது நிறுவனம் பற்றி உலகுக்கு உணர்த்தவேண்டி விழா நிகழ்த்தி மலர்களைப் படைக்கின்றன. சில நிறுவனங்கள் தங்கள் மலரின் முற்பகுதியில் தங்களது புகழ், நிலை போன்றவற்றை எடுத்துக்கூறுகின்றன. பிற்பகுதியில் பல்வேறுபட்ட படைப்புகளின் தொகுப்புகளை அமைக்கின்றனர்.

தனிப்பட்ட ஒருவருக்காக இயன்ற மலர்களின் நோக்கம் மேற்கண்ட இரண்டினின்றும் வேறுபட்டது. இவை ஒரு குறிப்பிட்டவரை - தலைவரை - அறிஞரை - தேசத் தொண்டரை, படைப்பாளனைப் பற்றியும், அவனால் உலகு பெற்ற பயன், சிறப்பு இவற்றையும், உலகுக்கு உணர்த்துவனவாக இருக்கக் காண்கிறோம்.

இத்தகைய மலர்கள், வாழ்கின்றவர்கள், இறந்துபட்டவர்கள் இருபாலருக்கும் அமைவதுண்டு. இதில் ஒரு குறிப்பிட்ட மதத்தாருக்கு, இனத்தாருக்கு அவர்களது சிறப்புக்காக மட்டும் வெளியிடப்படுவனவற்றையும் காணலாம். இவ்வகை மலர்கள் பாராட்டுதல், புகழ்தல் போன்றவற்றைப் பெரும் பண்பாகக் கொண்டிலங்குகின்றன.

## மதிப்பீடு

மலர்களின் முழுமை, ஆக்கங்கள் இம்மதிப்பீட்டில் இடம்பெறுகின்றன. தனியார் தனி நிறுவன, அரசு நிறுவன, கல்வி நிறுவன மலர்கள் பெரும்பான்மையும் எல்லாவகையான படைப்புகளையுந் தாங்கி நிற்கின்றன. குறிப்பிட்ட இனத்தார் வெளியிடுகின்ற மலர்கள் அதைச் சார்ந்த அறிஞர் பெருமக்களையும், அவ்வினத்தாரின் படைப்பு மேன்மையினையும் மட்டுமே பேசிநிற்கின்றன.

அறிஞர் பெருமக்களுக்காகத் தனிமலராக வெளியிடப்படுவன அவர்களது அனைத்துப் படைப்புகள், பணிகள் போன்றவற்றை உலகுக்கு உணர்த்துவனவாயுள்ளன. கல்வியகங்கள் ஆண்டுக்கொரு முறை மலர் வெளியிடுவதைச் சடங்காகக் கொண்டமையின் அம்மலர்கள் அத்தனை தரமிக்கதாக அமைவதில்லை. அம்மலர்களை வெளியிடுவோர் அதில் இடம்பெறும் படைப்புகளைச் சரியான முறைப்படி தெரிந்தெடுத்திருக்கிறார்களா என்பதைப் பற்றி உறுதியாகக் கூறமுடியவில்லை.

திருக்குட நீராட்டு விழா போன்றவற்றின் மலர்கள் இறைத் தொடர்பான சிந்தனைகளையே தன்னுட்கொண்டுள்ளன. விழா பெற்ற தலத்தின் பெருமை அதில் உறையும் இறைவன் இவற்றைப் பற்றி இலக்கியம் வரலாறு, இவற்றைக்கொண்டு வாழ்த்து, வணக்கம், கருணை போன்றவற்றை விளக்குகின்றனர். சில குறிப் பிட்ட ஊர்களுக்கு இவ்வகை மலர்கள் எழுகையில் அவ்வூரைப் பற்றிய அனைத்துச் செய்திகளும் இதன்கண் இடம்பெற்றுள்ள தால் வரலாற்று ஆய்வாளர்களுக்கு அவை பயன்பாடு உடையதா கின்றது. அதில் அமையும் படைப்புகள் சமயத்துறையில் ஆழ்ந்த புலமை பெற்றோர்களால் ஆக்கப்படுவதால் இலக்கிய இன்பத்தின் இயல்புகளை எளிதாக நுகர முடிகிறது.

பல மலர்களில் பரிசுதாங்கிய படைப்புகள் பதிப்பிக்கப்படு வதால் நாம் உண்மையும், உயர்வும் உள்ள படைப்புகளைக் காண முடிகின்றது. இப்படிப் பல்வேறுபட்ட போட்டிகளை நடத்திப் பரிசு களை வழங்குவதின் மூலம் எழுத்தாளர்களை ஊக்குவிக்கின்றனர். வருங்கால எழுத்தாளர்களை - புதுப்படைப்பாளர்களை உலகுக்கு அளித்த பெருமையையும் தாங்கி நிற்கின்றனர் இதழியலார்.

மதச்சார்பு நிறுவனங்கள் பல தங்களையும், தங்கள் மதத் தையும் பரப்பவும், பெருக்கவும் வேண்டி மலர்களை வெளியிடு கின்றன.

அம்மலர்கள் வழி நாம் பல உண்மைகளை உணரமுடியும். பெயர்கூட அறியாத இலக்கியங்களைப் பற்றிய செய்திகள் பல இவற்றின்கண் அமைகின்றன. அதனால் நந்தமிழின் இலக்கிய வளம் மேலும் பெருகுகின்றது.

கருத்தரங்கங்களை, பட்டிமன்றங்களை, சொற்பொழிவுகளை, மற்றைய இலக்கியத் தொடர்பு நிகழ்வுகளை நடத்தி வருவோர் அவற்றை வெளியிடாதிருந்தால் அதனைப் பற்றிப் பலர் அறியாமல் போவதற்கு வாய்ப்பு உண்டு. அதை வெளியிடும் வாயில்களுள் முதன்மையானதாக மலர்கள் திகழ்கின்றன.

ஆண்டு முழுவதும் அல்லது ஒரு குறிப்பிட்ட காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளின் தொகுப்பாக இவற்றை வெளியிட்டு, தமிழின், தமிழிலக்கியத்தின் - தமிழ்ப் பெருமக்களின், தமிழ்த் துறைகளின் பண்புகளை நாமறியச் செய்யும் மலர் வெளி யீட்டாளர்களுக்கு நாம் என்றும் நன்றி கடவோம்.

இதில் இடம்பெற்றுள்ள படைப்புகளை மொத்தமாக வைத்து ஒரே அளவுகோலால் அளக்கமுடிவதில்லை. காரணம் அவை

இடம்பெற்றுள்ள மலர்களுக்கேற்ப அவற்றின் தன்மைகள் மாறு பட்டுக் காணப்படுகின்றன. எந்த மலருக்காக ஆசிரியர் எழுது கின்றாரோ, அதன் தன்மையுடன் அவரின் தன்மைகள் சில. சில நேரங்களில் கலந்துவிடுகின்றன. இதனால் அவரின் தன்மைகள் இருக்கும் வண்ணமே அமைந்து மலரில் இடம்பெற நியாயமில்லை.

நடந்த அல்லது நடக்கவிருக்கின்ற நிகழ்ச்சிகளையும், அதன் எல்லைகளையும் மலரின் தொடக்கத்தில் பட்டியலிடுகின்றனர். இதன்வழி நாம் அக்காலத்தில் நடந்த அனைத்து நிகழ்ச்சிகளையும் அறிய முடிகின்றது. சில மலர்கள் உறுப்பினர், குழுக்கள், நன்கொடையளித்தோர் போன்றோரின் பட்டியலையும் பொன் மொழிகள், சிரிப்புத் துணுக்குகள் போன்றவற்றையும் மலரில் இடம்பெறச் செய்கின்றன.

சில மலர்கள் விளம்பரமே இன்றிச் செம்மையாக அமைந் துள்ளன. சில விளம்பரத்தை இயல்பாகவும், சில அதிகமாகவும் பயன்படுத்தியுள்ளன. பல்வேறு இடங்களிலிருந்து விளம்பரங்கள், அறிவிப்புகள் போன்றவற்றைப் பெற்று அதற்காகத் தாங்கள் பெருகின்ற வருமானங்களைக் கொண்டு மலரை வெளியிடு கின்றனரோ என்று எண்ணுமளவில் சில மலர்கள் அமைந்துள்ளன. சில வேளைகளில், படைப்பைத் துய்ப்போரின் எண்ணத்திற்கு இவை தடையாய்க்கூட அமைகின்றன. சுருங்கக்கூறின் விளம்பரத் தின் வாயிலாக மலர்களை உருவாக்கும் வணிகத்லதை நாம் சில வற்றின் மூலம் அறிகிறோம்.

நாம் இங்கு நோக்குதற்கு மற்றொன்றும் உண்டு. பல முன் னோர்களின் படைப்புகள் திரும்பவும் அப்படியே பதிப்பிக்கப் படுகின்றன. அப்பழஞ்சிறப்பு வாய்ந்த பெருமக்களின் படைப்புகள் தரம் வாய்ந்ததாய் இருக்கலாம்.

ஆனால் இன்னும் ஆய்வு செய்ய வேண்டிய படைப்புகள் புதுமைப் போக்குகள் எத்தனையோ கிடக்கின்றன. அவ்விடங் களை புதுப்போக்காளர்களுக்கு, படைப்பாளர்களுக்கு அளிப்பதன் மூலம் நாம் இலக்கியத்தின் புதிய கோணங்களிலிருந்து அதன் வன்மை மென்மைகளை நுகரமுடியும். பழைய படைப்புகள் அமையவே வேண்டாம் என்பதல்ல நோக்கம்.

கம்பனின் இராமாயணக் கடலில் மூழ்கி மூழ்கி எடுக்க வேண்டிய முத்துகள் எத்தனை எத்தனையோ, அவை வெளிவரப் புதியோர்களின் ஆய்வுகள் வழிகாட்டலாம். கம்பன் மலர், டி.கே சி, இராகவையங்கார் போன்றோரின் கட்டுரைகளையே மீண்டும்

வெளியிடுவதைத்[25] தவிர்த்துப் புதியதொரு பாதைக்கு வழி வகுத்திருக்கலாம்.

## அடிக்குறிப்புகள்

1. சட்டக்கல்லூரி ஆண்டு மலர், (சென்னை-1, 1980), கல்லூரி நாள் விழாவில் பலர்பேசும் புகைப்படம் உள்ளது.
2. வர்த்தக சங்க வெள்ளிவிழா மலர், (விக்கிரமபுரம், 1980), கால்நூற்றாண்டு வளர்ச்சியின் தொகுப்புகள்.
3. பச்சையப்பன் கல்லூரி ஆண்டு மலர்,(சென்னை-30,1979-80), தேசிய மாணவர் இயக்கம், சமுதாயப் பணிக்குழு அமைப்பும் செய்திகளும்.
4. தமிழரசன் ஆ., சந்திரசேகரன் இரா., மக்களாட்சியும் தனி மனித உரிமையும், சட்டக் கல்லூரி ஆண்டு மலர் (சென்னை-1980).
5. இராகவையங்கார் மு., விபீடணனது அடைக்கல நோக்கம், கம்பன் மலர், கம்பன் கழகம் (கோவை, 1980).
6. கல்யாணசுந்தரனார் வி., உள்ளொளி (மேற்கோள்) பக். 5-6, கற்பகக்கனி, தேசிக தெய்வீகச் செம்மல் இராமசாமி மணிவிழா மலர் (1980).
7. நாடோடி, பரீட்சையில் ஏன் தேறவில்லை, ஆனந்த விகடன் பொன்விழா மலர், (1980, (14-3-37 இதழில் வெளிவந்தது).
8. மேற்படி (1949 ஆண்டு தீபாவளி மலரில் வெளிவந்தது).
9. மேற்படி.
10. மேற்படி (கதைகள், கட்டுரைகள், கவிதைகள் பேசப்படு கின்றன).
11. பாப்பாமலர், கல்கி தீபாவளி மலர் (1980).
12. மங்கை தீபாவளி மலர் (1980).
13. இராமலிங்கம் எம். ஜே., ஊமைச்சி காதல், ஆனந்த விகடன் பொன்விழா மலர் (1.5. 1933-இல் வெளிவந்த பரிசுக்கதை).
14. சுரேஷ் குடும்பத்தார், கல்கி தீபாவளி மலர்.
15. மஞ்சரி பொங்கல் மலர் (1980).
16. தொண்டன், தனிநாயக அடிகள் சிறப்பு மலர் (1980).

17. கந்தசாமி இ. செ., வளரும் வேளாண்மை, **கால்நடை சிறப்பிதழ்** (தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகம், கோவை, சூலை 1980).

18. கலைக்கதிர், **புத்தாண்டு சிறப்பிதழ்** (கோவை,ஜனவரி 1980).

19. கவிதை, (**19 ஆம் ஆண்டு பட்டமளிப்பு விழா சிறப்பு மலர்** ஜூலை, 1980).

20. தாமரை, **சிறுகதை மலர்** (ஜனவரி, 1980).

21. தாமரை, **யுகப்புரட்சி மலர்**, (மார்ச்சு, 1980).

22. செல்லப்பன்-சிலம்பொலி, மணிமேகலை, பெருங்கதை சொற்பொழிவு
சுப்பு ரெட்டியார் ந., நாலாயிர திவ்வியபிரபந்தம் - சொற்பொழிவு, ஒய். **எம். சி. ஏ. பட்டிமன்ற முப்பத்தைந்தாமாண்டு மலர்**, (சென்னை, 1980).

23. மேற்படி, சண்முக சுப்பிரமணியம் மா., ஞானச்சுடர், பாரதி ஒரு ஞானக்கவி.

24. மேற்படி, வேதநாயகம் பிள்ளை, கல்யாணசுந்தரனார், பாரதி, விசுவநாதம் ஆகியோரது திருநாள்கள் நடத்தப் பட்டுள்ளன.

25. சீனிவாசன் டி. கே., சொல்லமுடியாதல்லவா போய்விட்டது **கம்பன் மலர்**, (கம்பன் கழகம், கோவை, 1980).

## மலர்கள்

1. அமுத சுரபி தீபாவளி மலர்.
2. அவிநாசி திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா மலர்.
3. அனைத்துக் கல்லூரி தமிழ்ப்பேரவை ஆண்டு மலர், சென்னை.
4. ஆனந்தவிகடன் பொன்விழா மலர்.
5. இயலிசை நாடகமன்ற வெள்ளி விழா மலர், சென்னை.
6. இஸ்லாமிய தமிழிலக்கிய வரலாற்றுக் கருத்தரங்கம்.
7. ஐ. என். ஏ. தியேட்டர்ஸ் வெள்ளிவிழா மலர், சென்னை.
8. ஒய். எம். சி. ஏ. பட்டிமன்ற 35-ஆம் ஆண்டு மலர், சென்னை.
9. கம்பன் மலர், கம்பன் கழகம், கோவை.
10. கம்பன் விழா நாலாமாண்டு மலர், சென்னை.

11. கல்கி தீபாவளி மலர், சென்னை.
12. கலைக்கதிர் புத்தாண்டுசிறப்பிதழ், சனவரி 1980, கோவை.
13. கலைமகள் தீபாவளி மலர், சென்னை.
14. கவிதை, 19-ஆம் ஆண்டு பட்டமளிப்பு விழா சிறப்பு மலர் ஜூலை 1980, சென்னை.
15. கற்பகக்கனி தேசிகத் தெய்வீக செம்மல் இராமசாமி அவர்களின் மணிவிழா மலர்.
16. கோட்டையூர் மீனாட்சியம்மை திருக்குட நீராட்டு மலர்.
17. சட்டக்கல்லூரி ஆண்டு மலர், சென்னை.
18. சிட்டிபாபு சை. வே., மணிவிழா பாராட்டு மலர்.
19. சிவகாசி நாடார்கள் பொது அபிவிருத்தி சங்க ஆண்டு மலர், சென்னை.
20. தாமரை சிறுகதை மலர், ஜனவரி 1980.
21. தாமரை சுதந்திரதின மலர், ஆகஸ்டு 1980.
22. தாமரை யுகப்புரட்சி மலர், மார்ச்சு 1980.
23. தொண்டன், தனிநாயக அடிகள் சிறப்பு மலர், ஐப்பசி கார்த்திகை 1980.
24. பச்சையப்பன் கல்லூரி ஆண்டுமலர், சென்னை, 1980.
25. மங்கை தீபாவளி மலர், 1980.
26. மஞ்சரி, பொங்கல் இதழ் 1980.
27. மயிலம் திருப்புகழ் திருப்படி வெள்ளிவிழா மலர், 1980.
28. மலேசியா இந்து அர்ச்சகர் சங்க மாநாட்டு சிறப்பு மலர்,1980.
29. முஹம்மதிய மௌலூது சபை முப்பதாமாண்டு முத்தார மலர், 1980.
30. வர்த்தக சங்க வெள்ளிவிழா மலர், விக்ரமபுரம், 1980.
31. வளர்கலை மன்றம் இரண்டாமாண்டு நிறைவு விழாமலர், சென்னை, 1980.
32. வளரும் வேளாண்மை, கால்நடை சிறப்பிதழ், சூலை 1980.

## கட்டுரைகள்

* மலரின் எண் மலர்கள் — அகர முதலிப்படியிலுள்ள எண்களைக் குறிப்பன.

| தலைப்பு | ஆசிரியர் | மலர் |
|---|---|---|
| சொல்லமுடியாதல்லவா போய்விட்டது | —டி. கே. சி. | 9 |
| ஜனநாயகத்தின் எதிரிகள் | —கஸ்தூரி ரங்கன் | 11 |
| சங்கீத அபிநயம் | —டாக்டர் வே. ராகவன் | 4 |
| தந்தைக்கு | —அசோக மித்திரன் | 1 |
| தமிழகத்தில் பல்மருத்துவப் பணி | —க. ச. கண்ணப்பன் | 15 |
| தமிழக விளக்குகள் | —டாக்டர். இரா. நாகசாமி | 11 |
| தமிழ்நாட்டில் சக்திவழிபாடு | —டி பி. சித்தலிங்கம் | 13 |
| தமிழ்வளர்ச்சியின் எதிர்காலம் | —ஊ. ஜெயராமன் | 6 |
| தமிழகத்தின் தனிப்பெருங்கலை | —டாக்டர். ஏ. என். பெருமாள் | 28 |
| தரணியில் தமிழுக்குத்தனி இடம்கொடுத்த தனிநாயகம் | —டாக்டர். வே. அந்தனிஜான் | 25 |
| தனிநாயக அடிகளார் | —எஸ். ஐ. ஏ. மத்தியு | 23 |
| தனிநாயக அடிகளின் ஒன்றே உலகம் | —அரியநாயகம் | 23 |
| திருக்குறள் கடவுள் வாழ்த்து | —டாக்டர். திருமதி ராதாதியாக ராசன் | 16 |
| திருப்புகழில்வேண்டுகோள்கள் | —டாக்டர். சொ சிங்காரவேலன் | 27 |
| திருவள்ளுவரும் ஷேக்ஸ்பியரும் | —ராஜாஜி | 17 |
| தெய்வம்பற்றித் தொல் காப்பியர் | —ஆ. சிவலிங்கனார் | 8 |
| நகரத்தார் வரலாறு | —கம்பனடிப்பொடி | 16 |
| நகரத்தின் வாழ்த்து | —கவிமணி | 16 |
| நடராஜ பதிப்பகம் | —மு. அருணாசலம் | 16 |
| நடனக்கலையின் பெருமை | —நடனம். எஸ். நடராஜ் | 5 |
| நம்மாழ்வாரும் கம்பரும் | —கம்பராமன் | 9 |
| நாடகத்தின் உச்சகட்டம் | —பூர்ணம் விசுவநாதன் | 5 |
| நிர்மாண திட்டம் | —க. அருணாசலம் | 15 |
| நிரம்பவழகிய தேவர் | —சோமலெ | 16 |

| தலைப்பு | ஆசிரியர் | மலர் |
|---|---|---|
| நடனம் | —விகடன் | 4 |
| நாகரிகக் கண் திறந்த நதி மகளே | —பொன்மணி வைரமுத்து | 11 |
| நாள் | —குன்றக்குடி பெரிய பெருமாள் | 1 |
| தாகம் | —ந. பார்த்திபன் | 24 |
| பட்டாம்பூச்சி | —தமிழழகன் | 1 |
| பிரமன் பவனம் | —கிருஷ்ண ஸ்ரீநிவாஸ் | 1 |
| புத்துயிர் அளித்த புனிதர் | —அப்துர் ரஹ்மான் | 21 |
| புறாக்கள் | —மின்னூர் சீனிவாசன் | 1 |
| பொறந்த நாட்டை நினைச்சுப் பார்த்து புறப்பட்டு வாங்க | —கொத்த மங்கலம் சுப்பு | 4 |
| மின்னல்கள் | —கா. சூரியகாந்தன் | 1 |
| மெய்ஞான விஞ்ஞானி முஹியித்தின் | —அப்துர் ரஹ்மான் | 21 |
| மேல் நாட்டுப் பயணம் புறப் படும் நண்பருக்கு | —புவியதை | 11 |
| வண்ணத்துப் பூச்சி | —மின்னூர் சீனிவாசன் | 31 |
| விடு தலை | —அழ. வள்ளியப்பா | 11 |

## கதைகள்

| | | |
|---|---|---|
| அவள் ஒருத்திதான் | —அசோக மித்திரன் | 11 |
| அவள் கற்ற பாடம் | —அநுத்தமா | 25 |
| அவளை தொந்தரவு செய்யாதீர்கள் | —ர. சுரேஷ்குமார் | 24 |
| அவளுடைய தீபாவளி | —மலர் மன்னன் | 1 |
| அம்மு அழைக்கிறாள் | —பி.வி.ஆர் | 1 |
| அக்கினிப் பிரவேசம் | —ஜெயசந்திரன் | 4 |
| அணில்கள் | —சிவசங்கரி | 4 |
| அணுக்களும் விமாலாக்களும் | —லட்சுமி ராஜரத்தினம் | 25 |
| அதிசயந்தான் | —ஹேமா ஆனந்த தீர்த்தன் | 20 |

| தலைப்பு | ஆசிரியர் | மலர் |
|---|---|---|
| அபஸ்வரம் | —மணியன் | |
| இரண்டு மனசும் நிறைவேறிய விசயங்களும் | —பிரதிபா ராஜகோபாலன் | 1 |
| இரவல் வெளிச்சத்தில்ஒருநிலா | —அனுராதா ரமணன் | 25 |
| இழுபறி | —சோதிர்லதா கிரிஜா | 11 |
| இறைதேடும் பறவைகள் | —சங்கு சண்முகம் | 20 |
| உயர உயரப் போகும்போது | —ராஜம் கிருஷ்ணன் | 13 |
| உள்ளம் நினைத்து மறுகுதடி | —ஏ. எஸ் ராகவன் | 13 |
| என் வீட்டுக்குள் உதித்தபோது | —பாலகுமாரன் | 11 |
| ஏழாவது அறிவு | —கௌசிகன் | 11 |
| ஒரு கைக்கு வழிதெரியவில்லை | — | 13 |
| ஒரு தர்மம் விளையாடுகிறது | —சுமங்கலி | 1 |
| ஒருதவறுப் பின் மறுபுறம் | —நா. பா. | 13 |
| ஓடிக்கொண்டேயிரு | — | 1 |
| ஓர் அழுகையின் ஆரம்பம் | —இரா. வேலுசாமி | 4 |
| வெள்ளித்திரை | — வண்ணநிலவன் | 4 |
| கண்ணன் மீண்டும் வருகிறான் | —விக்ரமன் | 11 |
| கார்வேட்டை | —புஷ்பா தங்கதுரை | 4 |
| கான்விக்ட் காளியப்பன் | —சாவி | 4 |
| குடிபிறப்பு | —தாமரை செந்தூர் பாண்டி | 4 |
| குடியின் விநோதம் | —எஸ். வி. வி. | 4 |
| கொக்கரக்கோ | —சௌமியன் | 4 |
| சமயலறை வாசலிலே ஒரு கோடு | —ஐ. ரா. சுந்தரேசன் | 4 |
| சாதனை | —அநுத்தமா | 4 |
| சாலை நடுவே | —மலர்மன்னன் | 13 |
| சித்திராங்கி | —டாக்டர் கோவி. மணிசேகரன் | 1 |
| சிநேகித சாதி | —சு. சமுத்திரம் | 4 |
| ஜய ஜய சங்கரா | —சிவசங்கரி | 11 |

| தலைப்பு | ஆசிரியர் | மலர் |
|---|---|---|
| தட்டிப் பறிப்பாள் | —ஏ. எஸ். ராகவன் | 1 |
| தந்திர நாராயணன் | —லக்ஷ்மி | 1 |
| தீபாவளி விருந்தாளி | —கல்பனா | 13 |
| தெளிவு தந்த தேவதை | —கமலா சடகோபன் | 22 |
| நக்ஸலைட் ராஜலிங்கம் | —கி. ராஜேந்திரன் | 11 |
| நடுப்பகலில் வந்த தீபாவளி | —லட்சுமி ராஜரத்தினம் | 13 |
| நடுக்காட்டில் நள்ளிரவில் | —அகிலன் | 11 |
| நன்றி | —ஆர். சூடாமணி | 13 |
| நியாயங்கள் நிரூபிக்கப்படுகின்றன | —சோமசன் | 25 |
| நியாயங்கள் மாறும்போது | —லக்ஷ்மி | 4 |
| பயப்படாதே | —பூவண்ணன் | 11 |
| பழிக்குப்பழி | —ஜெயலலிதா | 25 |
| பாலும் புலாலும் | —த.நா. குமாரசுவாமி | 13 |
| பிள்ளை | —கல்பனா | 4 |
| புதிய ஆசிரமம் | —கி.வ.ஜ. | 13 |
| புஷ்பப் பல்லக்கு | —கல்கி | 4 |
| பெருந்தன்மை | —கி.வ.ஜ. | 14 |
| மனம் | —ஜெயந்தன் | 4 |
| முடியாத பயணம் | —கமலா சடகோபன் | 25 |
| ராணி மங்கம்மாள் | —கோவி. மணிசேகரன் | 11 |
| ரேணுகா | —சுஜாதா | 4 |
| விசால இதயம் | —அநுத்தமா | 13 |
| வாயில்லாப் பூச்சிகள் | —அகிலன் | 13 |
| வாழ்வின் பிரதி அவள் | —சோமசன் | 11 |
| விசுவாசம் | —சிவசங்கரி | 1 |

# எண்பதில் ஒப்பிலக்கியம்

ஜி. ஜான் சாமுவேல்

தமிழ் ஒப்பிலக்கிய வரலாற்றில் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதில் பெருமளவில் நூல்களும், கட்டுரைகளும், ஆய்வுரைகளும் தோன்றாதபோதிலும் குறிப்பிடத்தகுந்த சோதனை முயற்சிகள் பல செயலளவில் நிகழ்ந்துள்ளன. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்து ஏழில் மதுரை காமராசர் பல்கலைக் கழக ஆங்கிலத் துறையும் தமிழ்த்துறையும் இணைந்து பல்கலைக் கழக மானியக் குழுவின் நிதி உதவியோடு நடத்திய கருத்தரங்கு, ஒப்பிலக்கிய வகுப்புக்கள் ஆகியனவற்றிற்குப் பின்னர் இத்துறைத் தொடர் பாகக் குறிப்பிடத்தகுந்த சாதனைகள் எதுவும் எழுபத்திஒன்பது வரை நடைபெறவில்லை. எனினும், 20-9-1979 அன்று, தமிழ் நாட்டின் பல்வேறு மொழித்துறையைச் சார்ந்த ஒப்பிலக்கிய அறிஞர்களை ஒன்றாக இணைத்து, கூட்டு மனப்போக்கில் இணைந்து இத்துறைக்கு ஆக்கம் தேடும் வகையில் சென்னையில் இலக்கிய ஒப்பாய்வுக் கழகம் தொடங்கப்பட்டது. இம்முயற்சி தமிழ்நாட்டு ஒப்பிலக்கிய ஆய்வு வளர்ச்சியில் ஒரு குறிப்பிடத் தகுந்த நிகழ்ச்சியாகும். இக்கழகத்தின் ஆலோசனைக்குழு உறுப்பினர்களாக ஆங்கிலத்துறை சார்பாக ஒப்பிலக்கிய அறிஞர் எஸ். இராமகிருஷ்ணனும், தமிழ்த்துறை சார்பாக க. த. திருநாவுக்கரசு அவர்களும், இந்தித்துறை சார்பாக சங்கர் ராஜு நாயுடு அவர்களும், தெலுங்கு மொழி சார்பாக சி. ஆர். சர்மா அவர்களும், மலையாள மொழி சார்பாக பிரபாகர் வாரியார் அவர்களும், கன்னட மொழி சார்பாக குஷலப்பா கௌடா அவர்களும், வடமொழி சார்பாக சம்பத் அவர்களும் அமைந்தனர்.

தமிழ்நாட்டின் பல்வேறு ஒப்பிலக்கிய அறிஞர்களையும் இணைக்கும் இணைப்புப் பாலமாக இக்கழகம் அமைந்தது.

எண்பதாம் ஆண்டில் இக்கழகம் சார்பாக நடைபெற்ற கருத்தரங்குகளில் பல்வேறு நிலைகளில் ஒப்பிலக்கிய ஆய்வுரைகள் தரப்பெற்றன. கிரேக்க, தமிழ்நாட்டு அறநெறிப் பாடல்களை க. த. திருநாவுக்கரசு அவர்கள் விரிவாக ஆராய்ந்துள்ளார். பாரதி, தாகூர் ஆகியோர் கவிதைகளில் வெளிப்பட்ட இறைமை நாட்ட உணர்வுகள் பற்றி ரஃபேல் என்பவரால் ஆய்வுரை வழங்கப் பட்டது. ஆங்கில வீறுணர்ச்சிப் பாவலனான இராபர்ட் சதே, தமிழ் நாவல் ஆசிரியர்களில் முக்கிய இடம்பெறும் இந்திரா பார்த்தசாரதி ஆகியோரின் சமுதாய அணுகல் முறைகள் முறையே அவர்களின் படைப்புக்களான Bishop Hatto and the Rats என்ற கவிதையிலும் குருதிப்புனல் என்ற நாவலிலும் வெளிப் பட்டுள்ள பாங்கு ஆய்வுக் கட்டுரையொன்றில் மதிப்பீடு செய்யப்பட்டது.

மேலும், மலையாளம், தமிழ் ஆகிய இருமொழிகளில் தோன்றிய சமுதாய நாவல்களின் உள்ளடக்கம் பற்றி இரபித்சிங் அவர்கள் ஆய்வுரை வழங்கியுள்ளார். ஆங்கில, மலையாள மொழிகளில் தோன்றிய வீறுணர்ச்சிக் கவிதைகள் பற்றிய ஆய்வும் சிறப்பிடம் பெற்றது. வில்லி பாரதம், தெலுங்கு பாரதம் ஆகியவற்றின் பாயிரங்களை சின்னகிருஷ்ணையா விரிவாக ஆராய்ந்துள்ளார். உருசிய நாட்டுக் கவிஞனான இரசுலின் கவிதைகளைப் பாரதிதாசன் படைப்புக்களோடு ஒப்புநோக்கி லீலாவதி அவர்கள் ஆய்வுரை வழங்கியுள்ளார். கன்பூசியஸ், திருவள்ளுவர் ஆகியோரின் கல்வி பற்றிய கண்ணோட்டம் குறித்து ஒப்பியல் நிலையிலமைந்த எழுத்துரையொன்று கு. மோகனராசு அவர்களால் வழங்கப்பட்டது. அதோடு, எட்வின் அர்னால்டு என்ற ஆங்கிலப் புலவனின் 'தி லைற் ஒவ் ஏசியா' (The Light of Asia) என்ற ஆங்கில நூலினையும், அதனைத் தழுவியும், அதன் மொழியாக்கமாகவும் அமைந்த கவிமணியின் ஆசிய ஜோதியினை யும் ஒப்பிட்டு விரிவான ஆய்வு ஒன்றினை சு. பாலச்சந்திரன் வழங்கினார்.

தற்காலக் கவிதைகளை மட்டுமன்றி, பண்டைத் தமிழ் இலக்கியங்களை ஆய்வதிலும் இக்கழகம் ஆர்வம் காட் டியது. சங்க அகப்பாடல்கள், இந்திமொழியில் அமைந்த ரீதிப் பாடல்கள் ஆகியவற்றை அவற்றின் மையக் கருத்துக்கள்

அடிப்படையில் (Thematology) ஒப்பிட்டு அரிய ஓர் ஆய்வுரையினை குப்புசாமி வழங்கியுள்ளார். அவ்வாறே பால் உணர்வு (Sex)பற்றிய அணுகுமுறையில் சங்கப் பாடல்களுக்கும் டி. எச். லாரன்ஸக்கும் இடையில் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விளக்கிக் காட்டும் ஆய்வுரை ஒன்று வி. முருகன் என்பவரால் தரப்பட்டது.

டாக்டர் பட்ட ஆய்வுரைகளைப் பொறுத்த வரையில் எண்பதை விடவும் எழுபத்தி ஒன்பதில் தான் ஒப்பிலக்கியம் தொடர்பாக அதிக ஆய்வுரைகள் தோன்றின. எண்பதில் வழங்கப்பட்ட ஆய்வுரைகளில் சென்னைப் பல்கலைக் கழக இந்தித்துறையில் தரப்பட்ட சங்க அகப்பாடல்கள்—இந்தி மொழி ரீதிக்கவிதைகள் பற்றிய குப்புசாமி அவர்களின் ஆய்வுரை குறிப்பிடத்தக்கது. அவ்வாறே இப்பல்கலைக் கழகத்தின் ஆங்கிலத்துறையில் ஷெல்லி, பாரதி ஆகிய கவிஞர்களின் கவிதைகளை ஒப்பிட்டு ஆயும் ஆய்வுரை ஒன்று அவ்வை ஞான சம்பந்தம் என்பவரால் தரப்பட்டது. இதே ஆண்டில் சென்னைப் பல்கலைக் கழக ஆங்கிலத்துறைக்கு அ. அ. மணவாளன் அவர்களால் சமர்ப்பிக்கப்பட்ட கம்பன் மில்ட்டன் ஒப்புநோக்கு பற்றிய ஆய்வுரையும் சிறப்பு வாய்ந்தது.

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் தமிழ்த் துறையிலும் ஆங்கிலத்துறையிலும் பல்வேறு தலைப்புக்களில் ஆய்வு மாணவர்கள் பலர் முறையே தமிழண்ணல், வி. சச்சிதானந்தன் ஆகியோரின் கீழ் பதிவு செய்துள்ளனர். அவ்வாறே ஒப்பிலக்கிய அறிஞர் செல்லப்பன் அவர்களை நெறியாளராகக் கொண்டு திருச்சியிலும் பல ஆய்வாளர்கள் ஒப்பிலக்கிய ஆய்வு செய்து வருகின்றனர்.

ஒப்பிலக்கியம் தொடர்பான நூல்வெளியீட்டு முயற்சியிலும் எண்பதாம் ஆண்டில் குறிப்பிடத்தக்க சாதனைகள் நிகழ்ந்துள்ளன. எண்பதில் வெளிவந்த ஒப்பிலக்கிய நூல்களுள் கீழ்க் கண்ட நூல்கள் குறிப்பிடத்தக்கன.

1. கனகசபாபதி சி., **பாரதியும் பாரதிதாசனும்**, அகரம், (சிவகங்கை 1980).
2. கதிர் மகாதேவன், **பழந்தமிழர் வீரப்பண்பாடு, ஒப்பிலக்கியக் கணிப்பு**, (மதுரை, ஏரக வெளியீடு, 1980).
3. ஜான் சாமுவேல் ஜி., **ஷெல்லியும் பாரதியும்—ஒரு புதிய பார்வை**, (சென்னை, மணி பதிப்பகம், 1980).

4. கிருஷ்ணன் எச். ஆர்., **பாரதியுகம்**, (சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 1980).

5. தகடூரான், **கம்பன் ஓர் ஒப்பீடு**, தேன்தமிழ்ப் பதிப் பகம், சேலம், 1980),

6. **John Samuel G., Shaumngam R., Comparative Literature,** Vol I, (Madras, (Ed.).. Academy of Comparative Litei a- ture, 1980).

மேற்கூறிய ஆறு நூல்களும் ஓரளவு வேறுபட்ட அணுகு முறைகளைக் கொண்டன என்பது குறிப்பிடத்தக்கது. இவற்றுள் **பாரதியும் பாரதிதாசனும்** என்ற நூலை ஒப்பியல் திறனாய்வு என்ற பிரிவினுள் அடக்க முடியுமே தவிர ஒப்பிலக்கியம் என்ற பிரிவினுள் அடக்க முடியவில்லை. ஏனெனில் இருவேறுபட்ட மொழி, கலாச் சாரம் ஆகியவற்றைச் சார்ந்த இருவேறு படைப்புக்களை ஒப்பிட்டு ஆய்வதையே பொதுவாக ஒப்பிலக்கியம் என்ற மரபுச் சொல்லால் குறிப்பிடுகின்றோம். ஆனால், இந்நூலில் தமிழ்நாட்டில் சம காலத்தில் வாழ்ந்த இரு கவிஞர்கள் ஆய்வு செய்யப்படுகின்றனர். இதன் ஆசிரியரும் இந்நூலினை ஒப்பியல் திறனாய்வு (Compara- tive Criticism) என்றும், அணுகு முறையைப் பொறுத்தவரையில் 'சமுதாயவியல் திறனாய்வு' (Sociological Criticism) என்றும் சுட்டுகின்றார். பாரதி, பாரதிதாசன் ஆகியோர் படைப்பில் சமுதாயவியல், மானிடவியலின் தாக்கம் எப்படி ஏற்பட்டிருக் கிறது என்றும், இதனால் கவிதையில் என்னமாற்றம் நேர்ந்திருக் கிறது என்றும் பார்க்க முற்படுகின்ற சமுதாயவியல் திறனாய்வே இது என்று தனது அணுகல்முறையினைத் தொடக்கத்திலேயே ஆசிரியர் தெளிவுபடுத்துகின்றார் (ப.9). நூல் முழுவதும் பாரதியையும் பாரதிதாசனையும் சமுதாய ஆற்றல்கள் தாக்கம் செய்துள்ளதையும் அதனால் இருவருடைய கவிதைப் படைப்புக் களும் உருவாகியுள்ள முறையும் சமுதாய மாற்றம் (Social Change) என்ற பொருள்அடிப்படையில் ஒப்பிட்டு விரிவாக ஆராயப்படுகின்றது.

சமூக இயல் வல்லுநரான எம். என். சீனிவாசின் சமுதாய மாற்றம் பற்றிய கோட்பாடுகளை அடித்தளமாகக்கொண்டு பாரதியும் பாரதிதாசனும் இந்நூலில் ஒப்பாய்வு செய்யப்படு கின்றனர். இரு கவிஞர்களும் மேற்கத்திய ஆக்கத்தை (Westerni- zation) தழுவும் முறை விரிவாகக் காட்டப்படுகின்றது. ஆசிரியர் கருத்துப்படி பாரதி மேல்நிலை ஆக்கத்தின் (Sanskritization)

மூலம் மேற்கத்திய ஆக்கத்தை வந்து சேர்கிறார். பாரதிதாசன் மேல்நிலை ஆக்கத்துக்கு எதிராக மேற்கத்திய ஆக்கத்தை ஏற்கிறார். இவ்விரு கவிஞர்களும் இவ்வாறு வேறுபடக் காரணம் சமயக்கருத்தமைப்பு இருவர்க்கிடையிலும் வெவ்வேறாக இருப்பது தான் என்பது ஆசிரியர் கருத்து இக் கவிஞர்களின் மாநில ஆக்க (Regionalism) நோக்கு, மொழி பற்றிய கோட்பாடு ஆகியவற்றிற்குரிய காரணங்கள் அனைத்தும் இந்நூலில் சமுதாயப் பின்புலனோடு தெளிவுறுத்தப்படுகின்றன.

இந்து சமய மறுமலர்ச்சி என்ற மேல்நிலை ஆக்கச் சூழலில் தான் பாரதி, பாரதிதாசன் இளமைப் பருவங்கள் தோய்ந்து கழிந்திருக்கின்றன. சாதியமைப்பில் பாரதிதாசனும் பாரதியும் மாற்றம் காண விழைந்தனர் எனினும், அவர்களிடையே அணுகுமுறையில் சில வேறுபாடுகள் காணப்பட்டன. பாரதி அரிசனங்களுக்குப் பூணூலிட்டு அந்தணராக்குவது என்ற முறையில் மேல்நிலை ஆதிக்கத்தால் சாதியமைப்பில் மாற்றம் காண விரும்பினார் என்றும், பாரதிதாசன் அரிசனங்களைச் சமத்துவம், சகோதரத்துவம் என்ற மேற்கத்திய ஆக்கப்பின்னணியில் உயர்த்திடக் கருதினார் என்றும் இருவரிடையே நின்று நிலவும் வேறுபட்ட அணுகுமுறைகளை ஆசிரியர் இனங்கண்டு தெளிவுபடுத்துகின்றார் (ப. 86)

இருவரின் மேற்கத்திய ஆக்கச் சார்பும் ஆங்கில, பிரெஞ்சு மொழிப் பின்னணியில் வளர்ந்து வந்துள்ளது. இருவரும் மேற்கத்திய ஆக்கத்தில் ஆங்கிலத்தின் உரிய பங்கை வரவேற்றுள்ளனர் என்று மேற்கத்திய ஆக்கத்தை வரவேற்பதில் இருந்த ஒற்றுமைக் கூறுகள் காட்டப்படுகின்றன (ப. 87).

குயிற்பாட்டில் காணப்படும் சமுதாய மேல்நிலை ஆக்கம் (Sanskritization) பாஞ்சாலி சபதத்தில் இடம்பெறும் அரச ஆதிக்க நிலை, புதுமை ஆக்கம் (Modernization) துரியோதனின் அரசவகை மேல்நிலை ஆக்கம், வீட்டுமனின் கீழ்நிலை ஆக்கம், மேற்கத்திய ஆக்கம் ஆகியன சிறப்பாக ஆயப்படுகின்றன. வீமனையும், அர்ச்சுனனையும் ஷெல்லியின் வீரனான புரோமிதிசுடன் ஆசிரியர் ஒப்பிட்டு நோக்குகின்றார்.

'பாஞ்சாலி சபதம் முடிமன்னர்களின் ஆதிக்கச் சுரண்டலுக்கு எதிராக வீரர் புரட்சியை விளக்குவதால், அதனை சி.எம். பௌரா எடுத்துரைக்கும் இலக்கிய வகையான வீரகாவியம் (Heroic Epic)

என்று மதிப்பிடவேண்டும்' என்பது (ப. 110) ஆசிரியரின் கருத்து. அதோடு, சஞ்சீவி பர்வதத்தின் சாரல் என்ற கவிதையில் தேடல் (Quest Theme) பொருள் அமைந்திருப்பதைக் காட்டுகின்றார். இதனை உருவக அங்கதமாகவும் விளக்கிச் செல்கின்றார்.

பாண்டியன் பரிசு, சமுதாயவியல் நோக்கில் அதிகார வேட்கையும் வைதீக மூடத்தனமும் கொண்ட ஆற்றலுக்கு எதிரான வீரர் புரட்சியைக் காட்டும் (ப. 173) என்பது ஆசிரியர் கருத்து. மேல்நிலை ஆக்கத்தைக்கொண்டு சாதியமைப்பை மாற்றியமைக்க வேண்டும் என்று 14 பாடல்களில் பாரதிதாசன் பாடியுள்ளதாகக் (ப. 184) குறிப்பிடுகின்றார். பாரதியிடம் தேசியத்தைக் கொண்டு சாதியமைப்பு மாற்றத்தை உருவாக்கவேண்டும் என்ற கருத்து மிகுதி என்றால், பாரதிதாசனிடம் மேற்கத்திய ஆக்கத்தைக் கொண்டு மாற்றம் காணமுடியும் என்ற எண்ணம் மிகுதி என்றும் அறிகிறோம்.

இருவரும் மேற்கத்திய ஆக்கத்தின் அடிப்படையில் புதுமை ஆக்கத்தை வரவேற்கின்றனர் என்பதை வற்புறுத்தும் ஆசிரியர் (ப. 196), பாரதி கவிதைகளில் இடம்பெறும் மேல்நிலை ஆக்கக் கூறுகள் பலவற்றையும் விளக்கமாக ஆராய்கின்றார். அதோடு, இருவர் கவிதைகளில் அமையும் மேல்நிலை ஆக்கம், மேற்கத்திய ஆக்கம் ஆகியவற்றின் சமுதாயக் கருத்துக்கள் விளக்கமாக, விரிவாக ஆராயப்படுகின்றன.

பாரதி முதன்முதலில் தேசிய இயக்கத்தில்தான் தாக்கம் பெற்றார் என்றும், பாரதிதாசன் முதன்முதலில் சமுதாயவியல் இயக்கத்தால் கவரப்பட்டார் என்றும், இருவருக்கும் ஆன்மீக இயக்கம் பொதுவாக இருந்தது என்றும் (ப. 276) குறிப்பிடுகின்றார். பாரதியின் அருச்சுனனை விடுதலை எழுச்சியின் பாத்திர வடிவம் என்றால் பாரதிதாசனின் வீரத்தமிழனாகிய இராவணனை சீர்திருத்தப் பாங்கின் பாத்திரவடிவம் (ப. 298) என்று அழைக்கலாம் என்பது ஆசிரியர் துணிவு.

கதிர் மகாதேவனின் **பழந்தமிழர் வீரப் பண்பாடு** என்னும் நூல் வீரயுகப் பின்னணியில் தமிழ்மொழி இலக்கியத்தின் புறப்பொருள் மரபை ஆய்கின்றது. டாக்டர் பட்ட ஆய்வுக் கட்டுரையாக மலர்ந்த இந்நூல், புறப்பொருள் மரபுகளையும், பாடல்களையும் மேலைநாட்டு வீரயுக மரபுகளோடும் பாடல்களோடும் ஒப்பீட்டு நிலையில் ஆய்ந்து வீரயுகப் பாடல்களிடையே நின்று

நிலவும் குடும்ப உறவை (genetic relationship) ஒப்பிட்டு நோக்குகின்றது.

**ஷெல்லியும் பாரதியும் — ஒரு புதிய பார்வை** என்னும் நூல் மேற்கூறிய இரு கவிஞர்களையும் உலக வீறுணர்ச்சிக் கவிதை இயக்கத்தின் அங்கத்தினர்கள் என்ற முறையில் ஒப்பிட்டு வீறுணர்ச்சி இலக்கியங்களுக்கிடையே நின்று நிலவும் குடும்ப உறவை (genetic Relationship) நிலைநாட்ட முயல்கின்றது.

இந்திய வீறுணர்ச்சிக் கவிதை இயக்கத்தின் சமுதாயப் பின்னணியினை இந்நூலின் அணிந்துரையில் விளக்கும் எஸ். இராமகிருஷ்ணன், பொருளாதார விடுதலையே சுபீட்சத்துக்குத் திறவுகோல் என்னும் தெளிவோடு பாட்டாளி மக்களிடம் தோழமை கொண்டு, அவர்களைச் சுரண்டிக் கொழுக்கும் கூட்டத்தை எதிர்த்து நிற்கும் வர்க்கப்பார்வை ஷெல்லி, பாரதி ஆகிய இருவர் கவிதைகளிலும் துலங்குவதாகக் குறிப்பிடுகின்றார். பாரதியின் வேதாந்தமும் ஷெல்லியின் பிளட்டோனிசமும் கொண்டிருந்த நெருங்கிய உறவினையும் அவர் விளக்கிப் பேசிச் செல்கின்றார்.

ஆசிரியரின் முன்னுரைப்பகுதி தமிழ்நாட்டு ஒப்பிலக்கிய ஆய்வில் மேற்கொள்ளப்பட்ட பல்வேறு அணுகுமுறைகளையும், இத்துறையில் இதற்கு முன்னர் ஏற்பட்ட சாதனைகளையும், ஒப்பிலக்கண ஆய்வு, ஒப்பிலக்கிய ஆய்விற்குக் கைகொடுத்துநின்ற பாங்கினையும் விளக்கியுரைக்கின்றது. இந்நூல் நிலவுடைமைச் சமுதாயத்தின் சிதைவிலும், தொழில்நுட்ப நாகரிகத்தின் எழுச்சியிலும் மலர்ந்துள்ள வீறுணர்ச்சிக் கவிதைகளிடையே காணப்படும் குடும்ப ஒற்றுமைகளை ஆய்வதாகக் குறிப்பிடு கின்றார்.

இந்திய நாட்டிலும் இங்கிலாந்திலும் தனிமனிதவாதச் சிந்தனைகள் தோன்றிய சமுதாயப் பின்புலன், தனிமனித வாதத்தின் கலைவெளிப்பாடாக வீறுணர்ச்சிக் கவிதைகள் எழுந்த இயல்பு சிறப்புடைய வீறுணர்ச்சிக் கவிஞர்களுக்கும் செந்நெறிக் கவிஞர்களுக்கும் இடையே நின்றுநிலவும் இன்றியமையாத வேற்றுமைக் கூறுகள் ஆகிய அனைத்தும் முதற்கட்டுரையில் விரிவாக ஆராயப்படுகின்றன.

பாரதி, ஷெல்லி ஆகியோர் வாழ்ந்த சமுதாயப் பின்னணியில் காணக்கிடக்கும் ஒற்றுமைக் கூறுகள், வாழ்க்கை நிகழ்ச்சி களிலுள்ள ஒருமைப்பாடுகள், மனப்போக்கு சிந்தனைத் திறம்

ஆகியவற்றில் நின்று நிலவும் இணைந்த போக்குகள் ஆகியன இரண்டாவது கட்டுரையில் விரிவான ஒப்பாய்வுக்கு உட்படு கின்றன. பாரதியின் சுதந்திரம், மக்களாட்சி பற்றிய கோட்பாடு ஆகியவற்றில் இணைந்து இழையோடும் ஆன்மீக நாட்டமும் ஷெல்லி, பாரதி ஆகியோரின் இறைமையுணர்வு நாட்டத்தில் நிலவிய ஒற்றுமைக் கூறுகளும் விரிவாக ஒப்பாய்வு செய்யப்படு கின்றன.

மூன்றாவது பகுதியில் இந்திய நாட்டிலும் இங்கிலாந்து நாட் டிலும் எழுந்த தனிமனித வாதக் கோட்பாடுகள், அவற்றின் சமுதாய, சமய, அரசியல் முக்கியத்துவங்கள், அவற்றின் வகைகள் கவிதைகளில் அவை வெளிப்படும் முறைமை ஆகியன விரிவாக ஆராயப்படுகின்றன.

வீறுணர்ச்சிக் கற்பனை என்ற தலைப்பில் ஷெல்லி, பாரதி ஆகியோர் படைப்புக்கற்பனை பற்றிக் கொண்டிருந்த கோட் பாடுகள் ஏனைய உலக வீறுணர்ச்சிக் கவிஞர்களின் கற்பனை பற்றிய கோட்பாடுகளோடு இணைத்து ஒப்புநோக்கி ஆராயப்படு கின்றது. வீறுணர்ச்சிக் கவிதைகளில் காணக்கிடக்கும் கற்பனையின் இணைப்பாற்றல் (Essemplastic Power), வழித்துணையாகச் செயல்படும் ஆற்றல் (Mediating Power), மெருகூட்டிக் காணும் ஆற்றல் (Modifying Power) ஆகிய மூன்றும் இவ்விரு கவிஞர் களின் படைப்புக்களில் அமைந்து, அவற்றிற்கு உயிரூட்டும் தன்மை விரிவாகப் பேசப்படுகின்றது.

இலக்கியம் ஒரு சமுதாயச் சொத்தாக இருப்பதால் அதனுடைய கோட்பாடுகளும் சமுதாயப் போக்குகளை ஒட்டியே உருப்பெறுகின்றன. ஒரு குறிப்பிட்ட சமுதாயம், இறுக்கமான நெகிழ்ந்து கொடுக்காத மரபுகளுக்கு முக்கியத்துவம் கொடுப்ப தாக அமையும்போது அச்சமுதாய மண்ணிலிருந்து மலரும் இலக்கிய மலர்களும் மரபுவழிப்பட்டனவாக, இறுக்கமான புறவடிவங்களைப் பின்பற்றுவனவாக அமைவது இயல்பே. சமுதாயத்தில் போராட்டங்களும் போராட்ட உணர்வுகளும் நிறைந்து, அது ஒருவித மாற்றநிலையை (Transition) அடையும் போது அங்கு மரபு எண்ணங்களை மறுத்துப்பேசும் புரட்சிப் படைப்புக்களான வீறுணர்ச்சி இலக்கியங்கள் எழுச்சிபெறும். இந்த அடிப்படைப் பின்னணியில் ஷெல்லி, பாரதி ஆகியோர் வெளிப்படுத்தி நின்ற இலக்கியம் பற்றிய எண்ணங்கள் அவர்தம் கவிதைப் படைப்புக்கள், உரைநடை நூல்கள் ஆகியவற்றை

மையமாகக் கொண்டு விரிவாக ஆராயப்படுகின்றன. பாமர மனிதனின் மொழிநடை பற்றிய இவர்தம் எண்ணங்கள், இலக்கணம், சொல்லாட்சி, கவிதை நடை, அக வெளியீட்டுக் கொள்கை, கவிதை வெறி, அவயவிக் கொள்கை, கவிதையின் குறிக்கோள், கவிதையின் செயற்பாடு, தற்சார்புத் தன்மை, கவிதைக்கும் சமுதாயத்திற்கும் இடையேயுள்ள உறவு, கவிஞனின் சமுதாயப்பணி, கவிதையின் பாடுபொருள் ஆகியன பற்றி இவ்விரு கவிஞரும் கொண்டிருந்த கோட்பாடுகள் ஆகியன விரிவாக ஒப்பாய்வு செய்யப் பெறுகின்றன.

தொழில்நுட்ப நாகரிகம் அறிமுகப்படுத்தப்பட்டதன் விளைவாக இந்திய நாட்டின் இலக்கியச் சாதனைகள் உலக இலக்கியச் சாதனைகளின் குறிப்பிடத்தகுந்த ஒரு கூறாகவும், இந்திய நாட்டு இலக்கியக் கொள்கைகள் உலக மொழிகளில் எழுந்த இலக்கியக் கோட்பாடுகளைப் பிரதிபலிப்பனவாகவும் அமைந்தன. எனவே, பத்தொன்பதாம் நூற்றாண்டிற்குப் பின்னர்த் தோன்றிய மேல்நாட்டு, இந்திய இலக்கியப் படைப்புக்களிடையே பல பொதுவான இணையான சிந்தனைகளைக் காண்கின்றோம். இத்தகைய பொதுவான சிந்தனைப் போக்குகளை ஷெல்லி, பாரதி ஆகிய இரு கவிஞர்களும் தாம் எழுதிய உரைநடை நூல்களிலும் கவிதைகளிலும் பிரதிபலித்து நின்றனர் என்பது ஆசிரியர் முடிவு.

ஷெல்லியும் பாரதியும் படைத்த பெண் பாத்திரங்களைக் கொடிய பெண்கள் (Fatal Women), இலட்சியப் பெண்கள் (Ideal Women), புரட்சிப் பெண்கள் (Revolutionary Women) எனப் பாகுபாடு செய்து அவற்றை ஏனைய வீறுணர்ச்சிப் படைப்புக் களோடு ஒப்பாய்வு செய்துள்ளார் புரட்சிப் பெண்களைப் பற்றிக் குறிப்பிடும்போது 'நிலப்பிரபுத்துவத்தின் வீழ்ச்சியில் முதலாளித்துவ சமுதாய அமைப்பு மலரவே அதன் ஒரு கூறாகப் பெண்ணுரிமைப் போராட்டமும் மலர்ந்தது. இத்தகைய பெண்ணுரிமைப் போராட்டத்தின் மலர்ச்சியால் முகிழ்த்தெழுந்த மேற்கூறிய பெண்பாத்திரங்கள் ஆண் பெண் சமத்துவத்தை மிகச் சிறப்பாக வற்புறுத்தினர், என்கிறார். பெண்ணுரிமைப் போராட்டத்தின் சமுதாயப் பின்புலன், பாரதி, ஷெல்லி ஆகியோரின் பெண்ணுரிமைக் கோட்பாடு பற்றிய சிந்தனைகளில் இடம்பெறும் பல்வேறு பாதிப்புக்கள் ஆகியனவும் விரிவாக ஆய்வு செய்யப் பட்டுள்ளன.

இலட்சியக் குழந்தைகளைப் படைத்துக் கவிதைகளில் உலவ விடும் இயல்பில் ஷெல்லி, பாரதி ஆகியோரிடம் நிலவிய பொதுமைக் கூறுகள் தனித்தன்மைகள் ஆகியனவும் ஒப்பியல் நோக்கில் விளக்கம் பெற்றுள்ளன.

இயற்கையும் கவிதையும் என்ற தலைப்பில் இலக்கியங்களில் இயற்கை பெற்றுள்ள இடம் காலந்தோறும் மாறி வந்திருக்கும் நிலை ஒப்பியல் நோக்கில் காட்டப்படுகின்றது. வீறுணர்ச்சிக் கவிதைகளில் இயற்கை பெறும் இடம், இயற்கையை அணுகுவதில் ஷெல்லியும் பாரதியும் கொண்டிருந்த பன்முகப் பார்வைகள், ஞாயிறு, திங்கள், பறவைகள் போன்ற இயற்கைக் காட்சிகளை இவ்விரு கவிஞர்களும் கையாளும் முறை போன்றன ஒப்பு நோக்கப் படுகின்றன. இத்தகைய ஒப்பிடு, ஷெல்லியைப் போன்று திங்களைச் சோக உணர்வுடையதாகக் காட்டுவதிலும் துணையற்று வருந்தும் இயற்கைப் பொருளாக வர்ணிப்பதிலும் பாரதி ஆர்வம் காட்டவில்லை என்பதைத் தெளிவுபடுத்துகின்றது. ஷெல்லி சோகப் பொருளாகக் காட்டிய திங்கள் பாரதியின் படைப்புக்களில் மகிழ்ச்சிப் பொருளாக மாறிவிடுகின்றது. ஆற்றல்மிக்க காற்றின் முன்னர் ஆற்றலற்றவனாக மனிதன் நிற்கும் பல காட்சிகளை ஷெல்லியின் கவிதைகள் காட்டும். ஷெல்லியைப் போலல்லாமல் பாரதி மனிதர்களுக்கு உதவி செய்யும் கடவுளாகவும், மனிதர் களின் கட்டளைக்குப் பணியும் ஓர் இயற்கைப் பொருளாகவும் காற்றைக் காண்கின்றான்.

இலட்சியக் காதல்பற்றிய கட்டுரை ஷெல்லி, பாரதி ஆகியோரின் காதற் கவிதைகளை ஒப்பிட்டு நோக்குகின்றது. வீறுணர்ச்சிக் கவிஞர்களைப் பொறுத்தவரையில் காதல் என்பது ஒருவித சமயமாகக் காட்சி தருகின்றது. அதோடு, மனித வாழ்வைப் பயனுள்ள வாழ்வாக மாற்றி மனிதனைத் தெய்வீக நிலைக்கு உயர்த்தும் ஒருவித தெய்வீக உணர்வாகவும் காதல் அமைகின்றது. செந்நெறிக் காதற் கவிதைகள் வரையறுக்கப் பட்ட புற அமைப்பினையும், வாய்பாட்டு முறைகளையும், உத்தி களையும் பெற்றுத் திகழ வீறுணர்ச்சிக் காதற் பாடல்கள் அவற்றைப் படைக்கும் கவிஞர்களின் மனப்போக்குகளுக்கு ஏற்ப வளைந்தும் நெளிந்தும் தன்னிச்சையாக அமைகின்றன. புதுச் செந்நெறிப் படைப்புக்களில் காதல் இடம் பெறும் நிலையை ஆசிரியர் கீழ்க்கண்டவாறு விளக்குகின்றார். "புதுச்செந்நெறிப் படைப்புக்களில் ஆன்மீகக் காதல், இலட்சியக் காதல் இவற்றை

விடவும் புலனுணர்வோடு இணைந்த காதல் அதிகமாக இடம் பெறுகின்றது. எனவே, பெண்களின் பண்பு வர்ணனைகளுக்குப் பதிலாக புற உறுப்புக்களின் நீண்ட வர்ணனைகளே இப்படைப்புக் களில் அதிகமாக இடம் பெறுகின்றன. புதுச்செந்நெறி இலக் கியங்கள் நிலவுடைமைச் சமுதாயத்தில் பெண்களுக்குத் தரப்பட்ட சமுதாய அந்தஸ்து உயர்குடி மக்களின் ரசனை ஆகியவற்றில் ஏற்பட்ட வீழ்ச்சியினைக் காட்டுகின்றன'' (ப. 488).

உலகச் சந்தைகள் (World Market) வாயிலாகப் பொருள் விற்பனைகளை நிகழ்த்தியதன் மூலம் உலக நாடுகளின் உற்பத்திப் பொருட்களினிடையில் ஒரு பொதுப்போக்கு நிலவ பூர்ஷ்வா வர்க்கம் வழியமைத்துக் கொடுத்தது. இதன் காரணமாக நாடு களும் பிரதேசங்களும் தனித்த போக்கில் தன்னிறைவோடு வாழும் நிலைமை மறைந்தது. நாடுகள் ஒன்றை ஒன்று சார்ந்து வாழும் நிலை ஏற்பட்டது. உற்பத்திப் பொருட்களில் மட்டும் அல்லாமல், அறிவுத்துறைகளிலும், கலாச்சாரத் துறைகளிலும் நாடுகள் ஒன்றை ஒன்று சார்ந்து நிற்க வேண்டிய புதிய நிலை மெல்ல உருப்பெறத் தொடங்கியது. இதன் காரணமாக, பல் வேறு நாடுகளின் கலாச்சாரப் படைப்புக்களும் உலக மக்களின் பொதுச்சொத்து என்று கருதப்படும் நிலை ஏற்பட்டது. எனவே, தேசிய அளவில் எழும் குறுகிய மனப்பான்மைகள் மறைந்து, பல் வேறு நாட்டு இலக்கியங்களுக்கிடையில் உலக இலக்கியம் என்னும் பொது இலக்கியம் மலரத் தொடங்கியது.

வீறுணர்ச்சி இலக்கியங்களை மேற்கூறிய முறையில் தோன்றிய உலக இலக்கியம் என்று அழைப்பது பொருந்தும். மேற்கூறிய உலக இலக்கியம் என்ற பொது இலக்கியம் மலர முதலாளித்துவச் சமுதாயத்தின் எழுச்சி வாய்ப்பாக அமைந்தது. வீறுணர்ச்சிக் கவிதைகளின் ஒப்பாய்வு முதலாளித்துவச் சமுதாயப் பின்னணியில் ஓர் உலக இலக்கியக் குடும்பம் தோன்றியதைத் தெளிவாகக் காட்டி நிற்கின்றது. உலகில் தோன்றிய வீறுணர்ச்சிக் கவிதை அனைத்தும் பல பொதுத்தன்மைகளைப் பெற்றுத் திகழ்ந்த போதிலும் அவை முற்றிலும் தத்தம் தேசியப் பாரம்பரியத்தினை மறக்கவில்லை. தேசிய இலக்கிய மரபுகளில் காலூன்றி நின்றே உலக இலக்கியம் என்னும் பொதுஇலக்கிய மரபின் எழுச்சிக்கு அவை தோற்றுவாய் செய்துள்ளன. எனவே, உலக வீறுணர்ச்சிக் கவிதைகளின் பொதுமரபினையும், அவற்றின் தேசியப் பாரம்பரியங்களையும் சரியாகப் புரிந்து கொள்வதன்

மூலம் மட்டுமே வீறுணர்ச்சிக் கவிதைகளை முழுமையாக ஆராய முடியும் என்பது ஆசிரியரின் முடிவுரை.

கிருஷ்ணன் அவர்களின் **பாரதியுகம்** என்னும் நூல் முழுநிலையில் ஒப்பிலக்கிய ஆய்வாக அமையாதபோதிலும் ஒப்பிலக்கியக் கூறுகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டுள்ளது. மேல்நாட்டுக் கவிஞர்களை 'ஷெல்லி பைரன்' பிரிவினர் என்றும் 'கெத்தே' பிரிவினர் என்றும் வேறுபடுத்திக் காட்டும் ஆசிரியர், பாரதி 'ஷெல்லி பைரன்' பிரிவைச் சார்ந்தவர் என்றும், தாகூர் 'கெத்தே' பிரிவைச் சார்ந்தவர் என்றும் குறிப்பிடுகின்றார். பாரதியை பைரனுடனும் தாகூருடனும் ஆங்காங்கே ஒப்பிட்டு நோக்கியுள்ளார். ஒரு மைல் அகலத்தில் ஆகாச கங்கையாக அலறி வீழும் நயாகரா நீர்வீழ்ச்சியுடன் பைரனை ஒப்பிடலாம் என்றால், பாரதியை, ஓர் சிறிய-ஆயின்-பெருயரத்திலிருந்து விழும் காட்டருவியுடன் ஒப்பிடலாம் என்பது அவர் கருத்து. நயாகராவும் காட்டருவியும் நீர்வீழ்ச்சி என்ற ஓரினத்தைச் சார்ந்தவையாகத் திகழ்வதுபோல் பைரனும் பாரதியும் எதிர்ப்புப் புரட்சிக் கவிஞர்கள் என்ற முறையில் ஓரினத்தவர் என்கிறார்.

பாரதியாரின் படைப்புக்களுக்குத் தூண்டுகோலாக அமைந்து தாயன்பு ஏமாற்றமே (ப.26) என்பது ஆசிரியரின் கணிப்பு. அவரது பெண் தெய்வங்கள், பெண்மைப் பாத்திரங்கள் அனைத்தும் அவர்' கற்பனை செய்து அந்தரங்கத்தில் போற்றிய தாயாரின் வேறு வேறு தெய்வீக அவதாரங்கள் என்பது ஆசிரியரின் துணிவு.

பங்கிம் சந்திரரோடும் பாரதியை ஆங்காங்கே ஒப்பிட்டுள்ளார். பாரதியாரின் சுதந்திரம் பற்றிய கோட்பாட்டிற்கும் ரூசோவின் சுதந்திரம்பற்றிய எண்ணங்களுக்கும் இடையில் நின்று நிலவும் உறவு விளக்கப்படுகின்றது. எதிர்ப்புக் காவியம் என்ற இலக்கிய வகைக்குப் பழைய பாரதத்தில் இடமே இல்லை என்பதையும் இந்தப்பாணி வங்கமொழியிலிருந்து பிற இந்திய மொழிகளில் புகுந்தது என்றும் இதைத் தமிழில் புகுத்தியவர் பாரதியார் (ப. 69 என்றும் மதிப்பீடு செய்கின்றார். குரு கோவிந்தர், சத்திரபதி சிவாஜி, பிள்ளைக்காதல் போன்ற பாரதியின் படைப்புக்களை நாடகத் தனிமொழி (Dramatic Monologue) என்ற வகையில் இணைத்து மேல்நாட்டுப் பாடல்களோடு ஒப்பிட்டு ஆய்ந்துள்ளார்.

**கம்பன் காவியம்** என்ற தகடூரானின் நூல் ஒரே கவிஞரின் படைப்பின் பல்வேறு கூறுகளைப் பல கவிதைப் படைப்புக்களின் தனித்தனி இயல்புகள் சிலவற்றோடு ஒப்பிடும் நிலையில் அமைகின்றது. கம்பனை காளிதாசன், மில்ட்டன், வான்மீகி ஆகியோருடன் ஒப்புநோக்கும் முயற்சியினை ஆங்காங்கு மேற்கொண்டுள்ளார். ரகுவம்சம், துறக்க நீக்கம் ஆகிய காப்பியங்களின் கதைச்சுருக்கங்களை முதலில் தந்து கம்பன் காப்பியத்தோடு இணைந்துபோகும் பகுதிகளை மேலோட்டமாக ஆசிரியர் காட்டிச் செல்கின்றார். இந்நிலையில் ஆழமான எந்த ஆய்வும் இந்நூலில் மேற்கொள்ளப்படவில்லை எனலாம். திலீபனின் காட்டு வாழ்க்கையை இராமனின் காட்டு வாழ்க்கையோடு ஒப்பிடுவதோடு, கதையமைப்பில் கம்பரிடமிருந்து காளிதாசர் வேறுபடுமிடங்களும் காட்டிச் செல்லப்படுகின்றன.

மில்ட்டன், கம்பன் ஆகிய இருகவிஞர்களின் மனப்போக்குகளில் காணக்கிடக்கும் ஒற்றுமைக் கூறுகள், இராவணன், சாத்தான் ஆகிய பாத்திரப்படைப்புக்கள் பெற்றுத் திகழும் பொதுமைப்பண்புகள் ஆகியன விளக்கப்படுகின்றன. கம்பன் படைத்த இராவணன், சீதை, மண்டோதரி ஆகியோர் முறையே வான்மீகியின் இராவணன் சீதை, மண்டோதரி ஆகிய பாத்திரங்களோடு ஒப்பிடப்படுகின்றனர்.

எழுபத்தி ஒன்பதாம் ஆண்டின் இறுதிப்பகுதியிலும் எண்பதாம் ஆண்டின் முதற்பகுதியிலும் நடைபெற்ற ஒப்பிலக்கியக் கருத்தரங்கக் கட்டுரைகளை இலக்கிய ஒப்பாய்வுக் கழகம் **'ஒப்பிலக்கியம்—பகுதி ஒன்று'** என்ற தலைப்பில் எண்பதாம் ஆண்டில் நூல் வடிவில் வெளியிட்டுள்ளது. கட்டுரைகளும், சிறப்புரைகளும், தலைமையுரைகளுமாக ஆங்கிலத்திலும் தமிழிலும் பத்துக் கட்டுரைகள் இந்நூலின்கண் அமைந்துள்ளன.

'ஒப்பிலக்கியம் பெயரும் இயல்பும்' என்ற ஆங்கிலக் கட்டுரையில் ஒப்பிலக்கியக் கோட்பாடுகள், ஒப்பிலக்கியம் ஒப்பியல் திறனாய்விலிருந்து வேறுபடும் இயல்பு, இந்திய இலக்கியங்களில் ஒப்பாய்வு செய்வதற்குரிய வாய்ப்புக்கள், தேவைகள், ஒப்பிலக்கிய ஆய்வின் பல்வேறு அணுகல்முறைகள் ஆகியனவற்றை எஸ். இராமகிருஷ்ணன் தெளிவுபடுத்தியுள்ளார். ஒப்பிலக்கியத்தில் கருத்துப் பாதிப்புக்கள் (Influence) பற்றிய ஆய்வு பெறும் இடம், இலக்கிய மரபு பற்றிய ஆய்வின் இன்றியமையாமை, இலக்கிய மரபுக்கும் தனிமனிதப் படைப்பாற்றலுக்கு மிடையே

யுள்ள நெருங்கிய தொடர்பு, மொழிபெயர்ப்பின் இன்றியமையாத் தேவை, இலக்கியக் குடும்பங்கள், இலக்கியத் தொன்மங்கள் (Myths), இலக்கிய வடிவங்கள் பற்றிய ஒப்பாய்வின் தேவை, சமுதாயவியல் நோக்கில் மேற்கொள்ளப்படும் இலக்கிய ஒப்பாய்வு கள் ஆகியவற்றை ஆசிரியர் மிகச்சிறப்பாக எடுத்தியம்பியுள்ளார்.

எழுத்தாளர் த. ஜெயகாந்தன் அவர்கள் ஒப்பிலக்கிய ஆய்வு இலக்கியப் படைப்பாளர்களுக்கு எவ்வகையில் துணை செய் கின்றது என்பதைத் தனது சிறப்புரையில் விரிவாக விளக்கி யுள்ளார்.

சம்பத் அவர்கள் தமிழிலும் வடமொழியிலும் அறநெறிப் பாடல்கள் தோன்றிய சமுதாய அரசியல் பின்னணிகளை ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். க. த. திருநாவுக்கரசு அவர்களின் கட்டுரை கிரேக்க நாட்டிலும், தமிழ்நாட்டிலும் தோன்றிய அற நெறிப் பாடல்களை மிக விரிவாக ஒப்பிட்டு ஆய்கின்றது. கிரேக்க மும் தமிழகமும் பண்பாட்டு நிலையிலும், மனப்போக்கிலும், சிந்தனை வளத்திலும் பெற்றுத் திகழ்ந்த ஒப்புமைப் பண்புகள், அறநெறி இலக்கிய வகைகள், தமிழிலும் கிரேக்கத்திலும் அறநெறி இலக்கியங்கள் தோன்றி வளர்ந்த நிலை, அவற்றின் இணைந்த போக்குகள், வடிவ ஒற்றுமை, கருத்தொற்றுமை, யாப்புச்சிறப்பு ஆகியன இக்கட்டுரையில் ஆராயப்பட்டுள்ளன.

தாகூர், பாரதி ஆகிய கவிஞர்களின் இறைமைநாட்ட உணர்வில் (Mysticism) நின்று நிலவும் ஒப்புமைக் கூறுகள், அவை அக்கவிஞர்களின் சமுதாய, சமய, தனிமனித எண்ணங்களோடு இணைந்து செல்லும்பாங்கு ஆகியன விரிவாக ரஃபேல் அவர் களின் ஆங்கிலக் கட்டுரையில் விளக்கப் பெற்றுள்ளன.

குருதிப்புனல் என்ற நாவலையும், 'கேட்டோ பாதிரியும் எலி களும்' என்ற இராபர்ட் சதேயின் ஆங்கிலக் கவிதையையும் ஒப்பிட்டு ஆய்ந்த திருமாவளவன் சமுதாய உணர்வும் முற்போக்குச் சிந்தனையும் இருபதாம் நூற்றாண்டில் எழுந்த குருதிப்புனலை விடவும், பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய மேற்கூறிய ஆங்கிலக் கவிதையில் துல்லியமாகவும் தெளிவாகவும் இடம் பெற்றிருக்கும் நிலையினை ஒப்பாய்வு மூலம் தெளிவுபடுத்தி யுள்ளார்.

மொத்த நிலையில் ஆயிரத்துத்தொள்ளாயிரத்து எண்பதில் மேற்கொள்ளப்பட்ட ஒப்பிலக்கிய ஆய்வினை நோக்கும்போது

முதல்நிலையில் பாரதி பற்றிய ஆய்வும் அதனையடுத்த நிலைகளில் முறையே சங்க இலக்கியங்கள் பற்றிய ஆய்வும் கம்பன் பற்றிய ஆய்வும் அமைந்தன எனலாம். சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகளில் குப்புசாமி அவர்களின் அகப்பாடல்—ரீதிப்பாடல் பற்றிய ஒப்பிலக்கிய ஆய்வுரையும் கதிர் மகாதேவனின் புறப்பொருள் பற்றிய ஒப்பிலக்கிய நோக்கும் குறிப்பிடத்தக்கன. இவ்விருவகை ஆய்வும் இலக்கியக் குடும்ப (Genetic Relationship) ஒப்பீட்டு முறையிலமைந்த ஆய்வுகள் எனலாம். இவை பொருளடிப்படையில் அமைந்த அணுகுமுறையினை (Thematology) தழுவியுள்ளன. பாரதி பற்றிய ஆய்வுநூல்களில் ஷெல்லியும் பாரதியும்—ஒரு புதிய பார்வை, பாரதியும் பாரதிதாசனும் ஆகிய இருநூல்களும் முற்றிலும் புதிய நோக்கில் அமைந்த உயரிய சாதனைகளாகும் கம்பன் பற்றிய ஆய்வில் தகடூரானின் நூல் அத்துணைச் சிறப்புடையதாக அமையாதபோதிலும் அ. அ. மணவாளனின் டாக்டர் பட்ட ஆய்வுரை சிறப்பு வாய்ந்தது எனலாம். இலக்கிய அமைப்புக்கள் இத்துறைக்கு ஆற்றிய தொண்டு என்ற அளவில் நோக்கும்போது இலக்கிய ஒப்பாய்வுக் கழகம் எண்பதில் மேற்கொண்ட சாதனைகள் குறிப்பிடத் தகுந்தன. சொற்பொழிவுகள் மூலம் ஒப்பிலக்கியச் சிந்தனைகளை அதிகமாகப் பரப்பியவர்களில் இவ்வாண்டில் எஸ். இராமகிருஷ்ணன் சிறப்பிடம் பெறுகின்றார். சென்னையில் ஏழு நாட்கள் தொடர்ந்து இலக்கிய ஒப்பாய்வுக் கழகத்தின் சார்பில் அவர் நிகழ்த்தியுள்ள ஆய்வுரை குறிப்பிடத்தக்கது.

# எண்பதில் நாட்டுப்புற இயல்

இரா. பாலசுப்பிரமணியம்

தமிழில் வளர்ந்துவரும் புதுத்துறைகளுள் நாட்டுப்புற வியலும் ஒன்று. எண்பதில் நாட்டுப்புறவியல் கல்வி வளர்ந்துள்ள நிலையினை அளவிடுவது இக்கட்டுரையின் நோக்கமாக அமை கிறது. எனவே, அவ்வியல் தொடர்பாக வெளிவந்துள்ள நூல்கள், கட்டுரைகள் இவைகளின் அடைவு பின்னிணைப்பில் இணைக்கப் பட்டுள்ளது.[1] அதனை மூலமாகக் கொண்டு தொகுப்புநிலை அல்லது செய்தி நிலையிலும் (Collection or information) ஆய்வுநிலை அல்லது கோட்பாட்டு நிலையிலும் (Research or application of theories) எத்தகு வளர்ச்சி கண்டுள்ளது என்பதை யும் இது தொடர்பாக எத்தகு தொகுப்புநிலை, ஆய்வுநிலை மேற் கொள்ளப்பட வேண்டுமென்றும் இக்கட்டுரையில் சுட்டப்படுகிறது.

நாட்டுப்புறவியலைக் கீழ்க்கண்டவாறு ரிச்சர்டு எம். டார்ஸன் பிரிக்கின்றார் என்று லூர்துவின் **நாட்டார் வழக்காற்றியல் ஓர் அறிமுகம்** என்ற நூல் மூலம் அறிகிறோம்.

(1) **வாய்மொழி இலக்கியம்** (Voiced Forms).

(2) **புழங்கு பொருளால் அறியப்படும் பண்பாடு** (Material culture).

(3) **நாட்டுப்புற சமுதாய பழக்க வழக்கங்கள்.**

(4) **நாட்டுப்புறக் கலைகள்** (Performing Folk Arts).

மேற்கண்ட வகைப்பாட்டில் வாய்மொழி இலக்கியம் ஆய்வு நிலை மிகுந்து காணப்படுகிறது. அதை அடுத்து நாட்டுப்புறக் கலைகளும், அதற்கடுத்த நிலையில் சமுதாயப் பழக்க வழக்கங்கள் தொடர்பான ஆய்வும் அமைகின்றன.

சமுதாயப் பழக்க வழக்கம் தொடர்பான வெளியீடுகள் பெரும்பாலும் செய்திநிலையில் உள்ளமை கவனிக்கத்தக்கதாகும். நாட்டுபுறக் கலைகள், வாய்மொழி இலக்கியம், இரண்டும் ஆய்வு நிலையில் அமைந்திருப்பினும், வாய்மொழி இலக்கியம் தொடர்பான ஆய்வுகளில் ஒருவகை முன்னேற்றம் இருப்பதை உணர முடிகிறது. எனினும் புழங்கு பொருளால் அறியப்படும் பண்பாட்டுத் தொடர்பான நாட்டுப்புறவியல் தேக்க நிலையிலேயே இருக்கிறது

இதற்குக் காரணம், தொடக்க நிலையில்—நாட்டுப்புறவியல் அரும்பாகி நிற்கும் நிலையில்—வாய்மொழி இலக்கியம், நாட்டுப்புறக் கலைகள் தொடர்பான தொகுப்புக்கள், (அல்லது செய்தி நிலைகள்), பெருமளவில் வளர்ந்திருந்தன. எனவே அவைகளைக் கொண்டு அவை தொடர்பான ஆய்வும் வளர்ந்துள்ளது. சமுதாயப் பழக்க வழக்கங்களைப் பற்றிய தொகுப்புநிலை செயல்பாட்டில் உள்ளமையால் ஆய்வுநிலை வருங்காலத்தில் பெருக வாய்ப்புண்டு.

## I. வாய்மொழி இலக்கியம்

நாட்டுப்புறப் பாடல், பழமொழி, விடுகதை, கதைப்பாடல், கதை போன்றவைகளை இப்பகுதியில் அடக்கலாம். இந்நிலையில் வாய்மொழி இலக்கியத்தின் வரலாற்றினை விளக்கும் வகையிலமைந்த சு. சண்முகசுந்தரத்தின் **நாட்டுப்புற இலக்கிய வரலாறு** என்ற நூல் குறிப்பிடத் தகுந்த முயற்சியாகும்.

"ஏட்டு இலக்கியங்களுக்கு இதுவரை எத்தனையோ பேர் வரலாறு எழுதிவிட்டார்கள். ஆனால் இதுவரை எவரும் நாட்டுப்புற இலக்கியங்களுக்கு வரலாறு எழுதவில்லை".[3] இக்குறையினை நீக்கும் முயற்சி இந்நூலில் மேற்கொள்ளப்பட்டுள்ளது எனலாம்.

நாட்டுப்புற இலக்கியம் தோன்றிய வரலாற்றினைத் தொட்டுக் காட்டுவதுடன், நாட்டுப்புற இலக்கியம் அச்சான வரலாற்றையும் தொகுக்கப்பட்ட வரலாற்றையும் எண்பது வரை ஆய்வு செய்யப்

பட்ட வரலாற்றையும் இணைத்துச் செல்கிறது இந்நூல். நாட்டுப்புற இலக்கியத்தினைப் பற்றி வெளிவந்துள்ள நூல்கள், கட்டுரைகள் கலைக்களஞ்சியக் குறிப்புகள், இதழ்களில் உள்ள செய்திகள் எனவகைப்படுத்தியதைக் காலவரிசைப்படுத்தி அவற்றின் உள்ளடக்கம் பற்றியும் மதிப்பீடு பற்றியும் சுட்டிச்செல்லும் திறனாய்வு இங்கு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

இந்நூலினைப்பற்றி, ''எழுத்து மூலச் சான்றுகளைக் கொண்டு வரலாறு எழுதப்படுகின்ற நிலைமாறி நாட்டுப்புறக் கூறுகளைக் கொண்டும் வரலாற்றினை உருவாக்கலாம் என்ற சூழ்நிலை முளைவிடத் தொடங்கியுள்ளது''[4] என்று ச.வே. சுப்பிரமணியம் அவர்கள் தம்முடைய முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

நாட்டுப்புறப்பாடல், பழமொழி, விடுகதை, கதைப்பாடல், கதை என்ற வகைப்பாட்டில் நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றி இரண்டு நூலும், கதைத்தொடர்பாக குருமூர்த்தியின் **'ஆசிய நாடோடிக் கதைகள்'** என்ற நூலும் குறிப்பிடத் தகுந்ததாக அமைகின்றன. பழமொழி, விடுகதை, கதைப்பாடல் என்ற வகையில் முழுமையான நூல் வரவில்லை எனலாம்.

நாட்டுப்புறப்பாடல் என்றால் என்ன? இவற்றின் வகை தொகையீடு எவ்வாறு அமைந்திருக்கிறது போன்ற செய்திகளைத் தாங்கி தாலாட்டு முதல் ஒன்பதுவகைப் பாடல்களை ஆராயும் போக்கு, சு. சண்முகசுந்தரத்தின் **'நாட்டுப்புறப் பாடல்'** என்ற நூலில் அமைகிறது. 'பாடல்களை ஒட்டு மொத்தமாக மூன்று பிரிவுகளுக்குள் அடக்கும் வகையில் பாடலின் உரு, பாடலின் கரு, பாடுபவர் என்று மூன்று வகைகளாகப் பகுத்துப் பார்த்திருப்பது''[5] இந்நூலின் சிறப்புச் செய்தியாகும்.

வாய்மொழி இலக்கியம் தொடர்பாக அமைகின்ற கட்டுரைகளின் ஆய்வின்போக்கு கீழ்க்கண்டவாறு அமைகிறது.

1. வரலாற்றுப்பார்வை
2. உள்ளடக்க ஆய்வு
3. அமைப்பியல் ஆய்வு
4. உளவியல் பார்வை
5. ஒப்பீட்டு நோக்கு
6. மொழிநிலை
7. சமுதாயவியல் பார்வை

1. வரலாற்றுப்பார்வை

சு. சண்முகசுந்தரத்தின் நாட்டுப்புற இலக்கிய வரலாற்றையும் கமலையாவின் இராமப்பய்யன் அம்மானை ஓர் ஆராய்ச்சியையும் இவ்வகையில் அடக்கலாம். நாட்டுப்புற இலக்கிய வரலாற்றினைப் பற்றி ஏற்கெனவே முற்பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது. மதுரையில் திருமலைநாயக்கன் ஆட்சியின்போது அவனுடைய படைத்தலைவன் இராமப்பய்யன் தலைமையில் நாயக்கர் சேனை மறவர் நாட்டின்மீது படையெடுத்ததைக் கூறும் இராமப்பய்யன் அம்மானை வரலாற்றுத் தகவல்கள் பலவற்றைக் கொண்டுள்ளது. ஆசிரியன் வரலாற்றுப் பார்வையுடன் கூடிய ஆய்வுக் கட்டுரை சிறப்பாக உள்ளது.

2. உள்ளடக்க ஆய்வு

'தாலாட்டில் கதைகள்', 'தமிழ்த் திரைப்படப் பாடல்களில் நாட்டுப்பாடல்களின் தாக்கம்' என்ற இருகட்டுரைகளையும் உள்ளடக்க ஆய்வில் அடக்கலாம். தொடக்கத்தில், ''நிலப் பிரபுத்துவ சமூக கலாச்சாரங்களையும் பழக்க வழக்கங்களையும் தாங்கி வந்ததால் இவைகளில் (திரைப்படங்களில்) பெரும்பாலும் புராணத்தில் இடம்பெற்ற நிகழ்ச்சிகள், மேல்தட்டு மக்களின் தெய்வீகக் காதல் வாழ்க்கை, வீரசாகசம் ஆகியவைகள் முக்கியமானதாகக் காண்பிக்கப்பட்டன''[6] தற்காலத் திரைப்படங்களில் சமுதாயத்தன்மை அதிகரிக்க, அதிகரிக்க நாட்டுப்புறப் பாடல்களின் தாக்கமும் அதிகரிக்கிறது என்ற நிலையில், ''தற்காலத்தின் நாட்டுப்புற யுகம் அன்னக்கிளி ஆரம்பிக்கிறது''[7] என்பது கட்டுரையாசிரியரின் கணிப்பாக உள்ளது எனினும், ''கருத்தடக்கத்தில் வளர்ச்சி இல்லை; வடிவத்தில்தான் வளர்ச்சி தென்படுகிறது.''[8] என்று தன் ஆய்வின் மதிப்பீட்டின் மூலம் உணர்த்துகிறார்.

3. அமைப்பியல் ஆய்வு

வி. பெருமாளின், 'Classification of Tamil Proverbs an Tier basis'' என்ற ஆங்கிலக் கட்டுரையும், சாந்தியின், 'Proverbs a brief sketch'' என்ற ஆங்கிலக் கட்டுரையும் பழமொழியின் அமைப்பியல் தொடர்பான ஆய்வாக அமைகின்றன. ஜே நிர்மலாபாய் 'Tamil folk songs' என்ற ஆங்கிலக் கட்டுரையில் நாட்டுப்புறப் பாடல்களை ஐந்து வகைகளாகப் பகுத்து ஆய்வு மேற்கொண்டுள்ளார்.

4. உளவியல் பார்வை

அடிமனத்தில் தோன்றும் ஆசைகளை மேல்மனத்தினால் அடக்கப்படுகிறது. அவை நாளடைவில் கனவாகவும், கதைகளாக வும் உருப்பெறுகின்றன. இவைகளில் அடக்கப்பட்ட ஆசைகள் குறியீட்டு நிலையில் அமைந்திருக்கும். அதனை உளவியல் ஆய்வு முறையில் ஆய்வதே உளவியல் கோட்பாட்டின் அடிப்படையாகும். இக்கோட்பாட்டினை நாட்டுப்புறப் பாடலொன்றிற்குப் பொருத்தி அப்பாட லிடம்பெறும் சமூகத்தாரின் உளநிலையினைப் படம் பிடித்துக் காட்டுமியல்பு ஜே. நிர்மலாபாயின் "(Socio-Psychological Backgorcund of a Tamil folk song" என்ற ஆங்கிலக் கட்டுரையில் இடம்பெறுகிறது. நாட்டுப்புறவியல் ஆய்வுதுறைகளில் இது ஒரு புதுமுயற்சி எனலாம்.

5. ஒப்பீட்டு நோக்கு

இவ்வாய்வு இருமுறைகளின் அமைகிறது.

1. நாட்டுப்புறவியல் வகையினை இலக்கிய வகையுடன் ஒப்பிடல்.
2. ஒரு மொழியிலுள்ள நாட்டுப்புறவியல் கூற்றினை இன்னொரு மொழியின் நாட்டுப்புறவியல் கூற்றுடன் ஒப்பிடல்.

முதல் வகைக்கு நசீம்தீனின் நாட்டுப்புறக் கதைப்பாடல் களும் சிலப்பதிகாரமும் என்ற கட்டுரையினைக் கூறலாம். நாட்டுப் புறக் கதைப்பாடல் சிறுதெய்வ வழிபாட்டுடன் தொடர்புடை யனவாக இருந்து சமுதாய இணைப்புக் காலத்தில் பெருந்தெய்வங் களின் அவதாரமாகவோ, உறவின் முறையாகவோ மாறுகின்றன என்ற கருதுகோளின் அடிப்படையில் "முன்னர் மக்களிடையே வழங்கி வந்த கதையே சிலப்பதிகாரமாக உருவெடுத்தது"[9] என்று பலவிதச் சான்றுகளுடன் ஒப்பீட்டு அடிப்படையில் இங்கு நிறுவப் படுகிறது.

இரா. மதிவாணனின் 'மலையாளப் பழமொழிகள்', 'தெலுங்குப் பழமொழிகள்' என்ற இருகட்டுரைகளும் இரண் டாவது வகையில் அமைகின்றன. தமிழ்மொழியுடன் தொடர் புடைய தெலுங்கு, மலையாளப் பழமொழிகள் எவ்வகையில் ஒன்றுபடுகின்றன, எவ்வகையில் வேறுபடுகின்றன என்று தெளிவு படுத்தப்படுகின்றது. திராவிட மொழிகளின் பழமொழிகளைத்

தொகுத்து ஒப்பிடுவதால் மூலத்திராவிடமொழியின் தொன்மைப் பழமொழியினைப் பற்றித் தெரிந்துகொள்ள இயலும் என்பது கட்டுரையாசிரியரின் கருத்தாக அமைகிறது.

6. மொழிநிலை

வாய்மொழி இலக்கியத்தினை அடிப்படையாகக் கொண்டு நாட்டுப்புற மக்களின் மொழிநிலையினை ஆராயும்போக்கு இவ் வகையில் இடம்பெறுகிறது.

கன்னியாகுமரி மாவட்ட நாட்டுப்புறப்பாடல்களை மூலமாகக் கொண்டு மொழியியல் ஆய்வுநிலையில், அம்மக்களின் மொழி சில நிலைகளில் வேறுபடுவதைத் தக்க எடுத்துக்காட்டுக்களுடன் விளக்குவதை ஜே. நிர்மலாபாயின் 'The language Peculiarities in Kanyakumari District folk Songs' என்ற ஆங்கிலக் கட்டுரை யினின்றும் உணரலாம்.

நாட்டுப்பாடல்களில் காணப்படும் சொற்களை அகராதியி லுள்ள சொற்கள் எனவும் அகராதியில் இல்லாத சொற்கள் எனவும் பிரித்து அகராதியில் இல்லாத சொற்களை ஒலிக் குறிப்புச்சொல் ஒலிக்குறிப்புப்போலி, எதிரொலிச்சொல், சொற் போலி என்று பாகுபடுத்தி ஆராயுமியல்பினை சாமி. பிச்சைப் பிள்ளையின் 'நாட்டுப்பாடல்களில் சொல்லாய்வு' என்ற கட்டுரை விளக்குகிறது.

இஸ்லாமிய கதைப்பாடல்களில் அரபுமொழியின் ஊடுரு வலை 'இஸ்லாமியத் தமிழில் நாட்டுப்புறவியல் கூறுகள்' என்ற கட்டுரை தெளிவாக்குகிறது.

7. சமுதாயப் பார்வை

குறிப்பிட்ட பாடல் வகைகளைக்கொண்டு, அப்பாடல் பாடப் படுபவரின் சமுதாயநிலை ஆராயப்படுகிறது. காட்டாக அம்பாப் பாடல் வகையினைக்கொண்டு குமரிமாவட்ட மீனவர் சமுதாயத் தினையும் (குமரி மாவட்ட அம்பாப்பாடல் காட்டும் சமுதாயம்) ஆலைத் தொழிலாளர்களின் பாடலைக் கொண்டு அவர்தம் சமுதாயப் பிரச்சினைகளையும் (ஆலைத்தொழிலார்களின் நாட்டார் பாடல்கள்) சாதிக்குத் தகுந்தவாறு பரவிச்செல்லும் வாய்மொழி இலக்கியத்தின் பண்பினையும் (வாய்மொழி இலக்கி யத்தின் தனிப்பண்பு)உழவுப் பழமொழிகளைக்கொண்டு வேளாண் சமுதாயத்தினை ஆராயும் பண்பினையும் (உழவுப்பழமொழிகள்)

கூறலாம். மேலும் இத்தகு ஆய்வுமுறை நாட்டுப்புறப்பாடலில் மிகுந்தும், பழமொழி, கதைப்பாடல் இவைகளில் குறைந்தும் காணப்படுகிறது.

நாட்டுப்புறப் பாடல்களில் பழமொழி, கதைப்பாடல், விடுகதை, கதை என்ற வகைப்பாட்டில், நாட்டுப்புறப்பாடல், பழமொழி, கதைப் பாடல் இவைகள் தொடர்பாக கட்டுரைகள் வந்துள்ளன. விடுகதை, கதை தொடர்பான கட்டுரைகள் எதுவும் எழுதப்படவில்லை என்பது குறிப்பிடத்தகுந்ததாக உள்ளது. மேலும் ஆய்வுநிலையில் சமுதாயவியல் பார்வை மிகுந்தும் அதற்கு அடுத்த நிலையில் மொழிநிலை, ஒப்பீட்டு ஆய்வு போன்றவை களும் அமைகின்றன. பொதுவாக வாய்மொழி இலக்கியம் தொடர்பாக தொகுப்பு நிலையில் நூல்களோ, கட்டுரைகளோ பெரும்பாலும் அமையவில்லை. ஆய்வின் போக்கிலும் புதிய கோட்பாட்டு முறைகள் மேற்கொள்ளப்பட்டிருப்பது கட்டுரையளவில் மட்டும் அமைந்துள்ளன.

## II. புழங்குபொருளால் அறியப்படும் பண்பாடு

மக்கள் தங்கள் அன்றாட வாழ்விற்குப் பயன்படுத்தும் உணவு, உடை, இருப்பிடம், அணிகலன், கைவினைப்பொருட்கள், சித்திரம் போன்றவைகள் இவ்வகைப்பாட்டில் அடங்கும். மேலை நாடுகளில் இவ்வகைப் பண்பாடுபற்றிய ஆய்வு வளர்ந்த நிலையில் உள்ளது. ஆனால் தமிழ் நாட்டில் இதுதொடர்பான ஆய்வு வளரவில்லை. தொகுப்பு நிலை அல்லது செய்தி நிலையிலும் வளர்ச்சி இடம்பெறவில்லை.

## III. சமுதாயப் பழக்க வழக்கங்கள்

சமயம், விழா, திருமணம், நம்பிக்கை, விளையாட்டு போன்ற பகுதிகளை இவ்வகையில் அடக்கலாம். இவற்றில் விளையாட்டுத் தொடர்பாக இரா. பாலசுப்பிரமணியனின் **'தமிழர் நாட்டு விளையாட்டுகள்'** என்ற நூல் வெளிவந்துள்ளது. நாட்டுப்புற வாழ்வியலில் விளையாட்டுப் பெறும் இடத்தினையும் விளையாட்டின் தெளிவான வகைப்பாட்டினையும் உள்ளடக்கிய இந்நூலில் விளையாட்டின் தோற்றம் பற்றிய ஆய்வும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. மொத்தம் நூற்றுஇருபத்தாறு விளையாட்டுகளைப் பற்றிய குறிப்பு இந்நூலின்கண் இடம்பெற்றுள்ளது. விளையாட்டுகளை ஆடவர், மகளிர், சிறுவர்—சிறுமியர், சிறுவர், சிறுமியர், குழந்தை என்று பங்குகொள்வோரின் அடிப்படையில் பிரித்து

உடல் திறன், அறிவுத்திறன், வாய்ப்புநிலை, மனமகிழ்ச்சி நிலை என்ற வகையில் விளக்கிச்செல்லும் முறை மேற்கொள்ளப் பட்டுள்ளமை புதிய முயற்சி எனலாம்.

விழா, நம்பிக்கை, சமயம், விளையாட்டு, திருமணம் போன்ற வகைகளில் கட்டுரைகள் காணப்படுகின்றன.

விழாக்களைப்பற்றி அமையும் கட்டுரைகளில் மீ. ப. சோமு வின் 'சமுதாய விழாக்கள்' சிறுவை. நச்சினார்க்கினியனின் பொங்கல் விழா, வசந்த விழா போன்ற கட்டுரைகள் குறிப்பிடத் தகுந்ததாக உள்ளதெனலாம். தென்னாட்டில் காமன் பண்டிகை யாகவும், வடநாட்டில் ஹோலிவிழாவாகவும் கொண்டாடப்படு கின்ற வசந்த விழாவினைப் பற்றிய கட்டுரை சிந்தனைச் செய்தி களைத் தாங்கி நிற்கிறது. "ஹோலி விழாவுக்கும் இந்த வேனிலான் விழாவுக்கும் சிறப்பான வேறுபாடில்லை. இந்த விழாவில் இரு தத்துவங்கள் உண்டு. காமபூஜைக் காலத்தில் நாட்டியம், பாட்டு, அபிரக சிந்தூரப்பொடி, குங்குமம், புரச மலரிலிருந்து தயாரிக்கப்படும் வண்ணக்கலவை இவையே முக்கியம். காமவிழாவின் இதே தத்துவத்தை இன்று ஹோலிவிழாவிலும் கடைப்பிடிக்கின்றனர்"[10] என்று ஒப்பீட்டுமுறையில் சுட்டி யிருப்பது சிறப்பாக உள்ளதெனலாம்.

நம்பிக்கை தொடர்பாகப் பல கட்டுரைகள் வெளிவந்துள்ளன காகம் தொடர்பாக மக்கள் கொண்டுள்ள நம்பிக்கைகளைப் பற்றி எச் சே. ஐயரின் இரண்டுகட்டுரைகள் செய்தி நிலையில் தந்துள்ளன. காகத்தின் மூலமாக வருங்காலத்திலமையும் நன்மை தீமைகளை உணரமுடியும் என்று மக்கள் நம்பியிருந்தனர். ஏனெனில் "பிதிருகளுடன் தொடர்பு கொண்ட காக்கைகள் இதை நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கின்றன. அவை மனிதனுக்குப் பலவிதமாக எச்சரிக்கைகளைச் செய்து நன்மை தீமைகளை எடுத்துக்காட்டுகின்றன."[11] காக்கையின் குரலினை வைத்துக் கொண்டு நன்மை தீமைகளைக் கணிக்கும் பழக்கம் இருப்பதனைக் காகத்தின் குரல்' என்ற கட்டுரை தெளிவாக்குகிறது.

பழங்குடிமக்களிடம் நம்பிக்கைகள் எவ்வெவ்வகையில் வெளிப் படுகின்றன என்பதை நீலகிரி மாவட்டத்தில் வாழும் இருளர்கள், ஆனைமலைப் பழங்குடிகள், நீலகிரி தோடர்கள் போன்றோர் வாயிலாக உணர்த்தும் திறனை ஏ. மோகன்ராமின் 'இந்தியப்பழங் குடிகளின் சில நம்பிக்கைகள்' என்ற கட்டுரையின் வாயிலாக உணரமுடிகிறது.

சமயம், வழிபாடு இவைகள் தொடர்பாக அருகியே கட்டுரை வெளிவந்துள்ளன. 'கொங்குநாட்டு பூதவழிபாட்டினைப்' பற்றி டி. எம். காளியப்பா வரலாற்று நிலையில் எழுதியிருப்பது குறிப்பிடத் தகுந்ததாக உள்ளது. குறிப்பாக ''இந்த நாட்டு ராயன் சோயிலைக் கட்டியவன் மாந்தரஞ்சேரல் என்ற சேரமன்னன். இச்சேரமன்னன் சமுத்திர குப்தன் சமகாலத்தவனாக இருக்கலாம்; அலகாபாத் கல்வெட்டுக் குறித்துள்ள 'மந்தராஜாவாகவும்' இருக்கலாம்''[12] என்ற சிந்தனை வரலாற்று நிலையில் புதிய கண்ணோட்டத்தினை அளிப்பதாக உள்ளது.

திருமணம் தொடர்பாக வனிதாவின் கட்டுரையொன்று அமைகிறது. **துளுமக்களின் திருமணம்** பற்றிய செய்தியினைத் தெளிவாக எடுத்தியம்புகிறது. கர்நாடகம், கேரளம் இரண்டையும் ஒட்டிய பகுதிகளில் வாழும் இவர்களின் பழக்க வழக்கத்தில் சிற்சில மாறுதல் இருந்தாலும் தனி எழுத்து இல்லாத இவர்கள் தமிழர்களுடன் இணைந்தவர் ஆவார். நாந்தி (பூஜை), ஸமாவர்த்தனம் (வேதபூஜை முடிவு), கோ தானம், காசி யாத்திரை, திப்பண்ணி (மாப்பிள்ளை அழைப்பு) ஸ்வீகரணம் (வரவேற்பு), ஹாரர்ப்பணம் (திரைச்சீலை நீக்குதல்), விவாஹ ஹோமம், மாங்கல்ய காரணம், ஆசிர்வாதம், மணப்பெண்ணினை ஒப்படைத்தல் (உடிகிரே) என்று படிப்படியான முறைகளைச் செய்திநிலையில் விளக்கிச் செல்வது இக்கட்டுரையின் சிறப்பாகும். இதுபோல ஒவ்வொரு இனத்தவரின் திருமணச் சடங்கு பற்றியும் கட்டுரை அமையுமானால் ஒப்பீட்டாய்விற்கு அது வழிவகுப்பதாய் அமையும்.

நாட்டுப்புற விளையாட்டுகளைப் பற்றிப் பல கட்டுரைகள் வந்துள்ளன. இது வரவேற்கத்தக்க முயற்சி எனலாம். மேலும், அவைகளில் பல ஆய்வு நிலையில் அமைந்துள்ளன என்பதும் குறிப்பிடத்தகுந்ததாகும்.

**'கால்நடைப் பந்தயத்தினைப்'** பற்றிய என். அசோகனின் கட்டுரை செய்திநிலையில் சிறப்பாக உள்ளது. இரண்டு காளைகள்; கழுத்தில் நுகத்தடி; அதற்குப்பின் உட்கார்ந்திருக்கும் அறுபது கிலோவுக்கு மேல் எடையுள்ள ஓர் ஆள் - இத்தனை பாரத்தையும் தாங்கிக்கொண்டு மற்றைய காளைகளுடன் வேகமாக ஓட வேண்டும். ''பாலக்காட்டுப் பகுதியில் குடியேறிய தமிழ்மக்கள் தொடங்கிவைத்த இந்த விளையாட்டு (கால்நடைப்பந்தயம்) இன்று பெரிய விழாவாகவே ஆகிவிட்டது''[13] என்று குறிப்பிடு

கிறார் கட்டுரையாசிரியர். மலையாள நாட்டிலிடம்பெறும் கால் நடை ஓட்டப்போட்டியினின்றும் இப்பந்தயம் வேறுபடுகிறது என்பதனையும் உணர்த்தியுள்ளார்.

நவராஜ் செல்லையா அவர்களின் **'கண்ணாமூச்சி ஆட்டம்'**, **'கயிறு இழுக்கும் போட்டியின் கதை'** என்ற இரண்டு கட்டுரைகளும் அவ்வவ் விளையாட்டின் தோற்றத்தினை ஆய்வதாக உள்ளன. மேலும் உலக நாடுகளில் இடம்பெறும் விளையாட்டுகளுடன் இணைத்துப் பேசுவதையும் இங்கு காணமுடிகிறது. தமிழர் நாட்டுப்புற விளையாட்டான கண்ணாமூச்சி எகிப்து, கிரேக்கம், இங்கிலாந்து, பிரான்ஸ் போன்ற நாடுகளிலுள்ள கண்ணாமூச்சி ஆட்டத்துடன் ஒப்பிட்டுப் பேசப்படுகிறது. பைபிளில் கண்ணினை மூடிக் கண்டுபிடிக்கும் செயல் தொடர்பான (லூக்கா. 22:64) குறிப்புக் காணப்படுவதை அகழ்ந்தெடுத்துக் கொடுத்துள்ளார்.

நாட்டுப்புற விளையாட்டுகளை இலக்கியத்தில் இடம்பெறும் விளையாட்டுகளுடன் ஒப்பிடும் போக்கினை இரா. பாலசுப்பிரமணியனின், **பண்டைத் தமிழ்ச் சிறுவர் விளையாட்டுகள்'** என்ற கட்டுரையின் வாயிலாக அறியலாம். குறிப்பாக நிலத்தின் வாழ்க்கைச் சூழலுக்குத் தக மாறுபடும் சிறுவர் விளையாட்டுகள் பெரும்பாலும் போலச்செய்தல் (imistation) தன்மையில் அமைவதைச் சுட்டிக்காட்ட முயன்றுள்ளார்; இதே கட்டுரையாசிரியரின் **'சல்லிக்கட்டு'** என்ற ஆங்கிலக் கட்டுரையில் இவ்விளையாட்டினை ஒரு வீரவிளையாட்டு என்று நிறுவமுற்பட்டுள்ளதைக் காணலாம். ஸ்பெயின், போர்ச்சுகல் போன்ற நாடுகளிலிடம்பெறும் காளைப்போருடன் (Bull fight) ஒப்பிட்டு, இது வேறுபடுவதையும், இலக்கியத்திலுள்ள ஏறுதழுவலுடன் சல்லிக்கட்டு இணைந்து வருவதையும் பல சான்றாதாரங்களுடன் எடுத்துக் காட்டி ஆய்வு முறையில் விளக்கிச் செல்கிறார்.

க.ப. அறவாணன் அவர்கள் தமிழ்நாட்டில் வழங்கும் பல்லாங்குழியாட்டம் பிறமாநிலங்களில் விளங்குமாற்றையும், பிற நாடுகளில் என்னென்ன பெயர்களுடன் விளங்குகிறது என்பது தொடர்பாகவும் பல செய்திகளைத் திரட்டி அட்டவணைப் படுத்திக் காட்டியுள்ளது சிறப்பான முயற்சியெனலாம். ''பல்லாங்குழியாட்டம் தமிழ் நாட்டிற்கு அல்லது திராவிடப் பண்பாட்டிற்கு வந்ததற்கு ஆப்பிரிக்க நாட்டு பாந்துஸ் (Baantus) காரணமாயிருந்தனர்''[14] என்ற கூற்று ஏற்புடைத்ததாகத் தோன்றவில்லை,

இருப்பினும் இது தொடர்பானவை தெளிவுபட்டால்தான் உண்மை நிலை தெரியவரும்.

பொதுவாகக் கூறுமிடத்து சமுதாயப் பழக்க வழக்கங்களை யொட்டிய பண்பாட்டுநிலையில் மிகுதியான நூல்கள் வெளிவர வில்லை. வெளிவந்துள்ள கட்டுரைகளில் விளையாட்டுத் தொடர் பான கட்டுரைகள் மிகுந்துள்ளன. சமயம், நம்பிக்கை திருமணம் தொடர்பாக மிகுதியான கட்டுரைகள் வெளிவரவில்லை. வந்த கட்டுரைகளும் செய்தி நிலையிலேயே அமைந்துள்ளன.

## IV. நாட்டுப்புறக் கலைகள்

நாடகம், இசை, நடனம் போன்றவைகள் இப்பாகுபாட்டில் அடங்கும்.

நாட்டுப்புறக் கலைகளைப் பொதுவாகத் தொகுத்து ஆராயப் படுமியல்பினை ஏ. என். பெருமாளின் **'தமிழக நாட்டுப்புறக் கலைகள்'** என்ற நூலின் வழி உணரலாம்.

கலை அறிமுகம் என்ற முதற்பகுதியில் மனிதனின் கலை, உணர்வு, அடிப்படை உணர்வு, கலைகளின் தோற்றம், நாட்டுப்புறக் கலைகள், கலைகளின் வளர்ச்சிப்படிகள், நாட்டுப்புறக்கலைகளின் இன்றைய நிலை, நாட்டுப்புறக்கலைகளின் நோக்கம் போன்றவை விரிவானநிலையில் ஆராயப்படுவதுடன், வகைப்பாட்டில் சமூகம், சமயம் எனப் பிரித்து வகைப்படுத்தும் முயற்சி புதியதோர் சிந்தனை யோட்டத்துடன் நடைபோடுகிறது. இத்தகைய பிரிவுகளில் அடங்கும் கலைகளைத் தனித்தனியாகவும் விளக்கமாகவும் அறிய வேண்டிய நிலையில் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

**'தமிழக நாட்டுப்புறக்கலைகள்'** என்ற தலைப்பில் தமிழரசு இதழில் வந்த ஆசிரியரின் பல கட்டுரைகளின் விரிவே மேற்குறிப் பிட்ட நூல் தவிர்த்து மீ ப. சோமுவின் **'கிராமத்துக்கலைகள்'** **'சிறிய பெரிய கலைகள்'** என்ற இருகட்டுரைகளும் செய்தி நிலை யில் அமைகின்றன.

### 1. நாடகம்

நாடகம் தொடர்பாக இரண்டு நூல்கள் குறிப்பிடத் தகுந்த தாக அமைகின்றன. குறிப்பாக சு. அறிவுநம்பியின் **'கூத்தும் சிலம்பும்'** என்ற நூல் அரியதோர் முயற்சி எனலாம். "பாமரக் கலையான தெருக்கூத்திலிருந்து கதையை எடுத்துச் சங்க நிகழ்ச்சிகளை இடைப்புகுத்தி, தன் கற்பனையில் சில பாத்திரங்

களைப் பக்கபலமாக்கி அருமை மிகுந்ததாகக் காப்பியத்தைப் புனைகிறார் அடிகள்''[15] என்ற கருத்தின் அடிப்படையில் கூத்தும் சிலம்பும் என்ற நூல் இயங்குகிறது. சிலப்பதிகாரத்திற்கும் கூத்திற்குமிடையே அமைப்பில் இருக்கின்ற ஒற்றுமைகளைக் கட்டமைப்பு என்ற பகுதியில் காண்கிறோம். அதை அடுத்துத் தெருக்கூத்துத் தரும் கோவலன், கண்ணகி கதையினைக் கூறிச் சிலப்பதிகாரத்துடன் ஒப்பிடப்படுகிறது. கண்ணகி, கூத்துக்கதையிலும் காப்பியத்திலும் இடம்பெறும் விதத்தினைச் சான்றுகளுடன் நிறுவி, மாதவி பாத்திரம் தெருக்கூத்தில் வேறுபட்டு விளங்குவதைத் தெளிவாக எடுத்துக்காட்டி இறுதியில் ஆசிரியர் தனது ஆய்வு முடிபுகளைத் தொகுத்துக் கொடுக்கின்றார். ஒப்பீட்டாய்வில் பாராட்டிற்குரிய முயற்சி இது என்று கூறினால் மிகையாகாது.

பதினோரு கீர்த்தனை நாடகங்களை மூலமாகக் கொண்டு ஆராயும் போக்கினை பி. புஷ்பாவின் ''**கீர்த்தனை நாடகங்கள்**'' என்ற நூலின் வழி உணரலாம். 'கதா காலட்சேபம் கூறும் முறையும், கீர்த்தனை என்னும் பாடல் வடிவும் நாட்டுப்புற இலக்கியவடிவும் கலந்ததே கீர்த்தனை நாடகம்''[16] என்று வரையறைப்படுத்த முயல்கிறார். பள்ளு, குறவஞ்சி நாடகங்களுக்கு மேற்கொள்ளப்பட்டுள்ள அளவு ஆய்வு முயற்சி கீர்த்தனை நாடகங்களுக்கு இல்லை யென்ற குறையினை இவ்வாய்வுநூல் நிறைவாக்குகிறது எனலாம்.

பதிப்பு முறையில் வெளிவந்துள்ள '**குளுவ நாடகம்**' ஏ. என். பெருமாள் அவர்களின் சிறந்த ஆய்வு முன்னுரையுடன் அமைந்திருப்பது குறிப்பிடத் தகுந்த நிலையில் உள்ளது. நூலாசிரியர் குளுவம் என்ற சொல்லிற்குப் பொருள் காணும்முறை அவர்தம் ஆராய்ச்சி அறிவினைப் புலப்படுத்துவதாக உள்ளது. தத்துவ நோக்கில் குளுவநாடகத்தினை இணைத்துப் பேசியிருப்பதை நூலின் வழி அறிய முடிகிறது. ''கலப்பு மொழியாலும் இலக்கிய மொழியாலும் பாடல்களை எழுதி பல்வகை அணிகளையும் சுவைகளையும் கூட்டி ஒலிவேகங்கொடுத்துப் பாமரர்களும் கேட்டுப் புரிந்து மகிழும் வண்ணம் சின்ன மகிபன் குளுவநாடகம் எழுதப் பட்டுள்ளது''[17] என்று குளுவ நாடகத்தினைப் பற்றி ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

நாடகம் தொடர்பாக அமையும் கட்டுரைகளில் ஒப்பீட்டு முறை, வரலாற்று நோக்கு, இலக்கிய நிலை இவைகளில் ஆய்வு

மேற்கொள்ளப்பட்டுள்ளன எனலாம். செய்தி நிலையில் இரண்டு கட்டுரைகள் அமைகின்றன

தெருக்கூத்து—கூத்து, நாடகம், ஆட்டம் என்று பலவகையில் அழைக்கப்படுவதனையும் பிற்காலத்தில் சபா, விலாசம், அலங்காரம், கீர்த்தனை, சரித்திரப்பா என்று அழைக்கப் படுவதற்கு வடமொழி போன்றவற்றின் தாக்குதல் காரணம் என்பதனையும் ஒப்பீட்டில் விளக்கும் முறையினை அ. அறிவு நம்பியின் 'தெருக்கூத்துக் கதைகளின் பெயர்கள' என்ற கட்டுரை உணர்த்தி நிற்கின்றது.

தெருக்கூத்தினையும், குறவஞ்சி இலக்கியத்தினையும் ஒப்பிட்டு, ''நாட்டுப்புற மக்களின் வாழ்க்கையிலிருந்து கதைப் பொருளையும், இசையையும், பாக்களையும் எடுத்துக்கொண்டு தம் கவிதைச்சிறப்பு வெளிப்பட்டுத்தோன்ற குறவஞ்சி இலக்கியம் அமைந்துள்ளது''[18] என்பதனை சு வேங்கட்ராமனின் 'தெருக் கூத்தும் குறவஞ்சியும்' என்ற கட்டுரை தெளிவாக்குகிறது.

ஏ. என். பெருமாள் அவர்களின் 'Kuḷuva Nāṭakam' என்ற ஆங்கிலக் கட்டுரையிலும் ஸி. ஆர் மன்மதனின் 'நாடக வளர்ச்சி' என்ற கட்டுரையிலும் வரலாற்றின் சாயல் படிந்திருக்கிறது.

நாட்டார் நாடகங்களைக் கொண்டும் இலக்கியக் கொள்கை களை வடித்தெடுக்கமுடியும் என்ற முயற்சியில் ஏ. என் பெருமாள் அவர்களின் 'நாட்டார் நாடகங்கள்' என்ற கட்டுரை அமைகிறது. ''பெருகிய பாடல் பகுதியும் அருகிய உரைநடைப்பகுதியும் விரவிக்கலந்த உரையாடல் நடையில் நாட்டார் நாடகங்கள் எழுதப்பெற்று, பாத்திரங்களை மேடைமீது நடிக்கச்செய்து அவற்றைக் கண்டும் கேட்டும் மகிழ்ந்திருக்கின்றனர்.''[19] என்று குறிப்பிடும் போக்கில் சிறப்பான இலக்கிய நடையை நாட்டார் நாடகங்களில் எதிர்பார்க்க முடியாது என்பதை உணர்த்துகிறார்.

செய்தி நிலையில் அமையும் கட்டுரைகளில் ஸி ஆர். மன்மதனின் நாடன் கலையினையும், பாஸ்கரன் தாமஸின் 'தெருக்கூத்துப் பற்றி ஆராயும் அமெரிக்கக் கலைஞர்' என்ற கட்டுரையும் குறிப்பிடத்தகுந்தவைகளாக உள்ளன. முன்னதில் கேரளத்துக் கலைகளைக் குறிப்பிடுவதாயிருந்தாலும் தமிழகத்தின் புலியாட்டத்துடன் தொடர்புபடுத்திக் கூறும் நிலையில் கடுவாக் களியினைப் புலியாட்டத்துடனும், சிலம்பாட்டத்துடனும் ஒப்பிட்டுப் பேசுவதைக் காணமுடிகிறது. ரிச்சர்டு ஆர்மெண்ட்

ஃபிராஸ்க்கா என்ற அமெரிக்க ஆய்வாளர் தெருக்கூத்தினை ஆய்வுப்பொருளாக எடுத்தது பற்றியும், ஆய்வுப்பொருளை முறைப்படி அணுக புரசை கண்ணப்ப தம்பிரானிடம் தெருக் கூத்தினைப் பயின்றுள்ள முறை பற்றியும் தெளிவாக விளக்கு வதை அடுத்த கட்டுரையிலும் காணலாம்.

## 2. இசை, நடனம்

நாட்டுப்புறக் கலைகளில் இசை, நடனம் தொடர்பான நூலோ, கட்டுரைகளோ ஆய்வு நிலையில் அமையவில்லை. செய்தி நிலையிலும் குறிப்பிடத்தகுந்த வளர்ச்சியினைக் காணமுடிய வில்லை.

மீ ப. சோமுவின் 'நாட்டுப்பாடலில் ராகங்கள்' என்ற கட்டுரை இசைத்துறை பற்றிய பிற்கால ஆய்விற்கு வழிவகுக்கக் கூடியதாய் அமையும் எனலாம். "தோடி, புன்னாகவராளி போன்ற ராகங்களுக்கு வித்தாக அமைகின்ற தோடிராகத்தின் குடும்பத்தைச் சார்ந்தது விளரிப்பண் நாட்டுப்புறமக்களின் இன்னொலியோடு நடனமாடி வந்துள்ளன"[20] என்று குறிப்பிடு கிறார். மேலும் செஞ் சுருட்டி, ஆனந்தபைரவி, கௌளி, சக்ரவாகம், ஸௌராஷ்டிரம், ஆஹரி போன்ற ராகங்கள் இவற்றின் பழமையான சுத்தமான இசைவடிவத்தில் நாட்டுப் புறப் பாடல்களில் பயின்று வருகின்றன என்று குறிப்பிடுகிறார். இது தொடர்பாக விரிந்த ஆய்வு மேற்கொள்ளப்படுமானால் இசைத் தொடர்பான செய்திகள் பல புலனாகலாம்.

## நூல்கள், கட்டுரைகள்—ஒரு பொதுநோக்கு

1. வாய்மொழி இலக்கிய வகையில் நாட்டுப்புறப்பாடல் பழமொழி, கதைப்பாடல் இரண்டும் குறிப்பிடத்தகுந்த வளர்ச்சி யினைப் பெற்றுள்ளன. இவ்வகையில் ஆய்வுக்கோட்பாடுகளைப் பயன்படுத்தி ஆராய்ந்து செல்லும் போக்கினை நாட்டுப்புறப் பாடலில் மிகுதியாக காணலாம். நாட்டுப்புறக்கதைகள், விடுகதை போன்றவைகளில் வளர்ச்சி தென்படவில்லை.

2. சமுதாயப் பழக்க வழக்கங்களை யொட்டிய வகைப் பாட்டில் விளையாட்டு முதலிடம் பெறுகிறது. சமயம், வழிபாடு, விழா திருமணம் போன்றவை வளரவேண்டிய நிலையில் உள்ளன.

3. நாட்டுப்புறக்கலைகள் தொடர்பான வளர்ச்சி பொதுவாக மிகுந்திருக்கிறது. நாடகம் தொடர்பான ஆய்வுகள் பெருகிக்

காணப்படுகின்றன. இருப்பினும் இசை, நடனம் போன்ற துறைகள் வளர வாய்ப்புண்டு.

4. புழங்குபொருளால் அறியப்படும் பண்பாடு தொடர்பான நிலையில் ஒருவகை முன்னேற்றமும் அமையவில்லை.

## வளர்ச்சிக்கான சில வழிகள்

'நாட்டுப்புறவியல்' துறை தொடர்பான ஆய்வு, களஆய்வின் அடிப்படையிலான தரவுகளைப் பொறுத்தே அமையும். எனவே களஆய்வு சிறப்பாக மேற்கொள்ளப்படவேண்டியது தேவையான ஒன்றாக அமைகிறது.

மேற்கொள்ளப்படும் களஆய்வும் முறைப்படி தகவல்களைச் சேகரிக்கும் அணுகு முறையுடன் அமைந்தாற்தான் வகைப்படுத்துவதற்கோ, ஆராய்வதற்கோ வழிவகுப்பதாய் அமையும். சில தரவுகள் இயற்கைச் சூழலில் எடுக்கப் படலாம். சில தரவுகள் தூண்டப்பட்ட இயற்கைச் சூழலில் அமையலாம். இன்னுஞ் சில தரவுகள் தூண்டப்பட்ட செயற்கைச் சூழலில்தான் சேகரிக்க முடியும்.

தகவல் கொடுப்பவரைப் பற்றிய விவரங்களைத் தவிர சமுதாயப் பின்னணியையும் ஓரளவு புரிந்துகொள்ள வேண்டிய நிலை இருக்கிறது. இந்நிலையில் உற்றுநோக்கல் (Observation), பேட்டி (Interview), வினாத்தாளில் விடைபெறுதல் (Questionnarie), குறிப்பிட்ட இனத்தவருடன் தங்கியிருந்து தரவுகள் சேகரித்தல் (Case Study) போன்ற வழிமுறைகளையெல்லாம் பின்பற்றித் தகவல்கள் சேகரிக்கப்படவேண்டும். இவைகள்தான் செய்தி அல்லது தொகுப்புநிலையில் அமையும். இவைகளைக் கொண்டு வகைப்படுத்தி, முறையான ஆய்வு மேற்கொள்ளுதல் இயலும்.

நாட்டுப்புறவியல் வகைப்பாட்டில் சிலவகைகளில் முறையான வளர்ச்சி பெருகாததற்குக் காரணம் சரியான தொகுப்புநிலை இல்லாததுதான். எனவே மேற்குறிப்பிட்டவாறு முறையான அணுகுமுறையில் தகவல்கள் சேகரிக்கப்பட்டால் ஆய்வுபெருகும் என்பதில் ஐயமில்லை.

## அடிக்குறிப்பு

1. எண்பதில் வெளிவந்துள்ள நூல்கள், கட்டுரைகள் பெரும் பாலும் தொகுக்கப்பட்டு பின்னிணைப்பில் சேர்க்கப்பட்டுள் ளன. விடுபட்டவைகளைப் பற்றித் தகவல் அறிவிப்பின் இணைத்துக் கொள்ளப்படும்.
2. தே. லூர்து, **நாட்டார் வழக்காற்றியல் ஓர் அறிமுகம்,** முதற் பதிப்பு (மேற்கோள் காட்டப்பட்டுள்ள நூல் (திருநெல்வேலி, 1978), ப. 148.
3. சு. சண்முகசுந்தரம், **நாட்டுப்புற இயல் இலக்கிய வரலாறு,** முன்னுரை (சிதம்பரம், மணிவாசகர் நூலகம், டிசம்பர், 1980)
4. மேற்படி, ப.1.
5. சு. சண்முகசுந்தரம், **தமிழில் நாட்டுப்புறப் பாடல்கள்,** (சிதம்பரம், மணிவாசகர் நூலகம், 1980, ப.45
6. வி. என். ரமேஷ், தமிழ்த் திரைப்படப் பாடல்களில் நாட்டுப் பாடல்களின் தாக்கம், **தாமரை** (இதழ்), (ஆகஸ்ட் 1980), ப. 34.
7. மேற்படி, ப. 44.
8. மேற்படி, ப. 44.
9. பீ. டாக்டர் நசீம்தீன், நாட்டுப்புறக் கதைப்பாடல்களும் சிலப்பதிகாரமும், **ஆய்வுக்கோவை** (இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 1980).
10. வசந்தவிழா, **மஞ்சரி,** (ஜுலை, 1980), ப. 18.
11. எச். கே ஐயர், காகம் காட்டும் சில குறிகள், **பால சோதிடம்** (1-3-1980), ப.15.
12. டி. எம். காளியப்பா, கொங்கு நாட்டில் பூதவழிபாடு, **தினமணிச்சுடர்,** (3.8.80), ப. 8
13. என். அசோகன், கால்நடைப் பந்தயம் **மஞ்சரி** (இதழ், மார்ச், 1980), ப. 27.
14. "The African Baandus might have introduced their game to the Tamils. That is why, this game in Tamil Nadu has named after them as Baandu aattam. Which means

game of Baantus''.

—K. P. Aravanan, Pallankuzhi (Board game in Tamil nadu (India) and Africa, **Anthropological studies on the dravido africans**, (Madras, Paari Nilayam, 1980), P. 114.

15. அ. அறிவுநம்பி, **கூத்தும் சிலம்பும்**, காரைக்குடி, (அறவகம்—1980), ப. 15'.

16. பி. புஷ்பா, '**கீர்த்தனை நாடகங்கள்** (மதுரை, முத்துப் பதிப்பகம், ஆழ்வார் நகர், ஜுன் 1980 ) ப.99.

17. ஏ. என். பெருமாள், **குளுவ நாடகம்**, சென்னை (உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1980)), ப. 48.

18. சு. வேங்கடராமன், தெருக்கூத்தும் குறவஞ்சியும் (இந்திய பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், **ஆய்வுக்கோவை**, 1980), ப. 301.

19. ஏ. என். பெருமாள், நாட்டார் நாடகங்கள், **தமிழ் இலக்கியக் கொள்கை** 5, பதிப்பாசிரியர்கள் ச. வே. சுப்பிரமணியன், அன்னிதாமசு (சென்னை. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1980), ப 285.

20. மீ.ப. சோமு, நாட்டுப்பாடலில் ராகங்கள், **நமது செல்வம்** (சென்னை, வானதி பதிப்பகம், டிசம்பர், 1980), ப.58.

## பின்னிணைப்பு

**எண்பதில் நாட்டுப்புற இயல்—நூல்—கட்டுரை அடைவு**

I. **வாய்மொழி இலக்கியம்**

**நாட்டுப்புறப்பாடல்**

**அ. நூல்கள்**

சண்முகசுந்தரம், சு. நாட்டுப்புற இலக்கிய வரலாறு, (மணிவாசகர் நூலகம், சிதம்பரம்), டிசம்பர், 1980.

சண்முகசுந்தரம், சு. தமிழில் நாட்டுப்புறப் பாடல்கள், (மணிவாசகர் நூலகம், சிதம்பரம்), 1980.

முகம்மது அலி ஜின்னா, கண்ணீர் வயல்கள், (சென்னை, சாரதி பதிப்பகம்) 1930.

ஆ. கட்டுரைகள்

சஞ்சீவி. ந., பழங்குடி மக்கள் இலக்கியம், **தாமரை** (இத.), (ஜூலை, 1980).

சிவசுப்பிரமணியம், ஆ., ஆலைத் தொழிலாளர்களின் நாட்டார் பாடல்கள், **தாமரை** (இத.), (நவம்பர், 1980).

நிர்மலாபாய், ஜே., குமரிமாவட்ட அம்பாப் பாடல் காட்டும் சமுதாயம், **புலமை** (இத.) (டிசம்பர், 1980).

பிச்சைப்பிள்ளை, சாமி., சொல்லாய்வு, **ஆய்வுக்கோவை**, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், (1980).

புஷ்பா, பி., தாலாட்டில் கதைகள், **தாமரை** (இத ), (டிசம்பர், 1980).

புஷ்பா, பி., வாய்மொழி இலக்கியத்தின் தனிப்பண்பு, **ஆய்வுக் கோவை**, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், (1980).

ரமேஷ், வி என் , தமிழ்த் திரைப்படப் பாடல்களில் நாட்டுப் பாடல்களின் தாக்கம், **தாமரை**, (இத.), (ஆகஸ்ட், 1980).

வளவன், சா , நாட்டுப்புறப் பாடல்களில் அங்கதம், **ஆய்வுக் கோவை**, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், (1980).

Nirmala Bai,J ,The Language Peculiarites in Kanyakumari District folk Songs, **ஆய்வுக்கோவை**, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், (1980).

Nirmala Bai, J., Socio-psychological Background of a Tamil folk song, **papers on Tamil studies**, S.V. Subramanian, V. Murugan (Madras, International Institute of Tamil Studies. Adyaru, December, 1980).

Nirmala Bai, J., Tamil folk songs, **News Wind**, (November, 1980).

2. பழமொழி

ஆ. கட்டுரைகள்

அநுபவம் பேசுகிறது, மஞ்சரி (இத ), (ஏப்ரல், 1980).

செயராமன், ந வீ., உழவுப்பழமொழி, **தமிழரசு**, (இத.), (மே, 1980).

மதிவாணன், இரா., மலையாளப் பழமொழிகள், **செந்தமிழ்ச் செல்வி** (இத.), (ஆகஸ்டு, 1980).

தெலுங்குப் பழமொழிகள், **செந்தமிழ்ச்செல்வி** (இத.), (மார்ச்சு, 1980).

Perumal, V., Classification of Tamil proverbs on Tier basis, **ஆய்வுக்கோவை**, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், (1980).

Santhi, G., Proverbs A brieg sketch, **ஆய்வுக்கோவை**, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், (1980).

### 3. கதைப்பாடல்

#### ஆ. கட்டுரைகள்

நசீம்தீன், பீ., நாட்டுப்புறக் கதைப்பாடல்களும் சிலப்பதி காரமும், **ஆய்வுக்கோவை** இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், (1980).

நடராஜன், சு., நாட்டுப்புறக் கதைப்பாடல்களில் துன்பியல் மகளிர், **ஆய்வுக்கோவை**, இந்தியப் பல்லைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், (1980).

மீரான்பிள்ளை, எம். எம். இஸ்லாமியத் தமிழில் நாட்டுப்புற வியல் கூறுகள், **ஆய்வுக்கோவை**, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், (1980).

கமலையா, க. சி., **இராமப்பய்யன் அம்மானை ஓர் ஆராய்ச்சி**, (சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், பிப்ரவரி, 1980).

பகவதி காளிமுத்து, நளனம்மானையில் சில சிறப்பியல்புகள், **ஆய்வுக்கோவை**, இந்தியப் பல்கலைக்கழகத்தமிழாசிரியர் மன்றம், (1980).

### 4. கதை

#### அ. நூல்

குருமூர்த்தி, கி., குழந்தைகளுக்கான **ஆசிய நாடோடிக் கதைகள்**, பகுதி-1 (இந்திய நேஷனல் புக் டிரஸ்ட், புதுடில்லி, 1980).

## II. புழங்கு பொருளால் அறியப்படும் பண்பாடு பற்றியவை.

## III. சமுதாயப் பழக்க வழக்கங்கள் தொடர்பானவை.

#### அ. நூல்

பாலசுப்பிரமணியம், இரா., **தமிழர் நாட்டு விளையாட்டுகள்**, (சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, அக்டோபர், 1980).

Arunachalam, M., Festivals of Tamil Nadu, (Gandhi (Vidyalayam, Tiruchitrambalam, 1980).

ஆ. கட்டுரைகள்

1. விழா

சோமு, மீ. ப., சமுதாய விழாக்கள், **நமது செல்வம்,** (சென்னை, வானதி பதிப்பகம், டிசம்பர், 1980).

சோமு. மீ. ப.,வசந்தவிழா, **மஞ்சரி,** (ஜூன், 1980).

2. சமயம்—வழிபாடு

காளியப்பா, டி., எம். கொங்குநாட்டில் பூதவழிபாடு, **தினமணிச்சுடர்,** (3-8-1980).

3. நம்பிக்கை

ஐயர், எச். கே., மனித வாழ்க்கையில் காகத்தின் குரல், **பால சோதிடம்** (15-4-1980).

ஐயர், எச். கே., காகம் காட்டும் சில குறிகள், **பால சோதிடம்** (1-3-1980).

மோகன்ராம், ஏ.,இந்தியப் பழங்குடிகளின் சில நம்பிக்கைகள், **கலைக்கதிர்,** (ஆகஸ்டு, 1980).

4. திருமணம்

வனிதா, துளுமக்கள் திருமணம், **மஞ்சரி** (பிப்ரவரி, 1980).

5. விளையாட்டு

அசோகன், என்., கால்நடைப் பந்தயம், **மஞ்சரி** (மார்ச், 1980)

நவராஜ் செல்லையா, கயிறு இழுக்கும் போட்டியின் கதை, **தினமணிச்சுடர்** (28-9-1980).

நவராஜ் செல்லையா,கண்ணாமூச்சி ஆட்டம்,**தினமணிச்சுடர்,** (26-10-1980).

பாலசுப்பிரமணியம், இரா., பண்டைத் தமிழ்ச் சிறுவர் விளையாட்டுகள், **செந்தமிழ்ச் செல்வி** (மே, 1980).

Aravanan,K. P., Pallankuzhi (Board Game) in TamilNadu (India) and Africa, Anthropological studies on the dravido-africans, (Madras, Tamil kottam, September, 1980).

Balasubramaniam, R., Callikkattu, papers on Tamil Studies, edi S. V. Subramanian, V. Murugan, (Madras, International Institute of Tamil Studies, December, 1980).

6. பிற

சரசுவதி, ஆர்., வகை வகையான வண்ணக்கோலங்கள், **கலைமகள்**, (சூன், 1980).

IV. **நாட்டுப்புறக் கலைகள்**

**பொதுவானவை**

அ. நூல்

பெருமாள், ஏ., என். தமிழக நாட்டுப்புறக்கலைகள், (சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், டிசம்பர், 1980).

ஆ. கட்டுரை

சோமு, மீ. ப., சிறிய பெரிய கலைகள், **நமது செல்வம்**, (சென்னை, வானதி பதிப்பகம், டிசம்பர், 1980).

கிராமத்துக் கலைகள், **நமது செல்வம்**, வானதி பதிப்பகம், (சென்னை, டிசம்பர், 1980).

பெருமாள், ஏ. என்., தமிழகத்தின் நாட்டுப்புறக்கலைகள்-1, **தமிழரசு** (மே, 16-5-1980).

தமிழகத்தின் நாட்டுப்புறக் கலைகள்-2, **தமிழரசு** (சூன், 1-6-1980).

தமிழகத்தின் நாட்டுப்புறக் கலைகள்-3, **தமிழரசு** (சூலை, 1-7-1980).

தமிழகத்தின் கிராமப்புறகலைகள்-4, **தமிழரசு** (ஆகஸ்டு, 1-8-1980).

தமிழகத்தின் நாட்டுப்புறக் கலைகள்-5, **தமிழரசு** (ஆகஸ்டு, 16-8-1980).

தமிழகத்தின் நாட்டுப்புறக் கலைகள்-6, **தமிழரசு** (செப்டம்பர், 1-9-1980).

தமிழகத்தின் நாட்டுப்புறக் கலைகள்-7, **தமிழரசு** (செப்டம்பர், 1-9-1980).

பெரியசாமி தூரன், ம. ப., பாரதியும் நாட்டுப்புறக் கலைகளும், **தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம் வெள்ளிவிழா மலர்** (1980).

மன்மதன், ஸி. ஆர்., நாடன்கலை, மஞ்சரி (ஏப்ரல், 1980).

நாடகம்

அ. நூல்

அறிவு நம்பி, அ., கூத்தும் சிலம்பும், (காரைக்குடி, அறிவகம்-2ஆம் தெரு, திருவள்ளுவர் திருநகர், ஏப்ரல், 1980).

புஷ்பா, பி., தமிழில் கீர்த்தனை நாடகங்கள்,(மதுரை, முத்துப் பதிப்பகம், சூன், 1980).

ஆ. கட்டுரை

அறிவுநம்பி, அ , தெருக்கூத்துக்கதைகளின்பெயர்கள்,இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை, (1980).

சீனிவாசன், இராம., நாடக வளர்ச்சி, தினமணிச்சுடர், (சூலை, 6-7-1980).

பாஸ்கரன் தாமஸ், தெருக்கூத்துப் பற்றி ஆராயும் அமெரிக்கக் கலைஞர், தினமணி, (12-10-1980).

பெருமாள்,ஏ. என்., நாட்டார் நாடகங்கள், தமிழ் இலக்கியக் கொள்கை, பதிப்பாசிரியர்கள் ச. வே. சுப்பிரமணியன், அன்னிதாமசு (சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சூன், 1980).

பெருமாள், ஏ. என் . தெருக்கூத்து மரபுகள்,தமிழ்நாடு இயல், இசை, நாடக மன்றம் வெள்ளிவிழா மலர், (1980).

வேங்க ராமன், சு., தெருக்கூத்தும் குறவஞ்சியும், இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை, (1980).

Perumal, A. N., Kuḷuva Nāṭakam, இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், ஆய்வுக்கோவை, (1980).

நடனம்

ஆ. கட்டுரை

ரமணி, எஸ். வி., துள்ளல் நடனம், கலைமகள் (இதழ்), மே, 1980.

இசை

ஆ. கட்டுரை

சோமு, மீ. ப , நாட்டுப்பாடலில் ராகங்கள், நமது செல்வம், (சென்னை, வானதி பதிப்பகம், டிசம்பர், 1980).

## V. நாட்டுப்புறவியல் — பொது

### அ. நூல்

சோமலெ, *மதுரை மாவட்டம்,* (வேதாரண்யம் கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம், குருகுலம் பிரிண்டர்ஸ், டிசம்பர், 1980).

### ஆ. கட்டுரை

சரோஜா மேரி, *நாட்டுப்புறக் கலைச்சொற்கள்,* இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், **ஆய்வுக்கோவை,** ( 980).

Santhi, G., Classification in Tamil Folklore, **Folklore,** (1980).

# பேச்சுமொழி ஆய்வு

கே. எம். இருளப்பன்

## 1. முன்னுரை

மனிதனிடமிருந்து பிரிக்கமுடியாத அளவிற்குப் பின்னிப் பிணைந்த நிலையில் 'மொழி' விளங்குகின்றது. 'மொழி' என்பதொன்றில்லையெனில் மனிதனின் சிந்தனை,எண்ணம், பண்பாடு, நாகரிகம் ஆகிய எவையும் வளர வழியே இல்லாது போயிருக்கும். இத்தனைச் சிறப்புக் கூறுகளால்தான் ''மனிதனை மனிதனாக்குவது மொழியே'' என்னும் உண்மைக் கருத்தினை இக்கால மொழியியலார் கொண்டிருக்கின்றனர். மொழிக்கு அடிப்படை பேச்சும் ஒலியும்தான். ''பேச்சுமொழி''யின் வளர்ந்த நிலையே ''எழுத்து மொழி''யாகும். எழுத்து வடிவம் அன்றிப் பேச்சு நிலையிலேயே இன்றும் பல மொழிகள் தமிழகத்தின் நீலகிரி மலைப்பகுதிவாழ் மக்களிடையே காணப்படுகின்றன. எழுத்து வழக்கு அற்ற நிலையிலும் தங்கள் பண்பாட்டை உயர்த்திக்காட்ட அவர்கள் தவறியதில்லை. வரலாற்று மாற்றங்களால் பேச்சு வழக்கிழந்து எழுத்து வடிவங்களால் மட்டும் எழுதப் பெற்றுவரும் மொழிகளும் சில உள்ளன. இலத்தீன், கிரேக்கம், சம்ஸ்கிருதம் ஆகியவை இவ்வகையின. ''வழக்கிழந்த மொழிகள்'' என்று இவை மொழியியலாரால் அழைக்கப் பெறுகின்றன. பேச்சுமொழியையும் எழுத்துமொழியையும் காலத்தால் ஒப்பிடுகையில் பேச்சுமொழியே ''முந்தியது'' என்பது யாவரும் அறிந்த ஒன்றாகும். பேச்சு மொழியே எழுத்து மொழிக்கு அடிப்படை.

பேச்சு மொழிக்கென்று சில தனிச் சிறப்பியல்புகள் உள்ளன. ஒரு மொழி பல மாநிலங்களிலும் பல நாடுகளிலும் பேசப்படலாம்.

தமிழகத்திலும், ஈழம், மலேயா, சிங்கப்பூர் போன்ற பலநாடுகளி லும் வாழும் பலரது தாய்மொழி ''தமிழ்மொழி'' ஆகும். நாம் அனைவரும் ஒரே எழுத்துவடிவ முறையினால் நமது தாய்மொழி யாம் தமிழ்மொழியை எழுதிவருகின்ற பொழுதிலும், நமது பேச்சு வழக்கில் நாட்டுக்கு நாடு வீட்டுக்கு வீடு வேறுபாடு காணப் படுகின்றது. குமரிமுனைப் பகுதிப் பேச்சுவழக்கினைப்போன்று, கோவையிலோ சென்னையிலோ பேசப்படவில்லை. ஓர் அரசியல்வாதியின் பேச்சு வீட்டில் அமைவதுபோன்று மேடையில் முழங்கப்படுவதில்லை. பிராமணரைப்போன்று செட்டியாரும் பேச வில்லை, நாடாரும் பேசவில்லை, மற்ற சாதியினரும் பேசவில்லை. பேச்சுமொழிக்குள் இவ்வளவு வேறுபாடுகள் இருப்பதனாற்தான், எழுத்துமொழியினின்று இது பல வகைகளில் வேறுபட்ட போதிலும், இதற்கெனத் தனி வரிவடிவம் கொடுப்பதில் பல குழப்பங்களும் தொல்லைகளும் காணப்படுகின்றன. இதுபோன்ற பல அடிப்படை வேறுபாடுகளால்தான், பேச்சுமொழி ஆய்வும் எழுத்துமொழி ஆய்வும் வேறுபடுத்தப்பெற்ற தனித்தனி நோக்குகளில் நடத்தப்பெற்றிருக்கின்றன. தமிழ்மொழியியல் ஆய்வு வரலாற்றிலும் இதுபோன்ற நிலையே காணப்படுகின்றது

## 2. பேச்சுமொழி—ஆய்வுப் பாகுபாடுகள்

### 2.1. கிளைமொழி ஆய்வு

கிளைமொழி ஆய்வில் பல பிரிவுகள் உள்ளன. கிளைமொழி கள் வழங்கப்பெறும் இடம்பற்றிய ஆய்வு **வட்டாரக் கிளைமொழி** (Regional Dialect) என்றும், பேசுவோரின் சமூக நிலை பற்றிய ஆய்வு **சமூகக்கிளைமொழி** (Social Dialect) என்றும், சாதிப் பாகுபாட்டைப் பற்றியது **சாதிக் கிளைமொழி** (Caste Dialect) என்றும் காலம் பற்றியது **காலக்கிளை மொழி** (Temporal Dialect) என்றும் அதிலும் ஒத்தகாலம் பற்றியது **ஒத்தகாலக் கிளைமொழி** (Contemporary Dialect) என்றும் தொழில் அடிப்படையில் அமையப்பெறுவது **தொழில் பேச்சு நடை** (Register) என்றும் மொழியியலார் வழங்குகின்றனர்.

கிளைமொழி ஆய்வு சங்க காலந்தொட்டே இருந்தது என்ப தற்குப் பல சான்றுகளைக் கூறலாம். தொல்காப்பியனாரின் ''திசைச் சொல்''[1] என்னும் சொல்லாட்சி கிளைமொழிகளை, அதிலும் குறிப்பாக வட்டாரக் கிளைமொழிகளைக் குறிக்கின்றது.

தொல்காப்பியனார் பன்னிரண்டு[2] வட்டாரக் கிளைமொழிகளைக் குறிக்கின்றார். ஆயினும் உரையாசிரியர்கள் செந்தமிழுடன் கொடுந்தமிழ், சான்றோர் வழக்கு, குழூஉக்குறி, தொழில் வழக்கு எனப் பல நிலைகளில் பேச்சுமொழியினை எடுத்தாளுகின்றனர்.[3]

பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் ஆயிரத்துத்தொள்ளா யிரத்துப்பத்தில் சூல்சு பிளாக் (Jules Bloch) என்பவர் சாதிக் கிளைமொழிகளைப்பற்றி விளக்கியுள்ளார். இவரது ஆய்வுகளைத் தொடர்ந்து தமிழ்க் கிளைமொழிகளைப் பற்றிய விரிந்த ஆய்வு கமில் சுவலபில் (Kamil Zvelebil) என்னும் மொழியியலறிஞரால் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்தொன்பதிலிருந்து அறுபத் தாறுவரை மேற்கொள்ளப் பெற்றது. மொழியியலின் வளர்ச்சிநிலை யில் சேதுப்பிள்ளை (1949), வில்லியம்பிரைட்-இராமானுசம் (1961-1962), தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் (1964), அகத்தியலிங்கம் (1967 1971), முத்துச்சண்முகம் (1962, 1968) செ.வை. சண்முகம் (1971) கருணாகரன் (1977), சீனிவாசவர்மா (1977) ஆகியோர் நடத் திய விரிவான தமிழ்க் கிளைமொழிகள் ஆய்வு இங்குக் குறிப்பிடற் பாலது. ஈழநாட்டில் வழங்கப்பெறும் பேச்சுத்தமிழைக் கணபதி பிள்ளை (1958), தனஞ்செய ராசசிங்கம் (1962), குயிப்பர் (1962), சுரேந்திர ராசா (1963) ஆகியோர் சிறப்புற ஆய்ந்துள்ளனர்.

## 2.2. இருமொழி வழக்கு

மொழிகளைப் பயன்படுத்துவோரை 1. **ஒருமொழியாளர்** (Monolinguals) 2. **இருமொழியாளர்** (Bilinguals) 3. **பன்மொழியாளர்** (Multilinguals) என மூவகையாகப் பிரிக்கலாம். இவர்கள் முறையே ஒருமொழியை, இருமொழிகளை, பலமொழி களைத் தாய்மொழிகளாகக் கொண்டவர்கள். தமிழைத் தாய் மொழியாகக் கொண்டவர்களது பேச்சு வழக்கிற்கும், தமிழை யறிந்த பிறிதொருமொழியைத் தாய்மொழியாகக்கொண்டோரது தமிழ்ப் பேச்சு வழக்கிற்கும் பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. **இருமொழி உறவு** (bilingual contact) மூலம் இவ்வேறுபாடுகள் உண்டாகின்றன என்று இக்கால மொழியியலறிஞர்கள் "மொழி யியல் இடையீட்டுக் கொள்கை"யின் (Linguistic Interference Phenomenon) மூலம் விளக்குகின்றனர். இருமொழி வழக்கு நிலையினால் ஏற்படும் மொழியியல் இடையீடுகளால் "மொழி மாறும் இயல்பு" (Code-Switching Behaviour) உருவாகின்றது.

மேலை நாடுகளில் இத்துறையில் விரிவான பல ஆய்வுகள் முன்பே நடத்தப் பெற்றிருந்தும், தமிழ்மொழியின் இருமொழி வழக்கு நிலை ஆய்வுகள் தற்காலத்தில்தான் விரிவாக மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

## 2.3. மொழியின் இருநிலைத் தன்மை

ஒரு மொழியின் "இருநிலைத் தன்மை" (Diglossia) என்பது, அம்மொழியின் பேச்சு வழக்கிற்கும் (Spoken variety) எழுத்து வழக்கிற்கும் (Writhen variety) இடையே மிகுதியாக வேறுபாடுகள் ஏற்பட்டு, இவ்விரு வழக்குகளும் வெவ்வேறு நிலைகளில் வேறுபட்ட பண்புகளுடன் செயல்படுகின்ற தன்மையைக் குறிக்கும். உலகில் பலமொழிகள் குறிப்பாகத் தமிழ்மொழி இத்தன்மையது. மொழியின் இருநிலைத் தன்மையினால் தமிழ்ப் பேச்சுமொழி வழக்கிற்கும் எழுத்துமொழி வழக்கிற்கும் அதிகஅளவில் வேறுபாடுகள் காணப்படுவதால் தற்காலப் பேச்சுமொழியியல் அறிஞர்கள் இவ்விரு நிலைகளையும் வேறுபடுத்திப் பரந்த ஆய்வுரைகளை மேற்கொண்டு வருகின்றனர். பெர்கூசான் (Ferguson) என்னும் மேலைநாட்டு மொழியியல் பேரறிஞர்களால் இக்கொள்கை மொழியியலுலகில் முதலில் புகுத்தப்பெற்று, இன்று தமிழியல் அறிஞர்களான முத்துச்சண்முகம், செ. வை. சண்முகம், கருணாகரன், ஞானசுந்தரம் ஆகியோரால் விரிவான ஆய்வுரை நடத்தப் பெற்று வருகின்றது.

## 2.4. நடையியல்

பேச்சுமொழி வழக்கிற்கும் எழுத்துமொழி வழக்கிற்குமிடையே பல வேறுபாடுகள் உள்ளன என்பதை மொழியின் இருநிலைத் தன்மை விளக்குகின்றது. பேச்சுமொழிக்குள்ளேயே பல உட்கிளை மொழிகள் இருப்பதைப் பேச்சுமொழியின் கிளைமொழி ஆய்வு தெளிவுபடுத்தும். பேச்சுமொழியில் பல்வேறு நடை (Style) வேறுபாடுகள் உள்ளன என்பதை நடையியல் (Stylistics) விரிவாக எடுத்துரைக்கின்றது. வழங்கப்பெறும் இடத்திற்கு ஏற்பவும், பேசுவோரின் சமுதாயப் பின்னணிகளுக்கு ஏற்பவும் பேச்சுமொழியின் அமைப்பு மாற்றம் பெறுகின்றது. இவைபோன்ற பேச்சுமொழி வேறுபாடுகள் **மொழி நடைகள்** (Styles) எனப் பெறும். ஒரு குறிப்பிட்ட சமுதாயப் பின்னணியைச் சார்ந்தோருடைய பேச்சு நடை, தன் குடும்பத்தினருடன் பேசும்பொழுதும், தன் நண்பர்களுடன் பேசும்பொழுதும், அரசியல்வாதியாக இருப்பின் அரசியல் மேடைகளில் பேசும் பொழுதும், ஆசிரியராக

இருப்பின் வகுப்பறைகளில் பாடம் கற்பிக்கும் பொழுதும் அதிக அளவில் வேறுபட்டுக் காணப்படுகின்றது. இதுபோன்று தனி மனிதனுக்குள் வழங்கப்பெறும் பேச்சுமொழி வேறுபாடுகளைச் சபீர் (Sapir) என்னும் மேலைநாட்டு மொழியியலறிஞர் எடுத்துக் கூறியுள்ளார். இவருக்குப் பின்பு ஆய்வு நடத்தியவர்களும் இக்கருத்தையே வலியுறுத்தி, சமூகச் சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல் மனிதனின் பேச்சு வழக்குகளில் மாற்றங்கள் நிகழ்வதாகக் கூறுகின்றனர். பேச்சு மொழி நடைகள், பலவாறாகப் பாகுபடுத்தப் பட்டிருப்பினும் **பொதுப்பேச்சு நடை** (Casual speech-Informal style) **சிறப்புப் பேச்சு நடை** (Careful speech-Formal style)என இருமைப்படுத்திச் சிறப்பாகக் கையாளப் பெறுகின்றன.

### 2.5. மனப்பாங்கு

மொழி வழக்குகளில் வேறுபாடுகள் காணப்படுவதே, மொழியைப் பயன்படுத்துவோருக்குக் கிளைமொழிகளின்பால் தோன்றும் வேறுபட்ட மனப்பாங்குகளினால்தான் என்று மொழியியல் ஆய்வுகள் உறுதிப்படுத்துகின்றன. ஒருவரது மனப்பாங்கு ஒரு குறிப்பிட்ட கிளைமொழியை விரும்பும்பொழுது அக்கிளைமொழியின் தாக்கம் அவரது மொழி வழக்குகளிலும் காணப்பெறுகின்றது என்னும் கொள்கையினை அடிப்படையாகக் கொண்டே **மொழியியல் மனப்பாங்கு** (Linguistic Attitude) ஆய்வுகள் மேற்கொள்ளப்பெற்று வருகின்றன. மனப்பாங்கு வேறுபாடுகளையும் அவற்றின் தாக்கங்களினால் ஏற்படும் மொழியியல் வேறுபாடுகளையும் ஒப்புமைப்படுத்தும் ஆய்வுகள் இன்றைய மொழியியலாய்வுலகில் மிகுதி.

## 3. எண்பதில் தமிழ்ப் பேச்சுமொழி ஆய்வு

பேச்சுமொழி ஆய்வு இன்று வளர்ந்த நிலையை அடைந்துள்ளது. உலக அரங்கில் தமிழ்ப் பேச்சுமொழியில் நடத்தப்பெறும் ஆய்வு முடிவுகளுக்கு என்றும் சிறந்த வரவேற்பும் மதிப்பும் இருக்கின்றன. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதாம் ஆண்டைத் தமிழ்ப் பேச்சுமொழி ஆய்வின் பொற்காலம் எனவும் குறிப்பிடலாம். இவ்வாண்டில், பேச்சுமொழியின் பல்வேறு துறைகளை விரிவாக ஆராய்ந்து பல அரிய கருத்துகளை உலகமொழியியல் அறிஞர்களுக்குத் தமிழ்ப் பேச்சுமொழி ஆய்வாளர்கள் வழங்கியுள்ளனர். இந்த ஆண்டில் மட்டும் தமிழ்ப் பேச்சுமொழி பற்றி

ஆராயப்பெற்று வெளியிடப்பெற்றுள்ள கட்டுரைகளின் எண்ணிக்கை இருபத்தொன்பது ஆகும். இக்கட்டுரைகள் பல்வேறு ஆய்வுத்துறைகளின் கீழ் பிரிக்கப்பெற்று இக்கட்டுரையில் விளக்கப் பெற்றுள்ளன.

## 3.1. எண்பதில் தமிழ்க் கிளைமொழியியல் ஆய்வு

### 3.1.1. வட்டாரக் கிளைமொழியியல்

#### 1. கல்வராயன் கிளைமொழியில் உறவுமுறைப் பெயர்கள்

— அண்ணாதுரை

தமிழகத்தில் தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ள கல்வராயன் மலைப் பகுதியில் வாழும் முப்பதாயிரத்திற்கும் மேற்பட்ட மலைவாழ் மக்களது பேச்சுத்தமிழை இக்கட்டுரை ஆய்ந்தளிக்கின்றது. இம்மலை வாழ் மக்களை ''மலையாளி'' என்றழைப்பதால் இவர்கள் பேச்சுமொழியை ''மலையாளிக் கிளைமொழி'' என்றும் வழங்கலாம் இவர்கள் பதினான்காம் நூற்றாண்டில் காஞ்சிப் பகுதியினின்று இம்மலைக்குக் குடியேறித் தனிச்சமூகமாக வாழ்ந்து வருகின்றனர். இவர்களது சமுதாயப் பழக்கவழக்கங்கள் மற்ற தமிழ்ப் பெருங்குடி மக்களிடமிருந்து பெரிதும் வேறுபட்டுக் காணப்படுகின்றன. இவர்கள் பல மனைவியர்களை மணம் புரிந்து கொள்ளும் வழக்கத்தினர் இக்கட்டுரையில் அவர்களது பொதுவான பேச்சுமொழி விவரிக்கப்பட்டு, அவர்களால் பயன்படுத்தப் பெறும் உறவுமுறைப் பெயர்களின் சொல்லாட்சி சிறப்பாக ஆராய்ந்தளிக்கப் பெற்றுள்ளது. அண்ணனை **அண்ணப்பியா** என்றும், தம்பியைக் **கனிப்பியா** என்றும், அக்காளை **அக்கப்பிளா** அல்லது **இட்டப்பிளா** என்றும், தங்கையைத் **தங்கப்பிளா** என்றும்' மனைவியை **புலெ** என்றும் அழைக்கும் பேச்சுவழக்கினை உடையவர்கள் இக்கல்வராயன் மலையாளியினர். **பொண்டோலெ** என்பது பெண்டிரையும், **ஆலெ** என்பது ஆடவரையும், **கேலா** என்பது சமவயதினரையும் குறிக்கும் இப்பகுதிச் சிறப்புச் சொற்கள் ஆகும். என் அம்மா என்பதை **எம்மெ** என்றும், உன் அம்மா என்பதை **உம்மெ** என்றும், என் அண்ணன் என்பதை **எண்ணென்** என்றும், உன் அண்ணன் என்பதை **உண்ணெ** என்றும் வழங்கி, பிற வட்டாரத் தமிழ்ப் பேச்சு வழக்கினின்று வேறுபடுகின்றனர்.

#### 2. அடுக்குத்தொடர்

பி. மு. அசுமல்கான்

சங்கிலிக்குளம் பகுதியில் வாழும் பிரமலைக் கள்ளர்களது பேச்சுத்தமிழைச் சிறப்பாக ஆய்ந்துரைக்கின்றது. அடுக்குத்

தொடர், முழுமை அடுக்குத் தொடர் (Complete re-duplication), பகுதி அடுக்குத்தொடர் (partial re-duplication) என இரு வகையாகப் பிரிக்கப் பெற்றுள்ளது. இலக்கணத் தன்மையின் அடிப்படையில் முழுமை அடுக்குத்தொடர் மேலும் இருசிறு உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பெற்று ஒத்த இலக்கணத் தன்மையுடையன (Identical grammatical status) ஒவ்வா இலக்கணத்தன்மையுடையன (Non-identical grammatical status) என்னும் நிலைகளில் ஆராயப் பெற்றுள்ளது. முழுமை ஒத்த அடுக்குத்தொடராக "நவ்வு நவ்வு (இரவு இரவு), யாரு யாரு, புதுபுது, போ போ, லெர்சா லெர்சா (விரைவாக), சீ சீ" ஆகிய தொடர்களும், முழுமை ஒல்லா அடுக்குத்தொடராக "வீட்டுக்கு வீடு, ஒண்ணுக்குள்ளே ஒண்ணு, அஞ்சே அஞ்சு, பலர்மேடொ பவர்மெ (பவுர்ணமியுடன் பவுர்ணமி), கட்டுக்கட்டான, வாச்சி வாச்சி மாரி, ஆளு ஆளா" ஆகிய தொடர்களும், பகுதி அடுக்குத்தொடராக "எப்பெப்ப, புத்தப்புது, ஒவ்வொருத்தி, பட்டப்பகலு, சனம்கினம்" ஆகிய தொடர்களும் பிரமலைக்கள்ளர் பேச்சுவழக்கில் வழங்கப் பெறுவதாக, எடுத்தாராயப் பெற்று அவற்றின் இலக்கண முறைமைகளின்படி இக்கட்டுரையில் விளக்கப் பெற்றுள்ளன.

3. தமிழ்க்கிளைமொழிகளில் கால உருபுகள்

சீனிவாச வர்மா

தமிழ்க் கிளைமொழிகளில் வழங்கப் பெற்றுவரும் கால உருபுகளை இக்கட்டுரை தெளிவாக விளக்குகின்றது. இறந்தகாலக் கூறுகளில் பல ஒலி மாற்றங்கள் காணப்படுகின்றமையும், காலக் கூறுகளும் சுட்டுப்பெயர் விகுதிகளும் இரண்டறக் கலந்துள்ளமையும் விளக்கப்பெற்றுள்ளன. "த், த்த், ந்த், ன், ச்ச்" முதலிய உருபுகளின் ஆட்சியும், "ச்சி" என்னும் உருபில் அஃறிணை விகுதியும் இறந்தகால இடைநிலையும் இணைந்துள்ளமையும் எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. நிகழ்கால உருபாக "க்க்ற், க்ற், க்க், க், ற், த்" என்பன போன்ற பல உருபுகள் பேச்சு வழக்கில் கையாளப்படுகின்றன. பிராமணர்களுடைய கிளைமொழியின் அஃறிணை வழக்குகளில் நிகழ்கால உருபாக 'ற்' பயன்படுத்தப் பெற்று "ஓடுறது, போறது"போன்று வழங்கப்படுகின்றன. ஆனால் பிராமணரல்லாதோருடைய கிளைமொழிகளில் நிகழ்கால உருபே இல்லாமல் "ஓடுது, போவுது" போன்றவை வழக்கிலுள்ளன. திருநெல்வேலிப் பகுதியில் "த்"நிகழ்கால உருபாகப் பயன்படுத்தப் பெற்று "அழுதான், வருதான்" என்பன வழக்கிலுள்ளன. பேச்சுத்

தமிழின் வருங்கால உருபுகளை "1. ப்¦வ் உம்,2. ப்¦வ்-க்குவ், உம்" என இருவகைப் படுத்தலாம். தருமபுரி, பச்சைமலை ஆகிய மேற்குத் தமிழகப் பகுதிகளில் "க்குவ்" என்னும் உருபு வருங்கால இடைநிலையாகப் பயன்படுத்தப்பெற்று "பாக்குவேன், கேக்குவேன்" போன்றவை வழக்கிலுள்ளன.

## 4. பச்சைமலை கிளைமொழிப்பகுதி

**மகேசுவரன்**

திருச்சிக்கு வடக்கில் மூவாயிரம் அடிகள் உயரத்தில் அமைந்துள்ள தென்புறநாடு, வந்தநாடு, ஆதிநாடு ஆகிய முப்பகுதிகளடங்கியது பச்சைமலை. திருச்சிவாழ் மக்களது பேச்சுத் தமிழிற்கும் இம்மலைவாழ் மக்களது பேச்சுத்தமிழிற்கும் உள்ள பலவேறுபாடுகளை இக்கட்டுரை விளக்கிக் காட்டுகின்றது. கடிகாரத்தைக் **கிடிகாரம்** எனவும், வெற்றிலையை **மெத்தலே** எனவும், நிழலை **நெக** எனவும் வழங்கும் பழக்கமுடையவர்கள் இம்மலைவாழ் மக்கள். அவர்களை **அய்யே** என்றும், இவர்களை **ஈயெ** என்றும் வழங்கும் இவர்கள், கொஞ்சு என்பதை **கொனாடு** என்றும், கோமணத்தைத் **தாசீலெ** என்றும், மானைக் **கேலே** என்றும் வழங்குகின்றனர். இவை தவிர, இம்மலைவாழ் மக்கள் மேலும் பல கிளைமொழிச் சிறப்புச் சொற்களைப் பயன்படுத்தி மற்ற கிளைமொழி வழக்குகளின்று வேறுபட்டு வழங்குகின்றனர்.

## 5. படு-எனும் துணை வினை

**சி. சண்முகம்**

குமரிமுனைப் பகுதிப் பேச்சுத்தமிழ் வழக்கிற்கும் எழுத்துத் தமிழ் வழக்கிற்குமிடையில் காணக்கிடைக்கும் சிறப்பான வேறுபாடுகளை இக்கட்டுரை விளக்குகின்றது. கிளைமொழி வேறுபாடுகளை ஒலியனியல் நிலையிலும் உருபனியல் நிலையிலும் ஆராய்ந்து பல கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளமை போன்று, இக்கட்டுரையும் தொடரியல் நிலையில் படு" என்னும் துணை வினையின் ஆட்சி கன்னியாகுமரிக் கிளைமொழியில் கையாளப் படுகின்றமையை விளக்கி, எழுத்துமொழி வழக்குடன் ஒப்பிட்டு விளக்குகின்றது.

## 6. ஈழத்தமிழில் துணை வினைகள்

**வேலுப்பிள்ளை**

ஈழநாட்டில் வழங்கப்பெறும் பேச்சுத்தமிழின் தொடரியலை ஆராய்ந்து, அதில் சிறப்பாகக் குறிப்பு வினைகளைப் பற்றி விரிவாக

ஆராய்ந்து, குறிப்பு வினைகள் தமிழ்த் தொடர்களில் வழங்கப் பெறும் முறைமை பற்றியும், அவற்றின் பொருள் வேறுபாடுகள் பற்றியும் இக்கட்டுரை ஆராய்ந்தளிக்கின்றது. ''நான் விழப் பார்த்தேன்'' என்னும் தொடரை ''நான் விழப்பட்டேன்'' என்று ரைப்பது ஈழத்தமிழின் சிறப்புத் தொடரியற் கூற்றாகும். இது போன்று ஈழத்துப் பேச்சுத்தமிழின் பிற சிறப்புத் தொடரியற் கூறுகளும் இக்கட்டுரையில் விளக்கப் பெற்றுள்ளன.

7. **தமிழ்க் கிளைமொழிகள்**

**சீனிவாச வர்மா**

தமிழ்க்கிளைமொழிகள் பற்றிய பழந்தமிழிலக்கண ஆய்வுகளை இக்கட்டுரை முன்னுரையாகக் கொண்டுள்ளது. தொல்காப்பியரது நூற்பாக்கள் பன்னிரு கிளைமொழிகள் பற்றிக் கூறுகின்றமையும் அக்கிளைமொழிகள் வழங்கப்பெற்ற இடங்கள் பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்களால் விளக்கப்பெற்றுள்ளமையும் இக்கட்டுரை எடுத்துரைக்கின்றது. இக்கட்டுரையின்பால் நடைவேறுபாடுகளும் தொழிலமைப்புக் கிளைமொழிகளும், சமுதாயக் கிளைமொழி களும், விளக்கங்களும், வட்டாரக் கிளைமொழிகளின் பாகுபாடு களும் விளக்கப்பெறுகின்றன. தெற்கு, நடு, வடக்கு, மேற்குக் கிளைமொழிகள் எனத் தமிழகத் தமிழ் பேச்சுமொழி வழக்குகள் நால்வகைப் படுத்தப் பெற்றுள்ளன. கன்னியாகுமரி வட்டாரத்தில் வழங்கப்பெறும் பேச்சு வழக்கு தென்கிளைமொழி வழக்கு எனப் பெறும். இதில் ''ச'' கரம் ''ய'' கரமாகி ''ஊசி—ஊயி'', ''பசு-பய்வு'' என்பன போன்று வேறுபட்டு வழங்கப்படுகின்றன. ''ற'' கரம் இக்கிளைமொழியில் மட்டும் வழங்கப்பெறும் சிறப்பு மொழி யியற்கூறாகும். பட்டி (நாய்), கொள்ளாம் (பரவாயில்லை), வெங்கன் (ஏழை) முதலியன இக்கிளைமொழியின் சிறப்புச் சொற் களாகும். தமிழகத்தின் கீழ்க்கடலோரப் பகுதியும் நடுத்தமிழகமும் இணைந்த பகுதி நடுத்தமிழ்க்கிளைமொழி (Central Dialect) வழங் கப் பெறும் இடமாகும். ''ழ'' கர உச்சரிப்பு இக்கிளைமொழியின் தனிச்சிறப்பு. கீழ் கடலோரப் பகுதிகளில் ''ள'' கரம் ''ழ'' கரமாகத் திரிபு பெற்று வழங்கல் அதிகம். ''எண்பது'' என்னும் சொல்லை ''எம்பளது'' என்று ஒருவர் சொன்னால், அவர் நடுத்தமிழ்க் கிளை மொழி வழங்கப்பெறும் வட்டாரத்தைச் சார்ந்தவர் என நாம் உடனே அறிந்து கொள்ளலாம். அப்பாயி, அம்மாயி, கம்னாட்டி போன்ற சிறப்புச்சொற்களும் இங்குக் கையாளப் பெறுகின்றன வடக்குக்கிளைமொழியில் (Northern Dialect) தெலுங்கு, உருது

ஆகிய பிறமொழிகளின் தாக்கங்களினால் ஒலிப்பொலிகள் (voiced sounds) பல ஒலியன் நிலையில் (phonemic level) வழங்கப்பெறு கின்றன. ''ழ'' கரம் ''ய'' கரமாகத் திரிந்து பழம்-பயம் எனவும், கிழவி-கியவி எனவும் இப்பகுதியில் வழங்கப் பெறுகின்றன. தபா, பேஜாரு, பேமானி, புருடா, கீது என்பன இக்கிளைமொழி வட்டாரத்தில் வழங்கப்பெறும் சொற்களாகும். சேலம், நீலகிரி, தருமபுரி, கோயம்புத்தூர் ஆகிய மாவட்டங்கள் அடங்கிய பகுதி மேற்குத் தமிழ்க்கிளைமொழி வட்டாரம் [Western Tamil Dialect Area) எனப்பெறும். இப்பகுதியில் ''ள'' கரமும் ''ழ'' கரமும் 'ல'' காரமாக இணைந்து விட்ட நிலையில் சொற்கள் வழங்கப் பெறுகின்றன. பழம்-பலம் எனவும் மழை-மலை எனவும், கள்ளன்-கல்லன் எனவும் இப்பகுதியினர் வழங்குகின்றனர். ஒவ்வொரு சொல்லிலும் தொடரிலும்-ங்க என்னும் விகுதி சேர்த்தே வழங்கப் பெறும். இப்பகுதியில் கடுவன் என்றால் குரங்கு என்று பொருள்'

8. வேலூர்த் தமிழ்க் கிளைமொழி

கூடி காசலம்

வேலூர்த் தமிழ்க் கிளைமொழியில் எல்லா ஒலிப்பொலிகளும் ஒலியன் நிலையை அடைந்துள்ளன. இப்பகுதியில் ''ழ'' கரம் ''ய'' கரமாகவோ அல்லது ''ச'' கரமாகவோ மாற்றி ஒலிக்கப்படுகின்றது. மாங்காய், தேங்காய் என்பன மாங்கா, தேங்கா என்று வழங்கப் பெறுதல் மலையாளமொழியின் தாக்கத்தினால்தான் என்று இக் கட்டுரை எடுத்துரைக்கின்றது. இங்கு விக்கல்—இக்கல் எனப்படு கின்றது. பேஜாரு, பேமானி, பத்தெ, தபா, ஜாரி, கசமாலம் போன்ற கிளைமொழிச் சிறப்புச் சொற்களும் இப்பகுதி வழக்கில் உள்ளன. ''கொண்டு'' என்னும் துணைவினை ''கினு'' என்று மாற்றம் பெற்றுள்ளதால் ''வந்துகொண்டு, போய்க்கொண்டு'' என்பவை ''வந்துக்கினு, போய்க்கினு'' என்று வழங்கப் பெறு கின்றன. இதுபோன்றே 'கொண்டிரு'' என்னும் துணைவினை ''கினிரு'' என்று மாற்றமடைந்துள்ளமையால் ''வந்து கொண் டிருந்தான்'' என்பது ''வந்துக்கினுருந்தான்'' என்றும் ''போய்க் கொண்டிருந்தான்'' என்பது ''போய்க்கினுருந்தான்'' என்றும் இப் பகுதியில் வழங்கப் பெறுகின்றன. ''விட்டால்'' என்னும் உருபு ''காட்டி'' என்றும், ''ஆக'' என்பது''கோசரம்''என்றும்,''இடம்'' என்பது ''ஆண்டெ'' என்றும் மாற்றம் அடைந்துள்ளன. இம் மாற்றங்களினால் ''வராவிட்டால்'' என்பது ''வராகாட்டி'' என்றும், ''அவனுக்காக'' என்பது ''அவனுக்கோசரம்'' என்றும்,

''என்னிடம்'' என்பது ''என்னாண்டெ'' என்றும் வழங்கப் பெறுகின்றன.

## 9. தமிழகத் தமிழும் ஈழத்தமிழும்

**ஏசுதாசன்**

தமிழர்கள் தமிழகத்தில் மட்டுமன்றி ஈழம், பர்மா, மலேசியா, கயானா, சூரினாம், சமாய்க்கா, டிரினிடாட், சிங்கப்பூர், இந்தோனேசியா, தாய்லாந்து, தென்ஆப்பிரிக்கா, தென்வியட்நாம், பிரஞ்சு கயானா, பிஜி, மொரீசியசு, மலகாச்காய் குடியரசு ஆகிய உலகின் பல பகுதிகளிலும் பரந்து வாழ்கின்றனர். தமிழகத்தில் வழங்கப்பெறும் பேச்சுத் தமிழிற்கும் உலகின் பிற பாகங்களில் வழங்கப்பெறும் பேச்சுத் தமிழிற்கும் பல வேறுபாடுகள் காணப் படுகின்றன. தமிழகத்திற்கு அண்மையிலுள்ள ஈழ நாட்டில்கூட இதுபோன்ற பேச்சுமொழி வேறுபாடுகள் அதிக அளவில் காணப் படுகின்றன என்பதை இக்கட்டுரை விளக்குகின்றது. பழந்தமிழ் மொழியில் ''அவன், உவன், இவன்'' என்று சுட்டுப்பெயர் மூவகைப்படும். காலமாற்றத்தால் உவன் என்னும் பிரிவு மறைந்து தற்பொழுது ''அவன், இவன்'' என்று இருமுனை வேறுபாடுகளே தமிழகப் பேச்சுவழக்கில் வழங்கப்பெறுகின்றன. ஈழத்தமிழ் இது போன்ற மூன்று வேறுபாடுகளையும் தன்னகத்தே கொண்டு பழந் தமிழின் சொல் வழக்குகளைக் காத்துவருகின்றது.

வருங்கால எதிர்மறையைக் (Future negative)குறிக்கப் பழந் தமிழில் செய்யேன், ஓடேன் போன்றவை பயன்படுத்தப் பெற்றன. ஆனால் தற்காலத் தமிழில் செய்யமாட்டேன், ஓடமாட்டேன் என்னும் வழக்குகளே காணப்படுகின்றன. ஈழத்துத் தமிழில் செய்யேன், ஓடேன் என்னும் வழக்குகள் இன்றும் வழங்கப்பெறுதல் இக்கிளைமொழியின் தனிச்சிறப்பாகும். இருவகையான வினை முற்றுக்கள் ஈழத்துத் தமிழ் வழக்கில் உள்ளன. ''செய்தாய்'' என்பதைப் போன்றது முதல் வகை. ''செய்தநீ, செய்தநீங்கள், செய்த அவன்'' என்பவற்றைப் போன்றது பிறிதொரு வகை. இவர்கள் சொல்முதல் (Word initial) ''ச''கரத்தை ''ட்ச'' கரமாக்கி சீதையை ட்சீதை எனவும் சுந்தரத்தை ட்சுந்தரம் எனவும் வழங்குகின்றனர். ''அவர்கள்'' என்பது பொதுவாக மரியாதையைக் குறிக்கும் சொல். பொன்னம்பலம் எனக் கூறு வதைவிட பொன்னம்பலம் அவர்கள் என்பது மரியாதைக்குரியது.

''அவர்கள்'' என்ற இம்மரியாதைச்சொல் ஈழத்துத் தமிழில் ''அவெ'' என்னும் வடிவில் வழக்கிலுள்ளது. இங்கு பொன்னம்பலம் அவெ, இராமநாதன் அவெ என்னும் வழக்குகளே மிகுதி. இவை தவிர ''என்னுடைய'' என்பது ''எந்த, என்னட என்னிரத'' என்றும், ''வீட்டுக்குப் போ'' என்பது ''வீட்டெ போ', என்றும் ' வீட்டுக்கு வா'' என்பது ''வீட்டெ வா'' என்றும் ஈழத்துத் தமிழில் வழங்கப் பெறுகின்றன.

### 3.1.2. இருமொழி வழக்கு

இவ்வாய்வுப் பிரிவில் ஒரே ஒரு கட்டுரைமட்டும் ''காடர்களின் தமிழ்ப் பேச்சு வழக்கில் ஆங்கில மொழியின் ஆதிக்கம்'' என்னும் தலைப்பில் சுரேசு என்பவரால் வெளியிடப் பெற்றுள்ளது.

### 3.1.3. மொழியின் இருநிலைத்தன்மை

தமிழ்மொழியின் இருநிலைத்தன்மை குறித்து மூன்று ஆய்வுக் கட்டுரைகள் வெளியிடப் பெற்றுள்ளன. வழக்கு மயக்கம் (Code-Mixing) பற்றி கணேசனும் பேச்சுத்தமிழிற்கும் எழுத்துத் தமிழிற்குமிடையே காணப்படும் வேறுபாடுகளையும் தமிழின் இருநிலைத் தன்மையையும் விளக்கி இருளப்பனும் எழுத்துத் தமிழிற்கும் பேச்சுத் தமிழிற்கும் உள்ள வேறுபாடுகள் பற்றி தெய்வசுந்தரமும் ஆய்ந்துள்ளனர்.

### 3.1.4. நடையியல்

பேச்சுத்தமிழின் நடைகளைப் (Style) பற்றி ஒரே ஒரு கட்டுரை ஞானம் என்பவரால் வெளியிடப் பெற்றுள்ளது.

### 3·1·5. மனப்பாங்கு

தமிழ்ப் பேச்சு வழங்குகளைப் பற்றிப் பேசுவோரின் மனப் பாங்குகளை இருளப்பன் ஆராய்ந்து ஒரு விரிவான கட்டுரை எழுதியுள்ளார்.

### 3.1.6. சமுதாயக் கிளைமொழி

சமுதாயக் கிளைமொழி ஆய்வில் சாதிக்கிளைமொழி பற்றி ஐந்து கட்டுரைகளும் சமூகக்கிளை மொழிபற்றி ஐந்து கட்டுரை களும் வெளியிடப் பெற்றுள்ளன.

அ. சாதிக் கிளைமொழிகள் பற்றியவை

1. தமிழ் - மலையாளத்தில் நிகழ்கால உருபு
—குமாரசுவாமி இராசா

2. மீனவர் பேச்சுத்தமிழில் ஒலி மாற்றம்
—இராச குமாரி

3. சாதிக் கிளைமொழிகள்
—அரங்கநாதன்

4. தஞ்சை அரிசனக் கிளைமொழி
—முருகையன்

5. பிராமணர் தமிழ்
—சங்கரநாராயணன்

ஆ. சமூகக் கிளைமொழிகள் பற்றியவை

1. தமிழில் துணைவினைகளும் சமூகப் பாகுபாடுகளும்
—இருளப்பன்

2. தமிழில் துணைவினைகள்
—ஞானம்

3. தமிழில் சமூகக் கிளைமொழிகள்
—கருணாகரன்

4. சமுதாயக் கிளைமொழியியல் - களஆய்வு முறைகள்
—முத்துச்சாமி

5. நகர்ப்புறத் தமிழும் சிற்றூர்த் தமிழும்
—முத்துச்சாமி

3.1.7. நிலைபேறாக்கம்

பேச்சுமொழியின் வளம் பற்றிப் பல கட்டுரைகள் ஆய்வறிஞர்களால் வெளியிடப் பெற்றமை போன்று பேச்சுமொழியின் நிலைபேறாக்கம் (standardization) பற்றியும் பின்வரும் நான்கு கட்டுரைகள் வெளியிடப் பெற்றுள்ளன.

1. பேச்சுத் தமிழின் தொடர்ச்சியும் பிரிவுகளும்
—கருணாகரன்

2. தமிழ்ச் சமூகக் கிளைமொழிகள் மற்றும் பொதுப் பேச்சுத் தமிழ் - ஒரு மறுப்பு —திருமலை

3. எளிமையாக்கம் நிலைபேறாக்கத்தில் ஒருவகை
—அண்ணாமலை

4. நிலைபேறாக்கிய பேச்சுத்தமிழ்
—ஞானசுந்தரம்

## குறிப்புகள்

1. இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்என
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே (தொல்)

2. செந்தமிழ்சேர் பன்னிரு நிலத்தும் தம்குறிப்பினவே
திசைச் சொல் கிளவி (தொல்)

3. செந்தமி ழாகித் திரியா தியார்க்குந்
தம் பொருள் விளக்குந் தன்மைய வியற்சொல் (தொல்)

## 4. எண்பதில் வெளியிடப் பெற்றுள்ள கட்டுரைகள்

4.1. **Auxiliaries in Dravidian**,[Eds.] S. Agesthialingom and G. Srinivasa Varma, Department of Linguistics Publication, Annamalai University, Annamalai Nagar.

1. **Gnanam, M.,** "Perspective Aspect in Tamil", Pp. 139-155.
2. **Irulappen, K.M.,** 'Social Differentiation as reflected in the of use Aspectual Auxiliaries in Tamil", Pp 167-186
3. Shanmugam, C. "Auxiliary verb-**Paṭu** in Tamil - Illustration of syntactic change", Pp. 119-138.
4. **Veluppillai**, A. "Auxiliary verb in Srilanka Tamil", Pp. 669-682.

4.2. **Heritage of the Tamils - Language and Grammar,** [Eds ] S.V. Subramaniyan and K. M. Irulappan, International Institute of Tamil Studies, Madras.

1. **Irulappan, K.M.,** "Tamil Diglossia", Pp. 245-272.
2. **Srinivasa Varma, G.,** "Different Dialects of Tamil", Pp. 273-286.
3. **Ghadigachalam,** N., "The Vellore Tamil Dialect", Pp. 287-294.

4.3. **இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்-பன்னிரண்டாவது கருத்தரங்கு-ஆய்வுக்கோவை - தொகுதி-2, அண்ணாமலை நகர்.**

1. **Annadhurai**, K.,"Kinship Terms in Kalrayan Malayali Dialect, Pp. 10-15.

2. **Ajmalkhan, P.M.**, "Re-duplication", Pp. 32-36.

3. **Ganesan, M.**,Classification of Code-mixing", Pp 71-74

4. **Karunakaran, K.** "Discreteness and continuity in Tamil Speech", Pp. 100-105.

5. **Suresh**, J., "Some English loan-words in Kader", Pp 196-201.

6. **Srinivasa Varma. G.**, "Tense markers in Tamil Dialects". Pp. 218-222.

7. **திருமலை, மா. சு.**, "தமிழ்ச் சமூகக் கிளைமொழிகள் மற்றும் பொதுப் பேச்சுத்தமிழ் - ஒரு மறுப்பு", பக். 246-249.

8. **Maheswaran**, C., "Pachamalai as a dialect area", Pp. 333-338.

9. **Muthuswamy Pillai, P.**, "Rural Vs. Urban Speech'. Pp. 376-379.

10. **Kumarasami Raja**, "The present tense markers in Tamil Malayalam'', Pp. 402-407.

11. **Raj Kumari, K.**, "Phonological changes in Fisherman Tamil", Pp. 413-418.

12. **Renganathan, D.**, "Caste Dialects", Pp. 430-433.

4.4. **Sociolinguistics and Dialectology - Seminar Papers**, [Eds.] S. Agesthialingom and K. Karunakaran, Department of Linguistic Publication, Annamalai University, Annamalai nagar.

1. **Annamalai, E.**, "Simplification as a process of Modernization", Pp. 1-12.

2. **Deivasundaram, N.** "Can we measure the distance between the written and spoken forms of Tamil", Pp. 56-65.

3. **Gnanasundaram**, V., "Standard spoken Tamil - what and how" Pp. 66-97.

4. **Gnanam, M.**, "Style: Its Classification and Elicitation Methods", Pp. 98-106.

5. **Irulappan, K. M.**, "Preferential Attitudes towards, Sociolects in a village", Pp. 130 146.

6. **Karunakaran, K.** "A study of Social Dialects in Tamil" Pp. 153-168.

7. **Murugaiyan, K.**, "Harijan Dialect of Tanjavur District", Pp. 191-197.

8. **Muthusamy Pillai, P.** "Social Dialectology : Field Techniques", Pp. 198-209.

9. **Shankaranarayanan, G.**, "Sociolinguistic Exploration in Brahmin Tamil", Pp. 347-354.

10. **Yesudhasan, C.**,"Srilanka Tamil and Mainland Tamil", Pp. 463-477.

## துணை நூற்களும் கட்டுரைகளும்

Agesthialingom, S., **A Generative Grammar of Tamil** (DLP-II), (Annamalainagar. 1967)

Ananthanarayana, H.S. Sound changes in Sanketi, a Tamil Dialect, **Studies in Indian Linguistics**, (1968).

Bhat, D.N.S., **Kannada Dialect Survey** (Poona, 1968).

Gnanasundaram, V., **A Pilot Dialect Survey of Tondaimandalami** Ph. D Dissertation, (Annamalai University, 1973).

Kamatchinathan, A. **Tirunelveli Dialect of Tamil**, (Annamala. University, 1969)

Karunakaran, **Camuthaya Mozhiyiyal**, (Annamalainagar, 1975)

Krishnamurti, Bh., **A Telugu Dialect Dictionary of Occupational Vocabularies**, Vol-I, Agriculture, (Hyderabad, 1962).

Meenakshisundarm, T.P. **Tamil - A Birds eye view**, (Madurai, 1976).

Neethivanan, J., A Survey of Dialect work done in India, **Seminar on Dialectology - Papers and discussions**, Trivandrum, 1973).

Sakthivel, S., Horizontal and Vertical Dialects of Tamil, **Ayvukkovai, 6.**, (Pondicherry, 1974).

Shanmugam Pillai, M., Caste Isoglosses in Kinship Terms, **Anthropological Linguistics** 7 : 4, (1965).

Shanmugam, S. V., Dialects in Inscriptional Tamil, **ORBIS xx : 1**, (1971).

Shanmugam, R., Historical Socio linguistics of Tamil Land - A survey of the corpus, **Sociolinguistics and Dialectology Seminar Papers**, Annamalai University, 1980.

Srinivasa Varma, G., and Sakthivel, S., Tamil Dialects, **Indian Journal of Linguistics**, Vol. 2 No. 1 (Calcutta, 1977).

# 1980-இல் நாட்டுப்புறக் கலைகளும் ஏனைய கலைகளில் அவற்றின் பாதிப்பும்

சரசுவதி வேணுகோபால்

இலக்கியம் எவ்வாறு எழுத்திலக்கியம், நாட்டுப்புற இலக்கியம் என இருவகைப்படுமோ அவ்வாறே கலைகளும் கற்றோர் கலைகள், நாட்டுப்புறக் கலைகள் என இருவகைப்படும். இசை வல்லுநர்கள் சாஸ்திரீய சங்கீதம் (Classical music) நாட்டுப்புற இசை இரண்டினுக்கும் உள்ள வேறுபாடுகளைக் கூறுங்கால் தலையாயதாகக் கூறுவது முன்னதைக் காட்டிலும் பின்னது மிக எளிமை வாய்ந்தது[1] என்பதே. இவ்வெளிமை நாட்டுப்புற மக்களோடு தொடர்பு பட்ட எதற்குமே உண்டு. ஏனெனில் அவர்கள் எளியவர்கள். நகர்புறத்துப் பொய்ம்மை மிகுதியும் அறியாதவர்கள். நாட்டுப்புறக் கலைகளுக்கு மற்றோர் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. ''கல்வியறிவில்லாதோரால் ஆக்கப்பெறுவது, மிக்க திருத்தம் இல்லாதது, மிகுந்த அழகில்லாதது, பழமை சார்ந்தது'' எனக் கூறப்படுகிறது.[2]

இனி இக்கட்டுரையில் நாட்டுப்புறக் கலைகளைப் பற்றிய செய்திகளையும் ஏனைய கலைகளில் அவற்றின் தாக்கம் பற்றி ஓரளவும் காண்போம்.

நாட்டுப்புறக் கலைகள் பற்றிப் பொதுவாகவும் குறிப்பிட்ட கலைகளைப் பற்றிச் சிறப்பாகவும் நூல்களும் ஆராய்ச்சிகளும் வெளிவந்துள்ளன. தமிழக நாட்டுப்புறக் கலைகளை ஆடல், பாடல், கூத்து, கைவினைக் கலைகள், வீரக்கலைகள் என ஐந்தாகப் பிரிக்கலாம்.

ஆடல் என்பது பலவகைப்படும். பாடலோடு சேர்ந்து உடலசைவும் கொண்டது ஆடலென்று கூறலாம். பாடலின்றி இசைக்கருவிகள் எழுப்பும் இசையோடும் ஆடல் இடம்பெறும். ஒவ்வொரு ஆட்டத்திலும் முக்கியமான பொருள் ஒன்று இருக்கும். அதைக் கையில் வைத்துக்கொண்டோ அல்லது பயன் படுத்தியவாறே ஆட்டம் நடைபெறும். அப்பொருளின் பெயரே ஆட்டத்திற்கும் சொல்லப்பெறும். கீழே சில ஆட்டங்களும் பயன்படுத்தப்பெறும் பொருட்களும் தரப்பட்டுள்ளன.

| (காட்டு) | ஆட்டம் | | பொருள் |
|---|---|---|---|
| | கரகம் | — | கரகம் |
| | காவடி | — | காவடி |
| | பொய்க்கால் குதிரை | — | குதிரை (பொம்மை) |

இம்முறையிலன்றி வேறுசில ஆட்டங்களும் உண்டு. காட் டாக, தேவராட்டம், ஒயில்கும்மி ஆகியவற்றைக் கூறலாம். தேவ ராட்டத்தில் எப்பொருளும் பயன்படுத்தப்பெறுவதில்லை. ஒயில் கும்மியில் கையில் ஒரு கைக்குட்டை ஒன்றினை வைத்துக்கொண்டு அழகாக ஆண்கள் ஆடுவர். அந்த அழகுக்காக அது 'ஒயில் கும்மி' என்ற பெயர் பெற்றது போலும்.

பாடல் என்பது தனித்துப் பாடுவது, குழுவாகப் பாடுவது, இசைக்கருவிகளை ஒலித்தல் ஆகிய சில வகைகளாகப் பிரிக்கலாம். சில பாடல் வகைகள் வாழ்க்கையோடு ஒன்றியவை; சில பொழுது போக்காக, விழாக்காலங்களில் பாடப்படுவனவாக அமைந்தவை. தாலாட்டு, திருமணப் பாடல்கள், ஒப்பாரி போன்றவை பெண்கள் மிகச் சிறப்பாகப் போற்றிப் பாதுகாத்து வருபவை. ஏற்றப் பாட்டு, தெம்மாங்குப் பாடல், உழவோடு தொடர்புபட்ட பாடல் கள், கல்தூக்குவோர் பாடல், துணி வெளுப்போர் பாடல் போன் றவை உழைப்பின் பொழுது பாடப்படும் பாடல்கள்.

வில்லுப்பாட்டு, லாவணி போன்றவை விழாக்காலங்களில் பொழுதுபோக்காகப் பாடப்படுபவை. வாழ்க்கையோடு ஒன்றி யிருக்கும் பாடல்களைக் கலைகளாகச் சிலர் ஏற்காதிருக்கலாம். ஆயின் இக்கட்டுரையில் அவைகளும் கலைகளாகவே கருதப்படு கின்றன.

கூத்து என்பது கதை, பாட்டு ஆகியவற்றோடு நடிப்பும் சேர்ந்தது. இதில் பலர் பங்கு கொள்வர்.

கைவினைக் கலைகள் என்பன மேற்கண்ட மூன்று வகைகளி னின்று சற்று வேறுபட்டது. அவை மூன்றும் ஒன்றோடொன்று தொடர்பு பட்டவை. ஆயின் இவை கண்களுக்கு இன்பந்தருவன· முன்னையவை கண்களுக்கும் செவிக்கும் இன்பந்தருவன. ஓவியம், கோலம், பானை வனைதல், கூடை பின்னுதல் போன்ற பலவற்றை இதில் அடக்கலாம்.

வீரக் கலைகளில் உடல் வலிமையும் வீரமும் பயிற்சியும் கொண்டோர் மட்டுமே சிறந்து விளங்கமுடியும்.

## ஆட்டங்கள்

**கரகம் :** இவ்வாட்டத்தை மாரியம்மனோடு தொடர்பு படுத் திக் கூறுவர் சக்தி கரகாட்டம் என்றும் ஆட்டக்கரகம் என இருவகைப்படும் என அறிகிறோம். சிறிய குடம் ஒன்றில் நீர் நிரப்பித் தேங்காய் வைத்து அதனை மூடி, சுற்றிப் பூ அலங்காரம் செய்து உச்சியில் ஓர் எலுமிச்சம்பழம் வைத்திருப்பார்கள். இக்குடம் கரகம் எனப்படும். சக்தி கரகாட்டம் என்பது தெய்வ வழிபாட்டுடன் இணைந்தது.[3] ஆட்டக்கரகம் எனப்படும் தொழி லாட்டம் ஆடும் ஆண், பெண் இருபாலரும் இறுக்கமான உடை அணிந்து முக ஒப்பனை மிகுதியும் செய்துகொண்டு தலையலங் காரமும் செய்து கொண்டு இசைக்கருவிகள் எழுப்பும் இசைக் கேற்பத் தலையில் கரகத்தை வைத்துக்கொண்டு ஆடுவதை எவ்வளவு நேரம் பார்த்தாலும் சலிக்காது. முதலில் இசைக்கருவி கள் மெதுவாகவும் பின்னர் விரைவாகவும் ஒலிக்கும். ஆடுவோர் அதற்கேற்ப முதலில் மெதுவாகவும், பின்பு விரைவாகவும் ஆடுதல் கண்களுக்கு விருந்தாக அமையும்.

இது சிலம்பில் 'குடக்கூத்து' என்று கூறப்பட்டுள்ளது. அப்பொழுது எந்த வகையான இசை இருந்ததென்பது நமக்குத் தெரியாது. இப்பொழுது கரகாட்டத்தின்பொழுது பம்படை, உறுமி, தவுல் நாதசுரம், தமுக்கு, சத்தக்குழல் ஆகிய இசைக்கருவி கள் ஒலிக்கப்படுகின்றன.[4]

சாஸ்திரீய சங்கீதம் எனப்படும் பண்பட்ட இசைக்கும் (classi- cal music) கரகாட்டம் போன்றவற்றிற்கு வாசிக்கப்பெறும் பம்படை, உறுமி போன்ற நாட்டுப்புற இசைக்கருவிகள் எழுப்பும் இசைக்கும் உள்ள பெருத்த வேறுபாடு முன்னது மென்மைவாய்ந்த தாக, செவிக்கு மிக்க இனிமை பயப்பதாக இருக்கும். பின்னையது

ஒலி அதிகம் எழுப்புவதாய் இனிமை சற்றுக் குறைந்ததாய் இருக்கும்.

கரகாட்டத்துடன் காவடி, பொய்க்கால் குதிரையாட்டம், ராஜா ராணியாட்டம் ஆகியன தொடர்புற்றன என அறிகிறோம்.[5]

**காவடி :** இதனை முருகனோடு தொடர்புபடுத்துவர். முருகனிடம் வேண்டுதல் செய்து கொண்டவர்கள் காவடியைத் தோளில் வைத்தவாறு ஆடிக்கொண்டு செல்வர். அப்பொழுது காவடிச் சிந்தும் பாடப்பெறும். சமய அடிப்படையில் இவ்வாறு நிகழ்தல் போல, காவடியாட்டத்தைக் கலையாகப் பயின்று சில கலைஞர்கள் வருவாய்க்காக இதனையும் இதுபோன்ற மற்ற கலைகளையும் தொழிலாகக் கொள்கின்றனர் கரகம், காவடி, பொய்க்கால் குதிரைபோன்ற பல நாட்டுப்புறக் கலைகளில் வல்லுநரான மதுரை திரு. ஓம். பெரியசாமி என்பார் தம் குழுவினரோடு பலவிடங்களிலும் ஆடி. வருகிறார் பள்ளி ஒன்றமைத்து மிக நாட்டங் கொண்டவர்களுக்குக் கற்பித்தும் வருகிறார். மேலை நாட்டுப் பெண்கள் ஒரு சிலர் கூடஇவரிடம் கரகம் பயின்றனர்.

**பொய்க்கால் குதிரை ஆட்டம்:** பல நிறங்கள் தீட்டப் பெற்ற மரக்குதிரைக் கூடுகளில் தங்களை நுழைத்துக் கொண்டு, மார்புக்கு மேலும் முழங்காலுக்குக் கீழும் தெரியும் வண்ணம் கலைஞர்கள் ஆடும் இவ்வாட்டம் பார்க்க இனிமையாக இருக்கும். ஆண், பெண் இருவரும் அரசன், அரசி போல அழகுற அலங்கரித்துக்கொண்டு ஆடுவர். பாடல்களுக் கேற்ப. வாசிக்கப்படும் வாத்திய இசைக்கேற்ப முன்னும் பின்னும் பக்கவாட்டிலும் ஆடியவாறு தாளக்கட்டு மாறாது அவர்கள் ஆடுதல் மிகச் சிறப்பாக அமைந்திருக்கும். சிலம்பில் இது மரக் கால் ஆட்டம் எனக் கூறப்பெற்றுள்ளது.

**தோல் பாவை நிழற்கூத்தும்:** இது மராத்தியர் சிறப்பாகக் கையாண்டு வரும் ஒரு கலை. தமிழகமெங்கும் இப்பொழுது மராத்தி பேசும் இனமாகிய 'ராவ்' என்ற பட்டத்தைத் தாங்கியவர்கள் தம் குடும்ப உறுப்பினர்களின் உதவியோடு இக்கலையைக் கிராம மக்கள் மத்தியில் காட்டித் தங்கள் வயிற்றுப்பிழைப்பை நடத்துகின்றனர். பொருளாதார நிலையில் இவர்கள் மிகப் பின்தங்கிய நிலையில் இருக்கிறார்கள். தோலில் தங்களுக்கு வேண்டிய உருவங்களைச் செய்துவெள்ளைத் துணியைத் திரையாகப் போட்டு, திரைக்குப் பின்புறம் கூத்துக் காட்டும் வல்லுநர் பாவைகளை வைத்து, ஒளி வாய்ந்த மின்

விளக்கு அல்லது பெட்ரோமாக்ஸ் விளக்கு ஆகியவற்றின் உதவி யோடு திரையில் கூத்தினைக் காட்டுவார். அவர் நல்ல திறமை பெற்றவராக இருப்பார். தமிழகத்தில் நடக்கும் தோல்பாவைக் கூத்து பொதுவாக ஒருவரால் மட்டும் காட்டப்பெறுகிறது. கர்நாடகா போன்ற மற்ற மாநிலங்களில் ஒருவருக்கு மேற்பட் டோர் காட்டுகிறார்கள். ஒருவரே காட்டும்பொழுது கால்களில் ஒரு பாவை கைகளில் ஒரு பாவை, சிலபொழுது ஒவ்வொரு கையிலும் ஒவ்வொரு பாவை - இவ்வாறு வைத்துக்கொண்டு மிகுந்த சிரமத்தோடு காட்ட வேண்டியுள்ளது.

பொதுவாக இராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசங் களிலிருந்து சில நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டுகின்றனர். குடும்ப உறுப்பினர்கள் பாடுதல், மிருதங்கம், ஆர்மோனியம் இசைத்தல், கூத்துக் காட்டுபவரோடு இணைந்து நடித்தல், டிக்கட் கொடுத்தல் போன்ற எல்லா வேலைகளையும் கவனித்துக்கொள்வர்.

மதுரையில் 'முருகன் ராவ்' என்ற கலைஞர் இக்கலையில் வல்லுநராக இருப்பதையும், இவரைப் போல இன்னும் சில குழு வினர் இருப்பதையும் அறிகிறோம்.

**பொம்மலாட்டம் :** இதில் காணப்படும் முதற்சொல் தெலுங்குச் சொல். 'பொம்மலு' என்ற தெலுங்குச்சொல் 'பாவை கள், பொம்மைகள்' எனப் பொருள்படும். 'ஆட்ட' என்ற தெலுங்குச் சொல் தமிழில் 'ஆட்டம்' என்று கூறப்படுகிறது

மரத்தால் செய்யப்படும் பாவைகளைக் கொண்டு திரைக்கு முன்னால் அவற்றை நிற்க வைத்து, திரைக்குப் பின்னால் ஆட்டக் கலைஞர்கள் அமர்ந்து கொண்டு பாவைகளின் உறுப்புகளில் கட்டப்பெற்ற கண்ணுக்குத் தெரியாத நூல்களை மிகத் திறமை யாக இயக்கி அவற்றை நடிக்கவும் ஆடவும் வைப்பர் 'கும்பகோணம் மணி அய்யர் குழு' என்ற ஒரு குழுவினர் இக்கலையில் மிகத் தேர்ந்தவர்கள்.

**தேவராட்டம் :** கம்பளத்து நாயக்கர் என்னும் ஒரு பிரிவினர் இவ்வாட்டத்தில் சிறந்து விளங்குகின்றனர். சாதாரணமான எளிய பாவாடைபோன்ற ஒரு கீழுடுப்பையும் மேலே சட்டையையும் அணிந்து, தலையில் தலைப்பாகையோடு இவர்கள் இவ்வாடலை ஆடுகின்றனர். இது ஒரு குழு நடனம். இவர்களுக்குத் தலைவர் போன்று விளங்கும் ஒருவர் உறுமி மேளத்தை மெல்ல இசைத்துத்

தொடங்கும்பொழுது முதலில் மெதுவாக இருக்கும் ஆட்டம் போகப்போக மிகுந்த விறுவிறுப்பாக ஆகி இறுதியில் ஒரு நிலையில் முடியும். கர்நாடக இசையில் முதல் காலம், இரண்டாம் காலம் என்று மெதுவாகத் தொடங்கிப் போகப்போக மிகவேகமாகப் பாடுதல்போல் இவ்வாட்டம் விறுவிறுப்பாக அமைந்துள்ளது. மதுரை மாவட்டத்தில் உள்ள 'கம்பம்' என்ற ஊரருகே உள்ள இவ்வாட்டக் கலைஞர்களில் பலர் இளைஞர்களாக உள்ளனர். தலைவர் மட்டும் சற்று வயதானவர். கண்ணன் கதை, இராமாயண, மகாபாரதக் கதைகள் போன்றவை இவ்வாட்டத்தின் பொழுது பாடப்பெறுகின்றன. இதில் பங்கெடுப்போர் அனைவரும் ஆண்களே யாவர்.

கும்மி : இது பெண்களின் கலை. கைகள் இரண்டையும் தட்டியவாறு தாளம் பிசகாமல் வட்டமாகப் பல பெண்கள் ஆடுதல். கும்மிக்கென்றே அமைந்த சில பாடல்களைப் பாடிக் கும்மி அடிக்கும்பொழுது கேட்பதற்கும் காண்பதற்கும் மிக்க இனிமையாக இருக்கும்.

கோலாட்டம் : இதுவும்கூடப் பொதுவாகப் பெண்களின் கலை எனலாம். பெண்கள் வட்டமாக நின்று கைகளில் இரண்டு வண்ணக் கோல்களையும் கொண்டு பாடலுக்குத் தகுந்தாற்போல அடித்துக்கொண்டு சுற்றிவருதல். கண்களுக்கு விருந்தாக அமையும் கலை. சிற்றூர்களில் ஐப்பசி மாதம், அமாவாசையன்று (அன்றுதான் தீபாவளி நாள் பெரும்பாலும் அமையும்) களி மண்ணால் பசுவும் கன்றும் செய்து பிள்ளையார்கோயில் போன்ற ஒரு கோயிலில் அதனை வைத்து மறுநாளிலிருந்து கோலாட்டம் ஆடத் தொடங்குவர். பொதுவாகக் கோயில் வாசலில் பல பெண்கள் கூடிப் பல பாடல்களையும் பாடிக் கோலடிப்பர். இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள சாத்தூரில் எனது இளமைப்பருவத்தில் கோலடித்தது என் நினைவில் பசுமையாக உள்ளது. வட்டமாக நின்று வலப்புறம் ஓரடியும் இடப்புறம் மூன்றடியும் அடித்து ஆடுதலில் சிறுமியர் பெரியோர் என்றில்லாமல் அனைவரும் அடிப்பர். நீளக்கோலாட்டம், பின்னல் கோலாட்டம், இரட்டைவட்டக் கோலாட்டம் ஆகியவற்றில் சற்றுத் தேர்ந்தவர்கள் மட்டும் அடிப்பர். பாடல் நன்கு தெரிந்தவர் ஒருவர் பாட, மற்றையோர் அவரைத் தொடர்ந்து பாடி அடிப்பது சிறப்பாக இருக்கும். தொடக்கப் பாடல் தினமும் ஒரே பாடல் தான்.

'கோலேனாக் கோலே
பாலா நீலானாக் கோலே
பால விலோசன நீல விலோசன
பால பிரபஞ்சக் கோலே
பசுவா பசுவையா - உமக்கு
பணம்ரொம்ப நான்தாரேன்
எட்டடிக் குச்சுக்குள்ளே ஸ்வாமி
எத்தனை நாளிருப்பேன்
மச்சுவீடு கட்டித்தா ரும்ஸ்வாமி
மலையாளம் போய்வாரேன்'

என்பது அப்பாடல். இப்பாடல் இன்றும் நன்றாக நினைவிலுள்ளது. பாடலில் வல்லவர்கள் கண்ணன், முருகன் ஆகியோர் மீது அமைந்த பாடல்களையும் சிலபொழுது கவிமணியின் 'மீனினம் ஓடிப் பறக்குதம்மா' போன்ற பாடல்களையும் கூடச் சிறப்பாகப் பாடுவர். கண்ணன் மீதமைந்த ஒரு பாடலை இங்கு தருகிறேன்.

'கொண்டுவா கொண்டுவாடி எங்கள் கோபாலனை
கொண்டுவா கொண்டுவாடி
கொண்டுவாடி கோபாலனை
ரெண்டுகையால் தாளம்போட'

இவ்வாறு பாடல் தொடர்ந்து செல்லும்.

வேடிக்கையான சில பாடல்களும் பாடப்பெறும். காட்டாக ஒரு பாடலைக் காணலாம் :

உப்புமாவைக் கிண்டிப் பாரடி
ஒருபடி தண்ணி வைத்து
அரைப்படி ரவை போட்டு (உப்புமா)

முந்திரிப்பருப்பு, கறிவேப்பிலை ஆகியவற்றைப் போட்டு உப்புமா செய்யவேண்டும் என்று அடுத்த பத்தி கூறும். இவ்வாறு இரவு நேரத்தில் ஏறத்தாழ எட்டு மணியிலிருந்து பத்து, பத்தரை மணி வரை கோலடித்து ஒரு மாத முடிவில் ஊர் மக்கள் அனைவரிடமும் பணம் வசூலித்து எல்லோரும் அலங்கரித்துக் கொண்டு பசுவினை (பசுப்பொம்மை) ஆற்றில் கொண்டு போய் விட்டுவிட்டு மீண்டு வருவர். போகும்பொழுதும் வரும்பொழுதும் கோலடித்துக் கொண்டு பாடிக்கொண்டே வருவர். பெரிய பொதுவிருந்து அன்று இருக்கும். இது பொதுவாக அந்தணப்பெண்கள் தெருக்களில் நிகழும். ஆண்களும் குழந்தைகளும் இதனைக் கண்டு மகிழ்வர்.

**ஒயில் கும்மி :** இது ஆண்களின் கலை. பலர் திறந்த வெளியில் நின்று கையில் ஒரு கைக்குட்டையின் நுனியைப் பிடித்தவாறு இசைக்கருவிகள், பாடல் பின்புலத்தில் ஒலிக்க வீசி வீசி ஆடுவது அழகிய தோற்றத்தைத் தரும்.

**பாடல்கள் :** நாட்டுப்புறக் கலைகளை டாக்டர் ஏ. என். பெருமாள் சமூகச் சார்புக் கலைகள், சமயச் சார்புக் கலைகள் என இருவகையாகப் பிரிக்கிறார்[7]. சமூகச் சார்புக் கலைகள் என்பன வற்றுள் தாலாட்டு, திருமணப் பாடல்கள், ஒப்பாரி, தொழிற் பாடல்கள் ஆகிய அனைத்தையும் அடக்குகிறார். இவை அந்தந்தச் சூழலுக்குத் தக்கவாறு கருத்துகள் கொண்டமைகின்றன. பாடப் படும் இசையும் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதமாக அமையும். மொத்தமாகவும், தனித்தனியாகவும் அவற்றைப் பற்றிப் பல நூல் களும் ஆய்வுகளும் வெளிவந்துள்ளமையால் இங்கு மிகுதியும் கூறத் தேவையில்லை.

**வில்லுப்பாட்டு :** சமயச் சார்புக் கலையாக, தென்மாவட்டங் களில் உள்ள கோயில்களில் வில்லுப்பாட்டு நடத்தப் பெறுகிறது. பல கதைகளைப் பாடல் வடிவில் வில்லுப்பாட்டு நிகழ்ச்சியின் பொழுது தருவர். பனைக்கம்பை வில்போல் வளைத்துக்கட்டிச் சலங்கைகள் கட்டியிருப்பர். பானை ஒன்றும், உடுக்கு, தாளம், கட்டை ஆகியனவும் உண்டு.[8] வில்லின் நாண்மீது இரண்டு கோல்கள் கொண்டு அடித்தவாறு தலைமைப் பாடகர் பாடுவார். அதை மற்றவர்கள் உடனே திருப்பிப் பாடுவர். இடையிடையே உரைநடை வடிவத்திலும் கதை சொல்வர். கேட்பதற்கு இனிய இசையமைந்த இக்கலையில் சிறந்த சாத்தூர்ப் பிச்சைக்குட்டி போன்றோர் கீழை நாடுகளுக்குச் சென்று பரப்பியுள்ளனர்.

**லாவணி :** எரிந்த கட்சி, எரியாத கட்சி என இரு கட்சிகளாகப் பிரிந்து சிவபெருமான் மன்மதனை எரித்தார் என முதற்கட்சியும், எரிக்கவில்லை, இப்பொழுதும் அவன் வாழ்கிறான் என எதிர்க் கட்சியும் பாடுகின்ற ஒரு நீண்ட இசை விவாதமே லாவணி எனப் படுகிறது. இரவு முழுதும் நிகழும்

**தெருக்கூத்து :** தொடக்கத்தில் தெருவில் வெள்ளைத் துணியைத் திரையாக இருவர் பிடிக்க நடத்தப்பட்ட தெருக்கூத்து 'நாட்டார் நாடகம்' என்றும் வழங்கப் பெறுகிறது. தெருக்கூத்தில் பாடலுக்கு மிகுந்த சிறப்பளிக்கப் பெறுகிறது. கட்டியங்காரன் என்றொரு பாத்திரம் தெருக்கூத்தில் மிக இன்றியமையாத ஒரு பாத்திரம். இரவு முழுவதும் கூத்து நடக்கும். இசை, ஆடல்

நடிப்பு எல்லாம் தெரிந்தவர்களாக இந்த நடிகர்கள் இருப்பர். இராமாயணம், மகாபாரதம், அரிச்சந்திரன் கதையிலுள்ள மயான காண்டம், நல்லதங்காள், வள்ளி திருமணம் ஆகியவற்றைத் தெருக்கூத்தில் மிகுதியும் காணலாம். வைகுண்ட ஏகாதசியன்று மதுரை போன்ற பெரிய ஊர்களில் கூடத் தெருக்கூத்து நிகழ் வதைக் காணலாம்.

கைவினைக் கலைகள் என்னும் தலைப்பில் ஐயனார், பாண்டி' கருப்பசாமி போன்ற சிறு தெய்வங்களின் கோயில்களில் காணப் படும் சிற்பங்கள், ஓவியங்கள், இல்லங்களில் வாயிலில் கோலப் பொடியால் இடும் கோலங்கள், வீடுகளின் உட்புறம் பண்டிகை நாட்களில் இடும் மாக்கோலங்கள், செம்மண் இடுதல் ஆகியவை யும், பானை வனைதல், கூடை, கொட்டான் ஆகியன பின்னுதல் போன்றவையும் அடங்கும்.

**வீரக்கலைகள்** என்னும் தலைப்பில் ஏ. என். பெருமாள் அவர்கள் சிலம்பாட்டம், மஞ்சுவிரட்டு, சேவல்போர், ஆட்டுகிடாச் சண்டை, வண்டிப் பந்தயம் போன்றவற்றைக் கூறுவர்.[9] இவற்றை வீர விளையாட்டுகளாகவும், கலைக்கண்கொண்டு நோக்குங்கால் கலைகளாகவும் கொள்ளலாம்.

மஞ்சுவிரட்டு தமிழகத்தில் சங்க காலத்திலிருந்தே இருந்து வரும் ஒரு வீர விளையாட்டு. வீரர்கள் தாம் இதில் பங்குகொள்ள முடியும். முன்பு 'ஏறு தழுவல்' என்ற பெயரோடு இருந்த இது இன்று 'மஞ்சுவிரட்டு' அல்லது 'ஜல்லிக்கட்டு' என்ற பெயர்பெற்று விளங்குகிறது. வீரபாண்டிய கட்டபொம்மன் வரலாற்றில் அவனது வலக்கரமாக விளங்கிய வெள்ளையத்தேவன், வெள்ளை யம்மாள் வளர்த்த காளையை அடக்கி அவளைத் திருமணம் புரிந்ததாகக் காண்கிறோம். இன்றும் பொங்கல் திருவிழா முடிந்த மறுநாளன்று-அதாவது மாட்டுப்பொங்கல் நாளில் மதுரை அருகே உள்ள அலங்காநல்லூரில் மிகச் சிறப்பாக மஞ்சுவிரட்டு நடத்தப் பெறுகிறது. அன்று பல சிற்றூர்களிலும் மஞ்சுவிரட்டு நடத்தப் படுகின்றன.

**சிலம்பாட்டம்** : சிலம்பப்போரும் கிராமங்களில் சிறப்பாகப் போற்றப்படும் ஒரு கலை. குமரி மாவட்டத்தில் இது சிறப்பாக நடைபெறுகிறது என்றறிகிறோம்.

**ரேக்ளா வண்டிப்பந்தயம் :** ஒருவர் மட்டுமே நன்கு அமரக் கூடிய மேலே அடைப்பில்லாத ஒருவகை வண்டி எனப்படுகிறது. இளமையான காளைகளைப் பூட்டி நூற்றுக்கணக்கான வண்டி

கள் பொங்கல் திருவிழாவை யொட்டிப் பந்தயத்திற்குப் புறப் படுவது மிகுந்த உற்சாகமும் இன்பமும் தரக்கூடிய காட்சியாகும்.

இனி இக்கட்டுரையின் இரண்டாவது பகுதியில் ஏனைய கலை களில் நாட்டுப்புறக் கலைகள் எவ்வளவு பாதிப்பு ஏற்படுத்தி யுள்ளன என்பதைக் காண்போம்.

ஏனைய கலைகள் என்னும்பொழுது திருந்திய கலைகள் எனப் படும் கருநாடக இசை, பரதநாட்டியம், திரைக்கலை, நாடகம் போன்றவற்றைக் கூறலாம். குறிப்பாக ஆயிரத்துத் தொள்ளா யிரத்து எண்பதில் ஏனைய கலைகளில் நாட்டுபுறக் கலைகளின் பாதிப்பைப் பற்றிக் கூற வேண்டியிருத்தலால், மதுரையில் நடந்த நான் கண்ட கேட்ட சில கலைநிகழ்ச்சிகளைக் கொண்டும், சில திரைப்படங்களைக் கொண்டும் ஓரளவு கூற முற்படுகின்றேன்.

பொதுவாகவே அண்மைக் காலத்தில் நாட்டுப்புறக் கலைகள் பால் பலரின் பார்வை திரும்பியுள்ளது குறிப்பிடத்தக்கதும் மகிழத் தக்கதும் ஆகும். பல்வேறு துறைகளில் இருப்போரும் நாட்டுப் புற வியலிலும், கலைகளிலும் கவனம் செலுத்திப் பல கருத்தரங்கு களும் நிகழ்ச்சிகளும் நடத்தி வருதலால் மக்களிடையே இக்கலை களைப் பற்றியும் இயலைப் பற்றியும் செய்திகள் பரவியுள்ளன.

அகில இந்திய வானொலியும், தொலைகாட்சியும் நாட்டுப் புறப் பாடல்கள், கதைப்பாடல்கள், வில்லுப்பாட்டு, ஆடல்கள் போன்ற பலவற்றையும் ஒலிபரப்பியும் காட்டியும் வருகின்றன. இவையெல்லாம் மற்ற கலைகளில் நாட்டுப்புறக் கலைகளின் பாதிப்பு ஏற்பட ஓரளவு காரணங்களாகின்றன. இனி ஒவ்வொன் றாகக் காண்போம்.

**கருநாடக இசை :** திருச்சி வானொலி நிலையத்தாரிடம் கருநாடக இசை வல்லுநர்களை நாட்டுப்புற இசை எந்த அளவுக்குப் பாதித் துள்ளது என்று கேட்டபொழுது பாதிப்பு என்பது மிகுதியும் இல்லை என்ற விடை கிடைத்தது. இக்கலையைப் பொறுத்த வரை 'துக்கடா' என்று சொல்லப்படும் சிறுபாடல்களில் மட்டுமே நாட்டுப்புற இசையின் பாதிப்பு சிறிது இருக்க முடியும். அப் பாடல்கள் கச்சேரிகளின் இறுதி அரைமணி அல்லது முக்கால் மணி நேரம் இடம்பெறும். அப்பொழுது சில இளங்கலைஞர்கள் மேலை நாட்டு இசை, இந்துஸ்தானி இசை, நாட்டுப்புற இசை ஆகிய

வற்றைப் புகுத்தி மக்களை மகிழ்விப்பதுண்டு. 'நந்தவனத்தில் ஓர் ஆண்டி' என்ற பாடலைப் புல்லாங்குழலில் முதலில் இசைத்து இரண்டாவது பகுதியில் அதனை மகுடியாக இசைத்தலைப் பல காலமாகவே மக்கள் கேட்டு மகிழ்கின்றனர். ஆயின் கருநாடக இசை இம்முறையில் காணவேண்டுமெனில் மிகக் கூர்ந்து நோக்குதல் இன்றியமையாதது. மற்றொரு சுவையான செய்தி மும்மூர்த்திகளில் ஒருவரான சத்குரு தியாகராஜ சுவாமி நாட்டுப் புற இசையின் சாயலில் பாடல்கள் பலவற்றை உருவாக்கினார் என்பர்.[10]

**பரத நாட்டியம்** : இக்கலையில் எண்ணற்ற இளைய தலை முறையினர், குறிப்பாகப் பெண்கள் ஈடுபடுகின்றனர். இக்கலை யிலும் முதலில் வேறு சாயல் எதுவுமிருப்பதில்லை. ஆனால் பிற் பகுதியில் வேறுவகையான ஆட்டங்கள் கலைஞர்களால் ஆடப் படுகின்றன. அவ்வாட்டங்களுள் நாட்டுப்புற ஆடலும் இடம் பெறும்.

முதலில் குறிப்பிடத் தகுந்தவர் செல்வி.பத்மா சுப்பிரமணியம். அபிநயத்திலும், பாவத்திலும் மிகத் தேர்ந்த இவர் ஆடலுக்கு மிக அழகாகப் பாடுபவர் இவரது அண்ணியாராகிய திருமதி. சியாமளா பாலகிருஷ்ணன். மற்ற பாடல்களெல்லாம் வழக்கம்போல் வந்து கொண்டிருக்க, திடீரென 'அம்மா மகமாயி' என்ற பாடலுக்கு ஆடினார் இக்கலைஞர். கம்பராமாயணக் காட்சிகள், சிலப்பதி காரக் காட்சிகள் போன்றவற்றை நாட்டியமாக்கும் வல்லுநராகிய இவர் நாட்டுப்புற ஆடலிலும் ஆர்வங்கொண்டவர். அனிதா ரத்தினம், பிரீதா ரத்தினம் ஆகிய இரு சகோதரிகள் மலையாள ''மோகினி ஆட்டம்'' ஆடுதலில் வல்லவர். அதற்கென்றே மலையாளப் பெண்கள்போல் வேடந்தரித்து முண்டும் வேட்டியும் அணிந்து, ஒரு புறமாகத் தூக்கிக் கொண்டையிட்டுப் பூச்சூடி, அவ் வாட்டத்திற்குத் தகுந்த இசை ஒலிக்க அவர்கள் ஆடுவர்.

சித்ரா விசுவேசுவரன் என்பார் தம் நாட்டியக் குழுவினரோடு தயாரித்து அளிக்கும் 'அஷ்டரச மாலிகா' என்ற பரதநாட்டிய நிகழ்ச்சியில் மீனாட்சியம்மைக்கும் சொக்கநாதருக்கும் திருமணம் நிகழப்போகிறது என்பதையறிந்து கிராமத்துப் பெண்கள் நெல் குத்துதல், நீரிறைத்தல், பூத்தொடுத்தல், புடைத்தல் போன்ற தாம் ஈடுபட்டிருந்த பல வேலைகளையும் விடுத்து அனைவரும்

சேர்ந்து அழகாகக் கும்மியடிக்கிறார்கள். இக்கும்மி ஏறத்தாழப் பதினைந்து நிமிடம் நிகழ்கிறது. அவையினரிடமிருந்து உற்சாக மான கைதட்டல் பெறுமளவிற்கு இது மிகச்சிறப்பாக அமைந் துள்ளது மதுரையில் நடன ஆசிரியர் ஜெயராமன் என்பார் பல பெண்குழந்தைகளுக்கு நாட்டியங் கற்பித்து வருகிறார். அவரு டைய பல சிறந்த நடனங்களுள் குறத்தி நடனமும் ஒன்று. அவரிடம் பயின்ற பல மாணவியர் குறவஞ்சிக் காட்சியைச் சித்தரிக்கும் குறத்தி நடனம் சிறப்பாக ஆடுகின்றனர். அதற்கு அவ்வாசிரியரே பாடுகின்றார்.

மதுரை இசைக்கல்லூரி முதல்வராகிய திருமதி. பிரேமலதா தம் கல்லூரி மாணவியரைக் கொண்டு அரும்பாடுபட்டு 'அழகர் குறவஞ்சி'யை அரங்கேற்றினார். பரத நாட்டியமும், நாட்டுப்புற நடனமும் இணைந்து வருகின்ற இக்காட்சி இன்பம் விளைவிக்கும் ஒன்று.

**நாடகக்கலை:** சென்னையில் உள்ள பல நாடகக் குழுக்கள் நாட்டுப்புறத் தாக்கம் மிகுதியும் இல்லாதவை. மேலும் கட்டுரை யாசிரியர்க்கு அவற்றைப் பற்றிய அறிவு மிகுதியும் இல்லை.

அண்மையில் நூறாவது காட்சிவிழாக் கொண்டாடிய ''தண்ணீர் தண்ணீர்'' என்ற நாடகாசிரியர் கோமல் சுவாமிநாதன் பாராட்டுக்குரியவர். எண்பதாம் ஆண்டு முழுவதும் அந்த நாடகம் சென்னையிலும் மற்ற இடங்களிலும் நடத்தப்பெற்றுள்ளது. முழுக்க முழுக்க 'அத்திப்பட்டி' என்ற கிராமத்தில் நடக்கும் கதை அது. கிராமச் சூழலை நன்கு அமைத்துக் காட்டுதலோடு திருநெல்வேலி மாவட்டத்துப் பேச்சையும் நடிகர்கள் பேசிக்காட்டு கிறார்கள். பாறைகளைத் தகர்த்துத் தங்கள் கிராமத்துக்குத் தண்ணீர் கொண்டு வர முயலுகையில்,

ஆயர்களைக் காப்பதுக்கு —ஐஏல்
பட்சமுடன் தாங்கி நின்றாய்

போன்ற பாடல்களைப் பாடி மகிழ்வித்தார்கள்.

மதுரையில் உள்ள நாடக நடிகர் சங்கத்தில் நடிக்கப்படும் நாடகங்களில் இன்றும் கோமாளி வேடந்தாங்கி நடிப்பவர் நாட்டுப்புறப் பாடல்களைப் பாடுகிறார்.

'ஆத்தோரமாய் இருக்கும்
காத்தாடித் தோப்புக்குள்ளே
சேக்காளி யோட நான்
உலாத்தப் போனேன்
கண்ணாலே கண்டேன்
ஒரு பெண் ணாளை - அவ
பப்ளிக்கா ரோட்டுமேலே
நின்னாளே''

போன்ற பாடல்களை நாட்டுப்புற இசையிலேயே பாடுவார்.[11]

**திரைப்படக்கலை**

அண்மைக்காலத்தில் நாட்டுப்புறத்தில் அமைந்த கதைகளுக்குத் திரைப்படத்துறையில் நல்ல வரவேற்பு உள்ளது. சில ஆண்டுகளுக்கு முன்னால் வெளிவந்த 'அன்னக்கிளி' என்ற படத்தில் அமைந்த பாடல்கள் பல நாட்டுப்புறப் பாடல்கள். அவை எத்துணை இன்பந் தந்தன என்று பலரும் அறிவர். அதற்கு இசையமைப்பாளர் இளையராஜா. அவரும் அவரது தம்பியாகிய கங்கை அமரனும் நாட்டுப்புற இசைக்குச் சிறப்பிடம் கொடுப்பதைத் திரைப்பட ரசிகர்கள் அறிவர்.

எண்பதில் வெளிவந்த படங்கள் மொத்தம் நூற்றுஏழு எனப் 'பேசும்படம்' என்னும் திரைப் பத்திரிகை கூறுகிறது. இவற்றில் கட்டுரையாசிரியர் நான்குபடங்களே பார்த்திருந்தாலும் பலரிடம் கேட்டறிந்த செய்திகள் இங்கு ஆதாரங்களாகின்றன.

கிராமத்துச் சூழலில் எடுக்கப்பட்ட திரைப்படங்கள் 'ஒருகை ஓசை', 'ஒத்தையடிப் பாதையிலே', 'கிராமத்து அத்தியாயம்', 'சாவித்திரி', 'தைப்பொங்கல்', 'பூட்டாத பூட்டுக்கள்' 'முரட்டுக் காளை' போன்ற படங்களாகும்.

கிராமச் சூழலின்றி அமைந்த படங்கள் சிலவற்றில் கூட நாட்டுப்புறப் பாடல்களின் தாக்கத்தைக் காண்கிறோம். பாடல்கள், கரகாட்டம், தெருக்கூத்து, மஞ்சுவிரட்டு, கொம்பாட்டம் போன்றவை திரைப்படக் கலையில் சிறந்த இடம்பெற்றுள்ளன.

**பாடல்கள்:** திரைப்படங்களில் நாட்டுப் பாடல்களின் தாக்கத்தைப் பற்றிக் கட்டுரையொன்று வெளிவந்துள்ளது.[12] சோமலெயும் தம் நூலில் ''நாட்டுப் பாடல்களின் இசைச்சிறப்பு,

ஒலிச்சிறப்பு, தாளச்சிறப்பு, உணர்ச்சியானபொருள், பேச்சு நடைப் பாணி, இயற்கையோடு இயைந்த தன்மை ஆகியவை எந்தத் திரைப்படத்துக்கும் ஏற்றம் தருகின்றன''[13] என்று கூறுவர். எதிர் வீட்டு ஜன்னல் என்னும் திரைப்படத்தில்,

'எதிர்வீட்டு ஜன்னலில் பார்த்தமுகம்'

என்று தொடங்கும் பாடலும், 'ஒத்தையடிப் பாதையிலே' என்ற படத்தில் அமைந்துள்ள அனைத்துப் பாடல்களும் அழகிய நாட்டுப்புற இசையைக் கொண்டவையாகும்.

கரும்புவில் என்னும் படத்தில் 'மீன்கொடி தேரில் மன்மத ராஜன் ஊர்வலம் போகின்றான்' என்ற பாடலுக்கு முன்னர்

'ஓலா ஓலா ஓலலலா
ஓல ஓலா ஓல ஓல ஓலா'

என்ற இசை இசைக்கப்படுகிறது. இவ்விசை கேரளத்தின் கடற் கரையில் அமைந்த நாட்டுப்புற மக்களின் இசை என அறிகிறோம். இதே திரைப்படத்தில் உறுமிமேளம் ஒலிக்க, மலேசியா வாசு தேவனும் பிறரும் பாடுகின்ற,

'அத்தை மகளும் எனக்காக
ஆறுவருசம் காத்திருந்தா'

என்ற பாடல் மிகச் சிறப்பாக அமைந்துள்ளதாக அறிகிறோம்.

நகரத்தில், கல்லூரியில் நடக்கும் ஒரு கதையாகிய 'ஒருதலை ராக'த்தில் இடம்பெற்ற,

'கூடையிலே கருவாடு'

என்று தொடங்கும் பாடல் நாட்டுப்புற இசையின் சாயலில் அமைந்த இனிய பாடலாகும்.

'பில்லா' என்ற ஒரு கொலையாளியின் பெயரில் கொலை, கொள்ளை போன்றவை நிறைந்த ஒரு படத்தில் கூட நாட்டுப்புற இசை நுழையாமலில்லை.

''வெத்திலையைப் போட்டேண்டி
புத்தி கொஞ்சம் மாறுதடி
புத்தி கொஞ்சம் மாறையிலே
சத்தி கொஞ்சம் ஏறுதடி

மாமாமக ரதியே—என்
சீனி சக்கரை கிளியே—அடி
மாமாமக ரதியே—என்
சீனி சக்கரை கிளியே''

என்ற பாடல் சிறப்பாக நாட்டுப்புற இசையில் அமைந்துள்ளது.

'புதிய தோரணங்க'ளிலும்

'எங்கம்மா மகராணி
எல்லாம் உன்கைராசி'

என்ற பாடலின்பொழுது நடனமும் இணைந்து படமாக்கப் பட்டுள்ளது.

'முரட்டுக்காளை' கிராமத்துச் சூழலில் அமைந்த படம். அதில் மேலைநாட்டு இசையில் அமைந்த 'எந்தப் பூவிலும் வாச முண்டு' என்ற பாடலும் உள்ளது. இருப்பினும்,

'பொதுவாக எம்மனசு தங்கம் ஒரு
போட்டியின்னு வந்துவிட்டா சிங்கம்'

போன்ற பாடல்கள் நாட்டுப்புற இசையில் அமைந்து மகிழ்வூட்டு கின்றன. குலவையிடுதல் இப்பாடலின் இடையிலேயே ஒலித் தலைக் கேட்கலாம். ஆயின் அது நாட்டுப்புறப் பெண்டிர் குலவை யிடுதலைப் போலில்லை என்ற கருத்துமுள்ளது. இருப்பினும் அதன் சிறப்பையும் செம்மையையும் ஆராய்வது இங்கு நோக்கமாக இல்லாததால் எந்தெந்த நாட்டுப்புறக் கலைகளைத் திரைக் கலைஞர்கள் கையாளத் தொடங்கியுள்ளனர் என்பதை மட்டுமே காண்போம்.

'சின்னஞ்சிறு கிளியே' என்ற படத்தில்,

'கேளுங்களே கேளுங்களே
பஞ்சாயத்துக் காரங்களே
பாயெ விரிச்சுப் படுத்திருந்தேன்
பசுபதி போல
பாவிமனுசன் அடிச்சஅடி
பட்ட எடமெல்லாம் வீங்கிப் போச்சு
பணியாரம் போல'

என்ற ஒரு பாடல் நாட்டுப்புற இசையில் அமைந்துள்ளதாக அறிகிறோம்.

'கிராமத்து அத்தியாயம்' என்னும் படத்தில்,

'ஆத்து மேட்டிலே ஒரு பாட்டுக்கேக்குது'

என்ற இனிய பாடலும் நாட்டுப்புற இசையில் அமைந்துள்ளது.

**கரகாட்டம்:** 'முரட்டுக்காளை' படத்தின் தொடக்கத்தில் 'கரகாட்டம்' காட்டப்பெறுகிறது. புதுக்கோட்டையைச் சேர்ந்த 'ராஜம்மாள்' என்ற பெண்—கரகாட்டத்தைத் தொழிலாகக் கொண்டவர் ஆடுகிறார். சிவகங்கை நாட்டுப்புற இசைக் குழுவினர் நையாண்டி மேளம் வாசிக்கின்றனர். இவர்களைப் பயன்படுத்திக் கொள்ளும் திரைக்கலை வல்லுநர்கள் இவர்களின் பெயர்களையும் விளம்பரப்படுத்தினால் இந்த நாட்டுப்புறக் கலைஞர்களுக்கும் அந்த விளம்பரங்களின் மூலம் நல்வாழ்வு கிட்டும். கலைகளும் செழித்தோங்கும்.

முன்பே வெளிவந்த 'கன்னிப்பருவத்திலே' என்ற படத்திலும் கூட முதல் பாட்டில் கரகாட்டம் மிகச் சிறப்பாகப் படமாக்கப் பெற்றுக் காட்டப்பெற்றதென அறிகிறோம்.

**தெருக்கூத்து:** பல ஆண்டுகளுக்கு முன்பு வெளிவந்த 'நவராத்திரி' என்னும் திரைப்படத்தில் தெருக்கூத்து அறிமுக மானது. இப்பொழுதும் நாட்டுப்புறக்கலைகளில் தெருக்கூத்துக்குச் சிறந்த இடம் இருத்தலை 'எங்கே தங்கராஜ்' (Wanted Thangaraj) 'கிராமத்து அத்தியாயம்' போன்ற திரைப்படங்கள் உணர்த்து கின்றன.

'எங்கே தங்கராஜ்' என்ற படத்தில் தெருக்கூத்து வல்லுந ராகிய புரிசை கண்ண தம்பிரானின் கூத்தே காட்டப்பெறுகிறது.

'கிராமத்து அத்தியாய'த்திலும் அத்தகைய நாடகமொன்று காட்டப்பெறுகிறதாம். 'தைப்பொங்கல்' எனும் படம் மஞ்சு விரட்டைக் கொண்டே தொடங்குகிறது. வீர விளையாட்டாகவும் கலையாகவும் கருதப்படும் இது பலர் உள்ளங்களைக் கவர்வதில் வியப்பில்லை.

'முரட்டுக்காளை'யிலும் கதாநாயகன் ரஜினிகாந்த் மஞ்சு விரட்டில் ஈடுபட்டுக் காளையை அடக்குகிறார்.

**கொம்பாட்டம்:** மான் கொம்பு போன்றமைந்த இரு கொம்பு களை இரு கைகளிலும் வைத்துக்கொண்டு இரு வீரர்கள் ஆடும் வீரவிளையாட்டு அல்லது வீரக்கலை என்று இதனைக் கூறலாம்.

'அன்புக்கு நான் அடிமை' என்னும் படத்தில் கதாநாயகன் இத்தகைய 'கொம்பாட்டம்' ஆடுகிறார். இதற்கு முன்னர் வந்த 'உழைக்கும் கரங்கள்' என்ற திரைப்படத்திலும் இதே கொம் பாட்டத்தை மக்கள் திலகம் எம். ஜி. இராமச்சந்திரன் ஆடியதாக அறிகிறோம்.

இவ்வாறு நாட்டுப்புற இசை, கூத்து போன்ற கலைகள் திரைப்படக் கலையில் புகுவதற்கு நாட்டுப்புற இசையில் மிக்க ஆர்வமும் பயிற்சியும் கொண்ட இளையராஜா, கங்கை அமரன் ஆகியோரும், அக்கலைகள் மக்களால் போற்றப்பட்டு வெற்றி யடையப் பாடகர்களான மலேசியா வாசுதேவன, எஸ் ஜானகி ஆகியோரும் மிகவும் உதவி செய்வோர் ஆவர்.

அவ்வாறே இயக்குநர் பாரதிராஜாவும் நடிகர் பாக்கியராஜும் கிராமச் சூழலில் அமைந்த படங்களைத் தயாரிப்பதிலும் நடிப்பதி லும் வல்லவர்களாக இருத்தல் நாட்டுப்புறக் கலைகள் திரைப் படங்கள் மூலம் பெரிதும் பரவுதற்குக் காரணமாகிறது.

## அடிக்குறிப்புகள்

1. பிரேமலதா, வே., மதுரை இசைக்கல்லூரி முதல்வர் உரை யாடலில் பெற்ற கருத்து.
2. Brunvand Jan Harold, 'The Study of American Folklore, (New york, W.W. Norton&Company Inc, 1968), p. 282.
3. 'சோமலெ, **தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்,** (இந்தியா, நேஷனல் புக் டிரஸ்ட், 1974,) ப. 195.
4. மேற்படி, ப. 196.
5. குணசேகரன், கே, ஏ., 'கரகாட்டத்தின் தொடர்புநிலை ஆட்டங்கள்'—**மதுரை காமராசர் பல்கலைக்கழக ஆய்வாளர் கள் 'புதன்வட்ட'**த்தில் வாசிக்கப்பெற்ற கட்டுரை.
6. சுப்பிரமணியன், ச. வே., (தொகுப்பு) **தமிழ் நாட்டுப்புற இயல் ஆய்வு',** (சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1979,) ப. 486.
7. பெருமாள், ஏ. என்., **தமிழக நாட்டுப்புறக் கலைகள்,** (சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1980), ப. 20.

8 சோமலெ, அதே நூல், ப. 183.

9. பெருமாள், ஏ. என் , அதே நூல், பக். 62-71.

10. பிரேமலதா, வே., மதுரை இசைக்கல்லூரி முதல்வர் கூறியது. தியாகராஜரின் 'நௌகா சரித்திரம்' போன்றவை நாட்டுப் புற இசையின் சாயல் கொண்டவை என்பர்.

11. இராமசுவாமி, மு., தமிழியல் துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம்—கூறிய தகவல்.

12 ரமேஷ், வி. என்., 'தாமரை' (மாத இதழ்) ஆகஸ்ட், 1980.

13. சோமலெ, அதே நூல், ப 182.

இக்கட்டுரையில் காணப்பெறும் திரைப்படத்தில் இடம் பெற்றுள்ள நாட்டுப்புறக் கலைகள் பற்றிய பல தகவல்களைத் தந்தவர்கள் மதுரை காமராசர் பல்கலைக்கழகத் தமிழியல் துறை யைச் சேர்ந்த டாக்டர் மு. இராமசுவாமி, டாக்டர் மு. மணிவேல், திரு. கே. ஏ. குணசேகரன், எழுத்தர் திரு. மோதிலால் ஆகியோர் ஆவர்.

# தமிழ்ச் சுவடியிலிருந்து எண்பதில் பதிப்பிக்கப்பெற்ற நூல்கள்

பூ. சுப்பிரமணியம்

**முன்னுரை**

தமிழர் தம் எண்ணங்களை, கருத்துக்களை ஓலைச்சுவடிகளில் வடித்து வைத்துள்ளனர். அக்கருத்துக்களுள் சில அச்சு வடிவம் பெற்றுத் தமிழரிடையே உலவுகின்றன. இன்னும் அச்சு இயந்திரத்தைக் காணும் பேறுபெறாத கருத்துக்கள் பல சுவடி வடிவிலேயே முடங்கிக் கிடக்கின்றன. அவற்றையும் அச்சிட்டு மக்களிடையே உலவவிடும் பணியினை இக்காலத்தும் சிலர் மேற்கொண்டு வருகின்றனர். தமிழ்நாடு அரசும் அச்செயலுக்குத் துணைபுரிந்து வருகிறது. அவ்வாறு ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதாம் ஆண்டில் சுவடியிலிருந்து அச்சுவடிவம் பெற்று வெளிவந்துள்ள நூல்களைப் பற்றிய விளக்கங்களே இப்பகுதியில் அமைந்துள்ளன. இவ்விளக்கங்கள் பொருள் அடிப்படையில் வரிசைப்படுத்தி அமைக்கப் பெற்றுள்ளன.

**1. அகராதி**

1. பழமொழி அகராதி
2. பாரதி தீபம்

**2. அட்டவணை**

3. தமிழ்ச் சுவடிகளின் அகரவரிசை—அட்டவணை

3. இலக்கணங்கள்

4. நன்னூல் மூலமும் கூழங்கைத் தம்பிரான் உரையும்

5. பிரபந்தத் திரட்டு

6. பிரபந்த தீபம்

4. இலக்கியம்

7. திருக்குறள்—பரிமேலழகர் உரை—நுண்பொருள்மாலை

5. சாத்திர நூல்கள்

8. கூவநூல்

9. மனை இயல் சாத்திரம்

6. சிற்றிலக்கியங்கள்

10. கோவை இலக்கியம்—கரந்தைக் கோவை

11. சேயூர் முருகன் உலா

12. திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத்தமிழ்

13. திருநீர்மலை ரங்கநாயகன் பேரில் கலித்துறைமாலை

14 பணவிடு தூது

7. நாடக இலக்கியங்கள்

15. அன்னீத நாடகம்

16. சின்ன மகிபன் குளுவ நாடகம்

17. பொய்யாமொழியீசர் குறவஞ்சி

18. சாங்கேயன் குறவஞ்சி

19. சிக்கல் நவநீதேசுவர சுவாமி குறவஞ்சி

20. மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சி நாடகம்

8. மருத்துவ நூல்கள்

21. நயன மருத்துவ விதி

22. தன்வந்திரி வைத்திய சிந்தாமணி—1500

23. வைத்திய அகராதி

இவற்றுள்,

1. கோவை இலக்கியங்கள்—கரந்தைக் கோவை

2. திருநீர்மலை...கலித்துறைமாலை

3. பழமொழி அகராதி

4. மருத்துவ நூல்கள்

5. மனைஇயல் சாத்திரம்

ஆகியவை தட்டச்சு வடிவில் உள்ளன. இவை உலகத் தமிழா ராய்ச்சி நிறுவன நூலகத்தில் இருக்கின்றன இவை ஐந்தும் சுவடி இயல் கல்வியின் இறுதியில் அளிக்கப்பெற்ற ஆய்வேடுகளாகும். ஆயினும் சுவடிகளிலிருந்து முறையாகப் பதிப்பிக்கப் பெற்றவை யாகும். அப்படியே அச்சிடுவதற்கு ஏற்ற நிலையில் அமைந் துள்ளன. அந்நூல்களைக் காணவிழைவாருக்கு முழுமையாகப் பயன்படும் என்பதனால் அவையும் இப்பகுதியில் சேர்க்கப் பெற்றுள்ளன.

இப்பகுதியில் விளக்கம் தரப்பெற்றுள்ள நூல்களைத்தவிர,

| நூல் பெயர் | பதிப்பாசிரியர் | வெளியீடு |
|---|---|---|
| 1. தந்திவனப் புராணம் | தா.வே வீராசாமி | உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20. |
| 2. மனைநூல் | பூ. சுப்பிரமணியம் | ,, |
| 3. காதல் கொத்து | ம. இராசேந்திரன் | தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை. |
| 4. கொடுமணல் இலக்கியங்கள் | செ. இராசு | ,, |
| 5. சங்கர மூர்த்திக் கோவை | சுந்தரமூர்த்தி | ,, |
| 6. சுசீலவள்ளல் அம்மானை | எஸ்.சௌந்தர பாண்டியன் | ,, |
| 7. திருக்கீழ்வேளூர் உலா | அ. இராசேந்திரன் | ,, |
| 8. திருவேங்கட நாதன் வண்டு விடு தூது | மு. சண்முகம்பிள்ளை | ,, |

| | | |
|---|---|---|
| 9. பாளையப்பட்டுக் களின் வம்சாவளி கள் தொகுதி-I | க. குழந்தைவேலன் | ,, |
| 10. ,, தொகுதி-II | ,, | ,, |

போன்ற பல நூல்களும் சுவடிகளிலிருந்து வெளியாகியுள்ளன. சுவடி இயல் மாணவர்களால் கொடுக்கப்பெற்ற கீழ்க்கண்ட ஐந்து ஆய்வேடுகள் தட்டச்சு வடிவில் உள்ளன. அவற்றின் விபரங்களும் அவற்றைப் பதிப்பித்தோரும் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| 1. | கரந்தை நல்லபிள்ளை பேரில் சித்திரமடல் | கோ. பிரேமகுமாரி |
| 2. | பிரபந்தத்தமிழ் | லலிதா நடராசன் |
| 3. | பூசையந்தாதி | க. பேபி |
| 4. | மீனாட்சியம்மன் திருப்புகழ் | இரா. மாதவன் |
| 5, | முருகன் அந்தாதி | வே. சதாசிவம் |

இவை ஐந்தும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகத்தில் உள்ளவையாகும். மேலேகண்ட பத்து நூல்களுள் வரிசை எண் மூன்று முதல் பத்து முடிய உள்ளவை எங்கு கிடைக்கும் என்னும் விவரம், இடப்பெயர் முதலியன அறிய இயலவில்லை. இவை அனைத்தும் 'எண்பதில் தமிழ்' என்னும் கால எல்லையில் அடங்காமையின் இவற்றின் விளக்கம் இப்பகுதியில் சேர்க்கப் பெறவில்லை.

**1. பழமொழி யகராதி**

| | |
|---|---|
| பதிப்பாசிரியர் | : மா. தியாகராசன் |
| நூலாசிரியர் | : — |
| சுவடி | : அரசினர் சுவடி நூலகம், சென்னை-5. |
| வெளியீடு | : [தட்டச்சு வடிவில் உள்ளது] உலகத்தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், சென்னை-600 020. |
| பக்கம் | : 113 |
| விலை | : — |

இந்நூல் சுவடிஇயல் கல்வி முடிவில் அளிக்கப்பெற்ற ஆய்வேடாகும் மேலும் வழக்கில் இருந்துவந்த பழமொழிகளைத் தொகுத்து எழுதி வைக்கப்பெற்றிருந்த ஏட்டின் பதிப்பாகும்.

இந்நூலினுள் 1861 பழமொழிகள் இடம்பெற்றுள்ளன. இவற்றுள் மாணவர்களுக்குப் பயன்படுபவை பலப்பல வாழ்க்கையில் பயன்படுவன, வேடிக்கையாக அமைவனவும் உள்ளன.

பெரும்பாலான பழமொழிகள் கொச்சை நடையில் உள்ளன.

'பழமொழி' என்ற பெயர், இப்பெயரில் இலக்கியங்கள், பழமொழிகளின் வகை, ஆய்வு நூல்கள் போன்ற செய்திகள் அடங்கிய ஆய்வுரை பதிப்பு முன்னுரையாக அமைந்துள்ளது பதிப்பாசிரியர் பழமொழிகளைத் தொகுத்து வெளியிடப்பட்ட நூல்கள் சிலவற்றையும் குறிப்பிட்டுள்ளார் அந்நூல்களில் இல்லாத சில பழமொழிகளே இப்பதிப்பில் இடம்பெற்றுள்ளன. ஆயினும் ஏட்டிலிருந்தவற்றைத் தொகுத்து வெளியிடும் முயற்சியில் இந்நூலும் ஒன்றாக அமைந்துள்ளது.

**2. பாரதி தீபம்**

| | | |
|---|---|---|
| 1. | பதிப்பாசிரியர் | : மு. சண்முகம் பிள்ளை |
| 2. | நூலாசிரியர் | : திருவேங்கட பாரதி |
| 3. | சுவடி | : டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகம், சென்னை-41. |
| 4. | வெளியீடு | : சென்னைப் பல்கலைக் கழகம் |
| 5. | பக்கம் | : 16+130=146 |
| 6. | விலை | : ரூ. 5.50 |

தீபம் என்பது விளக்கு. பொருள்களின் பெயர்களை விளக்குகிறது. சொற்களின் பொருள்களை விளக்குகிறது. எனவே தீபம் எனப்பெற்றது. திருவேங்கட பாரதி இயற்றிய நூல் ஆதலின் 'பாரதி தீபம்' என்று பெயர் பெற்றது.

அறுநூற்றறுபத்தைந்து கட்டளைக் கலித்துறைப் பாக்களால் ஆனது. பதினைந்தாம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பர் பதிப்பாசிரியர். இது ஒரு நிகண்டு நூல். '**பாரதி தீப நிகண்டு**' என்று கூறினால் பொருள் விளங்கிவிடும்.

தெய்வப்பெயர்த் தொகுதி முதலாகப் பலபெயர்க் கூட்டத்து இயற்பெயர்த் தொகுதி ஈறாகப் பன்னிரண்டு தொகுதிகளாக ஆக்கப்பெற்றுள்ளது

நிகண்டு என்பதனால் சொற்களுக்குப் பொருள் கூறும் அகராதி என்றாகிறது. நிகண்டு முறையில் நமக்குத் தேவையான சொற்களுக்கு எளிமையாகப் பொருள் காண இயலாது. எனவே எளிமையாகப் பொருள் அறிய இரண்டு வகையான அகராதி களைத் தந்திருக்கிறார் பதிப்பாசிரியர். ஒன்று முதல் பத்துத் தொகுதிகளில் உள்ள சொற்களுக்குரிய பொருளகராதி. மற்றொன்று பதினொன்று, பன்னிரண்டாம் தொகுதிகளில் உள்ள பலபொருள் ஒருசொல், தொகைப் பெயர்கள் ஆகியவை அடங்கிய சொல் அகராதி. இவை இரண்டும் சொற்களை எளிய முறையில் கண்டறியத் துணைபுரிவனவாகும்.

பதிப்பாசிரியரின் முகவுரை நூலின் சிறந்த ஆராய்ச்சி உரை யாக அமைந்துள்ளது. நூலாசிரியரின் வரலாறு பல சான்று களுடன் தெளிவாக எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது. முந்தை யோர் கருத்துக்களை ஆசிரியர் எடுத்துக் கூறும்முறைகள் பலவும் தொகுத்து அளிக்கப்பெற்றுள்ளன. நூலின் தனி ஆட்சிகள் மிகவும் நுணுக்கமாக ஆய்ந்து தொகுக்கப் பெற்றுள்ளன.

**3. தமிழ்ச்சுவடிகளின் அகரவரிசை அட்டவணை தொகுதி—4.**

(An Alphabetical Index of Tamil Manuscripts—
Volume IV)

| | |
|---|---|
| பதிப்பாசிரியர் | : **ஆர். பாஸ்கரன், எம். ஏ.,** |
| நூலாசிரியர் | : — |
| சுவடி | : **அரசினர் சுவடி நூலகம், சென்னை-5.** |
| வெளியீடு | : **அரசினர் சுவடி நூலகம், சென்னை-5.** |
| பக்கம் | : 567 |
| விலை | : — |

சென்னைப் பல்கலைக்கழகக் கட்டிடத்தில் இயங்கி வருகிறது அரசினர் சுவடி நூலகம். அந்த நூலகத்தில் தமிழ்மொழியில்

சுமார் பன்னிரண்டாயிரம் சுவடிகள் உள்ளன. அவை ஓலைச் சுவடிகளாகவும் தாள் சுவடிகளாகவும் உள்ளவை.

அச்சுவடிகளைப் பற்றி அறிவதற்கு உதவியாக நூலகத்தினர் இருவகை அட்டவணைகளைத் தயாரித்து அச்சிட்டுள்ளனர். அவற்றுள் ஒருவகை—அகரவரிசை அட்டவணை (Alphabetical Index) மற்றொரு வகை—விளக்க அட்டவணை ஆகும் (Descriptive Catalogue).

**அகரவரிசை அட்டவணை**

1. சுவடிகளின் பெயர்
2. ஆசிரியர்
3. பொருள்
4. ஓலை/தாள்
5. தன்மை
6. நூலகக் குறிப்பு எண்

ஆகிய தலைப்புக்களில் இந்த அகரவரிசை அட்டவணைகள் தயாரிக்கப் பெற்றுள்ளன. ஏற்கெனவே மூன்று தொகுதிகள் வெளியாகியுள்ளன. அத்தொகுதிகள் வெளியான பிறகு நூலகத்தில் சேர்ந்த சுவடிகளுக்குரிய அட்டவணை நான்காவது தொகுதியாக வெளியிடப்பெற்றுள்ளது.

இவ்அட்டவணையுள் 5537 சுவடிகளின் பெயர் முதலிய விவரங்கள் அடங்கியுள்ளன. இவை ஓலைச்சுவடிகளும் தாள் சுவடிகளுமான இருவகையும் அடங்கியவை. முழுமையான சுவடிகள் எவை, குறையாக உள்ளவை எவை என்பனவும் சுட்டப் பெற்றுள்ளன.

இவை, இலக்கணம், இலக்கியம், கல்வெட்டு, கைபீது, சிற்றிலக்கியம், சைவம், ஞானம், தத்துவம், தந்திரம், தோத்திரம், நாடகம், நாட்டுப்புற இலக்கியம், நிகண்டு, புராணம், மந்திரம், மருத்துவம், யோகம், வரலாறு, வமிசாவளி, வைணவம் போன்ற பலவகைப் பொருள்களைச் சார்ந்த சுவடிகளாகும்.

சுவடிகளைக் காணவிரும்புவோருக்கு, அவரவர் விரும்பும் பொருளில் முதல்நிலை வழிகாட்டியாக அமைவது இவ் அட்டவணை.

4. நன்னூல் மூலமும் கூழங்கைத் தம்பிரான் உரையும்

| | |
|---|---|
| பதிப்பாசிரியர் | : அ. தாமோதரன், ஹைடல்பெர்க் பல்கலைக்கழகம், |
| (கையெழுத்துப் பதிப்பு) (Mimeograph) | : மேற்கு ஜெர்மனி. |
| உரையாசிரியர் | : கூழங்கைத் தம்பிரான் |
| சுவடி | : பிரிட்டிஷ் நூலகம், கீழ்திசைப் பகுதி-2724. இலண்டன். |
| வெளியீடு | : தெற்காசிய நிறுவனம், ஹைடல்பெர்க் பல்கலைக்கழகம், மேற்கு ஜெர்மனி. |
| பக்கம் | : 28+246=274 |
| விலை | : — |

இவ்வுரை மயிலைநாதர் உரையைப் பின்பற்றி எழுதப் பெற்றுள்ளது. மயிலைநாதர் உரை பொழிப்புரையாக அமைந்தது. இவ்வுரை நூல் முழுமையும் பதவுரையாக அமைந்துள்ளது.

மயிலைநாதர் உரையில், ''முன்னோர் மொழி பொருளே யன்றி'' என்னும் வெண்பா, சார்புநூல் பற்றிய நூற்பா உரைக்கு மேற்கோளாக எடுத்துக்காட்டப்பெற்றுள்ளது. ஆனால் இவ் வெண்பாவினைப் பத்தாம் நூற்பாவாகவே அமைத்து உரை கூறி யுள்ளார் இவ்உரையாசிரியர். இது பிற உரையாசிரியர்கள் கையாண்டுள்ள முறையேயாகும். உரை, உவமையோடு விளக்க மாகக் கூறப்பெற்றுள்ளது.

சுவடியில் மூலபாடம் இல்லாத உரைப்பகுதிகளுக்கு மூல பாடத்தை எழுதி நிறைவுசெய்த பணி பதிப்பாசிரியரைச் சார்ந்தது. சுவடியில் நூற்பாக்களின் எண்கள் இயல் தோறும் தனித்தனியே கொடுக்கப் பெற்றுள்ளன. அவ் எண்கள் நூற் பாவின் உரை முடிவில் உள்ளன. எனவே நூற்பாக்களுக்குத் தொடர் எண் கொடுத்து, எடுத்துக்காட்டி எளிமையாக்கியிருக் கிறார் பதிப்பாசிரியர்.

''ஆசான் உரைத்தவை''[1]

''அவ்வினையாளரொடு''[2]—இரண்டு நூற்பாக்களையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொண்டு உரை காணப் பட்டுள்ளது. இதேபோல,

'மூன்றாறு உருபு'[3] ; 'அதுமுன்வரும் அன்று'[4]
ஆகிய இரண்டு நூற்பாக்களும் இணைக்கப்பட்டுள்ளன.

"வெருக்குக்கண், எருத்துக்கால்; செவி, தலை, புறம் எனப் பிற மெய்கள் மிக்கன"[5]

"வெருக்குக்கண், வெருக்குக்கால்; செவி, தலை, புறம் என உரைப்பற்றுக்கோடாகிய பிறமெய்யும் மிக்கது."[6]

இவ்வாறு பலவிடத்தும் உரையாசிரியர் தம் கருத்திற்கேற்ப உரையில் சில சொற்களையும் சான்றுகளையும் மாற்றி அமைத்துள்ளார். சிலவிடத்து விரிவாகவும் கூறிச் செல்லுகிறார்.

'நன்னூலுக்குப் பல உரைகள் உண்டென்று தக்கோர்கள் சொல்வர். அவற்றுள் இப்போது தெரிந்தவை வருமாறு:

1. மயிலைநாதர் உரை: இது 1980-ஆம் வருஷத்தில் என்னால் அச்சிடப் பெற்றுள்ளது.

2. ... ... ... ... ... ... ... ...

3. ... ... ... ... ... ... ... ...

5. கூழங்கைத் தம்பிரான் உரையென ஒரு உரை உண்டென்று கேள்வி. அதுவும் கிடைக்கவில்லை"[7] என்று கூறிக் குறைபட்டுக் கொள்ளுகிறார் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள்.

அக்குறையினை நீக்கிய பெருமையை இப்பதிப்பாசிரியர் முழுமையாகப் பெறுகிறார்.

**5. பிரபந்தத் திரட்டு**

| | |
|---|---|
| பதிப்பாசிரியர் | : அன்னிதாமசு |
| நூலாசிரியர் | : — |
| சுவடி | : டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் நூலகம், சென்னை-41. |
| வெளியீடு | : உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600 020. |
| பக்கம் | : 32 + 382 = 414 |
| விலை | : ரூ. 16/- |

தமிழ் இலக்கியங்கள் 'பிரபந்தம்' என்னும் பெயராலும் வழங்கப் பெறுகின்றன. அப்பிரபந்தங்களின் அமைப்பை வகைப் படுத்திக் கூறுகிறது இந்நூல். எனவே இதனைப் பிரபந்தத்திரட்டு என்றனர். பாட்டியல் இலக்கணம் எனவும் கூறலாம்

இந்நூல் பத்து இயல்களால் ஆனது. அவற்றுள், **'முதலாவது திரட்டியல்'** என்பது தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களின் இலக்கணங்களைக் கூறுகிறது.

**'இரண்டாவது புறநடையியல்'** என்பது திரட்டியலில் கூறப் பெறாத பிரபந்தச் செய்திகள் பலவற்றைச் சுட்டிச் செல்லு கிறது

**'மூன்றாவது கருப்பொருள் இயல்,** இதனுள் பாடுபொருள்களும் பாடல்அமைப்புகளும் எடுத்துக் காட்டப்படுகின்றன.

**'நான்காவது பொருத்த இயல்'** இவ்வியல் மங்கலம் எழுத்து, சொல், தானம், பால் முதலிய நூலுக்குரிய பொருத்தங் களைச் சுட்டுகிறது.

5. உவமாரூட வியப்பு சார்வியல்
6. விசேடவணி வியப்பு சார்வோரியல்
7. சாதி மரபு சார்வோரியல்
8. குலநில வியப்பு சார்வோரியல்
9. ஒழிபியல்—ஆகிய இயல்கள் முறையே,

கேசாதிபாத உறுப்புக்களுக்குரிய உவமைகள்;
கடவுளருக்குரிய சிறப்புப் பொருள்கள்;
சாதி அடிப்படையில் மக்களுக்குரிய சிறப்புப்பொருள்—
அவர்தம் தொழில்கள்.
ஐவகை நிலங்களின் பிரிவுகள்—உரிய மக்கட்பிரிவுகள்;
எட்டு இயல்களிலும் கூறப்பெறாத கவிஞர் பண்புகள்—
அவர் தம் சிறப்பு அணிகள்
போல்வனவற்றை விளக்குகின்றன.

பத்தாவதாக, ஒழிபியலை அடுத்து அமைந்துள்ளது கொடை இயல். இதில் குமரிக்கண்டம் பேசப்படுகிறது. அதனுள் அமைந்த ஐம்பத்தாறு பகுதிகள் சுட்டப்படுகின்றன. வள்ளல்கள் எடுத்துக் காட்டப் படுகின்றனர் பிறவாகிய கொடை வகைகள் தொகுத்துத் தரப் பெறுகின்றன.

நூல் முழுமைக்கும் பதிப்பாசிரியர் உரை கூறியுள்ளார். உரை யினுள் நிகண்டுகளையும் பாட்டியல் நூல்களையும் இணைத்துக் காட்டி விளக்கியிருப்பது தனிச்சிறப்புடையதாக அமைகிறது.

இந்நூல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இருபத் தெட்டாவது வெளியீடாகும்.

6. பிரபந்த தீபம்

| | | |
|---|---|---|
| பதிப்பாசிரியர் | : | ச. வே. சுப்பிரமணியன், இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600 020. |
| நூலாசிரியர் | : | — |
| சுவடி | : | டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் நூலகம், சென்னை-600 041. |
| வெளியீடு | : | தமிழ்ப் பதிப்பகம், 33, திருமலைநகர் அனெக்ஸ், பெருங்குடி, சென்னை-600 096. |
| பக்கம் | : | 19+91=110 |
| விலை | : | ரூ 5/- |

தமிழ் இலக்கியங்கள் 'பிரபந்தங்கள்' என்ற சொல்லாலும் வழங்கப் பெறுகின்றன. அவ் இலக்கியங்கள் பொருள், தன்மை, பாட்டு, அளவு போல்வனவற்றால் பெயர் பெறுகின்றன. அவ் இலக்கியங்கள் எவ்வாறு அமைகின்றன என்பதுபற்றி விளக்கிக் கூறும் இந்நூல் 'பிரபந்த தீபம்' என்னும் பெயர் பெறுகிறது.

| | | | |
|---|---|---|---|
| புறப்பொருள் | அடிப்படையில் | 41 | இலக்கியங்கள் |
| அகப்பொருள் | ,, | 7 | ,, |
| அகம்புறம் | ,, | 7 | ,, |
| யாப்பு | ,, | 18 | ,, |
| எண் | ,, | 10 | ,, |
| எழுத்து | ,, | 3 | ,, |
| இறைவனைப் பற்றியவை | | 4 | ,, |
| மகளிரைப் பற்றியவை | | 4 | ,, |
| பிற | ... | 3 | ,, |

ஆக தொண்ணூற்றேழு வகை இலக்கியங்களுக்கான விளக்கங்களைக் கூறும் தொண்ணூற்றேழு நூற்பாக்களால் ஆனது இந்நூல்.

பிற பாட்டியல் நூல்களினும் எளிய முறையில் நூற்பாக்கள் அமைந்துள்ளன. விளக்க உரையுடன் காணப்பெறுகிறது. பாட்டியல் இலக்கணம் அறியவிரும்புவாருக்குப் பெரிதும் பயனுடைய நூல்.

பதிப்பாசிரியரின் முகவுரை கருத்துச் செறிவுடையது. அம் முகவுரையில் பாட்டியல் வரலாறு பாட்டியல் நூல்கள், பிரபந்தங்களின் வரலாறு போன்ற செய்திகள் முழுமையாக அடங்கியுள்ளன.

இந்நூல் உணர்த்தும் இலக்கியங்களின் பெயர்களை வரிசைப் படுத்தி அவற்றின் பொருள், யாப்பு, எண், தலைமை, பெயர் பெறும் முறை போன்ற செய்திகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. பதிப்பாசிரியர் இம்முறையைக் கையாண்டு நூலை எளிமைப் படுத்திக் காட்டியுள்ளார்.

பிரபந்த விளக்கம் கூறும் பதினான்கு நூல்களின் பட்டியலும் அவை எடுத்துக் காட்டும் பிரபந்தங்களின் பெயர்ப் பட்டியலும்கூட பதிப்பாசிரியரின் முயற்சியால் தொகுத்தளிக்கப் பெற்றவையாகும். இவை பிரபந்த இலக்கண நூல்களிடையே தோன்றும் சிக்கலைத் தீர்த்து வைக்கின்றன.

**7. திருக்குறள் பரிமேலழகர் உரை நுண்பொருள் மாலை**

| | |
|---|---|
| பதிப்பாசிரியர் | : இ. சுந்தரமூர்த்தி, தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக் கழகம். |
| நூலாசிரியர் | : காரி ரத்தின கவிராயர் |
| சுவடி | : அரசினர் சுவடி நூலகம், சென்னை-5. |
| வெளியீடு | : தேன்மொழி நூலகம், 14, அம்மணி அம்மாள் தெரு, சென்னை-600 028. |
| பக்கம் | : 56 + 208 = 264 |
| விலை | : ரூ 12/- |

திருக்குறளுக்கு அமைந்த உரைகள் பல. அவற்றுள் சிறந்தது 'பரிமேலழகர் உரை' என்பர். அவ் உரையில் காணப்பெறும் நுட்பமான கருத்துக்கள். உரைநயங்கள், இலக்கண முடிபுகள் போல்வனவற்றை மேலும் எளிமையாகவும் தெளிவாகவும் விளக்கிச் செல்லுகிறது '**நுண்பொருள் மாலை**' என்னும் இந்நூல். புதிய பாடங்கள் பல வள்ளுவரின் உள்ளத்தைப் புலப்படுத்துகின்றன.

திருக்குறளில் நூற்றுமுப்பத்திரண்டு அதிகாரங்களிலிருந்து உரைகள் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளன. பதினெட்டாம் அதிகாரமாகிய வெஃகாமை மட்டும் இந்நூலினுள் காணப்பெறவில்லை. அறுநூற்றுமுப்பத்தொன்பது பாடல்களுக்கான உரை விளக்கம் காணப்பெறுகின்றது.

1907, 912-ஆம் ஆண்டுகளில் வெளியான **செந்தமிழ் இதழ்கள்** தொகுதி 6-10; மகாவித்துவான் ச. தண்டபாணி தேசிகர் அவர்

களின் திருக்குறள் உரைவளம் மூன்று தொகுதிகள் ஆகியவற்றில் அச்சாகியுள்ளவை நூற்றுப்பத்து அதிகாரங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பெற்ற நானூற்று இருபது பாடல்களின் உரைகள் மட்டுமே. பிறவாகிய இருபத்திரண்டு அதிகாரங்களில் இருந்து இருநூற்றுப்பத்தொன்பது பாடல்களின் உரைகள் ஏட்டுச்சுவடிகளிலிருந்து திரட்டப்பெற்றவை. இப்பகுதி பதிப்பாசிரியரின் பேருழைப்பால் வெளியானவை. 'நுண்பொருள் மாலை ஆய்வுரை' பதிப்பாசிரியரின் ஆழ்ந்த புலமையைப் புலப்படுத்துகின்றது. ஆய்வுரையில் காணப்பெறும்,

திருக்குறளுக்கு எழுந்துள்ள பலவகை உரைகள், நுண்பொருள்மாலை, ஆசிரியர் வரலாறும் இலக்கணப் புலமையும்' ஆசிரியர் காலம்—போல்வன திருக்குறள்பற்றி அறிய விரும்புவார்க்குக் கிடைக்கும் புதையல்களாகும்.

அதிகார அடைவு, குறுக்க விளக்கம், பரிமேலழகர் உரைச் சிறப்பு பிறவாகிய அகரநிரல்கள் போன்றவை பின் இணைப்புகளாக அமைந்துள்ளன. இவை கற்போருக்குத் துணைபுரியும் பகுதிகளாகும். இந்நூலின் சிறப்பிற்குச் சில சான்றோர்களின் கூற்றுகள் வருமாறு:

''இந்நூலை ஒரு முறை புரட்டிப் பார்ப்பவர்கூட, பதிப்பாசிரியரின் கடுமையான உழைப்பையும், ஆழ்ந்த புலமையையும் ஆராய்ச்சித் திறனையும் எளிதில் உணர்வர்.''[8] ''அறிவின் பல நிலையினரும் கற்றுத் தெளிதற்கு ஏதுவாகப் பல இடங்களில் அடிக்குறிப்பின் விளக்கம் தந்தமை பாராட்டுதற்குரியது''.[9]

''நூலின் முகப்பில் சேர்க்கப்பட்டுள்ள ஆய்வுரை நூலினைக் கற்கப் புகுவார்க்குத் தக்க வழித்துணையாகும்.''[10]

**8. கூடை நூல்**

| | | |
|---|---|---|
| பதிப்பாசிரியர் | : | ச. வே. சுப்பிரமணியன்<br>இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,<br>சென்னை—600 020. |
| நூலாசிரியர் | : | — |
| சுவடி | : | கேரளப் பல்கலைக்கழகச் சுவடிகள்-3<br>தஞ்சை, சரசுவதி மகால் நூலகச்சுவடி-1<br>பேராசிரியர் சேதுரகுநாதன் அவர்களின் சுவடி-1 |

வெளியீடு : உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600 020

பக்கம் : 11+147=158

விலை : ரூ. 7/-

இந்நூல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இருபத்து ஆறாவது வெளியீடாகும். பதிப்பாசிரியர் ஒன்பது சுவடிகளைத் திரட்டியுள்ளார். அவற்றுள் ஐந்து சுவடிகளைத் தேர்ந்தெடுத்துத் தனித்தனியே பதிப்பித்துத் தொகுத்துள்ளார். பாடல்களும் உரைநடையுமாக அமைந்துள்ளது.

செடி, கொடி, மரங்கள் முளைத்து வளருகின்றன; பலவகை யான புற்றுகள் தோன்றி உயருகின்றன. இவை அந்தந்த நிலத்தின் கீழுள்ள நீரின் அளவு, ஆழம் போன்றவற்றைப் பொறுத்தே நிகழ் கின்றன என்ற உண்மையைத் தம் அனுபவ வாயிலாக அறிந்த வர்கள் தமிழர்கள். பதிப்பாசிரியர், அந்த அனுபவக் கருத்துக் களை இச்சுவடிகளின் மூலமாகத் திரட்டியுள்ளார்.

''பாரப்பா கூவலிட மார்க்கம் சொல்வேன்
பண்பான குறிஞ்சிநிலம் சிவப்பராகும்
வாரப்பா மருதநிலம் மணலே யாகும்''[11]

''தாணுவாம் மருதம் முழம் ஒன்பதுக்குள்
தண்ணீர்தான் மெத்தஉண்டு''[12]

நிலத்தின் நிறம், மண்ணின் தன்மை, அங்கு காணப்பெறும் இயற்கைத் தாவரங்கள் இவற்றை அடிப்படையாகக் கொண்டு குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் ஆகிய நிலங்களை அறியும் முறைகள் எளிமையாகக் கூறப்பெற்றுள்ளன. இதேபோல நில மயக்கங்களும் கூறப்பெற்றுள்ளன. அத்தன்மைகளுக்கு ஏற்ப நீர் கிடைக்கும் ஆழமும் அளவும் எடுத்துக்காட்டப் பெறுகின்றன.

''வெள்ளைப்பார் நீரும் எண்சாண்''[13]

''விளம்புவர் ஊமைப்புற்றில்
ஈரெண்சாண் அதனில்வெள்ளம்''[14]

''கோடை காலத்தில் குளிர்ந்த புழுதி உள்ள இடம்
பெருநீராம்''

''சிலந்தி வரைந்து கிடந்த இடம் பெருநீராம்''[15]

என்பன போன்ற சான்றுகள் பலவற்றை எடுத்துக்காட்டலாம்.

"அன்னையே ஊர், மனைக்கு அதிகமாம் ஈசானம் கீழ்பால்
சொன்னமும் ஐசுவரியம் உண்டாம்; அக்கினி
மகவைப்போக்கும்"[18]

இவை கிணறு அமைய வேண்டிய திசையைக் குறிப்பன.

கிணறு வெட்டுதற்குரிய மாதம், நாள், நட்சத்திரம் போன்றவையும் சுட்டப்பட்டுள்ளன.

'கூவநூல் உணர்த்தும் செய்திகள்' என்ற தலைப்பில் ஐந்து சுவடிகளின் பொருள்கள் தெளிவாகக் காட்டப்பெற்றுள்ளன. நிலங்களின் தன்மை, அமைப்பு, வகை போன்றவை அட்டவணை ஒன்று முதல் பதினேழுவரை தரப்பெற்றுள்ளன. இவை இரண்டுமே நூலின் முழுச்செய்திகளையும் எடுத்துக்காட்டிவிடுகின்றன.

'கூவல்' என்னும் சொல் இலக்கியங்களுள் பயின்று வரும் இடங்கள் தொகுக்கப்பட்டுள்ளன. பயனுள்ள சொல்லகராதி அமைந்துள்ளது.

பதிப்புரையும் சுவடிகளின் அறிமுகமும் பதிப்பாசிரியரது நன்றியுணர்வைப் புலப்படுத்துவன.

பழந்தமிழர் அனுபவ முறைகளில் சிறந்தனவற்றைப் பயன்படுத்தி, நல்வாழ்வு மேற்கொள்ள விரும்புவோர் கிணறு வெட்ட விரும்பினால் அவர்களுக்கு இந்நூல் சிறந்த வழிகாட்டியாய் அமைந்து பலன்பெறச் செய்யும் என்பதில் ஐயமில்லை.

**9. மனையியல் சாத்திரம்**

| | |
|---|---|
| பதிப்பாசிரியர் | : அழகப்பராசு |
| நூலாசிரியர் | : — |
| சுவடி | : அரசினர் சுவடி நூலகம், சென்னை-5. |
| வெளியீடு | : [தட்டச்சு வடிவில் உள்ளது] உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், சென்னை 600 020. |
| பக்கம் | : 125 |
| விலை | : — |

இந்நூல் மூன்று சுவடிகளின் தொகுப்பு ஆகும். நூற்று இருபத்தேழு பாடல்களைக் கொண்டது. 'சுவடி இயல்' படிப்பிற்காக அளிக்கப்பெற்ற ஆய்வேடு.

மனை கோலுதல், நிமித்தம் பார்த்தல், மனைகோல நாளும் கோளும் அறிதல், மனைக்குரிய அளவு முதலியன அறிதல், வாசற் கால் வைத்தல், முகடு வைத்தல் போன்ற பல செய்திகளைச் சுருக்கிக் கூறுகிறது. புதிய வீடு கட்டுபவர்களுக்குப் பயன்படுவது. தமிழர் தம் அனுபவச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பெற்ற தொரு நூல்.

மனை. மனை நூல், மனை நூல் சுவடிகள் பற்றிய பதிப்பாசிரி யரின் முகவுரையுடன் அமைந்துள்ளது

மனை நூல் சுவடிகள், அச்சு நூல்கள் பற்றிய பின் இணைப்பு கள் மிகவும் பயன்படுவன.

நூலில் அமைந்துள்ள பாடல்களுக்கு உரையும் அமைந் துள்ளது. அவ்வுரை சுவடியிலேயே உள்ளதாகும்.

**10. கோவை இலக்கியம்—கரந்தைக் கோவை**

| | | |
|---|---|---|
| பதிப்பாசிரியர் | : | அ. ம. சத்தியமூர்த்தி |
| நூலாசிரியர் | : | பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் |
| சுவடி | : | டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை-41. |
| வெளியீடு | : | [தட்டச்சு வடிவில் உள்ளது] உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், சென்னை-600 020. |
| பக்கம் | : | — |
| விலை | : | — |

இந்நூல் சுவடியியல் கல்விக்கு அளிக்கப்பட்ட ஆய்வேடு ஆகும்.

**'கரந்தைக்கோவை நூலாராய்ச்சி'** என்னும் தலைப்பில் பதினைந்து பிரிவுகளாக ஆய்ந்திருக்கிறார் பதிப்பாசிரியர். ஏடு பற்றிய செய்திகளைக் கூறுவது முதல்நூலின் உவமை நலம் ஈறாக அமைந்துள்ள ஆய்வுமுறை சுவடியியல் நோக்கினை அடிப்படை யாகக் கொண்டுள்ளது. நூலாசிரியர் பற்றிய ஆய்வு சிறப்பாகவே அமைந்துள்ளது. ஏடுகளின் நிலை பற்றிய தலைப்பு முழுமை யானது. இலக்கிய ஆய்வும் அவ்வாறே அமைந்துள்ளது. இந் நூல் இருநூற்று ஐந்து பாடல்களைக் கொண்டு விளங்குகிறது. பிறபாடல்கள் காணப்பெறவில்லை. அருஞ்சொற்பொருள் முதல்

அமைந்துள்ள ஆறுவகை பின்னிணைப்புகள் பயனுள்ளவையாக அமைந்துள்ளன. துணை நூல் பட்டியல் பதிப்பாசிரியரின் உழைப்பிற்கு ஓர் எடுத்துக்காட்டு.

11. **சேயூர் முருகன் உலா**

| | | |
|---|---|---|
| பதிப்பாசிரியர் | : | மு. அருணாசலம் |
| நூலாசிரியர் | : | சேறைக் கவிராச பிள்ளை |
| சுவடி | : | டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகம், சென்னை-41. |
| வெளியீடு | : | தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை. |
| பக்கம் | : | 12+152=164 |
| விலை | : | ரூ. 14/- |

செங்கற்பட்டு மாவட்டத்தில் மதுராந்தகத்தை அடுத்துள்ள ஊர் சேயூர் என்பது. சேய் என்பது முருகக் கடவுளைக் குறிக்கும். அவன் எழுந்தருளியுள்ள ஊர் ஆதலின் சேய் ஊர் என்று பெயர் பெற்றது. இக் காலத்து அது செய்யூர் என்று மருவி வழங்குகிறது. இவ்வூரில் கோயில் கொண்டுள்ள முருகப்பெருமானே உலா பெறும் தலைவன் ஆவான். ஊர்ப்பெயர், உலாத்தலைவன் பெயர், இலக்கியப்பெயர் ஆகியவை இணைந்து நூல்பெயர் ஆயிற்று.

இந்நூல் ஐநூற்று மூன்று கண்ணிகளால் இயன்றது. 'என்றும் இளையோன்' என்னும் தலைப்புடன் நூல் தொடங்குகிறது. தேவர் வரம் பெறுதல், முருகன் சூரன் உயிர் வவ்வுதல், தொண்டைமான் அரசனாதல் போன்ற தலைப்புகளில் முதல் ஐம்பத்திரண்டு கண்ணிகள் அமைகின்றன.

அடுத்து நூற்றுத் தொண்ணூற்றைந்தாவது கண்ணி முடிய உள்ள பகுதி ஆறுபடைவீடுகள், உலா புறப்பாடு, குழாங்கள், சின்னங்கள் போன்றவற்றின் சிறப்புகளை உணர்த்துகிறது. தொடர்ந்து உள்ள பிற கண்ணிகளில் பேதை முதலான எழு வகைப் பருவ மகளிரின் நிலையும் செயலும் முருகன் ஆட்கொள்ளுதலும் அழகுபடக் கூறப்பெறுகின்றன.

இறுதியில் தனிச்செய்யுள் ஒன்று ஒரு வெண்பாவும் சிறப்புப் பாயிரம் என்று ஒரு வெண்பாவும் அமைந்துள்ளன.

''செய்யூருலா முற்றும்''

க. ''பிரதி தாது வருடம் வைகாசி மாதம் 30-ஆம் தேதியோடு செய்யூர் செல். வேதாசல முதலியாரால் எழுதி நிறைவேறிற்று.''

உ. "பிரதி தாது வருடம் மார்கழி மாதம் 10-ஆம் தேதி சனி வாரம் சேயூர் மார்த்தாண்டர் கந்தசாமி முதலியாருடைய சுதன் வன்மீக முதலியார் எழுதி முடிந்தது."

என்னும் முடிபுகள் காணப்பெறுகின்றன.

பதிப்பாசிரியர் உலா இலக்கியம், அதன் இலக்கணம் ஆகியவை குறித்து முழுமையான ஆய்வுரையினை முன்னுரையில் அளித்திருக்கிறார். அம்முன்னுரையில் எழுவகைப் பருவங்கள் சங்க இலக்கியங்களோடு இணைத்து ஆய்வு செய்யப் பெற்றுள்ளன; நூலாசிரியர் வரலாறும் சேயூர் தல வரலாறும் முழுமையாகக் காட்டப் பெற்றுள்ளன. இந்நூல் பற்றிய ஆராய்ச்சிப் பகுதி முன்னுரையில் சிறப்பிடம் பெறுகிறது. இவ்உலா குறிப்பிடும் வரலாற்றுச் செய்திகள் என்ற தலைப்பு பதிப்பாசிரியரின் வரலாற்று உணர்வை எடுத்துக்காட்டுவதாகும். இம் முன்னுரை எழுபத்தைந்து பக்க அளவினை உடையது.

நூல் முழுமைக்கும் பதிப்பாசிரியரின் குறிப்புரை அமைந்துள்ளது. இறுதியில் பாட வேறுபாடுகள் சில குறிப்பிடப் பெற்றுள்ளன. 'அண்ணாமலையார் வண்ணம்' என்னும் சந்தப்பாடல் ஒன்று பிற்சேர்க்கையாக அமைந்துள்ளது. நான்கு பக்க அளவில் ஆங்கில முன்னுரை ஒன்றும் கொடுக்கப்பட்டுள்ளது.

**2. திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத் தமிழ்**

| | | |
|---|---|---|
| பதிப்பாசிரியர் | : | ச. சிவகாமி, ஆய்வாளர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். |
| நூலாசிரியர் | : | — |
| சுவடி | : | டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் நூலகம், சென்னை. |
| வெளியீடு | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600 020. |
| பக்கம் | : | 25 + 136 = 161 |
| விலை | : | ரூ. 7-50 |

தென்பாண்டி நாட்டைச் சேர்ந்தது குருகூர். அவ் ஊர்த் தலைவனே திருவேங்கடநாதன். வேளாளர் இனத்தைச் சார்ந்தவன். சிறப்பின் காரணத்தால் ஊர்த்தலைவன் ஆனவன். இவனே இப்பிள்ளைத்தமிழ் நூலின் பாட்டுடைத் தலைவன். இந்நூல் எழுபது பாடல்களால் ஆனது.

இத் தமிழ் நூலே தலைவனுக்கு மகிழ்ச்சியளிப்பது. எனவே இதன் காப்புப்பருவப் பாடல்கள் இப்பிள்ளைத்தமிழைக் காக்கு மாறு அமைந்துள்ளன.

''எழு கன்னியரும் இனிது காக்க

........ ........ ........

கேட்கும் இன்சொற் கவியையே''[17]

''சடைமுடிக் சடவுள் காக்க

........ ........ ........

கற்பதரு திருவேங்கடநாத பூபன்மேல்

கருதுமிசை முத்தமிழையே''[18]

என்பன போன்றே காப்புப் பருவப் பாடல்கள் ஏழும் அமைந் துள்ளன.

''விண்டலத்தில்புகழ் குபேரன்நீ புவியில்இவன்

மிக்கசெல்வக் குபேரன்''[19]

''நீதனியை இவன்உறவு நன்றுஉனக்கு

அம்புலீ ஆடவாவே''[20]

''வள்ளல் இருபத்தொரு குழாமென

காமதேனுவு மென

கற்பகப்பூந்-தருவெனத் தருகொடைக்

கங்கைகுல திலகன்நீ''[21]

இவைபோலப் பேசப்படுகின்ற தலைவனின் சிறப்புகள் நூற்றுக் கணக்கில் இடம்பெறுகின்றன.

இந்நூல் பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றியது என் பதைப் பதிப்பாசிரியர் தெளிவுபடுத்தியுள்ளார்.

நூலாசிரியர் பெயர் தெரியவில்லை. ஆயினும் அவரது வரலாற்றை எடுத்துக்காட்டும் பதிப்பாசிரியரின் முயற்சி பாராட்டற்குரியது.

இந்நூலின் சுவடி மூலம் மட்டுமே கொண்டது. பொழிப் புரையும் குறிப்புரையும் பதிப்பாசிரியரால் எழுதப்பட்டுள்ளன. இவற்றால் நூல் பயன் உடையதாக அமைவது வெளிப்படை. ஆங்கில முன்னுரையும் அமைந்துள்ளது

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பத்தொன்பதாவது நூலாக வெளியாகியுள்ளது. இந்நூலில் அமைந்துள்ள துணைநூல்

பட்டியல், அருஞ்சொல் அகராதி, பிள்ளைத்தமிழ்ச் சொல்லகராதி, செய்யுள் முதற்குறிப்பகராதி போல்வன கற்பாருக்கு உறுதுணையாய் நிற்பனவாகும்.

**13. திருநீர்மலை ரெங்கநாயகன் பேரில் கலித்துறை மாலையும் நயன மருத்துவ விதியும்**

பதிப்பாசிரியர் : செ. இரா. பிரசன்னா

நூலாசிரியர் :

1. டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகம், சென்னை-41.

சுவடி : 2. அரசினர் சுவடி நூலகம், சென்னை-5.

வெளியீடு : (தட்டச்சு வடிவில் உள்ளது) உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், சென்னை-600 020.

பக்கம் : 94

விலை : —

1. 'திருநீர்மலை அரங்க நாயகன் பேரில் கலித்துறை மாலை''.

2. 'நயன மருத்துவ விதி'.

ஆகிய இரண்டு சுவடிகளின் பதிப்பு ஆய்வேடாகும். சுவடி இயல் கல்விமுடிவில் அளிக்கப்பட்டது. கலித்துறை மாலை ஐம்பத்து மூன்று பாடல்களால் ஆனது. சுருக்கமான பொழிப்புரையில் காணப்படுகிறது. அரங்கநாயகன் ஆகிய இறைவனே இந்நூலின் பாட்டுடைத்தலைவன் ஆக அமைகின்றான். திருநீர்மலையின் சிறப்புகள் அடுக்கடுக்காய் அமைந்துள்ளன. இராமாயணச் செய்திகள் திருமாலின் சிறப்புக்கு அடிப்படையாக அமைந்துள்ளன. உவமை உருவகங்களால் நூலை அழகு செய்கின்றார் ஆசிரியர். புராணக் கருத்துக்கள் சில இடம்பெறுகின்றன.

நயன வைத்திய விதி என்று சுவடியில் காணும் பெயரை நயன மருத்துவ விதி என்று காட்டியிருக்கிறார் பதிப்பாசிரியர். கண் எரிச்சல், கண் புகைச்சல், கண் பீளை, கண் படலம் போன்ற பல கண்ணோய்களுக்கு உரிய மருந்துகள் கூறப்பெற்றுள்ளன. நாற்பத்தைந்து பாடல்களும் அவற்றிற்கான பொழிப்புரையும் ஒரு பகுதியாக அமைந்துள்ளது. இரண்டு நூல்களுக்கும் பதிப்பாசிரியர் விரிவான ஆய்வுரையினை அமைத்திருக்கிறார்.

## 14. பணவிடு தூது

பதிப்பாசிரியர் : இரா. நிர்மலாதேவி
நூலாசிரியர் : சொக்கநாதக் கவிராயர்
சுவடி : டாக்டர் உ வே சாமிநாத ஐயர் நூலகம், சென்னை-41.
வெளியீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600 020.
பக்கம் : 12+116=128
விலை : ரூ. 6/-

நாயக்கர் வமிசம் மதுரையை ஆண்ட காலத்தில் இராமநாத புரம் மாவட்டத்தைச் சார்ந்த பகுதிகளை ஆண்டவன் முத்து விசயரகுநாத சேதுபதி ஆவான். இவனே இந்நூலின் பாட்டுடைத் தலைவன்.

பல சிற்றிலக்கியங்களின் நூலாசிரியராகிய பலபட்டடைச் சொக்கநாதக் கவிராயரே இந்நூலாசிரியர் ஆவர்.

''அங்கோர் அமைச்சன் தளகர்த்தன் இல்லாமல்
செங்கோல் செலுத்தும் திறல் வேந்தே''[22]

''பிடித்தால் இராய் பிடிப்பு விட்டாலும் போகாய்
படித்தார்க்கு இரங்கப் படியாய்''[23]

இவைபோன்று பணத்தின் பண்பை நானூற்று அறுபத்திரண்டு அடிகள் எடுத்துக்காட்டுகின்றன.
பணம்தேட நடைபெறும் குறுக்குவழிகள் பலவும் இவ்வடிகளுள் அடக்கமே. பணம் பெறும் பெயர்கள் பலப்பல என்பதையும் சில அடிகள் புலப்படுத்துகின்றன.

அரசனது ஆணைத்திறம் விளக்கப்படுகிறது. அமைச்சர் முதலாயினார் பணிகள் கூறப்படுகின்றன. பணத்தின் சிறப்பு எடுத்துக்காட்டப்படுகிறது. பாட்டுடைத் தலைவனின் சிறப்பு களை இருநூற்றறுபது வரிகளில் பாடுகிறார் ஆசிரியர். தூது சொல்லிவா என்ற செய்தியை இறுதிப் பதினாறு வரிகளில் கூறி முடிக்கிறார்.

முகவுரையில், பதிப்பாசிரியர், நூலில் அமைந்து கிடக்கும் இலக்கியக் கருத்துக்கள், புராணச்செய்திகள், வரலாற்றுச் செய்திகள், ஆட்சியாளர் பற்றிய செய்திகள் போன்றவற்றை நன்கு ஆய்ந்து தொகுத்தளித்துள்ளார்.

இறுதியில் தூது நூல் தொகுப்பு இடம்பெற்றுள்ளது. இந்நூல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இருபதாவது வெளியீடாகும். சுவடி இயல் பயிற்சிக் காலத்து அளிக்கப்பெற்ற ஆய்வேடுகளில் இந்நூலும் ஒன்றாகும்.

15. அன்னீத நாடகம்

| | | |
|---|---|---|
| பதிப்பாசிரியர் | : | தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்<br>. முகவுரை -திரு. மு. சண்முகம்பிள்ளை. |
| நூலாசிரியர் | : | தில்லைவிடங்கன் மாரிமுத்தாப்பிள்ளை |
| சுவடி | : | அரசினர் சுவடி நூலகம், சென்னை-5. |
| வெளியீடு | : | சர்வோதய இலக்கியப் பண்ணை,<br>32/1, மேலவெளி வீதி, மதுரை-625 001. |
| பக்கம் | : | 75 |
| விலை | : | ரூ. 5/- |

திருச்சிராப்பள்ளியில் இருந்து அரசாண்ட பேரரசர்களுள் ஒருவன் மம்முதலிகான் சாயபு. அவனது ஆணையின்படி சிதம்பரம் சீமையைச் 'சிவ சிதம்பரம்' ஆட்சி புரிந்தான். அவன், தன் அதிகாரிகளின் துணையுடன் மக்களைக் கொடுமைப்படுத்தினான். குடிகளை வருத்தி வரிப்பணத்தை வசூலித்தான். பதினெட்டாம் நூற்றாண்டில் நடைபெற்ற அக்கொடுமைகளின் படப் பிடிப்பே இவ் 'அன்னீத நாடகம்.'

''திருவளர் வாவி சூழும் சிதம்பரம் சீமை தன்னில்
ஒருசிவ சிதம்ப ரன்தான் உயர்சபை ஏற்று வந்து
வரியின்மேல்வரியைப்போட்டுவாங்கிய கதையைப் பாட''

என்பன நூலின் முதற்பா அடிகள். இவை நூலின் கருப்பொருளைச் சுட்டுவன.

''சிதம்பரம் சீமைதன்னில் சிவசிதம் பரன்தான் என்போன்
அதம்பண்ணித் தெண்டம் வாங்கும் அன்னீத
நாடகத்தைப் பாட''

இவை இரண்டாம் பாடலின் அடிகள். நூலுக்கு ஆசிரியர் கொடுத்த பெயரைச் சுட்டுகின்றன.

''இதத்தாலே பணம் முழுதும் வாங்கினாலும் சரிதான்
எட்டி மார்பில்
உதைத்தாலும் சரிகுடியை வதைத்தாலும் சரிஅடியால்
உயிர்தொண் டைக்குள்
பதைத்தாலும் சரி''

''அடியுங்கோள் சாண்கயத்தில் கிட்டியும் போட்டு
அழுந்தத் தொக்கால்
பிடியுங்கோள் நடுமுதுகில் பெரியகருங் கல்லைவைத்து
இடுப்பும் சந்தும்
ஒடியுங்கோள்''[24]

இது சுபையதார் கூற்று. வரிப்பணம் தண்டச் செல்லும் சேவகருக்குக் கூறுவது. நடைபெற்ற கொடுமைகளுக்கு ஒரு சான்று.

| | |
|---|---|
| நீண்ட அகவற் பாக்கள் | — இரண்டு; |
| விருத்தப் பாடல்கள் | — ஐம்பத்தாறு; |
| நாட்டியத் தரு | — ஒன்று |
| மங்களத் தரு | — ஒன்று |
| ஆனந்தக் களிப்பு | — ஒன்று |
| தருக்கள் | — இருபது |

ஆகிய உறுப்புக்களால் ஆக்கப் பெற்றுள்ளது இந் நாடகம். இருபத்து நான்கு இடங்களில் 'வசனம்' என்னும் உறுப்பையும் கொண்டுள்ளது.

''தமிழில் நிகண்டு, இலக்கணம், இலக்கியம், நாட்டுப்புற இலக்கியம், இசைநாடகம் எதுவானாலும் அவை தமிழுக்கு ஆக்கம் தருவனவே''[25] என்னும் பதிப்பாசிரியர் தம் கொள்கைக்கு இணங்க, வரலாற்றுப் பின்னணியில் அமைந்த நாட்டுப்புற இசை நாடகமாய் விளங்குகிறது இவ் அன்னீத நாடகம்.

பதிப்புச்செம்மல் மு சண்முகம் பிள்ளை அவர்களின் முகவுரை இப் பதிப்பிற்கு முடிசூட்டி நிற்கிறது.

### 16. சின்னமநிபன் குளுவ நாடகம்

| | | |
|---|---|---|
| பதிப்பாசிரியர் | : | ஏ. என். பெருமாள். இணைப் பேராசிரியர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600 020. |
| நூலாசிரியர் | : | முத்தாண்டிப் புலவர் |
| சுவடி | : | டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை-600 041. |
| வெளியீடு | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600 020. |
| பக்கம் | : | 144. |
| விலை | : | ரூ 5/- |

சோணாட்டின் ஒருபகுதி கோனாடு. அதன் தலைநகர் மிதிலைநகர். பதினெட்டாம் நூற்றாண்டில் இப்பகுதியை ஆண்டவன் சின்னமகிபன். இவனே இந்நூலின் பாட்டுடைத் தலைவன். அழகிய சிற்றம்பலக் கவிராயர் போன்ற கவிவாணர் பலரை ஆதரித்த பெருமை உடையவன் சின்னமகிபன்.

இந்நூலினுள் குளுவனும் சிங்கனும் தோன்றுகிறார்கள். தங்கள் திறன், தொழில் இவை பற்றிப் பாடுகின்றனர். கடவுளரைப் போற்றுகின்றனர். வேட்டைக்குச் செல்லுகின்றனர். கண்ணி வைத்துப் பறவைகள் பலவற்றைப் பிடிக்கின்றனர். பலருக்கும் பங்கிட்டுத் தருகின்றனர். குறத்தி வருகிறாள். குறி சொல்லிப் பல பரிசுப் பொருள்களைப் பெற்று வருகிறாள். இருவரும் கண்டு மகிழ்கின்றனர். யாவரும் வாழ இறையைப் போற்றுகின்றனர். இவையே நூலின் கிடக்கை.

''துற்குண வண்டர் சொல்மொழி கேளான்
சற்குண மானோர் தன்மொழி கேட்போன்
சந்திர சூரியர் தான்வடக் கெழினும்
சுந்தர விலாசன் சொல்லுரை தவிரான்''[26]

இவ்வடிகள் சின்னமகிபனின் பண்பு கூறுவதாக அமைகின்றன. ஆயினும் நூலாசிரியரின் உள்ளக் கிடக்கையைப் புலப்படுத்துவன வாகும். சித்து வித்தைகள் பலவும் புலப்படுத்தப்படுகின்றன.

''.........ஆசாரி ரெண்டு
வாங்கருவாளைத் தருவான் கொடடாகவுதாரி''
''தட்டாரமுத்து வீரப்பனுக்குக் கொடுகுருகு — நல்ல
தங்கத்தினாலே தருவானடா நல்லமுருகு''[27]

என்பன போன்ற அடிகள், தங்கள் தொழிலால் பெற்ற பொருளைப் பிற தொழிலாளருக்கும் பகிர்ந்து கொடுத்து வாழ்ந்த வாழ்க்கையை எடுத்துக் காட்டுகின்றன.

குளுவ நாடகம், குறவஞ்சி நாடகம் போன்றவற்றின் விளக்கமும் நூல் பற்றிய ஆய்வும் அடங்கிய நாற்பத்தொன்பது பக்க ஆய்வுரை பதிப்பாசிரியர் அவர்களின் நாடக இலக்கியப் புலமையோடு மிளிர்கிறது.

நூலின் தொடர்விளக்கம் பதிப்பாசிரியரின் முயற்சியால் தொகுக்கப் பெற்றுள்ளது. பாடல் வகைகளும் சொல்லகராதியும் கற்பாருக்குத் துணைபுரிவனவாகும்.

இந்நூல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பதினான்காம் வெளியீடாகும்.

17. பொய்யா மொழியீசர் குறவஞ்சி

(குறவஞ்சி என்ற தொகுப்பில் முதல்நூல்)

பதிப்பாசிரியர் : மு அருணாசலம்
நூலாசிரியர் : தத்துவலிங்கன்
சுவடி : அரசினர் சுவடி நூலகம், சென்னை-5.
வெளியீடு : தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை.
பக்கம் : 18+90=108
விலை : ரூ20/-

"தையல் பார்வதிபாகர் பொய்கைப் பாகையில்வாழ்
சீர்கொண்ட பொய்யாத மொழிப்பரமர் மீது
திறமிஞ்சு குறவஞ்சிப் பிரபந்தம் பாட"[28]

என்னும் அடிகள் இந்நூல், பொய்கைப்பாக்கம் என்னும் ஊரில் எழுந்தருளியுள்ள இறைவன் மீது பாடப்பெற்ற குறவஞ்சி என்பதைப் புலப்படுத்துகின்றது.

சிதம்பரம் என்பாரின் மகன் தத்துவலிங்கன் என்பவரே இந் நூலாசிரியர் என்று காட்டுகிறார் பதிப்பாசிரியர்.

"மகிதலமேல் சிதம்பர தத்துவலிங்கையன்
மதுரகவி யும்தழைத்து வாழிதானே"[29]

என்ற அடிகளும் பிறவாகிய ஏடு எழுதினோர் குறிப்புகளும் இதனைப் புலப்படுத்துகின்றன என்பது பதிப்பாசிரியர் தம் கூற்றாகும்.

நூலாசிரியரை ஆதரித்த வள்ளல்களான, நல்லண்ணன், சின்னண்ணன், குட்டையன் போன்றோர் நூலினுள் சிறப்பித்துக் கூறப்படுகின்றனர்.

பதிப்பாசிரியரின் ஆராய்ச்சி முன்னுரை குறம், குறவஞ்சி, குறவஞ்சி நாடகம் போன்ற பல தலைப்புக்களில் அமைந்துள்ளது; முப்பத்தெட்டுப் பக்கங்களைப் உடையது. சுருங்கிய ஆங்கில முன்னுரையும் தரப்பெற்றுள்ளது.

நூலினுள் நாடக அமைப்பில் முப்பத்தொரு தருக்களும் பதினைந்து விருத்தங்களும் உள்ளன. நாட்டு வளம் கூறுதல், குறத்தி குறி சொல்லுதல் போன்ற பொருள்களில், நீண்ட மூன்று அகவற்பாக்கள் அமைந்துள்ளன. ஏழு பதங்களும் ஐந்து சிந்து களும் சிறந்த சந்தப் பாடல்களாக அமைந்துள்ளன. பத்து இடங் களில் 'வசனம்' என்ற தலைப்பில் தொடர்ந்த செய்திகள் கூறப் படுகின்றன. வெண்பா ஐந்து, கொச்சகக்கலி நான்கு கலித்துறை இரண்டு ஆகியவையும் இடையிடையே காணப் பெறுகின்றன.

நூல் முழுமைக்கும் பதிப்பாசிரியர் குறிப்புரை தந்திருக்கிறார். பாட வேறுபாடுகளையும் தனியே எடுத்துக் காட்டியிருக்கிறார்.

இறுதியில் தரப்பெற்றுள்ள பிற குறவஞ்சி நாடக நூல்களின் பட்டியல் போன்றவை மிகவும் பயனுள்ளவையாகும்.

## 18. காங்கேயன் குறவஞ்சி

(குறவஞ்சி என்ற தொகுப்பில் இரண்டாவது நூல்)

| | |
|---|---|
| பதிப்பாசிரியர் | : இரா. இளங்குமரன் |
| நூலாசிரியர் | : பொன்மணி செல்லப்பன் |
| சுவடி | : டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகம், சென்னை-41. |
| வெளியீடு | : தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை. |
| பக்கம் | : 4 + 35 = 39 |
| விலை | : ரூ. 20/- |

பாண்டிய நாட்டைச் சார்ந்தது மாரிநாடு. அது பொன் மாரி நாடு எனவும் வழங்கப் பெறுகிறது. அதன் தலைநகர் மாரியூர். அவ்வூரின்கண் எழுந்தருளியுள்ள இறைவன் சிறையிலிநாதன். அவ் விறைவனை வழிபட்டு வந்தவன் காங்கேயன். அவனே மாரி நாட்டுத் தலைவன். மாரி நாயகன் எனவும் அவன் போற்றப் பெறுகிறான்.

அத்தலைவன் மீது பாடப்பெற்ற முதல்நூல் ஒன்று இருந் துள்ளது. அது அகவற்பாவால் ஆனது. அதன் வழி நூலே இக் குறவஞ்சி நூல். இதனை,

"மாரிநா டகத்தின் முன்னூல்
வருந்தமிழ் அகவல் தன்னை
மாரிநா யகர்மேல் போற்றும்
மாக்குறம் தனில் உரைத்தேன்"[30]

என்னும் இந்நூலாசிரியர் கூற்று உணர்த்துகிறது.

இந்நூல் பத்தொன்பது தருக்களாலும் பதின்மூன்று விருத்தங்களாலும் இயற்றப்பெற்றுள்ளது. இடையிடையே மூன்று அகவற் பாக்களும் ஐந்து கலிப்பாக்களும் கதைத்தொடராகப் பாடப் பெற்றுள்ளன. இறுதியாக மங்களப்பாடல் ஒன்று அமைந்துள்ளது. மொத்தத்தில் இக்குறவஞ்சிநூல் நாற்பத்தொரு பாடல்களால் ஆனது.

வெண்ணிலாத்தரு, தேசத்தரு, மங்களம் மூன்று மட்டுமே உள்தலைப்புகளாகப் பதிப்பில் காணப்பெறுகின்றன. இவையே சுவடியில் காணப்பெற்றதாகத் தெரிகிறது.

சாதிவளம், வாசல், மலை, மலைவளம், நதி, குறி, சிங்கி, அடையாளம், மருந்து, ஏசல் ஆகிய ஒன்பது தலைப்புகள் அடைப்புக்குறிக்குள் கொடுக்கப்பெற்றுள்ளன. இவை பதிப்பாசிரியரால் கொடுக்கப் பெற்றவை ஆகும்.

பக்கங்கள் தோறும் அருங்குறிப்புரை கொடுக்கப் பெற்றுள்ளது. இது பதிப்பாசிரியரின் அரிய முயற்சியாகும். பதிப்பாசிரியரின் ஆராய்ச்சி முன்னுரை ஒன்று அமைந்துள்ளது. அதில் காங்கேய நாடு, காங்கேயன் என்ற பெயர்களின் வரலாற்றுச் செய்திகள் பல தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன. சுருங்கிய ஆங்கில முன்னுரையும் தரப்பட்டுள்ளது. நூல் பிறகு குறவஞ்சி நூல்களின்அமைப்பிலேயே அமைந்துள்ளது.

**19. சிக்கல், நவநீதேசுவர சுவாமி குறவஞ்சி**
(குறவஞ்சி என்ற தொகுப்பில் மூன்றாவது நூல்)

| | |
|---|---|
| பதிப்பாசிரியர் | : இரா. இளங்குமரன் |
| நூலாசிரியர் | : சொக்கலிங்கம் பிள்ளை |
| சுவடி | : டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகம், சென்னை-41. |
| வெளியீடு | : தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை. |
| பக்கம் | : 8 + 81 = 89 |
| விலை | : ரூ. 20/- |

நாகபட்டினத்தை அடுத்துள்ளது சிக்கல் என்னும் திருத்தலம். இத்தலம் சிகரை என்றும் வழங்கப் பெறுகிறது.

''மாதவத்து உயர்ந்த மாமுனி விசிட்டர்...
பாலதில் திரண்ட பதமுறு வெண்ணெயை
மேலதாம் பீடம் மேவ அமைத்து
இலிங்கம தாக எழில்உருக் குறித்து...
முற்றும் பூசை முடித்து மாமுனி
பற்றி எடுக்கப் பாதலம் முதலாய்ச்
சுற்றியே மூலம் துகளற நிற்க''[31]

என்னும் அடிகள் இத்தலம் சிக்கல் என்னும் பெயர்பெற்றதன் காரணத்தை விளக்குகின்றன. இதேபோன்று வசிட்டாச்சிரமம், மல்லிகாரணியம், தேவசாந்நித்தியம், காயாசரஸ் போன்ற பல காரணப் பெயர்களும் இத்தலத்திற்கு உண்டு.

'வெண்ணெய்ப்பெருமான்' என்பதே இத்தலத்தில் எழுந் தருளியுள்ள இறைவன் பெயர். பால் வெண்ணெய்நாதர் என்றும் வழங்கப்பெறுகிறது. 'நவநீதேசுவரசுவாமி' என்பதும் இதே பொருளில் வழங்கும் பெயராகும். இது வடமொழித்தொடர். இவ் இறைவனே இக்குறவஞ்சியின் பாட்டுடைத்தலைவன். ஊரின் பெயரும் பாட்டுடைத்தலைவன் பெயருமாக இணைந்து பெயர் பெற்றுள்ளது இந்நூல்.

இந்நூலின் தொடக்கத்தில் காப்பு, விநாயக விருத்தம், அவை யடக்கம், குருதோத்திரம் ஆகிய தலைப்புக்களில் பதினொரு பாடல் கள் உள்ளன. முப்பத்தாறு தருக்கள், முப்பத்தொரு விருத்தங்கள், இருபத்தொரு வசனங்கள் ஆகிய உறுப்புக்களால் இயற்றப் பெற்றுள்ளது. இடையே மூன்று அகவற்பாக்களும் மூன்று கலிப் பாக்களும் அமைந்துள்ளன. தோடையம் என்னும் பாவினால் நூல் தொடங்குகிறது. சதி, தத்தாங்கி சபதம் என்னும் தலைப்பு களில் ஒவ்வொரு பாடல் காணப்பெறுகிறது.

தரு - சுருட்டி - ஆதிதாளம்; தரு - பைரவி - ஏகதாளம்; தரு- மோகனம் - திரிசரம் என்று மூன்று பாடல்களுக்கு மட்டுமே இசையும் தாளமும் வரையறுக்கப் பெற்றுள்ளன.

வெண்ணிலாத் தரு, தென்றல் தரு, மன்மதன் தரு, சகித்தரு, திரைத்தரு ஆகிய உள்தலைப்புகள் மட்டுமே காணப்பெறுகின்றன. முடிந்தது-முற்றும்; மங்களம் என்னும் சொற்களோடு நூல் முடிகிறது

நூல் முடிவிற்குப் பிறகு "பரிதாபி வருஷம், தை மாதம், இரண்டாம் தேதி, புத வாரம் எழுதி முடிந்தது; இவை திருவாரூர் ஸ்கூல் மாஸ்டர் சொக்கலிங்கம் பிள்ளையால் செய்யலாச்சுது" என்னும் தொடர்களால் நூலாசிரியர் பெயரும் நூல் முடிந்த காலமும் கூறப்பெற்றுள்ளன.

நூலின் தொடக்கத்தில் திருசிரபுரத்தைச் சார்ந்த நான்கு சான்றோர்களின் சாற்றுக் கவிகள் இடம் பெற்றுள்ளன. தருமபுர ஆதீனம், காஞ்சி மடம் கந்தப்பத் தம்பிரான் அவர்கள் பாடிய ஒரு ஆசிரிய விருத்தமும் காணப்பெறுகிறது.

பதிப்பாசிரியரின் ஆய்வுரை, சிக்கல் திருத்தலம், குறவஞ்சிநூல், நவநீதேசுவர சுவாமி போன்ற தலைப்புகளில் செறிவுடையதாக அமைந்துள்ளது. சிகரை, வெண்ணெய்ப்பெருமாள், வேற்கண்ணி, மரபுவழி, கதைகள், பழமொழிகள், அணிநலம், கொச்சைவழக்கு, அடுக்கு, நாடு, நகர், மலை, ஆறு போன்ற தலைப்புகளில் நூலின் நயம் கண்டுள்ளார் பதிப்பாசிரியர். நூலாசிரியர் பற்றிய குறிப்புகள் தொகுத்துக் காட்டப்பெற்றுள்ளன. நூல் முழுமைக்கும் அரிய குறிப்புரை தரப்பெற்றுள்ளது. தொல்பொருள் ஆய்வுத் துறை இயக்குநர் அவர்களின் ஆங்கில முன்னுரை ஒன்றும் கொடுக்கப்பெற்றுள்ளது.

## 20. மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சி நாடகம்

(குறவஞ்சி என்ற தொகுப்பில் நான்காவது நூல்)

| | |
|---|---|
| பதிப்பாசிரியர் | : புலவர் இரா இளங்குமரன் |
| நூலாசிரியர் | : சாமிநாதையர் |
| சுவடி | : டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகம், சென்னை-41. |
| வெளியீடு | : தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை. |
| பக்கம் | : 8+88=96 |
| விலை | : ரூ. 20/- |

தஞ்சை மாவட்டத்தில் வைத்தீசுவரன் கோயிலை அடுத்து அமைந்துள்ளது மண்ணிப்படிக்கரை என்னும் திருத்தலம். இத் தலத்திற்கு ஆதிபுரி, வியாக்கிரபுரம், மதூகவனம் என்ற வேறு பெயர்களும் உண்டு.

இத் திருத்தலத்தில் கோயில் கொண்டுள்ள இறைவன் பெயர் 'நீலகண்டன்' என்பதாகும். அவ் இறைவனே இக்குறவஞ்சியின் பாட்டுடைத்தலைவன். இக்குறவஞ்சி நூல் ஊரின் பெயரும் பாட்டுடைத்தலைவன் பெயரும் இணைந்து பெயர் பெறுகிறது.

''தருமன்முதல் ஐவர்செழு மலர்கொடுஅனு
தினமும்அருச் சனையே செய்யக்
கருணைபொழி விமலர்மண்ணிப் படிக்கரை
நாயகர்நீல கண்டர் மீது''[32]

''அட்டதிக் கிலங்கு பாண்டவர் ஐவர்கள் பூசை செய்யும்
மட்டவிழ் சோலை சூழும் மணிப்படிக் கரையில் நாளும்''[33]

என்னும் பாடல்கள் இம்மண்ணிப்படிக்கரை, பாண்டவர்கள் வழிபாடு செய்த தலம் என்பதை உணர்த்துகின்றன.

ஐந்து காப்புப் பாடல்களும் நான்கு தோடையப் பாடல்களும் அமைய நூல் தொடங்குகிறது. அடுத்து நூலின் பொருள் முழுமையும் அடங்கிய அகவற்பா ஒன்று அமைந்துள்ளது. அப் பா இருநூற்றுத்தொண்ணூற்றொன்பது அடிகளால் ஆனது. இது தவிர இரண்டு சிறிய அகவற்பாக்களும் உள்ளன. முப்பத்தாறு தருக்களும் பதினாறு விருத்தங்களும் நூலின் சிறந்த உறுப்புக் களாகக் காணப்பெறுகின்றன. பதினொரு கலிப்பாக்களும் பதினொரு வெண்பாக்களும் அமைந்துள்ளன. இடையிடையே இருபத்தைந்து இடங்களில் 'வசனம்' என்ற உறுப்பால் செய்திகள் தொடர்புபடுத்தப் பெற்றுள்ளன. சோபனம், மங்களம் என்ற இரண்டு பாடல்களுடன் நூல் முடிகிறது. முடிவின்பின் தனி ஏடு ஒன்றில் காணப்பெற்றதாக ஒரு வாழ்த்துப் பாடலைத் தந்திருக்கிறார் பதிப்பாசிரியர்.

இப்பாடல்கள் அனைத்திலும் பதினான்கு தருக்களுக்கு மட்டுமே வெண்ணிலாத்தரு, மன்மதன்தரு, தென்றல்தரு, குயில் தரு, வாசல்தரு, சாதிவளத்தரு, நாட்டுவளத்தரு, தேசத்தரு, அண்டகோளத்தரு, மலைவளத்தரு, நதித்தரு, தேவதலத்தரு, வித்தைத்தரு, ஏசல்தரு என்று பொருளோடு கூடிய தலைப்புக் கள் தரப்பெற்றுள்ளன.

நூலின் முப்பத்தொன்றாவது பாடல் முழுமையும்

''சரணு''

"சரணு சரணு சரணு—பரிபுர கிண்கிணீதர—சரணு
மூசிக வாகனா சரணு"

என்றே அச்சிடப்பெற்றுள்ளது. 'ணம்' என்பதைச் சுவடிகளில் 'ணு' என்று எழுதுவது வழக்கு. யு, பு, மு, னு என்பனவும் இவ்வாறு முறையே யம், பம், மம், னம் என்னும் ஈறுகளாக எழுதப்பெறு வனவாகும்.

பதிப்பாசிரியர் நூல், நூலாசிரியர் பற்றிய வரலாற்றினைத் தெளிவுபடுத்தியுள்ளார். தம் ஆராய்ச்சி முன்னுரையில் நூலின் சிறப்பினை விரிவாக எடுத்துக்காட்டியுள்ளார். தலவரலாறு களை விளக்கப் பதிப்பாசிரியருக்கு மண்ணிப்படிக்கரைப் புராணம் துணைபுரிந்துள்ளது.

தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் அவர்களின் ஆங்கில முன்னுரை ஒன்றும் அடங்கியுள்ளது.

21. **மருத்துவ நூல்கள்**

| | |
|---|---|
| பதிப்பாசிரியர் | : உலக. எழிலரசி |
| நூலாசிரியர் | : தன்வந்திரி |
| சுவடி | : அரசினர் சுவடி நூலகம், சென்னை-5. |
| வெளியீடு | : [தட்டச்சு வடிவில் உள்ளது] உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், சென்னை-600 020. |
| பக்கம் | : 127 |
| விலை | : — |

இப்பதிப்பில் **தன்வந்திரி வைத்திய சிந்தாமணி** 1500, '**வைத்திய அகராதி**' என்னும் இரு நூல்கள் அடங்கியுள்ளன. சுவடியிலிருந்து எடுத்து எழுதி, முறையாகப் பதிப்பித்துத் தட்டச்சுச் சுவடி வடிவில் உருவாக்கப் பெற்றுள்ளது. இது 'சுவடி யியல்' கல்வியின் முடிவில் அளிக்கப்பெற்ற ஆய்வேடு ஆகும்.

1. **தன்வந்திரி வைத்திய சிந்தாமணி** - 1500

இந்நூலில் நூறு பாடல்கள் மட்டுமே கிடைத்துள்ளன. ஆசிரிய விருத்தங்களால் ஆனவை. அந்தாதி அமைப்பு உடை யவை. ஐம்பூதங்கள், ஐம்பொறிகள் என்பன கூறப்படுகின்றன.

பிறகு மனித உடலில் அமைந்துள்ள தசநாடி, திரிநாடி, தசவாயு, சுத்ததாது ஆகியவை நன்கு விளக்கப்படுகின்றன. அவற்றின் இருப்பிடம் எடுத்துக்காட்டப் பெறுகின்றது. செய்திகள் முழுமையும் சிறந்த உவமைகளோடு விளக்கப்படுகின்றன.

2. **வைத்திய அகராதி**

2315 மருத்துவச் சொற்களுக்கு எளிய முறையில் பொருள் கூறப்பட்டுள்ளது. முதலெழுத்து மட்டும் அகரவரிசையில் அமைந்துள்ளது. மருந்தாகப் பயன்படும் இலை, காய், கனி, செடி, விதை போல்வன மிகுதியாக இடம்பெற்றுள்ளன.

இரண்டு சுவடிகளையும் முறையாகப் பதிப்பித்திருக்கிறார் பதிப்பாசிரியர். முதல் நூலின் உவமைச் சிறப்பு, பதிப்புரையில் அழகாக எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது. இரண்டாம் நூலில் அகராதி பற்றிய ஆய்வு நன்றாக அமைந்துள்ளது. மருத்துவம் அறிவார்க்குப் பயனுள்ள நூலாகும்.

## அடிக்குறிப்புகள்

1. நன்னூல்-நூற்பா 43.
2. ,, ,, 44.
3. ,, ,, 178.
4. ,, ,, 179.
5. ,, மயிலைநாதர் உரை-நூற்பா 182.
6. இந்நூல் நூற்பா - 182.
7. நன்னூல், சங்கர நமச்சிவாயர் உரை, உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு. முன்னுரை 2-ஆம் பதிப்பு (சென்னை, 1935), ப. 2.
8. டாக்டர் க. த. திருநாவுக்கரசு, தமிழியல் தொகுதி 18, (உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20), ப 121.
9. ப. சு. மணியம்-நுண்பொருள் மாலை, ப. IX.
10. மு. சண்முகம்பிள்ளை- ''அறிமுகவுரை, ப. 8.
11. இந்நூல்—ஆ பிரிவு பாடல்.1.
12. இந்நூல் ஆ பிரிவு பாடல். 2.

13. இந்நூல் அ-பிரிவு பாடல் 26.
14. இந்நூல் அ-பிரிவு-பாடல் 14.
15. ,, ப. 53.
16. இந்நூல் இ-பிரிவு-ப.75.
17. இந்நூல் - பாடல் 5.
18. ,, ,, 2.
19. ,, ,, 43.
20. ,, ,, 47.
21. ,, ,, 28.
22. இந்நூல்.- கண்ணி 41.
23. ,, ,, 62.
24. இந்நூல், ப. 46.
25. ,, முகவுரை, ப 8.
26. இந்நூல், ப. 73.
27. ஷை
28. இந்நூல், முன்னுரை, ப. 32.
29. இந்நூல், கடவுள் வணக்கம் - 1.
30. இந்நூல், பாட்டு-2.
31. இந்நூல், பாட்டு-36, வரி 25-44.
32. இந்நூல், பாடல் 3.
33. இந்நூல், பாடல் 11

# எண்பதில் தமிழ்ப் பாடத்திட்டம்

அ. பிச்சை

## 1. முன்னுரை

தமிழ்மொழியும் இலக்கியமும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாக வளர்ந்து வரும் காலமிது. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதாம் ஆண்டில் தமிழின் வளர்ச்சி நமது சமுதாய வரலாற்றில் அழுத்தமுறப் பதிந்துள்ளது. பல்வேறு துறைகளும் தமிழின் வளர்ச்சிக்குத் தன்னால் இயன்ற அரும் பங்கினை அளித்துள்ளன. அவற்றுள் கல்வித்துறையின் பங்கு இவண் குறிப்பிடத்தக்கது. தமிழ் பயிற்றுமொழியாகவும் கட்டாய மாகக் கற்கவேண்டிய முதன்மொழியாகவும் கல்லூரிக் கல்விவரை உள்ளது. மேல்நிலைக் கல்வி முதல் விருப்பப்பாடமாகவும் ஆய்வுப் பொருளாகவும் தமிழ் இருந்து வருகின்றது. தமிழைக் கற்பிக்க ஒவ்வொரு நிலையிலும் பொது அல்லது சிறப்புப் பாடத்திட்டங்கள் வரையப்பட்டுள்ளன. இக்கட்டுரை எண்பதில் பள்ளிக் கல்வித் தமிழ்மொழிப் பாடத்திட்டத்தின் நிலையை எடுத்துரைக்கின்றது'

## 2. பாடத்திட்டம் சிறு விளக்கம்

கல்வித் திட்டத்தைப் பற்றிப் பேசும்போது பயில்திட்டம் (curriculum) பாடத்திட்டம் (Syllabus) என்னும் இரு சொற்களை அடிக்கடி ஆளுகின்றார்கள். இவை இரண்டையும் ஒன்றாக நாம் கருதினாலும் இவ்விரண்டுக்கும் இடையே வேறுபாடு உண்டு. பயில்திட்டத்தில் பொதுவான குறிக்கோள்கள், கற்றுத்தர வேண்டியவைகள், எவ்வாறு அவற்றைக் கற்றுத்தருவது போன்றவை

பற்றிய பொதுவான கருத்துகள் கூறப்படும். ஆனால் பாடத் திட்டமோ ஒவ்வொன்றையும் விளக்கமாக எடுத்துரைக்கும்; பயில்திட்டத்தில் கூறப்பட்டுள்ளவற்றைச் சாதிப்பதற்கான வழி முறைகளைத் தெளிவாகவும் விரிவாகவும் தரும். அதாவது, எப்பொருளை, எந்த வரிசையில், எவ்வளவு காலக்கெடுவுக்குள் கற்றுத்தர வேண்டும் என்பனதப் பாடத்திட்டம் கோடிட்டுக் காட்டும். தமிழகத்தின் தமிழ்ப்பாடத்திட்ட வரைவு பயில் திட்டத்தின் தன்மையினையும் உள்ளுறையாகக் கொண்டுள்ளது.

### 3. ஆரம்பப்பள்ளிப் பாடத்திட்டம்

ஆரம்பப் பள்ளிக் கல்வி மிகவும் அடிப்படையான கல்வி; ஒவ்வொரு இந்தியக் குடிமகனுக்கும் அத்தியாவசியமான கல்வி. ஒருவரின் பிற்கால வாழ்க்கை ஒளிபெற இங்குதான் ஞானதீபம் ஏற்றப்படுகின்றது. எனவே, ஆரம்பப்பள்ளித் தாய்மொழிக் கல்வித்திட்டம் மிகுந்த கவனத்துடனும் எச்சரிக்கையுடனும் தீட்ட வேண்டியதாயிருக்கிறது. அடிப்படைக்கல்வி இந்தியக் குடிமகனின் பிறப்புரிமையாதலால் அதனைப் பெறுவதற்குத் தாய்மொழி துணைபுரிவதாக இருக்க வேண்டும். முதலாம் வகுப்பைக் கடந்தவுடன் பலர் பள்ளிப்படிப்புக்குப் புள்ளிவைத்து விடுகின்றனர். ஆகவே, பள்ளிவிலகல் (rate of dropout) விழுக்காட்டைக் குறைக்கும் வகையிலும் தாய்மொழியும் பயிற்றுமொழியும் எளிமையும் இனிமையும் உடையதாக இருக்கவேண்டும். தாய் மொழிக்கல்வி பொருத்தமான பாடங்களைக் (relevant Content) ஆர்வமூட்டும் முறைகளில் (motiviting techniques) கற்றுத்தரப் படவேண்டும். காந்திஜி, வினோபா, ராஜாஜி போன்றவர்கள் ஆதாரக்கல்வி பற்றி அழகாக எடுத்துரைத்துள்ளார்கள். அவற்றையெல்லாம் கருத்திற்கொண்டு இந்தியக்குடிமகனுக்கு ஏற்றதொரு கல்வியை அளிக்கவேண்டும்.

### 3 1. நோக்கம்

மொழியைக் கற்பித்தலில் ஆராய்ச்சி நடத்திய மொழியியல் வல்லுநர்கள் நான்கு வகையான மொழித் திறன்களைக் குறிப்பிடுகின்றனர். கேட்குந்திறன், பேசுந்திறன், வாசிக்குந்திறன், எழுதுந்திறன் என்பவை ஆகும். இந்நான்கு திறன்களையும் வளர்ப்பதே ஆரம்பப்பள்ளித் தமிழ்ப்பாடத் திட்டத்தின் நோக்கமாக இருக்கவேண்டும். எண்பதாம் ஆண்டு தமிழ்ப்பாடத் திட்டத்தில் கேட்குந்திறன் தவிர பிற மூன்று மொழித்திறன்களை

வளர்ப்பதுபற்றிக்குறிப்புகள்உள்ளன.கேட்டெழுத்துப்பயிற்சியைத் தவிர கேட்குந்திறன் வளர்ப்பதற்கான வழிமுறைகள் கூறப்படவில்லை. ''ஆரம்பப் பள்ளிப் படிப்பை முடிக்கும் போது மாணவர், கள் தாமாகவே நன்றாகப் படிக்கவும் தவறின்றிப் பேசவும் திறன் பெற்றிருக்க வேண்டும்; செய்தித்தாட்கள், இதழ்கள், சிறுகதை நூல்கள் ஆகியவற்றைத் தாமாகப் படித்துப் புரிந்துகொள்ளுமளவு மொழித்திறமைபெற இம்மொழிக்கல்வி பயன்படுமாறு அமைய வேண்டும்'' என்று தமிழ்ப்பாடத்திட்டத்தில் ஆரம்பப்பள்ளி மொழிக் கல்வியின் நோக்கம் குறிப்பிடுகின்றது.

### 3. 2. பாடத்திட்ட அமைப்பு

வாய்மொழிப்பயிற்சி, படிப்புப்பயிற்சி, எழுத்துப்பயிற்சி, இலக்கணம், கட்டுரை ஆகியன ஆரம்பப்பள்ளித் தாய்மொழிப் பாடத்திட்டத்தில் இடம்பெறுகின்றன. அவற்றைக் கற்றுக் கொடுப்பதற்கான பாடவேளைப் பகுப்பு கீழ்க்கண்ட அட்டவணையில் தரப்படுகின்றது.

| வகுப்பு | வாய் மொழிப் பயிற்சி | படிப்புப் பயிற்சி | எழுத்துப் பயிற்சி | இலக் கணம் | கட்டுரை | பாட நூல் | மொத் தம் பாட வேளை |
|---|---|---|---|---|---|---|---|
| I | 3 | 4 | 3 | — | — | — | 10 |
| II | 3 | 4 | 3 | — | — | — | 10 |
| III | 2 | 2 | 3 | 1 | — | — | 8 |
| IV | 2 | 2 | 3 | 1 | — | — | 8 |
| V | — | — | — | 1 | 2 | 5 | 8 |

#### 3.2.1. வாய்மொழிப் பயிற்சி

வாய்மொழிப் பயிற்சி என்பது நாப்பழக்கத்தையும் ஒலித் திருத்தத்தையும் ஏற்படுத்தும் பயிற்சியைக் குறிப்பதாகும். வீட்டுச் சூழ்நிலையிலிருந்து வரும் குழந்தைகளிடத்தில் பேச்சுத் தமிழின் இயல்புகள் அதிகமாக இருக்கும். அவர்களின் பேச்சமைதியை எழுத்துத்தமிழின் கட்டமைப்புக்குள் கொண்டு வருவதே ஆசிரியரின் முதற்கடமையாகும்.

முதல் வகுப்பில் உரையாடல், கதைசொல்லல் எனச் சில வற்றை அமைத்துக்கொண்டு வாய்மொழிப்பயிற்சி அளிக்கலாம்.

இரண்டாம் வகுப்பில் உரையாடல், கதைசொல்லல் ஆகிய வற்றோடு ஓரங்க நாடகமும் இடம்பெறவேண்டும். மேலும், ஒலி மயக்கங்களை ஏற்படுத்தும் ர-ற, ந-ன-ண, ல-ள-ழ ஆகிய ஒலி களைத் தெளிவாக உச்சரிப்பதற்கு "நாநெகிழ்" பயிற்சிகளை மேற்கொள்ளல் வேண்டும். மூன்றாம் வகுப்பில் உரையாடல் கதை சொல்லல், ஓரங்க நாடகம் போன்றவற்றோடு ஒலிநயப் பாடல்களை ஒப்பித்தல், நன்கு தெரிந்த பொருள்களைப் பற்றி ஆறேழு வாக்கியங்கள் கொண்ட வாய்மொழிக் கட்டுரை கூறல், பாடத்தொடர்பான வினாக்களுக்குச் சிறுவாக்கியங்களாலான விடை கூறல் ஆகியவைகளைக் கடைப்பிடிக்க வேண்டும் நான்காம் வகுப்பில் வாய்மொழி விடை, வாய்மொழிக் கட்டுரை இடம் பெற வேண்டும். மேலும், வாய்மொழிக் கட்டுரை தொடக்கம், பொருள் வளர்ச்சி, முடிவு ஆகிய பகுதிகளைக்கொண்டு அமைவ தற்குப் பயிற்றுவிக்க வேண்டும். ஐந்தாம் வகுப்பில் வாய்மொழிக் கட்டுரை, சிறுசொற்பொழிவாற்றல், வாதம்புரிதல், நடிப்புடன் பாட்டினை ஒப்பித்தல் ஆகியவை பேச்சுத்திறன் வளர்க்கக் கடைப் பிடிக்க வேண்டிய வழிமுறைகளாகும்.

### 3.2.2. வாசிப்புப் பயிற்சி

முதல் வகுப்பில் வாய்மொழிப் பயிற்சியான நாப்பழக்கத்தின் ஒரு பகுதியாகவே அமையும். மேலும்இவ்வகுப்பில் தமிழ் எழுத்துக் களை நன்கு ஒலிக்கவும் முந்நூற் சொற்களைப் படிக்கவும் திறன் பெறவேண்டும். இரண்டாம்வகுப்பில் ஐந்நூறு புதியசொற்களைப் பொருளுணர்ந்து படிக்க வேண்டும். அதுமட்டுமின்றி, பாடநூலில் உள்ள உரைநடைப் பாடங்களை உரிய ஒலியுடன் வாய்விட்டுப் படிக்கவேண்டும். மூன்றாம் வகுப்பிலும் நான்காம் வகுப்பிலும் வாய்விட்டுப் படித்தல், வாய்க்குள் படித்தல் ஆகிய இரண்டுக்கும் பயிற்சி அளிக்கவேண்டும். நான்காம் வகுப்பில் வாய்க்குள் படிப் பிற்குச் செய்தித்தாள்கள், மாத இதழ்கள், கையெழுத்து மலர்கள், கதைகள் ஆகியவற்றைப் பயன்படுத்தலாம். ஐந்தாம் வகுப்பில் முன்னைய வகுப்பைப்போல வாய்க்குள் படித்தல் வினாக்களுக்குப் பதிலளித்தல், படித்தவற்றைச் சுருக்கிச்சொல்லல் ஆகிய பயிற்சிகள் இடம் பெறலாம்.

### 3.2.3. எழுத்துப் பயிற்சி

முதல் வகுப்பில் மணலில் அல்லது கரும்பலகையில் நேர்கோடு கள், அரைவட்டம், முழுவட்டம், கோணம், சதுரம் போன்ற

வற்றை வரைய முதலில் பழக்கவேண்டும். பின்பு பார்த்தெழுதும் பயிற்சியை (Copying Excercises) படிப்படியாகத் தரவேண்டும். இதற்குப் புள்ளியிட்ட பார்த்தெழுத்து ஏடுகளைப் பயன்படுத்த லாம். இறுதியில் தானாகவே எழுதத் தூண்டலாம் இரண்டாம் வகுப்பில் ஐந்து கோடிட்ட பார்த்தெழுத்து ஏடுகளில் எழுதப் பழக்கலாம். இவ்வகுப்பில் கேட்டெழுத்துப் பயிற்சியும் அளிக்க லாம். மூன்றாம் வகுப்பில் மூன்று கோடிட்ட பார்த்தெழுத்து ஏடு களில் எழுதப் பழக்குதல், பாடத்தொடர்பான வினாக்களுக்கு இரண்டு மூன்று சிறு வாக்கியங்களில் விடை எழுதுதல், பாடத்தை ஆசிரியர் வாசிக்க மாணவர்கள் கேட்டெழுதுதல் போன்றவற்றை எழுத்துப் பயிற்சிக்குத் தரலாம்.

நான்காம் வகுப்பில் மூன்றுகோடிட்ட ஏடுகளில் பார்த்தெழுத் துப்பயிற்சி தருதல், அறிந்த பொருள் பற்றிச் சிறுசிறு கட்டுரைகள் எழுதச் சொல்லல், கடிதம் எழுதுதல், கேட்டெழுத்துப் பயிற்சி கொடுத்தல் ஆகியவைகள் மேற்கொள்ளப்படவேண்டும் ஐந்தாம் வகுப்பில் இருகோடுகளில் உள்ள குறிப்பேடுகளில் எழுதும் பயிற்சி அளித்தல் வேண்டும். தொகை-வகை-விரி என்ற முறையிலும், முன்னுரை பொருட்பகுப்பு-முடிவுரை என்ற அமைப்பிலும் எழுத்து வடிவக் கட்டுரைகள் எழுதப் பயிற்றுவிக்க வேண்டும். பத்திபிரித்து, நிறுத்தற் குறியிட்டு எழுதும்படி நன்கு கற்பிக்கவேண்டும். மேலும், கட்டுரை வகுப்பில் கடிதம் எழுதுதல், படிவங்களை நிறைவு செய்தல், விழா அல்லது கூட்ட நிகழ்ச்சிகளைப் பற்றிக் குறிப்பெடுத் தல், குறிப்புக்களை விரித்தெழுதுதல், இரசீது எழுதுதல் போன்ற இக்காலத்திற்குப் பயனுடையவற்றில் பயிற்சி அளிக்கவேண்டும்.

### 3.2.4. இலக்கணம்

இலக்கணம் பாடநூலை ஒட்டியே விதிவரு முறையிலே நடத்த வேண்டும். அதற்கேற்பவே இலக்கணப் பாடங்களும் அமைதல் வேண்டும். மூன்றாம் வகுப்பு முதல் இலக்கணம் கற்றுத்தரப்படு கின்றது. அவ்வகுப்பு இலக்கணப்பகுதியில் எழுவாய், பயனிலை, செயப்படுபொருள், சிறப்பு, நிகழ்வு, எதிர்வு ஆகிய இலக்கண கூறுகள் கற்றுத்தரப் படவேண்டும். இவற்றோடு திணை, பால், இடம், முற்று, எச்சம் என்பவை நான்காம் வகுப்பில் கற்றுத்தரப் படவேண்டும். ஐந்தாம் வகுப்பு இலக்கணப் பகுதியில் எழுத்திலக் கணமும் சொல்லிலக்கணமும் சொற்றொடர் இலக்கணமும் இடம் பெறல் வேண்டும். எழுத்திலக்கணப்பிரிவில், இலக்கண வரையறை,

ஐவகை இலக்கணம், எழுத்தின் இலக்கணம், ஒலி எழுத்து, வரி எழுத்து, உயிர், மெய், உயிர்மெய், ஆய்தம், குறில்நெடில் வேறுபாடு, மூவகை இன எழுத்துக்கள், சுட்டு மற்றும் வினா எழுத்துக்கள் ஆகியவை இடம்பெறும்; சொல்லிலக்கணப்பகுதியில், சொல்லின் வரையறை, வகைகள், பெயர், வினை, எச்ச வகை ஆகியவை இடம்பெறும்; சொற்றொடர் இலக்கணப் பகுதியில், சொற்றொடரின் இலக்கணம், எழுவாய்ப்பயனிலை, செயப்படு பொருள், திணை, பால், எண், இடம், ஒற்றுமிகும் இடங்கள் ஆகியவை இடம்பெறும். நான்காம் வகுப்பிலும் ஐந்தாம் வகுப்பி லும் நிறுத்தற் குறியீடுகளைப் பற்றி அறிமுகப்படுத்திக் கற்றுத்தர வேண்டும்.

### 3.2.5. கட்டுரை

பொதுவாக ஆரம்பப் பாடத்திட்டத்தில் மொழிப்பயிற்சிக் கும் கட்டுரைப் பயிற்சிக்கும் அதிக வேறுபாடு இல்லை. உயர்நிலை வகுப்பிற்கான கட்டுரைப் பயிற்சிக்கு ஓர் அடித்தளம் முதல்நான்கு வகுப்புக்களில் போடப்படுகின்றது. ஐந்தாம் வகுப்புப் பாட வேளையில் மட்டும் கட்டுரைப்பயிற்சிக்கெனப் பாடவேளை ஒதுக்கப்பட்டுள்ளது. இவ்வகுப்பில் கட்டுரை வரைதல், கடிதம் எழுதுதல், படித்துச் சுருக்கி வரைதல், பொருத்தமான நிறுத்தற் குறியீடுகளைப் பயன்படுத்துதல், கதை மற்றும் பாட்டுப் படைத் தல் ஆகியவற்றுக்கு இவ்வகுப்பில் பயிற்சி அளிக்கலாம்.

### 3.2.6. பாடநூல் தயாரிப்பு

பெரிய எழுத்துக்களினால் இயற்கை வண்ணப்படங்களுடன் பாடநூல்கள் அமையவேண்டும். பறவைகள், விலங்குகள், மரஞ் செடி கொடிகள் பற்றிய செய்திகள், சிறப்பியல்புகள் ஆர்வமூட்டும் வகையில் அறிமுகப்படுத்தவேண்டும். காலத்துக்கு ஏற்ற புதிய செய்திகளைத் தாங்கிப் பாடங்கள் அமைதல் வேண்டும். சொற் களஞ்சியத்திலும் பிற தரங்களிலும் படிப்படியாக உயர்ந்து செல்ல வேண்டும். ஒவ்வொரு பாடத்தின் பின்னும் சொற்பட்டியல் அமைதல் வேண்டும். கீழ்க்காணும் அட்டவணை பாடநூலின் அமைப்புப் பற்றிப் பொதுவான கருத்துக்களை எடுத் துரைக்கும்.

| வகுப்பு | செய்யுள் மட்டும் (பாட்டுக் களும் சேர்த்து) | உரைநடை (பாட்டுக் களும்சேர்த்து) | புதிதாக அறிமுகப் படுத்தப்படும் சொற்கள் | மொத்தப் பக்கங்கள் |
|---|---|---|---|---|
| I | 160 | 45 | 300 | 72 |
| II | 155 | 35 | 500 | 96 |
| III | 185 | 35 | 700 | 112 |
| IV | 216 | 25 | 1000 | 120 |
| V | 256 | 20 | | 144 |

ஆரம்பப் பள்ளிச் செய்யுட் பகுதியில் பெரும்பாலும் ஒழுக்கத்தைப்; போதிக்கும் பழங்கால, இடைக்கால நீதிச் செய்யுட்கள் இடம்பெறுகின்றன. முதல் வகுப்பில் ஆத்திசூடி, குழந்தைப் பாடல்கள் போன்றவை இடம்பெறவேண்டும். இரண்டாம் வகுப்பில் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், குழந்தைப் பாடல்கள் ஆகியவை இடம்பெறவேண்டும். மூன்றாம் வகுப்பில் வெற்றி வேற்கை, உலகநீதி, மூதுரை, குழந்தைப்பாடல்கள் ஆகியவை இடம் பெற வேண்டும். நான்காம் வகுப்பில் நல்வழி, நீதி வெண்பா, நன்னெறி, சதகம், இயற்கை அழகு பற்றிய நாட்டுப் புறப் பாடல்கள், கதைநிகழ்ச்சி தழுவிய தற்காலக் கவிஞர்களின் பாடல்கள் போன்றவை இடம்பெறவேண்டும். ஐந்தாம் வகுப்பில் வாழ்த்து, திருக்குறள், நீதிநெறிவிளக்கம், தற்காலக் கவிஞர்களின் கதைப்பாடல், பல்பொருட்பகுதி ஆகியவை இடம்பெறவேண்டும். அறவுரைச் செய்யுட்களை வகுப்பிற்கு ஏற்ப மனப்பாடப் பகுதிக்குத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

உரைநடை பொதுவாகப் பல்பொருள் பற்றி அமைகின்றது. முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு உரைநடைப்பகுதி எந்தப் பொருள்களைக் கொண்டு எப்படி அமைய வேண்டும் என்று பாடத் திட்டத்தில் குறிப்பிடவில்லை தாய்மொழி, தாய்நாடு, குடும்பம், சிற்றூர், சந்தை, தொழில்கள், கதை, விலங்கு, பறவை, இயற்கை, உரையாடல், கதை, கடிதம் எழுதுதல், நாட்டுத்தலைவர்களைப் பற்றிய வாழ்க்கைக் குறிப்புக்கள், சுற்றுலாச்செய்திகள், நாட்டுப் புற விடுகதைகள் ஆகியவற்றைக் கொண்டதாக மூன்றாம் வகுப்பு உரைநடைப் பகுதி இருக்க வேண்டும். நான்காம் வகுப்பு உரை

நடைப் பகுதியில் கதை, உரையாடல், ஓரங்க நாடகம், பயணக் கட்டுரை, கடிதம், புனைந்துரை, இலக்கியத் தொடர்புடையவை, பழமொழிகள் ஆகியவை இடம்பெற வேண்டும். ஐந்தாம் வகுப்பு உரைநடைப் பகுதியில் பறவை, விலங்குகள் பற்றிய வியத்தகு செய்திகள், ஆர்வமூட்டும் வீரமரபுக் கதைகள், பொதுநலம் பேணுதல், கடமையுணர்வு பற்றிய கட்டுரைகள், சிறுகதை, ஓரங்க நாடகம், கடிதம், வாழ்க்கை வரலாறு, இலக்கியத் தொடர்பான கட்டுரைகள் ஆகியவற்றை உள்ளடக்கமாகக் கொண்டு அமைதல் வேண்டும்.

### 3.3. பாடத் துணைக்கருவிகள்

முதலாம் இரண்டாம் வகுப்புக்களுக்கு மட்டும் பாடம் நடத்துவதற்குத் தேவையான துணைக்கருவிகள் பற்றிக் குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன. மேலும், இரண்டு வகுப்புக்களுக்கும் ஒரே மாதிரியான குறிப்புக்களே தரப்பட்டுள்ளன. மின்னட்டைகள் (Flash cards) இணைப்பு அட்டைகள் (Matching cards) எழுத்துக் கூட்டு வரையேடுகள் (Word building sets) இணைக்குறில் வரையேடுகள், இனவெழுத்து வரையேடுகள், மரபுமொழி வரையேடுகள் ஆகியவைகளாகும்.

## 4. உயர்நிலைப்பள்ளிப் பாடத்திட்டம்

அடிப்படைக்கல்வி என்னும் தளத்தின்மேல் கட்டப்படும் முதல் மாடம் உயர்நிலைப்பள்ளிப் பாடத்திட்டமாகும். இந்தியாவின் அரசியல் சாசனத்திலே ஒவ்வொரு இந்தியக்குடிமகனுக்கும் எட்டாம் வகுப்பு வரை இலவசக்கல்வி அளிக்க வேண்டும் என்று வலியுறுத்தப்பட்டுள்ளது. தமிழக அரசு உள்பட பல மாநில அரசுகள் பொதுக்கல்வியைப் பரவலாக்க வேண்டும் என்ற நல்லெண்ணத்தில் பத்து அல்லது பன்னிரண்டாம் வகுப்பு வரையிலும் இலவசக்கல்வித் திட்டத்தைப் பேணி வருகின்றது. இதனைக் கருத்திற்கொண்டு மாணவரின் சூழ்நிலை மற்றும் மனநிலை ஆகியவற்றுக்கு ஏற்பப் பொருத்தமான கல்வித்திட்டத்தை உருவாக்க வேண்டும்.

### 4.1. நோக்கம்

ஐந்தாம் வகுப்பில் தேர்ச்சிபெற்ற மாணவர்கள் தமிழைத் திருத்தமாகப் பேசவும் எழுதவும் பொருளுணர்ந்து படிக்கவும் ஓரளவு பயிற்சி பெற்றிருப்பர். அவர்களுடைய தமிழ் அறிவை

மேலும் வளர்க்கும் வகையில் ஆறு முதல் பத்து வகுப்புகளுக்கான பாடத்திட்டம் அமைதல் வேண்டும் இந்த வகுப்புக்களில் மாணவர்களிடத்தில் 'இலக்கியச்சுவை' உணர்திறனை வளர்த்தலோடு சொற்களஞ்சிய அறிவைப் பெருக்கித் தமிழ்மொழியைப் பிழையறப் பேசவும் எழுதவும் பயிற்சி அளித்தல் வேண்டும். மாணவர்கள் தாங்களாகவே தங்கள் மொழியறிவை வளர்த்துக் கொள்வதற்கான முறையில் கதை, நாடகம், கவிதை ஆகியவற்றைப் படித்துணர்வதற்கும் கடிதங்கள் எழுதுவதற்கும், அகராதியைக் கையாளுவதற்கும் இவ்வகுப்புக்களில் பயிற்சி அளித்தல் வேண்டும். இவைகளைக் கருத்திற்கொண்டு இப்பாடத்திட்டம் வகுக்கப் பெறுகின்றது.

## 4.2. பாடத்திட்ட அமைப்பு

செய்யுள், உரைநடை, இலக்கணம், துணைப் பாடநூல், கட்டுரைப்பயிற்சி ஆகியவை உயர்நிலைப்பள்ளித் தாய்மொழிப் பாடத்திட்டத்தில் இடம்பெறுகின்றன. அவற்றைக் கற்பிப்பதற்கான பாடவேளைகள் கீழ்க்கண்டவாறு அளிக்கப்பட்டுள்ளன:

| | ஆழ்ந்த படிப்பு | | | அகன்றபடிப்பு | | |
|---|---|---|---|---|---|---|
| வகுப்பு | செய்யுள் | உரை நடை | இலக் கணம் | துணை நூல் | கட்டுரைப் பயிற்சி | மொத்தம் |
| VI | 2 | 2 | 1 | 1 | 1 | 7 |
| VII | 2 | 2 | 1 | 1 | 1 | 7 |
| VIII | 2 | 2 | 1 | 1 | 1 | 7 |
| IX | 2 | 2 | 1 | 1 | 1 | 7 |
| X | 2 | 1 | 1 | 1 | 1 | 6 |

4.2.1. செய்யுட்கள் பொதுவாகக் கால வரிசைப்படி அமைந்துள்ளன. அதாவது, அவை இயற்றப்பட்ட காலத்தைக் கருத்திற்கொண்டு இலக்கிய வரலாற்று முறைப்படி தொகுத்துத் தரப்பட்டுள்ளன. பழங்காலச் செய்யுட்கள் முதலிலும் இடைக்காலச் செய்யுட்கள் அதற்கடுத்தும் தற்காலச் செய்யுட்கள் இறுதியிலும் தரப்பட்டுள்ளன. ஆறாம் வகுப்பிற்கு இருநூற்று நாற்பது அடிகளும், ஏழாம் வகுப்பிற்கு நானூறு அடிகளும், எட்டாம் வகுப்பிற்கு அறுநூற்றைம்பது அடிகளும், ஒன்பதாம் வகுப்பிற்கு எழுநூறு அடிகளும் பத்தாம் வகுப்பிற்கு எழுநூற்றைம்பது அடிகளும் பரிந்துரை செய்யப்பட்டுள்ளன. ஆறாம் ஏழாம் வகுப்பிற்கு நூறு

அடிகளும், மற்ற வகுப்புக்களுக்கு நூற்று இருபது அடிகளும் மனப் பாடப் பகுதிக்குத் தரப்பட்டுள்ளன. கீழ்க்காணும் பட்டியல் செய்யுட்கள் எப்பிரிவுகளில் தொகுக்கப்பட்டிருக்கின்றன என்பதைக் காட்டும்.

| வகுப்பு | வாழ்த்து | கதை தொடர் நிலை | நாட்டுப் புறப் பாடல் | மறுமலர்ச் சிப் பாடல் | வழி பாட்டுப் பாடல் | மொழி பெயர்ப் புப் பாடல் | பல்சுவை பல் பொருள் |
|---|---|---|---|---|---|---|---|
| VI | x | x | x | x | — | — | — |
| VII | x | x | — | x | — | — | — |
| VIII | x | x | — | x | x | x | x |
| IX | x | x | — | x | x | x | x |
| X | x | x | — | x | x | — | — |

வாழ்த்துச் செய்யுள் பொதுநோக்குடையதாக இருக்க வேண்டும். திருக்குறள், நன்னெறி, நீதிநெறி விளக்கம், திரிகடுகம், அறநெறிச்சாரம், நாலடியார், இனியவை நாற்பது, சிறுபஞ்ச மூலம், ஏலாதி, இன்னிலை, பழமொழி என்பவை நீதிப்பகுதியில் அல்லது அறவுரைப் பகுதியில் இடம்பெறவேண்டும். ஆசிய ஜோதி, குடும்ப விளக்கு, பஞ்சதந்திரம், இராசாதேசிங்கு, அரிச்சந்திர புராணம், கயவன் கல்விஅருமை அறிந்தது, குசேலோபாக்கியானம், நளவெண்பா, திருவிளையாடற்புராணம், மணிமேகலை, பில்கணீயம், பெரியபுராணம், கம்பராமாயணம், இரட்சணிய யாத்திரிகம், குறவஞ்சி, மனோன்மணீயம் ஆகியவை கதைப்பகுதியில் அல்லது தொடர்நிலைச் செய்யுள் பகுதியில் இடம்பெற வேண்டும். கலை, தொழில், வீரநிகழ்ச்சி, தாலாட்டு பற்றிய நாட்டுப்புறப் பாடல்களும் கவிமணி, வெ. ப. சுப்பிரமணிய முதலியார் ஆகியோரின் மொழிபெயர்ப்புப் பாடல்கள் இடம் பெறவேண்டும். தேவாரம், திருவாசகம், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், திருவருட்பா, வேதநாயகம் பிள்ளையின்பாடல் வழிபாட்டுப் பாடற்பகுதியில் இடம்பெறவேண்டும். கொடிவணக்கம், மொழி, நாடு, சமூகம், இயற்கை, பெண்மை, தொழில், நகைச்சுவை பற்றிய தற்காலக் கவிஞர்களின் மறுமலர்ச்சிப் பாடல்கள் செய்யுட் பகுதியில் இடம்பெறவேண்டும். சங்க காலம் முதல் தற்காலம் வரையிலுள்ள கவிஞர்களின் பல்சுவை பல்பொருள் பற்றிய பாடல்கள் செய்யுட் பகுதியின் இறுதியில் இடம்பெற வேண்டும்.

4.2.2. உரைநடை

மாணவர்கள் தங்களைச் சுற்றியுள்ள உலகத்தை அறிந்து கொள்ளுமாறு புதியன, சிறந்தன, வியப்பூட்டுவன, நல்லன என்று கருதப்படுவனவற்றைப் பற்றி இனிய, எளிய நடையில் எழுதப்பெற்ற பாடங்கள் இடம்பெறவேண்டும். உரைநடைப் பாடங்கள் நல்ல சொல்லாட்சிகளையும் பொருட்செறிவையும் வகுப்பின் தரத்திற்கு ஏற்றவாறு பிழையின்றி, கூடியவரையில் பிறசொல் மற்றும் கொச்சைச்சொல் கலப்பின்றி அமைய வேண்டும். மொத்தப்பாடங்கள், ஒரு பாடத்தின் பக்கவரையறை, எழுதும் ஆசிரியர், இலக்கியத் தொடர்பானவை ஆகியவை பற்றிக் கீழ்க்காணும் பட்டியல் எடுத்துரைக்கும்.

| வகுப்பு | ஒரு பாடத்தின் பக்கவரையறை | மொத்தப் பாடங்கள் | எழுதும் ஆசிரியர் | இலக்கியத் தொடர்பானவை |
|---|---|---|---|---|
| VI | 20 | 5 | ஒருவர் | — |
| VII | 20 | 5 | ஒருவர் | — |
| VIII | 16 | 6 | பலர் | 60% |
| IX | 16 | 6 | பலர் | 60% |
| X | 16 | 6 | பலர் | 50% |

தமிழ்ப் புலவர்கள், கலைஞர்கள், புரவலர்கள் பற்றியனவாகவும் இலக்கியநயம் உணர்த்துவனவாகவும், யாப்பு, அணி போன்ற இலக்கணப் பகுதிகளைச் சுவைபட அறிமுகம் செய்யும் முறையிலும் இருத்தல்வேண்டும். மேலும், தனித்தனி இலக்கியங்கள் எழுந்த வரலாறு, வாழ்க்கைக்கு எடுத்துக்காட்டாய் அமைந்த பெருமக்களின் வாழ்க்கை நிகழ்ச்சிக் குறிப்புக்கள், செய்யுட்களின் உரையாக்கம், எளிய நாடகப் பகுதிகள், உரையாடல்கள், கற்பனைக் கட்டுரைகள், சொற்போர் மன்ற நிகழ்ச்சிகள், கடிதங்கள், நுண்கலை பற்றியவை, நாட்டுநலத் திட்டங்கள்-பன்னாட்டுச் செய்திகள், வேளாண்மை, தொழில்வளம், காட்டுவளம், கடல்வளம், மலைவளம் போன்ற பிறபொருள் பற்றிய பாடங்களும் இடம்பெறுதல் வேண்டும்.

4.2.3. இலக்கணம்

இலக்கணம் மொழியைப் பிழையறப் பேசவும் எழுதவும் கற்பிப்பதோடு இலக்கியத்தின் அமைப்பை உணர்ந்து கொள்வ

தற்கும் துணைபுரிகிறது. இலக்கணத்தை மாணவர்கள் விரும்பிக் ஏற்குமாறு சுருத்துடன் கற்பித்தல்வேண்டும். ஆறாம் ஏழாம் வகுப்புகளில் இலக்கணத்தைத் தனிப்பாடமாகக் கற்பிக்காமல் மொழிப்பாடத்தோடு தொடர்புபடுத்தியே கற்பித்தல் வேண்டும். மொழிப்பாடத்திலிருந்து சில எடுத்துக்காட்டுக்கள் கூறி அவற்றி லிருந்து விதியை வருவித்துக்கொள்ளும் 'விதிவரு முறையில்' (Inductive method) கற்பிக்கவேண்டும். இலக்கணப் பாடங்களும் நூல்களும் இம்முறையைப் பின்பற்றிக் கற்பிப்பதற்கு ஏற்றவாறு புதிய முறையிலே எழுதப்படல்வேண்டும். எடுத்துக்காட்டுக்கள். முதலிலும் விளக்கமும் விதியும் பிறகும் இடம்பெறவேண்டும்

எட்டாம் வகுப்பு முதல் இலக்கணத்தைத் தனிப்பாடமாகக் கற்பிக்கலாம். மாணவர்களுக்குச் சலிப்பு ஏற்பட்டுவிடாமல் இருப்பதற்குப் பாடப்பகுதியிலிருந்தும் உலக வழக்கிலிருந்தும் பல எடுத்துக்காட்டுக்களைக் கூறி அவற்றிலிருந்து பொதுவிதியை வரவழைக்கச் செய்யவேண்டும். தேவைப்படும் இடங்களில் மட்டும் நன்னூல் நூற்பாக்களைத் தரவேண்டும். ஆறாம் ஏழாம் வகுப்பு மாணவர்களுக்கு எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் கற்றுத் தரப்படவேண்டும். எட்டாம், ஒன்பதாம், பத்தாம் வகுப்பு மாணவர்களுக்கு அவற்றோடு புணரியல், பொது, யாப்பு, அணி இலக்கணங்களும் கற்பிக்கவேண்டும்.

### 4.2.4. துணை நூல்

மாணவர்களின் அகன்ற படிப்பை வளர்ப்பதற்குத் துணை நூல்கள் பயன்படுகின்றன. துணைப்பாடங்கள் எளிமையும் சுவையும் கொண்டதாய் இருக்கவேண்டும் மாணவர்கள் தாங்களாகவே ஆசிரியர் உதவியின்றிப் படித்துப் புரிந்துகொள்ளக் கூடியதாய் இருக்கவேண்டும். ஆசிரியர் நூலின் பொதுக்கருத்தை விளக்கிக் கூறினால்போதும். மாணவர்கள் வீட்டில் படித்துக் குறிப்பு எடுத்துக்கொண்டு வகுப்பில் கட்டுரை எழுதவேண்டும். அதற்கு ஏற்ப நூலின் இறுதியில் கட்டுரைப் பயிற்சி கொடுக்கப்பட்டிருத்தல் வேண்டும். வாழ்க்கை வரலாறுகள், வீரக்கதைகள், பயணக் கட்டுரைகள், சிறுகதைகள் நாடகங்கள், அறிவியல் கண்டுபிடிப்பு, கலைநலம் உணர்த்துவன, சமுதாய முன்னேற்றம், அரசியல் வரலாறு, தொழில்வளர்ச்சி இயற்கைப் புதுமைகள் போன்ற காலத்திற்கு ஏற்ற இன்றியமையாத பொருள்களுள் ஒன்றைப்பற்றி எழுதப்பட்டிருத்தல்வேண்டும். ஆறாம் ஏழாம் வகுப்பு மாணவர்

களுக்கு ஒரு துணைநூலும், எட்டாம், ஒன்பதாம், பத்தாம் வகுப்பு மாணவர்களுக்கு இரண்டு நூல்களும் அளிக்கவேண்டும்.

### 4.2.5. கட்டுரை மற்றும் மொழிப்பயிற்சி

கருதிய பொருளைக் குறித்த அளவில் பிழைகள் இல்லாமல் எழுதப் பயிற்சி அளிப்பதே கட்டுரைப்பயிற்சியின் நோக்கமாகும். முதலில் வாய்மொழிப் பயிற்சி அளித்து, பின்னர் எழுத்துப்பயிற்சி அளித்தல்வேண்டும். கட்டுரைகள் முகவுரை, கரு, முடிவுரை என்றும் முக்கூட்டு அமைப்பில் எழுதும்படி பயிற்சி அளித்தல் வேண்டும் ஆறாம், ஏழாம், எட்டாம் வகுப்புக்களில் பல்பொருள் கள் பற்றிக் கட்டுரைகள், கடிதங்கள் மற்றும் விண்ணப்பங்கள், உரையாடல் எழுதுதல், இரசீது எழுதுதல், பார்த்த நிகழ்ச்சியை விரித்து எழுதுதல், கதை எழுதுதல் போன்ற பயிற்சிகள் அளித்தல் வேண்டும். ஒன்பதாம், பத்தாம் வகுப்புக்களில் அப்பயிற்சிகளோடு சொற்பொழிவு அல்லது வானொலிப் பேச்சைக் குறிப்பெடுத்தல், அக்குறிப்புக்களை விரித்து எழுதுதல், செய்யுளின் திரண்ட பொருளை எழுதுதல், திருமண வாழ்த்து வரைதல் போன்ற பயிற்சிகளையும் மேற்கொள்ளல் வேண்டும்.

மொழிப்பயிற்சிகளைக் கட்டுரைப் பயிற்சியோடு தொடர்பு படுத்தி நடத்தவேண்டும். மொழிப்பயிற்சியின் நோக்கம் பிழைகள் இன்றிக் கட்டுரைகள் எழுதுவதற்குத் துணைபுரிவதாகும். பத்தி அமைத்தல், நிறுத்தற்குறிகளைச் சரியாக ஆளுதல், உவமை மற்றும் மரபுத்தொடர்களை வாக்கியத்தில் அமைத்தல், வழூஉச் சொற்களைத் திருத்தி எழுதுதல் ஆகியவைகள் ஆறாம் வகுப்பு மொழிப்பயிற்சியில் இடம்பெறவேண்டும். இவற்றோடு பழ மொழிகளை வாக்கியத்தில் அமைத்தல், வலி மிகா மற்றும் மிகும் இடங்கள் ஆகியவை பற்றி ஏழாம் வகுப்பு மொழிப்பயிற்சியில் அளிக்கவேண்டும். எட்டு, ஒன்பதாம், பத்தாம் வகுப்புக்களில், விட்ட சொற்களை எடுத்தெழுதித் தொடர்மொழிகளை நிறைவு செய்தல், அடைமொழி கொடுத்தல், வாக்கிய வகைகள் மற்றும் மாற்றங்கள், பலவகை மொழிப்பிழைகள், கலைச்சொல் கற்றல், பிறமொழிச் சொற்கலப்பு நீக்கி எழுதுதல், சொற்பொருத்தம், நிறுத்தற்குறிகள், பத்தியமைத்தல் ஆகிய பயிற்சிகளும் இடம் பெறுதல் வேண்டும்.

### 4.3. பாடத்திட்டத்திற்கு அடங்காத செயற்பாடுகள்

பாடத்திட்டத்தில் உள்ள பாடவேளைகளைத் தவிர ஒல்லும் வகையெல்லாம் மொழித்திறன்களை வளர்க்க முயற்சி எடுக்க

வேண்டும். நூல் நிலையப் படிப்பு, இலக்கியமன்றம், மலர் வெளியிடுதல், செய்திப்பலகை போன்றவை குறிப்பிடத்தக்கவை. நூல் நிலையப் படிப்பு மாணவரின் அகன்ற படிப்புத் திறனைப் பெருக்கும். நூலகத்தில் அகராதிகளையும் குறிப்பு நூல்களையும் (Reference Books) பயன்படுத்தும் திறனை வளர்க்க வேண்டும்' இலக்கிய மன்றங்களின் வாயிலாக மாணவரின் பேச்சுத்திறனை வளர்க்க நிறைய வாய்ப்புண்டு. மலர் வெளியீடு மாணவரின் படைப்புத்திறனை வளர்க்கப் பயன்படும். மாணவர்களைக் கதை, கட்டுரை, கவிதை போன்றவற்றை எழுதத்தூண்டி, அவற்றை மாதத்திற்கு ஒருமுறை அல்லது ஆண்டுக்கு ஒருமுறை மலராக வெளியிட்டு வருதல் வேண்டும். அச்சிட முடியாவிட்டால் கையெழுத்து மலராகத் தயாரிக்கலாம். செய்திப் பலகை பொது அறிவினையும் வாசிப்புத் திறனையும் வளர்க்கப் பயன்படும்.

### 5. மேல்நிலைப்பள்ளிப் பாடத்திட்டம்

கிராமத்தில் மற்றும் சிறு நகரத்தில் வாழும் மாணவர்களுக்கு உயர்கல்வியும் தொழிற்கல்வியும் அளிக்கும் பொருட்டு உயர்நிலைப் பள்ளியிலுள்ள பதினொன்றாம் வகுப்பையும் கல்லூரியிலுள்ள புகுமுக வகுப்பையும் தனியாகப் பிரித்து, இணைத்து இரண்டாண்டு மேல்நிலைப் பள்ளிக்கல்வி அமைப்பை உருவாக்கினார்கள். அதற்கான தீர்மானம் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்தாறாம் ஆண்டு நவம்பர் மாதம் ஐந்தாம் தேதி நிறைவேற்றப்பட்டது. மேல்நிலைப் பள்ளிக் கல்வி வாரியத்தின் தலைவர் பள்ளிக்கல்வி இயக்குநர் ஆவார். அவரின் தலைமையின் கீழ் பொதுக்கல்விக்கும் தொழிற்கல்விக்கும் பாடத்திட்டங்கள் வகுக்கப்பட்டன. தமிழுக்குப் பொதுப்பாடத்திட்டமும் சிறப்புப் பாடத்திட்டமும் வரையப்பட்டன.

#### 5.1. பொதுப்பாடத்திட்டம்

##### 5.1.1. நோக்கம்

பத்தாம் வகுப்பில் தேர்ச்சி பெற்ற மாணவர்கள் வழுவின்றிப் பேசவும் எழுதவும் திறன் பெற்றிருப்பார்கள். அவர்களுக்கு மேலும் மொழியைக் கையாளுவதில் முழுமை வேண்டும் எதையும் பகுத்துப் பார்த்து தேர்ந்தறியும் ஆய்வுக் கண்ணோட்டத்தை அவர்கள் பெறுதல் வேண்டும். மேலும் படிப்பாற்றலோடு படைப்பாற்றலையும் வளர்க்கும் பான்மையே இப்பருவத்திற்கு ஏற்றது. எனவே, மேல்நிலைக் கல்வி முடிக்கும் மாணவர்கள்

நல்ல தமிழிற் பேசவும் எழுதவும் ஆற்றல் வாய்ந்தவர்களாக ஆகுமாறு பாடத்திட்டமும் பயிற்சியும் அமைய வேண்டும் என்பதே இக்கல்வியின் நோக்கமாகும்.

**5.1.2 பாடத்திட்ட அமைப்பு**

செய்யுள், உரைநடைக் கோவை, இலக்கணம், இலக்கியநயம் பாராட்டல், மொழிபெயர்ப்பு ஆகியவை மேல்நிலைப்பள்ளிப் பொதுத்தமிழ்ப் பாடத்திட்டத்தில் இடம்பெறுகின்றன. இவ் வகுப்புகளுக்கான பாடவேளை கீழ்க்காணும் பட்டியலில் தரப் படுகிறது

| வகுப்பு | செய்யுள் | உரைநடை | துணைப்பாடம் மற்றும் மொழிபெயர்ப்பு | மொத்தப் பாடவேளை |
|---|---|---|---|---|
| XI | 2 | 1 | 1 | 4 |
| XII | 2 | 1 | 1 | 4 |

**5.1.2.1. செய்யுள்**

இலக்கியச்சுவை நுகர்திறனையும், தானே படித்துணரும் திறனும், இலக்கியம் பயிலும் வேட்கையையும், மனப்பாடத் திறனையும் வளர்த்தலே செய்யுள் இலக்கியப் பயிற்சியின் நோக்கமாகும். முதலாண்டு மாணவர்களுக்குக் கடவுள் வாழ்த்து, தமிழ்த்தாய் வாழ்த்து, புறநானூறு, குறுந்தொகை, திருக்குறள் (அறத்துப்பால்), பழமொழி, பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், இரட்சணிய யாத்திரீகம், காசிக் கலம்பகம், தமிழ்விடு தூது, கவிமணியின் பாடல்கள், நாமக்கல் கவிஞரின் பாடல்கள், பல்சமயப் பாடல்கள் ஆகியவற்றிலிருந்து தொள்ளாயிரம் அடிகள் தேர்ந்தெடுத்துச் செய்யுட்பகுதி அமைத்துத் தருதல் வேண்டும். இதுபோலவே இரண்டாமாண்டு மாணவர்களுக்குக் கடவுள் வணக்கம், தமிழ்த்தாய் வாழ்த்து, புறநானூறு, நற்றிணை, திருக்குறள் (பொருட்பால்), சிலப்பதிகாரம், கம்பராமாயணம், வில்லி பாரதம், சீறாப்புராணம், திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ், குற்றாலக்குறவஞ்சி, பாரதியார் பாடல்கள், பாரதிதாசன் பாடல்கள், திரு வி. க பாடல்கள், வாழுநர் கவிதைகள் ஆகியவற்றிலிருந்து ஆயிரம் அடிகள் தேர்ந்தெடுத்துச் செய்யுட்பகுதி அமைத்து வழங்குதல் வேண்டும். முதலாண்டில் நூற்றுஇருபது அடிகளும் இரண்டாமாண்டில் நூற்றுஐம்பது அடிகளும் மனப்பாடம் செய்ய வேண்டும்.

### 5.1.2.2. உரைநடை

தமிழ் உரைநடையில் சிறந்த திறன் பெறவேண்டும். உரைநடையில் இலக்கியப் பயிற்சி மிகுதல் வேண்டும். இலக்கியமரபு (2) அறிவியல் (2), அறநெறி (2), நாடும் பண்பாடும் (2), விடுதலை இயக்க வீரர்கள் (2), கடிதம் மற்றும் பயணக்கட்டுரை (2) நாட்டு ஒருமைப்பாடு (2), இயற்கை(1) ஆகிய தலைப்புக்களில் கட்டுரைகள் இடம்பெறவேண்டும். முதலாண்டில் உரைநடைநூல் நூற்று இருபது முதல் நூற்றுமுப்பது வரையுள்ள பக்கங்களைக் கொண்டு அமையவேண்டும். இரண்டாமாண்டில் நூற்று நாற்பது முதல் நூற்றுஐம்பது வரையுள்ள பக்கங்களைக் கொண்டு உரைநடைநூல் அமைதல் வேண்டும். வாழும் அறிஞர்களின் கட்டுரை எழுபத்தைந்து விழுக்காடும் மறைந்த அறிஞர்களின் கட்டுரை இருபத்தைந்து விழுக்காடும் உரைநடை நூலில் இடம்பெறவேண்டும். முதலாண்டு மாணவர்களுக்குப் பதினைந்து கட்டுரைகளும், இரண்டாமாண்டு மாணவர்களுக்கு இருபது கட்டுரைகளும் பரிந்துரைக்கப்படுகின்றன.

### 5.1 2 3. துணைப்பாடம் மற்றும் மொழிபெயர்ப்பு

முதலாண்டிலும் இரண்டாமாண்டிலும் சிறுகதைத் திரட்டு துணைப்பாடமாக நூற்றைம்பது முதல் நூற்றறுபது பக்கங்களுக்குள் பல்வேறு கருக்களின் அடிப்படையிலும் பல்வேறு களங்களிலும் அமைந்திருக்க வேண்டும். ஆங்கிலப் பத்தியைத் தமிழில் மொழிபெயர்க்கும் திறன் அளிக்கவேண்டும். பாரதியார், பாரதிதாசன், கவிமணி, நாமக்கல் ஆகியோரின் பாடல்களை இலக்கிய நலம் பாராட்டல் பகுதிக்குத் தேர்ந்தெடுக்க வேண்டும். பாடப் பகுதியை ஒட்டியே இலக்கணம் கற்பிக்க வேண்டும் எழுத்து, சொல் (புணர்ச்சி, தொடரிலக்கணம்), பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணங்களும் இரண்டாண்டுகளிலும் கற்பிக்க வேண்டும் (என்னென்ன இலக்கணக் கூறுகள் உட்பிரிவுகள் என்று தெளிவாகக் குறிப்பிடவில்லை).

## 5.2. சிறப்புப் பாடத்திட்டம்

### 5. 2. 1. நோக்கம்

சிறப்புத் தமிழ்ப் பாடத்திட்டத்தின் நோக்கம் குறிப்பிடப்படவில்லை. அதிகமான இலக்கியங்களையும், இலக்கணங்களையும் தமிழ் இலக்கிய வரலாற்றையும் கற்பிப்பதே சிறப்புத்தமிழ்ப்

பாடத்திட்டத்தின் நோக்கமாக இருக்கலாம் என்று உய்த்துணர முடிகின்றது.

### 5.2.2. பாடத்திட்ட அமைப்பு

செய்யுள், உரைநடை மற்றும் நாடகம், இலக்கணம், பொதுக் கட்டுரை, இலக்கியநயம் பாராட்டல் ஆகியவைகள் சிறப்புப்பாடத் திட்டத்தில் இடம்பெறுகின்றன. செய்யுளுக்கு மூன்று பாட வேளைகளும் உரைநடை அல்லது ஓரங்க நாடகத்திற்கு ஒரு பாட வேளையும் இலக்கணத்திற்கு ஒரு பாடவேளையும் பொதுக் கட்டுரை மற்றும் இலக்கியநலம் பாராட்டலுக்கு ஒரு பாட வேளையும் ஒதுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஆண்டிலும் சிறப்புத் தமிழுக்கு அளிக்கப்பட்டுள்ள மொத்தப் பாட வேளைகள் ஆறு.

### 5.2.2.1. செய்யுள்

முதலாண்டு மாணவர்களுக்குச் சமயப் பொதுநோக்குள்ள கடவுள் வணக்கம், தமிழ்த்தாய் மாண்பு, குறுந்தொகை, சிலப்பதி காரம், கந்தபுராணம், திருவேங்கடத்தந்தாதி, பாஞ்சாலிசபதம், வாழுநர் கவிதைகள் ஆகியவற்றிலிருந்து ஆயிரத்து இருநூற் றைம்பது அடிகள் தேர்ந்தெடுத்துச் செய்யுட்பகுதி அமைக்க வேண்டும் இரண்டாமாண்டு மாணவர்களுக்குச் சமயப் பொது நோக்குள்ள கடவுள் வணக்கம், தமிழ்த்தாய் வாழ்த்து சிறப்பு, சிறுபாணாற்றுப்படை, திருக்குறள் (பொருட்படலம்), சீவகசிந்தா மணி, பெரியபுராணம், கம்பராமாயணம், காந்தி பிள்ளைத் தமிழ் ஆகியவற்றிலிருந்து ஆயிரத்து நானூறு அடிகள் தேர்ந்தெடுத்துச் செய்யுட்பகுதி அமைக்கவேண்டும் (மனப்பாடப்பகுதி பற்றிக் குறிப்பு இல்லை).

### 5.2.2.2 உரைநடை மற்றும் ஓரங்கநாடகம்

முதலாண்டிற்கு நூற்றைம்பது பக்கங்களுக்கு மிகாமல் பத்துக் கட்டுரைகளைக் கொண்ட தொகுப்புநூல் ஒன்று தயாரிக்க வேண்டும். பொதுத்தமிழுக்கு வகுத்தவாறே, இலக்கியம், அறிவியல், அறநெறி, பண்பாடு, விடுதலை இயக்க வீரர்கள், நாட்டு ஒருமைப்பாடு, இயற்கைக் காட்சிகள், பயணக்கட்டுரை, கடிதங்கள் என்னும் தலைப்புக்களின் கீழ் கட்டுரைகள் உரைநடைத் தொகுப்பில் இடம்பெறவேண்டும். இரண்டாமாண்டிற்கு நூற்றைம்பது பக்கங்களுக்கு மிகாமல் பத்து ஓரங்க நாடகங்களைக் கொண்ட தொகுப்பு நூல் தரவேண்டும்.

### 5.2.2.3. இலக்கணம்

முதலாண்டில் நன்னூல் எழுத்தும் (காண்டிகை உரை) யாப்பும் (நால்வகைப் பாக்களும் அவற்றின் உட்பிரிவுகளும்) இடம் பெறுகின்றன. இரண்டாமாண்டில் நன்னூல் சொல்லதிகாரமும் அணியிலக்கணமும் இடம்பெறுகின்றன. அணியிலக்கணத்தில் முன்னர் உயர்நிலைப்பள்ளி வகுப்புகளில் பயின்ற அணிகளோடு உருவக அணி, தீவக அணி, அதிசய அணி, சிலேடை அணி, வாழ்த்தணி ஆகியவற்றைக் கற்கவேண்டும்.

### 5.2.2.4. தமிழ் இலக்கிய வரலாறு

இதற்கான விரிவான பாடத்திட்டம் தரப்பட்டுள்ளது. தமிழ் மொழியின் மற்றும் நாட்டின் பழமையும் சிறப்பும் பற்றி முதலில் கற்பிக்க வேண்டும். பின்பு, சங்ககாலம், சங்க மருவிய காலம், பல்லவர் காலம், சோழர் காலம், நாயக்கர் காலம், ஐரோப்பியர் காலம், இக்காலம் என்னும் காலகட்டங்களின் கீழ் தமிழ் இலக்கிய வரலாற்றைக் கற்பிக்க வேண்டும் (பொதுக் கட்டுரை, இலக்கிய நயம் பாராட்டல் ஆகியவற்றைப் பற்றிக் குறிப்பிடவில்லை).

## 6. முடிவுரை

எண்பதில் தமிழ்ப் பாடத்திட்டம் ஒவ்வொரு நிலையிலும் ஓரளவு நன்முறையில் அமைந்திருக்கின்றது. இருப்பினும், சில குறைபாடுகள் பளிச்சிடுகின்றன. அவற்றை எதிர்காலத்தில் மொழிப் பாடத்திட்டம் வரைபவர்கள் களைய வேண்டும். மொழிப் பாடத்திட்டக் குழு மொழியியல் வல்லுநர், சமூகவியல் அறிஞர், கல்வியாளர், உளவியல் அறிஞர், இலக்கியத் திறனாய்வாளர் ஆகியோரைக் கொண்ட ஐம்பெருங் குழுவாகவும் இருக்க வேண்டும்; இயக்கவேண்டும். மொழிப்பாடத்திட்டம் குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு ஒருமுறை மதிப்பிடப்பட்டுச் சமுதாயத்தின் தேவைக்கேற்பவும் காலத்திற்கேற்பவும் புதிய கல்விக் கோட்பாடுகளுக்கேற்பவும் மொழியியல் கொள்கைக்கேற்பவும் மாற்றி அமைக்க வேண்டும். சமுதாயத்தின் ஒவ்வொரு உறுப்பும் மாறிக்கொண்டே இருக்கின்றது என்பது வெளிப்படை. அம்மாற்றம் மொழிப்பாடத்திட்டத்திலும் நிகழ வேண்டும். மாற்றமே வளர்ச்சிக்கு அடிப்படை என்னும் கருத்தினைப் பாடத்திட்டம் வரைபவர்கள் எண்ணத்தில் கொள்ள வேண்டும். மொழிக்கல்விக்குப் பாடத்திட்டம் வரைபவர்கள் கீழ்க்காணும் ஆலோசனைகளையும் பரிசீலிக்க வேண்டும்.

6.1. பாடத்திட்டம் வரைதல் மேனாடுகளில் ஒரு தனிக்கலையாக வளர்ந்து வருகின்றது. பாடத்திட்டம் வரைபவர் அதனை வகுத்துத் தருவதோடு அது எப்படிச் செயல்படுகின்றது என்று மதிப்பிட்டு ஆராய்ந்து சில ஆண்டுகளுக்குப் பின் புதிய பொருத்தமான மேம்படுத்தப்பட்ட பாடத்திட்டத்தை வரைகின்றார்கள். மேலும், புதிய நூல்களைப் படித்து மாணவர்களுக்குப் பொருத்தமான பாடங்களைத் தரம் வாரியாகத் தொகுத்துத் தருகின்றார்கள். இம்முறையிலே தமிழ்ப் பாடத்திட்டம் வரைபவர்களும் செயல்படவேண்டும். மொழிக் கல்விக்கும் இலக்கியக் கல்விக்கும் பொருத்தமான பாடங்களைத் தேர்ந்தெடுத்து, வரிசைப்படுத்திப் பல தொகுப்பு நூல்கள் வழங்க வேண்டும். கற்போர், சூழ்நிலை, விருப்பம், தேவை ஆகியவற்றுக்குத் தக்கவாறு பாடங்களையும் நூல்களையும் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

6.2. மொழிக்கல்விக்கும் இலக்கியக்கல்விக்கும் இடையே உள்ள வேறுபாட்டை பாடத்திட்டம் வரைபவர்கள் முதலில் நன்கு தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். பள்ளி மொழிப்பாடத் திட்டத்தின் முதன்மையான நோக்கம் மொழிக்கல்வி அளிப்பதா இலக்கியக் கல்வி அளிப்பதா என்று வரையறுத்துக் கொள்ள வேண்டும். பள்ளியில் மொழித் திறன்களை வளர்ப்பதே பாடத்திட்டத்தின் தலையாய நோக்கமாக இருக்கவேண்டும். அத்திறன்களை வளர்ப்பதற்கான ஆதாரப் பொருள்களாக இலக்கியங்கள் பயன்படவேண்டும். இலக்கியங்களின் இரண்டாவது நோக்கமாகப் படைப்புத்திறனில் பயிற்சி அளிப்பதையும் இலக்கியச் சுவைநுகர் பயிற்சி அளிப்பதையும் கொள்ளலாம். ஆகவே, பாடத்திட்டம் வரைபவர்கள் ஒவ்வொரு நிலைக்கும் ஒவ்வொரு வகுப்பிற்கும் பொது மற்றும் சிறப்பு நோக்கங்களைத் தெளிவாக வரையறை செய்து கொள்ளவேண்டும்.

6.3. நான்கு வகை மொழித்திறன்களில் பேச்சுத்திறனும் எழுதும் திறனும் ஆக்கத்திறன்கள் (Productive skills) அவற்றைச் செய்தித் தொடர்புத் திறன்கள் (Communicative competences) என்றும் கூறுவார்கள். அடிப்படை மொழிக் கல்வியின் நோக்கம் இத்திறன்களை முறையாக வளர்ப்பதாகும். இத்திறன்களோடு தொடர்புடைய கேட்டல்திறனையும் வாசிப்புத் திறனையும் ஒவ்வொரு நிலையிலும் வகுப்பிலும் திட்டமிட்டு வளர்க்க வேண்டும். அவற்றிற்கான புதிய வழிமுறைகளைத் 'திட்டமிட்ட கல்விமுறை,

யிலிருந்தும் (Programmed Instruction), நவீன மொழியியற் கொள்கையிலிருந்தும் எடுத்துக் கொள்ளல் வேண்டும். மேனாடுகளில் ஒன்றாம் வகுப்பு முதல் புதிய மொழியியல் சோட்பாட்டிற்கு இணங்கப் பாடத்திட்டங்களும் நூல்களும் தயாரித்துள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

6. 4. செய்யுட்களும் உரைநடைப் பாடங்களும் வரிசைப் படுத்தல் (grading) என்னும் முறையில் அமையவில்லை. இது ஒரு பெருங்குறையாகும். பாடங்கள் எளிமையிலிருந்து கடினத்திற்கும், அறிந்ததிலிருந்து அறியாததிற்கும் செல்ல வேண்டும். அது கொள்கையளவில் இருந்தால் பயனில்லை. பாடத்திட்டத்திலும் நூலிலும் அக்கொள்கை பிரதிபலிக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, செய்யுட்கள் பழந்தமிழ்-இடைக்காலத்தமிழ்— தற்காலத்தமிழ் என்னும் இலக்கிய வரலாற்று முறையிலே பொதுவாக அமைந்துள்ளன. இம்முறை மொழித்திறனை வளர்ப்பதற்கும் இலக்கியச் சுவையைப் பெருக்குவதற்கும் பொருத்தமான சரியான அறிவியல் ரீதியான முறை அல்ல. ஆரம்பப் பள்ளி முதல் மேல்நிலைப் பள்ளி வரையிலுள்ள செய்யுட்கள் தற்காலம்—இடைக்காலம்—பழங்காலம் என்னும் மொழி எளிமை அடிப்படையில் வரிசைப்படுத்தி வழங்குதல் வேண்டும். அவ்வாறே உரைநடைப் பாடங்களும் மொழிநடை, பொருளின் தன்மை, இலக்கிய வடிவம், இலக்கிய உத்தி ஆகியவற்றின் அடிப்படையில் தேர்ந்தெடுத்து, வரிசைப் படுத்தி வழங்கல் வேண்டும்.

6.5. இலக்கியத்தை அறிமுகப்படுத்தும்போது ஒரு வரன்முறையான பாடத்திட்டத்தை மேற்கொள்ள வேண்டும். மேலே உள்ள முறையிலின்றி மற்றொரு முறையிலும் பள்ளிக்கல்வியில் இலக்கியத்தை அறிமுகப்படுத்தலாம். தமிழ்ச் செய்யுள் இலக்கியம் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகால இலக்கிய வரலாற்றையும் விரிந்த இலக்கிய வகைப் பரப்பையும் உடையது. மாணவர்களுக்குப் படிப்படியாக ஒவ்வொரு காலகட்டமாக இலக்கியத்தை அறிமுகப்படுத்த வேண்டும். எடுத்துக்காட்டாக, ஆரம்பப்பள்ளி மாணவர்களுக்குத் தற்கால இலக்கியத்தை மட்டும் அறிமுகப் படுத்தலாம்; ஆறாம் வகுப்பு முதல் எட்டாம் வகுப்பு வரையுள்ள மாணவர்களுக்கு இடைக்கால இலக்கியத்தைத் தற்கால இலக்கியத்தோடு வழங்கலாம்; ஒன்பது முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை உள்ள மாணவர்களுக்குத் தற்கால மற்றும் இடைக்கால

இலக்கியங்களோடு பழங்கால இலக்கியத்தைக் கற்பிக்கலாம். மாணவர்களின் உளவியல்பு, புரிதிறன், மொழியமைப்பு, இலக்கிய உத்தி போன்றவற்றை மனத்திற்கொண்டு செய்யுள் இலக்கியத்தைத் தேர்ந்தெடுத்து அறிமுகப்படுத்த வேண்டும். இல்லாவிட்டால், மாணவர்களிடையே தமிழ் இலக்கியத்தின்மேல் வெறுப்புத்தான் வளரும்; தேர்வில் வெற்றிபெற கோனார் போன்ற தமிழ் உரை நூல்களையே வழிகாட்டியாகக் கொள்வர்.

6.6. ஆரம்பப்பள்ளிச் செய்யுட்பகுதி ஆர்வத்தைக் கிளர்க்கும் வகையிலும் மொழித்திறன்களை வளர்ப்பதற்கும் துணையாக நிற்கும் வகையிலும் இருக்கவேண்டும். ஆரம்பப்பள்ளியின் செய்யுட் பகுதியில் அறவுரைச் செய்யுளின் ஆதிக்கம் அதிகமாக உள்ளது. மற்றும் அவை இடைக்காலச் செய்யுட்கள். ஒன்றாம் வகுப்புக்கு ஔவையாரின் ஆத்திசூடிக்குப் பதிலாக வாணிதாசன் எழுதிய புதியஆத்திசூடியை வைத்தால் மாணவர்கள் தற்காலத்தமிழிலே ஒழுக்கங்களை உணர்ந்து கொள்வார்கள். இதுபோலவே தற்காலக் கவிஞர்களின் தரமான கவிதைகளைப் பொறுக்கி எடுத்துத்தர வேண்டும். இடைக்காலச் செய்யுட்களை மனப்பாடப்பகுதியாக வைப்பது - பொருள்புரியாமல் ஓசைநயத்திற்கு ஒப்பிக்கச்செய்வது மொழித்திறனைக் கூட்டுவதில் எந்த அளவுக்குப் பயன்படும்? எண்ணிப் பார்க்கவேண்டும். மேலும், இலக்கியம் என்பது செய்யுள் மட்டுமல்ல. சிறுவர்களுக்குக் கதை, ஓரங்க நாடகம் போன்ற இலக்கிய வடிவங்களைக் குழந்தை எழுத்தாளர்கள் படைத்துத் தந்துள்ளார்கள் குழந்தை இலக்கியங்களை நிறையப் படிக்கும் வகையில் பாடத்திட்டம் வழிவகை செய்ய வேண்டும். எவ்வளவுக்குத் தற்காலத் தமிழ்நூல்கள் வாசிக்கின்றார்களோ அவ்வளவுக்கு மொழித்திறன் பெறுவர் என்பதில் ஐயமில்லை.

6. 7. மாணவர்களுக்குக் கற்றுத்தரப்படும் இலக்கணப் பகுதியின் உள்ளடக்கம் காலத்திற்கு ஒவ்வாததாக உள்ளது. பத்தாம் வகுப்பு வரையுள்ள மாணவர்கள் படிக்கின்ற இலக்கணம் தற்காலத் தமிழின் அமைப்புப் பற்றியும் மொழியைப் பயன் படுத்துவது பற்றியும் அறிய நிறைய வாய்ப்பளிக்க வேண்டும். நன்னூலார் காலத் தமிழ்மொழியின் இலக்கணத்தைக் கற்பித்தல் இக்கால மாணவர்களுக்கு ஏற்றதல்ல. பண்டிதர்கள் நினைப்பது போல தமிழ் மொழி 'கன்னித்தமிழ்' அல்ல. மொழியில் மாற்றம். ஏற்பட்டுப் புதிய மரபுகள் இன்றைய தமிழில் தோன்றியுள்ளன

இன்றைய மாணவர்கள் இக்காலத் தமிழ்மொழியின் கட்டமைப்புக் கூறுகளையும் அது எவ்வாறு பல்வேறு துறைகளில், முறைகளில் பயன்படுகின்றது என்பதையும் உணரும்படி கற்பிக்க வேண்டும் அதற்குத் துணைபுரிவதாக இலக்கணமும் மொழிப் பயிற்சியும் அமைய வேண்டும். இலக்கணத்தின் நோக்கமே மொழிப் பயிற்சி அளிப்பது அதனை கட்டுரைப் பயிற்சியோடு சேர்ப்பதைக் காட்டிலும் இலக்கணத்தோடு இணைத்துச் சொல்வதே சாலச் சிறந்தது. எனவே, பள்ளி மாணவர்களுக்குக் கற்றுத் தரப்படும் இலக்கணம் அன்றாட வாழ்க்கையில் பயன்படும்படியாகவும் மொழித்திறன்களை வளர்ப்பதற்கும் தக்கதொரு துணையாக அமைதல் வேண்டும். சிறப்புத்தமிழ் மாணவர்கள் வேண்டுமானால் நன்னூல் சூத்திரங்களைப் படிக்கட்டும்; அவற்றை மனப் பாடமும் செய்யட்டும்.

6.8. செய்யுள் மற்றும் உரைநடைப் பகுதியில் மொழிப் பயிற்சிகள் புதிய கண்ணோட்டத்தில் அமையவேண்டும். அருஞ் சொற் பொருள் தருவதும் கேள்வி பதில் அமைப்பதும் மட்டும் போதாது மொழித் திறனைச் சோதிக்கும் வகையில் அறிவியல் பூர்வமான பயிற்சிகளையும் (Objective type) சோதனைகளையும் மேற்கொள்ள வேண்டும். ஐந்து அல்லது ஆறு பாடங்களுக்கு ஒரு முறை மீள்பார்வைப் பயிற்சி தருவது நல்லது. மொழித்திறனை மதிப்பிடுகின்ற முறையைப் பற்றியும் பாடத்திட்டம் குறிப்பாகச் சொல்வது நல்லது.

மேலே கூறப்பட்டுள்ள ஆலோசனைகளை வேண்டியாங்கு ஏற்றுக் கொண்டு எதிர்காலத்தில் தமிழ்ப்பாடத் திட்டம் வரைதல் வேண்டும். மேனாடுகளில் அமைப்புநோக்குப் பாடத்திட்டம் (structural syllabus), சூழ்நிலை நோக்குப் பாடத்திட்டம் (situational syllabus) திறமை நோக்குப் பாடத்திட்டம் (Notional syllabus) என்று புதியபுதிய பாடத்திட்டங்களை மொழிக் கல்வியில் அமைத்துப் பாடத்திட்டத்தை மேம்படுத்திக் கொண்டு வருகின்றனர். மேலும், பாடத்திட்டமும் பயிற்று முறையும் ஆசிரியரைச் சார்ந்த முறைமையிலிருந்து (teacher centred education) கற்போரைச் சார்ந்த முறைமைக்கு (learner centred education) மாறியுள்ளது ஆகவே, முன்பு கூறியதுபோல் காலத்திற்கும் சமுதாயத்தின் தேவைக்கும் மாணவர்களின் விருப்பத்திற்கும் புதிய கல்விக் கொள்கைக்கும் நவீன மொழியியல் சிந்தனைக்கும் மனவளர்ச்சி முறைக்கும் ஏற்பக் குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு ஒரு முறை பாடத்திட்டத்தை மாற்றி அமைத்து மேம்படுத்த வேண்டும்.

# துணை நூல்கள்

**தமிழ்**

கோவிந்தராசன், மு., **நற்றமிழ் பயிற்றலின் நோக்கமும் முறையும்** (கீழ்ப்படுகை, திருமலைக்குமரன் பதிப்பகம், 1978).

சுப்பு ரெட்டியார், ந., **தமிழ் பயிற்று முறைகள்** (சென்னை, பழனியப்பா பிரதர்ஸ், 1980 மறுபதிப்பு).

திருமலை, எம் எஸ்., **தமிழ் கற்பித்தல்** (சென்னை, மணிவாசகர் நூலகம், 1978).

பிச்சை, அ., (தொகுப்பு), **தொடர் கல்விப் பாடத்திட்டம்**, (சென்னை-5, மாநிலப் பள்ளிசாராக் கல்விக் கருவூலம், 1980).

மீனாட்சிசுந்தரனார், தெ.பொ., **கல்விச்சிந்தனைகள்**, (சென்னை, சேகர் பதிப்பகம், 1965).

வரதராசனார், மு , **கல்வி**, (சென்னை, பாரி நிலையம், மறுபதிப்பு 1979).

**ஆங்கிலம்**

Alexander, L.G., *Developing Skills*, (London, Longman Group Ltd, 1969).

Allen, J.P.B and S. Pit Corder, *Techniques in Applied Linguistics*, Vol. 3, (London, Oxford University Press, 1975 (2nd edition).

Brinke, Steven ten, *The Complete mother Tongue curriculum* (London, Longman Group Ltd, 1976).

Britan, James et al., *The Development of Writing Skills* (11-18) (London, Macmillan Education, 1975).

Dakin, J.B., et al., *Language in Education*, (London, Oxford University Press, 1968).

Ghosh, B., *Teaching Reading, A Challenge*, (New Delhi, NCERT, 1972 (Reprint).

Marland, Michael., *Language Across the Curriculum*, (London, Heinemann Lock Educational Books, 1977).

Merrit, John E , *Reading and the Curriculum* (Londcn, Ward Lock Educational Books, 1971).

Melhik, Amelia and John Merritt (ed) , *Th Reading Curriculum* (London, University of London Press Ltd, 1972).

Merat, Fand Falre, *Crcatire Reading and Writing*, (London, Cassell Ltd, 1978).

Pattanayak, D. P., *Language Curriculum*, (Mysore, Central, Institute of Indian Languages, 1977).

Petty, Walter, T., *The Language Arts in Elementary Schools*, (Washington D.C., The Centre for Applied Research in Education, Inc., 1962).

Rastogi, K., (ed), *Preparation and Evaluati n of Text Books in Mother Tongue*, (New Delhi, NCERT, 1978 (Revised edition).

Robertson, Irene., *Language Across the Curriculum : four case studies*, (London, Methuen Educational, 1980).

Smith, L.E.W., *Towards A New English Curriculum*, (London, J.M Dent & Sons Ltd, 1972).

Sri Vastava, R.P., *The Teaching of Reading*, (New Delhi, Bahri Publications, 1979).

Widdowson, H.C., *Explorations in Applied Linguistics*, (Oxfor d Oxford University Press, 1979).

Wilkins, D.A., *Notional Syllabus*, (London, Oxford, Oxford University Press, 1976).

# 1980-இல் தமிழ் இலக்கண ஆய்வு நூல்கள்

ஆ. சிவலிங்கனார்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதில் அச்சாகி வெளிவந்த தமிழ் இலக்கண ஆய்வு வெளியீடுகளை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். அவை,

1. முழு நூல்

2. கட்டுரைத் தொகுப்பு நூல்களில் வந்த கட்டுரைகள்

3. மாத இதழ்களில் வெளிவந்த கட்டுரைகள்

4. கருத்தரங்கக் கட்டுரைகள்

என்பன.

முழு நூலாக வந்தனவற்றுள் எதுவும் புதியது அன்று; யாவும் பழையனவே; ஆனால் புதுப்பிக்கப்பட்டன. எனினும் **பிரபந்த தீபம்** என்னும் நூல் ஓலைச்சுவடியாக இருந்தது அச்சேறி வந்துளது. **நன்னூல் மூலமும் கூழங்கைத் தம்பிரான் உரையும்** என்பது ஓலைச்சுவடியிலிருந்து தாளில் மையினால் எழுதப் பட்டிருந்தது; அச்சேறி வந்தது (Photostat Copies). **தொல்காப்பியச் சிறப்புப் பாயிரமும், தொல்காப்பிய நூன்மரபும் உரைவளமாகப்** பலர் உரைகளுடன் வெளிவந்துள்ளன. அச்சுக்கு வாராதன அச்சேறி வந்ததும், பலர் உரைகளும் ஆய்வுக் கருத்துகளும் ஒரு சேரக்

கொண்டுவந்ததும் எண்பதில் இலக்கணத்துறையில் கண்ட புதுமை. 'தமிழ் நூல்களில் குறிப்புப்பொருள்' என்னும் நூல் இலக்கிய நூல்போல் அமையினும் இலக்கணமே கூறுவதாகும்.

இலக்கண ஆய்வுக் கட்டுரைகள் எழுத்து, சொல், பொருள் வகைகளில் சிறந்த முன்னேற்றம் கொண்டுள்ளன. பெரும்பாலும் **தொல்காப்பியம்** பற்றிய கட்டுரைகளே வெளிவந்துள்ளன. மொழி யியல் துறை புதியதாகத் தொடங்கப்பட்ட பிறகு தொல்காப்பியம் மொழியியலுக்கும் பயன்படுமாறு யாங்ஙனம் என்பதைப் பலரும் உணரத் தொடங்கினர். மேனாட்டார் மொழியியற் கொள் கைக்குத் தொல்காப்பியம் ஒத்து வருகிறதா இல்லையா என்பதை ஆராய்வதைவிடத் தொல்காப்பிய மொழியியற் கொள்கை என்று ஒன்று நிறுவி அதனோடு மேனாட்டார் கொள்கை ஒத்து வரு கிறதா இல்லையா என்பதை ஆராய்வதே தமிழ் வாணராயினார் கடப்பாடாகும். அம்முறையிலும் மிகுந்த கட்டுரைகள் தரும் என எதிர்பார்க்கலாம். சில கட்டுரைகள் வெளிவந்தும் உள்ளன.

### எழுத்து

இங்கே தொகுக்கப்பட்டவற்றுள் எழுத்து பற்றிய நூல் தொல்காப்பிய நூன்மரபு உரைவளமாகும். அந்நூலில் உள்ள சிறப்புக் கருத்துகள் அந்நூல் பற்றிய இடத்தில் தரப்பட்டுள்ளன.

கட்டுரைத் தொகுப்பு நூல்களில் வெளிவந்துள்ள கட்டுரை களுள் எழுத்துகளைப் பற்றிய கட்டுரைகள் சிலவே. எழுத்துகளை வரிவடிவத்தில் அமைத்த தமிழர் உயிர்மெய் எழுத்துகளை எவ் வாறு அமைத்தனர் என்பதில் பல கருத்துகள் உண்டு. 'உயிர் மெய்' (2:3,4)* என்னும் தலைப்புக் கட்டுரைகளில் ண் + ஐ = ணை, ற் + ஆ = ற என எழுதப்படும் வடிவம் ணை, றா என்று எழுதப் பட்ட வடிவமே ஆகும் என்பதும், K + a = Ka என்பது போலத் தான் க் + அ = க என்னும் வடிவமும் அமைந்துள்ளது என்பதும் விளக்கப்பட்டுள்ளன. ஆய்தம் (3:11.3, 7) மொழியில் ஒலியளவில் குறிப்புப்பொருளிலும் ஓசைப்பொருளிலும் வரும்போது எழுதிக் காட்டப்படாது என்பதும் கூறப்பட்டது.

---

* எண்கள் கட்டுரை எண்களைக் குறிக்கும்.

### சொல்

பெரும்பாலான கட்டுரைகள் சொற்களைப் பற்றியனவே. ஆய்த ஒலிவரும் குறிப்புமொழிகள் (2:I.2) மகர ஈற்றுச்சொற்கள் சாரியை பெற்றே வருதல் வேண்டும் என்னும் விதிக்கு மாறாக வருதல் (2:I.6) சொற்களுக்கும் சார்புச் சொற்களுக்கும் உள்ள பொருட் சிறப்புகள் (2:I,10) மொழிப்பாகுபாடுகள் (2:I.12) புணர்ச்சியில் வரும் எழுத்துப்பேறு (2:I.5) இன் சாரியையின் இருப்புப் பொருட்பேறு (2:I.7) இரு பெயரொட்டாகுபெயரும் அன்மொழித்தொகையும் வேறுவேறாம் எனல் (2:I 13) மூன்று ஆறாம் வேற்றுமைகளில் உள்ள மாறுபாடுகள் (2:1:14, 15; 3:1.10) குறிப்பு வினை (2:I.18) வியங்கோள்வினை (2:1.19) பற்றிய கருத்துகள், செய்பு வாய்பாட்டு வினையெச்சம் (2:I.20) செய்கு வாய்பாட்டு வினையெச்சம் (2:I.21) பற்றிய செய்திகள், ஏகார ஓகாரக் குறுக்கங்கள் (3:I.1) சாரியை அக்கு (3:1.4) பற்றிய கருத்துகள், சுட்டுப்பெயர்கள் (3:I.8) வினைத்தொகையின் முன் மொழி பெயர் ( :I.11) சுட்டுப்பெயர்கள் (3:1.8) முன்னிலைப் பெயர்கள் (3:I.9) அழனும் புழனும் (3:II.1) முதலிய பற்றிய கருத்துகள் கட்டுரைகளில் இடம்பெற்றுள்ளன. 'திகட சக்கரம்' என்பது பற்றிய கதை கட்டுக்கதை (3:I.5) என்ற கருத்தும் தெரி விக்கப் பட்டுள்ளது. வேற்றுமை வளர்ச்சி பற்றிய கருத்துகளும் (4:I:1,2) கூறப்பட்டுள்ளன.

### பொருள்

பொருள் இலக்கணத் தொடர்பாக 'உரிப் பொருளும் திணைப் பாகுபாடுகளும்' (2:I.22) உவம உருபுகள் (2:I.24) உள்ளுறை (2:III.1) என்னும் கட்டுரைகள் பேசுகின்றன. புறப்பொருள் விளக்கம் (4:II.1) என்பது புறப்பொருள் பற்றிக் கூறுவது.

### யாப்பு

யாப்புத் தொடர்பாக 'அடிநிமிர் கிளவி ஈராறு' (2:I.25) கூன் (2:I.28) அசையும் பொருளும் (2:VI.2) வெண்பாவில் ஓரசைச்சீர் (2:II.42) பாட்டியல்...ஒரு நோக்கு (3:II.5) என்பன வெளிவந்துள்ளன.

### அணி

அணியிலக்கணம் (2:IV.1) அணியியல் சிந்தனை (2:I.26) என்பன அணி பற்றிய கட்டுரைகளாம்,

**நூல்களைப் பற்றியன**

மாறனலங்காரம் (2:I.29) தொல்காப்பியர் சேர்த்த கருத்துகள் (2:I.32) இலக்கணக்கொத்தில் தருக்க நெறிமுறை (2:I.30) பிரயோக விவேக உரை—தருக்க நெறிமுறைகள் (2:I.31) யாப்பருங்கல விருத்தி (2:II.5) இலக்கணக் கோவை—ஓர் மதிப்பீடு (3:I.5) தொல்காப்பியம் காட்டும் இசையியல் (3:I.12) என்பன நூல்களைப் பற்றிய கட்டுரைகள்.

சில முடிக்கப்பெறாத கட்டுரைகளும் உள. இனி தனித்தனி யாக நூல்களைப் பற்றியும் கட்டுரைகளைப் பற்றியும் ஆன குறிப்புகளை விரிவாகக் காணலாம்.

பகுதி 1

## இலக்கண நூல்கள்

### 1. பிரபந்த தீபம்

பதிப்பாசிரியர் : ச.வே. சுப்பிரமணியன்

வெளியீடு : தமிழ்ப் பதிப்பகம்
33, திருமலைநகர் அனெக்ஸ்
பெருங்குடி, சென்னை—600 096.

பக்கம் : XV+91

விலை : ரூ 5-

செய்யப்பட்டது செய்யுள்; யாக்கப்பட்டது யாப்பு; பாடப் பட்டது பாட்டு; செய்யுள், யாப்பு பாட்டு என்பன ஒருபொருட் கிளவிகள். செய்யுள் இலக்கணம் கூறுவது செய்யுளியல். அதுவே யாப்பியல் என்றும்படும். அதுவே பாட்டியல் எனவும்படும். ஆனால் செய்யுளியல் என்பது செய்யுள் இலக்கணம் கூறுவது என்றும், பாட்டியல் என்பது பாட்டின் (செய்யுளின்) இலக்கணம் கூறுவது என்பதில்லாமல் பாடலமைந்த நூலின் இலக்கணம் கூறுவது என்றும் வழங்கிவரக் காண்கின்றோம் பன்னிருபாட்டியல், வெண்பாப்பாட்டியல் முதலியன பாட்டின் இலக்கணம் கூறுதலின்றிப் பாட்டுநூல்களின் இலக்கணம் கூறுதலைக் காணலாம்.

ஐவகையிலக்கணம் என்பது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகியவை பற்றிக் கூறுவது என்பர். அவற்றொடு

புலமையிலக்கணம் சேர்த்து அறுவகையிலக்கணம் என்றார் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். புலமையிலக்கணத்துக்குப் பதிலாகவோ, புலமையிலக்கணத்தையடுத்தோ நூல் இலக்கணம் என்பது ஒன்றும் சேர்த்துக் கொள்ளலாம் எனும்படிப் பாட்டியல் நூல்கள் வளர்ந்துள்ளன. அவற்றுள் ஒன்றே **பிரபந்ததீபம்** என்னும் இந்நூல்.

பிரபந்தம் என்பதற்குக் கட்டப்பட்டது என்பது பொருள். அது கட்டப்பட்ட நூலுக்கு ஆகிப் பின்னர் அந்நூல் பலவற்றின் இலக்கணம் கூறும் நூலுக்கு இருமடியாகுபெயர் நிலையில் அமைந்தது. தீபம் என்பது விளக்கம்; எனவே **பிரபந்ததீபம்** என்பது நூல்களின் இயல்புகளை விளக்குவது என்னும் பொருள தாயிற்று. பாட்டியல் என்னும் தமிழ்த்தொடருக்குப் பிரபந்த தீபம் என்பது வடமொழித் தொடராக அமைகிறது.

இந்நூலில் அகப்பொருட்கோவை முதலாக சமுத்தியீறாக தொண்ணூற்று ஏழு நூல்களின் அமைப்பிலக்கணம் கூறப்படு கின்றது.

இதன் நூலாசிரியர் பெயர் அறியக் கூடவில்லை. டாக்டர். உ.வே. சாமிநாதய்யர் நூல் நிலையத்தில் இருந்த ஓலைச் சுவடியிலிருந்து பெயர்த்தெழுதி வெளிப்படுத்தியுள்ளார் பதிப் பாசிரியர் சிறந்ததொரு ஆராய்ச்சி முன்னுரையும் பிறபாட்டியல் பிரபந்தங்களிலிருந்து ஒப்பிட்டு வரைந்துள்ளார். பிற பாட்டியல் நூல்களிலிருந்து வேறுபடும் இடங்களைச் சுட்டியும், நூற்பெயர் களின் காரணங்களை விளக்கியும், விளங்காதனவற்றைச் சுட்டியும் ஓர் உரையும் வரைந்துள்ளார்.

பிரபந்தங்கள் தொண்ணூற்றாறு என்பது வழக்கு. அவ்வழக்கு எவ்வெவ்வகையில் மாறுபட்டு வளர்ந்துள்ளது என்பது, தொண்ணூற்றாறுக்கு உட்பட்டும் மேற்பட்டும் கூறும் பாட்டியல் (பிரபந்த) நூல்கள் விவரம் முதலியன தெளிவுடன் முன்னுரையில் விளக்கப்பட்டுள்ளன.

## 2. நன்னூல் மூலமும் கூழங்கைத் தம்பிரான் உரையும்

பதிப்பாசிரியர் : அ தாமோதரன்

வெளியீடு : Beitrage zur Sudasienforse-hung
Sudasien-Institut
Universitat Heidel berg, West-Germany

விலை : DM 36/-

பவணந்தி முனிவரின் நன்னூல் மூலத்துக்குக் கூழங்கைத் தம்பிரான் மயிலை நாதரின் உரையை அப்படியே மேற்கொண்டு தம் கருத்துகள் சிலவற்றை ஆங்காங்கே காட்டி எழுதிய உரை நூல் இது. கி. பி. பதினான்காம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் மயிலைநாதர் உரையே நன்னூலுக்கு முதலுரை. நன்னூலுக்கு முதல் காண்டிகையுரை கூழங்கைத்தம்பிரான் உரையே என்பர் இந்நூற் பதிப்பாசிரியர். இந்நூல் தமிழகத்தெங்கும் கிடைக்கப் பெறாது, பிரிட்டிஷ் நூலகத்தில் கீழ்த்திசைப்பிரிவில் கையெழுத்துப் பட்டியலில், 'நன்னூல்—ஒரு தமிழ் இலக்கணம்' என்ற பெயரில் ஓரியண்டல் 2724 என்ற எண்ணுடன் இருந்ததைப் பதிப்பாசிரியர் மிக அரிதில் பெற்றுப் பதிப்பித்துள்ளார். இப்பதிப்பும் தமிழகத்துப் பதிப்பாக—இந்தியப் பதிப்பாக இல்லாமல் மேற்குச் செருமனிப் பதிப்பாக வெளிவந்துள்ளது. தமிழுலகம் பதிப்பாசிரியர்க்கு மிகவும் கடமைப்பட்டுள்ளது என்பது சொல்லவும் வேண்டுமோ.

கையெழுத்துப் படியாக இருந்த இதனைப் பதிப்பாசிரியர் தம் கையெழுத்தாலேயே படியெடுத்துப் புகைப்பட அச்சாக (Photostat Copies) வெளிப்படுத்தியுள்ளார்.

இவ்வுரை மயிலைநாதரின் பொழிப்புரையைத் தெளிவு படுத்தும் முகத்தான் பதவுரையாக அமைந்துள்ளது. கூழங்கைத் தம்பிரான் காஞ்சிபுரத்தில் பிறந்து, தஞ்சைப் பகுதியில் வாழ்ந்து, பின்னர் கீழ்நாடு சென்று ஆசிரியராகப் பணிபுரிந்து அங்கேயே மறைந்தவர்.

## 3. தொல்காப்பியம்-சிறப்புப்பாயிரம் உரைவளம்

பதிப்பாசிரியர் : ஆ. சிவலிங்கனார்

வெளியீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை-600 020.

விலை : ரூ 10/-

''வடவேங்கடந் தென்குமரி'' எனத் தொடங்கும் நூற்பாவைப் பனம்பாரனார் தொல்காப்பியத்துக்குச் சிறப்புப்பாயிரமாக அமைத்தார்.

இதற்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர், மாதவச் சிவஞான முனிவர், அரசஞ் சண்முகனார் ஆகியோரின் விருத்தியுரைகள் உண்டு. அவை இந்நூலில் சேர்க்கப்பட்டுள்ளன. பேராசிரியரின் பொதுப்பாயிர விருத்தியும் சேர்க்கப்பட்டுளது. பதிப்பாசிரியரின் ஆய்வுரையும் உண்டு.

தொல்காப்பியர்க்கு அப்பெயர் ஊர்ப்பெயரான் வந்த பெயர் என்பதும், ஐந்திரம் என்பது மறைந்துபட்ட தமிழ்நூல் என்பதும், தொல்காப்பியர் சைனரல்லர் என்பதும், அதங்கோட்டாசான் தொல்காப்பியரின் ஒருசாலை மாணவரல்லர் என்பதும், நான்மறை என்பன இருக்கு யசுர் சாமம் அதர்வம் அல்ல என்பதும், வடவேங்கடம் தென்குமரிக்கு அப்பாலும் தமிழ்கூறும் உலகம் உண்டெனினும் ஆயிடைப்பட்ட பகுதியே தமிழ்கூறும் நல் உலகம் என்பதும், நிலந்தரு திருவிற் பாண்டியன் பற்றிய கருத்து வேறுபாடுகள் யாவை என்பதும், எழுத்து, சொல், பொருள் விளக்கங்களும் ஆய்ந்து கூறப்பட்டுள்ளன.

இதில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், ச. வே. சுப்பிரமணியன் முன்னுரையுடன் வை. இரத்தினசபாபதியின் ஆங்கில முன்னுரையும் உண்டு.

## 4. தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்-உரைவளம்-நூன்மரபு

பதிப்பாசிரியர் : ஆ. சிவலிங்கனார்

வெளியீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை—600 020.

விலை : ரூ. 9/-

இந்நூலில் தொல்காப்பிய எழுத்ததிகார நூன்மரபு நூற்பாக்களுக்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர் உரைகளும்

சிவஞான முனிவரின் விருத்தியுரையும், தற்கால ஆராய்ச்சிப் பேரறிஞர்களாம் பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரியார், வேங்கடராசுலு ரெட்டியார், க. வெள்ளைவாரணனார் ஆகியோர் உரைகளும் பதிப்பாசிரியரின் கருத்துகளும் அடங்கியுள்ளன.

சி. இலக்குவனார் ஆங்கில மொழிபெயர்ப்பும், கமில் சுவலபில் ஆங்கில மொழிபெயர்ப்பும் இணைக்கப்பட்டுள்ளன.

உரைச் சொற்றொடர் விளக்கமும், பிற்கால இலக்கண நூலாரின் ஒப்புமை நூற்பாக்களும் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. ஆய்வாளர்க்குப் பயன்படுமாறு நூன்மரபுத் தொடர்பாக வெளி வந்துள்ள கட்டுரைப் பட்டியலும் தரப்பட்டுள்ளது.

ஆய்வாளர் ஆய்வுக்குரிய கருத்துகள் பலவுள.

1. நூன் மரபு பெயர்க்காரணம் பற்றிய கருத்துகளும்,

2. ''அவைதாம், குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற முப்பாற்புள்ளியும்'' என்னும் நூற்பாவில் முப்பாற்புள்ளி என்பது, குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்னும் மூன்றற்கும் உரியதா ஆய்தத்துக்கு மட்டில் உரியதா என்பது பற்றிய ஆய்வுகளும்,

3. மாத்திரை என்பது, மாத்ரா என்பதன் திரிபு என்பதும், அன்று; 'மா' என்பது அளவுப்பெயர்; அதன் அடிப்படையில் தோன்றியதே அது என்பதும் ஆன கருத்துகளும் (ப. 61),

4. 'உட்பெறுபுள்ளி உருவாகும்மே' (14) என்னும் நூற்பாவின் உரை பற்றிய கருத்துகளும்,

5. எகர ஒகரம் புள்ளிபெறுவன என்பதற்குத் தரப்படும் சான்றுகளும், எகர ஒகரங்கள் புள்ளி பெறாதனவே; 'எகர ஒகரத்தியற்கையும், அற்றே' (16) என்னும் நூற்பா 'ஏகார ஓகாரத்தியற்கையும் அற்றே' என்று தான் இருந்திருக்க வேண்டும் என்பதற்குக் கூறப்படும் கருத்துக்களும்,

6. இடைநிலை மெய்ம்மயக்கம் பற்றிய ஆய்வுரைகளும்,

7. ஆ ஈ ஊ என்பனவே முதலில் சுட்டுப்பொருள் உணர்த்திப் பின்னர் அ இ உ என வந்திருக்க வேண்டும் என்பதும்; அதன் மறுப்பும்,

8. வினா எழுத்துகள் பற்றிய ஆய்வுகளும், பிறவும் ஆய்வாளர்க்குப் பயன்படுவனவாம்.

## 5. தமிழ் நூல்களில் குறிப்புப்பொருள்

ஆசிரியர் : ம.ரா.போ. குருசாமி

வெளியீடு : நரேந்திர சிவம் பதிப்பகம்
''செந்தில்'', தாமு நகர், கோவை 641 018.

விற்பனை உரிமை : தமிழ்ப்புத்தகாலயம்
திருவல்லிககேணி, சென்னை—5.

விலை : ரூ. 22/-

இந்நூல் இலக்கிய நூலாகவும் அமைகிறது. எனினும் இதில் குறிப்பிடப்பட்ட கருத்துகள்—குறிப்புப்பொருள்கள் யாவும் இலக்கணத்தையே அடிப்படையாகக் கொண்டிருத்தலின் இலக்கண நூலாகவும் கொள்ளலாம்

எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி இலக்கணங்களில் குறிப்புப்பொருள் அமைந்துள்ளவாற்றையும், சங்க இலக்கியங்களில் அமைந்துள்ள குறிப்புப்பொருள்களின் சிறப்பையும், சிறப்பாக உள்ளுறை இறைச்சி பற்றிய கருத்துவிளக்கத்தையும் இந்நூலில் சிறப்புற விளக்கியிருப்பது காணலாம்.

பகுதி 2

# கட்டுரைத் தொகுப்பு நூல்கள்

## 1. இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்-பன்னிரண்டாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை தொகுதி-1

பதிப்பாசிரியர்கள் : ச. அகத்தியலிங்கம்
தா. ஏ. ஞானமூர்த்தி

வெளியீடு : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம்,
அண்ணாமலைநகர், சிதம்பரம்.

விலை : ரூ. 30/-

இந்நூலில் மரபிலக்கணக் கட்டுரைகளும், மொழியியல் இலக்கணக் கட்டுரைகளுமாகத் தமிழிலும் ஆங்கிலத்திலும் 90 கட்டுரைகள் அடங்கியுள்ளன. அவற்றுள் ஆங்கிலக் கட்டுரைகள் நாற்பத்துஆறு தமிழ்க் கட்டுரைகள் நாற்பத்துநான்கு. அவற்றுள் மொழியியல் இலக்கணக் கட்டுரைகள் தவிர மரபிலக்கணக் கட்டுரைகள் – தமிழில் உள்ளன மட்டும் இங்கே குறிக்கப்படுகின்றன.

## 1. ''மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்''

க.வ.ஏ. சச்சிதானந்தம் (பக். 126-129)

இத்தலைப்புத் தொல் காப்பியப் புணரியல் இரண்டாம் நூற்பாவாகும். உரையாசிரியர்களின் கருத்துக்கு மாறாக ''மொழி யீற்றில் வரும் மெய்கள் யாவும் வருமொழியுடன் தொடரும்போது தனி மெய்யெழுத்துகளின் இயல்பில் நிற்கும்'' எனப் பொருள் கூறினர் கட்டுரையாளர்.

தனிமெய்யின் இயல்புகள் (1) புள்ளி பெறுதல், (2) அகர உயிருடன் சேரும்போது புள்ளியிழந்து நிற்றல், (3) பிற உயிருடன் சேரும்போது உருவு திரிந்துயிர்த்தல், (4) வருமொழி முதலுயிர் ஏறிமுடிதற்கு இடம் கொடுத்தல் என்னும் நான்காம். இந் நான்கு இயல்புகளும் மொழியிறுதியில் வரும் மெய்களுக்கும் உண்டு என்பதே இந்நூற்பாவின் கருத்து. இந் நான்கு இயல்பு களும் மொழி முதல் மெய்களுக்கோ மொழியிடை மெய்களுக்கோ இல்லை.

## 2. ஆய்தக் குறிப்பு மொழிகள்*

கெ. சுடலைமுத்து (பக். 185-190)

தொல்காப்பிய மொழியியல் ஏழாம் நூற்பாவாகிய ''உருவினும் இசையினும்'' என்னும் நூற்பாவுக்கு இளம்பூரணர் நச்சினார்க்கினியர் உரைகளுக்கு மாறாகப் பொருள் விளக்கம் தருகிறது இக்கட்டுரை.

'கன்னங்கறேர்'; ; 'தீ சுற் என்றது' என்றெல்லாம் குமரி, நெல்லை மாவட்டங்களில் பேசப்படுகின்றது. 'கறேர்' என்பது ஒலிக்கப்படும்போது 'கஃஃறேர்' என்றும் 'சுற்' என்பது 'சுஃஃற்(று)' என்றும் ஒலிக்கப்படும்; ஆனால் எழுதிக்காட்டும்போது 'கஃஃறேர்' என்றோ 'சுஃஃற்' என்றோ காட்டுதல் கூடா; 'கறேர்', 'சுற்' என்றே எழுதிக்காட்டுதல் வேண்டும். இதுவே தொல்காப்பியர் கருத்து.

---

* இக்கட்டுரையில் தொல்காப்பியர் குமரி(அ) நெல்லை மாவட்டத்தைச் சார்ந்தவர் என்பதற்குத் தரப்பட்ட விளக்கத்தினும் கட்டுரைக் கருத்துக்குத் தரப்பட்ட விளக்கம் குறைவு; விளக்கமும் தெளிவில்லை.

## 3. உயிர் மெய்

கு. பூங்காவனம் (பக். 321—326)

மெய்கள் உயிர்களுடன் சேரும்போது க்+அ=க, க்+உ=கு என அகமாற்றமும் (மெய் எழுத்திலேயே மாற்றம்), க்+ஆ=கா, க்+ஐ=கை எனப் புறமாற்றமும் (மெய்யெழுத்துக்கு அப்பால் மாற்றம்), ண்+ஒ=ணொ என இருவகை மாற்றமும் (மெய்யின் புறத்திலும் அகத்திலும்) பெறும். இவை வரிவடிவ மாற்றம்.

வரிவடிவ மாற்றமும் ஒலி வடிவ மாற்றமும் தொடர்புடையன. ஒலி வடிவத்துக்கேற்ப வரிவடிவ மாற்றம் சில எழுத்துகளுக்கு அமைவதும் சில எழுத்துகட்கு அமையாமையும் கண்ட தமிழர் வரிவடிவ மாற்றத்தில் திருத்தம் மேற்கொண்டனர்.

க்+அ=க. இதில் மெய்யொலி முன்னும் உயிர் ஒலி பின்னும் அமைதற்கேற்ப வடிவம் காணப்படுகிறது. இது அகமாற்றம். புற மாற்றத்திலும் க+ஆ=கா என முறையாக அமைந்துளது. க+இ=கஇ என்றாகுமே தவிர கி என்றாகாது; அதனால் கி என்பதற்குப் புறமாற்றத்தை விட்டு அகமாற்றம் கொண்டனர். க+எ=கஎ என்றாகுமே தவிர 'கெ' என்றாகாது. அதனால் (முன்) புறமாற்றமாக 'ெ' என்ற குறியீடு கொண்டனர். அப்படியே க+ஒ= கஒ என்றாகுமே தவிர 'கொ' என்றாகாது; அதனால் மெய்யின் முன்னரும் பின்னரும் புறமாற்றங்கள் அமைத்தனர்.*

ண்+ஐ=ணை, ற்+ஆ=றா, ன்+ஆ=னா போல்வன பண்டு ணை, றா, னா என்றே எழுதினர். எழுதும்போது விரைவாகவும் இடைவெளியில்லாமலும் சேர்த்து எழுதும்போது ணை, றா, னா முதலியவாக எழுதி விட்டனர்.

## 4. உயிர்மெய்

ச. சுபாஷ் சந்திரபோஸ் (பக். 191-195)

உயிர்மெய் என்பது பாலும் நீரும் போலவும், உப்பும் நீரும் போலவும் உடன் கலந்ததன்று; விரல் நுனிகள் தலைப்பெய்தாற் போலச் சேரநின்று (வேறாய் நின்று) கலந்ததாகும் என்பது கட்டுரையின் முடிந்த முடிபு. அதற்குத் தரப்படும் சான்று, பிரஞ்சு ஆங்கிலம் முதலிய அயல்மொழிகளில் உயிர்மெய்கள் மெய்யும்

* கா கி முதலியவற்றை க+ஆ, க+இ எனப் பிரித்து இடர்ப் படுவதினும் க்+ஆ, க்+இ எனப் பிரித்துக் காணினும் இக் கருத்துகள் பொருந்தும்.

உயிருமாகத் தனித்தனியே எழுதப்படுதலாகும். ''மெய்யுயிர் நீங்கிற் றன்னுரு வாகும்'' (தொல். எழுத்து. 140) என்னும் தொல் காப்பிய நூற்பாவும் உயிர்மெய் பிரிக்கப்படாததன்று பிரிக்கப் படற்குரியதே என்பதைத் தெரிவிப்பதும் சான்றாகும்.

## 5. எழுத்துப்பேறு

ந. சத்திவேலு (பக். 120-125)

புணர்மொழியிடையில் வரும் தோன்றல் விகாரங்களை எழுத்துப்பேறு என்பர் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும். சேனாவரையர் நின்மே, சென்றீ என்பனவற்றில் இறுதி உயிர் ஏறி வரும் மெய்கள் எழுத்துப்பேறு ஆகும் என்பர். நன்னூல் உரையா சிரியர்கள் காலத்திருந்து எழுத்துப்பேறு நிற்கும் நிலைகளையும் வரும் இடங்களையும் பின்வருமாறு காணலாம்:

1. வினைப் பகுபதத்தின் ஈற்றுயிரோடு மெய்யெழுத்துவரும். காட்டு: சென்றீ.
2. வினைப்பகுபதத்தின் இடைநிலைக்கும் விகுதிக்கும் இடை யில் வரும். காட்டு: உண்ணாது.
3. பகுபதத்தில் சாரியைக்கும் விகுதிக்கும் இடையில் வரும். காட்டு: இல்லாத.
4. வினைப்பகுபதத்தில் பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் வரும். காட்டு: கோடி.

இவை நிலைகள். இடங்கள் வருமாறு:

1. எதிர்மறைத் தெரிநிலைப் பெயரெச்சம் (உண்ணாத)
2. எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம் (இல்லாத)
3. எதிர்மறைத் தெரிநிலை வினையெச்சம் (உண்ணாது)
4. எதிர்மறை ஏவல் ஒருமை வினைமுற்று (சொல்லாதே)
5. முன்னிலை ஒருமை முற்று (சென்றீ)

எழுத்துப்பேறு என்ற சொல்லாட்சி இளம்பூரணர் உரையில் முதலில் காணப்படுகிறது. அது இல்லையென்றால் பகுபத உறுப்புகள் ஆறனுள்ளும் அடங்காத ஓர் எழுத்துக்கு இலக்கணக் குறியீட்டுச்சொல் இன்றி மயங்க நேரிடும்.

## 6. மகர ஈற்றுச் சொற்கள்

சரசுவதி வேணுகோபால் (பக். 135-138)

தம், நும்,எம் என்னும் மூவிடப்பெயர்கள் தவிர மரம் முதலிய வாக வரும் ஓரசைச்சொற்கள் வேற்றுமையேற்கும்போது 'அத்துச் சாரியை பெறும். உரும், திரும் என்பன இன் சாரியை பெறும். உருமினை, திருமினை எனக் காணலாம். இன் சாரியை அத்துச் சாரியையின் பின்னரும் வரும். மரத்தினை எனக் காண்க.

ஈம், கம், உரும் என்பன சாரியை பெறா. 'மகரஈன் புள்ளி முன் அத்தே சாரியை' (தொல். எழு. 185) என்னும் விதி எல்லா மகர வீற்றுக்கும் பொருந்தி வருவதில்லை. சிறப்பாக இக்காலத் தமிழில் சிலவற்றிலும் பிறமொழிச் சொற்களாகத் தமிழில் வழங்குவன சிலவற்றிலும் சாரியை வருதல் இல்லை.எம்போரியம் + இல் = எம்போரியத்தில், ரூம் + இல் = ரூமில் என்பனவற்றில் சாரியை யுண்மையும் இன்மையும் காண்க.

## 7. இன் என்னும் இடைச்சொல்

பா. மல்லிகா (பக். 339-342)

இன் என்பதன் அடிப்படைப்பொருள் 'இருப்பு'ப் பொருளே. இது,

இவனிற்காக்கும்—ஒப்புப்பொருள். (நீங்கல், எல்லை, ஏதுப் பொருள்களிலும் வரும்) (வேற்றுமையுருபு)

விளங்கினான்—இறந்தகாலப்பொருள் (இடைநிலை)

விளவின்கோடு—பொருளில்லாமலும் (சாரியை)

வரும். இதற்கு அடிப்படைப்பொருள் ஒன்று இருத்தல் வேண்டும்.

மக்கள் அலையெனத் திரண்டனர், அவன் மாடாக உழைத் தான் என்னுமிடங்களில் என, ஆக என்பன ஒப்புப்பொருளில் வரினும், முருகன் என்ற மாணவன், மாணவன் ஆகிய முருகன் என்ற இடங்களில் 'இருப்பு'ப் பொருளை உணர்த்துகின்றன. அப்படியே ஒப்புப்பொருளில் வரும் என, ஆக என்பன இருப்புப் பொருளில் வருவதை நோக்கின், இன் என்பதும் ஒப்புப்பொருளில் வருவது ஒருகால் 'இருப்பு'ப் பொருளதாய் இருத்தல் வேண்டும்.

## 8. சில ஓரெழுத்தொரு மொழிகளும் புணர்ச்சி விதிகளும்

ஏ. தட்சிணாமூர்த்தி (பக். 229-234)

ஆ (பசு) மா (விலங்கு), ஊ (தசை), கோ (அரசன்), நீ முதலிய ஓரெழுத்தொருமொழிகள் ஆன், ஊன், கோன், நீன் என்னும்

சொற்களின் திரிபுகளே. ஆ, மா, ஊ என்பன னகர ஒற்று பெறும் என்பர் தொல்காப்பியர். ஆன், மான், கோன் என்பன ஆ மா கோ என வருதற்குச் சங்க நூல்களில் சான்றுண்டு. ஆனால் ஊன் என்பது ஊ என வருதற்குச் சான்றில்லை. ஆன் + ஐ = ஆனை என எளிதில் விதி கூறுவதிருக்க, ஆ என்பது னகர ஒற்றுப்பெறும்; அது பின் உருபுடன் (ஐ) சேரும் எனத் தனிவிதி தொல்காப்பியர் கூறுவது ஆ என்பதை முதல் - மூலமொழியாகக் கொண்டதாலேயாம். கோ என்பது 'ஒன்' சாரியை பெறும் என்பதும் கோன் என்பதே முதல் மொழி எனக் கருதாமையேயாகும்.

நீ என்பது வேற்றுமையேற்கும்போது நின் எனத் திரியும் என்பதைக் காட்டிலும் தான் என்பது தன் என ஆவது போல நீன் என்பதுவே நின் எனத் திரியும் என்பதே சிறக்கும்.

## 9. வடமொழியில் யகர வகர உடம்படுமெய்கள்

பே. க. வேலாயுதம் (பக். 446-451)

மூலத்தமிழிலிருந்து வடதமிழ், தென்தமிழ் என்பன பிரிந்தன. வடதமிழே சமக்கிருதம் தென்தமிழே இன்றைய செந்தமிழ் பெரு நிலப்பரப்பாக இருந்த குமரிக்கண்டம் கொண்டிருந்த மொழி தமிழ். அது வடக்கே பெரிதும் விளங்கியமையால் வடதமிழ் எனப் படும். அங்கிருந்து பிரிந்து தெற்கில் வந்ததே தென்தமிழ். இரண்டு தமிழுக்கும் உடம்படுமெய் யகர வகர எழுத்துகளே. வடதமிழி லிருந்து தென்தமிழ் மேற்கொண்ட உடம்படுமெய் நீங்கலாகப் பிற வற்றைத் தீர்க்கசந்தி, குணசந்தி, விருத்திசந்திகளை அப்படியே மேற்கொண்டு வடமொழி உருவாயிற்று. அது உடம்படுமெய்க் குரிய இடத்தில் சில செயற்கை முறைகளை மேற்கொண்டு தென் தமிழுக்கும் தனக்கும் தொடர்பே இல்லாததுபோலக் காட்டிக் கொள்ளமுற்பட்டது. கடுமையை மிகுதியாக்கிக் கொண்டு ஒரு சிலரின் குழூஉக்குறியாகத் தலைப்பட்டது. இப்படிப்பட்ட சில இலக்கண அமைப்புக்களே அதன் (வடமொழியின்) வீழ்ச்சிக்கு வித்தாயிற்று.

## 10. அடுக்குச்சொற்களும் சார்புச்சொற்களும்

இ. முத்தையா (பக். 380-384)

பொருளுடைய உருபனோ சொல்லோ அடுக்கி வருவது அடுக்குச்சொல். இலக்கண அடிப்படையிலும் பொருளடிப்படை யிலும் எடுத்துக்காட்டுகள் வருமாறு:

| இலக்கணம் | எடுத்துக்காட்டு | பொருள் |
|---|---|---|
| வினை + வினை | படிச்சுப் படிச்சுச் சொன்னேன் | அழுத்தம் |
| ,, | வர வரக்கெட்டுப்போச்சு | காலத் தொடர்ச்சி |
| ,, | இரு இரு...சொல்கிறேன் | எச்சரிக்கை |
| ,, | காணாம் காணாம்னு பார்த்தேன் | எதிர்பார்ப்பு |
| பெயர் + பெயர் | காவலுக்குக் காவலாகும் | தேவை |
| ,, | பேச்சுக்குப் பேச்சு அழகுதான் | தொடர்ச்சி |
| ,, | அடே எஞ்சாமி சாமி | உணர்ச்சி |
| வினையடை + வினையடை | கருகருன்னு | பண்பு |
| ,, | அப்படி அப்படியே சொல் | முறை |
| ,, | அப்படி அப்படியே கிடக்குது | நிலை |
| பெயரடை + பெயரடை | இரண்டு இரண்டு தட்டுகள் | பகிர்வு |
| இடைச்சொல் + இடைச்சொல் | அடேடே | உணர்ச்சி |

சார்புச்சொல் என்பது பொருட்சார்புடைய இரு வெவ்வேறு சொற்கள் இணைந்து வருவது. பொருட்சார்பு என்பது ஒரு பொருளும் அதன் எதிர்மறைப்பொருளுமோ அல்லது ஒரு பொருளும் அதற்குத் தொடர்புடைய மற்றொரு பொருளுமோ அல்லது இரண்டு சொற்களும் ஒரே பொருளைக் குறிப்பனவாகவோ இருக்கலாம். பொருள்களின் சார்புத்தன்மை அண்மையதாகவோ சேய்மையதாகவோ ஆகலாம்.

சந்தை சாரி, சண்டை சாடி, தும்பு துசுறு-இவை அண்மைச் சார்புடையன. கோயில் குளம், பயிர்பச்சை, பண்டம் பாடி, காத்து கருப்பு-இவை சேய்மைச் சார்புடையன. குறுக்க நெடுக்க, நல்லது கெட்டது-இவை எதிர்மறைச் சார்புடையன.

அடுக்குச்சொல்லில் வெவ்வேறு இலக்கணக் கூறுகள் அடுக்கி வரும். சார்புச்சொல்லில் பெரும்பாலும் பெயர்ச்சொற்களே அடுக்கிவரும்.

## 11. பூத்தொடை

**மு. அஞ்சலி அன்னாபாய்** **(பக். 7-9)**

சொற்கள் ஒவ்வொன்றையும் பூவாகக் கொண்டு அவை பொருட்டொடர்பால் பின்னிக்கொள்வதை இழையில் தொடுக்கப்

படுவதாகக் கொண்டு அதனால் பெறப்படும் வாக்கியம் அல்லது சொற்றொடரைப் பூத்தொடையாகக் கொள்கிறார் தெய்வச் சிலையார் (தொல். சொல். 408).

## 12. சொல்லின் வகைகள்

**செ. வை சண்முகம்** (பக். 142-147

தொல்காப்பியத்தில் சொற்பாகுபாடு மொழி அமைப்பு அடிப் படையில் மட்டுமன்றிப் பிற நிலையிலும் மேற்கொள்ளப்பட்டிருக் கிறது.

1. மொழியமைப்பு அடிப்படையில் பெயர் வினை இடை உரி எனப் பாகுபாடு செய்யப்பெற்றுள்ளது (தொல். பெயரியல் 4,5).

திணைபால் பாகுபாடு பெயர்ச்சொல்லின் உட்பாகுபாடாம்.

2 இயற்சொல், திரிச்சொல், திசைச்சொல், வடசொல்-இப் பாகுபாடு இலக்கிய மொழிக்குரியது. பேச்சு வழக்குக்குரியதன்று. இதை மொழியின் பயன்பாட்டையொட்டிய பாகுபாடு என்ன லாம்.

3. இயற்சொல் முதலிய பாகுபாடு நிலையாக்க மொழி யுணர்வை ஒட்டி அமைந்ததே தவிர மொழியின் அமைப்பை யொட்டி அமைந்தது அல்ல. மிகுதியைக் குறிக்க வள்ளுவர் 'அதி' என்றசொல்லை ஆள்வதும் (குறள். 636)தோளைக் குறிக்கப்'புயம்' என்ற சொல்லை இளங்கோவடிகள் ஆள்வதும் (சிலம்பு. 26:66) அக் காலச் சமூகத்தின் மொழியுணர்வைப் புலப்படுத்தும்.

மொழிவழிப் பண்பாட்டின் ஒரு பகுதியைப் புலப்படுத் துவனவே அவையல் கிளவியும் அவையுறு கிளவியும்-(தகுதிக்கிளவி, இயல்புக்கிளவி) என்னும் பாகுபாடுகள்.

## 13. இருபெயரொட்டாகுபெயர்

**க. திலகவதி** (பக். 250-254)

இக்கட்டுரை இருபெயரொட்டாகுபெயரும் அன்மொழித் தொகையும் வெவ்வேறுபட்ட இலக்கணம் உடையன. இன்று என்ன கூட்டு என்ற கேள்விக்கு 'அவரைக்காய்' என்ற பதில் வருமாயின் அவரைக்காய்க்கூட்டு என அறிகிறோம். இங்கு அவரைக்காய் என்பது ஆகுபெயர். அவரைக்காய் என்பதில் அவரை என்பதும் காய் என்பதும் ஒரேபொருளை உணர்த்துவன.

பூங்குழல் வந்தாள் என்பதில் பூங்குழலினையுடையாள் வந்தாள் எனப் பொருள்படும்போது பூங்குழல் என்பது அன்மொழித் தொகையாம். ஏன்எனின் குழல் உணர்த்தும் பொருளை பூ என்பது உணர்த்தவில்லை அவ்வாறே பொற்றொடி வந்தாள் என் பதிலும் தொடியுணர்த்தும் பொருளைப் பொன் உணர்த்தவில்லை. எனவே வேறுபொருளையுணர்த்துவதில் ஆகுபெயரும் அன் மொழித்தொகையும் ஒன்றாயினும் சுட்டுப்பெயர்கள் தரும் பொருள்கள் ஒன்று படலும் படாமையுமாகிய வேறுபாடிருத்தலின் அவையிரண்டும் வெவ்வேறே.

## 14. உடனிகழ்ச்சி வேற்றுமை

**ச. அகத்தியலிங்கம்** **(பக். 1-6)**

உடனிகழ்ச்சிப்பொருளில் வரும் வேற்றுமை மூன்றாம் வேற்றுமையாம். ஒடு, ஓடு, உடன், கூட என்பன மூன்றாம் வேற் றுமையுருபுகள். சங்க இலக்கியப் பெருவழக்கு ஒடு என்பதே. அது உடன் நிகழ்ச்சிப்பொருளில் மட்டும் வருமா என்பது ஐயத்துக் குரியதே.

| | | |
|---|---|---|
| கண்ணன் | இராமனோடு | சேர்ந்தான் |
| ,, | ,, | படித்தான் |
| ,, | பணத்தோடு | வந்தான் |
| ,, | இராமனோடு | பேசினான் |
| ,, | சுவரோடு ஆணி | அடித்தான் |
| '' | துடிப்போடு | பேசினான் |
| ,, | என்றபெயரோடு | வாழ்ந்தான் |

நேற்றொடு முடிந்தது, வீட்டோடு போய்வாழ்ந்தான். இவ் வுதாரணங்களின் உடனிகழ்ச்சியுண்டா? தெளிவில்லை. ஒடு உருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வரும்போது உயர்பின் வழித்தாக வேண்டும்என்பர்தொல்காப்பியர்.(தொல். வேற்றுமைமயங்கியல்8) மனைவியோடு கணவன் வந்தான் என்றவிடத்து உயர்பு யாருக்கு? உயர்பு என்பதற்கு சிறப்பு (முக்கியத்தன்மை) என்ற பொருளே கொள்வது நல்லது.[1]

1. தொல்காப்பியர் வேற்றுமை மயங்கியல் என ஓரியல் அமைத்ததில் இக்கருத்துகள் அடக்கப்படும்.

## 15. தமிழில் ஆறாம் வேற்றுமையா?

ஏ. ஆதித்தன் (பக். 43-48)

தொடரில் பெயருக்கும் வினைக்கும் இடையேயுள்ள இலக்கண உறவினை வேறுபடுத்திக் காட்டுவதே வேற்றுமை.

ஆறாம் வேற்றுமை வேற்றுமையிலக்கணத்துக்கு முரண்பட்டு வருதலானும் ஆறன் உருபுகளாகக் கருதப்படுபவை அனைத்தும் பெயரெச்ச வடிவங்கள் என்பதாலும் தமிழில் ஆறாம் வேற்றுமை என ஒரு வேற்றுமையில்லை.

குறிப்பு : 'களிற்றுக் கோடு' என்பதற்கும் 'கோட்ட களிறு' என்பதற்கும் மரபிலக்கண வேறுபாடறியாமல் இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது. தொடரில் பெயர்க்கும் வினைக்கும் இடையே யுள்ள உறவினை வேறுபடுத்துவதுதான் வேற்றுமை எனின் முருகன் கை என்ற தொடரின் உறவு எப்படி?

## 16. குறிப்பு வினை

சு. அழகேசன் (பக். 22-26)

குறிப்பு வினை என்பது ஒரு பெயர் அதன் தன்மை மாறி முழுக்க வினைத்தன்மை பெறாத—பெயருக்கும் வினைக்கும் இடைப்பட்ட குறைவினை எனக் கொள்ளலாம். அதன் அமைப்பு:

1. பெயரடி + சாரியை + விகுதி : கழலினன்
2. பெயரடி + விகுதி : காதலன்
3. பெயரடை + சாரியை + விகுதி : கரியினன்
4. பெயரடை + விகுதி : நல்ல
5. குறைவினையடி + விகுதி : விகுதி

## 17. 'இல்லை'யின் இலக்கணம்

இரா. பாலகிருஷ்ணன் (பக். 288-292)

தனித்தன்மையுடைய, முழு எதிர்மறைப் பொருளையும் தன்னகத்தே கொண்ட சொல்லாக இருப்பதாலேயே உண்டா, இருக்கிறதா, சரியா, அவனா எனக் கேட்கும் வினாக்களுக்கெல்லாம் எதிர்மறைக் கருத்தைப் புலப்படுத்த 'இல்லை' என்னும் ஒரே சொல்லாலேயே பதிலுரைக்க முடிகிறது.

'உண்மை'க்கு எதிரிடையாக இருப்பதால் அது ஒரு பெயரைக் குறித்து, அப்பெயரின் இன்மைத் தன்மையை விளக்கவரும் சொல் ஆதலின் இல்லை என்பதனைப் பயனிலைச் சொல் எனக் குறிப்பிடுவதில் தவறில்லை.

## 18. வினையடை ஆக்க விகுதி

சரோஜினி (பக். 139-141)

அங்கனம் —அப்படி—அவ்வாறு
செவ்வனம்—செவ்வையாக
நன்கனம் —நன்கு—நன்றாக

இவற்றை நோக்கின் அனம், படி, ஆறு, ஆக, கு என்பன ஒரு நிகரன என்பது தெரியவரும். செம்மையாக, நன்றாக என்பவற்றில் வரும் ஆக என்பது இருப்புப் பொருண்மையை யுணர்த்தும் ஒரு வினை. அதனால் அனம், கு என்பனவும் இருப்புப்பொருண்மையை யுணர்த்துவனவாம். அதனால் அனம் என்பது ஒரு காலத்தில் இருப்புப்பொருண்மையை யுணர்த்தும் ஒரு வினையாக இருந்திருக்கலாம்.

## 19. தொல்காப்பியர் காலத்தில் வியங்கோள் வினை படர்க்கைக்கு மட்டுமே உரியதா?

ந. மாணிக்கம் (பக்.361-365)

வியங்கோள் படர்க்கைக்கே வரும் (தொல். சொல்.) எனத் தொல்காப்பியர் கூறியிருந்தாலும் மற்றையீரிடத்துக்கும் வரும் என்ற கருத்தும் அவர் உடையர். பெறுகதில் அம்ம யானே (குறுந்தொகை. 14) என்ற இடத்தில் என்பது விழைவுப்பொருளில் வந்துள்ள இடத்தில் வியங்கோளும் விழைவுப்பொருளில் வந்தது காணலாம். தில் விழைவுப்பொருளில் வரும் என்பர் அவர் (தொல். சொல். வினை. 29). 'விழைவின் தில்லை தன்னிடத் தியலும்'' என்னும் நூற்பா (தொல். சொல். இடை 12). தில் தன்மைக்கே வரும் என்கிறது. தன்மைக்கண் வரும் தில் வியங்கோளைச் சார்ந்து வருதலின் வியங்கோளும் தன்மைக்கு வரும் என்பது பெறப்படும். ''கடாவுக பாக நின்கால் வல் நெடுந்தேர்'' என்பதில் முன்னிலையில் வந்துளது. இதனால் தொல்காப்பியர் காலத்திலும் வியங்கோள் மூவிடத்துக்கும் உரியதாக இருந்துளது என்பது போதரும். இல்லையேல் படர்க்கைக்கேயுரிய வியங்கோள் தொல்காப்பியர் காலத்துக்குப் பின்னர் மற்றை யீரிடங்களுக்கும் வந்ததாகலாம்.

## 20. செய்பு வாய்பாட்டு வினையெச்சம்

பெ. மாதையன் (பக். 366-371)

செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தைச் செய்து என்னும் வாய்பாட்டுக் குரியதாகக் கொண்டு அது பிறவினை முதல் வினை கொண்டு முடியும்போது 'செய' என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகத் திரிந்ததாக வுரைப்பர் உரையாசிரியர்கள்.

1. பல்கதிர் மண்டிலம் கல்சேர்பு மறைய (குறிஞ்சிப்பாட்டு. 216)
2. யாந்தன் உள்ளுபு மறந்தறியேம் (ஐங்குறுநூறு. 298:4)
3. காதலர் வந்தென விருந் தயர்பு (குறுந்தொகை. 398:6)
4. வெயில் நுழைபு அறியாப் பொதும்பர் (பெரும்பாணாற்றுப் படை. 374)
5. நெஞ்சம் கனற்றுபு காத்திவரவு (பரிபாடல் 6:85-86)

இவற்றுள் செய்பு என்னும் வாய்பாட்டு எச்சங்கள் முறையே 1-இல் செய்து என்னும் எச்சப்பொருளில் தன்வினை கொண்டும் 2-இல் செய என்னும் எச்சப்பொருளில் தன்வினை கொண்டும், 3-இல் விருந்தயர்ந்து, விருந்தயர எனச் செய்து, செய என்னும் இரண்டு வாய்பாட்டுப் பொருள்களிலும், 4இல் 'நுழைபு' என்பது நுழைந்து, நுழைய, நுழைதல் என மூன்று பொருளில் செய்து, செய என இரு வகை எச்சப்பொருள்களுடன் தொழிற்பெயர்ப் பொருளிலும் வரு வதை நோக்கின் செய்பு என்பதில் பு என்பதே வினையெச்ச விகுதி என்றும் அது செய்து, செய என்னும் இரண்டு வாய்பாட்டுப் பொருளிலும் வரும் என்றும் கொள்ளலாம்.

## 21. செய்கு என்னும் வாய்பாட்டு வினைமுற்று

மோ. இசரயேல் (பக். 55-60)

செய்கு என்னும் தன்மையொருமை முற்று செயலின் அழுத் தத்தைக் காட்டுவது. முற்றெச்சமாக வருதற்குரியது இல்லை. செய்கு என்பதில் (செய்+க்+உ) ககரம் எதிர்காலமும், உகரம் தன்மை யொருமையும் காட்டுவன (கட்டுரை முடிவு பெற வில்லை).

## 22. உரிப்பொருளும் திணைப்பகுப்பும்

முத்து. சந்தானம் (பக். 130-134)

குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை என்பன அவ்வந் நிலப்பூக்களை முன்னர் உணர்த்திப் பின்னர் ஆகுபெயர் நிலையில்

அவ்வந்நிலங்களை உணர்த்திப் பின்னரும் இருமடியாகுபெயர் நிலையில் ஒழுக்கங்களை யுணர்த்தினவேயன்றி ஒழுக்கங்கள் அவை நிகழும் நிலங்களுக்கு ஆயினவல்ல. களவு கற்பு என்னும் கைகோள் இரண்டற்கும் எல்லா உரிப்பொருள்களும் உண்டு.

## 23. பாடாண் திணை

வெ. சு. அழகப்பன் (பக். 16-21)

பாடாண்பாட்டுக்கு இருபாலாரும் உரியர். பாடு + ஆண் எனப் பிரித்தல் பிழை. கண்ணகியைப் பற்றிய பாடல்கள் இளங்கோ வடிகளாற் பாடப்பட்டன பாடாண் பாடல்களே. பாடாண் திணைக்குத் துறை யெண்ணிக்கையில்லை. காரணம் துறை ஒழுக் கத்துக்குரியது; மேலும் மேலும் பெருக்கத்துக்குரியது.

பாடாண்திணை என்பதைப் பாடாண்பாட்டு என வெண்பா மாலை கூறினும் (நூற்பா. 9) பாடாண்திணை என்பதே சரி.

பாடாண் துறை பற்றித் தொல்காப்பியர் இரண்டு நூற்பாக் கள் கூறியுள்ளார். ''கொடுப்போர் ஏத்தி'' (தொல். பாடாண். 22) என்னும் துறைச்சூத்திரம் பாடுவாரோடு தொடர்புடையனவாய் பாட்டுடைத்தலைவனைச் சார்ந்து வரும் துறைகள் பற்றியன' ''தாவில் நல்லிசை'' (30) என்னும் துறைச்சூத்திரம் பாடுவாரோடு தற்சார்பு இன்றி (objective) உள்ள துறைகளைப் பற்றியன.

## 24. தொல்காப்பிய உவமவியல் காட்டும் உவம உருபுகள் —சில ஐயங்கள்

கு. மோகனராசு (பக்.391-396)

தொல்காப்பியர் உவம உருபுகளாக 36 கூறினார் (1232). அவற்றை நான்கு வகைப்படுத்தியபோது 32 கூறி இரண்டை நீக்கி யுள்ளார். மேலும் 36இல் ஒன்ற என்ற மாற்ற பொற்ப நாட நடுங்க என்னும் ஆறு உருபுகள் இல்லை. வகைப்பாட்டு நூற்பாக்களில் நேர, நோக்க என்பன இல்லை. அவைதாம், அன்ன ஏய்ப்ப (1232) என்னும் நூற்பாவில் ஆறாறாகப் பகுத்தவர் அவற்றையே வினை பயன் மெய் உரு என நான்கு வகையில் எவ்வெட்டாகப் பகுத்துள்ளார். உரு உவமத்துக்குரியதாக்கியபோல என்பதை ஆசிரியரே 1097:7, 1119:1, 1009:7, 1369:2, 1140:3 ஆகிய எண்க ளுள்ள நூற்பாக்களில் வினை பயன் மெய் ஆகியவற்றுக்கும் உரிய வகையில் ஆண்டுள்ளார். இப்படிப் பல ஐயங்கள் உள்ளன— தெளிவுபடுத்தப்பெற வேண்டியவை.

## 25. அடிநிமிர் கிளவி ஈறாறு

அன்னிதாமசு (பக். 27-31)

அடிவரையறையில்லாத பன்னிரு செய்யுட்களே அடிநிமிர் கிளவியீறாறு. அவை: 1. கலிவெண்பாட்டு 2. கைக்கிளை 3. புறநிலை 4. வாயுறை 5. செவியறிவுறூஉ 6. உரை 7. நூல் 8. வாய்மொழி 9. பிசி 10. அங்கதம் 11. முதுசொல் 12. பண்ணத்தி.

## 26. அணியியலில் சில சிந்தனைகள்

மு. தியாகராசன் (பக். 240-245)

உவமையானது உள்ளுறை உவமம், ஏனையுவமம், உவமப்போலி என மூவகைப்படும். இவற்றுள் உவமப்போலி என்பது உள்ளுறையைக் குறிக்கும் என்பது பொருந்தாது; ஒட்டணியையே குறிக்கும்.

குறிப்பு: இக்கட்டுரையில் உள்ளுறை இறைச்சி ஆகியவற்றுக்கு விளக்கம் தரப்பட்டுள்ளது. விளக்கத்தில் புதிய கருத்தில்லை. உடனுறை என்பது (உடன்+இறை) உடனிறை என்றிருக்கலாம் எனக் கருதுகிறார் கட்டுரையாளர். கட்டுரை முடிவு பெறவில்லை.

## 27. பொருள்கோளும் ஓர் அணியே

தி.இரா. சின்னப்பன் (பக். 171 - 175)

வீரமாமுனிவர் தமது தொன்னூல் விளக்கத்தில் பொருள்கோளை அணியாகக் கொண்டார். நிரல்நிறை என்பதும் பொருள்கோளுக்குரியது; அது அணியெனப்படுதலின் பொதுவில் பொருள்கோளும் பொருள்கோளணி என்று கூறப்பட்டது.

## 28. கூன்

விசு. பழநியப்பன் (பக். 283. 285)

கூன் என்பது தனிச்சொல் எனவும் கூறப்படும். யாப்பமைதிக்கு உட்பட்டுவரும் தனிச்சொல் வெண்பா கலிப்பாக்களில் உண்டு. யாப்பமைதிக்கு உட்படாமல் தனித்து வரும் தனிச்சொல்லும் உண்டு. இது யாப்பின் முதல் இடை கடைகளில் வரும். தனிச்சொல் என்ற மாத்திரத்தே இவ்விரண்டனுள் எது என்ற மயக்கம் வரும். ஆதலின் யாப்பமைதி யுட்பட்டு வருவதையே தனிச்சொல் என்ற சொல்லால் குறிப்பிட, செய்யுள் முதல் இடை கடைகளில் வரும் தனிச்சொல்லைக் கூன் என்ற சொல்லால் குறித்தலே நன்று.

## 29. மாறனலங்காரம்—ஒரு மதிப்பீடு

இந்திரா மானுவேல் (பக். 61 - 65)

வடமொழி நெறிப்பட்ட அணியிலக்கணத்தைத் தமிழ் நெறியையும் தழுவியதாக்க முயன்றது மாறனலங்காரம்.

குறிப்பு : தொல்காப்பியம், மாறனலங்காரம், தண்டியலங்காரம், குவலயானந்தம், சந்திராலோகம் போலும் நூல்களில் அணியிலக்கணக் குறிப்புகள் அமைந்தவாற்றை இக்கட்டுரை சுட்டுகிறது.

## 30. இலக்கணக்கொத்தில் தருக்க நெறிமுறைகள்

லாரன்ஸ் நாயகம் (பக் 408 - 412)

## 31. பிரயோகவிவேக - உரை - தருக்க நெறிமுறைகள் விளக்கம்

ஜா. சிந்திகயல் (பக் 160. 166)

மேற்கட்டுரைகள் இரண்டிலும் தருக்க நெறி முறைகள் அமைந்துள்ளவாற்றை விளங்கக் காணலாம்.

## 32. தொல்காப்பியர் சேர்த்த கருத்துகள்

ஆ. சிவலிங்கனார்

தொல்காப்பியர் ''எழுத்தெனப்படுப அகரமுதல் னகர இறுவாய் முப்பஃ தென்ப'' என்றது முன்னோர் வரையறையைக் கூறியதாகவும், சார்ந்து வரல் மரபின் மூன்றும் தொல்காப்பியரே சேர்த்ததாகவும், ''வேற்றுமை தாமே ஏழெனமொழிப'' (தொல். சொல். வேற்.1) என்றது முன்னோர் வரையறை கூறியதாகவும், விளி கொள்வதன்கண் விளியோ டெட்டே (தொல் சொல் வேற். 2) என்றதுதாமே சேர்த்ததாகவும் கொள்ளலாம். வழிநூல் செய்வோர் தம் கருத்தையும் சேர்த்தற்குரியராதலின் தொல்காப்பியரும் வழிநூல் கருத்தாக அவ்விரண்டு கருத்துகளையும் சேர்த்தார்.

## 33. தெய்வச்சிலையார் - உரை வேறுபாடுகளும் உரை நெறியும்

அ. பிரேமா (பக் 311 - 316)

பெயரெச்சம் என்பதற்கு உண்ட சாத்தன் என்பதை யாவரும் காட்டுவர். இது தெய்வச்சிலையார்க்கும் உடன்பாடே என்றாலும்

எச்சவியலில் வரும் பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடியுமே (426) என்பதற்குத் தெய்வச்சிலையார், "உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே" (தொல். சொல்.1) என்பதனுள், "என்மனார் ஆசிரியர் என வேண்டுதலின் ஆசிரியர் என்னும் பெயர் எஞ்சி நின்றது" என்பர்.

குறிப்பு : இக்கட்டுரை இளம்பூரணரோடு தெய்வச்சிலையார் மாறுபடும் இடங்கள் (தொல். சொல். பகுதி) குறிக்கப் பட்டுள்ளன.

## 2. தமிழ் இலக்கியக் கொள்கை-5

பதிப்பாசிரியர்கள் : ச. வே. சுப்பிரமணியன்
அன்னிதாமசு

வெளியீடு :உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை-600 020

விலை : ரூ 12/: வெளிநாடு : 3 டாலர்

இந்நூலில் பதின்மூன்று கட்டுரைகள் உள. அணியிலக்கணம், யாப்பருங்கல விருத்தி என்னும் கட்டுரைகள் இலக்கணக் கட்டுரை களாகவும் இளம்பூரணார், நச்சினார்க்கினியர், பேராசிரியர் என்னும் கட்டுரைகள் இலக்கண உரையாசிரியர்கள் பற்றிய கட்டுரைகளாகவும் அமைந்துள்ளன.

### 1. அணியிலக்கணம்

ச.வே. சுப்பிரமணியன் (பக். 1-5)

எழுத்து, சொல், பொருள் வகையில் மூன்றாக இருந்த இலக்கணம், யாப்பு அணி எனக் கிளைத்து ஐந்தாயிற்று. தொல் காப்பியத்தில் 'உவமை'யாகச் செறிந்து அமைந்த இலக்கணமே பின்பு அணியாக வளர்ந்தது செய்யுளின் வடிவையும் பொருளை யும் எளிதாகப் பிரித்துக் காண்பதுபோன்று அணியைக் காண்பது அரிது ..தொல்காப்பியம் சுவையணிக்கு மெய்ப்பாட்டியல் என்னும் ஒரு முழு இயலே அமைத்துச் சிறப்பிக்கின்றது...செய்யுளைச் சீர் செய்தல், அதன்கண் ஆழ்ந்து கிடக்கும் நுண்பொருளை வெளிக் கொணர்தல் ஆகியனவற்றை அணியின் இயல்பாக இலக்கணம் சுட்டுவதாகக் கொள்ளலாம்...அணியிலக்கண நூல்களிடையே கருத்துமாறுபாடும் உண்டு. தொன்னூல் விளக்கம் சித்திர கவியைப் பொருளணியாகக் கொள்கிறது. பொருள்கோள் அணியைச் சொல்லணியாக இயம்புகிறது. இப்படிச் சிலவுள,

## 2. இளம்பூரணர்

கரு. நாகராசன் (பக். 91-115)

இளம்பூரணர் நாடு சோழநாடு என்பது சோழநாடு சோணாடாயிற்று (தொல். சொல். கிளவி. 17) என அவர் காட்டுவதாலும், அவரூர் உறையூர் என்பது ''ஊரென்று சொல்லப்படுவது உறையூர்'' (தொல். சொல். இடை. 11) என்பதாலும் அறியலாம். சமயம் சைனம் என்பர் சிலர். காலம் கி. பி 11-ஆம் நூற்றாண்டு. இவர் உரை நெறிக்குச் சில சான்றுகள்:

1. சுவையென்பது, காணப்படு பொருளால் காண்போரகத்தின் வருவதோர் விகாரம். (தொல். மெய்ப். 1).
2. கற்பு என்பது மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும் மன நிகழ்ச்சி (தொல். பொருளியல். 51).
3. சாயல் என்பது மென்மை. அது நாயும் பன்றியும் போலாது, மயிலும் குயிலும் போல்வதோர் தன்மை (தொல் பொருளியல். 51).

## 3. நச்சினார்க்கினியர்

இ. சுந்தரமூர்த்தி (பக். 137-179)

நச்சினார்க்கினியர் ஊர் மதுரை; தொழில் ஆசிரியதொழில் குலம் பாரத்துவாச குலம். காலம் கி.பி. 14-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி.

செய்யுளை உரைநடைப்படுத்துதல், பழமொழி ஆட்சி பெயர்க் காரணம் கூறல், அருஞ்சொற்பொருள் சுட்டல், உலகியல், இலக்கிய இலக்கண வழக்குகளைக் கூறிச் சொற்பொருளைத் தெளிவு படுத்தல், கருத்துக்கு அரண் கூறல், மேற்கோள் கூறி நிறுவுதல் உவமை விளக்கல், செயற்கையாகக் கொண்டுகூட்டிப் பொருள்கூறல், இடைச்சொற்களை இடம்மாற்றிப் பொருள் கூறல், வைப்புமுறை காட்டல் நயம் காட்டல் முதலியன இவர் கொண்ட உரைநெறிமுறைகள். இவற்றை இவரின் இலக்கண இலக்கிய உரைகளில் பொருந்தக் காணலாம்.

## 4. பேராசிரியர்

கே. பகவதி அம்மாள் (பக். 117-135)

பேராசிரியர் காலம் 13-ஆம் நூற்றாண்டின் தொடக்கம். பேராசிரியர் பலர் என்பர். தொல்காப்பிய உரையாசிரியரும்

திருக்கோவையார் உரையாசிரியரும் ஆம். பேராசிரியர் ஒருவரே என்பர். இவர் கொள்கைகள் சில:

1. பாட்டு என்பது குறித்த பொருளை நாட்டி, நாற் சொல்லால் இயன்று யாப்புடன் கூடி மரபும் பெற்று அதற்கேற்ற உறுப்பு மட்டும் பெற்று வருவதுதான்.
2 பாட்டில் சிறந்தது அளவியல் வெண்பாட்டு. ஏன் எனின் செப்பமாகவும் தெளிவாகவும் அமையக் கூடியது இது.
3. மரபு சிறிது பிறழ்ந்தாலும் செய்யுளின்பம்படின் அதனை ஏற்றுக் கொள்ளலாம்.
4 செய்யுளுக்கு யாப்பிலக்கணப் பகுதியாகிய இருபத்தாறும் இன்றியமையாதது
5. சான்றோர் மாற்றும் மரபை ஏற்கலாம். சாலார் மாற்றுவது ஏற்கக்கூடியதன்று.

## 5. யாப்பருங்கல விருத்தி

**அன்னிமிருதுல குமாரி தாமசு** (பக் 55-90)

யாப்பருங்கல நூலாசிரியர்[1] அமுதசாகரர் என வீரசோழியம் கூறினும் அமிதசாகரன் என்பதே பொருந்தும் இலக்கியம் என்பதற்கு இன்று நாம் கருதும் பொருளோடு (செய்யுள்) சான்று என்னும் பொருளும் உரையினால் பெறப்படுகிறது. நூல் (562,63) கொள்கை என்பது கோட்பாடாயினும் 'மதம்' என்பதையும் உரை அறிவிக்கிறது (487). யாப்பு பாட்டு செய்யுள் என்பன ஒரே பொருள் உணர்த்துவன (210) யாப்பு மக்கட்சட்டகம் போன்றது என்னும் விருத்தியுரைத்தொடரே நன்னூலார் உடம்பையும் யாப்பையும் இணைத்து விளக்குவதற்கு அடிப்படை. செய்யுளின் நடையாகிய வெளியீட்டுநிலை எளிமையாகக் கூறல், அரிதுபடக் கூறல் என இருவகை (105) பா வடிவமும் பொருண்மையும் தொடர்புபடுத்தி நினைக்கப்படல் அக்காலக் கொள்கைத் தெளிவினைக் காட்டுகிறது. இப்படிப் பல கருத்துகள் இக்கட்டுரை யில் இடம் பெற்றுள்ளன.

சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1981 சனவரியில் மதுரையில் நடைபெற்ற ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டை

---

1. அடைப்புக்குறி எண்கள் யாப்பருங்கல விருத்தியின் (கழகப்பதிப்பு) பக்க எண்கள்.

ஒட்டி 1980 திசம்பரில் "Papers on Tamil Studies" என்னும் நூலை வெளியிட்டது. இதில் ஆங்கிலக் கட்டுரைகள் பதினெட்டும் தமிழ்க் கட்டுரைகள் மூன்றும் உள்ளன. அவற்றுள் 'உள்ளுறை' என்ற கட்டுரை இலக்கணக் கட்டுரையாகும்.

## 3. Papers on Tamil Studies

Editors : S.V. Subramanian
V. Murugan

Publisher : International Institute of Tamil Studies
Adayaru, Madras-600 020.

Price Rs. 15/-

## 1. உள்ளுறை

**ஆ. சிவலிங்கனார்**

உள்ளுறை அகப்பொருள் திணைக்கேயுரியது; தெய்வம் ஒழிந்த கருப்பொருள்களை நிலைக்களனாகக் கொள்வது. ஐந்து வகையது.

1. உடனுறை உள்ளுறை: இளம்பூரணர் கருத்தே ஏற்புடையது. நச்சினார்க்கினியர் உடனுறை என்பது இறைச்சி எனக் கொண்டது பொருந்தாது.

2. உவம உள்ளுறை: உள்ளுறை யுவமம் எனவும் படும். இறைச்சியிற் பிறக்கும் பொருளும் உவம உள்ளுறையும் வேறென்பாரும் ஒன்று என்பாரும் உளர். உள்ளுறை என்பதே இறைச்சியிற் (கருப்பொருளிற்) பிறப்பன ஆதலின் உள்ளுறை ஐந்தும் இறைச்சியிற் பிறப்பன என்னவேண்டும். அதனால் உவம உள்ளுறையை இறைச்சியிற் பிறப்பது என்பது பொருந்தாது.

3. சுட்டு உள்ளுறை: "தொடிநோக்கி" (குறள் 1279) என்ற குறளில் கருப்பொருளில்லையாதலின் இளம்பூரணர் அதைக் காட்டியது பொருந்தாது.

4. நகை உள்ளுறை: இளம்பூரணர் காட்டும் உதாரணத்தில் கருப்பொருளில்லையாதலின் பொருந்தாது. நச்சினார்க்கினியர் காட்டும் உதாரணம் ஏற்கத்தக்கது.

5. சிறப்பு உள்ளுறை: நச்சினார்க்கினியர் கருத்து பொருத்த மற்றது. அவர் காட்டும் உதாரணத்தில் சிறப்புப் பொருளுக்குக் கருப்பொருள் நிலைக்களம் இல்லை.

## 4. தமிழ் யாப்பு—சில புதிய கோணங்கள்

ஆசிரியர் : கு. மோகனராசு
வெளியீடு : வள்ளுவர் கழகம், சென்னை.
கிடைக்குமிடம்: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை 600 001.
விலை: : ரூ. 7/-

இந்நூல் ஆறு கட்டுரைகளின் தொகுப்பாகும். அவற்றுள் மூன்று கட்டுரைகள் இலக்கணம் பற்றியன. அவை:

### 1. வண்ணப்பா யாப்பில் எழுத்தும் சந்தமும்

வண்ணப்பாவின் இலக்கணத்தை முதலில் வகுத்துக் கொடுத்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் வண்ணத்தியல்பு என்னும் நூலையும், குமார பூபதீயம் என்னும் வண்ணப்பா யாப்பிலக்கணம் என்னும் நூலையும் ஒப்புக்கண்டு திறனாய்வு செய்து எழுதப்பட்ட கட்டுரையிது. வண்ணத்தியல்பு நூலின் நூற்பாக்களுக்குப் பொருள் விளக்கமாக நன்கு அமைந்துள்ளது.

### 2. அசையும் பொருளும்

''அசை பொருள் பெற்று வருவதும் உண்டு; பொருளற்றுவருதலும் உண்டு. அசை இசையின் ஒருகூறு; ஆகவே அதில் வரும் ஒவ்வொரு எழுத்துக்கும் இசையளவில் ஓர் இடம் உண்டு. எழுத்துகளின் அமைப்பு நிலைகளை நோக்கியே அவைகளுக்கும் பெயரிடப்பட்டுள்ளன; பொருள் நிலை நோக்கியன்று. அசைகள் பலவற்றிற்குப் பொருள் இருப்பது சிறப்பாக வேண்டுமானால் கொள்ளலாம். ஆனால் எல்லா அசைகளுக்கும் பொருள் உண்டு என்றோ அசை பொருள் நோக்குடையது என்றோ கொள்ள இயலவில்லை''—இவ்வாய்வுக் கட்டுரை சிறப்புற அமைந்துளது.

### 3. வெண்பாவில் ஓரசைச் சீர்கள்

வெண்பாவின் ஈற்றில் வரும் ஓரசைச் சீர்களான நாள், மலர், காசு, பிறப்பு என்னும் வாய்ப்பாட்டினவாகச் சொல்லப்படும் நேர், நிரை, நேர்பு, நிரைபு பற்றி அவை எவ்வெவ்வகைகளின் முன்னர் எவ்வெப்படி வந்துள்ளன என எடுத்துக்காட்டி விளக்கம் தரப்பட்டுள்ளது.

பகுதி - 3

# திங்களிதழ்களில் வெளிவந்துள்ள கட்டுரைகள்

## 1. செந்தமிழ்ச் செல்வி

### 1. ஏகார ஓகாரத் தியற்கையு மற்றே

**ஆ. சிவலிங்கனார்**

(செந்தமிழ்ச்செல்வி, சிலம்பு 55, பக். 75-80)

எகர ஒகரத் தியற்கையு மற்றே என்னும் தொல்காப்பிய நூற்பா (16) 'ஏகார ஓகாரத்தியற்கையு மற்றே' என்பதாகத்தான் இருத்தல் வேண்டும். ஏகார ஓகாரக் குறுக்கங்கள் புள்ளிபெறும் என்பதே அதன் பொருள். எ ஒ என்னும் எழுத்துக்கள் பழந் தமிழரால் புள்ளியிட்டெழுதப் பெறவில்லை. ஆரிய மொழியில் எகர ஒகரங்கள் இல்லாததாலும் ஏகார ஓகாரங்களே உண்மை யாலும் எட்டன், ஒட்டன் முதலிய தமிழ்ப் பெயர்ச்சொற்களை அம்மொழியில் எழுதிக்காட்ட இயலாமையாலும் எப்படியும் எழுதியேயாக வேண்டியதனாலும் ஏகார ஓகார நெடில்களின் மேல் புள்ளியிட்டெழுதிக் கொண்டனராதல் வேண்டும். அதுவே பிற்காலத்தில் தமிழிலும் தவறுதலாக ஆரியரால் புகுத்தப்பட்ட தாகும். 'ஈற்றுநின்றிசைக்கும் ஏயென் இறுதி, கூற்றுவயின், ஓரள பாகலு முரித்தே'' (இடையியல். 38) என்னும் நூற்பாவால் ஏகாரக்குறுக்கம் கூறினர் தொல்காப்பியர். ஐகாரக்குறுக்கம் கூறியவர் ஔகாரக்குறுக்கத்தைக் கூறாது விட்டமைபோல் ஓகாரக் குறுக்கம் கூறாது விட்டார். ஏகார ஓகாரக்குறுக்கங்களுக்குப் புள்ளியிடுதல் உண்டு என்பதே கூற வந்தவர் ஏகார ஓகாரத்தியற் கையு மற்றே என்றே கூறினார் எனக் கொள்ள வேண்டும்.

### 2. கூட்டெழுத்துகள்

**வி. பொ. பழனிவேலனார்**

(செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 54, பக். 96-97)

ஐ, ஔ தனியெழுத்துகளே. அஇ, அஉ எனப்போலி கொள்ளுதல் தவறு.

ஆங்கிலத்தில் ஓ கூட்டெழுத்தன்று; அது போலவே ஐயும்.

### 3. கோயிலா கோவிலா

**இரா. இளங்குமரன்**

(செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 54, பக். 11—13)

கோயில் என்பதே தொல்காப்பியர் கால வழக்கு. சங்க இலக் கியங்களில் கோயில் என்றே காணப்படுகின்றது. பிற்கால

வழக்கே கோவில் என்பது. நன்னூலாரின் "இ ஈ ஐ வழி யவ்வும்" என்னும் நூற்பாவை யடியொற்றிப் பிற்காலத்தார் கோவில் என்பது கோயில் என்று இலக்கணப்போலியாக மாறிற்று என்றனர்.

## 4. சாரியை அக்கு

ஆ. சிவலிங்கனார்

(செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 54, பக். 493-94)

சாரியை'அக்கு' என்பது எங்கும் வழக்கில் இல்லை. அதனைத் தொல்காப்பியர் 'க்கு' கெட 'அ'மட்டும் நிற்கும் என்பார். நன்னூலார் 'அ' என்பதே சாரியை என்பர். தொல்காப்பியர் காலத்துக்கு முன்னர்க் 'குன்றக்குக் கூகை' என்பது போலவே வழக்கில் இருந்திருக்கத் தொல்காப்பியர் காலத்தில் 'குன்றக் கூகை' என இருந்ததால் முன்னோர் வழக்கில் இருந்த 'அக்கு' என்ற சாரியை யுண்டு எனக் கூறிப் பின்னர்த் தம் காலத்து அவ்வழக்கு இன்றி 'அ' என இருந்ததால் அக்கு என்பது 'க்கு' கெட்டு 'அ' என மட்டில் நிற்கும் என்றார். இவ்வாறு கூறிய தற்குக் காரணம் தாம் வழிவழி நூல் செய்பவர் என்பதை யறிவிக்கவே.

## 5 இலக்கணக் கோவை - ஒரு மதிப்பீடு

சொ. சிங்காரவேலன்

(செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 54, பக். 685—490, 545—550)

தமிழ் இலக்கணக் கோவை என்னும் நூலின் ஆசிரியர் காமக்கூர் சுந்தர முதலியார். இந்நூல் 124நூற்பாக்களைக் கொண்டது. தொல்காப்பியம், இலக்கண விளக்கம், நன்னூல், திருக்குறள் பரிமேலழகர் உரை முதலிய இலக்கண இலக்கிய நூல்களிலிருந்து தெளிவாகக் கருத்துகள் திரட்டித் தரப்பட்டுள்ளன. உயிர்க் குற்றெழுத்துகள் ஆண் என்றும் உயிர் நெடில் எழுத்துகள் பெண் என்றும், மெய்யெழுத்துக்களும் ஆய்த எழுத்தும் அலி என்றும் இந் நூல் கூறும் (3,4,5). வல்லெழுத்து பேரொலியுடையது, மெல்லெழுத்தும் இடையெழுத்தும் சிற்றொலியுடையவை (6,7) என்னும் இது.

வடமொழிக் குற்றுகரத்தைத் தமிழில் முற்றுகரமாகவே கருத வேண்டும். (12,13).

'படி' என்னும் இடைச்சொல் வினையுடன் சேர்ந்து வரும் போது வருமொழி முதலில் வல்லெழுத்திருந்தால் அவ்வல்லெழுத்து மிகாது என்றும் (கொல்லும்படி—சொன்னான்>கொல்லும்படி சொன்னான்) சுட்டு வினாக்களுடன் சேர்ந்துவரின் மிகும் என்றும் (அப்படி + சொன்னான்> அப்படிச் சொன்னான்) கூறும் (17).

உடைய என்பது ஆறன் உருபு. அது 'இட' என மருவும் என்னும் இந்நூல் (நம்முடைய பணம்>நம்மிட பணம்).

## 6. திகட சக்கரம்

**பி. மா. சோமசுந்தரம்**

**(செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 54, பக் 347-352)**

திகழ் + தசக்கரம் என்பன திகடசக்கரம் எனப் புணரும் என்பதற்கு வீரசோழிய விதி தேவையில்லை. இதுபற்றிக் கச்சியப்ப சிவாசாரியர் வரலாற்றில் வரும் கதை வேண்டுமென்றே கட்டப்பட்டது. இவ்வாட்சிக்குத் திருஞானசம்பந்தர் தேவாரம் சான்றாகும்.

துகடுறு விரிதுகில்......
... ... ... ... .. ... ... ... ... ...
முகிடரு மிளமதி... .. (முகிழ் + தரு > முகிடரு)
திகடரு சடைமுடி...... (திகழ் + தரு > திகடரு)

## 7. படி

**சொ. சிங்காரவேலன்**

**(செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 55, பக்.29-31)**

படி=முறை (அ) நெறி, மறுபடி (அ) மீண்டும் என்னும் பொருளது.

வினையெச்சப்பொருள் : இப்படிச் சொன்னான்
இடைச்சொல் : இப்படி, எப்படி
பெயர்ச்சொல் : படிமை

## 8. பழந்தமிழில் சுட்டுப்பெயர்கள்

**தி. நடராசன் (செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 55, பக். 62-69)**

குறிப்பு : சுட்டுப்பெயர்கள் சங்க இலக்கியங்களில் ஆளப்பட்டனவற்றுக்கு மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன.

## 9. முன்னிலைப்பெயர்கள்

திரு. அடிகளாசிரியர்

(செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 54, பக். 353-56)

நீ இர் திரிபே நீர். நீர் என்பது தண்ணீரைக் குறிக்கும். அதனின் வேறுபட்டதாதலின் நீஇர் என்பதே மூல வடிவம்.

## 10. மூன்றாம் வேற்றுமையுருபு

ஆ. சிவலிங்கனார்

(செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 54, பக். 386-390)

தொல்காப்பியர் ஒடு உருபு ஒன்றே மூன்றாம் வேற்றுமை யுருபாகக் கூறினார். உடம்பொடு புணர்த்தலால் ஆன் உருபும் சேர்த்தார். ஒடு உருபு மட்டும் கூறியது முன்னோர் கருத்து. ஆன் உருபைச் சேர்த்தது வழிநூல் கருத்து.

## 11. வினைத்தொகையின் முன்மொழி பெயரா வினையா?

ஆ. சிவலிங்கனார்

(செந்தமிழ்ச்செல்வி, சிலம்பு 54, பக். 306-309)

அடுகளிறு என்பதில் உள்ள அடு என்பது முதல்நிலைத் தொழிற்பெயர். அதனால் வினைத்தொகையின் முன்வரும் மொழி பெயரேயாம். நிலை வருமொழிகளின் இடையில் அதாவது முன் மொழியின் இறுதியில் வினைத்தன்மை தொக்கியிருப்பதால் வினைத்தொகை என்றாயிற்று. வேற்றுமை, பண்பு, உவமை, உம்மைத்தொகைகளின் முன்மொழி பெயராக இருப்பதுபோலவே வினைத்தொகையின் முன்மொழியும் பெயரேயாம்

## 12. தொல்காப்பியம் காட்டும் இசையியல்

வீ. பா. கா. சுந்தரம்

(செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 55, பக். 130-135)

1. இசையின் காலக்கணக்குகள்—எழுத்து-அசை-சீர் - அடி, இவற்றின் அளவுகள்-அளவுக்கு ஏற்ப வகைகள்.
2. இசைக்கருவிகள் பண்கள் பற்றிய குறிப்புகள்.
3. சங்க காலத்து இசைப்பாடல் வகைகள்.
4. பாணர்கள் வாழ்க்கைக் குறிப்புகள்—இந்நான்கு பகுதிகளில் ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

## 13. தொல்காப்பியம் ஒரு வழுவமைப்பு நூலும் ஆம்

ஆ. சிவலிங்கனார்

(செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 55, பக். 233-237)

இலக்கணநூல் தோன்றும்போதே உலகவழக்கில் உள்ள வழுக்களைச் சுட்டித் திருத்துவதும், ஏற்பதும் காணலாம். தொல்

காப்பிய முதல் நூற்பாவிலேயே வழுவும் அமைப்பும் காணலாம். ''எழுத்து 30 என்னாமல் அல்லது 33 என்னாமல் சார்ந்து வரல் மரபின் மூன்றலங்கடை எழுத்து 30 என்ப'' என்று ஓதியதே அதற்குச்சான்று சொல்லதிகாரத்துக் கிளவியாக்கம் பெரிதும் வழுவமைப்பே கூறுகிறது. பொருளதிகாரத்தும் வழுவமைப்புகள் உண்டு. நூலின் இறுதி நூற்பா உத்திகளைக் கூறுவது. உத்திகள் வழுவின் பாற்பட்டனவே என்பது பேராசிரியர்க்கும் கருத்தாம்.

## தமிழ்ப்பொழில்

**கரந்தைத் தமிழ்ச்சங்க வெளியீடு**

கரந்தட்டாங்குடி

தஞ்சாவூர்

### 1. அழனும் புழனும்

**ஏ. ஆதித்தன்**

(தமிழ்ப்பொழில், துணர். 53, மலர் பக், 7, 204-206)

அழன் + ஐ, அழன் + அத்து + ஐ > அழத்தை என வருவது போலவே அழம் + ஐ, அழம் + அத்து + ஐ > அழத்தை எனவும் வரும். ''மஃகான் புள்ளி முன் அத்தே சாரியை'' (தொல். உருபியல்.13) ''அழனே புழனே ஆயிரு மொழிக்கும் அத்தும் இன்னும் உறழத் தோன்றல்'' (தொல். உருபியல். 21)என்னும் நூற்பாக்கள் ஒத்திருத்தலின் ''மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த னகரத் தொடர்மொழி ஒன்பஃதென்ப'' (தொல்.மொழிமரபு.49) என்னும் நூற்பாவுக்கு அழன் புழன் என்பன காட்டுதல் பொருந்தாது.

### 2. ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்

(தமிழ்ப்பொழில் துணர், 53, மலர் 9,10, பக். 133-135)

உண் குதிரை என்பது உடன்பாட்டில் வினைத்தொகையாக வருவதுபோல உண்ணா குதிரை என்பது எதிர்மறையில் வினைத்தொகை எனக் கொள்ளலாம். எனவே ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் என ஒன்று கொள்ள வேண்டுவதில்லை.

### 3. ஆய்தம் என்னும் முப்பாற்புள்ளி

**ச. பாலசுந்தரம்**

(தமிழ்பொழில், துணர் 54, மலர் 2-4, பக். 51-56, 75-85)

ஆய்த வரிவடிவமானது முப்பாற்புள்ளியுடையது. புள்ளி என்பது சிறுகோடு. முப்பாற்புள்ளி என்பது ||| என்பதாகவோ ☰ என்பதாகவோ ஆகலாம். ஆய்தம் உயிர்அகரஎழுத்தின்சார்பெழுத்

தாகும். இகர உகர ஒலிக் கூறும் சிறுபான்மை பெறும். இகரக்கூறு பெறும்போது யகர ஒலிக் கூறுபெறும். நலிபு ஒலியாய்ச் சுருங்கி ஒலித்தல் இதன் இயல்பு. சில லகார ளகார வகார ஈற்று வல்லினப் புணர்ச்சியில் வரும். இது மாற்றொலியன் அன்று.

குறிப்பு : சிறந்த ஆய்வுக்கட்டுரை. புள்ளி என்பதற்குச் சிறு கோடு எனக்கொண்டது எவ்வாறு பொருந்தும் எனப் புரியவில்லை.

## 4. குற்றியலுகரம்

**ச. பாலசுந்தரம்**

(**தமிழ்ப்பொழில், துணர் 52, 53, 54 முதல்**)

குறிப்பு : நீண்டதோர் ஆய்வுக்கட்டுரை. தொடர்கிறது. நூலாக வெளிவரும் தகுதியுடையது.

## 5. பாட்டியல் - ஒரு நோக்கு

**அ. ம. சத்தியமூர்த்தி**

(**தமிழ்ப்பொழில், துணர் 54, பக். 4-7**)

பாட்டியல் என்பது இலக்கிய இயல். யாப்பியல் பாட்டியல் இரண்டும் வெவ்வேறாகவே தொல்காப்பியர் காலத்திலிருந்து உணரப்பட்டு வந்தன.

## 6. தொல்காப்பிய மெய்ம்மயக்க மரபுகள்

**ச. பாலசுந்தரம்**

(**தமிழ்ப்பொழில், துணர் 54, மலர் 6-9, பக். 197-206**)

இடைநிலை மெய்ம்மயக்க நூற்பாக்களுக்கு உரையும் விளக்கமும் தரப்பட்டு மயக்கக் காரணங்களும் எழுத்துகளின் பிறப்பமைதிகொண்டு ஆங்காங்கே தரப்பட்டுள்ளன.

## 7. தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி

(**தமிழ்ப்பொழில், துணர் 54, மலர் 5, பக். 99-104**)

பழைய உரைகள், புத்துரைகள், ஆய்வு, ஆய்வுநிலைக் காரணங்கள் முதலியவை தொகுத்தரப்பட்டுள்ளன.

## 8. தொல்காப்பியமும் பெயரெச்ச உறவுநிலையும்

**ஏ. ஆதித்தன்**

(**தமிழ்ப்பொழில், துணர் 54, மலர் 2, பக்.36-38**)

பெயரெச்சமும் அது கொண்டு முடியும் பெயரும் ஆகியவற்றிற்கு இடையே காணப்படும் இலக்கண உறவுகளை ஆராய்கிறது இக்கட்டுரை. இது மொழியியல் கட்டுரையாக அமைகிறது.

# 4. கருத்தரங்குக் கட்டுரைகள்*

I. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் மொழித்துறையின் சிறப்புக் கருத்தரங்கில் 13-11-82-இல் படிக்கப்பட்ட கட்டுரைகள்.

## 1. வேற்றுமையுருபுகள்

ஆ. சிவலிங்கனார்

பெயரை வேறுபடுத்தலின் உருபு வேற்றுமையெனப்பட்டது. முதல் வேற்றுமையுருபு பெயர் தோன்றுநிலையே; ஆனவன் ஆகின்றவன் முதலியன ஆகா. உடன் என்பதன் திரிபே ஒடு உருபும் ஆன் உருபும். ஐந்தாவதன் உருபு இன்; அது இல் எனத் திரிந்த பின் தன் வழக்கு அருகியது. ஆறன் உருபு அது ஒருமைக்கும் பன்மைக்கும் உரியதே; அகரம் பன்மையுருபு என்றது பிற்கால வழக்கு. ஏழன் உருபு கண் ஒன்றே; கால் முதலியன அதன் பொருள் படுவன; உருபுகளல்ல.

## 2. வேற்றுமை வளர்ச்சி வரலாறு

இரா.கு. நாகு

பெயர்ச்சொல் தொடர்நிலையில் பொருளால் வேறுபட்டு நிற்கும் திறத்தினையே வேற்றுமை என்கிறோம். வேற்றுமை எட்டு என்பது உருபு அடிப்படையிலா பொருளடிப்படையிலா எனின், உருபு அடிப்படையாயின் எட்டுக்கு மேலும் உருபுகள் உள ஆதலினால் பொருளடிப்படையாலேயே என்னலாம்.

முதல் வேற்றுமைச் சொல்லுருபு ஆனவன் போல வருவன். மூன்றாம் வேற்றுமையில் உடன் என்னும் சொல் உருபு 'ஒடு' என்னும் உருபின் செல்வாக்கைக் குறைத்து விட்டது. ஐந்தன் உருபு இன் இக்காலத்தில் நீக்கப்பொருளுக்கே பெரிதும் வழங்கு கிறது. ஐந்தாம் வேற்றுமையை ஏழாம் வேற்றுமையோடு சேர்த்து விடலாம் என்பார் கூற்று பொருந்தாது. ஆறாம் வேற்றுமை ஒன்றே பெயர்க்கும் பெயர்க்கும் உள்ள உறவைக் காட்டுவது; மற்றையன பெயர்க்கும் வினைக்கும் உள்ள உறவைக் காட்டுவன.

---

* இவை அச்சுக்கு வாராதன.

II. உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் நடைபெற்று வரும் வாரக் கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரைகள்.

## 1. புறப்பொருள்-விளக்கம்

ச. சிவகாமி (14-3-80)

தொல்காப்பியம் முதல் அறுவகையிலக்கணம் ஈறாக உள்ள இலக்கண நூல்கள் புறம் பற்றிக் கூறும் கருத்துகளைத் தொகுத்து முடிவாகத் "தொன்னூல் விளக்கமும், அறுவகையிலக்கணமும் ஒழிந்த ஏனையவே இன்று நாம் கருதும் புறப்பொருள் என்ன என்பது பற்றி நவிலுகின்றன; அகத்திற்குப் புறம்பாய் வருவன அனைத்தும் புறமாகும்; அவை அறம், பொருள், வீடு என்னும் முப்பொருண்மைகளுள் அடங்கி ஏனைய திணைப் பாகுபாடு களுக்கும் உடன்படுவதாகும் போன்றன புலனாகின்றன'' எனக் கூறுகின்றார் கட்டுரை ஆசிரியர்.

## 2. பாட்டியல் மரபில் பிரபந்தத்திரட்டின் இடம்

(அன்னி தாமசு 11-4-80)

பிரபந்தத்திரட்டின் அமைப்பும் பொருளும் இதனைத் தமிழ் இலக்கண மரபின் ஒரு புரட்சி நூலாகவே காட்டுகின்றது. பிரபந்தம் எனப் பெயர்பெறலும், திரட்டு எனப் பெயர்பெறலும் பிரபந்த மரபியல் (கி.பி. 16-ஆம் நூற்றாண்டு) புறத்திரட்டு கி.பி. 15-ஆம் நூற்றாண்டு) என்னும் நூல்களால் பெறப்படினும் இந்நூலே முதல் இலக்கணத் திரட்டாக அமைகின்றது. பிற இலக்கணங்கள்போல விதியும், விலக்கும் கூறல் மட்டுமன்றித் திறன் கூறலும் இதன் பண்பாகப் பொருந்துகின்றது.

## 3. ஆய்தம் தோன்றிவரும் சொற்கள்

ந. ஞானசம்பந்தன் (30-5-80)

ஆய்தந் தோன்றிய சொல்களிலெல்லாம் ழகர ஒற்ற சந்தியாகத் தோன்றி ஆய்த எழுத்தாக மாறியுள்ளது. அழ் + கு > அஃகு. அழ் + திணை > அஃறிணை. க் + அழ் + கான் > கஃகான் கொழ் + தேர் > கொஃறேர், பழ் + நீ > பஃறி, அழ் + து = அஃது.

**குறிப்பு :** இக்கட்டுரையை மொழியியல் கட்டுரையாகவும் கொள்ளலாம். தத்துவக் கட்டுரையாகவும் கொள்ளலாம். ஆய்ந்து காணுதற்குரிய அரிய கட்டுரை.

# பட்டிமன்றம்

## பூ. சொல்விளங்கும் பெருமாள்

கடந்த இருபத்தைந்து ஆண்டுகளுக்குள் தமிழகத்தே மிகுந்த செல்வாக்குப் பெற்றுவிட்ட மேடைக்கலை பட்டிமன்றம். ஒரு பொருளைப் பற்றிய இரண்டு அல்லது மூன்று மாறுபட்ட கருத்துக் களை விவாதப் பொருளாக்கிக் கட்சிக்கு மூவர் அல்லது நால்வராக இருந்து விவாதித்து விவாதங்களின் முடிவாக நடுவர் தீர்ப்புரை கூற அமைவதே பட்டி மன்றம் எனப்படும் எழுவர் அல்லது பதின்மரின் உரைக் கதம்பமாக அமையும் இந்நிகழ்ச்சி, மக்கள் மன்றத்திற்கு இலக்கிய, சமய, அரசியல், பொருளாதாரச் சிந்தனைகளை மக்கள் விரும்பும் வண்ணம் தொகுத்து, வகுத்து அளிக்கிறது. தமிழகத்தின் வீதிகளில், நாற்சந்திகளில் நள்ளிரவில் நடைபெறும் பட்டிமன்ற நிகழ்ச்சிகளைக் கேட்டுச் சுவைக்க ஆயிரக்கணக்கான மக்கள் இன்றும் கூடுகின்றனர். இது மக்கள் இக்கலையின்மீது கொண்டுள்ள ஆர்வத்தைக் காட்டும். தமிழகத்தே வாழும் தமிழ் மக்கள் மட்டுமின்றிப் பம்பாய், கல்கத்தா, டில்லி போன்ற வேற்று மாநிலத் தலைநகரங்களிலும் கூடத் தமிழர்கள் தங்கள் இலக்கிய அமைப்புக்களில் பட்டிமன்ற நிகழ்ச்சிகளை அமைத்துக் கேட்டுச் சுவைத்து வருகின்றனர். சமுதாயத்தின் கடைநிலை மனிதனுக்கும் இலக்கிய அறிவை, உயர்ந்த சிந்தனைகளை எடுத்துச் செல்லும் சிறந்த கருவியாக, இன்று பட்டிமன்றம் விளங்கி வருகிறது.

### 1. பட்டிமன்றத் தோற்றமும் வளர்ச்சியும்

தொன்மைக் காலத்தில் சமயவாதிகள் தத்தம் சமயத்தின் சிறப்பை எடுத்து மொழிந்து நிலைநாட்டப் பட்டிமன்றத்தைக் கருவியாக்கினர் என அறிய வருகிறோம்,

''ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள்
பட்டிமண் டபத்துப் பாங்கறிந் தேறுமின்''
(மணிமேகலை 1:61)

என்ற அழைப்பு இவ்வுண்மையை உணர்த்தும். வாதிட விரும்பு வோர் மக்கள் கூடும் மன்றத்தின் ஒரு புறத்தில் அமர்ந்து தம்முன் நாவல் மரக்கிளை ஒன்றினை நட்டுக் காத்திருப்பர். அவருடன் வாதம் புரிந்து வெல்ல விரும்புவோர் மற்றொரு நாவற் கிளையை நட்டு நாவலோ நாவல் எனக் குரல் எழுப்புவர். அவ்வாறு நாவற் கிளையை நடுவது தம் நாவன்மையைக் காட்டத் தாம் தயார் என்ற பொருளை அக்காலத்தில் உணர்த்தியது. நீலகேசிக்கும் குண்டலகேசிக்கும் இத்தகைய முறையில் விவாதங்கள் நிகழ்ந்தன வாக நீலகேசி என்ற இலக்கியம் காட்டுகிறது. புத்தனின் குறைகளை எடுத்துக்கூறிச் சமணமே சிறந்தது என நிலைநாட்ட வாதாடுகிறாள் நீலகேசி. குண்டலகேசியோ மகாவீரரின் குறைகளைக் காட்டிப் பௌத்தத்தின் பெருமைகளை எடுத்துக் கூறுகிறாள். இறுதியில் இப்பட்டிமன்ற விவாதத்தில் நீலகேசியே வெற்றிபெற்றுக் குண்டலகேசி தன் தோல்விக்கு அடையாளமாகக் கூந்தலைக் களைந்து கொள்ளுகிறாள்.

சொற்போர் நிகழ்ச்சிகள் நடைபெற்று வந்தன என்பதற்குச் சிலப்பதிகாரம், மணிமேகலை, திருவாசகம், கலிங்கத்துப்பரணி போன்ற நூல்கள் சான்று காட்டுகின்றன.

சோழன் கரிகாலனால் தோற்கடிக்கப்பட்ட மகத நாட்டு மன்னன், சோழ நாட்டில் பட்டிமண்டபம் கட்டிக் கொடுத்ததாகச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.[1] வாதப்போர் புரியும் மேடை பட்டிமண்டபம் எனப்பட்டது. இம்மண்டபத்தில் நிகழும் நிகழ்ச்சியைப் பட்டிமன்றம் என்ற இக்காலச்சொல் குறிப்பிடு கிறது.

பட்டிமன்றத்தில் கலந்து கொள்வோருக்கு அவையஞ் சாத் திறன் வேண்டும். இது எல்லோருக்கும் எளிவந்த கலை அன்று. போர்க்களத்தில், பகைவரை எதிர்த்துப் போர்செய்து சாகும் வீரர்களை மிகுதியாகக் கண்டுவிடலாம். ஆனால் பல்லோர் அவையுள் துணிந்து நின்று சொற்போர் செய்பவர் சிலரே என்று திருக்குறள் இதன் அருமையைப் புலப்படுத்திக் கூறுகிறது.

மணிவாசகர் தம்மைஆட்கொண்ட இறைவனின் பெருமையை நன்றி கலந்த உணர்வோடு பாராட்டிப் பேசுகையில் அ, இ தெரியாத என்னைப் பட்டிமன்றங்களில் கலந்துகொள்ளும் மாவீரன் ஆக்கினையே என்கிறார்.

''பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை
எட்டி னோடிரண் டறியே னையே'' (திருச்சதகம். 59)

எனப் பாராட்டுகிறார்.

போரில்லாக் காலங்களில் குலோத்துங்க மன்னன் சேவற் சண்டை, யானைச் சண்டை ஆகிய ஆற்றல் போட்டிகளைக் கண்டு மகிழ்ந்ததுடன் புலவர்களின் சொற்போர் நிகழ்ச்சிகளையும் கண்டு மகிழ்ந்தான்.

' வருசெருவென் றின்மையினான் மற்போருஞ்
சொற்புலவர் வாதப் போரும்
இருசிறைவா ரணப்போரும் இகன்மதவா
ரணப் போரும் இனைய கண்டே'' (கலிங். 276)

என்ற கலிங்கத்துப்பரணி அடிகள் இதனை உணர்த்தும்.

சுவையான சொற்போர்ப் பகுதிகளை இலக்கியத்தின் ஓர் உறுப்பாக வழங்கும் போக்கு பதினைந்தாம் நூற்றாண்டிற்கு மேல் காணப்படுகிறது பள்ளு, குறவஞ்சி, கீர்த்தனை நாடகங்களில் அமைந்துள்ள ஏசல், தருக்கப் பகுதிகள் இவ்வகையைச் சார்ந்தவை.

இன்று எழுத்து வடிவில் நமக்குக் கிடைத்துள்ள இலக்கியங்களுள், பட்டிமன்றத்திற்கு முன்னோடியாகச் சுவை மிகுந்த தருக்கங்கள் அமைந்துள்ள இலக்கியம் பள்ளு என்பதாகும். பள்ளேசல் என அழைக்கப்படும் தருக்கப் பகுதி இல்லாத பள்ளு நூல்களே இல்லை. ஒவ்வொரு பள்ளு நூலிலும் மூத்தபள்ளி, இளையபள்ளி ஆகிய இருவரும் ஒருவரை யொருவர் சாடியும், ஒருவர் வழிபடு கடவுளை மற்றவர் தாக்கியும் பேசிப் பாடி ஆடுகின்றனர். இறுதியில் இருவரும் ஒன்றுபட்டு அமைதியடைவதாக நிகழ்ச்சி முடிகிறது.

முக்கூடற் பள்ளு நூலில் மூத்த பள்ளியாம் முக்கூடற்பள்ளி திருமாலின் பெருமையை உயர்வாக எடுத்துரைத்துச் சிவபிரானின் குறையைச் சாடுகிறாள். மருதூர்ப்பள்ளியோ சிவபெரு

மானின் பெருமையைப் பேசித் திருமாலை எள்ளி நகையாடு கிறாள் (பக். 153—165).

'சிவபிரான் நரியைப் பரியாகச் சாதித்தான். தம்முடைய பாகத்தில் பெண்ணை வைத்துக்கொண்டே, தன்னை யோகி என்று வேறு கூறிக்கொண்டான். அது மட்டுமா? மன்மதனைத் தன் சொந்த மருமகனென்று கூடப் பாராமல் கண்ணால் எரித்தான்; தானும் கண்ணேறு பட்டான்; பெண்ணொருத்திக்காக ஆசைப்பட்டுப் பொன்மயமான பனிமலை ஏறிப்போனான்; அவனே தான் பசுப்போல் நின்று கொண்டு தன் கன்றை மனு நீதிச் சோழன் தேர்க்காலில் விழச்செய்து, அம்மன்னன் தன் மகனைக் கொல்லும்படித் தூண்டியவன்; வலிய வழக்குப் பேசிச் சுந்தரன் வாயால் வசைமொழிகளைக் கேட்டு நின்றவன்; விறன்மிண்டன் என்னும் அடியவன் தன் மனக்கோயிலில் இடமில்லை என்று ஒதுக்க, வேறு வழியின்றித் தன் அடியானாகிய சுந்தரனுடன் வெளியே போனவன்; சுற்றிக்கட்ட நான்கு முழத் துணி கிடைக்காமல் புலித்தோலை உடுத்தவன்; நாட்டுக்குள் இரந்து சென்று உண்ட பிறகும் பசியாற்ற முடியாமல் நஞ்சையெல்லாம் வாரி வாரி உண்டவன்; ஏறிக்கொள்ள வாகனம் ஒன்றுமில்லாமல் மாட்டின் மீது ஏறித் திரிந்தவன். இவ்வாறு சிவபிரானின் செயல்களையெல்லாம் குறைகளாக்கி இகழ்ந்து கூறுகிறாள் மூத்தபள்ளி மூத்தபிள்ளை ஒவ்வொரு குறையாகக் கூற, உடனுக்குடன் இளையபள்ளி மறுத்துக் கூறி, அத்துடன் திருமாலின் செயல்களைக் குறைகளாகக் காட்ட முற்படுகிறாள்.

சிவபிரானோ நரியைத்தான் பரியாக்கியவன்; திருமாலோ கல்லையே பெண்ணாகச் சாதித்தவன்; நாச்சியாருடன் சேர்ந்திருந்த பின்னும் சிறிதும் வெட்கம் இல்லாமல் நெய்யில் கை விட்டவன்; சொந்த மாமனென்றும் பாராமல் கஞ்சனைக் கொன்று கண்களில் மாறாத பூ விழப் பெற்றவன்; காதல் கொண்ட சீதையென்ற பெண்ணுக்காகத் தம்பியொடு கடல் கடந்து போனவன்; தவவலிமையுடைய வாலியை மறைந்து நின்று கொன்று மாறாப் பழிக்கு ஆளாகியவன்; சபை நடுவே சிசுபாலன் புலிபோல நின்று வைய, ஏழைபோல ஒடுங்கி நின்று அத்தனை வசைகளையும் கேட்டுக் கொண்டிருந்தவன்; அவன் பெண்ணாம் கைகேயிக்கு அஞ்சி, முடிசூடாமல் காட்டில் போய்க் கிடந்தான். கற்றைச் சடைமுடி கட்டி மரவுரியும் சேலையும் கட்டிக் கொண்டான். மாட்டுப் பிறகே திரிந்து அலைந்தான்; சோற்றுக்

கில்லாமல் மண்ணை எடுத்து உண்டான்; சிவனுக்காவது மாட்டு வாகனம் இருந்தது. ஏற ஒரு வாகனமும் கிடைக்காமல் பறவை மீது ஏறித் திரிந்தான் என்று திருமாலைச் சாடுகிறாள் இளைய பள்ளி.

இவ்வுரையாடல், ஒருவர் ஒரு கருத்தைச்சொல்ல அதனை உடனே மற்றவர் மறுக்க என்றவாறு அமைந்துள்ளதால், அக்காலத்து மேடைகளில் காண்பவர்க்கும் கேட்பவர்க்கும் சுவையூட்டும் நிகழ்ச்சியாக அமைந்திருக்க வேண்டும் பட்டிமன்ற உறுப்பினர் தம் அணிக்காக வாதிடும்போது கருத்துக்களைத் தொகுத்துச் சொல்வதுபோல் இப்பகுதி அமைந்திருக்கவில்லை. வழக்காடு மன்றங்களில் இருவர் நின்று வாதிடுவதுபோல், இத் தருக்கப் பகுதி அமைந்துள்ளது. இறுதியில் பள்ளியர் இருவரும் கருத்தால் ஒருமித்து இரண்டு தெய்வங்களையும் வாழ்த்தி முடிக் கின்றனர் எனினும் தொடக்கத்தில் ஒருவரையொருவர் கடுமை யாக ஏசிப் பேசிச் சாடுவதால் இது பள்ளேசல் எனப்படுகிறது. எல்லாப் பள்ளு நாடகங்களிலும் பள்ளேசல் இன்றியமையாப் பகுதியாக அமைந்துள்ளது.

திருவாரூர்ப் பள்ளு நாடகத்தில் தியாகேசப்பெருமானை வழிபடக் கூடிய வன்மீகப் பள்ளியும், சீரங்கநாதனை வழிபடக் கூடிய சீரங்கப் பள்ளியும் கருத்துமோதலில் ஈடுபடுகின்றனர்.

**செண்பகராமன் பள்ளு நாடகத்தில்** நாஞ்சில் நாட்டுப் பள்ளி செண்பகராமனின் பெருமையை உயர்த்திப்பாட, பாண்டி நாட்டுப்பள்ளி குமரியைச் சார்ந்த வஸ்திஞாயம் என்பவரின் புகழே பெரிது என வாதாடுகிறாள்.

**திருமலை முருகன் பள்ளு நாடகத்தில்** திருமலைப்பள்ளி என்னும் மூத்தபள்ளி திருமலை முருகனின் சிறப்பே உயர்ந் தது என வாதாடக் குற்றாலப்பள்ளி என்னும் இளையபள்ளி சிவபிரானின் சிறப்பே பெரிது என வாதாடுகிறாள். அவள் முருகனைப் பற்றிக் குறிப்பிட்டு முருகன் தன் அண்ணாவியையே (பிரம்மன்) தலையில் குட்டியவன் என்று இகழ்ந்து பேச, மூத்த பள்ளி சிவபிரான் தன்மாமன் தலையையே அறுத்தவன் என்று குறை கூறுகிறாள். குமரன் மயிலைக் கள்ளத்தனமாகப் பிடித் தவன் என்று இளையபள்ளி இகழ்ந்து பேச சிவபிரான் ஆட்டை யெடுத்து அடிபட்டவன் என்று நகையாடுகிறாள் மூத்தபள்ளி. முருகக்கடவுள், சிவபிரான் ஆகிய இருவரின் திருவிளையாடல் களுமே பள்ளியரின் வாதப்பொருளாகின்றன.

**வையாபுரிப்பள்ளு நாடகத்தில்** வையாபுரிப் பள்ளி, பழநிப்பள்ளி ஆகிய இருவரும் மோதுகின்றனர். இவர்களுடைய பட்டிமன்றம் சைவம் பெரிதா வைணவம் பெரிதா என்பதுபற்றி அமைந்து இறுதியில் இரண்டுமே சிறப்புடையன என்ற சமரசப் போக்கில் முடிவடைகிறது.

பள்ளு நாடகங்களில் பள்ளேசற்பகுதி மக்களைப் பெரிதும் கவர்ந்ததன் காரணமாக 'ஏசல்' என்ற ஒரு தனிவகைப் பட்டிமன்ற இலக்கியமே பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றியது. தாய்மகள் ஏசல், கார்மாலை வசந்தமாலை ஏசல் தனலெட்சுமிக்கும் தைரியலெட்சுமிக்கும் தருக்கம் (1876) மகாலெட்சுமிக்கும் பார்வதிக்கும் வாக்குவாதம் (1876) அரங்க நாயகிக்கும் நாச்சியாருக்கும் சம்வாதம் (1875) மட்டையடி ஏசல், கல்யாண ஏசல் (1877, 879) போன்றவை இவ்வாறு எழுந்தவை. இந்நூல் முழுவதும் தருக்க அமைப்பிலேயே காணப்படுகிறது. சரசுவதிக்கும் லெட்சுமிக்கும் வாக்குவாதம் என்ற நூலில் மனித வாழ்விற்குப் பெரிதும் இன்றியமையாதது எது? கல்வியா? செல்வமா? என்ற பொருள்பற்றி வாதம் சுவையாக அமைகிறது. சரசுவதி கல்வியே பெரிது என வாதாட லெட்சுமியோ செல்வமே உயர்ந்தது என வாதாடுகிறாள். இறுதியில் (இன்றைய பட்டிமன்றங்களின் தீர்ப்புப் போலன்றி) இரண்டுமே சிறந்தன; வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படுவன என்ற முடிவு கூறப்பெறுகிறது.

குறவஞ்சி நாடகங்களில் குறவன் குறத்தி உரையாடல் பட்டிமன்ற அமைப்பில் இல்லாவிடினும், வினாவும் விடையுமாக அமைந்த உரையாடற்பாங்கில் இருப்பதால் அப்பகுதி சுவை மிக்கதாக உள்ளது.

குற்றாலக் குறவஞ்சியில்,

''காலுக்கு மேலே பெரிய விரியன்
கடித்துக் கிடப்பானேன் சிங்கி
சேலத்து நாட்டில் குறிசொல்லிப் பெற்ற
சிலம்பு கிடக்குதடா சிங்கா'' (ப. 173)

என்றவாறு அமைந்துள்ள எதிர்த்துரையாடல்களைக் குறவஞ்சி நாடகங்களில் காணலாம்.

**இராமநாடகக் கீர்த்தனை, நந்தனார் சரித்திரக் கீர்த்தனை** போன்ற கீர்த்தனை நாடகங்களிலும் பட்டிமன்ற அமைப்புடைய தருக்கப் பாடல்கள் காணப்படுகின்றன,

இராமநாடகக் கீர்த்தனையில் ஸ்ரீராமருக்கும் பரசுராமருக்கும் சம்வாதம் (ப. 35), கைகேசிக்கும் சக்கரவர்த்திக்கும் சம்வாதம் (ப. 48) ஸ்ரீராமருக்கும் சூர்ப்பனகைக்கும் சம்வாதம் (ப. 96), சீதைக்கும் இராவண சந்நியாசிக்கும் சம்வாதம் போன்ற தருக்கப் பகுதிகள் அமைந்துள்ளன.

நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் இரு சொல்லலங்காரம், இருசொல்லலங்கார வாக்குவாதம், இருவர் வினாவிடை அலங்காரம் என்ற அமைப்பிலுள்ள பாடல்கள் இவ்வகையைச் சார்ந்தவை. மாளாப் பிறவி போக்கிய பிள்ளையார் வந்தார் (ப. 2 ), தில்லையம்பலமென்று சொல்லச் சொன்னால் (ப. 26), சிவமே தெய்வம் சிதம்பரமே கைலாசம் (ப. 27), எல்லைபிடாரியே எதிராக வந்தெமது (ப. 39), புண்ணாகிய விந்தப் பிறவிப்பிணிக்கு மருந்து (ப. 45) என்று தொடங்கும் பாடல்கள் இவ்வகையைச் சார்ந்தவை.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தெருக்கூத்துக்களாக மலர்ந்த தமிழ் நாடகங்களில் தருக்கப்பாடல்கள் மிகச் சிறந்த இடத்தைப் பெற்றன. ஒவ்வொரு நாளும் பல மணி நேரங்கள் தருக்கங்களுக்கென்றே ஒதுக்கப்பட்டன.

பதினான்கு காட்சிகளையுடைய நல்லதங்காள் நாடகத்தில் மட்டும் பத்துத் தருக்கப்பாடல்கள் காணப்படுகின்றன. நல்லதங்காள் காசிபராசன் தருக்கப்பாட்டு காசிபராசன் நல்லதங்காள் தர்க்கப்பாட்டு, வேடன் நல்லதங்காள் தர்க்கம், நல்லண்ணன் நல்லதங்காள் தர்க்கம், நல்லதங்காள் அலங்காரி தர்க்கப்பாட்டு, மீண்டும் நல்லதங்காள் அலங்காரி தர்க்கப்பாடல்கள் மூன்று, நல்லண்ணன் அலங்காரி தர்க்கப்பாடல்கள் இரண்டு ஆகப் பத்துத் தர்க்கப்பாடல்கள் ஒருவர் கருத்தை மற்றவர் மறுத்து மொழிவதாகக் காணப்படுகின்றன.

ஏழு மக்களையும் அழைத்துக்கொண்டு தன் அண்ணன் வீட்டிற்குச் செல்ல, நல்லதங்காள் காசிபராசனிடம் கேட்கிறாள். காசிபனோ அவன் வேண்டுகோளை மறுத்ததுடன் 'பூவையே நாம் புல்லறுத்து விற்றாகிலும் பிழைப்போம் என்கிறான்.' பூமுடித்த கூந்தலிலே புல்லெடுக்க என் விதியா என மறுக்கிறாள் நல்ல தங்கள். "விறகு வெட்டி நாம் சுமந்து விற்றாகிலும்பிழைப்போம்" என்று காசிபன் கூற "வெட்டிவேர் முடிக்கும் கூந்தலிலே விறகெடுக்க என் விதியோ" என்கிறாள் நல்லதங்காள். இவ்வாறு

தர்க்கம் நீண்டு செல்லுகிற பகுதிகள் பல இந்நாடகத்தில் காணப் படுகின்றன.

சுபத்திரை மாலையிடு நாடகத்தில் சுபத்திரைக்கும் அர்ச்சுனனுக்கும் தர்க்கம் (பக். 4?-51) மிக நீண்டதாகக் காணப்படு கிறது. ஒருவரையொருவர் தாக்கியும் ஒருவர் கருத்தை மற்றவர் மறுத்தும் பேசுகின்ற பகுதி இது.

தெருக்கூத்துக்கள் பெரும்பாலானவற்றில் தர்க்கங்கள் பாடல்கள் வடிவிலேயே அமைந்துள்ளன. அண்மைக்காலத்தில் தெருக்கூத்துக்களில் பாடல்களும் அவற்றிற்கு விளக்கமாக அமைந்த உரைநடைப் பகுதியுமாக தருக்கங்கள் அமைந்துள்ளன.

பாடல் வடிவில் இருந்த தருக்கப் பகுதிகளுக்கு முதன் முதலில் நீண்ட உரைநடை வடிவு தந்தவர் சங்கரதாச சுவாமிகள். இப்பகுதிகள் அக்காலத்தில் தமிழ் வசனம் என்று அழைக்கப் பட்டது. சுலோசனா சதி நாடகத்தில் முதல் காட்சியில் இந்திர சித்திற்கும் சுலோசனைக்கும் நீண்ட தர்க்கம் காணப்படுகின்றது. தமிழர் களவு மணம் ஏற்புடையதா என்ற ஆராய்ச்சியில் இருவரும் ஈடுபடுகின்றனர். இந்திரசித்து களவு மணத்தின் சிறப்புக் குறித்துப் பேசச் சுலோசனை பெண்களுக்கு அது எவ்வாறு பொருந்துமென வாதாட நீண்ட சொற்பொழிவுகளுடன் கூடிய பட்டிமன்றமாக இப்பகுதி அமைந்துள்ளது.

பாரதியார் 'தராசு' என்ற கட்டுரைப் பகுதியில் பட்டி மன்ற அமைப்பில் கருத்தினை ஆராய்கிறார். ''தராசு என்பது தர்க்க சித்தாந்தம். ஒரு கக்ஷி சொல்லி, அதற்குப் பிரதி கக்ஷி சொல்லி அங்கு தீர்ப்புக் காண்பதே தராசின் நோக்கம்'' என விளக்குகிறார் (ப. 61)

இப்பகுதியில் ''பலவித நியாயங்கள் காட்டி வேணு முதலியார் தமது நூலில் 'மனிதனுக்குப் பாஷையே மிகை' என்று ஸ்தாபிதம் செய்திருக்கிறார். வேணு முதலியார் இராமராயர் இருவருக்கு மிடையே அனிபெஸன்ட் அம்மையார் தியாஸபி நடத்தின தெல்லாம் ஸ்வராஜ்ய வேலைக்கு அடிப்படையா? என்ற விவாதம் நடக்கிறது. இறுதியாகக் காளிதாசர் (பாரதி) தங்கள் தீர்ப்பைச் சொல்கிறார். தம் தீர்ப்பிற்கு அடிப்படையாக 'நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல தன்றே மறப்பது நன்று', எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு',

'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார் தோன்றலிற் தோன்றாமை நன்று', 'வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம் ஈண்டு முயலப்படும்' (265) என்ற நான்கு குறட்பாக்களையும் கூறி விளக்கம் தருகிறார். 'அனிபெஸன்டின் ராஜாங்கக் கொள்கையை நாம் நிர்ணயிக்க இடமில்லாவிடினும் அவள் சரியான ஹிந்து ஆதலால் நம்முடைய சகோதரி என்று ஒப்புக்கொள்ளுகிறோம்... ஹிந்துக்கள் அனிபெஸன்டுக்கு நன்றி கூறவேண்டும்... தமக்குத் தாமே உதவி செய்து கொள்ளவேண்டும்'' (பக் 514-515) என்று முடிக்கிறார்.

எழுத்து வடிவிலமைந்த இத்தகைய பட்டிமன்றங்களன்றி, நாட்டுப்புறங்களில் லாவணி என்ற ஒரு வகைத் தருக்கப்பாடல் நிகழ்ச்சி இன்றுவரை செல்வாக்குப் பெற்றிருக்கக் காணலாம். காமன் பண்டிகையின்போது மன்மதன் எரிந்து விட்டானா இல்லையா என்ற விவாதம் பாடலாக அமையும். சிவபிரானின் சிறப்பைப் பாடி மன்மதனை எரித்தது பொருத்தமான செயலே என்று வாதிடுவர் 'எரிந்த கட்சி' பாடுவோர். 'மன்மதனை எரிக்க முயன்றது தவறு; அவன் எரியவுமில்லை' என்று வாதிடுவர் எரியாக் கட்சியினர். சான்றாகப் பின்வரும் பாடல் அமைந்துள்ளது.

செஞ்சேவல் வால்படத்தை விரித்து நீட்டி
தினமும் வருமத கரியான் சேனை ஒட்டி
திங்கள் மண்டலம் பரவக் கொடியை ஏற்றி
திசை மூவேழு உலகும் அடித்துக் காட்டி
ஐந்து மலர்க்கணை மாரன் தேவனென்றே
அவனன்றி ஓரணுவும் அசையா தென்றே
ஆசை துள்ள லூற்று போகம் தந்து
அறம் பொருள் இன்பம் எல்லாம் தந்து
மோட்ச வீட்டைப் பஞ்ச பாணனன்றிக்
கொடுப்பதற்குப் பரமாலே ஆகாது ஆகாதப்பா.

பாடுகின்ற துதி யுக்தி அனுபோகத்தின்
பயனறிய வித்தகரே பகரக் கேளும்
சொர்சொல் முடிவா யிலங்கும் மதனே தெய்வம்
சிவன் அரன்மால் மூவருக்கும் இவனே ஆதி
தெரிஞ்சுதா வேதாந்த சார மய்யா
தேசிகனாம் ராமசுவாமி ஜெயம் சொல் வாக்கே.

ஜெகம் கேளும் அகிலப்ரதாப வீர, ஜெகப்ப்ராபல்யகம்பீர
ஆடம்பரமாக வந்த அண்ணா அண்ணா — ஆதி

அங்கதத் தேவனைத் தாங்கள் லிங்கமாகச் செய்யும்
அந்தரங்கம் சொல்லி வெல்லும் மன்னா மன்னா

மகாதேவனான சிவன்முகக்கண் திறக்க அல்லோ
வந்தித் தானான சாது தாவித் தாவி
மண்டல மெல்லாம் நெருக்கப் பண்டு மன்மதன் மட்டும்
மடிந்ததாய்ச் சொல்லிவிட்டீர் கூவிக் கூவி
ஜெகஜாலப் புரட்டந்த மதனைக்கொன்ற நெருப்பு
சிவன் நெற்றி யிலிருக்கத் தானே தானே யுங்கள்
சிவன்நெற்றி எரியாமல் மதன்மட்டும் எரிந்ததாய்ச்
செப்பிடத் துணிந்தாய் கவிராயா ராயா.

கேளும் அகல மன்மதன் உடல்எரியக்
கண்டதார் சொல்லண்ணா நியாய முறையே
மிழ்அகலக் கடல்குடித்த மகிமப்ரதாப வீர
ஆடம்பரமாக வந்த அண்ணா அண்ணா ஆதி
அங்கதத் தேவனைத் தாங்கள் லிங்கமாக எழுப்பும்
அந்தரங்கம் சொல்லி வெல்லும் மன்னா மன்னா...

(19-8-81 இல் திருச்சி வானொலி
ஒலிபரப்பிய லாவணியின் ஒரு பகுதி)

இவ்வாறெல்லாம் வளர்ந்து வந்துள்ள பட்டிமன்றம் இந் நூற்றாண்டு ஐம்பது அறுபதாவது ஆண்டுகளில் தமிழ்நாட்டில் பெரும் செல்வாக்குப்பெறத் தொடங்கியது. எளிய மொழி நடையில் நாட்டுமக்களுக்கு இலக்கியங்களை அறிமுகம் செய்யப் பட்டிமன்றம் பயன்பட்டு வருகிறது.

காரைக்குடி, கம்பன் கழகம், ஆண்டு விழாக்களின்போது முதன்முதலில் இராமாயணத்தில் பட்டிமன்றங்களை நடத்தும் பெருமை கொண்டது.

தென்காசி திருவள்ளுவர் மன்றம், காரைக்குடி திருவள்ளுவர் மன்றம், இராசபாளையம் மணிமேகலை மன்றம் போன்ற இலக்கிய அமைப்புக்கள் ஆண்டு தோறும் தவறாது பட்டிமன்றங்கள் நடத்தி வந்துள்ளன. இவ்வழக்கத்தினைப் பின்பற்றிக் கடந்த இருபத் தைந்து ஆண்டுகளாக நாட்டின் பல்வேறு இலக்கிய அமைப்புக் களும் பட்டிமன்றங்கள் நடாத்தி வருகின்றன. கோவில்களில் பங்குனிப்பொங்கல், சிவராத்திரி ராமநவமி போன்ற திருவிழாக் காலங்களில் சமயச் சொற்பொழிவுகள், இசைநாடக நிகழ்ச்சிகள்

மட்டுமே இடம்பெற்றிருந்த மரபை மாற்றிப் பட்டிமன்றங்களையும் நடத்தி வருகின்றனர்.

அரசியல் கட்சிகள் தங்கள் தலைவர்களின் புகழைப்பரப்ப, தங்கள் சாதனைகளை விளக்கப் பட்டிமன்ற மேடைகள் அமைத்து வருகின்றன.

செட்டிநாட்டுப் பகுதியில் மணவிழா, அறுபதாம் ஆண்டு நிறைவு விழா, காதணி விழா போன்ற தனிப்பட்டோரின் சமூக விழாக்களில் மங்கல வாழ்த்தாக, மகிழ்ச்சியாகப் பொழுதுபோக்க உதவும் நிகழ்ச்சியாகப் பட்டிமன்றங்கள் பயன்பட்டு வருகின்றன.

தமிழக அரசு தன் சாதனைகளை மக்களுக்கு எடுத்துரைக்கவும், குடும்பநலத்திட்டம், சிறுசேமிப்பு, பொருளியல் வளர்ச்சி போன்ற குறிப்பிட்ட சில திட்டங்களை மக்களிடையே பரப்பவும் பட்டிமன்றங்களைப் பயன்படுத்துகிறது.

**பட்டிமன்றப் பொருள்** பெரும்பாலும் **கம்பராமாயணம் சிலப்பதிகாரம், பாரதம், பெரியபுராணம், கந்தபுராணம்** போன்ற காப்பிய இலக்கியங்களே பெரும்பாலான பட்டிமன்றங்களுக்குத் தலைப்புக்கள் வழங்கும் களஞ்சியங்களாக உள்ளன. கதை நிகழ்ச்சிகளின்றிக் கருத்துக்கள் மேலோங்கி நிற்கும் பட்டிமன்றங்களே **திருக்குறள், பாரதி, பாரதிதாசன் கவிதைகள்** ஆகியவற்றிலிருந்து அமையக்கூடும். ஆதலால் நாட்டுப்புறங்களில் பெரும்பாலும், இத்தகைய இலக்கியங்கள் பட்டிமன்றப் பொருளாவதில்லை. சங்க இலக்கியங்களில் பட்டிமன்றங்கள் மிக அருகியே காணப்படுகின்றன. பல்வேறு கிளைக்கதைகளையும், பாத்திரங்களையும் கொண்ட நூல் **கம்பராமாயணம்** ஆதலால் இராமாயணமே பட்டிமன்றத்திற்காக மக்கள் பெரிதும் நாடும் இலக்கியமாகக் காணப்படுகிறது. காப்பிய நோக்கங்களை ஆராய்வதாக, பாத்திரங்களின் ஒப்பியல் திறனாய்வாகப்பட்டிமன்றப் பொருள்கள் அமைகின்றன.

**காப்பியநோக்கம்** ஒவ்வொரு இலக்கியமும் சில உண்மைகளை வலியுறுத்துவதை நோக்கமாகக் கொண்டுள்ளது. அவ்வுண்மைகள் யாவை? அவ்வுண்மைகளுள் மிகுதியும் வலியுறுத்தப் பெறுவது எது என்பவற்றை ஆராயப் பட்டிமன்றங்கள் அமையும்.

**சிலப்பதிகாரத்தில்** மிகுதியும் வலியுறுத்தப் பெறுவது எது?— ஊழ் வினையா? அரசியலா? கற்பியலா?

**இராமாயணத்தில்** ஏற்றம் பெறுவது எது? கற்பா? வீரமா?

பாரதியின் பாடல்களில் விஞ்சி நிற்பது எது? மொழிப்பற்றா நாட்டுப்பற்றா?

இவைபோன்ற தலைப்புக்கள் இலக்கியம் முழுவதையும் சீர்தூக்கி ஆராய்ந்து சிந்திக்க வைக்கின்றன. இதனால் மக்கள் இலக்கியங்களை முழுமையாக அறிந்து சுவைக்க முடிகிறது.

இத்தகைய பொது ஆய்விலும் திருக்குறள் மிகக் குறைந்த அளவே இதுவரை இடம்பெற்றுவந்துள்ளது எனலாம். திருவள்ளுவரால் பெரிதும் வலியுறுத்தப்பெறுவது எது? அறமா? பொருளா? இன்பமா? போன்ற தலைப்பில் நிகழும் பட்டிமன்றங் களைக் கற்றோர் அவையே உணர்ந்து சுவைக்க இயலும். ஆகவே கல்லூரிகள், திருவள்ளுவர் மன்றங்கள் போன்ற இலக்கியப் பேரவைகளில் இத்தகைய தலைப்புக்களில் பட்டிமன்றங்கள் நடைபெற்று வருகின்றன.

சங்க இலக்கியங்களும் பட்டிமன்றங்களில் பெருமளவு இடம் பெறவில்லை. தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் இயங்கிவரும் திருப்புத்தூர்த் தமிழ்ச்சங்கம், பிரான்மலை பாரிவிழாக்குழு ஆகியவற்றில் சங்க இலக்கியங்களில் பட்டிமன்றங் கள் நடைபெற்று வருகின்றன. சங்க இலக்கியத்தில் பெரிதும் இடம் பெறுவது காதலா? வீரமா? என்றும் சங்க இலககியங்களில் நம்மைப் பெரிதும் ஈர்ப்பது கற்பனைச் சிறப்பா? கருத்து வளமா? என்பன போன்றும் ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன.

ஆயினும் பொதுவாகக் கதைப்பகுதியை விளக்குவனவாக அமைந்த தலைப்புக்களையே மக்கள் பெரிதும் விரும்புகின்றனர். சிந்தனைக்குச் சுமையாக அமையாது எளிதில் சுவைக்குமாறு அமைவன காப்பியத்தலைப்புக்களே. செறிவான செய்திகளைத் தரும் திருக்குறளில் கூடத் 'திருவள்ளுவர் பெரிதும் வலியுறுத்துவது ஆள்வினையையா? ஊழின் வலியையா? என்பது போன்ற குறுகிய எல்லைத் தலைப்புக்களே இடம் பெறுகின்றன.

**பண்புத்திறனாய்வு :** காப்பியங்களிலும் காப்பிய மாந்தர் களின் பண்புத்திறனாய்வே பட்டிமன்றங்களில் பெரிதும் இடம்பெற்று வருகிறது. தம்பியருள் சிறந்தவன் இலக்குவனா? இந்திரசித்தா? தொண்டிற் சிறந்தவன் அனுமனா? இலக்குவனா? என்பன போன்று பட்டிமன்றப் பொருள் அமையும். இத்தகைய தலைப்புக்களில், பாத்திரங்களின் பண்பு விளக்கம், கதை

நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு உலகியலோடு ஒப்பு நோக்கப் பெறுவதால் மக்கள் சுவைக்கப் பெரிதும் ஏதுவாகிறது.

**ஒப்பியல் திறனாய்வு :** காப்பிய மாந்தர்கள் பண்புத் திறனாய்வு, ஒப்பீட்டுத்திறனாய்வாக அமைவதும் உண்டு. வேற்று இலக்கியங்களின் பாத்திரங்களின் பண்பு நலன்களோடு ஒப்பிட்டு முடிவு காண்பதாகப் பட்டிமன்றம் அமைவதும் உண்டு.

*தம்பியருள் சிறந்தவன் கர்ணனா கும்பகர்ணனா?*
*தூதருள் சிறந்தவன் அனுமனா வீரவாகுவா?*

சோதனையில் வென்று சிறந்தவள் சீதையா பாஞ்சாலியா? என்பன போன்று ஒரு காப்பியமாந்தரை மற்றொரு காப்பிய மாந்தருடன் ஒப்பிட்டுத் திறனாய்வு செய்து முடிவு காண்பதுண்டு. இவ்வகைப் பட்டிமன்றங்களால் இரண்டு காப்பியங்களைப் பற்றிய செய்திகளும் மக்களுக்கு அறிமுகமாகின்றன.

காப்பிய மாந்தர்களை ஒப்பிடுவதுடன் நில்லாது காப்பியம் முழுவதையும் மற்றொரு காப்பியத்துடன் ஒப்பிடுவதும் உண்டு. பெண்மையின் உயர்வைப் பெரிதும் வலியுறுத்துவது சிலப்பதி காரமா? இராமாயணமா? என்பதுபோன்று இவ்வகைப் பட்டி மன்றப் பொருள் அமையும்.

ஒரு இலக்கிய ஆசிரியன் படைத்துள்ள பல்வேறு படைப்புக் களுள் ஒன்றன் சிறப்பை மற்றொன்றனுடன் ஒப்பிட்டு ஆராய்ந்து அறிய முயலுவதும் உண்டு. அண்ணாவின்படைப்புக்கள் மக்களைப் பெரிதும் கவர்வது 'பார்வதி பி.ஏ.யா? இரங்கோன்ராதாவா?'' 'பாரதியின் பாடல்களுள் மிகுதியும் நிலைபேறுடையன தேசீயப் பாடல்களா? தெய்வீகப் பாடல்களா?' என்பன போன்று ஆய்வு அமையும். இத்தகைய ஆய்வுடைப் பட்டிமன்றங்கள் மக்களுக்கு இரண்டு இலக்கியங்களின் நயமான பகுதிகள் அனைத்தையும் விரித்துரைத்து அவற்றுள் விஞ்சிய சிறப்புடையன யாவை என முடிவு காண்பனவாக அமையும்.

**சமயம் :** சமயச் சிந்தனைகளைத் தூண்டுகின்ற தலைப்புக் களும் பட்டிமன்றங்களில் விவாதிக்கப்பட்டு வருகின்றன. 'அருள் வழங்குவதில் முன் நிற்பவர் அம்மையா? அப்பனா?', 'மிகுதியும் சிறப்பிற்குரியவர் ஆண்டவனா? அடியவனா?' என்பன போன்ற வினாக்களை எழுப்பி விடைகாண முயலும் பட்டிமன்றங்கள் ஆலய விழாக்களில் அடிக்கடி இடம்பெற்று வருகின்றன. இவ்வகை ஆய்வுகளில் **பெரியபுராணம், கந்த**

**புராணம், திருவிளையாடற் புராணம்** போன்ற புராண இலக்கியச் செய்திகளும், தேவார திருவாசகம் போன்ற சமய இலக்கியச் செய்திகளும் சான்றுகளாகக் கையாளப் பெறுகின்றன. மக்களிடையே சமய நம்பிக்கையையும் கடவுட்பற்றையும் வளர்ப்பதையே நோக்கமாகக் கொண்டு இப்பட்டிமன்றங்கள் அமைக்கப்பெறுவதால், இறைவனின் அருட்செயல்களே பெரிதும் வலியுறுத்தப் பெறும்.

**சமூகச் சிந்தனை** மக்களிடையே சமுதாய விழிப்புணர்வை ஊட்டும் நோக்குடன், சமுதாயச்சீர்கேடுகளை எடுத்துக்காட்டவும் அச்சீர்கேடுகளைப்போக்கும் வழிகளை எடுத்துரைக்கவும் பல பட்டிமன்றங்கள் அமைக்கப்பெற்று வருகின்றன. இப்பட்டிமன்றங்களில் நாட்டின் நலிவுக்குப் பெரிதும் காரணம் பொருளின்மையா பொது நலவுணர்வின்மையா? நாடுஎங்குசெல்லுகிறது? திட்டமிட்டபாதையிலா? திசைதடுமாறியா? போன்ற தலைப்புக்கள் ஆராயப்படுகின்றன. மாபெரும் சிந்தனைப் பட்டிமன்றங்கள் என்ற பெயரில் மக்களிடையே செல்வாக்குப் பெற்றுவரும் இத்தகைய மட்டிமன்றங்களில் கலந்துகொள்வோர் அன்றாட அரசியல், சமுதாய நெருக்கடிகள், வரதட்சணைக் கொடுமை, தீண்டாமை, சாதிவெறி, குடியின் கொடுமை, லஞ்சஊழல் போன்ற சமூகக் கேடுகளைத் துணிவுடன் எடுத்துக் காட்டி அவற்றை நீக்கும் வழிவகைகளையும் வலியுறுத்தி வருகின்றனர்.

**அரசியல் சிந்தனை** அரசியல் கட்சியினர் தம்முடைய கட்சிக் கொள்கைகளையும், சாதனைகளையும் விளக்கப் பட்டிமன்றங்களைப் பயன்படுத்துகின்றனர். இத்தகைய பட்டிமன்றங்களில் பெரும்பாலும் அரசியல்வாதிகளே கலந்துகொள்ளுகின்றனர். இலக்கியவாதிகள் கலந்து கொள்ளும் மேடைகளில் நாட்டுத் தலைவர்களின் வாழ்க்கை ஆய்வுப்பொருளாக அமைகிறது. 'பேரறிஞர் அண்ணாவின் பணிகளில் விஞ்சிய பெருமை சேர்த்தது அவரது அரசியல் பணியா? இலக்கியப் பணியா?;' 'பெருந்தலைவர் காமராசரின் புகழுக்குப் பெரிதும் காரணம் அவரது தொண்டா? தியாகமா?' எறை தலைப்புக்கள் இவ்வாறு அமைந்தவை.

திராவிட கழகத்தவர் மக்களிடையே வளர்ந்துள்ள மூட நம்பிக்கைகளையும், சமய புராண நம்பிக்கைகளையும் தகர்க்கும் நோக்குடன் பட்டிமன்றங்களை நிகழ்த்தி வருகின்றனர். வயது வந்தோருக்கு மட்டும் என்ற கேலி அறிவிப்புடன் 'ஏ' பட்டி

மன்றங்கள் அமைத்துக் 'காமத்தில் விஞ்சியவர் சிவனா? திருமாலா? என்பது போன்ற தலைப்புக்களில் உரை நிகழ்த்தி வருகின்றனர்.

**நடைமுறை வாழ்க்கைச்சிந்தனை :** மக்கள் தங்களைத் தாங்களே திறனாய்வு செய்து கொள்ளும் போக்கில் சில பட்டி மன்றங்கள் அமைவதுண்டு. இவை அன்றாட வாழ்வின் குறை நிறைகளைச் சீர்தூக்கிப் பார்க்கும் போக்கில் அமையும். 'குடும்ப வாழ்வின் சிறப்புக்குப் பெரிதும் காரணமாக அமைபவர் தாயா? தந்தையா?', 'கணவனா? மனைவியா?'; குடும்பச் சிக்கல்களுக்குப் பெரிதும் காரணமாக அமைபவர் மாமியாரா? மருமகளா?' போன்ற தலைப்புக்கள் இவ்வாறு அமைந்தவை. அவையோர் தம் குறைகளைத் தாமே கேட்டுச் சிரித்து மகிழும் போக்கில் எளிய பொழுதுபோக்கு நிகழ்ச்சியாக இத்தகைய பட்டிமன்றங்கள் அமையும்.

**பிரச்சாரம் :** அரசும், அரசு சார்ந்த துறைகளும் தம் திட்டங்களை மக்களிடையே பெருமளவில் பரப்பப் பட்டி மன்றத்தை நாடுவதும் உண்டு. குடும்ப நலத்துறை ஆண்டாண்டு தோறும் 'பிள்ளை பெருகினால் தொல்லையா இல்லையா?'' 'வளமான வாழ்விற்கு ஏற்ற குழந்தைகளின் எண்ணிக்கைஇரண்டா மூன்றா?' என்பன போன்ற தலைப்புக்களில் பட்டிமன்றம் நடாத்தி வருகிறது.

**பொழுதுபோக்கு :** விழாக்காலங்களில் மகிழ்ச்சியாகப் பொழுது போக்கும் நோக்குடன் பட்டிமன்றங்களை அமைப்பதும் உண்டு. குழந்தைகளின் காதணி விழாவின்போது 'நம்மைப் பெரிதும் ஈர்ப்பன கண்ணனின் இளமைப் பருவச் செயல்களா? முருகனின் இளமைப்பருவச் செயல்களா!'' 'நம்மைப் பெரிதும் கவருவது எது? கிருஷ்ணாவதாரமா இராமாவதாரமா!' என்ற தலைப்புகளும், மணவிழாவின்போது 'குடும்பத்தின் பெருமைக்குப் பெரிதும் காரணமானவர் கணவனா மனைவியா? என்பது போன்ற தலைப்புகளும் இடம்பெறும். பாகவதக் கதைகள், வாய்மொழிக் கதைகள் நகைசுச்வைத் துணுக்குகள் இத்தகைய பட்டிமன்றங் களில் பெரிதும் இடம்பெறும்.

**பட்டிமன்றப் பயன்கள்**

பட்டிமன்றம் நாட்டுமக்களுக்குச் சுவைமிகுந்த பயனுடைய பொழுதுபோக்காக அமைகின்றது. போராட்டங்கள், மோதல்கள்

ஆகியவற்றைக் காண்பதில் மனிதனுக்கு இயல்பாகவே ஆர்வம் உண்டு கீரியும் பாம்பும் சண்டையிடுதல், சேவற்சண்டை யானைப்போர் போன்றவற்றைப் பண்டைக் காலந்தொட்டே தமிழ்மக்கள் கண்டுகளித்து வந்துள்ளனர். ஆனால் இச்சண்டை களில் குருதி சிந்தக் கோர முடிவுகளும் ஏற்படுவதால் காண்போரின் மனஅமைதி கெடுவதும் உண்டு. ஆனால் பட்டிமன்றங்களில், கத்திக் கொண்டு சண்டையிடும் போர்க்களங்களைப் போலன்றிக் கத்தி கொண்டு சண்டையிடும் சொற்போர் வீரர்களால் கருத்துக்கள் தாம் உதிர்வதுண்டு. இவை மக்களின் அறிவுப் பசியைத் தணிக்க உதவுகின்றன. கருத்துக்களுடன் சேர்ந்து அவ்வப்போது வெளிப் படும் நகைச்சுவைத் துணுக்குகள் மக்களுக்கு மகிழ்வூட்டவும் செய் கின்றன.

நாட்டு மக்களுக்குப் பல்வேறு இலக்கியங்களை அறிமுகம் செய்யப் பட்டிமன்றங்கள் கருவியாக உள்ளன. இன்று நாட்டுப் புறங்களிலும் கூடச் **சிலப்பதிகாரம், இராமாயணம், பாரதம்** போன்ற இலக்கியங்கள் நன்கு பரவியுள்ளமைக்குப் பட்டிமன்றமே காரணம் என்பது பொருந்தும். பட்டிமன்றப் பேச்சாளர்கள் எளிய தமிழில் மக்கள் உள்ளம் கொள்ளுமாறு எடுத்துச் சொல்வதுடன், மூல நூல்களிலிருந்து மேற்கோள்களை எடுத்தாள்வதால், மக்கள் மூல நூல்களை அறிந்து கொள்ள முடிகிறது.

இலக்கியங்களை விளக்கும்போது பட்டிமன்றப் பேச்சாளர்கள் தேவையான இடங்களில் உரையாசிரியர்களின் உரையையும் எடுத்தாள்வதால், மக்கள் மூலம், உரை என்ற இரண்டினையும் அறிந்துகொள்ள முடிகிறது. திருக்குறளுக்குப் பரிமேலழகர் உரையும் அவ்வாறு பெரிதும் எடுத்தாளப் பெறுகின்றன.

பட்டிமன்ற மேடைகளில் புதிய உரை விளக்கங்களும் நயவுரைகளும் வெளிப்படுகின்றன. சான்றாகக் கண்ணகி கோவலனிடம் 'சிலம்புள கொண்ம்' என்று கூறுகின்ற பகுதியை விளக்குகையில் 'குன்றம்தொலைத்தேன் எனவாடும் கணவனுக்குச் சிறு குன்றம் போனால் என்ன! என்னிடம் பெருமலையே இருக் கிறது—தருகிறேன் என்கிறாள் கண்ணகி' என்று நயவுரை கூறப் படுகிறது. சிலம்பு என்பதற்கு மலையென்ற மற்றொரு பொருளும் உண்டு என்று விளக்கம் பெறும்போது மக்கள் கவிச்சுவையை உணர்ந்து இன்பம் பெறமுடிகிறது.

குடியாட்சியில் 'கருத்துச் சகிப்புத் தன்மை'யை வளர்ப்பது நல்லாட்சிக்குப் பெரிதும் உதவும். ஆளுபவர்களும் பதவியிலிருப் பவர்களும் தங்கள் குறைகளைப் பொறுமையுடன் கேட்டு உணர்ந்து கொண்டால் திருத்தி நாட்டுமக்களுக்கு நன்மை செய்யும் வாய்ப்புக் கிட்டும். அதுபோன்றே ஆளப்படுபவர்களும் பொறுமையுடன் தம் குறைகளை உணர்ந்து பொறுப்புடன் வளரக் கருத்துச் சகிப்புத்தன்மையைப் பட்டிமன்றம் உருவாக்கி வரு கிறது.

ஒற்றையடித் தடம்போல ஒருவழிச் சிந்தனையிலேயே பழகி விட்ட மக்களிடம் ஏன் எதற்கு என்ற வினாக்களை எழுப்பிப் புதிய கோணங்களில் சிந்திக்கும் வழக்கத்தை உண்டாக்குகின்றது.

பொதுவான பண்பு வளர்ச்சி நோக்கோடு கூடிய கட்டுரைகள் உரைநடை இலக்கியங்கள் தமிழ்மொழியில் அருகியே காணப்படு கின்றன. இன்றுள்ள திங்கள், வார இதழ்களில் பெரும்பாலானவை சிந்தனைக்குரிய செய்திகளைக் கொண்ட கட்டுரைகளை வழங்கு வதில்லை. இந்நிலையில் மக்களைச் சிந்திக்க வைத்துச் செயல் படத் தூண்டுகின்றன இன்றைய பட்டிமன்றங்கள்.

**புதிய வளர்ச்சி :** பட்டிமன்றத்தின் அண்மைக்கால வளர்ச்சி யின் பயனாக மேன்முறையீட்டுப் பட்டுமன்றங்கள், வழக் காடு மன்றங்கள் ஆகிய புதிய நிகழ்ச்சியமைப்புக்களும் கடந்த பதினைந்து ஆண்டுகளுக்குள் தோன்றிச் செல்வாக்குப் பெற்று வருகின்றன.

**மேன்முறையீட்டுப் பட்டிமன்றம் :** இப்பட்டிமன்றங்களில் ஒரு பொருளைப் பற்றிய மூன்று சிந்தனைகள் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப் பெறுகின்றன. மூன்று அணிகளாக நின்று பேச்சாளர்கள் ஒன்பதின்மரோ பன்னிருவரோ அவரவர் கட்சிக் காக வாதாடுகின்றனர். அணித்தலைவர்களின் தொகுப்புரைக்குப் பின்னர் அவையிலுள்ள நோக்கங்களின் கருத்துக்களை வாக் கெடுப்பின் மூலம் அறிந்து, தலைவர் ஒரு கட்சியை விலக்குகிறார். பின்னர் இரண்டு கட்சிகளும் தத்தம் வெற்றி வாய்ப்பிற்காகப் பாடுபடுகின்றன. மற்றொருவரை நடுவராகக் கொண்ட அவையில் இரண்டு அணிகளும் மீண்டும் தம் வாதங்களை வைக்கின்றன. இரண்டு கட்சி வாதங்களையும் சீர்தூக்கிப் பார்த்து நடுவர் தீர்ப்பு வழங்குகிறார். ஏறத்தாழ ஐந்து அல்லது ஆறுமணி நேரம் வரை நீடிக்கும் இந்நிகழ்ச்சிகளைக் காரைக்குடி கம்பன் கழகம் போன்ற

இலக்கிய அமைப்புக்கள் நடத்தி வருகின்றன. பெரும்பாலான மேன் முறையீட்டுப் பட்டிமன்றங்கள் இராமாயணத்திலேயே நடைபெற்று வருகின்றன.

**வழக்காடுமன்றம் :** இரண்டு அல்லது மூன்று பாத்திரங்களை ஒப்பிட்டோ, அல்லது இரண்டு அல்லது மூன்று கருத்துக்களைச் சீர்தூக்கியோ எது உகந்தது என முடிவு செய்யும் பட்டிமன்றம் போலன்றி ஒரு பாத்திரத்தின் குறை நிறைகளை ஆராய்வதோ, ஒரு கூற்றின் வன்மை மென்மைகளை ஆராய்வதோ வழக்காடு மன்றத்தின் பணியாக உள்ளது. இலக்கிய மாந்தன் ஒருவனைக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தி அவனுடைய செயல்கள் குற்றமுடையன என ஒருவர் வாதிடுவார். 'வாலியை மறைந்து நின்று கொன்ற இராமன் குற்றவாளி', 'மதுரையை எரியூட்டிய கண்ணகி குற்றவாளி' என்பன போன்று வழக்காடுமன்றப் பொருள் அமையும். ஒரு பாத்திரத்தைக் குற்றவாளி என்று வாதிடுவோர் குறிப்பிட்ட அந்த இலக்கியத்திலிருந்தோ, வேறுபல நூல்களிலிருந்தோ அல்லது உலகியல் நிகழ்ச்சிகளிலிருந்தோ சான்றுகள் காட்டி நிறுவவேண்டும். அந்த இலக்கியப் பாத்திரம் குற்றமற்றது என்று வாதிடுவோரும் அவ்வாறே சான்று காட்டி நிறுவ வேண்டும்.

வழக்காடு மன்றங்கள் மரபு வழிச் சிந்தனைகளை மாற்றிப் புதிய போக்கில் சிந்திக்க வேண்டும் என்ற உந்துதலின் விளைவாகத் தோன்றியனவாகும். வாழ்வியலில் புதிய கண்ணோட்டங்களை வளர்க்க, புதிய சிந்தனைகளை உருவாக்க வழக்காடுமன்றங்கள் துணை செய்கின்றன. ஒரு நாணயத்திற்கு இரண்டு பக்கங்கள் உள்ளன போல் எந்த ஒரு கருத்திலும் இருவகைச் சிந்தனைகளுக்கு இடம் உண்டு என்பதை இவை காட்டுகின்றன.

வழக்காடுமன்றங்களில் கோவலன் குற்றவாளி, கண்ணகி குற்றவாளி, நக்கீரன் குற்றவாளி, கர்ணன் குற்றவாளி, கண்ணன் குற்றவாளி என்பன போன்று இலக்கிய மாந்தர்களைக் குற்றவாளிகளாக நிறுத்தி அவர்களுடைய செயல்கள் ஆராயப் பெறுகின்றன.

இலக்கிய மாந்தர்களின் சில செயல்களை மட்டும் குறிப்பிட்டு அவை குற்றமுடையன என வாதிடுவதும் உண்டு. 'சீதையை நெருப்பில் விழச் செய்த இராமன் குற்றவாளி', 'மதுரையை எரியூட்டிய கண்ணகி குற்றவாளி' என்பன போன்றும் தலைப்புக்கள் அமையும்.

இலக்கியச் சிந்தனைகளை வளர்ப்பதுடன் சமுதாயச் சிந்தனை களை வளர்க்கவும் வழக்காடு மன்றங்கள் செயல்படுகின்றன. 'இதோ இந்த மனிதன் குற்றவாளி', 'சமுதாயச் சீர்கேட்டிற்குத் துணை நிற்கும் இன்றைய இளைஞர்கள் குற்றவாளிகள்' என்பன போன்று வழக்காடுமன்றப் பொருள் அமையும். இன்றைய குறை களைப் பெரிதுபடுத்திக் காட்டி, அக்குறைகளுக்கு காரணமானவர் களைத் தாக்கியும் வழக்கு அமையும். ஒருவர் குற்றமற்றவர் என்று மறுக்க வேண்டுமாயின் குறைகளையே நிறைகளாகக் காட்டியும், வேறு நிறைகளைக் காட்டியும் வாதாடுவர். இலக்கிய உண்மை களின் அடிப்படையிலும், சமுதாயநலன் கருதியும் தீர்ப்புரை வழங்கப் பெறும்.

**பட்டிமன்ற நூல்கள் :** பட்டிமன்றங்கள் இன்று அடைந் துள்ள செல்வாக்கினால், பட்டிமன்றத் தலைமையுரை, பட்டி மன்றக் கதைகள், பட்டிமன்ற உரைகளைக் கொண்ட பின்வரும் மூன்று நூல்கள் வெளிவந்துள்ளன.

1. பாஸ்கரத்தொண்டைமான் தொ மு. — பட்டிமன்றம் (எஸ் ஆர். சுப்பிரமணியபிள்ளை, திருநெல்வேலி)
2. ராசாமணி, பொ. ம. — பட்டிமன்ற விவாதங்கள், (திருநெல்வேலி மிரியாம் பதிப்பகம், 1976)
3. சொல்விளங்கும் பெருமாள், சக்திப்பெருமாள் — பட்டிமன்றம், (நாகர்கோவில், தென்குமரி அச்சகம், 1976)

## மதிப்பீடு

இலக்கியத்தமிழை நாட்டுமக்களுக்கு மேடைகள் மூலம் எளிதில் எடுத்துச்செல்லும் கலையாகப் பட்டிமன்றம் விளங்கி வருகிறது. தெருக்கூத்துக்களின் சிதைந்த வடிவமாக, தொழில் முறைக் குழுக்களின் நாடகங்கள் வடிவிலோ உள்ளீட்டிலோ எந்த வித மாற்றமும் முன்னேற்றமுமின்றி ஊசலாடிக் கொண்டிருக்கின்ற நிலையில் அவற்றின் இடங்களைப் பட்டிமன்றங்கள் பிடித்து வருகின்றன. குறிப்பிட்ட கால எல்லைக்குள் எழுவர் அல்லது ஒன்பதின்மரின் உரைகளை ஒரே மேடையில் கேட்கும் வாய்ப்பு, மக்களுக்குப் பயனும் சுவையும் அளிக்கின்றது. ஒவ்வொரு பேச்சாளரும் தமக்கேயுரிய தனித்தன்மையுடன், பத்துமணித் துளிகளுக்குள் தாம் கூறவேண்டிய கருத்துக்களைத் தொகுத்தும்

வருத்தும் கூறுவதுடன் மக்கள் சலிப்படையாதவாறு நகைச்சுவையும் கலந்து அளிப்பதால் நிகழ்ச்சிகள்விறுவிறுப்பாக அமைகின்றன.

இலக்கிய விளக்கங்களாக இருந்து வந்துள்ள மேடைத் தமிழின் போக்கினை மாற்றி இலக்கிய ஆராய்ச்சியாக, இலக்கியத் திறனாய்வாக விளங்குமாறு மேடைத்தமிழைப் பட்டிமன்றம் மாற்றியுள்ளது சான்றாக இலக்கிய இன்பம் என்ற தலைப்பில் ஒரு பேச்சாளர் சொற்பொழிவாற்றுகிறார் எனக் கொள்வோம். அவர் சிலப்பதிகாரம், திருக்குறள், இராமாயணம் போன்ற இலக்கியங்களிலிருந்தோ, தனிப்பாடல்களிலிருந்தோ நயமான பகுதிகளை, பாடல்களை எடுத்து விளக்குவார். இது ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பதிலிருந்து வந்த மேடை மரபு. மிகச் சிறந்த பேச்சாளர்களின் உரையாக இருந்தால் மக்கள் இரண்டு மணி நேரம் பொறுமையாகக் கேட்பர். அதற்குமேல் நான்கு ஐந்து மணி நேரமாயின் பொறுமை இழந்துவிடுவர். மிகச் சிலரே சிறந்த பேச்சாளர் என்ற வரிசையில் நின்று மக்களைக் கவர முடிந்தது. ஆனால் இன்று பட்டிமன்றம் பல்வேறு அறிஞர்கள் உரைக்கதம்பமாக அமைவதால் சுவை குன்றாது உள்ளது. மேலும் புதிய சிந்தனைகளைத் தோற்றுவிக்கும் களமாகவும் இது அமைந்துள்ளது. 'சிலப்பதிகாரம் மரபுக் காப்பியமா புரட்சிக் காப்பியமா?' என்பது போன்ற புதிய வினாக்களை எழுப்பி விடை காண முயலுகிறது. பாராட்டுமுறைத் திறனாய்வே கோலோச்சி வந்த மேடைகளில் இன்று அறிவியல் திறனாய்வு ஆட்சி செய்கிறது எனலாம்.

பட்டிமன்றத் தமிழால் மக்களிடையே சிந்தனைத் துணிவு, தெளிவு ஆகியவை வளர்ந்து வருகின்றன. வணக்கத்திற்கும் வழிபாட்டிற்குமே உரிய நூல்கள் என ஒதுக்கி வைக்கப் பெற்றிருந்த கம்பராமாயணம், பெரியபுராணம் போன்ற காப்பியங்களும், சமய இலக்கியங்களும் திறனாய்வு என்னும் உரைகல்லுக்கு வரப் பட்டிமன்றம் உதவியுள்ளது. இராமபிரான், சீதாப்பிராட்டி போன்ற தெய்வமாந்தர்களின் செயல்களை ஆராயக்கூடாது என்ற நிலையை மாற்றி, இவர்களைக் காப்பியமாந்தர்களாகக் காணும் நிலை வளர்ந்துள்ளது. அறிஞர் அண்ணா நீதிதேவன் மயக்கம் என்ற நாடகத்தில் கம்பனைக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தி இராவணன் மீது வினாக்கணைகளைத் தொடுப்பதாக அமைந்த காட்சி தமிழகத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது நாமறிந்ததே. அத்தகைய நிலைமாறி இன்று கருத்துச் சகிப்புத்

தன்மை வளரப் பட்டிமன்றம் ஓரளவு துணை புரிந்து வருகிறது எனலாம்.

பல்கலைக் கழகங்கள் நடத்திவரும் மாலை நேர வகுப்புக்கள் போலப் பட்டிமன்றங்கள் இரவு நேர வகுப்புக்களாக, இலக்கிய சமூக அரசியல் சிந்தனைகளை வளர்க்கும் களங்களாகப் பயன்பட்டு வருகின்றன. அரசியல் மேடைகளில் தனிப்பட்ட மனிதர்களைத் தாக்கும் அநாகரிக முறைகளைக் கண்டு, கேட்டு சலித்துவிட்ட மக்களுக்கு, நல்லதொரு முறையில் அறிவூட்டும் கருவியாகப் பட்டி மன்றம் அமைந்துள்ளது.

பட்டிமன்றங்களில் குறைகள் இல்லாமலும் இல்லை. பட்டி மன்றத்திற்கு எதிரான எதிர்ப்புக் குரல்களும் ஆங்காங்கே தோன்றி வருகின்றன. பட்டிமன்றத்தில் உரையாடுவதென்பது இலக்கியங் களைக் கற்றுவிட்ட எல்லோருக்கும் எளிவந்த கலை அன்று. பட்டி மன்றத்தில் கலந்து உரையாற்றுவோருக்குச் சிறந்த நாவன்மை, இலக்கியப்புலமை, மாற்றார் கருத்துக்களை உடனுக்குடன் மறுக்கும் கூரறிவு, துணிவு தெளிவு ஆகியவை வேண்டும். ஆகவே இத்திறமைகள் அனைத்தும் ஒன்று சேர அமையாதவர்கள் பகுதியி லிருந்து சீ!சீ! இந்தப் பழம் புளிக்கும் என்பதுபோலப் பட்டிமன்றம் ஒரு கலையா? என்ற கேள்வி எழுந்து வருகிறது.

பட்டிமன்ற மேடைகளில் சிறிது காலம் ஆட்சி செய்துவிட்டு அவற்றின் வளர்ச்சிப் போக்கில் தம்மை வளர்த்துக்கொள்ள வகை யறியாதவர்களின் தோல்வி மனப்பான்மையால் எதிர்ப்புக்குரல் எழுவதும் உண்டு.

பட்டிமன்ற மேடையால் தமிழ் மக்களுக்கு நன்கு அறிமுக மாகிப் புகழ்பெற்றுவிட்ட சிறந்த பேச்சாளர்கள், தங்கள் நாவன் மையால் சிறந்த சொற்பொழிவாளர்களாகிய பின்னர், பட்டி மன்றத்தில் தனியொரு பேச்சாளருக்கு முழு வாய்ப்புக் கிடைக் காததால் அதனைத் தாழ்த்திப் பேசுவதும் உண்டு.

மேற்கூறிய காரணங்களால் மட்டுமின்றிப் பட்டிமன்றங்கள் ஒழுங்காக நடத்தப் பெறாததாலும் பட்டிமன்றத்தைப் பற்றிய குறைகள் எழுகின்றன.

'களையெடுப்பவன் மேற்கே பார்ப்பான்; கூத்தாடி கிழக்கே பார்ப்பான்' என்ற பழமொழி தமிழ் நாட்டின் தெருக்கூத்து நிலை யைக் காட்டி வருகிறது. கிழக்கு வெளுக்கும் வரை அமர்ந்து கூத்துக்களைப் பார்த்துப் பழகிவிட்ட நாட்டுப்புற மக்கள் பட்டி

மன்றங்களையும் அவ்வாறே காண விரும்புகின்றனர். இரவு பதினொரு மணிக்கு மேல் தொடங்கி அதிகாலை நான்கு மணிக்கு முடியும் நிலையில் பட்டிமன்றங்களும் சில இடங்களில் தெருக் கூத்துக்களாக மாறி வருகின்றன. ஆகவே பள்ளி, கல்லூரிகளில் பணியாற்றிக் கொண்டே பட்டிமன்றங்களிலும் கலந்து கொள்ளும் அறிஞர்கள் பட்டிமன்றங்களை ஒதுக்கும் நிலை ஏற்படுகிறது.

கருத்துக்களை வரன்முறையாகப் பட்டிமன்றங்களில் வழங்கி வரும் பேச்சாளர்கள், பட்டிமன்றக் கால அளவை நீட்டிப்பதற்காகக் கதைகளைக் கூறி மக்களை மகிழ்விக்கத் தொடங்குகின்றனர். இதனால் பட்டிமன்றத்தின் பயன்பாட்டு நோக்கம் குறைந்து பொழுது போக்கியல்பு மிகுந்து விடுகிறது

சில நேரங்களில் மக்கள் விரும்புகிறார்கள் என்பதற்காக, மக்களிடமிருந்து சிரிப்பையும் கைதட்டலையும் எதிர்பார்த்து தரக்குறைவான நகைச்சுவைத் துணுக்குகளையும், கருத்துக்களையும் வழங்கும் பேச்சாளர்களால் பட்டிமன்றத் தரம் குறைந்து போவதும் உண்டு. ஆயின் இவ்வாறு முறையாக நடைபெறாத தரம் குறைந்த பட்டிமன்றங்கள் மிகச் சிலவே.

மேற்கூறியவை கொண்டு நோக்கின், பட்டிமன்றங்கள் பயனுடைய முறையில் மேடைத்தமிழை வளர்த்து வருகின்றன என்பது புலனாகும். பயன்பாடும், பொழுதுபோக்கியல்பும் கொண்ட கலையாக வளர்ந்து வரும் பட்டிமன்றம், இன்று காணப் பெறும் குறைகள் நீக்கப்பெற்று, விரும்பும் கலையாக மேலும் வளரும் என்பதில் ஐயமில்லை.

### அடிக்குறிப்புகள்

1. மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன்
   பகைபுறத்துக் கொடுத்த பட்டிமண்டபமும்
   சிலப். 5.101-102.
2. அருணாசலக் கவிராயர், **இராமநாடகக் கீர்த்தனை**, (சென்னை, பி.ஆர்&சன்ஸ், 1960).
3. சுப்பிரமணிய பாரதியார். **தராசு**, (பாரதி புத்தக நிலையம், 1964).

## பின்னிணைப்பு

1970 முதல் 1980 வரை கட்டுரையாளர் கலந்துகொண்ட பட்டிமன்றத் தலைப்புக்கள்.

**திருக்குறள்—முழுப்பார்வை**

1. திருக்குறள் மரபுநூலே! புரட்சி நூலே!
2. திருக்குறட் கருத்துக்கள் எல்லாக் காலத்திற்கும் பொருந்துவன! பொருந்தாதன!
3. குறள்நெறி வெற்றி பெற்றுள்ளது! வெற்றி பெறவில்லை!
4. திருக்குறளின் சிறப்பு விஞ்சி நிற்பது அறத்துப்பாலிலேயே! பொருட்பாலிலேயே! காமத்துப்பாலிலேயே!

**அதிகாரச் செய்திகளை ஒப்புநோக்கல்**

1. திருவள்ளுவர் பெரிதும் வலியுறுத்துவது ஆள்வினையையே! ஊழின்வலியையே?
2. திருவள்ளுவர் பெரிதும் வலியுறுத்துவது அறன்வலியையே! பொருளின் சிறப்பையே!
3. திருவள்ளுவர் பெரிதும் வலியுறுத்துவது தனிமனித அறமே! சமுதாய அறமே!
4. திருவள்ளுவர் பெரிதும் வலியுறுத்துவது அருளுடைமையே! பொருளுடைமையே!
5. திருவள்ளுவர்பெரிதும் வலியுறுத்துவது அறிவுடைமையையே! அன்புடைமையையே!

**ஒப்பியல் திறனாய்வு**

1. திருவள்ளுவர் நெறியில் நின்று வாழ்க்கையில் வென்றவள் சீதையே! பாஞ்சாலியே!
2. திருவள்ளுவர் நெறியில் நின்று பெருமை பெற்றவன் இராமனே! தருமனே!
3. பாரதத்தில் கண்ணன் செயல்கள் குறள் நெறிக்கு இசைந்தன! இசைந்தனவல்ல!
4. திருவள்ளுவர் நெறியில் நின்று சிறந்தவன் தருமனே! தசரதனே!
5. திருவள்ளுவர் வகுத்த அன்புநெறியில் நின்று சிறந்தவன் இலக்குவனே! பரதனே!
6. திருவள்ளுவர் வகுத்த செய்ந்நன்றியறிதலின்படி வாழ்ந்து சிறந்தவன் கர்ணனே! கும்பகர்ணனே!

**சங்க இலக்கியம்**

1. சங்க இலக்கியங்களில் விஞ்சிய பெருமைக்குரியவர் தலைவனே தலைவியே!

2. சங்க இலக்கியங்களில் விஞ்சிய பெருமைக்குறியவர் தலைவியே! தோழியே!
3. சங்க இலக்கியங்களில் மேலோங்கி நிற்பது கருத்துவளமே! கற்பனைச் சிறப்பே!
4. சங்க இலக்கியங்களில் மேலோங்கிநிற்பது தனிமனித உணர்வே! சமுதாய உணர்வே!

## சிலப்பதிகாரம்

**முழுப்பார்வை**

1. சிலப்பதிகாரத்தில் பெரிதும் வலியுறுத்தப் பெறுவது ஊழ்வினையே! அரசியலே! கற்பியலே!
2. சிலப்பதிகாரத்தில் மேலோங்கி நிற்பது கருத்து வளமே! கற்பனைச் சிறப்பே!
3. சிலப்பதிகாரம் மரபுக் காப்பியமே! புரட்சிக் காப்பியமே!
4. சிலப்பதிகாரத்தில் விஞ்சிய பெருமைக்குரியது புகார்க் காண்டமே! மதுரைக் காண்டமே! வஞ்சிக் காண்டமே!
5. சிலம்பில் மேலோங்கி நிற்பது அவலமே! வீரமே!

**பாத்திரப் பண்புகள்—திறனாய்வு**

1. கோவலன்பால் பெரிதும் ஈடுபாடு கொண்டவள் கண்ணகியே! மாதவியே!
2. பெருஞ்சோதனையில் வென்று சிறந்தவள் கண்ணகியே! மாதவியே!

**ஒப்பியல் திறனாய்வு**

1. வாழ்க்கைச் சிக்கலில் வென்று சிறந்தவள் கண்ணகியே! சீதையே!
2. வாழ்க்கைச் சிக்கலில் வென்று சிறந்தவள் கண்ணகியே! பாஞ்சாலியே!

## இராமாயணம்

**முழுப்பார்வை**

1. கம்பராமாயணம் பெரிதும் வலியுறுத்துவது சிலையிராமன் சீர்த்தியே! சிறையிருந்தாள் ஏற்றமே!
2. கம்பராமாயணத்தில் விஞ்சி நிற்பது கற்பே! வீரமே!
3. கம்பன் காவியத்தில் மேலோங்கி நிற்பது பிள்ளைப்பாசமே! பெற்றோர் பாசமே! சகோதர பாசமே!

4. இராமாயணம் பெரிதும் வலியுத்துவது சமுதாய மலர்ச்சியே! பொருளாதார மலர்ச்சியே!
5. கம்பன் காப்பியச் சிறப்பிற்குக் காரணம் கதையமைப்பே! கற்பனைச் சிறப்பே!

**பாத்திரப்பண்பு—திறனாய்வு**

1. இராமனுக்குப் பெரிதும் பெருமை சேர்ப்பது அவனுடைய இல்லே! வில்லே! சொல்லே!
2. இராமாயணம் பெரிதும் ஏற்றம் தருவது இராமனுக்கே! சீதைக்கே!
3. வாலி வதை பழியுடைய செயலே! பழியுடைய தில்லையே!
4. தம்பியருள் சிறந்தவன் பரதனா? இராமனா?
5. தம்பியருள் சிறந்தவன் இலக்குவனா கும்பகருணனா?
6. வீரத்தில் சிறந்தவன் இலக்குவனா இந்திரசித்தா?
7. வீரத்தில் சிறந்தவன் இராமனே! இராவணனே!
8. தொண்டில் சிறந்தவன் இலக்குவனே! பரதனே!
9. தொண்டில் சிறந்தவன் இலக்குவனே! அனுமனே!
10. தம்பியருள் சிறந்தவன் கும்பகருணனே! வீடணனே!
11. நட்பிற் சிறந்தவன் சம்பாதியே! சுக்கிரீவனே!
12. வஞ்சனையில் விஞ்சியவள் கூனியே! கைகேயியே! சூர்ப்பனகையே!
13. வஞ்சனையில் விஞ்சியவள் கூனியே! சூர்ப்பனகையே!
14. தாயருள் சிறந்தவள் கைகேயியே! கோசலையே!சுமித்திரையே!
15. அவலத்திற்குரிய தந்தை தசரதனே! இராவணனே!
16. உடன்பிறவாத் தம்பியருள் சிறந்தவன் சுக்கிரீவனே! வீடணனே!
17. தியாகத்தில் சிறந்தவன் பரதனே! இலக்குவனே! சடாயுவே!

**ஒப்பியல் திறனாய்வு**

1. தூதருள் சிறந்தவன் அனுமனே! வீரவாகுவே!
2. நன்றியுணர்வில் விஞ்சி நிற்பவன் கும்பகர்ணனே! கர்ணனே!
3. வீரத்தில் விஞ்சியவன் இலக்குவனே! அர்ச்சுனனே!
4. வாழ்க்கைச் சிக்கலில் வென்று சிறந்தவள் சீதையே! கண்ணகியே!

5. வாழ்க்கைச் சிக்கலில்வென்றுசிறந்தவள் சீதையே!பாஞ்சாலியே!
6. காப்பியத்தலைவர்களுள் பெரிதும் அவலத்திற்குரியவன் கோவலனே! இராவணனே!
7. வஞ்சனையில் விஞ்சியவர் கூனியே! சகுனியே!
8. வஞ்சனையில் விஞ்சியவர் சூர்ப்பனகையே! சகுனியே!
9. ஆணவத்தில் மிக்கவன் இராவணனே! துரியோதனனே! சூரபன்மனே!
10. அவலத்தலைவர்களுள் பெரிதும் இரக்கத்திற்குரியவர்! இராவணனே! துரியோதனனே!
11. அன்பிற் சிறந்தவர் தசரத நால்வரே! பஞ்ச பாண்டவரே!
12. மக்கள் உள்ளத்தில் பெரிதும் இடம் பெறுவன இராமனின் செயல்களே! பாரதக் கண்ணன் செயல்களே!

## பெரியபுராணம்

**முழுப்பார்வை**

1. பெரியபுராணம் மரபுக் காப்பியமே! புரட்சிக் காப்பியமே!
2. பெரியபுராணத்தில் பெரிதும் வலியுறுத்தப்பெறுவது ஆண்டவனின் பெருமையே! அடியவரின் பெருமையே!
3. தொண்டிற்சிறந்தவர்ஆண் அடியார்களே! பெண் அடியார்களே!
4. பெரியபுராணத்தில் வலியுறுத்தப் பெறுவது துய்த்தல் நெறியே! துறவு நெறியே!
5. பெரியபுராணத்தில் வலியுறுத்தப்பெறுவது தொண்டுநெறியே! பக்தி நெறியே!

**பாத்திரப்பண்பு திறனாய்வு**

1. தொண்டிற் சிறந்தவர் கண்ணப்பரே! சிறுத்தொண்டரே! திருநீலகண்டரே!
2. தொண்டிற் சிறந்தவர் கண்ணப்பரே! சிறுத்தொண்டரே!
3. இறைவன் பெரிதும் இன்புற்று மகிழ்ந்தது சுந்தரரிடத்திலேயே! அப்பரிடத்திலேயே! சம்பந்தரிடத்திலேயே!

## பாரதம்

1. பாரதத்தில் கண்ணன் செயல்கள் அறநெறிக்குட்பட்டனவே! அறநெறிக்குட்படாதன!

2. கௌரவர் வீழ்ச்சிக்குப் பெரிதும் காரணமானவன் கன்னனே! கண்ணனே!

3. வீரத்தில் சிறந்து நின்றவன் கன்னனே! அர்ச்சுனனே!

4. கொண்ட கொள்கையில் உறைத்து நின்றவர் வீடுமனே! தருமனே! கன்னனே!

## கந்தபுராணம்

1. கந்தபுராணத்தில் மேலோங்கி நிற்பது கற்பனை வளமே! கருத்துச் செறிவே!

2. கந்தபுராணம் சமுதாய நூலே! சமய நூலே!

## பாரதியார் கவிதைகள்

**முழுப் பார்வை**

1. பாரதியார் பாடல்களுள் பெரிதும் நிலைபேறுடையவை தேசியப் பாடல்களே! தோத்திரப் பாடல்களே! முப்பெரும் பாடல்களே!

2. பாரதியார் பாடல்களுள் மேலோங்கி நிற்பது தேசிய உணர்வே! தெய்வீக உணர்வே!

3. பாரதியார் பாடல்களுள் மேலோங்கி நிற்பது மொழிப்பற்றே! நாட்டுப்பற்றே!

4. பாரதியார் பெரிதும் வலியுறுத்துவது அரசியல் விடுதலை யையே! ஆன்மீக விடுதலையையே!

5. பாரதியாரின் கனவுகள் நனவாகிவிட்டன! நனவாகவில்லை!

6. பாரதியாரின் தொழில்களுள் அவருக்குப் பெரிதும் ஏற்றத் தினைத் தந்தது நாட்டிற்குழைத்தலே! கவிதையே!

7. பாரதியாரின் கவிதை நலம் மேலோங்கி நிற்பது பாஞ்சாலி சபதத்திலேயே! குயிற் பாட்டிலேயே! கண்ணன் பாட்டிலேயே!

8. பாரதி சோசலிசத்தை இனம் கண்டு வரவேற்றான்! எழுச்சி கண்டு வரவேற்றான்!

9. பாரதி மரபு வழி வந்தவனே! புதுவழி தந்தவனே!

10. பாரதியின் பாடல்களில் மேலோங்கி நிற்பது தேசியமே! சர்வ தேசியமே!

## பாரதிதாசன் கவிதைகள்

1. பாரதிதாசன் பாடல்களில் மேலோங்கி நிற்பது சமுதாய உணர்வே! அரசியல் உணர்வே!

2. பாரதிதாசன் பாடல்களில் மேலோங்கி நிற்பது மொழியுணர்வே! இன உணர்வே!

3. பாரதிதாசன் பெரிதும் வலியுறுத்துவது சமுதாயச் சீர் திருத்தமே! பொருளாதாரச் சீர்திருத்தமே!

## தலைவர் புகழ்

1. பேரறிஞர் அண்ணாவின் பணிகளில் விஞ்சிநிற்பது அரசியல் பணியே! இலக்கியப்பணியே!

2. பேரறிஞர் அண்ணாவின் பணிகளில் விஞ்சிநிற்பது மொழியுணர்வே! இன உணர்வே!

3. பேரறிஞர் அண்ணாவிடம் மேலோங்கி நிற்பது அவரது மொழிப்பற்றே! நாட்டுப்பற்றே!

4. பேரறிஞர் அண்ணாவின் படைப்புத்திறன் விஞ்சிநிற்பது அவருடைய சிறுகதைகளிலா? நாடகங்களிலா?

5. பேரறிஞர் அண்ணாவின் படைப்புக்களுள் மக்கள் உள்ளத்தைப் பெரிதும் கவர்வது பார்வதி பி. ஏ.யே! ரங்கோன் ராதாவே!

6. பேரறிஞர் அண்ணாவின் புகழுக்குக் காரணம் அவரது எழுத்தாற்றலே! பேச்சாற்றலே!

**காமராசர்**

1. பெருந்தலைவர் காமராசரின் விஞ்சு புகழுக்குக் காரணம் அவருடைய தியாகமே! தொண்டே!

2. பெருந்தலைவர் காமராசரின் பணிகளில் விஞ்சி நிற்பது அவரது அரசியற் பணியே! சமுதாயப் பணியே!

3. பெருந்தலைவர் காமராசரின் பணிகளில் விஞ்சி நிற்பது கல்விப் பணியே! சமூகப் பணியே!

## பொதுத்தலைப்புக்கள்

1. இலக்கியத்தின் தரத்தினை உயர்த்தப் பெரிதும் காரண மானவன் கலைஞனே! ரசிகனே!
2. இன்றைய திரைப்படங்களால் விளைவன நன்மையே! தீமையே!
3. இன்றைய திங்கள் வாரஇதழ்களின் பயன்களுள் விஞ்சி நிற்பது நன்மையே! தீமையே!

## சமுதாயச் சிந்தனை

1. இன்றைய உடனடி தேவை சமுதாயச் சீர்திருத்தமே! பொருளாதாரச் சீர்திருத்தமே!
2. நாட்டின் நலிவிற்குப் பெரிதும் காரணம் பொருளின்மையே! பொதுநலவுணர்வின்மையே!
3. நாட்டின் நலிவிற்குப் பெரிதும் காரணம் பொருளின்மையே! மக்கட் பெருக்கமே!
4. சமுதாய மறுமலர்ச்சிக்குப் பெரிதும் துணை நிற்பது அரசியலே! சமயமே!
5. இன்றைய உடனடி தேவை சமயச்சீர்திருத்தமே! சமுதாயச் சீர்திருத்தமே!
6. சமுதாயத்தின் முன்னேற்றத்திற்குப் பெரிதும் காரணமாக இருப்பது சட்டமே! மனமாற்றமே!
7. சமுதாய மறுமலர்ச்சியில் பெரும்பங்கு வகித்தவர் ஆடவரே! மகளிரே!
8. சமுதாய நலனுக்குப் பெரிதும் வேண்டப்படுவது அருளு டைமையே! பொருளுடைமையே!
9. நாம் எங்கு செல்கிறோம்?—திட்டமிட்ட பாதையில்! திசை தடுமாறி!
10. சமுதாய மேம்பாட்டிற்குப் பெரிதும் துணை நிற்பது பக்தி நெறியே! பகுத்தறிவே!
11. சமுதாய மேம்பாட்டிற்குப் பெரிதும் துணை நிற்பது ஆத்தி கமே! நாத்திகமே!
12. சமுதாய மேம்பாட்டிற்குப் பெரிதும் துணை நிற்பது அரசியல் விழிப்புணர்வே! அறிவியல் வளர்ச்சியே!

13. சமுதாய மறுமலர்ச்சிக்குப் பெரிதும் துணை நின்றவர்கள் சமயவாதிகளே! இலக்கியவாதிகளே! அரசியல்வாதிகளே!

14. இன்றைய சமுதாயத்திற்கு உடனடித்தேவை— சர்வாதி காரமே! ஜனநாயக சோசலிசமே!

15. இன்றைய சமுதாயச் சிக்கல்களுக்குப் பெரிதும் காரணம் பொருளாதார உற்பத்திக் குறைவே! வகுத்து நெறிப்படுத்தும் திறமையின்மையே! ஒழுக்கமின்மையே!

## நடைமுறை வாழ்க்கைச் சிந்தனைகள்

1. குடும்ப முன்னேற்றத்திற்குப் பெரிதும் காரணமாக இருப்பவர் தாயே! தந்தையே!
2. குடும்ப முன்னேற்றத்திற்குப் பெரிதும் காரணமாக இருப்பவர் கணவனே! மனைவியே!
3. குடும்ப முன்னேற்றத்திற்குப் பெரிதும் காரணமாக இருப்பவர் ஆடவரே! மகளிரே!
4. குடும்ப முன்னேற்றத்திற்குப் பெரிதும் காரணமாக இருப்பவர் பெற்றோரே! பிள்ளைகளே!

## வழக்காடுமன்றத் தலைப்புக்கள்

1. கோவலன் குற்றவாளி
2. கண்ணகி குற்றவாளி
3. இராமன் குற்றவாளி
4. தசரதன் குற்றவாளி
5. கைகேயி குற்றவாளி
6. தருமன் குற்றவாளி
7. கண்ணன் குற்றவாளி
8. கர்ணன் குற்றவாளி
9. நக்கீரன் குற்றவாளி
10. தருமன் குற்றவாளி
11. மதுரைக்கு எரியூட்டிய கண்ணகி குற்றவாளி
12. சீதையை நெருப்பில் விழச் செய்த இராமன் குற்றவாளி.
13. அரிச்சந்திரன் குற்றவாளி.
14. குறள் நெறிப்படி நம்மால் வாழவியலாது என்று கூறிவரும் திரு.........குற்றவாளி.
15. மனித வாழ்க்கையை நிர்ணயிப்பது விதியே எனக் கூறிவரும் திரு.......குற்றவாளி.

16. குடும்ப அமைதியைக் கெடுப்பவள் பெண்ணே எனக் கூறும் திரு......குற்றவாளி.

17. இன்றைய சமுதாய அமைதியின்மைக்குக் காரணம் இளைஞர் களே என்று பேசியும் எழுதியும் வரும் திரு......குற்றவாளி.

18. இதோ இந்த மனிதன் குற்றவாளி.

## துணை நூல்கள்


1. மணிமேகலை- (திருநெல்வேலி, கழக வெளியீடு, 1946).
2. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், உ. வே. சாமிநாதையர் பதிப்பு 6-ஆம் பதிப்பு (சென்னை, 1955).
3. மாணிக்கவாசகர், திருவாசகம், (ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமர குருபரன் சங்க வெளியீடு, 1969).
4. கலிங்கத்துப்பரணி (சென்னை-17, அருணா பப்ளிகேஷன்ஸ், 1958).
5. முக்கூடற்பள்ளு (சென்னை-14, அருணோதயம், 1960).
6. குற்றாலக்குறவஞ்சி ( ,, ,, ,,)
7. அருணாசலக் கவிராயர், இராம நாடகக் கீர்த்தனை, (சென்னை, பி. ஆர். & சன்ஸ், 1950).
8. கோபால கிருஷ்ண பாரதியார், நந்தனார் சரித்திரக் கீர்த்தனை (சென்னை, பி. ஆர். & சன்ஸ், 1968).
9. சங்கரதாஸ சுவாமிகள், நல்லதங்காள் நாடகம் (மதுரை, விவேகானந்தர் பிரஸ், 1937)
10. சங்கரதாஸ் சுவாமிகள், சுலோசனாசதி (சென்னை ச. சு. நினைவுமன்றம், 1948).
11. சுப்பிரமணிய பாரதி, சி., 'தராசு' (மதுரை, பாரதி புத்தக நிலையம், 1964).

# எண்பதில் தமிழ்க் கவியரங்குகள்

**கரு. நாகராசன்**

சீரிளமைக் கன்னியளாகிய நம் செந்தமிழ் அன்னை காலந் தோறும் புதுப்புது இலக்கிய அணிகளைப் பெற்றுப் பொலிவு பெற்று வந்திருக்கின்றாள்; வருகின்றாள்; வருவாள்; சேய்கள் பெறும் வளர்ச்சியைப் பொறுத்துத்தானே தாயின் பெருமை அமைகிறது! தமிழரின் வளர்ச்சியே தமிழன்னையின் வளத்திற்குக் காரணம். துறைதோறும் முறையான வளர்ச்சியைப் பெற்று அதன்மூலம் ஒப்பற்ற இலக்கிய அணிகளைப் படைத்து அன்னைக்குச் சூட்டி அழகு பார்த்து வருகின்றார்கள் தமிழ் இலக்கியப் படைப்பாளர்கள். பல்வேறு வகைப்பட்ட இலக்கிய அணிகள் அவள் பொன்னார் மேனியில் பொலிவுபெற்றுத் திகழ்ந்தாலும் அவைகளில் தனிச்சிறப்புப்பெற்ற அணிகளாகத் திகழ்பவை கவிதை அணிகளே!

அவள் அணியத் தொடங்கிய அணிகளில் காலத்தால் முந்தியது மட்டுமன்றி காலந்தோறும் புதுப்பொலிவும் பெற்றுச் சிறந்து வரும் அணி கவிதையே! தன்னுணர்ச்சிப் பாடல்களாகவும், குறுங்காவியங்களாகவும், பெருங்காவியங்களாகவும் படைத்து அணிவித்தார்கள் அன்றைய தமிழறிஞர்கள். அந்த நிலையே படிப்படியாக வளர்ந்து கவியரங்குகளாகப் பல்கிப் பெருகும் நிலை பின்னர் ஏற்பட்டது. ஒரு சிலரை மகிழ்விப்பதற்கான கருவியாகக் கவிதை பயன்பட்ட நிலைமாறி, எல்லோரும் அதைச் சுவைத்து மகிழும் நிலை உருவாகியதும் கவியரங்குகள் தோன்றிய பின்னர் தான். அது மட்டுமன்றி, குறிப்பிட்ட ஒரு சிலரைப் பற்றியோ

அல்லது என்றோ நடந்த நிகழ்ச்சியைப் பற்றியோ மட்டுமே கவிதைகள் படைக்கப்பட்ட நிலைமாறி, அன்றாடம் நம்மைப் பாதிக்கும் பிரச்சினைகளைப் பற்றியும் கவிதைகள் படைக்க வேண்டும் என்ற உணர்வின் வெளிப்பாடும் கவியரங்குகள் தோன்றி வளரக் காரணமாயின. ஆண்டிற்காண்டு அவ்வுணர்வு அதிகரித்து வந்துள்ளதால் கவியரங்குகளும் அதிகரிக்கலாயின. அண்மையில் சில ஆண்டுகளாகச் சமுதாயத்தைப் புரிந்துகொண்டு குறைபாடு களைச் சுட்டிக்காட்டும் மனத்துணிவு மிக்க தமிழ்க் கவிஞர்கள் பெருகியுள்ளதால் கவியரங்குகளின் போக்கிலும் நோக்கிலும் புதுப் பாணி உருவாகத் தொடங்கியது. அதில் ஆயிரத்துத்தொள்ளா யிரத்து எண்பதாம் ஆண்டின் நிலை பற்றிக் காண்பதே இக் கட்டுரையின் நோக்கம்.

**திருப்புமுனை**

இலக்கியச்சுவையைப் பருக வேண்டும் என்ற ஆர்வமும், செய்திகளைச் செய்திகளாக மட்டுமே கேட்காது, கற்பனை நயத் துடன் கேட்டுச் சுவைக்க வேண்டும் என்ற வேட்கையும் கவியரங்கு களின் வளர்ச்சிக்குக் காரணங்களாகும். பண்டிதர்களும், படித்த அறிஞர்களுமே சுவைத்த தமிழமுதை எல்லா நிலையில் உள்ள வர்களும் சுவைக்க வேண்டும் என்ற நிலைதோன்றியதன் விளைவு தான் நாட்டில் இன்று நாம் காணும் பட்டிமன்றங்கள், வழக்காடு மன்றங்கள், கருத்தரங்குகள், கவியரங்குகள் எல்லாம். தமிழின் வளர்ச்சியில் இந்த நிலையை ஒரு திருப்புமுனை என்றே கூற வேண்டும்.

இந்த வளர்ச்சி நிலைகளிலும் கூடக் கவியரங்குகளுக்குத் தனிச் சிறப்புண்டு. காரணம், ஏற்ற வேடத்திற்கேற்ப நடித்துவிட்டுச் செல்லும் நடிகரைப்போன்று கொடுத்த தலைப்புக்கேற்பச் செயற் கைக் கோபத்தைக் காட்டிக் கைதட்டலைப்பெறும் நிலையினையே இன்று நாம் பெரும்பாலான பட்டிமன்றங்களில், வழக்காடு மன்றங்களில் காண்கிறோம். ஓரிடத்தில் குறிப்பிட்ட ஒரு பொருளை உணர்ச்சியோடு பேசிப் பாராட்டுப்பெற்ற அதே மனிதர் வேறு மேடையில் அதற்குமாறாகவும் பேசுவார். அவர் கருத்து எது என் பதை யாரும் அறிய முடியாது. பெரும்பாலும் தன்னைக் காட்டிக் கொள்ளாமல் பேசத் தெரிந்தவர்களே பெரிய பேச்சாளர்கள். ஆனால் ஒரு கவியரங்கில் அந்த நிலையை நிச்சயம் காண முடி யாது. ஒரு கவிஞன் பாடும் கவிதைகளில் அவன் யார் என்பதை அடையாளம் காட்டாமல் தப்பவே முடியாது. எனவே மற்றைய நிலைகள் செயற்கையான போலி நிலைகள் என்றும் கவியரங்குகளே

உண்மையுணர்வின் வெளிப்பாட்டு நிலை என்றும் துணிந்து கூற முடியும். மேலும், பேசிய பேச்சுகள் காற்றோடு கரைந்துவிடும் நிலையைப்போல இல்லாமல் பயனுள்ள ஒரு படைப்பை உருவாக்கும் நிலையும் கவியரங்கின் மூலம்தான் காணமுடியும். உண்மையான சமுதாயத் தொண்டும் அதே சமயம் மொழி வளர்ச்சிக்குச் செய்யும் தொண்டும் கவியரங்குகள் மூலமே பெரும்பாலும் நிறைவெய்தக் காண்கிறோம். படிக்காதவர்களுக்கும் சமுதாய நிலைகளைப் புதுப்பித்து அவர்கள் நெஞ்சில் புத்தொளி ஊட்டுவதற்குப் பயன்படுவதோடு சமுதாயத்தில் புரையோடிப் போய் விட்ட நோய்களை அறுவைச்சிகிச்சை செய்து அகற்றும் பணியிலும் கவியரங்குகள் தனியிடம் பெற்று வருவதை யுணரலாம் தமிழ் வளர்ச்சியில் இது ஓர் திருப்புமுனைதானே?

### பல்வேறு வகைக் கவியரங்குகள்

பல்வேறு வகைப் பிரச்சினைகளைப் பற்றியும் கவிதை பாடப் பெற்று வருவதால் நாட்டில் இன்று பல்வேறு வகைப்பட்ட கவியரங்குகளையும் நாம் காணமுடிகிறது பக்திச் சுவை பரப்பும் ஆலயங்கள் முதல் பகுத்தறிவு மணம் பரப்பும் மேடைகள் வரை கவியரங்குகள். அரசியல் மேடைகளிலிருந்து அறிவுக்கூடங்களான கல்லூரி, உயர்பள்ளி வரை எங்கு நோக்கினும் கவியரங்குகள். நம்முடைய அறிவுத்துறை வளர்ச்சிகளுக்கேற்பக் கவியரங்கின் வகைகளும் அதிகரித்துக் கொண்டு செல்லினும் பொதுவாக நாட்டில் எண்பதில் நடைபெற்ற கவியரங்குகளைக் கீழ்க்கண்ட தலைப்புகளில் அடக்கலாம்.

1. இலக்கியக் கவியரங்குகள்
2. பக்திக் கவியரங்குகள்
3. பகுத்தறிவுக் கவியரங்குகள்
4. பொதுவுடைமைக் கவியரங்குகள்
5. சமுதாய சீர்திருத்தக் கவியரங்குகள்
6. அரசியல் கவியரங்குகள்
7. அரசுவிழாக் கவியரங்குகள்
8. அறிவியல் கவியரங்குகள்
9. பருவகாலக் கவியரங்குகள்
10. தனிமனிதர் பற்றிய கவியரங்குகள்

இத்தலைப்புகள் பற்றிச் சிறிது விரிவாகக் காணலாம்,

**இலக்கியக் கவியரங்குகள்**

இலக்கியச்சுவை நுகர்வது ஒன்றே நோக்கமாகக்கொண்ட அமைப்புகளால் நடத்தப்படும் கவியரங்குகள் இத்தலைப்பில் அடங்கும். குறிப்பிட்ட ஒரு புலவரிடத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்ட சிலர் ஒன்றாகச் சேர்ந்து அப்புலவரின்பேரில் சங்கம் நிறுவி, அவர் படைத்த படைப்புகளைப் பற்றிக் கவியரங்கம் அமைத்துக் கேட்டு மகிழ்வர். இப்படிப்பட்ட கவியரங்குகளை நடத்துபவர்கள் சமுதாய மாற்றங்களுக்குத் துணை செய்வர் என்று கூறமுடியாவிட்டாலும் தமிழ் இலக்கியங்களைப் படிப்பவர் அடையும் பயன்களைச் சுவைஞர்கள் பெற நிச்சயம் துணையா வார்கள் என்று கூறலாம். கம்பர், வள்ளுவர், இளங்கோ, பாரதி, திரு வி.க. மறைமலையார் போன்ற அறிஞர்கள் பேரில் சங்கங்களை அமைத்து அதன் மூலம் கவியரங்குகளை நடத்தி வருபவர்களை இத்தலைப்பில் அடக்கலாம் இப்படிப்பட்ட கவியரங்குகள்தான் முன்பெல்லாம் அதிகமாக நடைபெற்று வந்தன. கவியரங்குகளின் தோற்றமே இந்த அடிப்படையில் அமைந்தது என்று கூறலாம்.

**பக்திக் கவியரங்குகள்**

இலக்கியக் கவியரங்குகளைப் போன்றதே இக்கவியரங்குகளும் குறிப்பிட்ட புலவரை, அல்லது நூலை மையமாக வைத்து நடத் தப்பெறும் இலக்கியக் கவியரங்குகளைப் போன்றதே இவ்வகைக் கவியரங்குகளும். ஏதேனும் ஒரு பக்தி நூலைப்பற்றியோ, அல்ல அந்நூலைப் படைத்தவரைப் பற்றியோ அல்லது தெய்வங்களைப் பற்றியோ நடத்தப்பெறும் கவியரங்குகளை இந்த வரிசையில் அடக்கலாம். தெய்வீகப் பேரவை, அருள்நெறித் திருக்கூட்டம், அடியார் கழகங்கள் போன்ற அமைப்புகளாலும், நாடெங்கிலும் உள்ள ஆலயங்களாலும் இவ்வகைக் கவியரங்குகள் நடத்தப்பட்டு வருகின்றன. இறைவனின் புகழ்பாடும் தோத்திரப் பாடல்கள் தமிழில் நெடுங்காலமாகவே காணப்பட்டாலும், கோயில்களுக் குள்ளேயும் கவியரங்குகள் நடத்தப்படுவது அண்மைக்காலமாகவே அதிகமாகக் காணப்படுகிறது. பொதுமக்களுக்குப் பக்திச் சுவை யுடன் தமிழ்ச் சுவையினையும் ஊட்டும் பணியினை இத்தகு கவியரங்குகள் செய்து வருகின்றன.

**பகுத்தறிவுக் கவியரங்குகள்**

கடவுளின் மகிமைகளைப் பக்திக் கவியரங்குகள் பரப்பி வரும் போதே, அக்கடவுளைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டும், ஈடு படுத்தியும் உண்மைகாணும் பணியைச் செய்து வருகின்றன பகுத்

தறிவுக் கவியரங்குகள் கடவுளைப் பற்றிய பிரச்சாரமும், எதிர்ப் பிரச்சாரமும் நீண்ட நெடுங்காலமாகவே நடைபெற்று வந்தாலும் பகுத்தறிவு மேடையில்ஏறும் துணிவு பாவேந்தர்பார திதாசனுக்குப் பின்புதான் தமிழ்க் கவிஞர்களுக்குத் தோன்றியுள்ளது. இன்று அவ்வுணர்வுடைய கவிஞர்கள் பலராகிவிட்டதால் பகுத்தறிவுக் கவியரங்குகளும் நாடெங்கும் நடைபெற்று வருகின்றன. தந்தை பெரியார் பேரிலும், பாவேந்தர் பேரிலும், பகுத்தறிவாளர் கழகத் தின் சார்பிலும் இவ்வகைக் கவியரங்குகள் நடத்தப்படுகின்றன. பகுத்தறிவில் நாட்டமுடைய பாவலர்கள் அரசியல் தடைகளைக் கடந்து ஒருங்கு கூடிக் கவிமாரி பொழிந்துவரும் அரங்கு இது வாதலால் இவ்வகைக் கவியரங்குகள் கவிதையுலகில் தனியிடம் பெறும் தன்மை வாய்ந்தன.

**பொதுவுடைமைக் கவியரங்குகள்**

''எல்லார்க்கும் எல்லாமென் றிருப்ப தான
இடம்நோக்கி நடக்கின்ற திந்தை வையம்''

என்றார் பாவேந்தர். உலகமே பொதுவுடைமையை நோக்கி நடந்துகொண்டிருக்கும்போது, அவ்வுலகில் வாழ்ந்து, அதன் இயல்புகளைப் படம் பிடித்துக் காட்டிக் கொண்டிருக்கும் கவிஞர் கள் மட்டும் எப்படி அதுபற்றிப் பாடாமல் இருக்கமுடியும்? இன்று நம் நாட்டுக் கவியரங்குகளில் அதிகமாகப் பாடப்படும் பொருள் இதுவே. வர்க்கபேதங்கள் வேரூன்றிப் போய்விட்ட இம்மண்ணில் அதை வேரோடும் வேரடி மண்ணோடும் பேர்த்தெறிவதற்காகக் கவிதையைக் கைவாளாக ஏந்திப் போராடும் கவிஞர்கள் பலர். வழிகளில் மாறுபாடு கொண்டிருந்தாலும் இலட்சியத்தில் மாறுபாடு எவருக்கும் இருக்கமுடியாதல்லவா? ஏழை, ஏழை யாகவே இருக்கட்டும் என்று இதயம் உள்ள எவனும் கூறமுடியுமா? கலை இலக்கியப் பெருமன்றம், முற்போக்கு எழுத்தாளர் சங்கம் போன்ற அமைப்புகளும் பல்வேறு தலைவர்கள், கவிஞர்கள் பேரில் ஆங்காங்குள்ள மன்றங்களும் இத்தலைப்பில் அடங்கும் பணிகளைப் புரிந்து வருகின்றன. பொதுவுடைமையைப்பற்றிக் குறிப்பிட்ட கட்சிக் கவிஞர்களேயன்றி பல்வேறு துறைகளில் பணி புரிபவர்களும் பாடிவருகின்றார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

**சமுதாயச் சீர்திருத்தக் கவியரங்குகள்:**

நமது சமுதாய அமைப்பினையே மாற்றியமைப்பதற்காகப் பாடும் கவிஞர்கள் பங்கேற்பது பொதுவுடைமைக் கவியரங்குகள்,

ஆனால் இந்தச் சமுதாயத்தில் ஆங்காங்கு காணப்படும் சீர்கேடு களையும் முரண்பாடுகளையும் சுட்டிக்காட்டி அவைகளைப் போக்கும் நோக்கோடு நடத்தப்படும் கவியரங்குகள் இவ்வகையில் அடங்கும். சாதி, மதம், இனம் போன்ற பேதங்களால் நிகழும் கேடு ளையும் மக்கள் மனங்களை ஆட்டுவிக்கும் மூடப்பழக்கங்களையும் களைந்தெறிவது இத்தகைய கவியரங்குகளில் பாடற்பொருளாக அமையும். இத்தகு கவியரங்குகளும் இன்று நம் நாட்டில் பரவலாக நடத்தப்பட்டுவருகின்றன. பெரும்பாலும் அரசியல் கட்சிகளுக்கு அப்பாற்பட்ட நிலையிலேயே இக்கவியரங்குகள் நடத்தப்படு கின்றன. இக்கவியரங்க மேடைகளில் சிலபோது பொதுவுடைமை' பகுத்தறிவுவாடைகளும் வீசக் காணலாம். கோவையில் இலக்கியப் பணிபுரியும் 'வானம்பாடி' அமைப்பு, 'தமிழ் கவிஞர் பெருமன்றம்' போன்ற அமைப்புகள் இவ்வரிசையில் குறிப்பிடத்தக்கன.

**அரசியல் கவியரங்குகள்:**

நம் தமிழகத்தைப் பொறுத்த வரையில் இங்குள்ள அரசியல் கட்சிகளிடையே வேறு கருத்துகளில் முரண்பாடுகள் காணப்பட் டாலும் தாய்மொழியாகிய தமிழைப்போற்றி வளர்ப்பதில் யாரை யும் குறைத்து மதிப்பிடமுடியாது. உணர்வின் அளவில்வேண்டு மானால் வித்தியாசம் காணமுடியுமே யன்றித் தமிழுணர்வே இல்லாத கட்சிகள் என்று எதையும் கூறமுடியாது அதனால்தான் ஒவ்வொரு கட்சியும் இலக்கியப் பணிபுரிவதற்கென்றே ஒரு பிரிவு தனைத் தத்தம் கட்சிக்குள் ஏற்படுத்திகொண்டு செயல்பட்டு வருகின்றன. அரசியலை வளர்ப்பதற்கு இலக்கியத்தையும் ஒரு கருவியாக அவர்கள் கையாண்டாலும் அதனால் இலக்கியமும் வளர்ந்துதான் வருகிறது இலக்கிய அணி, அண்ணா, தமிழ் இலக்கியக் கழகம், கலை இலக்கியப் பெருமன்றம், முற்போக்கு எழுத்தாளர் சங்கம் போன்ற அரசியல் தொடர்புடைய அமைப்பு களால் நடத்தப்படும் கவியரங்குகளும், பல்வேறு கட்சிகளால் அக் கட்சித்தலைவர்களைப்பற்றியும், கொள்கைகளைப் பற்றியும்நடத் தப்படும்கவியரங்குகளும் இவ்வகையில் அடங்கும். அரசியல்மேடை களில் கவிதைகள் இடம் பெறுவது அண்மைக்கால வளர்ச்சியே.

**அரசு விழாக் கவியரங்குகள்**

தமிழ் வளர்ச்சிக்காக அரும்பணிகள் பலவற்றை ஆற்றிவரும் அரசினரும் பல்வேறு கவியரங்குகளை அவ்வப்போது நடத்திக் கவிதைச்சுவையினைப் பலரும் அருந்தச் செய்து வருகின்றனர்.

சுதந்திர தினம், குடியரசுத் தினம்போன்ற நாட்களிலும் நாட்டு முன்னேற்றத்திற்காக நற்றொண்டுகள் புரிந்து இயற்கை எய்திய தலைவர்கள், கவிஞர்கள், அறிஞர்கள் ஆகியோரின் நினைவு நாட்களிலும் நடத்தப்படும் விழாக்களில் கவியரங்குகளை நடத்தி வருகின்றனர். தந்தை பெரியார், பெருந்தலைவர் காமராஜர், பாரதியார் பாரதிதாசன், பேரறிஞர் அண்ணா போன்றோரின் நினைவு நாட்களிலும் கவியரங்குகளை நடத்துவதுடன் அரசின் திட்டங்களான கூட்டுறவு, குடும்பக் கட்டுப்பாடுபோன்றனவற்றை விளக்கும் கவியரங்குகளும் நடத்தப்பட்டுவருகின்றன. வானொலி, தொலைக்காட்சி போன்ற அரசு நிறுவனங்களால் அவ்வப்போது நடத்தப்படும் கவியரங்குகளையும் இப்பட்டியலில் சேர்க்கலாம்.

### அறிவியல் கவியரங்குகள்

'நேற்றைய அறிவு, இன்றைய அறிவுடன் ஒப்பிடும்போது அறியாமையாகி விடுகின்றது' என்று சொல்லுமளவிற்கு 'அறிவியல், வளர்ச்சிபெற்றுவருவதையறிவோம். இன்றையஉலகமே அறிவியல் மயமாகி வரும்போது, தமிழ்க் கவிஞர்கள் மட்டும் அதைப் புறக் கணிப்பார்கள் என்றால் எப்படித் தமிழ் வளர முடியும்? இன்றைய இளங்கவிஞர்களில் பலர் அறிவியல் நோக்கோடு சிந்திக்கப் பழகியுள்ளதால் இலக்கியக் கவியரங்குகளிலும்கூட அறிவியல் மணம் கமழ்வதை உணர முடிகிறது. அறிவியலைத் தலைப்பாகக் கொண்டே ஆங்காங்கு பல கவியரங்குகள், மருத்துவக் கல்லூரிகள் பொறியியற் கல்லூரிகளிலும் மேலும் பல அமைப்புகளாலும்நடத்தப்பட்டுவருகின்றன. சுகாதார வாழ்விற்கான வழிகள்,சூழ்நிலை-தூய்மைக் கேடுகள், அளவான குடும்பம், சத்துணவுகள், போன்ற தலைப்புகளில் நடத்தப்படும் கவியரங்குகள் இவ்வரிசையில் அடங்கும். அறிவியல் ஆய்வுக்கூடங்களிலும், தொழிற்சாலைகளிலும்கூட இத்தகு கவியரங்கள் நடத்தப்படுகின்றன. கவியரங்கின் வளர்ச்சியில் இது ஓர் குறிப்பிடத்தக்க முன்னேற்றமேயாகும்.

### பருவகாலக் கவியரங்குகள்

நாட்டைப் பற்றியும், அங்கு நடக்கும் நிகழ்ச்சிகள் பற்றியும் மட்டுமே கவியரங்குகள் நடத்தப்பட்டால் போதுமா? சமுதாயச் சீர்கேடுகளையும் அறிவியல் வளர்ச்சிகளையும் கவிதைகளாக வடித்து விட்டால் போதுமா? நமது மண்ணின் மணம் கமழுகின்ற விதத்திலும் கவியரங்குகள் நடத்தப்படவேண்டும் அல்லவா? அதனையும் நம் கவிஞர்கள் விட்டுவைக்கவில்லை. நமது நாட்டுப்

பண்பாடுகளைக் காட்டுகின்ற விதத்திலும் சில கவியரங்குகளை நடத்தி வருகின்றனர். ஓராண்டில் மாறிவருகின்ற பருவங்களை யொட்டியும் கவியரங்குகள் நடத்தப்படுகின்றன. உழவர்களின் சிறப்பைக் குறிக்கும் பொங்கல் விழா, தமிழ்ப்புத்தாண்டுப் பிறப்பு விழா போன்ற பருவகாலக் கவியரங்குகள் ஆண்டுதோறும் நாடெங்கிலும் நடத்தப்படுகின்றன. கட்சி அரசியல்களைக் கடந்து நடத்தப்படும் கவியரங்குகள் இவை. இவைகளேயன்றி கிறிஸ்துமஸ், முஹரம்போன்ற மதத்தொடர்பான விழாக்களை யொட்டி நடத்தப்படும் கவியரங்குகளும் இப்பருவகாலக் கவியரங்குகள் என்ற பட்டியலில் அடங்கும்.

**தனிமனிதர் பற்றிய கவியரங்குகள்**

சமுதாயத்தைப் பற்றியும் அதில் நிலவும் கொடுமைகளைப் பற்றியும் கவியரங்குகள் நடத்தப் பெறும் நிலையில் ஆங்காங்கு சில மனிதர்களைப் பற்றியும் கவியரங்குகள் நடத்தப்பெற்று வருவதைக் காண்கிறோம். சங்க இலக்கியங்களில் அமைந்துள்ள புறப் பாடல்கள் எல்லாம் பெரும்பாலும் அரசன் அல்லது செல்வர் என்ற தனிமனிதனைப் பற்றியதே! அது போன்ற நிலை இன்றும் நிலவி வருவதைக் காண்கிறோம். நல்ல செயல் செய்த செல்வர்களைப் பற்றியும் சிறந்த அறிஞர்களைப் பற்றியும் அவர்கள் குணச்சிறப் பியல்புகளைக் கூறுகின்ற விதத்தில் கவியரங்குகள் நடத்தப்படு கின்றன. உயிர் வாழ்பவர்களேயன்றி இயற்கையெய்தியவர்களும் கவிதைப்பொருளாக அமைவதுண்டு. அதுவேயன்றி திருமணவிழாக் கவியரங்கங்கள், அறுபதாம் வயது நிறைவு விழாக் கவியரங்குகள், பிறந்தநாள் விழாக் கவியரங்குகள், பாராட்டு விழாக் கவியரங்குகள், பரிசளிப்பு விழாக் கவியரங்குகள் போன்ற நிலையில் நடத்தப்படும் கவியரங்குகள் எல்லாம் இத்தலைப்பில் அடங்கும்.

## கவிஞர்களை உருவாக்கும் அமைப்புகள்

'கவிஞர்கள் பிறக்கின்றார்கள்' என்று சொல்லப்படுவது ஓரளவு உண்மையே யெனினும் கவிதையெழுதும் ஆர்வமும் முயற்சியும் உடையோரைச் சரியான வழியில் நெறிப்படுத்தி, அவர்கள் சிந்தனையைச் செழுமைப்படுத்தி உண்மைக்கவிஞர் களாக அவர்களை உருவாக்குவதற்குச் சில அமைப்புகள் தேவை. இல்லையென்றால் அவர்தம் உணர்வு வெள்ளம் காட்டாற்று வெள்ளம் போல் கரைபுரண்டு ஓடிச் சமுதாயத்திற்குத் தீங்கினை

விளைத்து விடும். இவ்வகையில் கவிஞர்களை நல்வழிப்படுத்தி உருவாக்குவதற்கு நாட்டில் பல அமைப்புகள் சீரிய பணியாற்றி வருகின்றன. அந்த அமைப்புகளால் உருவாக்கப்பட்ட கவிஞர்களும் மிகப் பலராவர். அவற்றுள் சிலவற்றை இங்குக் காண்போம்.

**கலை இலக்கியப் பெருமன்றம்**

சமுதாய மாற்றத்திற்கு இலக்கியங்கள் துணைசெய்ய வேண்டும்; அத்தகு சீரிய இலக்கியங்களைப் படைக்க வேண்டும் என்ற உயரிய நோக்கோடு அமைக்கப்பட்டு அரும்பணியாற்றி வரும் அமைப்பு இது. கட்சிக்கண்ணோட்டமின்றிச் சிறந்த சிந்தனையுடைய அறிஞர்கள் பலர் இதில் உறுப்பினர்களாகவும் பொறுப்பாளர்களாகவும் இருந்து செயல்பட்டு வருகின்றார்கள் தவத்திரு. குன்றக்குடி அடிகளார்அவர்கள், ஜெயகாந்தன், கவிஞர் கே. சி எஸ். அருணாசலம், திருச்சிற்றம்பலக் கவிராயர் போன்றவர்கள் பொறுப்பாளர்களாக உள்ள இந்த அமைப்பில் நாடெங்கும் பல்வேறு துறைகளில் பணியாற்றும் கவிஞர்கள், கலைஞர்கள் உறுப்பினர்களாக உள்ளனர்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதாம் ஆண்டில் நாட்டின் பல்வேறு பாகங்களிலும் இம்மன்றத்தால் நடத்தப்பட்ட கவியரங்குகளில் பங்கேற்ற கவிஞர்களும் பலராவர். 'நெஞ்சு பொறுக்குதில்லையே', 'சொல்லக் கொதிக்குதடா நெஞ்சம்' போன்ற தலைப்புகளில் கவியரங்குகள் நடத்தியதோடன்றி பாரதி விழா, பாரதிதாசன் விழா, பட்டுக்கோட்டையார் விழா, ஜீவா நினைவு நாள், சாமி. சிதம்பரனார் நினைவு நாள் போன்ற விழாக்களையொட்டியும் கவியரங்குகள் நடத்தியுள்ளனர். கவிஞர்கள் அரசு. மணிமேகலை, உதயகுமார், ராஜ்மோகன் மணி முடி, மு. சம்பத், செவ்வியன், நிர்மலா, பன்னீர்செல்வம், செங்கைவேந்தன், பொன்னடியான், ஜீவபாரதி, பழநி சுந்தரேசன், ஈ. கேசவன், கே. முத்தியாலு, புவியரசு, ராஜகோபால், வைரமுத்து, அமர சிகாமணி, பிரசாத், பொன்மணி வைரமுத்து, அருள்மறைச் செல்வி, எம் வி. உதயகுமார், இளைய பாரதி, திருமலை ராஜன். காவிரி விஜயன், மணிமாறன், கரு. நாகராசன், கோ. வெள்ளைச்சாமி, சோலை. வெற்றிக் கண்ணன் போன்றவர்கள் இம்மன்றத்தால் நடத்தப்பட்ட கவியரங்குகளில் பங்கேற்றுக் கவிமாரி பொழிந்தவர்களில் குறிப்பிடத்தக்கவராவர்.

**முற்போக்கு எழுத்தாளர் சங்கம்**

முற்போக்கு இலக்கியங்கள் பெருகிவரும் இந்நாளில் சமுதாய மேம்பாட்டிற்குப் பயன்படுகின்ற முற்போக்கு இலக்கியங்களைப் படைக்கும் எழுத்தாளர்களை உருவாக்குவதற்காகச் செயற்பட்டு வரும் அமைப்பு இது. கே முத்தையா, கவிஞர் தணிகைச்செல்வன் போன்ற எழுத்தாளர்கள் பொறுப்பேற்றுள்ள இந்த அமைப்பின் சார்பில் எண்பதாம் ஆண்டில் நாட்டின் பல பாகங்களிலும் நடைபெற்ற கவியரங்குகள் பல. குறிப்பாக மக்கள் கவிஞர் பட்டுக்கோட்டைக் கல்யாணசுந்தரத்தின் பொன்விழா ஆண்டாக அது இருந்ததால் பல கவியரங்குகள் அக்கவிஞரைப் பற்றி நடைபெற்றன. அத்துடன்பாரதி விழா, பாரதிதாசன் விழாவையொட்டிய கவியரங்குகளும் நடைபெற்றன. கவிஞர்கள் தணிகைச் செல்வன், சுந்தரவரதன், செல்வராஜ், சோமசுந்தரம், பிச்சை முத்து, இளங்குமரன், இளைய பாரதி, கபிலர், கரு. நாகராசன், கவியமூர்த்தி, மகாதேவிபோன்ற பல கவிஞர்கள் பங்கேற்றுக் கவி பாடினர்.

**தமிழ்க் கவிஞர் பெருமன்றம்**

அரசியல் கட்சிகட்கு அப்பாற்பட்ட நிலையில் சமுதாயச் சீர் திருத்தப் பணிகளைக் கவிதைகளின் மூலம் செய்து வருகின்ற சிறந்த அமைப்பு இது. இந்த அமைப்பின் நோக்கமே தரமான தமிழ்க்கவிஞர்களை உருவாக்குவதுதான். அந்தச்சீரிய நோக்குடன் திங்கள்தோறும் முதல் ஞாயிறு மாலை கடற்கரையில் கவியரங்குகளை நடத்தி வருகின்றனர். எவர் வேண்டுமானாலும் பங்கேற்கலாம். அப்படிப் பங்கேற்று உருவாகிய கவிஞர்கள் பலர். கவிஞர்கள் நாவேந்தன், ம.சி.சொக்கலிங்கம், நா. இராம சுந்தரம், கருப்பக்கிழார், தமிழடியான், இடிமுரசு, வெங்கனூர் புகழேந்தி, கரூர் க. சந்திரசேகர், முழுமுதலோன், செங்கதிர் வாணன், குழ. கதிரேசன், பாலச்சந்திரன், ஜேகப், நெல்லை, வசந்தன், நீதிநேசன், மதிஒளி, வான்முகில், முத்து எத்திராசன். முகில் வண்ணன், அ. மனோகரன், நா. மூர்த்தி, துரை, எழிலன், தமிழ்க்குழவி, பொதுமைப்பித்தன், பூதப்பாண்டியன், தாழை. கலீல் கிப்ரான் போன்ற பல கவிஞர்கள் இம்மன்றத்தால் பயன் பெற்றவர்கள். மாநிலத்தின் பல மாவட்டங்களிலும் கிளைகளைப் பெற்றிருக்கின்ற இம்மன்றத்தின் பொதுச்செயலாளர் கவிஞர். பொன்னடியான் அவர்கள். எண்பதாம் ஆண்டில் இம்மன்றத்தின் சார்பில் பாரதி விழா, பாரதிதாசன் விழா, பட்டுக்கோட்டையார் விழா போன்ற பல விழாக்களையொட்டிக் கவியரங்குகள் நடைபெற்றன.

**பகுத்தறிவாளர் கழகம்**

தந்தை பெரியார் அவர்களின் பகுத்தறிவுக் கருத்துகளை நாட்டில் பரப்பும் நோக்குடன் தமிழ் இலக்கியப்பணி புரிந்துவரும் இக்கழகத்தின், புரவலர் திரு. கி. வீரமணி அவர்கள். நாடெங்கும் கிளைகளைப் பெற்றுள்ள இக்கழகத்தில் தமிழகத்தின் முன்னணிக் கவிஞர்கள் பலர் இடம்பெற்றுள்ளார்கள். உவமைக்கவிஞர் சுரதா புலவர். புலமைப்பித்தன், கவியரசு.முடியரசன், பொன்னிவளவன், கருணானந்தம், மீனாட்சிசுந்தரம், தஞ்சைவாணன், நாரா. நாச்சியப்பன், குடியரசு, மாரி. விசுவநாதன், கவுதமன், கவி. பூங்குன்றன் ஆற்றலரசு, முருகு சுந்தரம், குயில்தாசன்' ஆ. பழநி, குருவிக்கரம்பை. சண்முகம்,ஈரோடு தமிழன்பன்,சாமி.பழநியப்பன் அரிமதி, தென்னகன், பொன்னடியான், மணிமொழி, கரு, நாகராசன் போன்ற பல கவிஞர்கள் இக்கழகத்தினரால் எண்பதாம் ஆண்டில் நடத்தப்பெற்ற தந்தை பெரியார் விழா, பாவேந்தர் விழாக் கவியரங்குகளில் பங்கேற்றுள்ளனர்.

**கோவை - வானம்பாடி**

தொழில் வளமிக்க கோவை மாநகரில் தமிழ்க்கவி வளமும் சிறந்தோங்க ஆர்ப்பாட்டமின்றி அரும்பணியாற்றிவரும் அமைப்பு இது. திங்கள்தோறும் குறிப்பிட்ட நாளில் ஆர்வமுள்ள கவிஞர்கள் அனைவரும் ஒருங்குகூடித் தாம் இயற்றிய கவிதையை அரங்கேற்று வர். திறனாய்வும் செய்வர். தொழிலாளர் மிகுந்த பகுதியாதலால் உரிமை முழக்கங்களையும், சமுதாய சீர்கேட்டைத் தகர்க்கும் வேட்டொலிகளையும்அங்கு அடிக்கடி கேட்க முடியும். எண்பதாம் ஆண்டில் இந்தஅமைப்பின் சார்பில் பல கவியரங்குகள் நடைபெற்றன. இந்த அமைப்பைச் சேர்ந்த கவிஞர்களில் சிற்பி. பாலசுப்பிரமணியம் குறிப்பிடத்தக்கவராவர்.

**மாங்குயில்**

சென்னை மாநகரில் தொழிற்சாலைகள் மிகுந்துள்ள பகுதியாகிய அம்பத்தூரில் இளங்கவிஞர்கள் பலர் ஒருங்கு கூடிப் புரட்சிக் கவி மலர்களைப் படைத்து வருகின்றார்கள். அவர்களது அமைப்பே மாங்குயில். பாரதியாராகவும், பாரதிதாசனாகவும், பட்டுக்கோட்டையாராகவும் எதிர்காலத்தில் வருவதற்குரிய பயிற்சியை இப்போதே பெற்றுவரும் இந்த இளங்கவிச் சிங்கங்களின் தளபதியாக கவிஞர் ஜீவபாரதி, பழநி சுந்தரேசன் போன்றவர்கள் செயல்பட்டு வருகின்றார்கள். எண்பதில் பல கவியரங்குகளை இவர்கள் நடத்தியுள்ளனர். கலை இலக்கியப் பெரு மன்றத்தின் கிளையாகவே இந்த அமைப்பு இயங்கி வருகிறது.

**இலக்கிய வீதி - கவிதைப் பண்ணை**

பல நாட்டுப் பறவைகளும் ஒருங்கு கூடி மகிழும் வேடந்தாங்கல் என்ற ஊருக்கு அருகிலுள்ள விநாயகநல்லூர் என்ற ஊரில் இலக்கியப் பறவைகள் ஒன்றுகூடி மகிழுமாறு செயல் பட்டுவரும் அமைப்பே இலக்கிய வீதி. திங்கள்தோறும் புதினங் களைத் திறனாய்வு செய்வதுடன் கவிதைஅரங்கேற்றமும் செய்து வருகின்றனர்.

இந்த அமைப்பை இயக்கி வருபவர் எழுத்தாளர் இனியவன் ஆவார். கவிதையின் வளர்ச்சிக்கு இன்னும் அதிக முக்கியத்துவம் தர வேண்டும் என்ற ஆர்வத்துடன் இந்த அமைப்பைச் சேர்ந்த சிலர் 'கவிதைப் பண்ணை' என்ற அமைப்பினையும் இதன் துணை அமைப்பாகத் தோற்றுவித்துத் திங்கள்தோறும் கவியரங்குகளை நடத்தி வருகின்றனர். எண்பதாம் ஆண்டில் 'கவிதைப்பண்ணை' யில் பங்கேற்றுப் பாடிய கவிஞர்கள் பலர் மதுராந்தகத்தில் செயல் பட்டு வரும் இப்பண்ணையின் அமைப்பாளர் புலவர். வே. இளந்திரையன் அவர்கள். கவிஞர்கள் இரகுவீரன். தாரா பாரதி, பல்லவன், அறிவொளி, சி.சண்முகம், எம். வி. குமார், ஸ்ரீஹரி, கரு. நாகராசன் போன்ற பல கவிஞர்கள் இக்கவிதைப் பண்ணைக் கவியரங்குகளில் பங்கேற்றுள்ளனர்.

**தமிழ்க்கழகம்**

மொழி உணர்வினையும் இன உணர்வினையும் இரு கண்களெனக் கொண்டு திருக்கழுக்குன்றத்தில் இயங்கிவரும் அமைப்பு இது. திங்கள்தோறும் இலக்கியச் சொற்பொழிவுகளையும் கவியரங்குகளையும் நடத்தி, பல கவிஞர்களை உருவாக்கிய பெருமை இதற்குண்டு. எண்பதாம் ஆண்டில் பாரதி விழா, பாவேந்தர் விழா, பொங்கல் விழா, தமிழ்ப் புத்தாண்டு விழா போன்ற விழாக்களில் கவியரங்குகளை நடத்தியுள்ள இக்கழக நிகழ்ச்சிகளில் கவிஞர் மு. பி. பாலசுப்பிரமணியம், மா. சு. மணி, சி. சண்முகம், வைகறை, சிவசங்கரன், பாலசந்திரன் அசோக்குமார் ஜெயின், வே. இளந்திரையன் கரு. நாகராசன் போன்ற பல கவிஞர்கள் பங்கேற்றுக் கவி பாடியுள்ளனர்.

**திருக்குறள் பேரவை**

திருக்குறட் கருத்துகளைச் சமுதாயத்தில் பரப்பி, அதன் மூலம் மக்கள் மனத்தில் விழிப் புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற பெருநோக்கோடு 'குறள்நெறிக் காவலர்' தவத்திரு. குன்றக்குடி

அடிகளார் அவர்களால் நடத்தப்பட்டு வரும் பேரவை இது. மாவட்டங்கள் தோறும் கிளைகளைப் பெற்று, சமுதாயப்பணி யையும் தமிழ்ப்பணியையும் புரிந்து வரும் இப்பேரவையின் சார்பில் எண்பதாம் ஆண்டில் ஏறத்தாழ தமிழகத்தின் எல்லாப் பகுதி களிலும் கவியரங்குகள் நடைபெற்றுள்ளன. இப்பேரவையால் நடத்தப்பட்ட கவியரங்குகளில் பெரும்பாலும் திருக்குறளை மையமாகக் கொண்டே தலைப்புகள் தரப்பட்டுள்ளன. கவிஞர்கள் சொ. சிங்காரவேலன், சாமி, பழநியப்பன், சவஹர்லால், அரு. நாகப்பன், கரு நாகராசன், ஜெகதீசன், இராகவன், திருநாவுக்கரசு, கதிரேசன், மரு. பரமகுரு, இளங்கீரன், பாலசுந்தரம், முருகு. சுந்தரம் போன்ற பல கவிஞர்கள் இப்பேரவைக் கவியரங்குகளில் பங்கேற்றுள்ளனர்.

## எண்பதாம் ஆண்டின் தனிச்சிறப்பு

முந்திய ஆண்டுகளுக்கில்லாத தனிச்சிறப்பு எண்பதாம் ஆண்டிற்கு உண்டு. காரணம், நமது தமிழ்ச்சமுதாயத்தில் மண்டிக் கிடக்கும் மடமைப் புதர்களை அறிவுக்களைக்கோட்டால் அகழ்ந்து எடுத்து, தமிழன் தமிழனாகத் தலைநிமிர்ந்து வாழ வழி வகுத்த தந்தை பெரியார் அவர்கள் இம்மண்ணில் தோன்றி நூறாண்டுகள் நிறைவெய்தியதை நினைத்துத் தமிழர் நன்றி உணர்வோடு நாடெங்கிலும் விழாவெடுத்து மகிழ்ந்த ஆண்டு அது. நாட்டின் பலபகுதிகளிலும் பகுத்தறிவாளர்கழகங்களின்சார்பிலும் திராவிட திராவிட முன்னேற்ற அண்ணா திராவிட முன்னேற்றக் கழகங்களின்சார்பிலும், தமிழ் நாடு அரசின் சார்பிலும் கவியரங்கு கள் நடத்தப்பட்டன. பெரும்பாலான கவியரங்குகட்கு, பகுத் தறிவுப் பாவரசர், மாண்புமிகு. புலவர். புலமைப்பித்தன் அவர்கள் தலைமை தாங்கியுள்ளார்கள். சில இடங்களில் உவமைக்கவிஞர். சுரதா அவர்களும் வேறு சிலரும் தலைமையேற்றுள்ளார்கள் பகுத்தறிவுப் பாவலர்கள் பலர் பங்கேற்று, தந்தை பெரியார் அவர் களின் சிந்தனைகளைச் செந்தமிழ்க் கவிதைகளாக முழங் கினார்கள்

தந்தை பெரியார் அவர்களின் நூற்றாண்டு விழாவினையும் கொண்டாடிய அதே ஆண்டு தலைசிறந்த ஒரு தமிழ் கவிஞனின் அரைநூற்றாண்டு விழாவினையும் கொண்டாடும் பெருமையைப் பெற்றுவிட்டது. ஆம்! நம்முடையஅறியாமையினையும், நம்மைத் திருத்தி நல்வழிப்படுத்த வேண்டி இதற்கு முன்பு பலர் செய்த முயற்சிகள் பயனற்றுப் போய்விட்டதனையும் எண்ணி வருந்தி,

''உப்புக் கல்லை வைரமென்று சொன்னால்—நம்பி
ஒப்புக் கொள்ளும் மூடருக்கு முன்னால்—நாம்
உளறியென்ன கதறியென்ன
ஒன்றுமே பலிக்கவில்லை தோழா —ரொம்பநாளா''

என்று பாடிய மக்கள் கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தின் பொன்விழா ஆண்டும் எண்பதுதான்! அவரின் பெருமைகளை நினைவுகூரும் வகையில் தமிழ் நாடு கலை இலக்கியப் பெருமன்றம், முற்போக்கு எழுத்தாளர் சங்கம் போன்ற அமைப்புகளும் கவிஞரிடத்தில் ஈடுபாடு கொண்ட வேறு சில இலக்கிய அமைப்புகளும் நாடெங்கும் கவியரங்குகளை நடத்தியது. முற்போக்குக் கவிஞர்கள் பலர் அக்கவியரங்குகளில் பங்கேற்று முழங்கினார்கள்.

## எண்பதில் தமிழ்க் கவிதையின் நிலை

ஆலயங்களுக்குள்ளும், அரண்மனைகளுக்குள்ளும், அடங்கிக் கிடந்த தமிழன்னையைப் பொதுமக்களின் பார்வைக்கு அழைத்து வந்த பெருமை மகாகவி பாரதியாரையே சாரும். அதன் பிறகு தான் பலர் அவளை உண்மையான பாச உணர்வோடு பார்க்கத் தொடங்கினர்கள். உள்ளத்து உணர்வுகளுக்கு உருக்கொடுத்துத் தெள்ளுதமிழ்க் கவிதைகளை வடிக்கும் பாங்கு பாவேந்தர் பாரதி தாசன் போன்ற புதுயுகக் கவிஞர்களிடமிருந்தே தோன்றியது. அவ்வுணர்வு அண்மைக்காலத்துக் கவிஞர்களிடம் மேலோங்கி நிற்பதைக் கண்டு நிச்சயம் தமிழன்னை நெஞ்சம் பூரிப்பாள். கவிதையெழுதுவோரின் எண்ணிக்கை சில ஆண்டுகளாக அதிகரித்து வருவதுபோலவே சமுதாயத்தின் போக்குகளைச் சரி யாகப் புரிந்து கொண்டு திறனாய்வு செய்யும் பாங்கும் இன்றைய கவிஞர்களில் பெரும்பாலோரிடம் காணப்படுகிறது. பொழுது போக்குக்காகக் கவிதை படைக்க விரும்புவோர் இன்று சிலரே. ஆனால் நாட்டில் நடத்தப்படும் கவியரங்குகளில் பல இலக்கியச் சுவைக்காக மட்டும்தானோ என்ற ஐயம் இங்குக் காட்டப்பட்ட நிகழ்ச்சிநிரல்களால் எழுவது இயல்பே.

எனினும் இங்கு இடம்பெற்ற கவிஞர்களில் பலர் சிறந்த சிந்தனை வளம் படைத்தவர்கள் என்பதையும், சூழ்நிலை கருதிச் சில கவியரங்குகளில் பங்கேற்றிருப்பினும் சமுதாயத்தைப் புரிந்து பாடும் திறம் இவர்களுக்குண்டு என்பதையும் நாம் அறிவோம்.

நிகழ்ச்சிநிரலில் இடம்பெறாத பல இளங்கவிஞர்கள் கொடுமைகளை இனங்கண்டு குமுறி வெடிக்கும் எரிமலைகளாகி, அனல் கக்கும் கவிதைகளை வடித்து வருவது நாளைய சமுதாயத்தின் நல் விடியலுக்கு அறிகுறியாகும். அவர்களை வாழ்த்தி வரவேற்பது முதுபெருங்கவிஞர்களின் முக்கியக் கடமையாகும். எண்பதாம் ஆண்டில் பல இளங்கவிஞர்கள் கவியரங்க மேடைகளுக்குப் புதுப்பொலிவை யூட்டியுள்ளார்கள். அவர்களில் பலரிடம் முறையான சிந்தனையுள்ள அளவுக்கு முறையான அமைப்பில் கவிதையின் வடிவம் அமையாதது ஒரு குறையே. இருப்பினும் அவர்களின் வளர்ச்சி காலத்தின் பிரதிபலிப்பாகி விட்டதால் நாமும் அதை விரும்பி ஏற்போம். அந்த வகையில் எண்பதாம் ஆண்டில் கவிதைபாடிய கவிஞர்களை இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. புதுக்கவிதை பாடுபவர்கள்
2. மரபுக்கவிதை பாடுபவர்கள்

இவர்களைப் பற்றிச் சிறிது விரிவாக நோக்குவோம்.

கூறும் கருத்துத்தான் முக்கியமே தவிர அதற்கு வடிவம் முக்கியமல்ல என்ற எண்ணத்துடன் மின்வெட்டுகளைப் போன்ற சிந்தனைகளை வெளியிட்டு வருபவர்கள் புதுக்கவிதை வாணர்கள். குறைகளைச் சரியாகக் கண்டு நேரடியாகத் தைக்குமாறு அவர்களில் சிலர் பாடுவது பாராட்டற்குரியதே. ஆனால் சிலர் வடசொற்களையும் ஆங்கிலச் சொற்களையும் வலிந்து கையாண்டு, கூறும் கருத்தையும் குழப்பிக் காட்டுவது அவர்கள் 'மேதா விலாசத்தை'க் காட்டுவதாகத் தப்புக்கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். எவ்வித ஒழுங்கும் இல்லாமல் கட்டப்படும் 'வார்த்தைத் தோரணங்கள்' எவ்வளவு காலத்திற்கு நிலைத்து நிற்கும் என்பதைக் காலம்தான் உணர்த்த வேண்டும். சிறந்த கருத்துகளும் கூட முறையோடு கூறப்படாததால் மறைந்து போகும் நிலை தோன்றலாம்! சில சமயங்களில் புதிய முறைகளுக்குத் திடீர் வரவேற்பு இருப்பதுபோலத் தோன்றலாம். அதைப் பார்த்து மயங்கி முறையான பாதையில் சென்றவர்களும் கூடப் புதிய முறைகளைத் தேடிவரலாம்; வெற்றியும் பெறலாம். ஆனால் இலக்கியத் தகுதி அப்புதிய முறைகளுக்கு உண்டா என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். பாரதியாரின் 'குயில் பாட்டு', பாவேந்தரின் 'குடும்ப விளக்கு' போன்ற காவியங்களைப் புதுக்

கவிதையால் படைக்க முடியுமா? துணுக்குச் செய்திகளே கவிதைத் தகுதியைப் பெற்றுவிட முடியுமா? இளங்கவிஞர்கள் இதனை எண்ணிப் பார்ப்பது நல்லது.

இத்தனை புது அலைகளுக்கிடையிலும் மரபு பிறழாமல் அதே சமயம் சிறந்த சிந்தனைகளை உணர்ச்சிபூர்வமாகக் கூறி வருகின்ற கவிஞர்கள் பலர் இருக்கத்தான் செய்கிறார்கள். புதுக் கவிதை மோகத்தால் இவர்கள் எவ்விதப் பாதிப்பையும் அடைந்து விடவில்லை. மாறாக, முன்பிருந்ததைவிட மெருகேறிய கவிதை களையே இப்போது அவர்கள் படைத்து வருகிறார்கள். சிந்தனை யில் புதுமை வேண்டுமேயன்றி, எந்தவித முறையும் இல்லாமல் கூறுவதே புதுமையென்று யெண்ணி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ள வேண்டியதில்லை. நம்முடைய பண்பாடு பழையது என்று எண்ணிப் புறக்கணிக்காது இன்னும் அதனைப் போற்றிப் பின்பற்றி வருவதனால்தான் தமிழினம் தலைசிறந்த இனமாகத் திகழ்கிறது. தமிழ்க்கவிதை அமைப்பிற்கும் இந்த உண்மை பொருந்தும்.

**நிறைவுரை**

அண்மையில் சில ஆண்டுகளாகவே தமிழ்க்கவிதை யாற்றில் புரட்சிப்புனல் பெருக்கெடுத்துப் பாய்ந்து கொண்டிருந்தாலும் எண்பதாம் ஆண்டு அவ்வகையில் தனியிடம் பெற்றுள்ளது. தமிழ்ச்சமுதாயத்தில் ஏற்பட்டுவரும் மாற்றங்களை, ஏமாற்றங் களை உடனுக்குடன் பாடத்துடிக்கும் கவிஞர்களின் ஆர்வமும் கவிதையைச் சுவைப்போரின் ஆர்வமும் அதற்குக் காரணங் களாகக் கருதப்பட்டாலும் தந்தை பெரியார் அவர்களும் கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரமும் முக்கியக் காரண கர்த்தாக்கள் ஆவர். பெரும்பாலான கவியரங்குகளில் மரபுக் கவிதைகளே மணம்பரப்பினாலும் பெரும்பாலான பத்திரிகைகளில் புதுக்கவிதைகளே இடம்பெற்றுள்ளன. இந்நிலையைக் கொண்டு நோக்கினால் கவியரங்கில் பாடுவதற்கும் காவியங்கள் படைப்பதற் கும் மரபுக்கவிதைகள்; பத்திரிகைகளில் இடம்பெறுவதற்குப் புதுக்கவிதைகள் என்ற நிலை எதிர்காலத்தில் உருவாகக் கூடும் என்றே எண்ணத் தோன்றுகிறது.

"நமக்குத் தொழில் கவிதை; நாட்டுக் குழைத்தல்;
இமைப்பொழுதும் சோரா திருத்தல்..."

(பாரதியார்)

## சில நிகழ்ச்சி நிரல்கள்

எண்பதாம் ஆண்டில் தமிழகத்தின் பல்வேறு பாகங்களிலும் நடைபெற்ற கவியரங்குகள் பற்றிய செய்திகளை அறிய வேண்டிப் பல அமைப்புகளுக்கும் சில கவிஞர்களுக்கும் கடிதங்கள் எழுதப் பட்டன. நினைவூட்டுக் கடிதம் எழுதியும் பதில் எழுதாதவர்கள் பலர்; பொதுவான செய்திகளைத் தந்தவர் சிலர்; அது இங்குக் காட்டப்பட்டது. சிலரிடமிருந்தே நிகழ்ச்சி நிரல்கள் கிடைத்தன. நன்றிவுணர்வுடன் அவைகள் இங்கே வெளியிடப்படுகின்றன.

நாள் : 19. 1. 1980

இடம் : தாரமங்கலம் சன்மார்க்க சங்க 23-வது ஆண்டு விழா.

தலைவர் : கவிஞர். இளங்கம்பன்

தலைப்பு : காப்பியப்பெண்டிர்

கண்ணகி, பாஞ்சாலி, சானகி, காரைக்கால் அம்மையார், மணிமேகலை, மனோன்மணி ஆகியோரைப் பற்றிக் கவிஞர்கள் பெரி. சிவனடியான், தி. கு. நடராசன், கௌசல்யா, அரு. நாகப்பன், சோலை. நாகப்பன், சண்முககந்தசாமி ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 24. 1. 1980

இடம் : திருச்சி, பாரத மிகு மின்தொழிலக முத்தமிழ் மன்றப் பொங்கல் விழா.

தலைவர் : டாக்டர். அர. சிங்கார வடிவேலன்

தலைப்பு : மனிதனுக்குப் பாடம் புகட்டுபவை.

கடல், மரம், விலங்கு. ஆறு, பறவை ஆகியனபற்றிக் கவிஞர் கள் சோலை. நாகப்பன், அரு. நாகப்பன், சோம. சிவப்பிர காசம், மா. முத்துராமன், அழ. அண்ணாமலை ஆகியோர் கவிதை பாடினர்.

நாள் : 8. 2. 1980

இடம் : புதுக்கோட்டை மன்னர் கல்லூரி முத்தமிழ் விழா.

தலைவர் : பொற்கிழிக் கவிஞர். ச. சவகர்லால்

தலைப்பு : மாணவர்களைப் பற்றி...

வகுப்பறை, மாணவர்கள், பாடநூல், தேர்வு, ஆசிரியர், முதல்வர் என்ற தலைப்புகளில் கவிஞர்கள் ச. சாந்தகுமாரன்,

அரங்க நெடுமாறன், அரு. நாகப்பன், மா. முத்துராமன், கவிதைப்பித்தன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 10. 2. 1980

இடம் : திருப்பூர், அருள்நெறி வார வழிபாட்டுக் கழகம், 26-வது ஆண்டு விழா.

தலைவர் : கவிஞர். ச. சவகர்லால்

தலைப்பு : இவர்கள் இன்று வந்தால்—

கம்பர், வள்ளுவர், பாரதி, இளங்கோ, ஔவை ஆகியோரைப் பற்றிக் கவிஞர்கள் அரு. நாகப்பன், ம. வே. பசுபதி, ச. மாசிலாமணி, குருவம்மாள், மா. வரதராசன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 14. 2. 1980

இடம் : கரூர், மகா சிவராத்திரி விழா.

தலைவர் : கவிஞர். சு. சந்திரசேகர்

தலைப்பு : சிவன்

வந்தான், சிரித்தான், மணந்தான், சினந்தான், பெற்றான், ஈந்தான் என்ற தலைப்புகளில், கவிஞர்கள் விபுலானந்தம், மா முத்துராமன் பெ. இராமலிங்கம், அரு. நாகப்பன், கி. இராமசாமி, சத்தியபாமா ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 23. 2. 1980

இடம் : பனையபட்டி, மகேஸ்வர பூஜை

தலைவர் : கவிஞர். சுப. கதிரேசன்

தலைப்பு : முருகன் ..

என் தாய், தந்தை, குழந்தை, சேவகன், தலைவன், காதலன், ஆசான் என்ற தலைப்புகளில் கவிஞர்கள் மா. முத்துராமன், சந்திரசேகரன், அரங்க நெடுமாறன், தி. சு. மலையப்பன், செல்லமுத்து, அரு. நாகப்பன், சோலை. நாகப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 1. 3. 1980

இடம் : சேலம் மாவட்டம், வையப்பமலை இந்து தமிழிலக்கிய மன்றம்.

தலைவர் : கவிஞர் அரு. நாகப்பன்

தலைப்பு : தெய்வங்கள் நேரில் வந்தால்...

கணபதி, கலைமகள், முருகன், சிவன், பார்வதி, திருமால், திருமகள் பற்றிக் கவிஞர்கள் சோமசுந்தரம், எழில்வேலன், விபுலானந்தம் ,கோபால், முத்துராமன், பெரியசாமி, இரா. உருக்குமணி ஆகியோர் கவிதை பாடினர்.

நாள் : 17-3-1980

இடம் : பெங்களூர் தமிழ்ச்சங்க இலக்கிய மாநாடு

தலைவர் : கவிஞர் இளங்கோ பன்

தலைப்பு : தமிழிலக்கியத்தில் நகைச்சுவை

சிற்றிலக்கியங்கள், கம்பராமாயணம், கலிங்கத்துப்பரணி. கலித்தொகை, என்ற தலைப்புகளில், கவிஞர்கள் அரு. நாகப்பன், தா. கிருட்டிணமூர்த்தி, சுப்பிரமணியன், கு. துரைராசு ஆகியோர் கவிதை பாடினர்.

நாள் : 21-3-1980

இடம் : திருப்பத்தூர் ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கல்லூரி முத்தமிழ் விழா.

தலைவர் : கவிஞர் முடியரசன்

தலைப்பு ; இவர்கள் இன்று வந்தால் .....

திருவள்ளுவர், காந்தி அடிகள், வள்ளலார், பாரதியார், கலைவாணர் ஆகியோர் பற்றிக் கவிஞர்கள் ஆ. பழனி, சோம. சிவப்பிரகாசம், வி. தங்கவேலு, அரு. நாகப்பன் ஆகியோர் கவிதை பாடினர்.

நாள் : 22-3-1980

இடம் : மதுரை பாத்திமா கல்லூரி முத்தமிழ் விழா.

தலைவர் : டாக்டர். தமிழண்ணல்

தலைப்பு : திருவள்ளுவர் இன்று இவர்களைச் சந்தித்தால்...
மாணவர், ஆசிரியர், நடிகர், அரசியல்வாதி, உழவர், வணிகர் ஆகியோர் பற்றிக் கவிஞர்கள் ஆனந்தராசன், மா. கண்ணப்பன், அரு. நாகப்பன், டாக்டர். அர. சிங்கார வடிவேலன், உலகநாதன், சொ. சொ. மீ. சுந்தரம் ஆகியோர் கவிதை பாடினர்.

நாள் : 24-3-1980

இடம் : தேவகோட்டை சேவுகன் அண்ணாமலை கல்லூரி முத்தமிழ் விழா.

தலைவர் : டாக்டர். அர. சிங்கார வடிவேலன்

தலைப்பு : ஐம்பெரும் பூதங்கள்

வான், நிலம், நீர், காற்று நெருப்பு ஆகிய பொருள்கள் பற்றிக் கவிஞர்கள் அழ. அண்ணாமலை, சிவப்பிரகாசம், சபா. அருணாசலம், சுப. கதிரேசன், அரு. நாகப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 26-3-1980

இடம் : நாங்கூர் திருமலை கவியரங்கம்.

தலைவர் : கவிஞர் அரு. நாகப்பன்

தலைப்பு : மங்கலப் பொருட்கள்

மலர், சந்தனம், தாம்பூலம், வாழை, மஞ்சள் ஆகிய பொருள்கள் பற்றிக் கவிஞர்கள் சோலை. நாகப்பன், திலகவதி, க. தியாகராசன், தனஞ்செயன், சுப்பிரமணியன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 26-3-1980

இடம் : பூம்புகார் கலைக்கல்லூரித் தமிழ் விழா.

தலைவர் : கவி. அரு. நாகப்பன்

தலைப்பு : 'சபலங்கள்'

மது, மாது, பதவி, பொன் ஆகிய பொருள்கள் பற்றிக் கவிஞர்கள் த. தியாகராசன், வாஞ்சிநாதன், தனஞ்செயன், சோலை. நாகப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 29-3-1980

இடம் : காரைக்குடி கம்பன் திருநாள்.

தலைவர் : கி. வா ஜகந்நாதன்

தலைப்பு : 'கம்பன் நெறியில்........'

அன்பு தழைக்கட்டும், கல்வி மலரட்டும், அறம் செழிக்கட்டும், அறிவு வளரட்டும், ஒழுக்கம் நிலைக்கட்டும், உழைப்பு உயரட்டும், தொண்டு பரவட்டும், செல்வம் கொழிக்கட்டும், பண்பாடு சிறக்கட்டும், இன்பம் பெருகட்டும் என்ற தலைப்புகளில்

கவிஞர்கள் அரு. நாகப்பன், ம. வே. பசுபதி, கம்பராமன், அரங்க சீனிவாசன், மரியதாஸ். அர. சிங்கார வடிவேலன், சொ. சொ. மீ. சுந்தரம், சுப. கதிரேசன், ச. சவஹர்லால், நாஞ்சில். நெடுமாறன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 1-4-1980

இடம் : திருப்பூர் மாரியம்மன் கோயில் விழா.

தலைவர் : கவிஞர் அரு. நாகப்பன்

தலைப்பு : அருள் சுரக்கும் அன்னையர்...

காஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி, தில்லை சிவகாமி, அபிராமி, சமயபுரம் மகமாயி, காசி விசாலாட்சி ஆகியோர் பற்றிக் கவிஞர்கள் பெ. ராமலிங்கம், சுஜாதா, கோபால், தி. சு. மலையப்பன், ச. மாசிலாமணி, சோலை. நாகப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 10-4-1980

இடம் : துளசியாப்பட்டினம் ஔவைப் பெருவிழா.

தலைவர் : டாக்டர். குருவிக்கரம்பை சண்முகம்

தலைப்பு : ஔவையார் .....

கல்விக்கூடம் நடத்தினால், தொழில் நடத்தினால், அரசியல் நடத்தினால், திரைப்படமெடுத்தால் என்பன பற்றிக் கவிஞர்கள் வீரபாண்டியன், சோலை. நாகப்பன், வாய்மைநாதன், அரு. நாகப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 11-4-1980

இடம் : புதுக்கோட்டை வர்த்தகர் சங்க ஆண்டு விழா.

தலைவர் : ம. வே. பசுபதி

தலைப்பு : 'இவர்களால் நாம் கற்ற பாடம்.........

இராவணன், துரியோதனன், கோவலன், சூரபத்மன் ஆகியோர் பற்றிக் கவிஞர்கள் அழகுசுந்தரம், ப. யூ. அய்யூப், அரு. நாகப்பன், தி சு. மலையப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 19-4-1980

இடம்: கொடுமுடி தேர்த்திருவிழா.

தலைவர்: மா. வரதராசன்

தலைப்பு: எண்கள் 1, 2, 3, 4, 5, 6, 0

என்பது பற்றிக் கவிஞர்கள் பொ. இராமலிங்கம். எட்டியப்பன், ஞானச்செல்வன், பெரி. சிவனடியான், அரு நாகப்பன், சோலை. நாகப்பன், ம. வே. பசுபதி ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 27-4-1980

இடம்: பிரான்மலை விழா.

தலைவர்: கவிஞர் முடியரசன்

தலைப்பு: தமிழ் இன வரலாற்றுக்குச் செழிப்பூட்டியவர்கள் ...

வள்ளுவர், இளங்கோவடிகள், இராசராசசோழன், பெரியார், அண்ணா ஆகியோர் பற்றிக் கவிஞர்கள் அரு. நாகப்பன், ஆ. பழநி, ச. சவகர், தெ. முருகசாமி, சிவப்பிரகாசம் ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 2-5-1980

இடம்: சொக்கநாதபுரம் சிவன் கோயில் கும்பாபிஷேகம்.

தலைவர்: டாக்டர். அர. சிங்காரவடிவேலன்

தலைப்பு: நகரத்தார் இல்லத்தில்......

மாப்பிள்ளை, மாமனார், மாமியார், மருமகள், நாத்தி ஆகியோர் பற்றிக்கவிஞர்கள் அரு. நாகப்பன். அழ. அண்ணாமலை, மீனவன், சுப. கதிரேசன், சோம. சிவப்பிரகாசம் ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 4-5-1980

இடம்: பாண்டிச்சேரிக் கூட்டுறவு வாரவிழா.

தலைவர்: வேழவேந்தன்

தலைப்பு: கூட்டுறவினால் பெறும் பயன்கள்...

என்பது பற்றிக் கவிஞர்கள் இரா. வைரமுத்து, அறிவுமதி, மணிமாறன் M. L. A., அரு. நாகப்பன் ஆகியோர் பாடினர்.

நாள்: 11-5-1980

இடம்: பாண்டிச்சேரி, கம்பர் விழா.

தலைவர்: கவிஞர் வாலி

தலைப்பு: வளம் சுரக்கும் கம்பன்

சொல் வளம், பொருள் வளம், உவமை வளம், ஓசை வளம், அன்பு வளம், அறிவு வளம், காதல் வளம், கலை வளம், கற்பனை வளம், தத்துவ வளம் என்பன பற்றிக் கவிஞர்கள் வைரமுத்து,

பெரி. சிவனடியான், சித்தன், கம்பராமன், தமிழ்வேள், ம. வே. பசுபதி, அரு. நாகப்பன், சொ. சொ. மீ. சுந்தரம், செவ்வேள், மரியதாஸ் ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 12-5-1980

இடம்: புதுக்கோட்டை, வள்ளுவர் கலா மன்றம் பாரதிதாசன் விழா.

தலைவர்: கவிஞர் அரு. நாகப்பன்

தலைப்பு: பாவேந்தர் பாதையில் ..

மொழி, நாடு, கல்வி, மகளிர், சமுதாயம், சமத்துவம் ஆகிய பொருள் பற்றி, கவிஞர்கள் அழகு சுந்தரம், மால்கவி, வரம் பெற்றான், ஞார்துபேரி, தி.சு. மலையப்பன், கோபாலகிருட்டிணன் ஆகியோர் பாடினர்,

நாள்: 18-5-1980

இடம்: காரைக்குடி கொப்புடையம்மன் திருவிழா.

தலைவர்: டாக்டர். அர சிங்காரவடிவேலன்

தலைப்பு: ஆலய வழிபாட்டில்...

மலர், தேங்காய், பழம், வெற்றிலை பாக்கு, கற்பூரம், தேர் ஆகிய பொருள் பற்றி, கவிஞர்கள் மா. முத்துராமன், கரு. செல்லமுத்து, அரு நாகப்பன், சோலை. நாகப்பன், ச. சவகர்லால், சோம சிவப்பிரகாசம் ஆகியோர் பாடினர்.

நாள்: 23-5-1980

இடம்: புதுக்கோட்டை

தலைவர்: கவிஞர் பெரி. சிவனடியான்

தலைப்பு: அருள் சுரக்கும் அன்னையர் ..

காசி விசாலாட்சி, காஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி, ஆனைக்கா அகிலாண்டேசுவரி, தில்லை சிவகாமி, திருக்கடவூர் அபிராமி, புதுகை புவனேஸ்வரி ஆகிய தலைப்புகளில் கவிஞர்கள் ம. வே பசுபதி, க மு சுந்தரகணேசன், சோலை. நாகப்பன், சந்திரசேகரன், அரு. நாகப்பன், கருப்பட்டிக் கவிராயர், ப. சிகாகிரீசன் ஆகியோர் கவி பாடினர்,

நாள்: 24-5-1980

இடம்: குழிபிறை, முத்துராமன் செட்டியார் மீனாட்சி ஆச்சி 60 ஆம் ஆண்டு நிறைவு விழா.

தலைமை: டாக்டர். அர. சிங்காரவடிவேலன்

தலைப்பு : மங்கலப் பொருட்கள்

மஞ்சள், குங்குமம், மலர், தாலி ஆகிய பொருள்கள் பற்றி, கவிஞர்கள் சுப. கதிரேசன், சோம. சிவப்பிரகாசம், அரு நாகப்பன், அழ. அண்ணாமலை ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 22-6-1980
இடம்: திருச்சி நகரத்தார் சங்கம்.
தலைவர்: டாக்டர். அர. சிங்கார வடிவேலன்
தலைப்பு: நகரத்தார் சிறப்பியல்புகள்

சிக்கனம், தெய்வபக்தி, தானதருமம், விருந்தோம்பல், நாணயம், கட்டுப்பாடு ஆகிய பொருள்கள் பற்றி, கவிஞர்கள் அண்ணாமலை. மா. முத்துராமன். நா. மீனவன், அரு. நாகப்பன். சோம. சிவப்பிரகாசம், உமையாள் முத்து ஆகிய கவிஞர்கள் பாடினர்.

நாள்: 2-7-1980

இடம்: காரைக்குடி

தலைவர்: டாக்டர். அர. சிங்கார வடிவேலன்
தலைப்பு: நகரத்தார் பண்பாடு

விருந்தோம்பல், சமயத்தொண்டு, நாணயம், தொழில்வளம் ஆகிய தலைப்புகளில் கவிஞர்கள் அரு. நாகப்பன், பெரி. சிவனடியான், சோம. சிவப்பிரகாசம், அழ. அண்ணாமலை ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 13-7-1980

இடம்: நாமக்கல்

தலைவர்: 'தீபம்' பார்த்தசாரதி

தலைப்பு: இராகவனின் பாதாதி கேசம்

திருவடி, மரவுரி, திருமார்பு, திருக்கை, திருமுகம், திருக்கண்கள் ஆகிய தலைப்புகளில் கவிஞர்கள் சொ. சொ. மீ. சுந்தரம், அரு. நாகப்பன், ப. அரங்கராசன், மு. கு. ஜெகநாதராஜா, ம வே. பசுபதி, இளஞ்செழியன் ஆகியோர் கவிதை பாடினர்.

நாள் : 19-7-1980

இடம் : திருப்புத்தூர் (வ.ஆ) கம்பர் விழா.

தலைவர் : கவிஞர். வாலி

தலைப்பு : நாங்களும் பேசுகிறோம்

வில், மரவுரி, பாதுகை, பர்ணசாலை, கணையாழி, சூளாமணி சிம்மாசனம், மகுடம் ஆகிய பொருள்பற்றி, கவிஞர்கள் வல்லம் வேங்கடபதி, இல. சக்கரபாணி, கம்பராமன், ம. வே. பசுபதி, அரு நாகப்பன், சு. தியாகசீலன், சீதாபதி, அசோக்குமார் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 24-8-1980

இடம் : தேக்காட்டூர், ஸ்ரீ அங்காள பரமேஸ்வரி திருக்கோயில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம்.

தலைவர் : கவிஞர். அரு. நாகப்பன்

தலைப்பு : அருள்சுரக்கும் அன்னையர்

காமாட்சி, மீனாட்சி, சிவகாமி, அபிராமி, மகமாயி, அகிலாண்டேஸ்வரி, புவனேஸ்வரி ஆகியோரைப் பற்றி, கவிஞர்கள் முத்துராமன், சோலை. நாகப்பன், மால்கவி, நாராயணன், தி.சு. மலையப்பன், சுப. கதிரேசன், கரு. செல்லமுத்து ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 25-8-1980

இடம் : காரைக்குடி, திருமணக் கவியரங்கம்.

தலைவர் : கவிஞர். அரு. நாகப்பன்

தலைப்பு : நல்ல குடும்பம் ஒரு பல்கலைக் கழகம்

கணவன், மனைவி, குழந்தை, மாமனார், மாமியார், நாத்தி ஆகியோரைப் பற்றி, கவிஞர்கள் முத்துராமன், ஏ. ஜோஸப் ஸ்டாலின், ரா, பொன்ராசன், சவகர்லால், அலமேலு முகுந்தன், சே. நாசப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 30-8-1980

இடம் : காரைக்குடி நூலக வாரவிழா.

தலைவர் : கவிஞர். சவகர்லால்

தலைப்பு : நாங்கள் பேசுகிறோம்.

எழுத்தாளர், நூல்கள், வாசகர், பத்திரிகை, நூலகர் ஆகிய தலைப்புகளில் திருவாளர்கள் அரு. நாகப்பன், நா. மீனவன், கே. நாகப்பன், அழ. அண்ணாமலை, சோம. சிவப்பிரகாசம் ஆகிய கவிஞர்கள் கவி பாடினர்.

நாள் : 31-8-1980

இடம் : திருப்புத்தூர் (முகவை) இலக்கிய உலகு.

தலைவர் : டாக்டர். அர. சிங்காரவடிவேலன்

தலைப்பு : ஐம்பெரும் பூதங்கள்

நிலம், விசும்பு, வளி, தீ நீர் ஆகியன பற்றி, கவிஞர்கள் வ. தேனப்பன், மாணிக்கம், அரு. நாகப்பன், சா. பொன்னம்பலம், இரா. வீரப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 13-9-1980

இடம் : விழுப்புரம், செல்வவிநாயகர் ஆலயம் விநாயக சதுர்த்தி.

தலைவர் : கவிஞர். பெரி. சிவனடியான்

தலைப்பு : அருள் சுரக்கும் அன்னையர்

காமாட்சி, மீனாட்சி, சிவகாமி, விசாலாட்சி, அபிராமி, ஆகியோரைப்பற்றி, கவிஞர்கள் மு. அ. சங்கரன், மா. வரதராசன், அரு. நாகப்பன், சோலை. நாகப்பன், ம. வே. பசுபதி ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 20-9-1980

இடம் : காரைக்குடி, நூலக வார விழா.

தலைவர் : டாக்டர். அர. சிங்கார வடிவேலன்

தலைப்பு : சபலங்கள்

மது, மாது. சூது, பொன், புகழ் ஆகிய தலைப்புகளில் கவிஞர்கள் ச. சவகர், சோம. சிவப்பிரகாசம், அரு நாகப்பன், சோலை. நாகப்பன், ஆயை. மு. காசாமைதீன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 26-9-1980

இடம் : கீரனூர், பெரியார்—அண்ணா பிறந்த நாள் விழா.

தலைவர் : கவிஞர். மா. கண்ணப்பன்

தலைப்பு : பெரியாரும் அண்ணாவும்

சிந்தனைச்சிற்பி பெரியார்—ஆர். பாலச்சந்திரன்
சீர்திருத்தச் செம்மல் பெரியார்—அரு. நாகப்பன்
புதுயுகத் திறவுகோல் அண்ணா—சுப. கதிரேசன்
அரசியலில் அண்ணா ஓர் இமயம்—அறந்தை. திருமாறன்
என்ற வரிசையில் கவி பாடினர்.

நாள் : 5-10-1980
இடம் : கரூர். கம்பர் விழா.
தலைவர் : கவிஞர். மரியதாசு.
தலைப்பு : கம்பன் கண்ட பண்பு நலன்கள்

கடமை, கற்பு, நன்றி, வீரம், வாய்மை, அறம், அன்பு ஆகிய தலைப்புகளில் கவிஞர்கள் பழ. முத்துவீரப்பன், தமிழ்க்குழவி கனல், பழநி. இளங்கம்பன், S. K. இராமராசன், ம. வே. பசுபதி, அரு. நாகப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 10-10-1980
இடம் : வீரபாண்டி, கௌமாரியம்மன் திருக்கோயில் நவராத்திரி விழா.
தலைவர் : கவிஞர். இளங்கம்பன்
தலைப்பு : அருள் சுரக்கும் அன்னையர்

காமாட்சி, மீனாட்சி, விசாலாட்சி சிவகாமி, அபிராமி ஆகியோர் பற்றி, கவிஞர்கள் மு. செல்லப்பாண்டியன், அரு. நாகப்பன், சோலை. நாகப்பன், சவகர், வெங்கடாசலம் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 11-10-1980
இடம் : இரத்தினகிரி, திருக்குறள் பேரவை மாநில மாநாடு.
தலைவர் : டாக்டர். சொ. சிங்கார வடிவேலன்
தலைப்பு : திருவள்ளுவர் காட்டும் உடைமைகள்

அறிவுடைமை, பொருள் செயல்வகை, ஆள்வினையுடைமை, பொறையுடைமை, அன்புடைமை, அருளுடைமை ஆகியன பற்றி, கவிஞர்கள், அரு. நாகப்பன், சாமி. பழநியப்பன், ச. சவகர், என். இராகவன், கரு. நாகராசன், சு. ஜெகதீசன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 15-10-1980
இடம் : தேனி, வரசித்தி விநாயகர் திருக்கோயில் 15 - வது ஆண்டு விழா.

தலைவர் : கி.வா. ஜகந்நாதன்

தலைப்பு : மனிதனுக்குப் பாடம் புகட்டும்....

பறவை, விலங்கு, மரம், மலை, ஆறு, கடல் ஆகியன பற்றி, கவிஞர்கள் சொ. சொ. மீ. சுந்தரம், பெரி. சிவனடியான், அரு. நாகப்பன், இளங்கம்பன், ச. சவகர், சோலை. நாகப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள் : 19-10-1980

இடம் : திருவாரூர், ராஜதுர்க்கையம்மன் திருக்கோயில் விழா

தலைவர் : கவிஞர் அரு. நாகப்பன்

தலைப்பு : எண்களில் இறைத் தத்துவம்

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்ற தலைப்புகளில் கவிஞர்கள் பாலைக்கண்ணன், சௌ. அம்புயம், சீனி. சண்முகம். ஞானச்செல்வன், மா. சரோஜா ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 24-10-1980

இடம்; கொப்பனாபட்டி, பழ. லெ. லெட்சுமண செட்டி
மெய்யம்மை ஆச்சி சதாபிஷேக சாந்திக் கல்யாணம்

தலைவர்: கவிஞர். சுப. கதிரேசன்

தலைப்பு: நகரத்தார் குடும்பத்தில் நான்...

மாமனார், மாமியார், நாத்தநார், மாப்பிள்ளை, மருமகள் ஆகிய தலைப்புகளில் கவிஞர்கள் இராகவன் முத்து, கரு. செல்லமுத்து, மீனவன், அரு. நாகப்பன், அழ. அண்ணாமலை ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 10-11-1980

இடம்: தேவகோட்டை கந்தசஷ்டி விழா,

தலைவர்: கவிஞர். வாலி

தலைப்பு: முருகனைப் பற்றி இவை பேசுகின்றன.

மயில், சேவல், வேல், குன்று, காவடி, பஞ்சாமிர்தம், தேர், யானை, திருநீறு என்ற தலைப்புகளில் கவிஞர்கள் அழ. அண்ணாமலை, சுப. கதிரேசன், ச. சவகர், சொ. சொ. மீ. சுந்தரம், அரு. நாகப்பன், பெரி சிவனடியான், சோம. சிவப்பிரகாசம், சபா. அருணாசலம், சொ. மீ. சுந்தரம் ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 14-11-1980
இடம்: பல்லடம், இலக்குமி ஆலை முருக பக்தர்கள் பூஜை.
தலைவர்: கவிஞர். அரு. நாகப்பன்
தலைப்பு: முருகப்பெருமான்...

என் தாய், தந்தை, தோழன், காதலன், தெய்வம் என்ற தலைப்புகளில் பல கவிஞர்கள் பங்கேற்றுப் பாடினர்.

நாள்: 15-11-1980
இடம்: திரு வில்லிபுத்தூர், கோதை இலக்கிய மன்ற இரண்டாம் ஆண்டு நிறைவு விழா.
தலைவர்: கவிஞர். பொ. மா. இராசாமணி
தலைப்பு: மனிதனுக்குப் பாடம் புகட்டுபவை...

மரம், பறவை, விலங்கு, கடல் என்ற தலைப்புகளில் கவிஞர்கள் அரு. நாகப்பன், ம. முத்தரசு, சி. விநாயகமூர்த்தி, சோலை. நாகப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 16-11-1980
இடம்: காரைக்குடி ஏ.வி. மெய்யப்பச்செட்டியார் நினைவு விழா.
தலைவர்: டாக்டர். அர. சிங்காரவடிவேலன்
தலைப்பு: பண்பாளர் மெய்யப்பர்

கலையுணர்வு, கொடையுள்ளம், நிர்வாகத்திறன், அரசியல் பற்று, இலக்கிய மேன்மை, உழைப்பின் மேன்மை ஆகிய தலைப்புகளில் கவிஞர்கள் அரு. நாகப்பன், மா. கண்ணப்பன், ச. சவகர், சோம. சிவப்பிரகாசம், அழ. அண்ணாமலை, அ. மலையப்பன் ஆகியோர் கவி பாடினர்.

நாள்: 7-12-1980
இடம்: பழநி, கம்பர் விழா.
தலைவர்: கவிஞர். அரங்க சீனிவாசன்
தலைப்பு: (கீழே தரப்பட்டுள்ளது)

| | |
|---|---|
| கவிஞர். | இரா. இராமமூர்த்தி—குகனே அன்பன் |
| ,, | அன்புவல்லி—பரதனே தம்பி |
| ,, | அரு. நாகப்பன்—இந்திரசித்தனே மகன் |
| ,, | சு. முத்துவடிவன்—அனுமனே தொண்டன் |
| ,, | இரா. செல்வக்கணபதி—சீதையே தவத்தாள் |
| ,, | சொ.சொ.மீ. சுந்தரம்—இராமனே பரம்பொருள் |

என்ற முறைப்படி கவி பாடினர்.

நிகழ்ச்சி நிரல்களில் குறிப்பிடப் பட்டனவே யன்றித் தமிழகத்தின் பல பாகங்களிலும் இன்னும் பல கவியரங்குகள் நடந்திருக்கக் கூடும். அவைகளைப் பற்றிய செய்திகள் கிடைக்காமையால் விடுபட்டுள்ளனவேயன்றி மேலே குறிக்கப்பட்ட கவியரங்குகள் மட்டுமே நாட்டில் எண்பதாம் ஆண்டில் நடைபெற்றுள்ளன என்பதல்ல உண்மை.

மருத்துவக் கல்லூரிகள், பொறியியற் கல்லூரிகள் மற்றும் இங்கு இடம் பெறாத பல கலைக்கல்லூரிகள், உயர் பள்ளிகளிலெல்லாம் கவியரங்குகள் நடைபெற்றுள்ளன. பல இளங்கவிஞர்கள் அங்கெல்லாம் பங்கேற்றுக் கவிமுரசு கொட்டியுள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

# பயண நூல்களும் கட்டுரைகளும்

கே. பகவதி

பயணம் மனித வாழ்வில் தவிர்க்கவியலாததொரு கூறு. இதனை இன்றைய நடைமுறை வாழ்வியல் மட்டுமன்றி-நம் தமிழ் இலக்கியங்களுடன், உலகமாந்தர் வரலாறும் தெளிவுபடுத்துகின்றன. மனித வாழ்க்கை, தொடங்கிய நாள்தொட்டுப் பயணம் செல்லுதலும் தொடங்கிவிட்டது. எனினும் மனித வாழ்வில் ஏற்பட்ட பல்வேறு வளர்ச்சிகள், பயணத்தின் நோக்கத்தையும் விரிவடையச் செய்துவிட்டமையை நாம் காண்கின்றோம். தமிழன் வாழ்வில் பயணம் பெற்ற செல்வாக்கின் முதிர்ச்சி நிலையே, இலக்கியங்களில் ஒரு கூறாக இடம்பெற்ற இப்பயண அனுபவங்கள் தனிக் கட்டுரைகளாகவும், தனி நூல்களாகவும் தனித்த இலக்கியப் பொருளாக உயர்ந்தமைக்குரிய காரணம் எனலாம்.

தொல்காப்பியர் காலத்துக்கு முன்னரேயே செலவு பற்றிய எண்ணங்களை இலக்கியங்கள் ஏற்றன என்பதற்கு, தொல்காப்பியரின் பிரிவு, ஆற்றுப்படை பற்றிய கருத்துகளை அரணாக்கலாம். பின்னர் வந்த இலக்கியங்கள் இச்செலவுகளை விரிவாகப் பேசின. பின்னர் தனிக்கட்டுரைகளாக வெளிவந்த இவை பத்தொன்பதாம் நூற்றாண்டில் முதன்முதலில் பயணநூல் வடிவம் பெற்றன. முதல் பயணநூல் என்ற பெருமைக்குரியது '**ஸ்ரீ ஆரியர் திவ்ய தேச யாத்திரை சரித்திரம்**' என்ற நூலாகும்[1] அது முதல் இன்றுவரை மலர்ந்த பயண நூற்கள் பல.

## பயணம் செல்லுதலின் நோக்கம்

பொருள், கல்வி, வணிகம், இடம், காட்சிகணால், தெய்வ தரிசனம்,உறவு,தொழில், தூது, ஆய்வு, கலாச்சாரப்பரிவர்த்தனை

அரசியல் பின்னணி போன்ற பல்வேறு நிலைகள் பயணப் பொரு ளாக இன்றைய நிலையில் அமைகின்றன. இவற்றுள் ஓதல், தூது பகை, அறம், பொருள் போன்ற பிரிவுகளைத் தொல்காப்பியம் இயம்புகின்றது. இவற்றுள்ளும் பொருள்வயிற் பயணமே மிகுதி யாகக் காணப்பட்டதோ என்ற ஐயம் சங்கப்பாடல்களை நோக்க எழுகின்றது. பத்துப்பாட்டில் செம்பாதியான ஆற்றுப்படை நூல்களில் நான்கு பொருளுக்காக மேற்கொண்ட பயணம் பற்றி இயம்புகின்றன. பிற சங்கப் பாடல்களிலும் பல பிரிவு பற்றிப்பாடும் பாடல்கள், பொருள்வயிற் பிரிந்த தலைவனின் வரவு கருதி வாடிய பயிர் போன்று வருந்தி இருக்கும் தலைவியின் துன்பநிலை காட்டும் தன்மையிலேயே அமைகின்றன.

காப்பியங்களில் இப்பயணங்கள் விரித்துரைக்கப்படுகின்றன. சிலப்பதிகாரத்தில் பயணம் இன்றிக் காப்பியமே இல்லை என்னுமள விற்கு இவை முக்கியத்துவம் பெறுகின்றன.

மாதவியைப் பிரிந்த கோவலன் கண்ணகியுடன் மதுரை நோக்கிச் சேறல் வணிக நோக்கத்துடன், வாழ்க்கை நோக்கமும் இணைந்தது. மாடலமறையோன் கங்கை முதல் குமரி வரை ஆடச்செல்லல் இன்றைய புண்ணிய யாத்திரையுடன் ஒற்றுமை யுடையது. சேரன் செங்குட்டுவன் மலைவளம் காணச்செல்லல், பகை, போர், பத்தினிக்கோட்டம் சமைக்கக் கல் எடுத்துவர அவனது பயணத்தின் பல நோக்குகளை எடுத்தியம்புகின்றன. கவுந்தியடிகள் தம் மதம் பரப்ப ஊர் விட்டு ஊர் செல்லுகின்றார். இவ்வாறே பிறபல இலக்கியங்களிலும் தமிழரின் பயண அனுபவங் களின் வெளிப்பாட்டை நாம் காண்கின்றோம்.

இன்று பலவற்றை மேன்மேலும் அறிய வேண்டும் என்ற மனி தனின் அறிவுத் தாகமும், சமுதாயத்தின் பல்வேறு வகைப்பட்ட வளர்ச்சி நிலைகளும் பயணங்களின் நோக்கங்களிலும் வளர்ச்சி யைப் புகுத்தியிருக்கக் காணலாம்.

## பயண நிலை

பயணம் பழமையாயினும் பயணம் மேற்கொள்ளும் நிலைகள் இன்று பல புதுமைகளைப் பெற்றுள்ளன. விஞ்ஞான வளர்ச்சி பயணத்தை விரைவு, எளிமைப் படுத்த உதவி புரிந்துள்ளது.

அன்று, பயணம் எளிமையானதன்று. பல பயணங்கள் திரும்பி வருவதில் நம்பிக்கையில்லாதனவாகவே அமைந்திருந்திருக்கின்றன. தன் தலைவன் வருகையை எதிர்பார்த்துக் காத்திருக்கும் தலைவியின் உள்ளத்தில், தலைவன் சென்ற வழியின் துன்பங்கள் அலைமோதுகின்றன. ஆறலைக் கள்வரின் தீங்கு தரும் செயல்களும், வழி விலங்குகளின் இயல்புகளும் பீதி அளிப்பனவாக அங்கு அமைகின்றன.

மார்க்கோபோலோ தன் நூலில், முதலில் தன் தந்தையுடன் தாயகத்திற்கு இருபத்து மூன்று வருடம் கழித்துச் சென்ற போது யாரும் நம்பவில்லை என்கின்றார்.[3] இந்நிலையில் தமிழரிடம் தோன்றியதே 'துணை யோடல்லது நெடுவழிச் செல்லேல்' என்ற பழமொழி.

இன்று உலக முழுவதையும் வெகு விரைவில் யாத்திரை மேற்கொள்ள இயலும். ஊர்திகளின் மிகுதியும், விரைவும் காலத்தையும் இடத்தையும் மிச்சப்படுத்துகின்றன. எனவே மக்கள் பயணம் செல்லும் நிலையில் பெருகிக் கொண்டிருக்கும் நிலை கண்கூடு. நண்பர்களாக, குடும்பமாக குழுக்களாக போன்ற பல வகைகளில் இணைந்து இப்பயணம் மேற்கொள்ளப்படுகிறது. எழுத்துலகில் நெருக்கமுடையோர் தனித்தும் இப் பயணங்களை மேற்கொள்கின்றனர். மகளிரும் இவற்றுள் பங்கேற்கின்றனர்.

அன்றைய சமுதாயத்தில் ஆடவர்க்கே துன்பமாக இருந்த பயணம், மகளிர்க்கு எத்தன்மையில் இருந்திருக்கக் கூடும் என்பதை நாம் எண்ணிப்பார்க்க இயலுகின்றது எனினும் ஆற்றுப்படை நூல்களில் பாணருடன் பாடினியும் தங்கள் சுற்றத்துடன் சென்று திரும்பும் இயல்பு பேசப்படுகின்றது எனவே சிறிது தொலைவில் உள்ள ஊர்களுக்கு, பெண்களையும் அழைத்துச் சென்றிருக்கின்றனர் எனத் தெரிகின்றது.

மேலும் கண்ணகி கோவலனுடன் இணைந்து மதுரைச் சேறல், கவுந்தியடிகள் செல்லல், முதலியன போன்றன சில இன்றியமையா வேளைகளில் மகளிரும் உடன் சென்றிருக்கின்றனர். என்னும் எண்ணத்தைத் தருகின்றது.

தொல்காப்பியர் பிரிவு பற்றிக் கூறும் இடத்தில் 'முந்நீர் வழக்கம் மகடூ வோடில்லை' என்கின்றார். தொல்காப்பியரின் இவ்வெண்ணம் இரண்டு உண்மைகளைத் தெளிவு படுத்துகிறது.

வினையே உயிராகக் கருதிய ஆடவர் திரைகடல் ஓடி வினைவயின் புறப்பட்டபோது மகளிரை அழைத்துச் செல்லல் இல்லை என்பது ஒன்று. பிற பயணங்களில் அழைத்தும் சென்றனர் என்பது இரண்டு. வழித்துன்பமே இதற்குரிய காரணம் எனலாம். இன்று மகளிர் ஆடவரை ஒத்துத் துணையுடனும் தனித்தும் உலகெங்கும் செல்லல் பயணத்தின் எளிமையையும், அதன் மேல் உள்ள ஆர்வத்தினையும், தேவையினையுமே சுட்டுகின்றது எனல் பொருந்தும்.

## முன் ஏற்பாடுகள்

பயணம் செல்ல, முன்னரேயே தகுந்த ஏற்பாடுகள் செய்து கொள்ளல் இன்றியமையாத ஒன்று. 'பயணம் ஒரு கலை ஆனால்' என்ற தம் நூலில் பிலோ இருதயநாத் அவர்கள் முன்கூட்டியே திட்டமிடாத பயணம் எத்தகைய துன்பத்தையெல்லாம் தரவல்லது என்பதை மிகச் சிறப்பாக, தம் பயண அனுபவங்கள் கொண்டு விளக்குகின்றார். முன்னதாகவே திட்டமிட்டால் தான் பயணம் எதிர்பார்த்த நன்மையைக் கொடுக்கும்,இனிதாகவும் நிறைவேறும். திடீரென்று திட்டமிடாது புறப்பட்டால் பல தொல்லைகள் ஏற்படும். மேலும் கொண்டு செல்லும் பொருட்களும் குறைவாக இருப்பின் நல்லது.

## பயணக் கட்டுரை அல்லது நூல்

மேற்சுட்டிய நிலையில் பயணம் பற்றிய பல எண்ணங்களைக் கண்டோம். இவ்வாறு இலக்கியங்களில் காணப்படுவனவற்றை பயணக்குறிப்புகள் எனலாமே தவிர, பயணக் கட்டுரைகள் என்றோ, பயண நூல்கள் என்றோ கூறல் இயலாது. இந்நிலையில் பயண நூல்கள் அல்லது கட்டுரைகளுக்கென்று சில நோக்கங்கள் அல்லது கொள்கைகள் இருக்கவேண்டுமெனத் தெரிகின்றது.

தாங்கள் மேற்கொண்ட பயணத்தில், கிளம்புதல் முதல் திரும்பி வருவது வரையில் தங்களின் அனுபவங்களைப் பிறர் உணர்ந்து கொள்ளும்படி எழுதுதல் பயண இலக்கியத்தின் முதன்மை நோக்கமாகும்.

அடுத்து, பயணம் மேற்கொண்டவரின் அனுபவங்கள் பிறருக்குப் பாடமாக அமைந்து, அவர்களின் சிறந்த எண்ணங்களைப்

புரிந்து கொண்டு உணர்ந்து மகிழ்ந்து படிப்போரும் அத்தகைய பயணங்களை மேற்கொள்ளத் தூண்டுதல் பயண இலக்கியத்தின் இன்னொரு கொள்கையாகும். எனவே பயணம் சென்றோர் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு எவ்வாறு சென்றார்கள்; அங்கு என்னவெல்லாம் கண்டு களித்தார்கள். அவர்களின் நோக்கங்களை எவ்வாறு நிறைவேற்றினார்கள். அந்நாட்டு மக்களிடம் அவர்கள் கண்ட புதுமைகள், பழக்கவழக்கங்கள், பண்பாட்டு மாற்றங்கள் என்னென்ன, அவர்களின் வளர்ச்சிக்கான அடிப்படைகள் என்னென்ன என்பதனையெல்லாம் தங்கள் அனுபவங்களில் கலந்து தரவேண்டும்.

இந்நிலையில் பயணம் என்ற சொல் ஒரு இடத்திலிருந்து கிளம்புதல்; பயண இலக்கியங்கள் என்பது ஒரு இடத்திலிருந்து கிளம்பி, தாங்கள் சென்ற இடங்களில் தங்களின் அனுபவங்களைச் சுவைபட எடுத்தியம்புதல் எனப் பொருள்படுதலைக் காணலாம் எனவே பயண இலக்கியங்களைப் பொறுத்த வரையிலும், 'பிறரது வாழ்க்கை அனுபவங்களை நாம் நம் வாழ்க்கைக்கு எடுத்துப் பயன் படுத்திக் கொள்ளவேண்டும்; அனுபவம் என்பது ஒரு அருமையான பள்ளிக்கூடம்' (டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி, இதயம் பேசுகிறது, 17-8-80, ப.45) என்ற எண்ணம் பொருத்தமாகத் திகழ்கிறது.

## பயண நூல்களின் பயன்

பிறர் பயன்கொள்ளும் பொருட்டு, தன் பயண நிகழ்வுகளைச் சொல்லும் பயண இலக்கியக் கொள்கையிலேயே பயண இலக்கியங்களின் பயனும் அடங்கி நிற்கக் காணலாம். மேலும், பயணம் செல்லுபவரின் ஒவ்வொரு நோக்கத்திற்குமிணங்கப் பயில்வோர் பெறும் பயன்களும் மாறுபடக் காணலாம்.

ஒரு நோக்கத்துடன் பயணம் செல்ல விரும்பும் பயணிகளுக்கு, அந்நோக்கத்துடன் எழுந்த பிற பயண இலக்கியங்கள் வழிகாட்டியாக அமைகின்றன.

அடுத்து, பயண இலக்கியங்களில் தாங்கள் சென்று கண்ட மக்களின் வாழ்க்கை முறைகள் தொடர்பானப் பலவற்றை இவர்கள் விளக்கும்போது சிறந்ததொரு சமுதாயக் கல்விக்குத் துணை புரிந்தோராகின்றனர்.

பொது அறிவை வளர்க்கும் விதத்திலும் இவை சிறந்ததொரு பயனைத் தருகின்றன.

பல நாடுகளின், பலவித முன்னேற்றங்கட்குரிய அடிப்படையினைக் கண்டு, நாட்டு நிலையில் நாமும் முன்னேறப் பயண இலக்கியங்கள் கருவியாகின்றன.

பல எண்ணங்கட்கு விளம்பரமாக அமைவதும் இவ்விலக்கியங்களே. சான்றாக சோட்டானிக்கரையில் உள்ள பகவதி கோயிலில் பேய் பிடித்தவர்களைக் குணமாக்கும் தன்மை, பேய் பற்றிய நம்பிக்கையுடையார்க்குச் சிறந்ததொரு செய்தியாகும். இந்நிலையில், மனதுக்கு நிம்மதி, மகிழ்ச்சி, ஊக்கம், உற்சாகம் போன்றவற்றை அளிக்கும் இப்பயணங்கள் தனிமனிதனால் மேற்கொள்ளப்படினும், சமுதாய நலனை உள்ளடக்கியன என்பது இந்நூல்களைப் பயிலும்போது நாம் புரிந்து கொள்ளக் கூடியதொரு நிலையாக அமைகிறது.

## பயண இலக்கியங்கள்

பயண நூல் முதன்முதலில் தமிழில் எழுந்தது பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான். ஆயின் பிற நாட்டார் பல நூற்றாண்டுகட்கு முன்னரேயே இப்பயண நூற்களின் பயனையுணர்ந்து பல நூற்களை எழுதியுள்ளனர். கி. பி முதல் நூற்றாண்டில் தோன்றிய பெரிப்புளுஸ்' சிறந்ததொரு பயணநூல் ஆகும். இதனைப்போன்றே மார்க்கோபோலோ, யுவான்சுவாங், பிளைனி போன்றோரின் அனுபவங்களும் சிறந்ததொரு சமுதாய வரலாற்றை நமக்கு அளிக்கின்றன. இவை தவிர கி பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் பயண இலக்கியங்கள் பற்றிப் பேசும்போது சோவியத் நூலகங்கள் என்ற நூலில் விக்டர் இமானுவேல் (ப. 32) என்பவர் கி. பி. 1057-ஆம் ஆண்டு சிறப்பானவை, ஆபட்டானியல் எழுதிய **தூய நாடு** என்ற பாலஸ்தீனப் பிரயாணத்தைப் பற்றியதும் அய்னாசி நிக்சிட்டான் எழுதிய **இந்தியப் பிரயாணம்** என்பதுமாகும் என்கின்றார். எனவே நாம் நம் இந்திய நாட்டை முழுவதும் கண்டு எழுது முன்னரேயேப் பிற நாட்டார் பலர் இந்தியாவைக் கண்டு எழுதியுள்ளனர் எனக் காண்கின்றோம் நம் வரலாற்றாராய்ச்சிக்கு இவை சிறந்த துணையாக இருக்கின்றமையையும் அறிகின்றோம்.

**ஸ்ரீ ஆரியர் திவ்விய தேச சரித்திரம்** என்ற நூலைத் தொடர்ந்து இன்றுவரை வெளியாகியிருக்கும் பயண இலக்கியங்கள் பல இவை மேலே குறிப்பிட்ட நிலையில் பல நோக்கங்களில்

பயணம் மேற்கொள்ளப்பட்டு எழுதப்பட்டனவையாக அமைகின்றன. இவற்றுள் தங்களின்நோக்கங்களின் மாற்றத்திற்கிணங்க மாறுபட்ட அனுபவங்களையும் காண்கின்றோம்.[3]

## 1980-இல் வெளிவந்த பயண நூல்களும் கட்டுரைகளும்

**நூல்கள்**

1. **புண்ணிய பூமியில் புனித யாத்திரை** வி. என். சிதம்பரம் (சென்னை, வானதி பதிப்பகம், 1980).
2. **கோவா செல்வோம்**—குரும்பூர் குப்புசாமி, (சென்னை, அருணோதயம், 1980).
3. **புண்ணிய பாரதம்**, பரணீதரன், (ஆனந்த விகடன் அச்சகம், சென்னை, 1980).

**கட்டுரைகள்**

1. **கேரள விஜயம்** - பொன் பாஸ்கர மார்த்தாண்டன் (ஆனந்த விகடன் 6-1-80 - 19- 0-80).
2. **தேவி தரிசனம்** - பொன். பாஸ்கர மார்த்தாண்டன் (இதயம் பேசுகிறது, 1980).
3. **அனுபவம் பேசுகிறது** - எம். எஸ். உதயமூர்த்தி (இதயம் பேசுகிறது 17-8-80-31-8-80).
4. **பெல்ஜியம் ஹாலந்து பயணக் கதை**-மணியன் - (இதயம் பேசுகிறது 14-9-80-இல் தொடங்கப் பெற்றது).
5. **புனித ஹஜ் பயண நினைவுகள்** - (இதயம் பேசுகிறது 19-10-80).

**1. புண்ணிய பூமியில் புனித யாத்திரை** வி. என். சிதம்பரம்

"வடநாட்டிலே புண்ணிய நதிகள் அதிகம். தென்னாட்டிலே ஆலயங்கள் அதிகம். முகம்மதியர்கள் வடநாட்டை ஆண்ட காரணத்தினால் சரித்திரச் சான்றுகள் அதிகம் இருக்கிறது. இந்த நூல் சரித்திரச் சான்றுகளோடு பார்க்கக்கூடிய கண்களுக்கும், ஆலய வழிபாட்டிற்குச் செல்கின்ற பக்தர்களுக்கும் பயன்படுகின்ற முறையில் உருவாக்கப்பட்டு இருக்கிறது" என்று தமது நூலின் முன்னுரையில் வி என். சிதம்பரம் அவர்கள் இந்நூல் ஆக்கம் பற்றிய தன் எண்ணத்தை வெளியிடுகின்றார்,

ஹைதராபாத்தினின்றும் தொடங்கிக் காசி சென்று கல்கத்தா, திருப்பதி வழியாகத் தங்கள் புண்ணிய யாத்திரையை முடித்துள்ளனர் வி.என். சிதம்பரமும் அவரது குழுவினரும்.

சில குறிப்பிட்ட இடங்களைச் சென்று காணவேண்டும் என்ற இவர்தம் அவர் இப்பயணத்தில் வெளியாகின்றது. ஹைதராபாத்தில் இன்றியமையாத இடங்களான சார்மினார், சாமஹல்லா அரண்மனை, உஸ்மானியா பல்கலைக் கழகம், ஜலார் ஜங் மியூசியம், கோல்கொண்டாக்கோட்டை போன்றவற்றைக் கண்டு' பின்னர் ஷோலாப்பூர், பண்டரிபுரம் என்ற நிலையில் இவர்களின் பயணம் தொடர்ந்து அமைகிறது பார்த்த இடங்களில் உள்ள முக்கியமான இடங்கள், அதன் புகழ்ச்சிக்குரிய காரணங்கள், விளக்கங்கள், சில இடங்களில் மக்கள் சமுதாய நிலை போன்றவற்றை ஆசிரியர் சிறப்பாக எடுத்தியம்புகின்றார்.

பம்பாயில் வாழும் பார்சி இனத்தாரின் சில புதுமையான பழக்க வழக்கங்களையும் நூலாசிரியர் இயம்புகின்றார்.

"பார்சி இனத்தவர் இருப்பது இங்கு தான். வேறு எங்கும் கிடையாது. இறந்தவர்களைப் புதைக்கவோ, எரிக்கவோ மாட்டார்கள். ஒரு மலை மீது 'டவர்ஸ் ஆஃப் சைலன்ஸ்' என்ற பெயரில் கட்டிடங்களைக் கட்டி இருக்கிறார்கள். இறப்பவரின் உடல்களை வானம் பார்த்தபடி உள்ள இதற்குள் தள்ளிவிடுவார்கள் மனிதன் இறந்த பிறகு அவன் உடல் பறவைகளுக்கு உணவாய் பயன்பட வேண்டும் என்ற கொள்கையுடையவர் இந்த பார்சிகள்"(ப. 26).

அவுரங்கசீப் பற்றிய பொதுவான நமது எண்ணம் அவன் ஒரு கொடுங்கோல் வேந்தன் என்பதே. தன் தந்தையைச் சிறையிலிட்டுத் துன்புறுத்திய இம்மன்னன் மிக எளிமையானவன் என்பதும், தம் சமாதியையும் மிக எளிமையாகக் கட்டிக்கொண்டிருக்கிறான் என்பதும், தமது குருவின் சமாதிக்குப் பக்கத்திலேயே தம் உடலும் அடக்கம் செய்யப்பட வேண்டும் என்ற இவரது விருப்பத்திற்கிணங்க, இவன் சமாதி எழுப்பப்பட்டுள்ளது என்பதும் (ப. 37-38) கொடுமையான இம்மன்னனிடமும் சில நற்பண்புகள் காணப்பட்டன என்பதனை நினைவூட்டும் வண்ணம் அமைகின்றன.

சரித்திர ஆர்வமுடையவர்களுக்கும். சித்திரம் சிற்பம் ஆகிய கலைகளில் ஈடுபாடு உடையவர்களுக்கும் முக்கியமான இடங்கள் எல்லோரா—அஜந்தா குகைகள் என்றியம்பும் இந்நூலாசிரியர்

(ப. 38) இவற்றைச் சிறப்பாகத் தாம் கண்டவாறு எடுத்தியம்பு கின்றார்.

சாய்வான குன்றுகளின் பக்கங்களைக் குடைந்து அமைக்கப் பட்டுள்ளன எல்லோராக் குகைகள். அஜந்தாக் குகைகள் செங்குத் தான மலைச் சுவரைக்குடைந்து உருவாக்கிய குகைகளாகும். எல்லோராக் குகைகளில்—இந்துமத சம்பந்தமான குகைக் கோயில்களில் புகழ்பெற்றது கைலாசநாதர் கோயில் எனக் கூறும் இந்நூலாசிரியர் (ப. 39) அஜந்தாக் குகைகளைப் பற்றிய பல எண்ணங்களைத் தருகின்றார். புத்த மதத்தின் வரலாற்றை அற்புதமான வண்ணக் கலவைகளில் இங்குக் காண்கின்றோம் என்கிறார் இவர்(ப. 44).

அடுத்து கருங்கற்களைக் கொண்டு மாபெரும் கோயில்களைக் கட்டியுள்ள 'கஜீரஹோ' என்ற இடத்தில் காணப்படும் அற்புத மான கலைப்படைப்புகளை ஆசிரியர் சிறப்பிக்கின்றார் (ப 47)

தொடர்ந்து ஆசிரியர் கண்டுகளித்த இடம் தாஜ்மகால். வாழ் நாளில் ஒவ்வோர் இந்தியனும் கண்டுமகிழ வேண்டிய காட்சி எனக் கூறி இதனை இவர் விளக்கிச் செல்லும்போது, உண்மை யிலேயே இதனைப் பயில்வோர் அனைவரும், இத்தகையதொரு அழகிய கலைப்படைப்பைப் பார்த்து மகிழ வேண்டும் என்ற தூண்டுதல் பெறுவது நிச்சயமான ஒன்று.

யமுனா நதி தீரத்தில் இருக்கும் மதுராவைப் பார்த்தபின்னர், டெல்லி அடுத்து இடம்பெறுகிறது. புராதன நினைவுச் சின்னங்கள் நிறைந்த இடம் டெல்லி. செங்கோட்டையில் கண்டு மகிழ வேண்டிய இடங்கள் பல. 'முத்துக்களிடையே பதிக்கப்பட்ட மரகதக்கல்' எனக் காஷ்மீரைக் கவிகள் வருணிக்கின்றார்கள் எனக் கூறும் இவர், காஷ்மீர் மக்கள் வாழ்க்கை முறைகளையும் சிறப்பாக இயம்புகின்றார். ''காஷ்மீரின் அருகே டால் என்னும் பிரபலமான பெரிய ஏரி உள்ளது; மிக அழகு வாய்ந்தது; இதில்தான் ஏராளமான படகு வீடுகள் உள்ளன. உல்லாசப் பயணிகளின் சுவர்க்க பூமி இந்த டால் ஏரி'' (பக். 86 - 87) போன்று காஷ்மீரின் அழகுக்குரிய பல நிலைகளை எடுத்தியம்புகின்றார்.

ஹரித்துவார், அலகாபாத், லக்னோ போன்ற இடங்களைப் பார்த்துவிட்டுக் காசி செல்கின்றனர்.

'ஓர் இந்து ஆணோ பெண்ணோ வயோதிகம் அடைந்தால் காசியில் போய் வாழ்ந்து உயிர்நீத்தால் மோக்ஷத்துக்குப் போக லாம் என்று நம்பப்படுகிறது. கங்கையில் குளித்தால் பாவங்கள்

விலகும்; மறுபிறப்பு ஒழியும் இப்படி ஒரு நம்பிக்கை' (ப. 106) எனக் காசிக்குச் செல்வோரின் நம்பிக்கையினைக் கூறும் இவரின் இக் கருத்து, இங்கு காணப்படும் கூட்டத்தினரைப் பற்றி இவர் இயம்பு வதில் உறுதிப்படுகிறது. கங்கா நதி, காசி அரண்மனை செல்கின்ற இவர்கள் பின்னர் கயாவினை அடைகின்றனர். கயா நகரில் புத்தர் கோயிலைப்போலவே புகழ்பெற்ற விஷ்ணுகோயிலும் உள்ளது. கல்கத்தாவில் புகழ்பெற்ற காளிகோயில் உள்ளது கல்கத்தாவிலும் பல சிறப்பான இடங்களைக் கண்டுவிட்டு, இறுதியில் திருப்பதிப் பயணத்துடன் தங்கள் புனித யாத்திரையை முடித்துக் கொள் கின்றனர் ஆசிரியரும் அவரது குழுவினரும்.

2. **கோவா செல்வோம்**—குரும்பூர் குப்புசாமி

பயண நூல் வரலாற்றில் ஒரு புதுமையாக, குழந்தைகட் கென்று, முதன்முதலில் பயண நூல் எழுதியுள்ளார் குரும்பூர் குப்புசாமி. தன் நூலை, எளிய மொழியிலேயே சொல்லிச் செல் வதும். குழந்தைகள் எளிதாகப் புரிந்துகொள்ளத் துணையா கின்றது.

கீழ்நாடுகளின் முத்து (ப 1) என்றும், கீழ்நாடுகளின் ரோம புரி (ப. 47) என்றும் வழங்கப்பெறும் அளவிற்கு அழகும் சிறப்பும் உடைய நகரம் கோவா. கோவா பற்றிய புராணக்கதை (ப. 11) அதன் பழைய வரலாறு (ப 13) போர்த்துக்கீசியரின் ஆட்சி காரணமாகக் குட்டிப் போர்த்துக்கல்லாக அது திகழ்ந்தது. (ப. 18) கோவாவிற்குச் செல்லும் மார்க்கங்கள் (ப. 20) போன்ற பல விளக்கங்களை முதலில் தரும் நூலாசிரியர் பின்னர் கோவாவில் தான் கண்ட இடங்களை அதன் பெருமைகள் துலங்க எடுத்தியம்புகின்றார்.

மாண்டவி ஆற்றின் கரையில் மாண்டவி இளவரசி என்ற சிறப்புப்பெயர் கொண்ட பானாஜி தான் கோவாவின் தலைநகரம். நில அமைப்புப்படி மூன்று பிரிவாக அமையும் கோவாவின் ஒரு பகுதி கடற்கரை. மறுபகுதி மலை. இடையே சமவெளி. ஆல்டினோ என்னும் குன்று, 1540 - இல் கட்டப்பட்ட மாதாகோவில், அதனடியில் பானாஜி நகரம், ஆக்வாதாகோட்டை எனப்படும் தண்ணீர்க் கோட்டை, மாயம், ஏரி, மபுசா என்னும் நகரம் போன்ற வற்றை முதல் நாள் பயணத்தில் கண்டுகளிக்கின்றனர் இந்நூலாசி

ரியரும் அவர் குடும்பத்தினரும். இப்பயணத்தில் இவர்கள் கண்டு களித்த இடம் 'கலேங்கேட்' கடற்கரை, கோவா கடற்கரைகளின் ராணி என அழைக்கப்படுகிறது. 7கிலோ மீட்டர் நீளம் உள்ள இந்த கடற்கரை உலகப் புகழ்பெற்றது (ப. 42). இந்தியாவில் 'ஹிப்பிகளின் சொர்க்கம்' இந்தக் கடற்கரைதான் என்கின்றார் நூலாசிரியர் (ப. 43).

கிறித்தவ சமயத்தின் தாய்வீடாகிய ரோமாபுரியை ஒத்து, கோவில்களைக் கொண்டுள்ளது கோவா. கீழ்நாடுகளில் வேறு எங்கும் இவ்வளவு பிரமாண்டமான மாதாகோவில்களைக் காண முடியாது (ப. 47) என்கின்றார் நூலாசிரியர்.

தமிழ்நாட்டில் கிராமம்தோறும் அம்மன் கோவில் இருப்பது போலக் கோவாவில் கிறிஸ்தவக்கோவில் இல்லாத கிராமமே இல்லை. கீழ்நாடுகளில் முதன்முதல் மாதாகோவில் கட்டப்பட்டதும் கோவாவில் தான் (ப. 50).

புதிய கோவா இவ்வாறு சிறப்பாகத் திகழ, பழைய கோவா காலரா நோயினால் அழிந்த நகரமாகக் காணக்கூடுகின்றது. பானாஜியில் இருந்து 9 கிலோ மீட்டர் தூரத்தில் மண்டவீ ஆற்றங் கரையில் பழைய கோவா இருக்கிறது. இப்பொழுது அந்த இடத்தில் மூன்று மாதாகோவில்கள் மட்டுமே முழுமையாக இருக்கின்றன. இவற்றுள் பெரிய கோவிலான சீ கதிட்ரல் கோவிலில் ஒரு புனித சிலுவை இருக்கிறது மரத்தில் செதுக்கப்பட்டது. இந்த மரத்தில் சிறிது கிள்ளி எடுத்துப்போய் நோயாளியின் உடம்பில் தடவினால் நோய் தீரும் (ப. 57) என்ற நம்பிக்கை அவர்களிடம் உள்ளது.

இக்கோவிலுக்கு எதிர்ப்புறம் 'யேசு பாலன் ஆலயம்', இருக்கிறது. சிறந்த கட்டிடக்கலைச் சிறப்புடன் கூடிய இக்கோவிலுள் இன்றும் தொழுகை நடக்கிறது. இக்கோவிலின் தனிச்சிறப்பு உலகம் முழுவதும் இருந்து கிறிஸ்தவர்களை ஈர்க்கும் புனித பிரான்சிஸ் சேவியரின் உடல் இங்கு வைக்கப்பட்டு இருப்பதாகும்.

கோவாவில் உள்ள இந்துக் கோவில்களில் கலை அழகையோ கம்பீரத்தையோ காணமுடியவில்லை. இந்துக் கோயில்களைப் போன்று ஒரு சில மசூதிகளையும் இவண் காணக் கூடுகின்றது.

இந்நூலாசிரியர் பின்னர், இந்தியாவில் முதல் அச்சகம் அமைந்த கோவாவின், அச்சகம் அமைந்த சுவையானதொரு வரலாற்றைத் தந்து செல்கின்றார். மேலும் மர்முகோவா, வாஸ்கோடகாமா, கோவாவில் உள்ள கடற்கரைகள் போன்ற பல இடங்களும் இவர்கள் பயணத்தில் இடம்பெறுகின்றன. இறுதியில் பானாஜி நகர மக்கள் வாழ்க்கையைப் பற்றிச் சில எண்ணங்களுடன் இவர்கள் பயணம் முடிகிறது.

பயண நூல் என்ற நிலையில் கோவா செல்வோம் என்று இந்நூலாசிரியர் இந்நூலை எழுதியிருப்பினும், குழந்தைகளுக்கென்று எழுதப்பட்டமையை இவர் மறக்கவில்லை என்பது இந்நூலை விளக்கிச் செல்லும் நிலை தெளிவுறுத்துகிறது. கோவாவின் அரசியல் வரலாற்றையும், போர்த்துக்கீசியர்களால் ஆளப்பட்ட அதன் நிலையையும், அச்சு இயந்திரத்தின் நுழைவையும் இவர் முக்கியத்துவம் கொடுத்துச் சொல்லிச் செல்லும் தன்மையை இவண் சான்றாக்கலாம்.

### 3. புண்ணிய பாரதம்—பரணீதரன்

பத்ரிநாத்துக்குச் செல்லும் வழியில், புண்ணிய பாரதத்தில் குறிப்பிடத்தக்க சில புண்ணியத் தலங்களையும், நதிகளையும் கண்டு, இன்புற்று, அவற்றைப் பிறரும் உணர்ந்து அனுபவிக்கச் செய்கின்றார் இந்நூலில் பரணீதரன்.

ரிஷிகேசத்திலிருந்து பாதயாத்திரையாக பத்ரிநாத்துக்கு விஜயம் செய்த ஸ்ரீ காமகோடி புதுப் பெரியவருடன் பயணம் சென்ற அனுபவமே பரணீதரனின் இந்நூல்.

தான் செல்லும் வழியில் கண்ட பல இடங்களைப் பற்றிக் குறிப்பிட்டாலும், நாமும் அவற்றைச் சென்று காணவேண்டும் என்ற உணர்வை எழுப்பவல்லனவாகச் சில இடங்களை நாம் சுட்டலாம்.

பத்ரிநாத் யாத்திரையின்போது இவர்கள் முதலில் சென்ற முக்கிய நகரமாக அமைவது தேவப் பிரயாகையாகும். இதைப் பற்றி இந்நூலாசிரியர், "சங்கமத்திற்கு வந்தோம். எங்கள் இடப்புறத்திலிருந்து அலகநந்தா நொங்கும் நுரையுமாக ஆர்ப்பரித்துக் கொண்டு வந்தது. இரண்டும் எங்கள் கண் எதிரே சங்கமம் ஆகி, கங்கையாக மாறி ஓடிற்று கையெடுத்துக் கும்பிட்டேன்" என்றும், "தேவப் பிரயாகைக்கு வடக்கே நூற்றுமுப்பது மைல்

களுக்கு அப்பாலிருக்கும் கங்கோத்ரி என்னும் இடத்திலிருந்து பாகீரதி ஓடி வருகிறது. அதற்கு மேல் உள்ள கோமுகம் என்னும் ஐஸ் மலைப்பகுதியில் உள்ள ஒரு குகையிலிருந்து அது முதன் முதலாக வெளிவருகிறது. பாரதனின் பெருமுயற்சியால் அவன் சந்ததியினருக்கு நற்கதி தந்தருள வானுலகத்திலிருந்து கோபாவேசத்துடன் பாய்ந்து வந்த கங்கையானதால் அதற்கு பாகீரதி கங்கை என்று பெயர் ஏற்பட்டது. பத்ரிகாச்ரமத்துக்கு மேலே, குபேரனின் தலைநகரான அலகாபுரியிலிருந்து அலகநந்தா கங்கை ஓடி வருகிறதாம். அப்புண்ணிய தீர்த்தம் விஷ்ணு பாதத் திலிருந்து பெருகி வருவதாகவும் நம்பப்படுகிறது (ப. 27, 28) என்கின்றார்.

எந்தச் சுத்தமான நீரிலும் உடல் அழுக்கைப் போக்கிக் கொண்டுவிடலாம். ஆனால் உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக் கொண்டு ஆத்மலாபம் பெறுவதற்குப் புண்ணிய தீர்த்தம் ஒன்றே கதி (ப. 28) என்ற நம்பிக்கை கொண்ட ஆசிரியர், இத்தகைய எல்லா நதிகளிலும் மூழ்கித் திளைத்து இன்புறுதலும் அவரது பயணங்களில் ஒரு நோக்காக அமைந்து விடுதலைக் காண் கின்றோம். பாடல்பெற்ற தலமாக இத்தேவப் பிரயாகை விளங்குவதை இவர் தம் தமிழ்ப் புலமையால் சொல்லிச் செல் கின்றார் (ப. 30).

தேவப் பிரயாகையிலிருந்து இருநூற்று நான்குமைல் தூரத்தில் இருக்கும் 'ஸ்ரீநகர்' அடுத்து இடம்பெறுகிறது. பெயருக்கேற்றவாறு ஸ்ரீநகர் லட்சுமிகரமாக விளங்குகிறது என விளக்கும் ஆசிரியர், அதனுடன் தொடர்புடைய நம்பிக்கையையும், புராணக் கூறு களையும் விளக்குகின்றார்.

நவீன வசதிகளுடன் கூடிய மலைவாசல் தலமாக இது விளங்கு கிறது. ஸ்ரீ ஆதி சங்கரர் ஸ்ரீசக்கர வடிவில் இந்த ஊரை அமைத்தார் என்றும், நரபலி வாங்கும் காளி எந்திரத்தை சங்கர பகவான் தலைகீழாக நட நரபலி நின்றது என்றும், இங்கு இருக்கும் கமலேச்வரர்ஆலயத்தில் ஸ்ரீமகாவிஷ்ணு சிவபெருமானை ஆயிரம் மலர்களால் அருச்சிக்க, கடைசி மலரைச் சிவன் ஒளிக்க, திருமால் தன் கண்மலரை எடுத்து அருச்சித்தார் என்றும், பல நம்பிக்கைகள் இவண் திகழ்கின்றன. மேலும் இறந்தவர் நினைவாகப் பாதங்களைச் செய்து கோயிலுள் வைத்தல், குழந்தை இல்லாதோர் கார்த்திகை மாதத்தில் ஓர் அகல் விளக்கை

ஏற்றி, அதைக் கையில் ஏந்தியபடி மாலை ஆறுமணி முதல் மறுநாள் காலை ஆறுமணிவரை கருவறையின் முன்பு நின்றபடியே பிரார்த்தித்துக் கொண்டால் அடுத்த ஆண்டு நிச்சயம் குழந்தை பிறக்கும் (பக். 37, 38) போன்ற நம்பிக்கைகளும் உள.

இவ்வாறு, பொதுவாக இந்நூலாசிரியர் தாம் பார்த்த இடங்களில் கண்ட அல்லது கேட்ட நம்பிக்கைகளையும், மக்களின் பழக்க வழக்கங்களையும் இந்நூலுள் குறிப்பிட்டுச் செல்வது சமுதாயக் கல்விக்குப் பெருந்துணையாக அமைகிறது.

பத்ரிநாத் பாதையில் ஒரு முக்கிய நகரமாகத் தோன்றுவது ருத்ரப் பிரயாகை.

ருத்ரப் பிரயாகையில் அலகநந்தாவும் மந்தாகினி நதியும் சங்கமமாகின்றன. அலகநந்தா என்று அப்பகுதியினரால் அழைக்கப்படும் அலகநந்தா பத்ரிநாத்திலிருந்து ஓடி வருகிறது. இவ்விரு நதிகளும் இங்கு ஒன்று கலக்க மந்தாகினி தன் பெயரை இழக்க, அலகநந்தா தேவப் பிரயாகையில் பாகீரதியுடன் ஒன்று கலக்க வேகமாகப் போகிறது தேவப்பிரயாகையில் பாகீரதி, அலகநந்தா இரு நதிகளுமே தங்கள் பெயர்களை இழந்து கங்கையாகி விடுகின்றன (ப. 45).

ருத்ரப் பிரயாகை நதிகளின் சங்கமத்தலம் மட்டுமல்ல; இரு பாதைகள் சேரும் சந்திப்பு மட்டுமல்ல; இந்தியாவில் உள்ள மாநிலங்கள் எல்லாம் அங்கே சங்கமம் ஆவதைக் காணலாம் (ப. 45).

அலகநந்தா நுரை கக்கிக்கொண்டு வெண்ணிறமாக ஓடுகிறது. மந்தாகினி நீலப்பச்சை வண்ணமாகத் தோற்றமளிக்கிறது. இமாலயப்பகுதியில் இயற்கை அன்னை நிர்மாணித்துள்ள பல கலைக்கூடங்களுள் இந்த இடமும் ஒன்று (ப. 47) என ஆசிரியர் இவ்வியற்கை அழகை வியக்கின்றார்.

இவ்விரண்டு நதிகளும் இணையுமிடத்தில் முக்கோண வடிவில் ஒரு பாறை இருக்கிறது. அதை நாரதப்பாறை என்கிறார்கள். சிவபெருமானிடம் இசைபயின்ற நாரதமுனிவர் அங்கே வீணை வாசித்துக் கொண்டிருக்கிறார் என்ற நம்பிக்கையைக் கொண்டது இவ்விடம்.

ஆசிரியர் மனதைக் கொள்ளைகொண்ட இன்னொரு காட்சி ருத்ரப்பிரயாகையிலிருந்து மூன்று மைல் தொலைவில் உள்ள

கோடீச்வரர் மகாதேவ் ஆலயமும், பக்கத்தில் உள்ள பாண்டவர் குகையுமாகும். அக்குகையில் சுயம்பாகத் தோன்றிய சிவ லிங்கங்களுடன், தானாகவே தோன்றிய சிவபார்வதி தோற்றம், மீன், பாம்பு போன்ற உருவங்கள் அற்புதமானதொரு காட்சி என்கின்றார் நூலாசிரியர் (ப. 54).

நதிகளின் சங்கமத்தில் தீர்த்தமாடல் புண்ணியம் என்ற நம்பிக்கை ஆசிரியரிடம் காணப்பட்டது என்பதை கடந்த இரண்டு சங்கமங்களுடன், அலகநந்தாவுடன் பிண்டர் நதி சேரும் கர்ணப் பிரயாகை, நந்தாகினி சேரும் நந்தப்பிரயாகை, கருடகங்கா சேரும் விஷ்ணுப் பிரயாகை என்ற மூன்றும் பற்றிய ஆசிரியரின் சிறப்பான விளக்கங்கள் புலப்படுத்துகின்றன. கர்ணன் தவம் செய்து தானம் செய்த புண்ணியத்தலம் கர்ணப்பிரயாகை என்றும் (ப. 57) நந்தகோபன் தவம்செய்த இடம் நந்தப் பிரயாகை (ப. 58) என்றும் கருதப்படுகிறது.

ஸ்ரீ நரசிம்ம சுவாமியின் ஆலயத்தையுடைய ஜோஷி மடமும் சிறப்பானதொரு நகரமாக அமைகின்றது. ஸ்ரீ ஆதி சங்கரருக்கு ஞான ஒளி ஏற்பட்ட தலமாம் அது. எனவே அங்கு ஜோதிமடம் நிறுவி, நாளடைவில் அது ஜோஷி மடம் என்று அழைக்கப் படலா யிற்று என்கின்றார் (ப.67). ஸ்ரீ நரசிம்ம மூர்த்தியுடன் மேலும் பல தெய்வச் சிலைகள் அங்கு உள்ளன (ப.68).

''பாண்டு கேச்வரம் என்ற இடம் மகாபாரதக் காவியத்தோடு சம்பந்தப்பட்ட ஊர் ஜோஷி மடத்தினின்றும் ஒன்பதாவது மைலில் உள்ள இந்த ஊரினின்றும்தான் பாண்டவர்கள் சுவர்க்க யாத்திரையைத் துவக்கினார்களாம்'' (ப 73) என்று தான் பயணம் செய்த அடுத்த இடம் பற்றி இயம்புகின்றார் ஆசிரியர்.

''பத்ரிநாத்தை நெருங்க பூலோகத்தை விட்டு வைகுண்டத் திற்குச் செல்வது போன்ற உணர்வே ஏற்படுகிறது. சீதோஷ்ண நிலை திடீரென்று மாறிவிடுவதால் நம் உடலின் சில்லிப்பு உள்ளத் தின் சில்லிப்புக்கு அடையாளமாக அமைந்து விடுகிறது. மலை களும், காடுகளும், பள்ளத்தாக்குகளும், பாய்ந்து ஓடும் நீரும் நம்மோடு தோழமை பூண்டு உறவாடுவதுபோல் ஓர் ஐக்கிய பாவம் ஏற்பட்டு விடுகிறது'' என ஆசிரியரின் குரல் ஒலிக்க தேவதர்சினியை அடைகின்றனர். அங்கிருந்து பார்த்தால் தொலைவில் பத்ரிநாத் ஊரும் கோயிலும் தெரிகின்றன.

அனைவர்க்கும் அடைக்கலமான நாராயணன் உறையும் பூமியாகிய பத்ரிநாத்தில் அலகநந்தாவின் ஓவென்ற இரைச்சல் தேனிசைப் பின்னணியாக அமைய நாராயணமூர்த்தியுடன் மேலும் பல மூர்த்திகளுடன் ஆலயம் சிறப்புறுகிறது. ஸ்ரீ நாராயண மூர்த்தியின் சுயம்பு சாளக்கிராமச் சிலையை நோக்க, இரண்டு கைகளைக் கோர்த்துக் கொண்டு, தவநிலையில் பத்மாசனத்தில் அமர்ந்திருக்கின்றார். பூஜைகளைச் செய்யும் பெருமை பெற்றவர் 'ராவல்' எனப்படுகின்றார்.

பத்ரிநாத்தின் பல் சிறப்புகளுள் ஒன்று 'தப்தகுண்டம்' என்ற சுடுநீர் குண்டம். இயற்கையின் புதிராக இது அமைகிறது. ஐஸ் நதியாக அலகநந்தா ஓட, அருகில் கொதிக்கும் வெந்நீர் ஊற்றும் இருக்கிறது.

இவ்வாறு தான்சென்ற பயணத்தைச் சிறப்பாக எடுத்தியம்பும் நூலாசிரியரின் இப்பயணக்கட்டுரை நாமும் அவர் கூடவே சென்று அவ்வனுபவங்களைப் பெற்றது போன்ற உணர்வைத் தோற்றுவிப்பது சிறப்பாக அமைகிறது.

இறுதியில் பத்ரிநாத்துக்குச் செல்பவர்க்கு என்று மேலும் சில விளக்கங்களை அளித்தல், பத்ரிநாத் பயணத்தை விரும்புவர்களுக்குச் சிறந்ததொரு வழிகாட்டியாகும்.

அற்புதங்கள் நிறைந்த இமயமலைப் பிரதேசம், ஆபத்துகள் நிறைந்த தலம் எனினும் இந்தியாவின் பக்தியுணர்வும், நம்பிக்கையுமே பல்வேறு ஆபத்துகளையும் தாண்டி தெய்வங்களைத் தரிசிக்க வைக்கிறது என்பதனை நூலாசிரியரின் இப்புனிதப் பயணம் எடுத்துக் காட்டுகின்றது.

**4. கேரள விஜயம்** - பொன். பாஸ்கர மார்த்தாண்டன்

ஆனந்த விகடனில் தொடர்கட்டுரையாக பொன். பாஸ்கர மார்த்தாண்டன் அவர்களால் எழுதப்பட்டது கேரள விஜயம்.

கேரள விஜயம் எனப் பெயர் சுட்டியிருப்பினும் ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்று தன் கட்டுரையை முடித்திருப்பதும் சொல்லிச் செல்லும் தலங்களும் இவரது நோக்கம் கேரளத்தில் உள்ள கோயிற்சிறப்பையும் இறைச்சிறப்பையும் கண்டு களித்து தான்பெற்ற இன்பத்தை இவ்வையகத்தில் உள்ளார் அனைவரும் பெறவேண்டும் என்பதே என்ற எண்ணத்தை உறுதிப்படுத்துகின்றது.

பிறநாட்டார் தெரிந்திராத கேரளாவில் உள்ள பல கோயிற் சிறப்பை இந்நூலாசிரியர் விளக்கிச் செல்கின்றார். கோயில்களைப் பற்றிச்சொல்லும்போது ஒரு குறிப்பிட்ட பாணியில் இவற்றின் விளக்கம் அமைவது சிறப்புடையது. கோயில் தலத்தில் உள்ள இறைவன், பிற தெய்வங்கள், இறைப்பெருமை, எழுந்த வரலாறு, புராணக் குறிப்புகள், நம்பிக்கைகள் போன்ற பலவற்றையும் விளக்கிச் செல்கின்றார். புராணமாக மட்டுமல்லாது, சமுதாய அரசியற் பின்னணியையும் விளக்குவது மேலும் பலவித அறிவை யும் பெற வாய்ப்பு அளிக்கிறது.

கேரளாவில் அறுபத்துநான்கு சிவத்தலங்கள், அறுபத்து நான்கு விஷ்ணு தலங்கள், அறுபத்து நான்கு தேவி தலங்கள் இருப்பதாக உரைக்கும் இந்நூலாசிரியர் எல்லாக் கோயில்களை யும் பார்க்கவில்லை எனினும், பார்த்தவற்றைத் திறம்பட விளக்கு கின்றார். ஐயப்பன் கோயிலைப் பார்த்தால்தான் தன் பயணம் முற்றுப் பெற்றதாக எண்ணும் இவ்வாசிரியரின் கருத்தில் ஐயப்பன் பெருமையுடன் அவரின் சொந்த நம்பிக்கையுணர்வும் வெளியா கின்றது.

இவருடைய விஜயத்தில் பகவதி கோயில்களின் தரிசனம் மிகுதியாக அமைகிறது. கேரளமக்களின் பகவதி வழிபாட்டின் மிகுதியையே இது புலப்படுத்துகின்றது சில குறிப்பிட்ட தலங் களில் மிகவும் சக்தி வாய்ந்ததொரு தெய்வமாகப் பகவதி கருதப் படுகின்றாள். பல்லசேன மீன் குளத்தி பகவதி ஆலயத்தில் மீனாட்சியே பகவதியாக அமர்ந்திருக்கின்றாள். மூல விக்கிரத் திற்கு ஆனி, கார்த்திகை, பங்குனி மாத முதல் செவ்வாய்க்கிழமை களில் சாந்து அபிசேகம் நடைபெறும் (சாந்து தேக்குமரத்தி லிருந்து எடுக்கப்படும் கறுப்பு நிறப்பால்) இத்தேவி கேட்டதை வாரி வழங்கும் வள்ளல் தெய்வமாக விளங்குகின்றாள்.

'பாலக்காடு டவுனில் கடைத்தெருவில் ஒரு பகவதி கோயிலைத் தரிசித்தோம். தேவியை அங்கு கண்ணகியாக வழி படுகிறார்கள்'. அவள் சேரநாட்டுக்குப் போனபோது பாலக்காடு வழியாகத்தான் சென்றாளாம்.

'தென்மலையில் சீதார் குண்டு என்ற இடத்தில் ராமனும் சீதையும் குளித்தனர். இக்குளத்தில் என்றுமே நீர் வற்றுதிதில்லை' 'கொடுங்களூர் பகவதி கண்ணகியே' போன்ற பல நம்பிக்கைகளை அம்மக்கள் கொண்டு திகழ்கின்றனர்.

தவப்பெருமை, தெய்வப் பெருமையுடன் தீர்த்தப்பெருமையும் சரகங்கை தீர்த்தம் போன்ற பல தீர்த்தங்களால் எடுத்தியம்பப் படுகின்றன.

கோயில்களைத் தளி என்றழைத்தல் கேரளாவில் உள்ள மரபு. தளி என்ற பெயர்க்காரணத்தையும் இவ்வாசிரியர் சிறப்பாக விளக்குகின்றார்.[5]

இக்கோயில்கள் பற்றிய விளக்கத்தில் கேரள மக்களின் தெய்வம் பற்றிய எண்ணத்துடன், சுவையுணர்வு பற்றிய விளக்கங்களையும் தெரிய வருகின்றோம். விழா நாட்களில் சுவை நிகழ்ச்சிகளின் சிறப்பிடம், நாட்டுப்புறக் கலைகளின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்திருக்க வேண்டும் என்பதும் தெளிவாகின்றது.

திருவாமாத்தூர் பகவதி ஆலயத்தில் கார்த்திகை மாதம் திருவோணத்தன்று கொடியேற்றிப் பத்து நாட்கள் விழா நடக்கிறது. உற்சவ நாட்களில் சீவேலியும், கன்னபலியும் நடக்கிறது. சாக்கியர் கூத்து, ஒட்டம்துள்ளல் போன்ற கலைநிகழ்ச்சிகளுக்கும் குறைவில்லை. பல்லசேன மீன் குளத்தி பகவதி ஆலயத்தில் நடைபெறும் புறாட்டு நாடகம்(தெருக்கூத்து போன்றது) சிறப்புடையது என்பதும், பாவைக்கூத்து என்பது இந்த ஊரில் தொடங்கியது என்பதும் சுட்டத்தக்கது.

இவரது கேரளப் பயணத்தில் ஐயப்பன் கோயில் போன்ற இன்னொரு சிறப்புடைய கோயிலைப் பற்றியும் நாம் தெரிந்து கொள்கின்றோம். கொட்டியூர் மகாதேவரே அத்தெய்வமாகும். ஐயப்பன் பக்தர்கள் போன்று, நெய்யுடன் இத்தெய்வத்தைத் தரிசிக்கச் செல்கின்றனர். இங்கு காணப்படும் இறைவன் பிற தலத்தினின்றும் மாறுபட்டவன். ‘அரை அடித் தண்ணீர் நிரம்பியுள்ள ஒரு குளம் இருக்கிறது. அதனுள் கருங்கல்லால் ஆன நான்கைந்து மேடைகள் உள்ளன. முக்கிய மேடைக்கு மணித்தரை என்று பெயர். அதில் கொட்டியூர் பெருமாள் என்று அழைக்கப்படும் மகாதேவர் சுயம்புலிங்கமாய் ஒருபள்ளத்தில் எழுந்தருளி யிருக்கின்றார். வருடாந்திர உற்சவம் முடிந்ததும், அந்த இடத்தை அஷ்டபந்தனம் என்ற மண்கலவையினால் மூடி அதன் மீது சிறிதும் பெரிதுமான கற்களை மூடி விடுகிறார்கள். பின்னர் அடுத்த உற்சவத்தின்போது தான் மீண்டும் நடை திறக்கிறார்கள்,’ என்று இக்கோயில் பற்றிய விளக்கம் அமைகிறது.

கேரளாவிற்குத் தங்கள் செய்கைகளால் புகழ் வாங்கித்தந்த சில சான்றோர் தாம் உறைந்த இடங்களையும் தாம் கண்டு எடுத்துரைக்கின்றார். எழுத்தச்சன் மலையாள உலகில் மிகச் சிறந்த கவிஞராகப் போற்றப்படுபவர். இவர் பிறந்த வீடு' வாழ்ந்து வந்த வீடு போன்றவற்றையும் ஆசிரியர் கண்டு எழுதி யுள்ளார். ராமாயணம், மகாபாரதம் போன்ற இவரது மொழி பெயர்ப்பு நூல்களை, கேரளநாட்டு இந்துக்கள் பக்தி இலக்கியச் சுரங்கங்களாக நினைத்துப் போற்றி வருகின்றனர். திரூரில் எழுத் தச்சன் வாழ்ந்துவந்த சிறு வீடு தற்போது ஓர் அழகிய நினைவு மண்டபமாக மாறியிருக்கிறது போன்ற செய்திகள் கவிஞர்க்கும், கவிதைக்கும் கேரளமாந்தர் கொடுக்கும் மரியாதையையும், முக்கியத்துவத்தையும் தெளிவாக்க வல்லதாக அமைகிறது.

தன் பெருமுயற்சியால் தன் ஊரையே பெருமைபடச் செய் தவர் வாரியார். கோட்டக்கல், திரூரில் இருந்து ஒன்பது மைலில் இருக்கிறது. ஒரு சாதாரண கிராமமாக இருந்த அதனை இன்று உலகப்புகழடையச்செய்தவர் வைத்தியரத்தினம் பி எஸ். வாரியார் என்னும் பெரியார். ஆயுர்வேத மருத்துவமுறை அழிந்து கொண்டு வருவதைக் கண்டு மனம் வெதும்பி, அதற்குப் புத்துயிர் அளிப்பதற்காக அங்கு 1902-இல் தொடங்கிய ஆரிய வைத்திய சாலை இன்று பல்கி, பெருகி மிகப்பெரிய தொழிற்சாலையாகவும் வர்த்தகக் கூடமாகவும் வளர்ந்துள்ளது.

இத்தகைய முறையில், இந்நூலாசிரியர் தம் கேரள விஜயத்தில் கண்டு இன்புற்ற பல செய்திகளையும் சிறப்பாகச் சொல்லிச் சென்றுள்ளார்.

5. **தேவிதரிசனம்** - பொன்.பாஸ்கர மார்த்தாண்டன்

பொன் பாஸ்கர மார்த்தாண்டன் பல்வேறு தலத்தில் உள்ள தேவியரின் பெருமைகளையும், அவர்களின் சக்தி மகிமைகளையும், கேட்டதைக் கொடுக்கும் தெய்வமாக அவர்கள் திகழும் தன்மை யையும் பக்திச்சுவை சொட்ட இத்தொடர் கட்டுரைகளில் தருகின்றார்.

சாதாரணப் பயணக்கட்டுரை போன்று தன் பயணத்துடன், பிறரின், தேவி அருள்பெற்ற அனுபவங்களைக் கடிதம் வாயிலாகக் கேட்டறிந்து அவற்றையும் இணைத்து இந்நூல் தருவது பயண இலக்கியத்துள் ஒரு புதுமையாக அமைகிறது.

இவற்றுள் முதலில் இடம்பெறுவது சங்கரன் கோயில் தலத்தில் எழுந்தருளியுள்ள கோமதி அம்மனின் குலம் காக்கும் பெருமைகளாகும். அத்தலத்தின் வரலாறு, கோயில் வரலாறு, கோயிலுள் அமைந்திருக்கும் இரு வல்லமை மிகு சக்திகளான, அம்பாள் சந்நிதியில் உள்ள சக்திபீடமும், பிரகாரத்தில் பெறப்படும் புற்று மண் இவற்றின் சிறப்புகள், முதலிய பலவற்றைப் பல்வேறு அனுபவங்கள் வழியாக எடுத்தியம்புவது மிகச்சிறப்பாக அமைகிறது.

இவரது பயணத்தில் அடுத்து இடம்பெறும் தலம் வேப்பிலை நாயகியாம் பவானி அம்மனின் திருத்தலமான பெரியபாளையமாகும். வேப்பிலைச் சேலை உடுத்தி அம்மன் முன்வரல் இக்கோயிலுக்குரிய தனித்ததொரு சிறப்பாகும். பரசுராமனின் அன்னையான ரேணுகாதேவி என்றும், யசோதையின் வயிற்றில் பிறந்த சக்தியின் வடிவம் என்றும், இத்தேவி சொல்லப் படுகின்றாள். தனித்ததொரு சாதி பிறப்பினால் இல்லை என்ற சமத்துவம் இவள் முன்னே நிலவுகிறது. பிறப்பினால் தாழ்ந்தவர்கள் என்று சொல்லப்படுகின்ற அரிசன மக்களும், உயர்ந்த குலத்தவரும் இவள் முன்வந்து இவள் அருள்பெற்றுத் திரும்புகின்றனர். எனக் கூறி இந்நூலாசிரியர், இவள் அருள் புரிந்த செயல்களையும் எடுத்தியம்புகின்றார்.

அடுத்து, சென்னை முண்டகக்கண்ணி அம்மன் பற்றி எழுதுகின்றார் இவர்.

இந்த அம்மனைப் பற்றி ஒரு தெளிவான அடையாளம் யாருக்குமே புரியவில்லை. ஆயின் ஆதி பராசக்தியின் சகல சக்தியம் சங்களையும் தன்னுள் அடக்கித் திகழ்கிறாள் என்பதனை அங்கு கூடும் பக்தர்களின் கூட்டம் மெய்ப்பிக்கின்றது. வேப்பிலை மூலம் மக்கள் பிணிதீர்க்கும் அன்னை, உடுத்தும் முதல் ஆடையும் வேப்பிலையே. முண்டகக்கண்ணி என்ற பெயர் இருப்பினும், அகன்றும் கூர்மையாகவும் அருள் வழங்குவதற்கு அடையாளமாய்த் திகழும் சூலத்தையே தன் முகவடிவாக்கி, சுந்தர ஜோதி வடிவாய்த் திகழும் தன்மையள் இவ்வம்மன். இத்தேவியை நாகபூஜை செய்வதைக் கண்ணாரக்கண்டு சொல்லும் பலரை ஆசிரியர் சுட்டுகின்றார். மேலும் தங்கள் பிணி அகற்றி, மனக் குறையகற்றி வாழ்வில் ஒளி ஏற்றிவைத்த ஆனந்த அனுபவத்தைப் பலர் வாயிலாகக் கேட்டு அதனைச் சிறப்பாக எடுத்தியம்புகின்றார் நூலாசிரியர்,

| | | |
|---|---|---|
| 9. | அ மு. தட்சிணா மூர்த்தி | மாடல் மேல்நிலைப் பள்ளி, சென்னை-13 |
| 10. | வி. சுப்பிரமணியன் | சர்ஜன் மேல்நிலைப் பள்ளி, பீலமேடு, கோவை, |
| 11. | எஸ். மகாலிங்கம் | இராமகிருஷ்ண மிஷன் ஆண்கள் மேல்நிலைப் பள்ளி, சென்னை-17 |
| 12. | நடேச நாராயணன் | அரசினர் மேல்நிலைப் பள்ளி, உத்திர மேரூர், செங்கல்பட்டு |
| 13. | சு. பாலசாமி | அரசினர் உயர்நிலைப் பள்ளி, சென்னை-19 |
| 14. | வி. இராசமாணிக்கம் | அரசு மேல்நிலைப் பள்ளி, அச்சிறு பாக்கம், செங்கல்பட்டு |
| 15. | கா. திருநாவுக்கரசு | அரசினர் ஆசிரியர் பயிற்சி நிறுவனம், சென்னை-8 |
| 16. | கா. வில்வபதி | ஏ. ஏ. 49, அண்ணாநகர், சென்னை-40 |
| 17. | முருகேசன் | இராமசாமிச் செட்டியார் உயர்நிலைப் பள்ளி, சிதம்பரம் |
| 18. | ஆ. திருஆளுநன் | மாநகராட்சி மேல்நிலைப் பள்ளி, சூளைமேடு, சென்னை-94 |
| 19. | ஆ. கந்தசாமி | முத்தியாலுப்பேட்டை மேல்நிலைப் பள்ளி, சென்னை-1 |
| 20. | மு. வேங்கடேசன் | அரசு. மேல்நிலைப் பள்ளி, திருமயம், பட்டுக்கோட்டை |
| 21. | ப. நவநீதக் கிருட்டிணன் | தியாகேசர் ஆலை உயர்நிலைப் பள்ளி, மணப்பாறை, திருச்சி |
| 22. | சி. செயக்கொடி | மாநில பெண்கள் மேல்நிலைப் பள்ளி, சென்னை-8 |
| 23. | ச. சம்பூர்ணம் | விலிங்டன் சீமாட்டி மேல்நிலைப் பள்ளி, சென்னை-5 |

முடிவுரை :

சென்னை வானொலி நிலையம் மூன்று மாதத்துக்கு ஒருமுறை திட்டமிட்டு செயல்பட்டுள்ளது. அதனில் சிறு மாற்றங்களும் காணப்படுகின்றன. சான்றோர் வாக்கு சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. நான்கு நிமிட நேரமாக உள்ள இந்நிகழ்ச்சியைப் பத்துநிமிட நேரமாக மாற்றலாம். ஆண்களுக்கே இந்நிகழ்ச்சியில் பேச அதிக வாய்ப்பளிக்கப்பட்டுள்ளது.

கவிதைக்கு கவிதைப்பூங்கா கவியரங்கம் நாட்டு நலம் போன்ற தலைப்புகளில் இடமளித்துள்ளது. பகழ்பெற்ற கவிஞர் களை அழைத்து அவர்களின் அனுபவம் பற்றிக் கலந்துரை யாடுவது நல்லது. இளங்கவிஞர்களுக்கு அது பயனுடையதாய் அமையும்.

நாடகத்துக்கு வானொலி சிறப்பான இடத்தை வழங்கி யுள்ளது. எழுபத்துநான்கு, பதினைந்து நிமிட நேர நாடகங்களும், முப்பத்திரண்டு முப்பது நிமிட நாடகங்களும், நான்கு ஓரங்க நாடகங்களும், பதினோரு அறுபது நிமிட நாடகங்களும் இவ் வாண்டில் ஒலிபரப்பப்பட்டுள்ளன. பிறமொழி நாடகங்களும் தமிழாக்கம் செய்யப்பட்டு வழங்கப்பட்டுள்ளன. கவிதை, சிறு கதை, நாடகம் ஆகியனபற்றி திறனாய்வுப் போக்கில் சில பேச்சு கள் அமைந்துள்ளமை பாராட்டத்தக்க ஒன்றாகும்.

எண்பதில் பட்டிமன்றம் ஒன்று மட்டுமே இடம்பெற்றுள்ளது. இதனை அதிகப்படுத்தலாம். இலக்கிய ஏடு என்ற பகுதி சிறப்பாக அமைந்து (முப்பது நிமிட நேர நிகழ்ச்சியாக) அறிஞர் பலரின் கருத்துகள் (பேச்சுகள்) ஒலிபரப்பப்பட்டுள்ளன. இதுவும் இலக்கியப் பேருரையும் செவ்வாய்க்கிழமைகளில் 'செவ்வாயில் செந்தமிழ்' என்று பாராட்டும்படி அமைந்துள்ளன. இப்பேருரை (ஒரு மணி நேர பேச்சு) இவ்வாண்டில் பன்னிரண்டு இடம்பெற்றுள்ளன. தக்க வர்களைக்கொண்டு இரவு நேரத்தில் பலருங்கேட்கும்படி இந் நிகழ்ச்சி அமைந்துள்ளது.

உழைத்துக் களைத்த அனைவரும் உறங்கச் செல்லுமுன் இல்லத்தில் குடும்பத்தினருடன் கூடி இருந்தது ஒருமணி நேரம் தமிழைச் சுவைக்க வாய்ப்பு வழங்கியுள்ள வானொலியை நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. இந்த ஒரு மணிநேரப் பேச்சு, கேட்பவர்களுக்குச் சலிப்பூட்டாத வகையில் அமைய ''ராஜ

நாயகம்'' பற்றிய பேருரைக்குக் குமரி அபுபக்கரும், ''குடும்ப விளக்குப்'' பற்றிய பேருரைக்கு எஸ். வி. பொன்னுசாமியும் பாடல்களை இசையுடன் பாடி உள்ளனர். தருமபுரம் சுவாமி நாதன், கிருபானந்த வாரியார் இருவரும் தம் இசைப் புலமை யையும் இதில் இழையோடச் செய்துள்ளனர். ச. வே. சுப்பிர மணியன், மே. வி. வேணுகோபாலப் பிள்ளை, அ. ச. ஞான சம்பந்தம், கி. வா. ஜகந்நாதன் ஆகியோர் சொல்லுங் கருத் தாலும், பேச்சுத் திறத்தாலும் எடுத்தல், படுத்தல், நலிதல் போன்ற குரலினிமையாலும், ஒருமணி நேரம் கேட்பவரைத் தம் வயப்படுத்திச் செந்தமிழ்த் தேனைச் ''செவ்வாயில்'' வழங்கி யுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இப்பேருரைகளால் தமிழ் உள்ளங்களில் வானொலி இடம்பெற்றமையும் குறிப்பிடத் தக்க ஒன்றாகும்.

இலக்கியத்தில் ஒருகூறு பற்றியும் ஒரு பாத்திரம் பற்றியும் எடுத்துப் பேசும் போக்கும் குறுகிய நேர பேச்சுக்களில் காணப்படு கின்றன. தேசியம், சமயம் பற்றியும் பேசப்பட்டுள்ளன. மருத் துவம், அறிவியல், நுண்கலைகள் போன்றவையும் இடம்பெற் றுள்ளன. இவ்வாண்டில் மறைந்த இருபெரும் தமிழ் அறிஞர் களுக்குத் தக்கவர்களைக் கொண்டு வானொலி அஞ்சலி செலுத்தி யுள்ளது.

நடக்க இருந்த (1981இல்) ஐந்தாம் உலகத் தமிழ்நாடு பற்றிய பேச்சு நான்கு அமைந்துள்ளன. வெளியில் நிகழும் தமிழ் தொடர் பான விழாக்களின் நிகழ்ச்சிகளைச் சுவைபடத் தொகுத்து வானொலித் தொகுப்பாக (பன்னிரண்டுமுறை) வழங்கப்பட் டுள்ளன.

வெளிநாட்டில் நடைபெற்ற தமிழ்ப் பண்பாடு பற்றிய மாநாடு பற்றியும், தமிழ் ஆய்வு பற்றியும் செய்திகள் ஒலிபரப்பப்பட் டுள்ளன.

தமிழ்ப் பத்திரிகைத் துறையின் முன்னோடிகள் பற்றி எட்டு பேச்சுகள் இடம்பெற்றுள்ளன. தேர்தல் நேரத்தில் அரசியல் தலைவர்கள் தம் கருத்துகளை மக்களுக்கு எடுத்துரைக்க வாய்ப்பு வழங்கப்பட்டுள்ளது. வளரும் தலைமுறை பற்றியும் பெண் ணுரிமை பற்றியும் பேசப்பட்டுள்ளன. 'நமது செல்வம்' பற்றிய மீ. ப. சோமு அவர்களின் பேச்சு ஞாயிறுதோறும் இடம்பெற் றுள்ளது. வானொலியில் அதிகம் இடம்பெற்ற தனிமனிதராக

இவர் காணப்படுகிறார். இவர் தமது பேச்சால் தமிழை உயர்த்தி தன்னையும், உயர்த்திக்கொண்டுள்ளார்.

மறைந்த அறிஞர்களின் பேச்சுகள் ''வானொலிக் களஞ்சியம்'' என்ற தலைப்பில் ஒலிபரப்பப்பட்டுள்ளமை பாராட்டத்தக்க தாகும். இந்நிகழ்ச்சிக்கு அதிக வாய்ப்பளித்தல் நன்று. இந் நிகழ்ச்சியை இரவு நேரங்களில் ஒலிப்பரப்புவதைவிட ஞாயிறு போன்ற விடுமுறை நாட்களில் விரிவாக இடம்பெறச் செய்தல் நல்லது. இந்நோக்கில் இப்போது உள்ளவர்களின் பேச்சுகளையும் பாதுகாத்து வைத்தல் நலன்பயக்கும்.

இவ்வாண்டில் இருபது நூல்களுக்குமட்டும் மதிப்புரைகள் வழங்கப்பட்டுள்ளன. நூல்களின் எண்ணிக்கையை அதிக்ப்படுத்த வேண்டும் தமிழாசிரியர்களுக்கான தமிழ் பயிற்றுமுறை பற்றிய பேச்சும் இடம்பெற்றுள்ளது.

வானொலித் தமிழில் வடமொழிக் கலப்பு மிகுந்து காணப் படுகின்றது என்றும், ஒரு சிலருக்கே அங்கு அதிக வாய்ப்புகள் வழங்கப்படுகின்றன, என்றும் சிலரால் கூறப்படும் குறைப்பாடுகள் நிறைவு செய்யப்படும் என நாம் நம்பலாம். பொதுவாக வானொலி தமிழுக்குச் சிறந்த இடத்தை வழங்கியுள்ளமை பாராட்டத்தக்க தொன்றாகும்.

---

குறிப்பு: எனக்கு இத்தலைப்பினைத் தந்து வானொலி நிலைய இயக்குநரிடம் அனுமதியும் பெற்றுத்தந்து ஆர்வமூட்டிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநரும், என் பேராசிரியப் பெருந்தகை யும் ஆய்வு வழிகாட்டியுமான டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் அவர்களுக்கும், அனுமதி வழங்கிய சென்னை வானொலி நிலைய இயக்குநருக்கும், வேண்டிய விவரங்களைத் தேர்ந்தளித்த திரு. அகிலன் (அகிலாண்டம்-தமிழ்ப் பேச்சு) திரு.டி. கணேசன் (நாடகப் பிரிவு) ஆகியோருக்கும் என் இதயங்கனிந்த நன்றி.

# எண்பதில் இலக்கியக் கட்டுரைகள் மதிப்பீடு :

சு. திருநாவுக்காசு

இலக்கியம் என்பது தான் தோன்றிய காலத்து வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறைகளை, அவர்களின் பட்டறிவுகளை, அக்கால இயற்கைப் பின்னணிகளுடன் எடுத்துச் சொல்லுவதோடு, எவ்வாறு வாழ வேண்டும் என்ற குறிக்கோளினையும் இலை மறை காயாகவும் வெளிப்படையாகவும் எடுத்து உரைக்கும் பெற்றியது. சிறந்த இலக்கியங்கள் நாடு, மொழி, இனம், மதம் ஆகிய அனைத்திற்கும் அப்பாற்பட்டனவாக அமைந்து, உயர்ந்த நோக்கங்கள்' எண்ண எழுச்சிகள், ஊக்கச் செயல் முறைகள், ஆகியவற்றை வாரிவழங்கும் வற்றாத ஊற்றுக்களாக விளங்குகின்றன. இப் பெற்றியவாகிய இலக்கியங்கள், செய்யுள்நடை, உரைநடை என்ற இருவடிவங்களைக் கொண்டவை. கருத்துக்கள் உணர்ச்சிப் பொருண்மை மிக்கு வெளிவரும் போது, அவை கவிதைகள் ஆகின்றன. உணர்ச்சிப் பொருண்மைகள் குறைந்து கருத்துகளுக்கு முதலிடம் தருவனவாக உரைநடை அமைகிறது.

கட்டுரை என்ற சொல் கட்டு + உரை என்ற இருசொல்லின் கூட்டமைப்பாகும். இச்சொல், பழந்தமிழில் பல்வேறு பொருள்களைத் தருகிறது. கட்டுரை ஆசிரியர்கள் தாம் எடுத்துக் கொண்ட நூலினை நன்கு கற்றுத் தாம் உணர்ந்த உண்மைகளைப் பிறருக்கு உணர்த்தும் நிலையில் உரையாகத் தரும்போது, அது கட்டுரையாக மலர்கிறது. எனவே, கட்டுரைகள் உருவாக, ஆசிரி

யரின் கற்கும் முயற்சி, உண்மைகளை உணரும்நிலை, உணர்ந்ததை உணர்த்தும் ஆற்றல் ஆகிய மூன்றும் இன்றியமையாது தேவைப் படுகின்றன.

எனவே, மனக்கோட்டந் தவிர்த்து நற்பண்புகளை விதைத்து நற்படிப்பினைகளை வழங்குகின்ற இறவாப் படைப்புக்களாகிய இலக்கியங்களில் உள்ள அருமை பெருமைகளையும், வாழ்க்கை நெறிமுறைகளையும் நயங்களையும் இன்னோரன்ன சிறப்புகளை யும் 'யாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்' என்னும் நன் மொழிக் கேற்ப, உரைநடையின் 'பொற்காலம்' எனத்தகும் இல் விருபதாம் நூற்றாண்டில் ஏற்றமிகு கட்டுரைகளாகத் தந்து கொண்டிருக்கின்றனர். இவ்விலக்கியக் கட்டுரைகள், படிப்போர்க்கு ஆர்வத்தைத் தூண்டுவது மட்டுமல்லாமல், மனக்கவலை மாற்றும் மாமருந்தாய் அமைந்து, வாழ்வில் நம்பிக்கையும் ஊக்கமும் கொள்ளச் செய்கின்றன.

உலகில், தமிழ் வழங்கும் பல்வேறு பகுதிகளிலும், பல்வேறு துறைகளில், தமிழ் எத்தகைய நிலையில் வளர்ந்தும் வளர்த்தும் வந்துள்ளது; வரவேண்டும் என்பதை உலகிற்கு எடுத்துக்காட்டுவ தும் எல்லாவகையிலும் ஏற்றமிகு தமிழ்த் தொண்டு புரிவதும் நோக்கமாகக் கொண்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். எண்பதில் தமிழ் என்னும் நூலை வெளியிட பல்வேறு பிரிவுகளில் ஆய்வுக் கட்டுரைகள் எழுதித்தரப் பணித்தது. இலக்கியக் கட்டுரை களைத் தொகுக்கும் முயற்சியில் ஈடுபட்ட எனக்கு, எண்பதாம் ஆண்டில் வெளிவந்துள்ள பல்வேறு கட்டுரைகளின் தொகுப்பு நூல்களும், இந்தியப் பல்கலைக் கழகத்தமிழாசிரியர் மன்றவெளி யீடுகளாகிய ஆய்வுக் கோவைகளும் உலகத்தமிழாராய்ச்சி நிறு வன ஆய்வுமன்ற, வாரக்கருத்தரங்குக் கட்டுரைகளும், திருக் கோயில், செந்தமிழ்ச் செல்வி, சைவ சித்தாந்தம், குமர குருபரர், தீபம் ஆகிய இதழ்களும் பெருந்துணை புரிந்தன. கிடைத்த கட்டுரைகள் இலக்கியங்களின் காலவரிசையை நோக்கி மூன்றும், கட்டுரைகளின் உள்ளடக்கப்பொருண்மையை நோக்கி நான்குமாக வகைப்படுத்தப் பட்டுள்ளன. அவை, சங்ககால இலக்கியக் கட்டுரைகள் இடைக்கால இலக்கியக் கட்டுரைகள், தற்கால இலக் கியக் கட்டுரைகள் பல்வேறு வகையான ஆய்வுக் கட்டுரைகள், சமய தத்துவக் கட்டுரைகள், புலவர் நலம்போற்றும் கட்டுரைகள், பொதுநிலைக் கட்டுரைகள் ஆகும்.

1 ; சங்க கால இலக்கியக் கட்டுரைகள் : இப்பகுப்பினுள் பத்துபாட்டும் எட்டுத் தொகையும், சங்கம் மருவிய கால இலக்கியங்களாகிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும், காப்பியங்களும் பற்றி வெளிவந்துள்ள கட்டுரைகள் மதிப்பீடுசெய்யப்பெறுகின்றன நற்றமிழர் வாழ்வில் பொற்காலம் எனப் போற்றப் பெறும் சங்க காலத்தில், மக்கள் இயற்கையோ டியைந்த இன்பவாழ்வு நடாத்தினர் என்பதைக் கட்டுரைகள் தெற்றென விளக்குகின்றன. ஓரறிவுடைய தாவரங்கள் முதலான ஐயறிவுடைய உயிரினங்கள் ஈறாக உள்ள உயிர்களின் வாழ்க்கை முறைகள், நிலைபேற்றுத் தன்மை, பண்பு நலன்கள் ஆகியவற்றைக் கருப் பொருளாகக் கொண்டு அவற்றின் பின்னணியில், மாந்தர்களின் அகப்புற வாழ்க்கைகளை இயல்பான கற்பனை உணர்வுகளைக கொண்டு படைத்துக் காட்டியுள்ளனர். ''பத்துப் பாட்டாதி மனம் பற்றினார் பற்றுவரோ எத்துணையும் பொருட்கிசையா இலக்கணமில் கற்பனையே'' என இருபதாம் நூற்றாண்டிலும் போற்றிப் புகழுமாறு மக்கள் வாழ்க்கை முறைகளும், வழிபாட்டு முறைகளும் இயல்பான நிலையில் படைக்கப்பட்டுள்ளன. எண்பதாம் ஆண்டில், இலக்கியக் கட்டுரையாசிரியரின் கருத்திலும் கட்டுரையிலும் சங்க இலக்கியங்களைப் பொறுத்தவரை மேற்கூறிய செய்திகளே மலர்ந்துள்ளன. எனவே இவ்விலக்கியங்கள், தம்மில் தோய்பவர்களுக்குத் 'தம்மையே தமர்க்கு நல்கும் தனிப் பெரும் பதமாக' விளங்குகின்றன என்று கூறுதல் தக்கதாகும். சங்ககால இலக்கியங்களைப் பற்றிய அறுபத்தைந்து கட்டுரைகள் ஆசிரியர் முப்பதின்மரால் வரையப்பட்டுள்ளன. தாவரங்களில் அரிதாகச் சுட்டப்பட்டுள்ள தடவு, பிடவு, தில்லை, குல்லை உகாய் முதலான மரங்கள் அறிவியல் கண்ணோட்டத்தில் நோக்கப் பெற்றுள்ளன. தொல்காப்பியம், சங்க இலக்கியம் ஆகியவற்றில் காணப்படும் உயிரினங்கள் பொதுமை நிலையிலும், சிறுமீன், சிள்வீடு போன்றவை சிறப்பு நிலையிலும் ஆய்வு செய்யப் பெற்றுள்ளன. இவற்றின் இயக்கமுறைகள், இலக்கிய மேற்கோள்கள் வழங்கும் ஆங்கிலச்சொற்கள் ஆகியன இடம் பெற்றுள்ளன. தமிழர் வாழ்வில் இன்றியமையாத இடம் பெற்ற ஆவின் நிலை, மகளிரின் கற்புநெறி, விளையாட்டு வகைகள், விரிச்சி கேட்கும்முறை, காலம் காரணம், வெறியாட்டு, மக்கள், மன்னரின், இயல்புகளும், சிறுமுதுக்குறைவியாம் தலைவியின் பண்புநலன்கள் ஆகியனவும், விரித்துரைக்கப் பெற்றுள்ளன. சங்க கால வள்ளல்களாக விளங்கிய ஆதனுங்கன், பண்ணன், பிட்டங் கொற்றன் ஆகியோரை

முறையே ஆத்திரையனார், கிள்ளிவளவன், காரிக்கண்ணனார், போற்றிப் புகழ்ந்த அந்த உணர்வுகள், மக்கள் பால் இன்றில்லையே என்ற ஏக்க வெளியீடுகளைச் சில கட்டுரைகள் ஏந்தியுள்ளன. புலவர் நலம் போற்றும் வகைமையில் பேயனாரைக் காண்கிறோம். குறிஞ்சிக் கலிபாடியவர் சங்ககாலக் கபிலரா? எனவும் ஆய்வு செய்யப் பட்டுள்ளது இந்திரன் வழிபாடு, முல்லை நிலத் தெய்வம் மாயோன் இயல்பு ஆகியன இறைமைச் செய்திகளாக இடம் பெற்றுள்ளன. அரும்பெருஞ் செய்திகளை அழகுற எடுத்துக் காட்டும் சங்க இலக்கியங்களில் கலித்தொகை முறைவைப்பு, பொருநராற்றுப் படைத்தன்மை, கலிதையைத் தொடங்கும் உத்திகள் தலைவி கூற்றுப் பாடல்களின் கட்டமைப்பு, ஆகியன விளக்கப் பெறுகின்றன. ஆந்திர நாட்டு அகநானூற்றில் முல்லை நம் இலக்கண முறைகளோடு ஒப்பிடப்பட்டுள்ளது. மேலும் நற்றிணை, குறுந்தொகை முதலானவற்றின் பாடல்கள் நெஞ்சின் நினைவுகளாகக் கொள்ளுமாறு வாழ்க்கை இயல்புகளைச் சுவைபெற விளக்குகின்றன.

'இல்லறமல்லது நல்லறமில்லை என்பதற்கேற்ப' மனைவளம் பற்றி நாலடியார் பகர்வது பறைசாற்றப்படுகிறது. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் மருதத்திணைப் பாடல்கள்பற்றி ஒரு கட்டுரை தொகுத்துரைக்கிறது. அறநூல்களில் வெளிப்பாட்டு உத்திகள் விரித்துரைக்கப்படுகின்றன. திருவள்ளுவரையும் அவர் தம் திருக்குறளைப் பற்றியுமே முப்பத்தேழு கட்டுரைகள் அமைந்துள்ளன. வள்ளுவத்தின் துணைகொண்டு வள்ளுவரின் சிறப்பியல்புகள், அவர் தம் உள்ளம், கல்விக் கொள்கை, கடவுட் கோட்பாடுகள், வாழ்க்கை வரலாறு, அவர் காண விரும்பிய கூட்டு இந்தியா விளக்கப் பெற்றுள்ளன, அகப் பொருள் மரபு, காமத்துப்பாலில் இடம் பெற்றமுறை, சில அதிகாரங்கள், அவற்றில் உள்ள திருக்குறட் பகுதிகள் ஆகியவை பொருள் விளக்கம் செய்யப்பட்டுள்ளன. ஒப்புமை வகைமையில் உவமைகளும், நட்பியல் சிந்தனைகளும் உருவாக்கிக் காட்டப்பெற்றுள்ளன. கோட்பாடுகளில் காந்தியமும் சோஷலிசமும், வள்ளுவர் வழியில் வள்ளலார், மார்க்சு, பாரதியார் பாரதிதாசனனார் ஆகியோரின் எண்ணங்களும் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. வள்ளுவத்தோடொத்த நிலையில் மதிக்கப்பெறும் பரிமேலழகர் உரையில் காணப்படும் மெய்ப்பொருளும் வள்ளுவத்திற்கெழுந்துள்ள புத்துரை ஒன்றும் ஆய்வு செய்யப்பெற்றுள்ளது.

தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்யவேண்டுவதுமே செயற் பாலன என வற்புறுத்தப்பெறுகின்றன. வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ்கொண்டதை எடுத்துக்காட்ட திருக்குறளின் சப்பானியமொழி பெயர்ப்பு அமைந்துள்ளது. இவ்வாறு மனிதனை வாழ்வாங்கு வாழவழிவகுத்துக் காட்டும் சட்ட நூலாகிய திருக்குறள், அவர்தம் கோட்பாடுகள், அதன்படி வாழ்ந்து காட்டியும் தம் படைப்புக்களில் வடித்துக்காட்டியும் சிறப்பெய்திய புலவர் பெருமக்கள், உரைச்சிறப்பு, மொழிபெயர்ப்பு ஆகியன சிறப்பிடம் பெற்றுள்ளன.

சிலம்பு. மணிமேகலை, சீவகசிந்தாமணி பெருங்கதை ஆகியவை காப்பிய இலக்கியக் கட்டுரைகளுக்கு நிலைக்களங்களாக அமைந்துள்ளன. பொதுமை நோக்கில் வீரகாவியமும், ஒரு தலைவனற்ற வீரகாவியமும் இரட்டைக் காப்பியங்களின் உறவும், இருகாப்பியம் போற்றும் இந்திர விழாவும் பேசப்படுகின்றன. காப்பியமும் காரிகையும் ஒப்பீடுசெய்யப்பட்டுள்ளன. இளங்கோ வடிகள் தேசியக்கவியாமாறும், அவர் கையாண்ட புராணங்களும் அவர் தம் குறியீட்டு அமைப்பு முறைகளும் விரித்துரைக்கப்படு கின்றன. சிலப்பதிகாரச் சிற்சில காதைகள், உரைபெறுகட்டுரை ஆகியன விளக் ப்பட்டுள்ளன. கண்ணகியின் கற்பு, பெருங்கற்பாகி உலகோர் ஏத்தும் உரைசால் கற்பாகி, அவள் தமிழின் தவக் கொழுந்தாக விளங்குவதை ஒரு கட்டுரை உயர்த்திப் பேசுகிறது. கண்ணகியின் மதுரை வாழ்வும், கண்ணகி --சொல்லாராய்ச்சியும் நீண்ட வரலாறும், நிலைபெற்ற வரலாறும், நிலைபெற்ற வாழ்வும், செறிவான சாத்திரமும் கொண்டு விளங்கும் நாட்டியக்கலையும், அக்கலையில் வல்ல மாதவியின் வாழ்வும் சிறக்கப் பேசப்படு கின்றன. மூவேந்தரும், சிலம்பின் உரையாசிரியர்களும் போற்றப் பட்டுள்ளனர் சிலம்பு கழித்தலும், சிலம்பின் ஐயர் பதிப்புப் பற்றிய கண்ணோட்டமும் ஆய்விடப்பெற்றுள்ளன. நெஞ்சில் நீங்காத எண்ண அலைகளை உருவாக்கும் அவல உணர்வுகள் மணிமேகலையிலிருந்து எடுத்துக்காட்டப் பெறுகின்றன. புத்தபிக் குணிகள் பற்றியும் மணிமேகலையைப் புதிய நோக்கிலும் ஆய்வு செய்யப்பெற்றுள்ளது. சீவகசிந்தாமணியின் காப்பியக்கட்டுக் கோப்பு, பாத்திரப் படைப்பு, சிறப்பியல்புகள் தெளிவுறுத்தப்படு கின்றன. பெருங்கதையில். காப்பியத்தலைவனின் பண்பு நலனை விடப், பலவகையில் சிறப்புறப் படைக்கப்பட்டுள்ள யூகி என்ற பாத்திரம் இருகாண்டங்களில் வருவதை ஒரு கட்டுரை ஆய்கிறது. பெருங்கதையில் பைகாசி மிருகத்கதையின் சிலதுணுக்குகளும்

விரிசிகை கிளைக் கதைகளும் ஒப்பீடு செய்யப்பட்டுள்ள கட்டுரையும், நரவாகன தத்தனின் பிறப்பு, பெருங்கதையிலும், பிருகத் அவோக சங்கிரகத்திலும் ஒப்பிடப்பட்டுள்ள கட்டுரையும் ஆங்கில வடிவில் அமைந்துள்ளன.

## II. இடைக்கால இலக்கியக் கட்டுரைகள்

இத்தலைப்பின்கீழ் சுமார் கி. பி. 6-ஆம் நூற்றாண்டு முதல் 19-ஆம் நூற்றாண்டுவரை தோன்றிய பக்தி இலக்கியங்கள்' சிற்றிலக்கியங்கள், தனிப்பாடல் தொடர்பானவை மதிப்பீடு செய்யப்பெறுகின்றன.

பக்தி இலக்கியக் கட்டுரைகள் முப்பத்தேழும் ஆசிரியர் இருபத்து இருவரால் எழுதப்பெற்றுள்ளன. இந்து சமயத்தின் இருகண்களெனத் திகழும் சைவ வைணவத் தொடர்பான கட்டுரைகள் மிகுதியாக உள்ளன. சைவத் திருமுறைகளின் தொகுப்பு, தேவார திருவாசகங்களின் சீர்மைகள், அவற்றில் அமைந்துள்ள சைவசித்தாந்தக் கருத்துக்கள், ஆகியவை ஒப்பீட்டு முறையிலும், பொருள் விளக்க அடிப்படையிலும் எடுத்துரைக்கப் பட்டுள்ளன. ஞானசம்பந்தரின் கோளறு பதிகம். அவர் தம் பாடல்களில் காணப்பெறும் இயற்கை வருணனை, இறையருள் இன்பம் எடுத்து விளக்கப்பெற்றுள்ளன. திருமந்திரம், திருவாரூர்' நான்மணிமாலை, தணிகை முருகன் தமிழ்மாலை, திருவரங்கத்து அந்தாதி, சேயூர் முருகன், சந்நிதிமுறை தத்துவம் முப்பத்தாறு ஆகியன விளக்கப் பெற்றுள்ளன அப்பரடிகள், பெரியாழ்வார் பற்றியும், அருணகிரிநாதரின் விருப்பம், பட்டினத்தார்பாடல்களில் தலப்பெயர்கள், பெரியாழ்வாரின் பைந்தமிழ்ப் பண்பு, கந்தர் கலிவெண்பா, மூவர்தமிழைப் புகழ்ந்து மொழியும் தாயுமானவர் பாடற்சிறப்பு. சிவப்பிரகாசரின் பிரபுலிங்கலீலை, அதில் காணப் பெறும் உவமைச் சுவைகள், இராமலிங்கரின் இயற்கைப் பொருண்மை, பாடற்சொற்றொடர்க்கு விளக்கம் ஆகியவை ஆய்வுநோக்கில் விளக்கம் பெற்றுள்ளன. கிருத்துவ சமயச் சார்புடைய இரட்சணிய யாத்திரிகத்தின் இலக்கியச் சிறப்புகள் செம்மையாக எழுதப்பெற்றுள்ளது. திருவேங்கடமாலையில் கற்பனை அமைந்தவாற்றை ஒருகட்டுரை புலப்படுத்துகிறது.

கம்பராமாயணக் கட்டுக்கோப்பு, உத்தரகாண்டத்தின் தனித் தன்மை போர் நெறிகள். சிறந்த உவமைகள், அவல உவமைகள், சுட்டப்பெற்றுள்ளன. இக்காவியம், மேனாட்டுக் கவிஞர் மில்டன்

எழுதிய 'இழந்த சொர்க்கத்துடன் ஒப்பிடப்பட்ட செய்திகளை ஆங்கில வடிவிலும், வைணவ அடியார் பெரியாழ்வாருடனும் ஒப்பிடப்பட்ட செய்திகள் தமிழிலும் கட்டுரைகளாக அமைந் துள்ளன. கதைமாந்தர்களாகிய இராமன், சீதை ஆகியோர் கட்டுரையாசிரியர்கள் சுட்டும் குறை நிறைகளுக்கு இலக்காகக் காணப் பெறுகின்றனர். மேலும் சூர்ப்பணகை, மாரீசன், மேகநாதன், தசரதன், இராவணன் ஆகியோரும் விளக்கமுறு கின்றனர். சிறையிருந்த செல்வியாம் சீதையின் அசோகவனச் சிந்தனைகள் பசுமை நிறைந்த நினைவுகளாகப் பார்க்கப் பட்டுள்ளன.

நூற்பண்பு பாராட்டும் வகையில் பெருந்தேவனார் பாரதம், வில்லிபுத்தூரார் பாரதம் பற்றிய கட்டுரைகள் அமைந்துள்ளன.

புராண இலக்கிய வரிசையில் கந்தபுராணம், பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், தலபுராணங்கள் சீறாப்புராணம் ஆகியவை இடம்பெறுகின்றன. ஆசிரியர் எழுவரால் எட்டுக் கட்டுரைகள் எழுதப்பெற்றுள்ளன.

புராண இலக்கியங்களின் தோற்ற வளர்ச்சியும் தமிழ்த்தல புராணங்களின் இலக்கியக் கூறுகளும் தெரியவருகின்றன. முருகன் அடியெடுத்துக் கொடுத்ததாகச் சொல்லப்படும் கந்தப் புராணத் தொடக்கம் பற்றிய கதை, தமிழர் ஆரியரின் இன அடிப்படையில் எழுந்த காழ்ப்புணர்ச்சியின் வடிவமாகும் என ஒரு கட்டுரை இயம்புகிறது. கந்தபுராணப் போர்நெறிகள், தொல்காப்பியப் புறத்திணையியல் கோட்பாடுகளுக்கேற்ப அமைந்திருப்பதை ஒரு கட்டுரை எடுத்துச் சொல்கிறது சீறாப்புராணம் பற்றிய சிந்தனை களும், அதன் நாட்டுப் படல அமைப்பும், பெரியபுராணப் பாடல் விளக்கக் காட்சிகளும் பாங்காக அமைந்துள்ளன. திருவிளையாடற் புராண ஆசிரியர் பரஞ்சோதியாரின் காலம் பற்றிய ஆராய்ச்சியும் இடம்பெற்றுள்ளது.

சிற்றிலக்கியங்களைப் பற்றி ஆசிரியர் எண்மர், பத்துக்கட்டுரை கள் வரைந்துள்ளனர். சிற்றிலக்கியங்களின் சமூகநோக்கு, தஞ்சை வாணன் கோவை, சீட்டுக் கவி இலக்கியம், பிள்ளைத்தமிழ், முக்கூடற்பள்ளு, வரலாற்றுச் சதகங்கள் ஆகியவற்றின் அமைப்பு, சிறப்பியல்புகள் ஆய்வு நோக்கில் எழுதப்பெற்றுள்ளன. பிரபந்தத் திரட்டில் தூதின்இடம், நளனம்மானையின் சிறப்பியல்புகள் மடல்

இலக்கியத்தின் மரபு மாற்றம் ஆகியனவும், தர்மாம்பாள் குறம், வேதாந்தக்குறம், அகண்ட வெளிக்குறம் ஆகிய மூன்றும், ஆய்வு அடிப்படையில் குறிக்கப்பெறுகின்றன.

தனிப்பாடல் திரட்டிலுள்ள பாடல்களின் துணைகொண்டு அவைகளின் இலக்கியக் கொள்கைகள் ஆசிரியர் ஒருவரால் ஒரு கட்டுரையில் வெளிப்படுத்தப்பெறுகின்றன.

## III. தற்கால இலக்கியக் கட்டுரைகள்

இப்பகுப்பில், சுமார் பதினேழாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட நாவல், நாடகம், கவிதை, சிறுகதை, மறுமலர்ச்சி, நாட்டுப்புறஞ் சார்ந்த இலக்கியங்களைப் பற்றிய கட்டுரைகள் மதிப்பிடப் பெறுகின்றன.

### நாவல்கள்

ஓர் இவள், வானதி நதி, நீல. பத்மநாபனின் ஃபைல்கள், முத் தண்ணா, சோற்றுப்பட்டாளம், ஒருகோட்டுக்கு வெளியே, ஒரு சிங்கம் முயலாகிறது, மண்வேறு—மணம்ஒன்று, விமர்சன நோக்கில் வெள்ளை இருட்டு ஆகிய நாவல்கள் தனித்தனியாக அறிமுகமும், ஆய்வும், மதிப்பீடும் செய்யப்பட்டுள்ளன. வை. மு. கோதைநாயகியம்மாளின் நாவல்கள் வகையமைப்பு செய்யப் பட்டுள்ளன. காந்திய இலக்கியக் கண்ணோட்டத்தில் கா. சி. வேங்கடரமணியின் நாவல்களும், தமிழில் மார்க்சீய நாவல்களும் விளக்கப்பட்டுள்ளன. நாவல்களில் சாதி, வர்க்கம், அதிகாரம், மனிதஉறவுகள் இடம்பெற்றுள்ள தன்மைகளும், முற்குறிப் புக்கள், எள்ளல் சுவை, வரலாற்றுப் பார்வை, கலப்புக்காதல் ஆகியவைகளும், தாம் தேர்ந்துகொண்ட கட்டுரைகளின் வழி ஆசிரியர்கள் விளக்கியுள்ளனர். தி. ஜானகிராமனின் நாவலில் அம்மணி என்ற பெண்ணின் இயல்புகள், ஆங்கிலக் கட்டுரையாக மலர்ந்துள்ளது.

### நாடக இலக்கியங்கள்

பதினான்கு கட்டுரைகள் ஆசிரியர் பதினால்வரால் எழுதப் பெற்றுள்ளன. இப்பகுப்பில் நொண்டி நாடகம் ரேடியோ நாடகம், தெருக்கூத்து, திரைப்படம், நாட்டார் நாடகங்கள் இடம் பெறுகின்றன.

பழங்காலத்தில், தெருக்கூத்துக்களினின்றே நாடகங்கள் உருவாயின. இந்நாடகங்கள் படிப்பதற்கேற்றவை, நடிப்பதற்கேற்றவை, படிப்பதற்கும்நடிப்பதற்கும்ஏற்றவைஎனமுத்திறத்தனவாகும். உலக நாடக அரங்கினை ஒரு கட்டுரை சுட்டிக் காட்டுகிறது போலிச் சமயங்களாலும் களியாட்டச் சடங்குகளாலும் சமயவெறி தோன்றி, மக்களைப் பாழ்படுத்துவதும், பல்லவர் காலச் சமய அமைப்புக்களும், மத்த விலாசப் பிரகசனம் பற்றிய கட்டுரையால் தெரியவருகிறது எளிய சொற்களால் எளிய வாழ்வுடைய குறமாந்தர்களை உறுப்பினர்களாகக் கொண்டு விளங்கும் குறவஞ்சியின் போக்கும், அது தெருக்கூத்தோடு கொண்டுள்ள தொடர்பும் விளக்கப் பெற்றுள்ளன. ஆங்கில வடிவில் குளுவ நாடகம் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. முழுவதும் உரைநடையால் அமைந்த நாடகங்களை இயற்றத் தொடங்கியது தான் மேடைநாடகத்தின் மறுமலர்ச்சியாகக் காணப்பெறுகிறது. கவிதை வடிவில் நூல்கள், நாடகங்கள் எழுதவியலாமல் இருந்தோர்களை எழுத்தாளராகவும், நாடக ஆசிரியர்களாகவும் நாட்டில் நடமாடவிட்ட மேடை நாடகமே, திரைப்படத்துறையாக வளர்ச்சியுற்றது. தமிழ்த்திரையுலகில் எழுத்துக்கள் இடம் பெற்றுள்ளதை ஒரு கட்டுரை இயம்புகின்றது. திறனாய்வு முறையில் நாட்டார் நாடகங்களும், ரேடியோ நாடகமும் விளக்கப் பெற்றுள்ளன. சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தினர் வெளியிட்டுள்ள மனோன்மணியப் பதிப்பின் நிறைகள், நன்மைகள், செப்பங்கள் விளக்கப்பெற்றுள்ளன.

**கவிதை**

ஆசிரியர் ஐவர் கவிதை இலக்கியங்களைப் பற்றி ஐந்து கட்டுரைகள் வரைந்துள்ளனர். இக்காலக் கவிதைகள், அவற்றில் இடம் பெறும் படிமக் காட்சி, அகத்துறையமைப்புக்கள், ஆகியவை நன்கு ஆய்வு செய்யப்பட்டுள்ளன. கவிஞர் ஆதித்தரின் படைப்புக்களும், ''பௌர்ணமி'' என்ற புதுக்கவிதைத் தொகுதியும் மதிப்பிடப் பெற்றுள்ளன.

**சிறுகதை**

சிறுகதை இலக்கியங்களைப் பற்றி ஆசிரியர்கள் இருவரால் இரண்டு கட்டுரைகள் எழுதப்பெற்றுள்ளன. அகிலனின் சிறுகதைகளில் காந்திய விடுதலைப் போராட்டமும், மலையாளச் சிறுகதைகள் பற்றியும் விவரிக்கப்பெற்றுள்ளன.

கண்ணதாசனின் தாலாட்டுப்பாடல்கள், குழந்தை இலக்கியத்தில் பாரதி, பாரதிதாசன் தாக்கம் ஆகியவற்றை இரு கட்டுரைகள் எடுத்தியம்புகின்றன.

**நாட்டுப்புற இலக்கியம்**

நாட்டுப்புறவிலக்கியங்கள் பற்றி ஆசிரியர் பன்னிருவர், பன்னிரு கட்டுரைகள் படைத்துள்ளனர். கட்டுரைகள் வாயிலாக நாட்டுப்புறவியலும், வாய்மொழி இலக்கியத்தின் தனிப்பண்புகளும் வரையறுக்கப்பட்டுள்ளன. தமிழ்த்திரையிசைப் பாடல்களில் இவற்றின் தாக்கமும் நாட்டுப்புற இலக்கியங்களில் காணப்பெறும் துன்பியல், அவலச்சுவை, கலைச்சொற்கள் ஆகியனவும், இசுலாமியத்தமிழில் இவற்றின் கூறுகளும், சிலப்பதிகாரத்துடன் ஒப்பீடும் தெரிவிக்கப்பெறுகின்றன. குமரி மாவட்டத்தில் உள்ள சாதிகள்; அவர்களின் குடும்ப அமைப்பில் தாய்மையின் பங்கு, இலக்கியத்தின் வகைமைகள் ஆகியவை மூன்று கட்டுரைகளால் மொழியப் பெற்றுள்ளன.

**உரைநடை**

உரைநடை இலக்கியஞ் சார்ந்த பதினொரு கட்டுரைகள் ஆசிரியர் பதினொருவரால் வழங்கப்பட்டுள்ளன. இவற்றின் வாயிலாகத் தமிழ் இலக்கியக் கொள்கை நிறுவப்பெறுகிறது. நீலகேசி, யாப்பருங்கல விருத்தி. அணி இலக்கணம் ஆகியவை ஆய்வு செய்யப்பெற்றுள்ளன. பாரதியின் உரைநடை இலக்கியங்கள், பாரதிக்குப்பின் தமிழ்நடை, உரைநடையின் இன்றையநிலை, ஆகியவற்றின் நோக்கும் போக்கும் எடுத்துரைக்கப் படுவதோடு, ''அகல்'' என்னும் ஆய்வுநூலைப் பற்றியமதிப்பீடும், தொழிற்புரட்சி பற்றிய விளக்கக் கட்டுரையும் இப்பகுப்பினுள் இடம்பெற்றுள்ளன.

**மறுமலர்ச்சி இலக்கியம்**

ஆசிரியர் பதினைவரால், மறுமலர்ச்சி இலக்கியங்களைப் பற்றிய நாற்பத்தேழு கட்டுரைகள் எழுதப்பெற்றுள்ளன. நாடு, மொழி, வாழ்க்கைமுறை பண்பாடு, பழக்கவழக்கங்கள் நாகரிகம் ஆகிய பலதுறைகளைப் பற்றி, சமுதாய மாந்தரின் உள்ளங்களில் எழுச்சியூட்டும் வகையில் உணர்வுக்கோலங்களை அள்ளித் தெளிப்பனவற்றையே மறுமலர்ச்சி இலக்கியங்கள் எனப்படுகின்றன.

இவ்வகையில் பாரதியார், பாரதிதாசனார், கவியோகி சுத்தானந்த பாரதியார் ஆகியோரின் பாடல்களும், புதிய ஆத்தி

சூடி, ஆகியவைகளும் கட்டுரைகளுக்குக் கருப்பொருள்களாக அமைந்துள்ளன.

தேசியம், ஒருமைப்பாடு, மொழி, நாடு, சுதந்தரம், ஆகியவற்றை விளக்கும் பாடல்கள் பற்றிய பொருள் விளக்கக்கட்டுரைகளும், பாரதியின் பாடல்களில் அகத்துறை மரபுகளும், பாரதி, ஷெல்லி ஆகியோரின் பாடல்களில் காணக்கிடைக்கும் கற்பனை பற்றிய கோட்பாடுகள் ஒப்பாய்வு முறையிலும் அமைந்து விளக்கம் தரப்பெற்றுள்ளன. பன்னிரு ஆத்திசூடிகள், அவற்றின் பொதுவான அமைப்புமுறை, அவற்றின் உள்ளடக்க ஆய்வு மேற்கொள்ளப் பெறுகின்றன.

புரட்சிக்கவிஞர்பாரதிதாசனாரின்குடும்பவிளக்கு,தமிழ்ச்சியின் கத்தி, முதல் தொகுதிக் காப்பியங்கள் மூன்று ஆகியவையும், அவர் தம் பாடல்கள் காட்டுகின்ற மகளிரும் பண்டாரமும், புதியஉலகம், பகுத்தறிவுக்கலை ஆகியவையும் ஆய்வு செய்யப் பெற்றுள்ளன. பாரதிதாசனாரின் மணிமேகலை வெண்பாவில் வள்ளுவரும் தமிழும் வாழும் முறைகள் வகுத்துக் காட்டப்பெற்றுள்ளன.

இருபதாம் நூற்றாண்டில், ஈடு இணையற்ற காப்பியமாகத் திகழும் பாரத சக்தியின் காப்பியப் பண்புகளை ஒரு கட்டுரை ஆய்கிறது. நன்மைக்கும் தீமைக்கும் ஏற்படுகின்ற போராட்டங்களை அடிப்படையாக்கி, மானிடவாழ்வைத் துயரக்காடாக்கும் அசுரசக்தியை, பரமாத்ம சக்தியால் வென்று வாழ்வைச் சமயோக சித்தி பெறச் செய்ய வழிகாட்டும் மாபெரும் காவியமாக அந்நூல் அமைந்துள்ளது, இக்காலத்தவர்க்கு ஏற்றதொரு வழிகாட்டியாகும்.

## IV. பல்வேறு வகையான ஆய்வுக்கட்டுரைகள்

இப்பகுப்பினுள் வரலாறு, புதைபொருள், கல்வெட்டு, சொல்லாராய்ச்சி, இசைக்கலை, கால ஆராய்ச்சி, அறிவியல், மொழிபெயர்ப்பு, சுவடியில், பதிப்புக்கலை ஆகிய பற்றிய ஆய்வுக் கட்டுரைகள் அடங்குகின்றன.

ஆசிரியர் பதின்மூவர் வரலாற்றாய்வு குறித்து பதின்மூன்று கட்டுரைகள் வரைந்துள்ளனர். பழந்தமிழரின் பரந்துபட்ட சமுதாயம், உயர்ந்திலங்கு உலக நோக்குணர்வு, கடவுளர்கள், தமிழ்நாட்டுக் கோயில்களின் கட்டிடக்கலை, சிற்பக்கலை, போர், முறைகள், நிலவுடைமைத்தோற்றம், பெருவழியமைப்புக்கள்

ஆகியவை இலக்கியச் சான்றுகளுடன் விளக்கப் பெறுகின்றன. புலிகேசி கஜினி பற்றிய ஒப்பீடும், பாண்டியர், பாண்டவர் மரபின ரல்லர் என்பதும், குலசேகர பாண்டியன் வென்ற குளம் பற்றியும் ஆய்வு செய்யப் பெற்றுள்ளன. தெலுங்கைத் தாய் மொழியாகக் கொண்ட எர்குல பொம்ம நாய்க்கர் வரலாறும், தமிழ்நாட்டு இடப்பெயர்களில் நாய்க்கர் ஆட்சியின் தாக்கமும், அவர்கள் காலத் தூண்களமைப்பும் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. பஞ்சாப், தமிழ்ப் பண்பாட்டை ஆங்கிலக் கட்டுரை ஒன்று விளக்குகிறது.

கல்வெட்டு புதைபொருள் பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் பன்னிரண்டும் ஆசிரியர் பதின்மூவரால் எழுதப்பட்டுள்ளன. சமண பௌத்த வழிவந்தோர் தங்கிய குகைகளில், தமிழர் செய்த உதவி களை வெளிபடுத்திய பிராமி எழுத்துக்களாலாகிய கல்வெட்டு களே குகைக் கல்வெட்டுக்களாகும். மகேந்திரவர்மன் திருச்சிராப் பள்ளி மலையில் தம் பெயரால் அமைத்த இலலிதாங்குர பல்லவ கிருகத்தின் புதை சிற்பங்களின் அழகுகள், வரலாறு, அம்மலையின் தென்மேற்கு மூலையில் உள்ள கீழ்க் குடைவரைக் கோயில் ஆகியவை பற்றி கட்டுரைகள் விளக்குகின்றன. இலக்கிய வரலாற்றுக் கல்வெட்டு ஆய்வு அடிப்படையில் அயிரியூர் என்ற ஊர், இராசேந்திர சோழ விண்ணகரக் கோயில் ஆகியவை விளக்கப் பெற்றுள்ளன. கணவன் இறந்ததும் உடனுயிர் துறக்கும் மனைவியின் நினைவாக எழுப்பப் பெறும் சதிக்கற்களின் தோற்றம், வரலாறு, தொடர்ச்சி, வீழ்ச்சி பற்றி விளக்கப் பெற்றுள்ளன. ஜேஷ்டாதேவி, நிசும்ப சூதினி ஆகிய தெய்வங்கள், தென்குரங்காடு துறைக் கல்வெட்டுக்கள், சுந்தரர் வரலாறு சுட்டும் கல்வெட்டுக்கள் ஆகியவும் சுட்டி விளக்கப் பெற்றுள்ளன. கணவனால் பெண்கள் உயர்வு பெற்றமை யும், பெண்களுக்கு அக்காலச் சமுதாயம் தந்த மதிப்பு, பிராமணர் கள் பெற்றிருந்த செல்வாக்கு, சமுதாய ஏற்றத் தாழ்வுகள் ஆகியவை கல்வெட்டுக்கள் மூலமாக அறியும் செய்திகளாக விளக்கப்பெற்றுள்ளன.

சொல்லாராய்ச்சி பற்றிய கட்டுரைகள் பதினைந்தினை ஆசிரியர் ஐவர் வரைந்துள்ளனர். பாரி, ஓரி, திரும்பு, அவல், பேசு ஆகியவற்றின் வேர்ச் சொற்கள். நெருப்புப் பற்றிய 'சுள்' என்ற அடிச்சொல் ஆகியவற்றின் பெயர்க்காரணம், பொருட் பேறு, பிற மொழிச் சொற்களுடன் ஒப்பீடு ஆகியவை மேற்கொள்ளப் பட்டன. 'கள்வன்' என்ற சொல், இலக்கிய சமய சாத்திர மரபில்

பெறும் இடங்களும், அவ்வப் பகுதிகளில் அவை பெறும் பொருட் சிறப்பும் எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. சுட்டெழுத்து, வினா வெழுத்து, மொழிமரபு, தமிழ் இலக்கணத்தில் அயன் மொழி யமைப்பு ஆகியவை பற்றி எழுதப் பெற்றுள்ள ஆய்வுக் கருத்துக் களுக்குத் தக்க விளக்கங்களுடன் மறுப்புரை தரும் கட்டுரைகளும் உள்ளன. மனம் என்பதை விளக்கும் கட்டுரையொன்றும் இடம் பெற்றுள்ளது.

ஆசிரியர் ஐவர் இசைக்கலை பற்றிய எட்டுக் கட்டுரைகளை எழுதியுள்ளனர். தொல்காப்பியம் காட்டும் இசையியலும், சிலப்பதிகார கால இசைத்துறை வளர்ச்சியும், அந்நூல் வழங்கும் இசைச் செய்திகளின் வைப்பமைப்பும், தமிழிசையின் உச்ச உயர் கருவி, இசைத்தமிழ் மறுமலர்ச்சி, தமிழ் இசைத்துறை வாழ, வளர ஆற்ற வேண்டிய அரும் பணிகள் ஆகியனவும் நன்றாக எடுத் துரைக்கப் பெற்றுள்ளன.

அறிவியல் ஆய்வுக் கட்டுரைகள் பத்தும், ஆசிரியர் பதின்மரால் எழுதப் பெற்றுள்ளன அறிவியல், புராண, வரலாற்று அடிப்படை யில் வானுலகில் நம் போல் உயிர்கள் இருக்கலாம் என்பதும், பழந் தமிழில் வானியல் அறிவும் தெரிவுறுத்தப்பெறுகின்றன. சித்தம், ஆயுர்வேதம், இயற்கை ஆகிய மருத்துவ முறைகள் விளக்கமும் ஒப்பாய்வும் செய்யப்பட்டுள்ளன. மருத்துவச் சாலைகள் பண்டைக் காலத்தில் இருந்தமை தெரியவருகிறது. உயிர் வாழ்க்கையில் உயிரணுப் பகுப்பு, பால் பிரிவினை, உணவு தயாரித்தல், மரபுப் பண்புகளைத் தீர்மானித்தல், புதிய பிறவிகளை உருவாக்குதல், சூழ்நிலைகளைச் சமாளித்தல் போன்ற செயல்கள் புரியும் வண்ண நூலின் வரலாறும் சீர்மையும் வனகபெற விளக்கப்பட்டுள்ளன. கரியமில வாயுத் தட்டுப்பாட்டைப் போக்கும் வழிமுறைகள் சொல்லப் பட்டுள்ளன. இலக்கியங்கள் வழியாக, வேளாண்மை அறிவியல் விளக்கப்பட்டுள்ளன. தமிழ்நாட்டு மீன்களின் தமிழ்— ஆங்கில அறிவியல் பெயர்கள் சுட்டும் கட்டுரை ஒன்று இடம் பெற்றுள்ளது.

சுவடிகள் திரட்டுதல், அவற்றின் பயன்கள், பாட வேறுபாடு கள் ஆகியன விளக்கும் மூன்று கட்டுரைகள் ஆசிரியர் ஒருவரால் எழுதப் பெற்றுள்ளன.

பதிப்புக்கலை சார்பான கட்டுரைகள் இரண்டும் ஆசிரியர் ஒருவரால் எழுதப் பெற்றுள்ளன. அச்சுப் பொறி அறிமுகமாகு

முன் தமிழ் நூல்களின் நிலை, அச்சுப் பொறியின் அறிமுகமும் முதல் அச்சு நூலும், அச்சுக் கலையால் ஏற்பட்ட வரிவடிவ மாற்றங்கள், நிறுத்தக் குறியீடுகள், கையெழுத்துப் படியைச் சீர்திருத்தும்முறை, சந்தி பிரித்துப் பதிப்பித்தல், நூலமைப்பு, நூலாக்கக் கலை, பதிப்பிக்கப் பெறும் நூல்கள், மொழிபெயர்க்கப் பெறும் நிலைகள், புத்தக அடுக்குகள், புத்தகம் பற்றிய கண்ணோட்டம் ஆகியவை தெளிவுறுத்தப்படுகின்றன.

## V. சமயமும் தத்துவமும் சார்ந்த கட்டுரைகள்

ஆசிரியர் ஐம்பத்திருவர், சமயக் கட்டுரைகள் என்பதையும், ஆசிரியர் இருபதின்மர் தத்துவக் கட்டுரைகளையும் வரைந்துதவி யுள்ளனர். சைவமும் வைணவமும் இந்து சமயத்தின் இருகண் களெனத் திகழ்வனவாகும். இவ்விரு சமயங்களைப் பற்றி யெழுந்துள்ள தோத்திரப் பாடல்கள், அவற்றின் பொருள் விளக்கங்கள், கடவுளர்கள், அவர்கள் வீற்றிருக்கும் திருத்தலங்கள், வழிபடும் முறை, அதனால் வரும் பயன்கள், வழிபட்டுயர்ந்த சான்றோர்கள், அவர்கள் காட்டும் நெறிமுறைகள் ஆகியன எளிய சொற்களால் விளக்கமுற எழுதப்பட்டுள்ளன. கடவுள் உணர் வுடைய மாந்தர்கள் பக்தி கொள்ளும் பாங்கு, வழிபாடு சடங்கு போலக் கருதாமை, அந்தரங்கமாக பக்தி கொள்ளல், ஆலய வழி பாடு மேற்கொள்ளல், கிருத்திகை விரதம், வைகுண்ட ஏகாதசி, மார்கழி நோன்பு ஆகியவை மேற்கொண்டு உடலும் உள்ளமும் தூய்மை பெறுதல், நான்கு நெறிகள், தீக்கையும் அதன் வகைகளும் தெரிந்து ஏற்பன கொள்ளல், சிவநெறியும் திருமுறையும் ஓதி உணர்ந்து எல்லா உயிர்களிலும் இறையுரு கண்டு அன்பு பாராட்டி, அவைகளின் இன்னல்களைக் களைதல், தன்னலங் கருதாது பிறர்க் கென வாழ்தல் ஆகியவற்றோடு, உயிர் போகுங்கால் அத்தனி வழிக்குத் துணை கடவுளுணர்வே என்பதையும் தெளிய வேண்டு மென்று ஆசிரியப் பெருமக்கள் பல கட்டுரைகளால் உணர்த்து கின்றனர்.

இறைவன் இயல்புகளைச் சமயக் குரவர்கள், வைணவ அடியார்கள், அருணகிரிநாதர், வள்ளலார் ஆகியோரின் பாடல்கள் வழித் தெரிந்து இறைவன் எழுந்தருளியிருக்கின்ற தலங்களையும், அவர் அடியவர் பொருட்டும், தமிழின் பொருட்டும் நிகழ்த்திய திருவருட் செயல்களையும் தலயாத்திரைகளையும் விளக்கி

யுள்ளனர். திவ்யகவியின் அகவிலக்கியஞ்சார்ந்த இறையுணர்வுக் கோட்பாடுகள், அடியார்களின் பண்புகள் அவர்கள் மேற்கொண்ட நெறிமுறைகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

வீடும் வேண்டா விறலினராகக் கூடும் அன்பினில் கும்பிடுவ தாகிய பக்திநிலை, அடியவர்கள் உள்ளத்தில் உருவாகுமானால், சிந்தனை, பேச்சு, செயலற்ற சுத்த மோனநிலை கைவரப் பெறுவர் என்றும், செருக்கற்ற சிந்தையில் தோன்றிய மோனநிலை இறைவனைப் பற்றி எண்ணவும், சொல்லவும், செயல்படவும் இயலும் போதுதான் பேரானந்தப் பேறு கிடைக்கப் 'பெறுகிறது என்றும், உணரத்தக்க கருத்துகள் வெவ்வேறு சூழல்களில், வெவ்வேறு ஆசிரியர்களால், வெவ்வேறு நூல்களில் வெவ்வேறு கட்டுரைகள் மூலம் ஒன்றுக்கொன்று தொடர்புற அமைந்து, தொகுத்துணர வழிவகை செய்கின்றன.

ஆன்மாக்கள் இறையருளில் திளைக்குமாறு சமைக்கப்பட்ட சமய வழிப்பட்ட பாடல்களின் பொருள்களையும், இலக்கியங் களையும் கேட்டுத் தெரிந்து கொள்ள வாய்ப்பாக அமைந்த மாநாடுகளையும் அங்கு நிகழ்த்தப் பெற்ற சொற்பொழிவுகளை யும் சில கட்டுரைகள் விளக்குகின்றன.

சைவம், வீரசைவம், வேதாந்தம் ஆகியவற்றின் தத்துவங்கள் தனித் தனிக் கட்டுரைகளாக உள்ளன. சைவ சித்தாந்தத்திற்குரிய சாத்திர நூல்கள் யாவை என்பவை பற்றியும், அவைகளில் சில நூல்கள் பற்றியும், அவற்றின் பொருள் விளக்கங்களும், உவமை முதலான அழகு நலங்களும் சில கட்டுரைகளால் அறிய முடிகிறது

சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கருத்துகள், முப்பத் தாறு தத்துவங்கள், திருமந்திரம், தேவாரம், திருவாசகம், முத்துக் குமாரசாமிப் பிள்ளைத்தமிழ் ஆகிய நூல்களில் சைவ சித்தாந்தக் கருத்துகள் அமைந்துள்ள முறைகள் வெளிப்படுத்தப் பெற் றுள்ளன. ஆகாமிய வினைகள், அவற்றின் செயல்கள், விருப்பு வெறுப்புக்கள் ஆகியவை விவாதிக்கப் பெற்றுள்ளன. சிவ வாக்கியர், சேக்கிழார், அருணகிரிநாதர் ஆகியோரின் சமய தத்துவக் கொள்கைகள் ஒப்பிடப்பட்டுள்ளன. தாயுமானவர் வேதாந்தியா? எனவும் ஆய்வு செய்யப்பட்டுள்ளது தீயனவற்றை அகற்றி, நல்லனவற்றை மேற்கொள்ளுவதே கடுவெளிச்சித்தரின் யோகத்தை அணுகும் முறையாகப் பேசப்படுகிறது. சாங்கியர் கூறும் இருபத்தைந்து தத்துவங்களுடன் சேர்த்து, சைவர்கள் ஆறாறு

தத்துவங்கள் மேற்கொண்டதையும் இருசமய தத்துவங்கள் வேறு படும் இடங்களையும் வீடுபேறு பற்றி இருமதங்களும் மேற்கொண்டுள்ள கோட்பாடுகளையும் அறிந்துகொள்ள முடிகிறது.

## VI புலவர் நலம் போற்றும் கட்டுரைகள்:

இப்பகுப்பினுள் நாற்பத்தேழு கட்டுரைகள், ஆசிரியர் நாற்பத்து மூவரால் எழுதப்பட்டுள்ளன. சங்க காலப் புலவராகிய பேயனாரும், சமயதத்துவத் துறைகளில் பெரும்பணி புரிந்த ஞான சம்பந்தர், நாவுக்கரசர், மாணிக்கவாசகர், சூடிக்கொடுத்த சுடர்க் கொடியார், கடவுள் மாமுனிவரர், குன்றைமுனிவரர், எம் பெருமானார், ஈசானசிவபண்டிதர், பிள்ளைப் பெருமாளை யங்கார், ஆகியோர் போற்றப் பெறுகின்றனர்.

புலவர்கள் வரிசையில் ஔவையார், ஒட்டக்கூத்தர், சிவஞான சுவாமிகள், நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை, கவிமணி, தமிழ் ஒளி, பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், பாரதிதாசனார் ஆகியோர் அவரவர்களின் படைப்புக்களைப் பற்றிய ஆய்வுகளால் புகழாரம் சூட்டப்பெறுகின்றனர்.

இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர் ஆகியோர் உரையாசிரியர் வரிசையில் உயர்த்தி மதிப்பிடப்பெற்றுள்ளனர்.

படைப்பாளர் வரிசையில் நாவல் துறையில் சிறந்த தொண்டர்களாக விந்தனும் ஜெயகாந்தனும் மதிப்பீடு செய்யப் பட்டுள்ளனர். அரசியல் துறையில் ஈடுபட்டுச் சுதந்திரத்திற்கும், பொதுவுடைமைச் சமுதாய உருவாக்கத்திற்கும் பாடுபட்டோராக வ. வே. சு. அய்யரும், மகாத்மா காந்தியடிகளும், மார்க்சும் பாராட்டப் பெற்றுள்ளனர். தமிழ், தமிழின உணர்வுகளுக்கு எடுத்துக்காட்டாக ம. பொ. சிவஞானம் அவர்கள் புகழப்படு கின்றார். இலக்கியச் சுவைஞர்களில் ஈடு இணையற்றுத் திகழ்ந்த வராக பொதியைமுனிவர் டி. கே. சி. அவர்களை இருகட்டுரைகள் போற்றிப் புகழ்கின்றன. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமி களின் வாழ்க்கைத் துணைவியாராகிய சுந்தரத்தம்மையாரின் தூய வாழ்வியல் பற்றி ஒரு கட்டுரை போற்றிப் புகழ்கிறது.

இலக்கிய ஆராய்ச்சித்துறையில் சிறந்த தொண்டாற்றியவர் களாகிய ரா. ராகவையங்கார், வையாபுரிப் பிள்ளை ஆகியோரின் பெருமை பேசப் பெறுகின்றது.

## VII பொதுநிலைக் கட்டுரைகள்

பல்வேறு வகையான பொருள்கள் பற்றிய கட்டுரைகள் இப்பகுப்பினுள் அமைகின்றன. கருத்துப் புலப்பாட்டிற்கும், சிந்தனை வளர்ச்சிக்கும், மறவாமல் போற்றத்தக்கனவற்றை நெஞ்சில் காக்கும் கருவியாகவும், வேண்டியவற்றை வேண்டியபோது அறிய உதவும் கருவியாகவும் பயன்படும் மொழியின் தோற்றம் கன்னித் தமிழின்நிலை, சீர்மை ஆகியவை விளக்கப் பெறுகின்றன. சப்பானிய மொழி, தமிழிலிருந்து பிறந்ததாக ஆய்ந்து பேசப்படுகிறது. மொழித் தொடர்பு பற்றி சிந்துவெளி மொழியும் வடமொழியும் ஒப்பிடப்பட்டுள்ளன.

தமிழ் இலக்கியங்களில் ஓவியம் முதலான கலைகள், நகை, பாசம் முதலான உணர்வுகள், கற்பனை, உவமை முதலான திறங்கள், என்றும் உலவும் தென்றலைப் பற்றிய கவிஞரின் போற்று மொழிகள், இலக்கிய மரபுகள், நிலவு பற்றிய கற்பனை, குமரகுருபரர் காலத்திற்கு முன்னும் பின்னும் விளங்குவதாகிய தமிழ்ப் பற்று ஆகியவை விளக்கப்பெறுகின்றன. தெலுங்கு, மலையாள மொழிகளில் காணப்பெறும் பழமொழிகள், வேளாண்மைப் பழமொழிகள் ஆகியவை தொகுத்துரைத்து விளக்கப்பெற்றுள்ளன. பிரபந்தத்திரட்டில் நிகண்டுகளின் கூறுகள் ஆய்வு செய்யப்பெற்றுள்ளன. இலக்கியச் சுவையில் ஈடுபட்டுத்திளைத்த வெளிப்பாடுகளை சிலகட்டுரைகள்தொகுத்தளிக்கின்றன.

முடிபாக நோக்கும் போது சங்க இலக்கியங்களுக்கு அமைந்த கட்டுரைகள், தற்கால இலக்கியங்களுக்கு அமைந்த கட்டுரைகளை விட எண்ணிக்கையில் குறைவாகவே உள்ளன. மேலும் சங்க இலக்கியக் கட்டுரைகள் பெரும்பாலும் நூற்பொருள் பாராட்டல், நூலின் அமைப்புமுறை, புலவர் நலம் போற்றல், மாந்தரின் வாழ்வியல் முறைகள் ஆகியனவற்றையே தாங்கி நிற்கின்றன. எனவே, அக்கால இலக்கியங்கள் தக்க சான்றோர்கள் முன்னிலையில் அரங்கேற்றமும் ஆய்வும் செய்யப்பட்டு வெளிவந்ததனால் குறைகளிருக்க வாய்ப்பில்லை; அவற்றின் சுவைகளில் திளைப்பதுவே நமது கடமையாகக் கொள்ளல் வேண்டும். அவற்றில் இக்கால வாழ்விற்குப்பொருந்தாத நிலையில் சிற்சில குறைபாடுகளைச்சிலர் எடுத்துக் காட்டினாலும் அதனால் தற்கால மாந்தர்க்குப் பெரும் பயன் விளையாது. ஆனால் பல துறைப்பட்ட தற்கால இலக்கியங்கள், இக்கால மாந்தர்களின் உணர்வுகளின் பிரதிபலிப்பாக அமைவதனாலும், அந்நூல்கள் அறிஞரால் ஆய்வு செய்யப்பட்டு

வெளிவரும் நிலைமைகள் இல்லாமையாலும், "அவைகளின் குறை நிறைகளை ஆய்ந்து எடுத்துக்காட்டி மக்களை நெறிப்படுத்தும் நிலையில் இக்கால இலக்கியங்கள் சார்பான கட்டுரைகள் மிக்குத் தோன்றியுள்ளன எனலாம்.

சங்க இலக்கியம் காட்டும் இயற்கை வாழ்வு, இக்கால வாழ்வில் பெரிதும் மறக்கப்பட்ட நிலையில் உள்ளது. உலகனைத்தும் ஒரு குடும்பமாக வாழும் வகையில் அறிவியல் முன்னேற்றம் பெருகியுள்ள அதே நேரத்தில், உயர்ந்த பண்பாடுகளும் பழக்க வழக்கங்களும் மறந்துசெயற்கைவாழ்வில்ஈடுபட்டுள்ள இக்கால மாந்தர்க்கு நன்னெறி புகட்டி, சிந்தனைகளைத் திருத்த வல்லனவாய் சமயச் சார்பான கட்டுரைகள் அமைந்துள்ளன. அவைகள் மூடக்கொள்கைகள் நெஞ்சில் புகாவண்ணம், படைப்போரின் மனமும், படிப்போரின் மனமும் ஒருங்கிணையுமாறு எழுதப்பட்டுள்ளன. ஆய்வு, நோக்கில் பல்வேறு கட்டுரைகள் அமைந்துள்ளன. சங்க காலந் தொடங்கி இன்றுவரை, பலதுறைகளிலும் பாடுபட்டு உயர்ந்து வழிகாட்டியராக விளங்கும் புலவர்கள் போற்றப்படுவதை நோக்கின் கட்டுரை ஆசிரியர்களின் நன்றி பாராட்டும் உணர்வைப் போற்ற வேண்டியுள்ளது. ஆசிரியப் பெருமக்கள் கண்ணான இலக்கியங்களைக் கற்று, கட்டுரைகளைப் படைத்துத் தருவதிலேயே இவ்வாண்டின் பொன்னான காலத்தைப் பயன்படுத்தியுள்ளனர் எனத் தெரிகிறது. அறிவுப் பசி மிக்கோர்க்கு, இத்தகைய கட்டுரைகள் விருந்தாகவும், மேலும் மேலும் மூலநூல்களைக் கற்கும் விழைவினை உண்டாக்கும் தூண்டுகோலாகவும் அமைந்துள்ளன"

மேற்குத் தஞ்சைமாவட்ட கள்ளர் கோயில்கள், வடுவூர் துரைசாமி அய்யங்காரின் நகைச்சுவைப் படைப்புக்கள் ஆகியவை ஆங்கிலக் கட்டுரைகளாக வெளிவந்துள்ளன.

தோற்றம் காணவொண்ணாத் தொன்மை நலஞ்சான்ற செந்தமிழ் பிறமொழியால் வாழ்கிறது எனக்கூறும் தமிழ்ச் சிதைப்பு வெறியர்களின் கோட்பாடுகளை மோதி மிதித்து அழிக்கும் வண்ணம், தூயதமிழ் நடை எழுத்தில் வரவேண்டுமென்பதும், எழுத்தாளரின் கடமைகளும் எடுத்து மொழியப்பெற்றுள்ளன. மொழிநலம் பேணுதலும், தமிழ் மொழி வளரவும் வாழவும் கூறும் வழிமுறைகளும் சில கட்டுரைகளால் தெரியவருகின்றன.

சில கட்டுரைகள், நம் உடம்பையும், உடற்கூறுகளையும் அறிவித்து, உடம்பை வளர்க்கும் உபாயமுறையாக விளையாட்

டைப் போற்றச் செய்து, பண்டைத் தமிழ்ச் சிறார்களின் விளையாட்டுக்களையும் நினைவு கூரச்செய்து, சல்லிக்கட்டு முதலிய வீர விளையாட்டுக்களையும் எடுத்துக்காட்டி அமைகின்றன. இவ்வாறே அன்பு விளையாட்டை நிகழ்த்தி பெண்ணுரிமை பேணுவதோடு நமது வாழ்க்கைத் தரத்தினை அறிந்து, நாமறிந்ததைப் பிறர்க்கு உணர்த்தும் வண்ணம் நம் கடமைகள் விரிவதனைச் சில கட்டுரைகள் வலியுறுத்துகின்றன.

சமுதாயச் சீர்திருத்தமும் பெண்ணுரிமையும் இருகண்ணெனப் போற்றிப், பொதுவுடைமை பூக்கப் பாடுபட வேண்டுமென்பதையும், இவை போன்றவற்றைத் தெளிந்து, தெளிவுறுத்தும் வன்மை கொண்ட ஆசிரியப் பெருமக்களின் நிலையையும், அன்றும் இன்றும் என்ற காலக் கண்கொண்டும் சில கட்டுரைகள் விளக்குகின்றன.

பாட்டு, தொகை, கணக்கு, காப்பியம், புராணம் முதலானவற்றில் போற்றப்படும் ஒழுக்க நெறிகளுக்குரிய விதிமுறைகளின் தொகுப்பே அறம் எனத் தெளிந்து, பிறிதின் நோய் தன் நோய் போல் போற்றும் அறிவினைக் கருவியாகக் கொண்டு, வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து மனிதகுல வரலாற்றில் மாண்பு மிக்க இடம் பெற வழிகாட்டுவனவாகிய இப்பகுப்பினுள் அமைந்த கட்டுரைகள், வந்தனைக்குரிய விருந்தாக சிந்தனைக்கு அமைந்து நிறைவு செய்கின்றன.

பொருள் விளக்கம், இலக்கிய விளக்கம், பாடல் காட்சி விளக்கங்கள், கண்டு பிடிப்புகள், சுவை நயங்கள் ஆகிய பல கோணங்களில் தொடக்க கால நூல்கள் முதல் இவ்வாண்டு நூல்கள் வரை ஆய்வு மேற்கொள்ளப்பட்டபான்மை நன்கு புலப்படுகிறது. இத்தகைய இலக்கியக் கட்டுரைகள் எண்பதாம் ஆண்டுத் தமிழின் ஏற்றத்திற்கு ஏணிப் படிகளாக அமைந்துள்ளன. 1980 இல் தமிழ் என்னும் இந்நூல், இவ்வகையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் முதல் முயற்சியாக இருப்பதோடு, இனிமேல் வெளிவரும் ஒவ்வொரு ஆண்டுத் தமிழ் நிலைபற்றிய நூல்களுக்கு முன்னோடியாகவும் திகழ்கிறது என்பது பெருமைப்படத் தக்கதேயாகும்.

# எண்பதில் இலக்கியக் கட்டுரைகள்-தொகுப்பு

**சுருக்க விளக்கங்கள்**

| | | | |
|---|---|---|---|
| உ. த. ஆ. நி. | — உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் | செ. செ. | — செந்தமிழ்ச்செல்வி |
| இ. ப.,த. ம. வெ. | — இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற வெளியீடு | கு. கு. | — குமர குருபரர் |
| சை. சி. நூ. ப. க. | — சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | தி. கோ. | — திருக்கோயில் |
| சை. சி. ச. | — சைவ சித்தாந்த சமாஜம் | சித். | — சித்தாந்தம் |
| இ. ச. அ. து. வெ. | — இந்து சமய அறநிலையத்துறை வெளியீடு | உ. இ. ஒ. | — உலக இதய ஒலி |

## கட்டுரைத் தலைப்பைக் கொண்டு அகர வரிசைப்படுத்தப்பட்டுள்ளது

**நூல்கள்**

| | | | |
|---|---|---|---|
| அகங்காட்டும் அருங் குறள்கள் | பாலசுப்பிரமணியன், சி. | நெஞ்சின் நினைவுகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| அச்சம் அவர் அறியாதது | முருகுசுந்தரம் (தொகுப்பு) | அரும்புகள் மொட்டுகள் மலர்கள் | (சிவகங்கை, அகரம்) |
| அஞ்சி அஞ்சிச் சாவார் | தங்கமணி | பாரதியின் பகுத்தறிவுக் கதைகள் | (சென்னை செந்தில் பதிப்பகம்) |
| அணியிலக்கணம் | சுப்பிரமணியன். ச. வே | தமிழ் இலக்கியக் கொள்கை | (சென்னை, உ.த.ஆ.நி) |

| | | | |
|---|---|---|---|
| அந்தக் கதை மாதிரி | தங்கமணி | பாரதியின் பகுத்தறிவுக் கதைகள் | (சென்னை, செந்தில் பதிப்பகம்) |
| அரும்பத உரையாசிரியர் ஜெயங்கொண்டாரா? | சிவஞானம். ம. பொ | சிலப்பதிகார உரையாசிரியர்கள் | (சென்னை, பூங்கொடிப் பதிப்பகம்) |
| அவதார மூர்த்தியின் நாடகம் | ஆச்சார்யா பி.ஸ்ரீ, சரசுவதி ராமநாதன் | கம்பன் கலைக்கோயிலுக்கு ஒரு கைவிளக்கு | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| அழகியல் போற்றிடும் அருந் தமிழர் | பாலசுப்பிரமணியன். சி. | நெஞ்சின் நினைவுகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| அறிஞர் போற்றும் அரிய நட்பு | அப்துல் கறீம் | திருவள்ளுவர் திருவுள்ளம் | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| அன்று தொடங்கிய உரை நடை | பாலசுப்பிரமணியன். சி. | நெஞ்சின் நினைவுகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| இசைத்தமிழின் மறுமலர்ச்சி | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| இரட்சணிய யாத்திரிகத்தின் இலக்கியச்சிறப்பு | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| இலக்கியத்தில் ஓவியக்கலை | செயராமன் ந.வீ. | இலக்கியக்கோவை | சென்னை, இலக்கியப் பதிப்பகம்) |
| இலக்கியத்தின் நோக்கங்கள் | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக்காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| இலக்கியத்தில் பாசம் | இஸ்மாயில். மு. மு. | இலக்கிய மலர்கள் | (சென்னை, வானதி பதிப்பகம்) |

| | | | |
|---|---|---|---|
| இலக்கியமும் வேளாண்மை அறிவியலும் | செயராமன். ந.வீ. | இலக்கியக்கோவை | (சென்னை, இலக்கியப் பதிப்பகம்) |
| இழந்த செல்வம் | முருகுசுந்தரம் (தொகுப்பு) | அரும்புகள் மொட்டுகள் மலர்கள் | (சிவகங்கை, அகரம்) |
| இளம்பூரணர் | நாகராசன். கரு. | தமிழ் இலக்கியக் கொள்கை | (சென்னை, உ.த.ஆ.நி.) |
| இறுதிவரை சீதையின் நினைவா? | ஆச்சார்யா பி ஸ்ரீ., சரசுவதி ராமநாதன் | கம்பன் கலைக்கோயிலுக்கு ஒரு கைவிளக்கு | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| இனிய தமிழ் | வில்லவன் கோதை | பாரதி தமிழ் | (சைதை, சக்தி பதிப்பகம்) |
| இன்ப இரவு | முருகுசுந்தரம் (தொகுப்பு) | அரும்புகள் மொட்டுகள் மலர்கள் | (சிவகங்கை, அகரம்) |
| இன்னல்செய் இராவணன் இழைத்த தீமை | ஆசாரியா. பி.ஸ்ரீ., சரசுவதி ராமநாதன் | கம்பன் கலைக்கோயிலுக்கு ஒரு கைவிளக்கு | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| உவமைத்திறம் | பாலசுப்பிரமணியம். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| உள்ளத்தில் மணக்கும் முல்லைச் சரம் | முருகு சுந்தரம் (தொகுப்பு) | அரும்புகள் மொட்டுகள் மலர்கள் | (சிவகங்கை, அகரம்) |
| ஊருக்கு நல்லது சொல்வேன் | தங்கமணி | பாரதியின் பகுத்தறிவுக் கதைகள் | (சென்னை, செந்தில் பதிப்பகம்) |
| எங்கள் தாய் | வில்லவன் கோதை | பாரதி தமிழ் | (சைதை, சக்தி பதிப்பகம்) |
| எங்கெ'ரில் என் ஞாயிறு நமக்கு? | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |

| | | | |
|---|---|---|---|
| எல்லாம் அறுபதினாயிரம் | ஆசாரியா. பி. ஸ்ரீ., சரசுவதி ராமநாதன் | கம்பன் கலைக் கோயிலுக்கு ஒரு கைவிளக்கு | (சென்னை வானதி பதிப்பகம்) |
| என் தந்தையார் | முருகு சுந்தரம் (தொகுப்பு) | அரும்புகள் மொட்டுகள் மலர்கள் | (சிவகங்கை, அகரம்) |
| ஓட்டக்கூத்தர் | சிவகாமி. ச. | தமிழ் இலக்கியக் கொள்கை-5 | (சென்னை, உ.த.ஆ.நி.) |
| ஒருமைப்பாடு | வில்லவன் கோதை | பாரதி தமிழ் | (சைதை, சக்தி பதிப்பகம்) |
| ஓங்கி உலகளந்த உத்தமன் | ஆசாரியா. பி. ஸ்ரீ., சரசுவதி ராமநாதன் | கம்பன் கலைக் கோயிலுக்கு ஒரு கைவிளக்கு | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| ஔவையார் | லீலாவதி. தி. | தமிழ் இலக்கியக் கொள்கை-5 | (சென்னை, உ.த.ஆ.நி.) |
| கடமையும் உரிமையும் | அப்துல் கறீம் | திருவள்ளுவர் திருவுள்ளம் | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| கடலும் கலமும் | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| கண்ணகி என்னும் சொல்லாராய்ச்சி | சிவஞானம். ம. பொ. | சிலப்பதிகார உரையாசிரியர்கள் சிறப்பு | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |
| கண்ணகி தேவி மதுரையை எரித்ததேன்? | சிவஞானம். ம. பொ. | சிலப்பதிகார உரையாசிரியர்கள் சிறப்பு | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |
| கம்பராமாயணத்தில் காதல் | இஸ்மாயில். மு. மு. | இலக்கிய மலர்கள் | (சென்னை, வானதி பதிப்பகம்) |

| | | | |
|---|---|---|---|
| கம்பனின் உவமைகள் | இலக்குமி நாராயணன். ம. | கம்பனின் உவமைகள் | (திருச்சி, கண்ணம்மை பதிப்பகம்) |
| கலித்தொகை காட்டும் மகளிர் கற்புநெறி | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| கலையும் இலக்கியமும் | இஸ்மாயில். மு. மு. | இலக்கிய மலர்கள் | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| கவிமணி | கந்தசாமி | தமிழ் இலக்கியக் கொள்கை-1 | (சென்னை, உ.த.ஆ.நி) |
| கவியரசன் பாரதிதாசன் | முருகு சுந்தரம் (தொகுப்பு) | அரும்புகள் மொட்டுகள் மலர்கள் | (சிவகங்கை, அகரம்) |
| கவியொளி வீசிய தமிழ் ஒளி | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை நறுமலர் பதிப்பகம்) |
| கற்பனைத் திறன் | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை நறுமலர் பதிப்பகம்) |
| கன்பியூசியசும் வள்ளுவரும் கண்டநட்பியல் சிந்தனைகள் | மோகனராசு. கு. | ஒப்புமை ஒளியில் வள்ளுவம் | (சென்னை, வள்ளுவர் கழகம்) |
| காலந்தோறும் கன்னித் தமிழ் | பாலசுப்பிரமணியன். சி. | நெஞ்சின் நினைவுகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| காலம் வந்ததே | தங்கமணி | பாரதியின் பகுத்தறிவுக் கதைகள் | (சென்னை, செந்தில் பதிப்பகம்) |

| | | | |
|---|---|---|---|
| கால் வண்ணம் இங்கு கண்டேன் | ஆசாரியா. பி. ஸ்ரீ, சரசுவதி ராமநாதன் | கம்பன் கலைக் கோயிலுக்கு ஒரு கைவிளக்கு | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| கிட்கிந்தா ராமன் | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| கும்பகர்ணன்-முரண்மயமா | ஆசாரியா. பி. ஸ்ரீ, சரசுவதி ராமநாதன் | கம்பன் கலைக் கோயிலுக்கு ஒரு கைவிளக்கு | (சென்னை வானதி பதிப்பகம்) |
| குறளோவியக் குடும்ப விளக்கு | செல்வராசன். மா. | பாரதிதாசன் கனல்கள் | (சென்னை, வண்ணமலர் வெளியீடு) |
| குறுந்தொகையில் காதல் | இஸ்மாயில் மு. மு. | இலக்கிய மலர்கள் | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| கோடிப் புண்ணியம் | தங்கமணி | பாரதியின் பகுத்தறிவுக் கதைகள் | (சென்னை, செந்தில் பதிப்பகம்) |
| கோவலன் கொலை யுண்டதை கண்ணகி தேவிக்கு முதலில் சொன்னவர் யார்? | சிவஞானம். ம. பொ. | சிலப்பதிகார உரையாசிரி யர்கள் சிறப்பு | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |
| சங்க கால மன்னரும் மக்களும் | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| சமுதாயச் சீர்திருத்தம் | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| சிலப்பதிகார உரையாசிரி யர்களின் சிறப்பு | சிவஞானம். ம. பொ. | சிலப்பதிகார உரையாசிரி யர்களின் சிறப்பு | (சென்னை, பூங்)கொடி பதிப்பகம் |

| | | | |
|---|---|---|---|
| ற்றிலக்கியங்களில் சமூக நோக்கு | செயராமன். ந. வீ. | இலக்கியக் கோவை | (சென்னை, இலக்கியப் பதிப்பகம்) |
| டுக்கவி இலக்கியம் | செயராமன். ந. வீ. | இலக்கியக் கோவை | (சென்னை, இலக்கியப் பதிப்பகம்) |
| றாப்புராணச் சிந்தனைகள் | இஸ்மாயில். மு. மு. | இலக்கிய மலர்கள் | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| சந்தமிழ் நாடு | வில்லவன் கோதை | பாரதி தமிழ் | (சைதை, சக்தி பதிப்பகம்) |
| சந்தமிழ் முன்னேற்றம் | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| சயலின் வாய்மை ஈகையே | அப்துல் கறீம். மு. | திருவள்ளுவர் திருவுள்ளம் | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| சது நாடுதந்த செந்தமிழ்ச் செல்வர் | செயராமன் ந. வீ. | இலக்கியக் கோவை | (சென்னை இலக்கியப் பதிப்பகம்) |
| சைவ சித்தாந்த சாத்திரங்கள் | சிவலிங்கனார். ஆ. | தமிழ் இலக்கியக் கொள்கை — | (சென்னை, உ. த. ஆ. நி.) |
| சனரும் தமிழ்நாடும் | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை. நறுமலர் பதிப்பகம்) |
| நானப்பாடல் | செயராமன் ந. வீ. | இலக்கியக் கோவை | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |
| தமிழர் கொண்டாடும் போகித் திருநாள் இந்திர விழாவா? | சிவஞானம். ம. பொ. | சிலப்பதிகார உரையாசிரியர்கள் சிறப்பு | (சென்னை. பூங்கொடி பதிப்பகம்) |

| | | | |
|---|---|---|---|
| தமிழின் தவக்கொழுந்து | செயராமன். ந. வீ. | இலக்கியக் கோவை | (சென்னை, இலக்கியப் பதிப்பகம்) |
| தமிழைப் பிடித்த விதியே! | வில்லவன் கோதை | பாரதி தமிழ் | (சைதை, சக்தி பதிப்பகம்) |
| தமிழ் இலக்கியத்தில் சில நகைச்சுவைக் காட்சிகள் | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை. நறுமலர் பதிப்பகம்) |
| தருமத்தின் வெற்றி | தங்கமணி | பாரதியின் பகுத்தறிவுக் கதைகள் | (சென்னை, செந்தில் பதிப்பகம்) |
| தானமா? தவமா? | அப்துல் கறீம். மு. | திருவள்ளுவர் திருவுள்ளம் | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| திருக்குறள்-புலவர் குழந்தை உரை | செயராமன். ந.வீ. | இலக்கியக் கோவை | (சென்னை, இலக்கியப் பதிப்பகம்) |
| திருமுறை இலக்கியம் | செயராமன் ந.வீ. | இலக்கியக் கோவை | சென்னை, இலக்கியப் பதிப்பகம்) |
| திருவள்ளுவரும் சோஷலிசமும் | ம. பொ. சி. | திருவள்ளுவரும் கார்ல் மார்க்சும் | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |
| திருவள்ளுவரும் மார்க்சும் | ம. பொ. சி. | திருவள்ளுவரும் கார்ல் மார்க்சும் | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |
| திருவள்ளுவர் திருநாளில் தமிழ்மொழியின் நிலையென்ன? | ம. பொ.சி. | திருவள்ளுவரும் கார்ல் மார்க்சும் | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |

எ—34

| | | | |
|---|---|---|---|
| திருவள்ளுவர் நாத்திகரா? | ம பொ.சி. | திருவள்ளுவரும் கார்ல் மார்க்சும் | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |
| திருவள்ளுவர் பெயரால் ஒன்று படுவோம் | ம. பொ. சி. | திருவள்ளுவரும் கார்ல் மார்க்சும் | (சென்னை. பூங்கொடி பதிப்பகம்) |
| திருவள்ளுவர் போதனை களைச் சாதனை களாக்க வாரீர் | ம. பொ. சி. | திருவள்ளுவரும் கார்ல் மார்க்சும் | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |
| தென்றல் வரவு | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| தேசியக்கவி இளங்கோ | ம. பொ. சி | சிலப்பதிகார உரையாசிரி யர்கள் சிறப்பு | (சென்னை பூங்கொடி பதிப்பகம்) |
| நகைச்சுவை நலம் | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| நச்சினார்க்கினியர் | சுந்தர[illegible]ர்த்தி. கு. | கட்டுரைத் தொகுப்பு | (சென்னை, உ.த.ஆ.நி.) |
| நமது நாடு | வில்லவன் கோதை | பாரதி தமிழ் | (சைதை, சக்தி பதிப்பகம்) |
| நல்லருள் துறந்த நாடகம் | ஆசாரியா. பி. ஸ்ரீ, சரசுவதி இராமநாதன் | கம்பன் கலைக் கோயிலுக்கு ஒரு கைவிளக்கு | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| நன்றியா? உதவியா? | அல்துல் கறீம். மு | திருவள்ளுவர் திருவுள்ளம் | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| நாட்டார் நாடகங்கள் | பெருமாள். ஏ. என். | தமிழ் இலக்கியக் கொள்கை | (சென்னை, உ.த.ஆ.நி.) |
| நாட்டியக் கலைபற்றி வரலாறு கூறுவது என்ன? | ம. பொ. சி. | சிலப்பதிகாரஉரையாசிரி யர்கள் சிறப்பு | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |

| | | | |
|---|---|---|---|
| நாட்டியக் கலையின் சாத்திரமும் சரித்திரமும் | ம. பொ. சி. | சிலப்பதிகார உரையாசிரியர்கள் சிறப்பு | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |
| நாட்டு வணக்கம் | வில்லவன் கோதை | பாரதி தமிழ் | (சைதை, சக்தி பதிப்பகம்) |
| நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை | செல்லப்பன். சு. | தமிழ் இலக்கியக் கொள்கை | (சென்னை, உ.த.ஆ.நி) |
| நானறிந்த பாரதிதாசனார் | முருகு சுந்தரம் (தொகுப்பு) | அரும்புகள் மொட்டுகள் மலர்கள் | (சிவகங்கை அகரம்) |
| நினைவுத் துளிகள் | முருகுசுந்தரம் (தொகுப்பு) | அரும்புகள் மொட்டுகள் மலர்கள் | (சிவகங்கை, அகரம்) |
| நீலகேசி | வீராச மி தா.வே. | தமிழ் இலக்கியக் கொள்கை | (சென்னை, உ.த.ஆ.நி) |
| நெஞ்சின் நினைவுகள் | பாலசுப்பிரமணியன். சி. | கட்டுரைத் தொகுப்பு | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| பகுத்துண்டு பல்லுயிரோம்பல் | அப்துல்கறீம். மு. | திருவள்ளுவர் திருவுள்ளம் | (சென்னை, வானதி பதிப்பகம்) |
| பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் | சுப்பிரமணியன். தா.மு. | தமிழ் இலக்கியக் கொள்கை | (சென்னை, உ.த.ஆ.நி) |
| பத்தினிக் கோட்டத்து சோழனும் பாண்டியனும் வராதது எதனால்? | ம.பொ.சி. | சிலப்பதிகார உரையாசிரியர்கள் சிறப்பு | (சென்னை, பூங்கொடி பதிப்பகம்) |
| பழந்தமிழரின் உலகநோக்கு | பாலசுப்பிரமணியன். சி. | இலக்கியக் காட்சிகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |
| பழந்தமிழர் வானியல் அறிவு | பாலசுப்பிரமணியன். சி. | நெஞ்சின் நினைவுகள் | (சென்னை, நறுமலர் பதிப்பகம்) |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 5. | பிரிட்டன் | 36,196 | 8. | நெதர்லாந்து | 13,111 |
| 6. | பிரான்ஸ் | 31,673 | 9. | கொரியா குடியரசு | 13,081 |
| 7. | இசுபெயின் | 24,896 | 10. | இந்தியா | 12,885 |

1980 சனவரி முதல் டிசம்பர் வரையில் தமிழ்நாடு கன்னிமாரா பொது நூலகத் துறைக்கு அனுப்பப்பட்ட நூல்களின் பதிவு எண்ணிக்கை 11,533 இவற்றில் தமிழ் நூல்களின் எண்ணிக்கை 1,4!1. இவற்றில் சிறு வெளியீடுகள் (Phamplets) தவிர்த்து மொத்த நூல்கள் எண்ணூற்றி எண்பத்தி இரண்டு. இந்நூல்களை வெளியிட்ட பதிப்பகங்களின் எண்ணிக்கை முந்நூற்று நாற்பத்தி யொன்று. இந்நூலகத்தில் கிடைக்கப்பெற்ற நூல்கள் மொழி வாரியாக :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஆங்கிலம் | 4,395 | 9. | தெலுங்கு | 391 |
| 2. | இந்தி | 1,489 | 10. | உருது | 259 |
| 3. | தமிழ் | 1,4 1 | 11. | பஞ்சாபி | 69 |
| 4. | மராத்தி | 1,188 | 12. | ஒரியா | 61 |
| 5. | கன்னடம் | 708 | 13 | சமஸ்கிருதம் | 14 |
| 6. | மலையாளம் | 583 | 14. | அஸ்ஸாமி | 12 |
| 7. | குஜாரத்தி | 470 | 15. | இதர மொழிகள் | 35 |
| 8. | வங்காளம் | 422 | | | |

**நூல்களின் தேவை**

சாதாரணமாக ஒரு நல்ல உடல்நலமிக்க மனிதனுக்கு நாள் ஒன்றுக்கு இரண்டாயிரத்து எண்ணூறு 'கலோரி' அளவு உணவு தேவைப்படுகிறது. இதில் குறைவு ஏற்படின் பலவித நோய்கள் உண்டாகும். இதைப்போலவே எழுதப்படிக்கத் தெரிந்த ஒவ்வொருவருக்கும் அறிவைப் பெருக்கிக்கொள்ள ஐரோப்பா விலும், வட அமெரிக்காவிலும் இரண்டாயிரம் பக்கங்கள் கொடுக்கப்படுகிறது என்று யுனெஸ்கோ (UNESCO) புள்ளி விவரக் கணக்குக் கூறுகிறது.

இந்தியாவில் சராசரி ஒவ்வொரு மனிதனுக்கும் ஆண் டொன்றுக்கு முப்பத்திரெண்டு பக்கங்கள் கூடத்தேறவில்லையாம்; இந்த முப்பத்திரெண்டு பக்கங்களிலும், பதினாறு பக்கங்கள் பாட நூல்களாகும். நமக்குக் கிடைக்கும் முப்பத்திரண்டு பக்கங்கள் யுனெஸ்கோ (UNESCO) மதிப்பீட்டளவில் அறுபதில் ஒரு பங்கு தான் என்றும், ஆகவே நூல் பஞ்சம் என்றும் ஆய்ந்து கூறியுள்ளார்

திரு. வெ. தில்லைநாயகம் அவர்கள். மேலும் அவர், ''எழுத்து ஒரு நல்ல கருவி; ஒரு நல்ல நெம்புகோல் (Lever). இதை எழுத்தாளர் அறிவியல் உணர்வுடன் பயன்படுத்த வேண்டும். இதன் ஒரு முனையை, அறிவு என்ற ஆதாரப் புள்ளியில் (Fulcrum) சரியாக ஊன்றி மறுமுனையைச் சிந்தனை முயற்சியால் (Effort) திட்டமிட்டு அழுத்தினால், அறியாமை என்ற பாரம் (weight) நிச்சயமாக நகரும்'' என்று கூறுகிறார். அவர் கூறுவது போல், அறியாமையை யகற்ற எழுத்தாளர், அச்சடிப்பாளர், அச்சகங்கள் அரசாங்கம் ஆகிய அனைவரும் ஒன்று சேர்ந்து பாடுபடல் வேண்டும்.

**தமிழ்நாட்டு அச்சக வரலாறு**

தமிழ் மொழி தமிழ் நாட்டில் மட்டுமின்றி, இந்தியத் துணைக் கண்டத்தில் பல பகுதிகளிலும், தமிழர் வாழும் இடங்களிலும், உலகில் தமிழர் குடியேறிவாழும் இடங்களிலும் பேசப்பட்டு வரும் ஒன்றாகும். உலக மொழிகளுள் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளாகத் தொடர்ச்சியான இலக்கியத்தைப் பெற்ற மொழி தமிழே என்று உலகப் புகழ்பெற்ற நூலகராகத் திகழ்ந்த திரு. எஸ். ஆர் அரங்கநாதம் அவர்கள் வியந்து போற்றுகிறார்.

இந்திய மொழிகளுள் மிகவும் பழமை வாய்ந்ததும், உயிர்த் துடிப்பு உள்ளதுமான தமிழ் மொழியின் நூல்தான் 'கார்டில்லா' முதன்முதலில் வெளிநாட்டில் (லிஸ்பனில்) ரோம வரி வடிவில் அச்சிடப்பட்டுப் பெருமையடைந்து உள்ளது. முதன்முதலில் அச்சான நூல் **தம்பிரான் வணக்கம்** தமிழ்மொழியில் தானென்பதும், தமிழ்நாட்டில்தான் இந்தியாவிலேயே முதன் முதலில் தரங்கம்பாடியில் அச்சுவார்ப்படச் சாலையும், காகித உற்பத்திச் சாலையும் அமைக்கப்பட்டனவென்பதும் வரலாற்று உண்மைகளாகும். தமிழகத்தில்தான் முதன்முதலில் அச்சுத் தொழிற்பள்ளி நிறுவப்பட்டது; இங்குப் பயிற்சி பெற்றவர்களால் தான், இந்தியாவில் உள்ள, சிறந்த அச்சகங்கள் திறம்பட நடத்தப் பெற்றன என்பதும் ஈண்டு நினைத்தற்குரியதாம். இந்தியாவில் முதன் முதலாகப் பொது நூலகச் சட்டம் இயற்றிய பெருமையும் தமிழ் நாட்டிற்கே உரியதாகும்.

**தமிழ் நூல்கள்**

தமிழ் நூல்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளில் அச்சாகி வெளியிடப்பட்டுள்ளன. இவ்விவரத்தைத் தொகுத்துச் சொல்வதானால் **தமிழ் மாவட்டங்களில் ;**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | சென்னை | 642 | 8. | திருநெல்வேலி | 6 |
| 2. | மதுரை | 68 | 9. | கன்னியாகுமரி | 7 |
| 3. | இராமநாதபுரம் | 37 | 10. | சேலம் | 6 |
| 4. | தஞ்சை | 34 | 11. | கோவை | 6 |
| 5. | தென்னார்க்காடு | 19 | 12. | செங்கற்பட்டு | 3 |
| 6. | வட ஆர்க்காடு | 13 | 13. | ஈரோடு | 2 |
| 7. | திருச்சி | 10 | | | |

வெளிப் பகுதிகளில் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | பாண்டிச்சேரி | 10 | 5. | கேரளா | 1 |
| 2. | டெல்லி | 9 | 6. | பம்பாய் | 1 |
| 3. | ஆந்திரம் | 2 | 7. | லண்டன் | 1 |
| 4. | பஞ்சாப் | 1 | 8. | மலேசியா | 1 |

தரவாரியாகப் பிரித்தால் வெளியானவைகளில் பொதுவானவை எண்ணூற்றுப் பதின்மூன்று; குழந்தைகளுக்கானவை அறுபத்தொன்பது. இதில் இருபத்தி மூன்று நூல்களுக்கு விலை குறிக்கப்படவில்லை. போக எண்ணூற்று ஐம்பத்தொன்பது நூல்களின் மொத்த விலை ரூ. 6,210.57; சராசரி விலை ரூ. 7.27; உச்ச விலை ரூ அறுபது; குறைந்த விலை 0.75 காசு. தமிழ் இலக்கியத்தில் வெளியான ஐந்நூற்றுப் பதினேழு நூல்களின் மொத்த விலை ரூ 3,142.85.

மொழிவாரியாக நூல்கள் வெளியீட்டில் தமிழ் மூன்றாம் இடத்தையே பெறுகிறது. பொதுவாகப் பல ஆண்டுகளாகத் தமிழ் நூல்களின் எண்ணிக்கை ஆண்டுதோறும் ஆயிரத்தைத்தான் தொடமுடிகிறது. இவ்வுண்மையை 1975ஆம் ஆண்டு முதல் 1979ஆம் ஆண்டு வரை வெளியான தமிழ் நூல்களின் விவரம் பற்றிய விவரங்களடங்கிய பின்னிணைப்பு ஒன்றில் தரப்பட்டுள்ள அட்டவனை மூலமாக அறியலாம். இனித் தமிழில் எண்பதில் வெளியான எண்ணூற்று எண்பத்திரண்டு நூல்களைக் கோலன் பகுப்பு முறைப்படி வகுத்தும் தொகுத்தும் பார்த்தால் காணக் கிடைப்பன :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | பொதுமை | 27 | 6. | இதழியல் | 2 |
| 2. | வட்டாரப்படிப்பு | 1 | 7. | கணக்கியல் | 2 |
| 3. | வாழ்க்கை | 52 | 8. | பொறியியல் | 5 |
| 4. | நூலகவியல் | 1 | 9. | இயற்பியல் | 1 |
| 5. | நூல்வியல் | 1 | 10. | உயிரியல் | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 11. | வேளாண்மை | 3 | 25. | பிறமொழி இலக்கியம் | 46 |
| 12. | விலங்கியல் | 2 | 26. | மொழியியல் | 19 |
| 13. | மருத்துவம் | 32 | 27. | சமயம் | 47 |
| 14. | உடற்பயிற்சி | 7 | 28. | தத்துவம் | 42 |
| 15. | பயன்படு கலைகள் | 12 | 29. | உள்ளவியல் | 6 |
| 16. | சித்தவியல் | 13 | 30. | கல்வி | 1 |
| 17. | சோதிடவியல் | 8 | 31. | தமிழ்ச் சொற்பொழிவு | 1 |
| 18 | நுண்கலைகள் | 13 | 32. | நிலவியல் | 10 |
| 19. | தமிழ் இலக்கியம் | 14 | 33. | வரலாறு | 14 |
| 20. | தமிழ்க் கவிதை | 131 | 34. | அரசியல் | 6 |
| 21. | தமிழ் நாடகம் | 26 | 35. | பொருளாதாரம் | 8 |
| 22. | தமிழ்ப் புதினம் | 290 | 36. | சமூகவியல் | 17 |
| 23. | தமிழ்க் கடிதம் | 2 | 37. | சட்டம் | 7 |
| 24. | தமிழ்க் கட்டுரை | 23 | | | |

இயைபியலிலும் புவியியலிலும் ஒரு நூல்கூட வரவில்லை எனத் தெரிகிறது. தமிழ் இலக்கியம் நானூற்று எண்பத்தியொரு நூல்களைப் பெற்று முதலிடம் வகிக்கிறது. இதில் புதினம் இருநூற்றுத் தொண்ணூறு உள்ளது. அதாவது 32.387 விழுக்காடு. சமயம் நாற்பத்தியேழு நூல்களைப் பெற்று இரண்டாவது இடத்தைப் பெற்றுள்ளது. அதாவது 5.39 விழுக்காடு ஆகும்.

**தமிழ் நூல்கள் வெளியீட்டில் தமிழ்நாட்டின் நிலை**

1954 முதல் 1974 வரை அதாவது கடந்த இருபது ஆண்டுகளாகத் தமிழகத்திலுள்ள 1,464 நூலகங்களிலும் உள்ள நூல்களின் எண்ணிக்கையைக் கணக்கிட்டால், ஐம்பது இலட்சங்கள் தான் வருகின்றனவாம். இதைக் கணக்கிட்டால் தலைக்கு அரைக் கால் நூல்கூடத் தேறவில்லை! அண்மையில் எடுத்த கணக்குப் படி சராசரி தமிழ்நூல் நூற்றுஅறுபது பக்கங்கள் என்றப்டி இருபது பக்கங்கள்தான் உள்ளனவாம். யுனெஸ்கோ (UNESCO) அறிக்கைப்படி ஐரோப்பாவிலும் வடஅமெரிக்காவிலும் ஆண்டொன்றுக்கு இரண்டாயிரம் பக்கங்கள், நூல்—உணவாக மக்களுக்குக் கிடைக்கிறதாம். ஆனால் இந்தியாவில் சராசரி ஆண்டொன்றுக்கு, ஒவ்வொருவருக்கும் முப்பத்தியிரண்டு பக்கங்கள் கூடத் தேறவில்லையாம். இது மலைக்கும் மடுவிற்கும் உள்ள வேறுபாடாக உள்ளது.

தமிழகத்தில் ஒரு தலைப்பில் ஆயிரம் படிகள் விற்கக் குறைந்தது ஐந்து ஆண்டுகளுக்கு மேல் காத்திருக்க வேண்டி

யுள்ளது. தற்போது அரசே நேரடியாக நூல்களை வாங்கி வருவதன் மூலம் தமிழ் வெளியீட்டு முயற்சிகள் வெகுவாக முன்னேறி வருகிறது எனலாம். இதனால் சிறந்த நூல்கள், குறைந்த விலையில், நிறைந்த அளவில் வெளிவரத் தொடங்கி உள்ளன வென்றும், அட்டைக்கட்டு, நூற்றொகை விவரங்கள், விலை நிர்ணயம் முதலிய துறைகளில் நல்ல முன்னேற்றம் காணப் படுகிறது எனவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

வந்த புதிய நூல்கள் காட்சிக்கு வைக்கப்படுகின்றன; அறிமுகப்படுத்தப்படுகின்றன. பருவ இதழ்களில் இவற்றின் சுருக்க விவரம் தரப்படுகிறது. தமிழில் என்னென்ன நூல்கள், எவ்வெத் துறைகளில் வெளிவந்துள்ளன என்ற செய்திகளை, வாசகர்கள், நூலகர்கள் பதிப்பாளர்கள் ஆகிய மூவரும் அறிய வாய்ப்புள்ளது இந்தியாவில் தமிழ்நாட்டில்தான் இப்பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்க தொன்றாகும்.

தற்போது தமிழகத்தில் 1,464 கிளை நூலகங்கள் இயங்கி வருகின்றன. வட்டாரத்திற்கு ஒரு நூலகம் வீதம் பதினைந்து வட்டார நூலகங்களும்(Circle Library), வட்டத்திற்கு ஒரு கிளை நூலகம் வீதம் நூற்று முப்பத்தியைந்து கிளை நூலகங்களும் (Divisional Library) கட்ட திட்டமிடப்பட்டுள்ளது.

கடந்த இருபத்தியெட்டு ஆண்டுகளாக நூல் நிலையங்களில் சேர்த்து வைக்கப்பட்டுள்ள நூல்களின் எண்ணிக்கை 79.1 இலட்சம். இதைச் சராசரியாகக் கணக்கிட்டால் ஒரு ஆளுக்கு 0.18 நூல்தான் வருகிறதாம். அதாவது இருபது பக்கங்களே. தலைக்கு ஒரு நூலாவது கிடைக்க முயற்சி எடுக்கப் பட்டுள்ளது எனவும், கடந்த மூன்றாண்டுகளில் நூலகங்களுக்கு எழுபத்தி நான்கு இலட்சம் அளவிற்கு நூல்கள் வழங்கப்பட்டுள்ளன எனவும் தெரிய வருகிறது

**தமிழ் நூல் பதிப்பகங்கள்**

தமிழ் நூல் வெளியீட்டில் ஈடுபட்டுள்ள பதிப்பகங்கள் 3,413. இவைகள் மூலம் வெளியான நூல் எண்ணூற்றி முப்பத்தியாறு. நூலை ஆக்கியோர் தங்கள் பொறுப்பிலேயே வெளியிட்டவை முப்பத்தி நான்கு. அரசுத்துறை, மற்றும் அரசுச் சார்பான நிறுவனங்கள் மூலம் வெளியான நூல்கள் பன்னிரண்டு. ஆக மொத்தம் எண்ணூற்றி எண்பத்தியிரண்டு.

## பின்னிணைப்பு I

### 1975 முதல் 1979 வரை வெளியான நூல்களைப் பற்றிய விவரத் தொகுப்பு

| ஆண்டு | 1975 | 1976 | 1977 | 1978 | 1979 |
|---|---|---|---|---|---|
| மொத்த நூல்கள் | 939 | 1571 | 1733 | 1310 | 1567 |
| முதற்பதிப்பு | 484 | 526 | 840 | 819 | 755 |
| பொதுவானவை | 398 | 443 | 720 | 727 | 628 |
| சிறுவர்க்கானவை | 86 | 83 | 120 | 92 | 147 |
| தமிழ் இலக்கியம் | 249 | 235 | 525 | 455 | 452 |
| புதினம் | 127 | 120 | 326 | 295 | 299 |
| சமயம் | 54 | 48 | 59 | 64 | 48 |
| வாழ்க்கை | 37 | 28 | 37 | 52 | 39 |
| அதிக நூல்களை எழுதியவர் | ம.ரா.போ. குருசாமி 11 நூல்கள் | மா.அர்த்த நாரி 8 நூல்கள் | சி. சு. செல்லப்பா 17 நூல்கள் | — | — |
| வெளியிட்ட மாவட்டங்கள் | | | | | |
| சென்னை | 352 | 353 | 614 | 609 | 560 |
| தஞ்சை | 29 | 18 | 35 | 25 | 23 |
| மதுரை | 27 | 38 | 71 | 65 | 66 |
| இராமநாதபுரம் | 20 | 21 | — | 35 | 31 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திருச்சி | 13 | 11 | 13 | — | 8 |
| கோவை | 7 | 8 | 13 | 5 | 11 |
| சேலம் | 6 | 15 | 6 | 16 | 10 |
| திருநெல்வேலி | 6 | 14 | 12 | 2 | 12 |
| கன்னியாகுமரி | 5 | 5 | 2 | 5 | 8 |
| வட ஆற்காடு | 2 | 2 | 5 | 2 | — |
| தென் ஆற்காடு | 4 | 16 | 27 | 13 | — |
| தருமபுரி | — | 1 | 1 | 1 | 2 |
| செங்கல்பட்டு | 2 | 5 | 1 | 4 | 7 |
| புதுக்கோட்டை | — | — | 2 | 2 | 3 |
| பெரியார் | — | — | — | — | 2 |
| நீலகிரி | — | — | 1 | 1 | ... |
| வெளியிட்ட வெளி மாநிலங்கள் | | | | | |
| பாண்டிச்சேரி | 5 | — | — | — | 6 |
| புதுடெல்லி | 4 | 14 | 12 | 11 | 16 |
| கர்நாடகம் | 1 | 2 | 2 | 6 | 1 |
| மகாராட்டிரம் | 1 | 1 | 2 | — | 1 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆந்திரம் | — | 1 | 2 | — | 1 |
| கேரளா | — | 1 | 1 | 2 | — |
| புதுச்சேரி | — | — | 1 | — | — |
| பஞ்சாப் | — | — | — | — | 1 |
| கெட்டி அட்டையுடையவை | 46 | 38 | 44 | 30 | 30 |
| பதிப்பகங்கள் மூலம் வெளியானவை | — | 425 | 797 | — | 716 |
| பதிப்பகங்களின் எண்ணிக்கை | — | 177 | 249 | — | 248 |
| அரசு-அரசுச் சார்புடன் வெளியானவை | — | 63 | 15 | — | 29 |
| ஆசிரியரே வெளியிட்டவை | — | 35 | 21 | — | 28 |
| எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் வெளியிட்டவை | — | 3 | 7 | — | 2 |
| அதிக விலை உடைய நூலும் அதைப் பற்றிய விபரமும் | | | | | |
| நூல் விலை | 45-00 | 75-00 | 49·00 | 35.00 | 36.00 |
| ஆசிரியர் | கே.எஸ். ஆனந்தன் | கம்பன் கழகப் பதிப்பு | இரா. கணபதி | கோவி. மணி சேகரன் | ம லட்சுமி நாராயணன் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நூற்பெயர் | மலர்க மாநில் சுயாட்சி | கம்ப ராமாயணம் | ஸ்வாமி | யாகசாலை | கொங்கு நாட்டுக் கோமகன் |
| பக்கம் | 1119 | 1882 | 1040 | 1124 | 920 |
| குறைந்த விலையுடைய நூலும் அதைப்பற்றிய விவரமும் நூல் விலை | 0.65 | 0.50 | 0.50 | 0 40 | 0.50 |
| ஆசிரியர் | — | — | — | காசிவாசி நடேசனார் | — |
| நூற்பெயர் | சிறுவர் தமிழ் அறிவுத் தேன் | கட்சி எவ்வாறு தோன்றியது? | சோவியத் யூனியன் நூறு கேள்வி-பதில் | வீரசைவத்தில் நீங்கள் ஏன் சேரக் கூடாது | எழுத்துச் சீர்மை-பாவேந்தர் அரிச்சுவடி |
| பக்கம் | 30 | 144 | — | 28 | 16 |

இந்த ஆண்டில் அதிக நூல்களை வெளியிட்ட வரிசையில் முறையே:

1. வானதி பதிப்பகம் 73
2. திருமகள் நிலையம் 21
3. தமிழ்ப் புத்தகாலயம் 19
4. பாரி நிலையம் 17
5. பூம்புகார் பிரசுரம் 16
6 உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும், பழனியப்பா பிரதர்சும் 11
7. அருணோதயம் 10
8. கலைஞன் பதிப்பகமும், நியூசெஞ்சுரி புக் ஹவுசும் 9
9. இராஜ்மோகன் பதிப்பகம் 9

நூல்களையும் வெளியிட்டுள்ளன.

நூல்களை நல்ல தாளிலும் அச்சிலும், அமைப்பிலும் வெளியிடுவதில் உலகத்தமிழாராய்சசி நிறுவனம் மிகவும் கவனம் செலுத்தி வருகிறது. இலக்கியக் கொள்கைத் தொகுதிகளையும், "Heritage of the Tamils" போன்ற நூல்களை வெளியிடுகிற தெனினும் விலையும் கூடுதலாக இல்லை. அகர வெளியீடுகள் பொருட் சிறபபைக் காட்டிலும், அச்சடிப்பிலும் அமைப்பிலும் சிறந்துள்ளன. ஆனால் விலை கூடுதலாக உள்ளது பல துறைகளில் நூல்களை வெளியிடுவதில் தமிழ்ப் புத்தகாலயம் அக்கறை காட்டி வருகிறது. பழம் நூல்களை வெளியிடுவதிலும், நூல் கட்டடம் செய்வதிலும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் சிறந்து விளங்குகிறது

நூல் வெளியீட்டிலும், பதிப்புச் சிறப்பிலும், பவானந்தர் கழகத்திற்குத் தனியிடமுண்டு. அதன் பதிப்பும் அச்சமைப்பும், இரு வண்ணத்தில் நூல்களை அச்சிடலும் ஒளிரும் பொன்வண்ண முகப்புத் தருவதிலும் அதற்கு இணை அதுவேதான எனலாம்.

பவானந்தர் கழகத்தைச் சிறப்பித்துப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் பாடியிருப்பதாவது:

"ஒருநாள் நீலப் பட்டாடை உடுத்தே
அரும்பொன் வேலைப் பாடுகளுடனே
தொழில் திறம் காட்டி விழிமுன் ஆடினாள்!

"அழகி நீ யாரென, 'அந்தமிழ்' என்றாள்
புத்தக வடிவிலே பொலிந்த நூல்மகள்
பிள்ளை பவானந்தம் பெற்றவள்" என்றாள்."

பாரதிதாசன் "தமிழ் நிலம்" எனும் இதழில் 1.-10-49-இல் எழுதியுள்ளது.

பவானந்தர் கழகம் வெளியிட்டுள்ள நூல்கள் நீல நிறத் காலிக்கோ கட்டமிட்டு. பொன்நிற எழுத்தில் முகப்பு அழகாக அச்சிடப்பட்டிருக்கும் என்பதைப் பாரதிதாசன் சிறப்பாகப் பாடியிருப்பது என்றும் போற்றத்தக்கதாகும்.

டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் பதிப்பில் அடிக்குறிப்பும், பொருள் அட்டவணையும், செய்யுள் முதற் குறிப்பகராதியும், கடினப் பொருள் விளக்கமும் ஆகிய இவை அமைக்கப்பட்டுள்ளன. அவருக்கு ஆங்கிலம் அறிந்தவர்களின் துணை கிட்டியதால், அப்பதிப்புக்கள் ஆங்கிலப்பதிப்புகளின் மாதிரியில் தமிழ்மயமாக்கப் பட்டு வெளியிடப்பட்டன.

நீண்டகால நிலைப்புள்ள டையோசிசன் அச்சகமும், தரங்கம் பாடி அச்சகமும், சென்னை அரசாங்க அச்சகமும், ஹோ அண்டு கோ போன்ற நவீன வசதிகள் பெற்ற அச்சகங்களும் தாம் பெற் றுள்ள அனுபவத்துடன் தரங்குறையாத அச்சடிப்புக்களைத் தொடர்ந்து செய்துவரல் வேண்டும்.

இராணிமுத்து வெளியீடுகள் பல மலிவுப் பதிப்புக்களை வெளி யிட்டு உள்ளது. இதைப்பார்த்துப் பிற இதழ்களும் மலிவு பதிப்பு நூல்களை வெளியிட்டு வருகின்றன. பின்னிணைப்பு இரண்டில் இவ்வாண்டு வெளியான தமிழ் நூல்களும், ஆசிரியரும், அவற்றை வெளியிட்டப் பதிப்பகங்களும் தரப்பட்டுள்ளன.

**ஓலைச்சுவடி பதிப்புக்கள்**

தமிழில் பல துறைகளில் எண்ணற்ற ஓலைச் சுவடிகள் பழைய காலத்தில் இருந்தன. நாளடைவில் அவற்றின் பெருமையை உணர்ந்தவர்களின் தொகை அருகியதால், அவைகள் சரிவரப் பேணிக்காக்காமல் அழிவுற்றன அழிவுற்றதும், மறைந்ததும், மறைக்கப்பட்டதும் போக எஞ்சியவற்றிலிருந்து படியெடுத்து தமிழ் நூல்கள் உரியவர்களால் அச்சேற்றப்பட்டன.

தற்போது தமிழ்நாட்டு அரசாங்கத்தின் சேப்பாக்கக் கீழ்த் திசைப் பழஞ்சுவடிச் சாலையில் (Government Oriental Manus-cript Library, Chepauk) ஓலைச்சுவடிகளும், கையெழுத்துப் படிகளுமாக 85,653 இந்திய மொழிகளில் உள்ளன. திருவான்மியூர் டாக்டர் உ. வே. சாமிநாதயர் நினைவு நூல்நிலையத்தில் மட்டும் ஏட்டுச் சுவடிகள் 1,600 உள்ளன. தஞ்சை சரசுவதி மகால் நூல்

நிலையத்திலும், தனிப்பட்டவர் இல்லங்களிலும், வெளிநாடுகளில் உள்ள நூலகங்களிலும் பல தமிழ் ஓலைச்சுவடிகள் இருப்பதாகத் தெரிய வருகிறது

## ஓலைச்சுவடிகளில் இருந்து பதிப்பிக்க பெற்ற நூல்களின் விவரம்

| நூல் | ஆசிரியர் | பதிப்பகம் |
|---|---|---|
| 1. கூவநூல் | ச.வே. சுப்பிரமணியன் | உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை |
| 2. மனைநூல் | பூ. சுப்பிரமணியம் | ,, |
| 3. சின்னமகிபன் குளுவ நாடகம் | ஏ. என். பெருமாள் | ,, |
| 4. திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத்தமிழ் | ச. சிவகாமி | ,, |
| 5. பிரபந்ததிரட்டு | அன்னி தாமசு | ,, |
| 6. பணவிடுதூது | இரா. நிர்மலாதேவி | ,, |

### நூல் பக்க உருவ அளவு

எண்பதில் வெளிவந்த நூல்களின் மொத்தப் பக்கங்களின் கூட்டுத்தொகை 1,36,710. ஒரு நூலின் சராசரி பக்கங்கள் நூற்று ஐம்பத்தியைந்து. ஒரு நூலின் அதிகப் பக்கம் ஆயிரத்தெட்டு. ஒரு நூலின் குறைந்த பக்கம் பதின்மூன்று. எண்பதில் வெளியான நூல்களில் அதிகப்பக்கம் கொண்டது கவிஞர் ஆ. கு ஆதித்தரின் எல்லியம் ஆயிரத்தெட்டு பக்கம்; குறைந்தபக்கம் கொண்டது கல்வி கோபால கிருட்டிணனின் நீரும் நாமும். பக்கம் பதின்மூன்று.

தமிழ் இலக்கியம் 66, 948 பக்கங்களைப் பெற்று முதல் இடத்தையும், சமயம் ,0,484 பக்கங்களைப் பெற்று இரண்டாவது இடத்தையும், வாழ்க்கை 8,791 பக்கங்களைப் பெற்று முறையே மூன்றாம் இடத்தையும் வகிக்கின்றன.

நூல்கள் வெளியிட்ட அளவில் கிரவுன் (crown) முதலிடமும், டெம்மி (Demy) இரண்டாமிடமும் பெற்றுள்ளன.

### தமிழ் நூலாசிரியர்கள்

எண்பதில் வெளியான நூல்களின் ஆசிரியர்கள் 496. இதில் ஒருவர் மட்டும் (இலட்சுமி) பதின்மூன்று நூல்களை எழுதி முதலிடம் பெறுகிறார். இவர்களில் கற்றறிந்த புலவர்களுமுண்டு. மறுமலர்ச்சி

எழுத்தாளர்களும் உண்டு. ஆண்களும் உண்டு பெண்களும் உண்டு வயதானவர்களும் உண்டு. இளமையானவர்களும் உண்டு, இறைவன் ஆண் பாதியாகவும், பெண் பாதியாகவும் உள்ளான் என்று கூறுவதுண்டு. இதனால்தான் போலும் எம். ரங்கராஜன் சுஜாதா ஆகவும் வேணுகோபாலன் புஷ்பா தங்கதுரையாகவும் பெண் புனைப்பெயர்கள் பூண்டுள்ளார்கள் இவர்கள் படைத்துள்ள சில நூல்கள் பெயர்கள் கூட வேடிக்கையாக உள்ளன. மிஸ் தமிழ்த் தாயே நமஸ்காரம், ஸரிகமபதநிஸா, லீலா மீலா ரீலா, சீறாதே ஸஸஸ்நேகா! போன்றுள்ளதைக் காணலாம்.

தமிழ்ப் பேசும் பகுதி அனைத்திலும் ஒரே சீரான மொழி பெயர்ப்புச் சொற்களும். கலைச்சொற்களும் கையாளப்பட வேண்டும். பழகிவிட்ட செயலாளர், அலுவலாளர் என்பவற்றைச் செயலர், அலுவலர் என்றும் புதிதாகக் குறுக்கி எழுதுவது பழகி விட்ட செவிக்கு என்னவோபோல் உள்ளது. Geography என்பதற்குப் புவிநூல் என்றும் Geology என்பதற்கு மண்ணூல் அல்லது நிலநூல் என்றும் வழங்குவதே முறையானதாகும் இதை மாற்றிச் சொல்வது குழப்பத்தை உண்டு பண்ணும்

முடிவுரை

1975-இல் இருந்து '80 வரை வெளிவந்துள்ள தமிழ் நூல்களின் விவரங்களைத் தொகுத்துப் பார்த்தால் இலக்கியத் துறையும் புதினத் துறையும். சமயத் துறையும், வாழ்க்கைத் துறையுமே முறையே முதல், இரண்டு, மூன்று. நான்காம் இடத்தைப் பெற்றுள்ளன. பிற துறையில் போதிய அளவிற்கு நூல்கள் எழுதப் பட்டு வெளியாகவில்லை என்பது நன்கு தெளிவாகிறது. இங்கு கதை படிப்போர் தொகை இலக்கியம் படிப்போர் தொகையைக் காட்டிலும் மிகுதியாக உள்ளது ஏனைய துறைகளில் போதிய அனுபவம் பெற்றவர்களும், தமிழில் தாம் சார்ந்த துறையில் நூல் இல்லாக் குறையைப் போக்க முன் வரவேண்டும்.

1980-இல் மட்டும் கிடைத்த மொத்த நூல்கள் 882 இதில் முதல் பதிப்பு மட்டும் 558. திருந்திய பதிப்புகளாக வெளிவந்தவை 324.

முதல் பதிப்பில் வெளிவந்தவைகளில் நாவல்கள் 258; சிறுகதைகள் 32.

அமெரிக்காவில் புதினத்தைக் காட்டிலும் விற்பனையில் பிற துறைகளே முன்னிற்கின்றன. தற்போது ஆண்டுதோறும் 30,000 புதிய தலைப்புகளில் அங்கு நூல்கள் வெளியாகின்றன; 60 000 பதிப்பாளர்கள் ஈடுபட்டுள்ளனராம். மலிவுப் பதிப்புக்கள் சில சமயம் ஓர் இரவுக்குள் அச்சாகி கட்டுக்கட்டி வழங்கப்படுகின்றனவாம். இச்செய்தியை 1977-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் அமெரிக்காவிலிருந்து வெளியான 'ஸ்பான்' என்ற (Span) இதழ் விரிவாகத் தெரிவித்துள்ளது நம் நாட்டிலும் மிகுந்த அளவிற்குப் பழைய அச்சகங்களும், புதிய அச்சகங்களும் இருக்கின்றன என்றாலும், அமெரிக்கா அளவிற்கு நாமும் பல துறையில் அதிக நூல்களை வெளியிடும் நாள் எந்நாளோ!

துறைதோறும், துறைதோறும் புதிய நூல்களை எழுத ஆசிரியர்கள் முன்வர வேண்டும் அவைகளை வெளியிடப் பதிப்பாளர்களும் இசைய வேண்டும். நல்ல பொருளுக்காகவும், அச்சுக்காகவும், அமைப்புக்காகவும், நூல் கட்டடத்திற்காகவும், தனித்தனி பரிசுகள் வழங்கி அரசினரும், பொது அமைப்புக்களும் ஊக்கப்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் தமிழ் நூல்கள் மக்கள் எண்ணிக்கைக்குத் தகுந்தபடி தர உயர்வையும், ஆதரவையும் பெற்றுச் சிறக்கும் இவைகள் நடைமுறைக்கு வரும் நன்னாளே, அமெரிக்காவைப் போல் நூல் வெளியீட்டில் நாமும் சிறப்படையும் பொன்னாளாகும்.

''உலகியலின் அடங்கலுக்கும் துறை தோறும் நூல்கள்
ஒருத்தர் தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்
சலசலென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்''

—பாரதிதாசன் (கவிதைகள் முதல் தொகுதி).

## பின்னிணைப்பு II

## எண்பதில் வெளியான நூல்களும் அவை பற்றிய விபரங்களும்

**சுருக்க விளக்கம்**

1. உ.த.ஆ.நி. — உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
2. உ.வே.சா.நூ.நி. — உ.வே. சாமிநாதய்யர் நூல் நிலையம்
3. சை.சி.நூ.க. — சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகம்
4. த.பா.நூ.நி. — தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
5. நி.செ.பு.ஹ. — நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
6. பதி — பதிப்பாசிரியர்

| எண் | நூல் | ஆசிரியர் | பதிப்பகம் | குறிப்பு |
|---|---|---|---|---|
| 1. | அகமும் புறமும் | அரங்க. சீனிவாசன் | வானதி பதிப்பகம், சென்னை | — |
| 2. | அச்சும் பதிப்பும் | மா.சு. சம்பந்தன் | தமிழர் பதிப்பகம், சென்னை | 74 படங்களுடன், 672 பக்கங்களில் எழுத்து, அச்சு, அச்சகம், பதிப்பகம்,பதிப்பாளர் பற்றிய விளக்கங் களைத் தருகிறது. |

| | | | | |
|---|---|---|---|---|
| 3. | அண்ணாவின் மொழி நலம் | ம.செ. இரபிசிங் | சாமுவேல் பதிப்பகம், சென்னை | — |
| 4. | அபிதான சிந்தாமணி | அ. சிங்காரவேலு முதலியார் | ஏஷியன் எஜிகேஷன் சர்வீஸ் (வடநாட்டு நிறுவனம்) | மறுபதிப்பு |
| 5. | அமுதத் தமிழிசை | கு. சா. கிருட்டிணமூர்த்தி | முத்தமிழ்ப் பண்ணை, சென்னை | — |
| 6. | அவனும் அவளும் | — | பழனியப்பா பிரதர்ஸ், சென்னை | — |
| 7. | ஆங்கிலத் தமிழ் அகராதி | — | ஏஷியன் எஜிகேஷன் சர்வீஸ் (வடநாட்டு நிறுவனம்) | மறுபதிப்பு |
| 8. | ஆதிச்ச நல்லூரும் பொருநை வெளி நாகரிகமும் | அ. இராகவன் | சை.சி.நூ.க, சென்னை | — |
| 9. | ஆய்வுச் சுடர் | மா. நவநீத கிருட்டிணன் | குறிஞ்சிமலர் பதிப்பகம், மதுரை | — |
| 10. | ஆய்வுலகம் போற்றும் ஆசிரிய மணிகள் | வி. மி. ஞானப்பிரகாசம்—க.சி. கமலைய்யா (பதி) | தமிழ்ப்பண்பாட்டு மன்றம், சென்னை | — |
| 11. | இலக்கண ஆய்வுக் கோவை | ந. வீ. செயராமன் | இலக்கியப் பதிப்பகம், சென்னை | — |
| 12. | இலக்கியக் கோவை | ,, | ,, | — |
| 13. | இலக்கிய இயக்கங்கள் | ந. பிச்சமுத்து | சக்தி வெளியீடு, சென்னை | — |
| 14. | இலக்கிய மலர்கள் | மு. மு. இஸ்மாயில் | வானதி பதிப்பகம், சென்னை | — |

| | | | | |
|---|---|---|---|---|
| 15. | இலக்கியக் காட்சி | சி. பாலசுப்பிரமணியன் | நறுமலர்ப் பதிப்பகம், சென்னை | — |
| 16. | இலக்கியத் திறனாய்வியல் | தா. ஏ. ஞானமூர்த்தி | தமிழின்பம், கோவை | — |
| 17. | இலக்கிய விமர்சனம் | இரகுநாதன் | மீனாட்சி புத்தக நிலையம், மதுரை | — |
| 18. | இடைக்கால இலக்கியம்-பருவம்2 | — | ஜெயகுமாரி ஸ்டோர்ஸ் | — |
| 19. | இதழியல் | இரா. கோதண்டபாணி | கற்பக நூலகம், மதுரை | — |
| 20. | இராமப்பையன் அம்மானை-ஓர் ஆய்வு | க. சி. கமலையய்யா | தமிழ்ப் புத்தகாலயம், சென்னை | — |
| 21. | இரும்பு முள்வேலி | சி. என். அண்ணாதுரை | பூம்புகார் பிரசுரம், சென்னை | மறுபதிப்பு |
| 22. | இஸ்லாமியக் கலைக் களஞ்சியம் | அப்துல்றறீம் | யுனிவர்சல் பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை | — |
| 23. | இஸ்லாமியக் குழந்தை இலக்கியம் | அ. அஹம்மது பஷீர் | ஜே. சி.த. வெளியீட்டகம், சென்னை, | — |
| 24. | உலகக்காப்பியங்கள் | இரா. காசிராசன். | தமிழ்ப் பதிப்பகம், சென்னை | — |
| 25. | உயர்தரமான மாமிச சமையல் | தமயந்திதேவி | நீ.செ.பு ஹ., சென்னை, | — |

எ—38

| | | | | |
|---|---|---|---|---|
| 26 | ஊர்வலம் | மு. மேத்தா | திருமகள் பதிப்பகம், சென்னை | — |
| 27 | எச்சில் இரவுகள் | சுரதா | சுரதா பதிப்பகம், சென்னை | — |
| 28 | எல்லியம் | ஆ.கு. ஆதித்தர் | கிருத்துவ இலக்கியச் சங்க வெளியீடு சென்னை, | 1008 பக்கங்களைக் கொண்டது. விலை ரூ 60. ஹோமரின் - இலியத்தின்-ஆங்கில மொழி பெயர்ப்பினை அடியொற்றியது. இவ்வாண்டு வெளியான நூல்களில் அதிகப் பக்கங்களை உடையது. |
| 29 | எளிய முறையில் ருசியான சமையல் | அம்புஜம்மாள் | மணிவாசகர் நூலகம், சிதம்பரம் | — |
| 30 | எனது யாழ்ப்பாணமே | க. சச்சிதானந்தன் | காந்தளக வெளியீடு, சென்னை | — |
| 31 | ஐங்குறுநூறு | — | உ.வே.சா.நூ.நி, சென்னை | 6வது பதிப்பு |
| 32 | ஐந்துதமிழிசை நாடகங்கள் | வ. வேணுகோபாலன் | சரசுவதி மகால், தஞ்சை | — |
| 33 | கண்ணாயிரத்தின் உலகம் | சி.என். அண்ணாதுரை | பூம்புகார்பிரசுரம், சென்னை | மறுபதிப்பு |

| | | | | |
|---|---|---|---|---|
| 34 | கம்பராமாயணம் | கம்பன் கழகம் (பதி) | வானதி பதிப்பகம், சென்னை | அனைத்திந்தியஅச்சடிப் பாளர் மாநாட்டில், இந்திய மொழிகளில் வெளியிடப்பட்ட நூல் களில் சிறந்த அச் மைப்பு உடையதாக 19வதுதேசியவிருதைப் பெற்றுச் சிறப்படைந் தது. |
| 35 | கம்பர் காட்சி | ஔவநடராசன் | சேகர் பதிப்பகம், சென்னை | — |
| 36 | கம்பரின்உவமைவிளக்கம் | தெ. துரைசாமி | அருளகம், திருச்சி | — |
| 37 | கம்பனின் உவமைகள் | மா. இலக்குமி நாராயணன் | கண்ணமை பதிப்பகம், திருச்சி | — |
| 38 | கம்பன் ஓர் ஒப்பீடு | தகடூரான் | தேன் தமிழ்ப் பதிப்பகம், சேலம் | — |
| 39 | கம்பன் கலைக்கோயி லுக்கு ஒரு கை விளக்கு | பி.ஸ்ரீ | வானதி பதிப்பகம், சென்னை, | — |
| 40 | கம்பன் சுவை | செவ்வேள் | சேகர் பதிப்பகம், சென்னை, | — |
| 41 | கலைஞரின் புதினங்கள் —ஓர் ஆய்வு | கு. வணங்காமுடி | பகுத்தறிவுப் பதிப்பகம், சென்னை | — |
| 42 | காப்பியர் நெறி | தே. ஆண்டியப்பன் | முத்துப் பதிப்பகம், மதுரை | — |
| 43 | காலந்தோறும் நாட்டியக் கலை | கார்த்திகா கணேசா | பாரி, புத்தகப்பண்ணை சென்னை | — |

| | | | | |
|---|---|---|---|---|
| 44 | காவியப்பாவை | முடியரசன் | வள்ளுவர் பதிப்பகம், புதுக் கோட்டை | — |
| 45 | காவியங்கள் பிறந்த கதை | மலர்வண்ணன் தேவராசன் | முருகன் நிலையம், சென்னை | — |
| 46 | காவியக் கம்பன் | ஏ.கே. வேலன் | வி.எஸ்.கே. வெளியீடு, சென்னை | — |
| 47 | கிரிக்கெட் ஆட்டத்தின் கதை | எஸ். தவராஜ் | இராஜ்மோகன் பதிப்பகம், சென்னை | — |
| 48 | குழந்தை இலக்கியத் திறனாய்வு | அ. அஹமது பஷீர் | ஜே. சி. ஏ. வெளியீட்டகம், சென்னை | — |
| 49 | கூவ நூல் | ச.வே. சுப்பிரமணியன்(பதி) | உ.த.ஆ.நி, சென்னை | நிலஅடியில்நீரூற்றுஇருப்பதைக் கண்டு பிடிக்கத் துணைசெய்யும் நூல் |
| 50 | கைதி எண் 6342 | சி. என். அண்ணாதுரை | பாரி நிலையம், சென்னை | மறுபதிப்பு |
| 51 | சங்க இலக்கியத்தில் கற்பனை | மாயாண்டி | எழிலகம், சென்னை | — |
| 52 | சங்க இலக்கியத்தில் மலர்கள் | இல. தானம்மாள் | வானதி பதிப்பகம், சென்னை | — |
| 53. | சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்—இலக்கியச் சிறப்புப் பெயர்களும் குடி பற்றிய சிறப்புப் பெயர்களும் | துரையரங்கனார் | பாரி நிலையம், சென்னை | — |

| | | | | |
|---|---|---|---|---|
| 54 | சங்க நூல்களில் தேசியம் | அரங்க. சீனிவாசன் | வானதி பதிப்பகம், சென்னை | — |
| 55 | சங்க நூல்களில் மணிகள் | பி. எல். சாமி | சேகர் பதிப்பகம், சென்னை | — |
| 56 | சதுரகராதி | வீரமாமுனிவர் | ஏஷியன் எஜிகேஷன் சர்வீஸ் (வடநாட்டு நிறுவனம்) | மறுபதிப்பு |
| 57 | சந்திரமோகன் | சி. என். அண்ணாதுரை | பூம்புகார் பிரசுரம், சென்னை | மறுபதிப்பு |
| 58 | சமுதாய இலக்கியம் | இரகுநாதன் | மீனாட்சி புத்தக நிலையம், மதுரை | — |
| 59 | சமையல் கலை | அம்புஜம்மாள் | மணிவாசகர் நூலகம், சிதம்பரம் | — |
| 60 | சிலம்புச் செல்வரின் தலையங்க இலக்கியம் | மா. ரா. இளங்கோவன் | சேகர் பதிப்பகம், சென்னை | — |
| 61 | சிறுகதை எழுதுவது எப்படி? | ஏ. சேஷாத்திரி சர்மா | வானதி பதிப்பகம், சென்னை | — |
| 62 | சிறுவர் இலக்கியம் | பூவண்ணன் | ,, | — |
| 63 | சிற்றிலக்கியச் சிந்தனை | கு. முத்துராசன் | தேன்தமிழ்ப் பதிப்பகம், சேலம் | — |
| 64 | சிற்றிலக்கியத் திறனாய்வு | ந. வீ. செயராமன் | இலக்கியப் பதிப்பகம், சென்னை | — |

| | | | | |
|---|---|---|---|---|
| 65 | சிவானந்த நடனம் | ஆனந்தகுமாரசுவாமி (ஆங்கிலம்) நவாலியூர். சோ. நடராசன் (தமிழ்) | த. பா. நூ. நி. சென்னை | — |
| 66 | சின்ன மகிபன் குளுவ நாடகம் | ஏ. என். பெருமாள் | உ. த. ஆ. நி, சென்னை | — |
| 67 | சீறாப்புராணச் சொற்பொழிவுகள் | கா. மு. ஷெரீப் | சீதக்காதி நூல் வெளியீட்டாளர், சென்னை | — |
| 68 | சீறாப்புராணத் திறனாய்வு | அப்துல் ரஹீம் | யுனிவர்சல் பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை | — |
| 69 | சுப்பிரமணிய சிவா | சந்தானலஷ்மி | பழனியப்பா வெளியீடு, சென்னை | — |
| 70 | செட்டிநாட்டுப் பலகாரங்கள் | — | பூம்புகார் பிரசுரம், சென்னை | — |
| 71 | சேயூர் முருகன் உலா | மு. அருணாசலம் (பதி.) | த. பா. நூ. நி, சென்னை | — |
| 72 | சேயூர் முருகன் குறவஞ்சி | ,, | ,, | — |
| 73 | சைவசித்தாந்தத் திறவு | க. வச்சிரவேல் முதலியார் | காமராசர் பல்கலைக் கழகம், மதுரை | — |
| 74 | சொர்க்க வாசல் | சி. என். அண்ணாதுரை | பூம்புகார் பிரசுரம், சென்னை | மறுபதிப்பு |
| 75 | ஞாயிறு ஆயிரம் | தண்டபாணி சுவாமிகள் | தமிழ்ப் பதிப்பகம், சென்னை | — |

| | | | | |
|---|---|---|---|---|
| 76 | தணிகை வெண்பா | தி.கி. நாராயணசாமிநாயுடு (பதி) | — | மறுபதிப்பு |
| 77 | தமிழகராதி | கதிர்வேலுப்பிள்ளை | ஏஷியன் எஜிகேஷன் சர்வீஸ் (வடநாட்டு நிறுவனம்) | ,, |
| 78 | தமிழகக் கலைகள் | மா. இராசமாணிக்கனார் | பாரிநிலையம், சென்னை | — |
| 79 | தமிழக நாட்டுப்புறக் கலைகள் | ஏ.என். பெருமாள் | உ.த.ஆ.நி; சென்னை | — |
| 80 | தமிழக வரலாறு | பா. மாசிலாமணி | கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலம்,வேதாரண்யம் | — |
| 81 | தமிழர் ஆடைகள் | கே. பகவதி | உ.த.ஆ.நி. சென்னை | — |
| 82 | தமிழர் கண்ட மனம் | கரு. நாகராசன் | ,, | — |
| 83 | தமிழர் சமய வரலாறு | கா. வேலுப்பிள்ளை | பாரி புத்தகப் பண்ணை, சென்னை | — |
| 84 | தமிழ்ச்சுருக்கெழுத்து அகராதி | — | ஏஷியன் எஜிகேஷன் சர்வீஸ் (வடநாட்டு நிறுவனம்) | மறுபதிப்பு |
| 85 | தமிழ் நாவல்களில் மனித உரிமைகளும் மக்கள் போராட்டமும் | பாக்கியமுத்து | கிருத்துவ இலக்கிய சங்கம், சென்னை | — |
| 86 | தமிழ் நாவல்களில் மொழிப்பயன்பாடு | இ. முத்தையா | முத்தையா, கட்டளைப் பட்டி, சிவகாசி | — |
| 87 | தமிழ் நாட்டில் பண்பாட்டுப் புரட்சி | ஆனைமுத்து | பெரியார் நூல் வெளி யீட்டகம், சென்னை | பெரியார் நூற்றாண்டு விழாவை ஒட்டி வெளியிடப் பெற்றது. |

| | | | | |
|---|---|---|---|---|
| 88 | தமிழ் நூல்களில் குறிப்புப் பொருள் | ம ரா.போ. குருசாமி | நரேந்திரசிவம் பதிப்பகம், கோவை | — |
| 89 | தமிழ்ப் பயிற்றுமுறை | ந. சுப்பு ரெட்டியார் | மணிவாசகர் நூலகம், சிதம்பரம் | — |
| 90 | தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் | க. காந்தி | உ.த.ஆ.நி. சென்னை | — |
| 91 | தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் | சி.என். அண்ணாதுரை | பாரி நிலையம், சென்னை | மறுபதிப்பு |
| 92 | திருக்குறள் ஓர் சமுதாயப் பார்வை | எஸ். இராமகிருட்டிணன் | மீனாட்சிப்புத்தக நிலையம், மதுரை | — |
| 93 | திருக்குருகூர் திருவேங்கட நாதன் பிள்ளைத்தமிழ் | ச. சிவகாமி (பதி.) | உ.த.ஆ.நி, சென்னை | — |
| 94 | திருத்தணிகைச் சந்நிதி முறை | தி.கி. நாராயணசாமி நாயுடு (பதி) | — | மறுபதிப்பு |
| 95 | திறனாய்வுப் பிரச்சனைகள் | க. கைலாசபதி | மக்கள் பதிப்பகம்,சென்னை | — |
| 96 | தீனதயாளு | நடேச சாஸ்திரி | வானவில் பிரசுரம், சென்னை | மறுபதிப்பு |
| 97 | தேவிதாசன் கவிதைகள் | — | ஆஸ்க் பப்ளிகேஷன், சென்னை | |
| 98 | தொண்டைமான்கள் ஆட்சி | சிரஞ்சீவி | அபிராமி பதிப்பகம், சென்னை | |

| | | | | |
|---|---|---|---|---|
| 99 | தொல்காப்பியம் | புலியூர் கேசிகன் (பதி.) | பாரி நிலையம், சென்னை | மலிவுப்பதிப்பு |
| 100 | தொல்காப்பியம்—சிறப்புப்பாயிரம் | ஆ. சிவலிங்கனார் (பதி.) | உ.த.ஆ.நி, சென்னை | உரைவளங்கள்-என்ற பெயரில் வெளிவந்துள்ளது. |
| 101 | நவீன இலக்கியத்தின் அடிப்படைகள் | க. கைலாசபதி | மக்கள் பதிப்பகம், சென்னை | — |
| 102 | நற்றிணை | புலியூர் கேசிகன் (பதி) | பாரி நிலையம், சென்னை | மலிவுப்பதிப்பு |
| 103 | நாச்சியப்பன் பாடல்கள் | — | தமிழாலயம், சென்னை | — |
| 104 | நாட்டுப்புறப்பாடல்கள் | சு. சண்முகசுந்தரம் | மணிவாசகர் நூலகம், சிதம்பரம் | — |
| 105 | நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு | ,, | ,, | — |
| 106 | நாட்டுப்புற இலக்கிய வரலாறு | ,, | ,, | — |
| 107 | நாத்திகப் போர்வாள் | ஆனைமுத்து | பெரியார் நூல் வெளியீட்டகம், சென்னை | பெரியார் நூற்றாண்டு விழாவை ஒட்டி வெளியிடப் பெற்றது. |
| 108 | நீதிதேவன் மயக்கம் | சி. என். அண்ணாதுரை | பூம்புகார் பிரசுரம், சென்னை | மறுபதிப்பு |
| 109 | நீரும் நாமும் | கல்வி கோபாலகிருட்டிணன் | நி. செ. பு. ஹ, சென்னை | எண்பதில் வெளியான குறைந்த பக்கங்களை (13) உடைய நூல். |

| | | | | |
|---|---|---|---|---|
| 110 | நூலகம் வளரும் கதை | சுப்பு ஆறுமுகம் | கலைஞன் பதிப்பகம், சென்னை | — |
| 111 | நெல்லைக் குடை வரைக் கோயில்கள் | தி. இராச மாணிக்கம் | சை.சி நூ.க, சென்னை | — |
| 112 | பண விடுதூது | இரா. நிர்மலாதேவி | உ.த.ஆ.நி, சென்னை | — |
| 113 | பரிபாடல் மூலமும் பரிமேலழகர் உரையும் | — | உ.வே.சா.நூ.நி.சென்னை | 5வது பதிப்பு |
| 114 | பலிப்பூக்கள் | நா. காமராசன் | பூம்புகார் பிரசுரம், சென்னை | — |
| 115 | பழந்தமிழ் | சி. இலக்குவன் | வள்ளுவர் பதிப்பகம், புதுககோட்டை | — |
| 116 | பழந்தமிழர் வீரப் பண் பாடு-ஒப்பிலக்கியக் கணிப்பு | கதிர். மகாதேவன் | லஷ்மி வெளியீடு, மதுரை | — |
| 117 | பள்ளு இலக்கியம் | ந. வீ. செயராமன் | இலக்கியப் பதிப்பகம், சென்னை | — |
| 118 | பாட்டுக்குயில் கண்ண தாசன் | தமிழ்ப்பித்தன் | வானதி பதிப்பகம், சென்னை | — |
| 119 | பாரதியார்நகைச்சுவை யும் நையாண்டியும் | ம. ப. பெரிய சாமித் தூரன் | வானதி பதிப்பகம், சென்னை | பாரதியார் நூற்றாண்டு விழாவை ஒட்டி வெளி யிடப் பெற்றவை. |
| 120 | பாரதியாரின் பகுத் தறிவுக் கதைகள் | ம. தங்கமணி | செந்தமிழ்ப் பதிப்பகம், சென்னை | ,, |

| | | | | |
|---|---|---|---|---|
| 121 | பாரதியாரும் சமூக சீர் திருத்தமும் | பெ. சு. மணி | திருமகள் நிலையம், சென்னை | ,, |
| 122 | பாரதியாரின் நீதிக் கதைகள் | அரசுமணி | மருதமலையான் பதிப்பகம், சென்னை | ,, |
| 123 | பாரதியின் இதயம் பேசுகிறது | கே.எஸ். இராசேந்திரன் | குமரன் பதிப்பகம், சென்னை | ,, |
| 124 | பாரதியுகம்-அறுபது ஆண்டு | எச். ஆர். கிருட்டிணன் | தமிழ்ப் புத்தகாலயம், சென்னை | ,, |
| 125 | பாரதி நினைவுகள் | யதுகிரியம்மாள் | அமுத நிலையம், சென்னை | ,, |
| 126 | பாரதியும் ஷெல்லியும் | ஜி. ஜான் சாமுவேல் | மணிப்பதிப்பகம், சென்னை | ,, |
| 127 | பாரதிதாசன்பெருமை | முல்லை முத்தையா | அபிராமி பதிப்பகம், சென்னை | — |
| 128 | பாரதிதாசன் பாட்டுத் திறம் | அப்துல் கறீம் | வானதி பதிப்பகம், சென்னை | — |
| 129 | பாரதிதாசன் கனல்கள் | மா. செல்வராசன் | பாரிநிலையம், சென்னை | — |
| 130 | பாரதிதாசன் நூல்கள் | — | பூம்புகார் பிரசுரம், சென்னை | — |
| 131 | பார்சுவநாதர் அம்மானை | வி. சொக்கலிங்கம் (பதி) | சரவசுதி மகால், தஞ்சை | — |
| 132 | பாவேந்தர் பாரதி தாசன் விருந்து | முல்லை முத்தையா | அபிராமி பதிப்பகம், சென்னை | — |

| | | | | |
|---|---|---|---|---|
| 133 | பிடி சாம்பல் | சி. என். அண்ணாதுரை | பூம்புகார் பிரசுரம், சென்னை | மறுபதிப்பு |
| 134 | பித்தளையல்ல பொன்னேதான் | ,, | ,, | ,, |
| 135 | பிரபந்தத்திரட்டு | அன்னி தாமசு | உ.தஆ.நி, சென்னை | — |
| 136 | பிரேம கலாவத்யம் | | வானவில் பிரசுரம், சென்னை | மறுபதிப்பு |
| 137 | புதுக் கவிதையில் | ந.வீ. செயராமன் | இலக்கியப் பதிப்பகம், சென்னை | — |
| 138 | புதுக்கோட்டை சமஸ்தான வரலாறு | சிரஞ்சீவி | அபிராமி பதிப்பகம், சென்னை | — |
| 139 | புதுமைப்பித்தன் சிறுகதைகள் | பி.ம. சோமசுந்தரம் (பதி) | நேஷனல் புக் டிரஸ்டு, டில்லி | — |
| 140 | புதுமைப்புத்தன் கதைமாந்தர் | இ. இராசாமணி | சர்வோதயா இலக்கியப் பண்ணை, மதுரை | — |
| 141 | புதுவை மாநிலத் தமிழ் வளர்ச்சி | சு. தில்லைவனம் | பாசூர் வெளியீடு, புதுவை | — |
| 142 | புனைகதைத்திறன் | இரா. மோகன் | ஏரக வெளியீடு, மதுரை | — |
| 143 | பெரியார் கருத்துக் களஞ்சியம் | திருச்சி ஆனைமுத்து | பெரியார் நூல் வெளியீட்டகம், திருச்சி | பெரியார் நூற்றாண்டு விழாவை ஒட்டி வெளியிடப்பட்டது |

| | | | | |
|---|---|---|---|---|
| 144 | பெருஞ்சித்திரனார் பாடல்கள் | முடியரசன் | வள்ளுவர் பதிப்பகம், புதுக் கோட்டை | — |
| 145 | பொதுவுடைமை வாதிகளும் பெரியார் கொள்கைகளும் | திருச்சி ஆனைமுத்து | பெரியார் நூல் வெளியீட்டகம், திருச்சி | பெரியார் நூற்றாண்டு விழாவை ஒட்டி வெளி யிடப்பட்டது. |
| 146 | மகாகவி பாரதியார் | சக்திதாச சுப்பிரமணியன் | பாரி நிலையம், சென்னை | — |
| 147 | மட்டன் வகைகள் | — | பூம்புகார் பிரசுரம், சென்னை | — |
| 148 | மதுரைக்கோயில் வரலாறு | இரா. இளங்குமரன் | சை.சி.நூ.க, சென்னை | — |
| 149 | மதுரை மாவட்டம் | சோமலெ | கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலம், வேதா ரண்யம் | |
| 150 | மனிததெய்வம் காந்தி காதை | அரங்க. சீனிவாசன் | திருவள்ளுவர் பதிப்பகம், திருச்சி | 5 காண்டங்களில் காந்தி யடிகளின் வரலாற்றை 944 பக்கங்களில்விளக்குவது |
| 151 | மனைநூல் | பூ. சுப்பிரமணியன் (பதி) | உ.த.ஆ.நி, சென்னை | — |
| 125 | முதல் எட்டுத் திருமுறைகள் | — | சை.சி.நூ.க, சென்னை | மறுபதிப்பு |
| 153 | மௌலானா ஜலாலுத்தீன் ரூபி | எஸ். எம். சுலைமான் | சீதக்காதி தமிழ்ப்பணிக் கழகம்,இளையான்குடி | — |
| 154 | யாப்பியல் ஆய்வுக் கோவை | ந. வீ. செயராமன் | இலக்கியப் பதிப்பகம், சென்னை | — |

| | | | | |
|---|---|---|---|---|
| 155 | வண்ண மஞ்சரி | தண்டபாணி சுவாமிகள் | கோவேந்தன் பதிப்பு | — |
| 156 | வண்டிக்காரன் மகன் | சி. என். அண்ணாதுரை | பூம்புகார் பிரசுரம், சென்னை | மறுபதிப்பு |
| 157 | வகுப்புரிமைப் போராட்டம் ஏன்? | ஆனைமுத்து | பெரியார் நூல் வெளியீட்டகம், திருச்சி | பெரியார் நூற்றாண்டு விழாவை ஒட்டி வெளியிடப்பட்டது. |
| 158 | வரலாறு கண்ட வைக்கம் வீரர் | மங்கையர்க்கரசி | மருதமலையான் பதிப்பகம், சென்னை | — |
| 159 | வரலாற்றுப் போக்கில் பழையாறை | வே. மகாதேவன் | அன்னபூர்ணா பதிப்பகம், திருப்பனந்தாள் | — |
| 160 | வழிகாட்டும் வீரர்கள் | எஸ். நவராஜ் | இராஜ்மோகன் பதிப்பகம், சென்னை | — |
| 161 | வாட்போக்கி இரத்தின கிரியுலா | — | உ.வே.சா.நூ.நி, சென்னை | — |
| 162 | விதவிதமான முட்டைச் சமையல் | — | பூம்புகார் பிரசுரம், சென்னை | — |
| 163 | விளையாட்டு | எஸ். நவராஜ் | இராஜ்மோகன் பதிப்பகம், சென்னை | — |
| 164 | விளையாட்டுலகில் வீரக்கதைகள் | ,, | ,, | — |
| 165 | விளையாட்டுத் துறையில் சொல்லும் பொருளும் | ,, | ,, | — |

| | | | | |
|---|---|---|---|---|
| 166 | வின்ஸ்லோ-தமிழ்-ஆங்கில அகராதி | — | ஏஷியன் எஜிகேஷன் சர்வீஸ் (வடநாட்டு நிறுவனம்) | மறுபதிப்பு |
| 167 | வேலைக்காரி | சி. என். அண்ணாதுரை | பூம்புகார் பிரசுரம், சென்னை | ,, |
| 168 | வையம் புகழ் புதுவை | மு. த. வேலாயுதனார் | நற்றமிழ் பதிப்பகம், புதுவை | |
| 169 | ஆண்டு மலர்கள் | — | — | கல்கி, கலைமகள், தினமணிக்கதிர் போன்ற இதழ்களால் தீபாவளி, பொங்கல் ஆகிய திருநாட்களில், விழாச் சிறப்பினையொட்டி வெளியிடப்படுகின்றன. |
| 170 | பயண நூல்கள் | — | — | பல்வேறு நாடுகளுக்குச் சென்று, அங்கு தாம்கண்ட அனுபவங்களைப் பற்றி மணியன், சாவி போன்றோரால் எழுதப்பட்டுள்ள பயண நூல்கள் சில வெளி வந்துள்ளன. |

# எண்பதில் தமிழ் இசை

ஆர். ஆளவந்தார்

எண்பதில் தமிழ் இசை பற்றிய ஆய்வுகளை நோக்குங்கால் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தமிழிசை வெளியீடாகப் பல இசை நூல்கள் வெளியிட்டுள்ளது. சுந்தரம் தர்ம ஸ்தாபனத்தின் நிதி உதவியால் தமிழ்மறை இசைமாலை இரண்டு பகுதிகள் வெளியிடப்பட்டுள்ளன. சங்கீத வித்வான் திரு. வி. அனந்தராமன் அவர்களின் ஸ்வரதாளக் குறிப்புடன் கூடியன. இவையெல்லாம் ''**எண்பதில் தமிழ்**'' என்ற தலைப்பில் அடங்காமையால் அவை பற்றிய விளக்கங்கள் இக்கட்டுரையில் தரப்படவில்லை. **ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பதில்** இசைபற்றி வெளியான முழுமை யான நூல் 'குறவஞ்சி' ஒன்றே கிடைத்துள்ளது. இந்நூல் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தில் வெளியிடப் பட்டது. பழைய ஓலைச் சுவடிகளிலிருந்து எடுத்துப் பதிப்பிக்கப்பட்டது.

சென்னை அண்ணாமலை மன்றத்தில் செயல்படும் தமிழ் இசைச்சங்கம் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்தொன்பது முதல் தொடர்ந்து தமிழிசைத் தொண்டு செய்து வருகிறது. அச்சங்கம் நிறுவிய செட்டிநாடு அரசர் டாக்டர் ராஜா சர். மு. அண்ணாமலை செட்டியார் அவர்கள் தமிழ் நாடெங்கும் தமிழிசை முழங்க வேண்டும் என்பது தன் ஆவல் என்று 25-3-1944 இல் கூறினார். தமிழிசை - இசைத்தமிழாக மாறவேண்டும் என்று விரும்பும் அச்சங்கம் தொடர்ந்து ஆண்டுதோறும் டிசம்பர் திங்களில் பண் ஆராய்ச்சிக் கூட்டங்கள் நடத்தி இசையை வளர்த்து வருகிறது. இசைவிழாக்களும் நடத்துகிறது.

தொடர்புகொண்ட மற்ற இசைச்சங்கங்கள் நூல் வடிவில் ஒன்றும் இசைபற்றி எண்பதில் வெளியிட்டதாகத் தெரியவில்லை.

எண்பதில் வெளியான தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தின் வெள்ளி விழா மலரிலிருந்து கிடைத்த கட்டுரைகள் பற்றிய விவரங்கள் உள்ளே பகுத்துத் தரப்பட்டுள்ளன. தமிழ் நாடு அரசு இசைக்கல்லூரி மிருதங்க விரிவுரையாளர் திரு. டி. ஆர் சீநிவாசன் அவர்கள் மிருதங்கத்தை 'மூன்றுதாள முக்கூடல்' என்ற முறையில் கல்லூரியில் வாசித்துக் காட்டினார். அதைப்பற்றி அவரே எழுதித்தந்த கட்டுரையின் உதவிகொண்டு உள்ளே விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. மற்றும் சென்னைப் பல்கலைக் கழகத்தின் இசைத்துறைப்பணிகள் இசைத்துறைத்தலைவர் எழுத்து வடிவில் தந்த தகவல்கள் உள்ளே இடம்பெற்றுள்ளன.

தொடர்பு கொண்ட அனைவரிடமிருந்தும்* செய்திகள். கிடைத்திருந்தால் எண்பதில் நடைபெற்ற இசைபற்றிய ஆய்வுகளை இன்னும் மிகுதியாகத் தந்திருக்கலாம். கிடைத்த வற்றைத் தொகுத்து அளித்துள்ளோம். தகவல்கள் தந்து உதவிய பெருமக்கள் அனைவருக்கும் நன்றி.

**நூல் வடிவில்**

**குறவஞ்சி** (தமிழ்நாட்டு அரசின் பழஞ்சுவடிப் பதிப்பு)

1. பொய்யாமொழியீசர் குறவஞ்சி —தத்துவலிங்கன்.
2. காங்கேயன் குறவஞ்சி —பொன்மணி செல்லப்பன்
3. சிக்கல் நவநீதேசுவர சுவாமி குறவஞ்சி. —சொக்கலிங்கம்பிள்ளை
4. மண்ணிப்படிக்கரை நீலகண்டர் குறவஞ்சி நாடகம் —சாமிநாதய்யர்

பதிப்பாசிரியர்கள்.

1. மு. அருணாசலம்

2-4. புலவர். இரா. இளங்குமரன்

தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை.
விலை ரூ. 20.

---

* பின்னிணைப்பு பார்க்க.

குறவஞ்சி என்னும் இந்நூல் நான்கு குறவஞ்சி நூல்களைக் கொண்டது. முதல் குறவஞ்சியைத் திரு. மு. அருணாசலம் அவர் களும், மற்ற மூன்று குறவஞ்சிகளையும் புலவர் இரா. இளங் குமரன் அவர்களும் பதிப்பித்துள்ளார்கள்.

குறவஞ்சியில் எல்லாப்பாத்திரங்களின் பேச்சும் செயலும் இசையும் நாடகமுமாக அமைந்திருப்பதால் குறவஞ்சி இசை நூலின் வகையில் இடம்பெறுகிறது. செயல் முழுமையும் ஆட்ட மாகக் கொண்ட இப்பாத்திரங்களின் சொல் முழுமையும் "தரு" என்று சொல்லப்படும் தருவாவது பல்லவி, அனுபல்லவி, சரணம் என்னும் உறுப்புகளோடு அமைந்த கீர்த்தனம் சில சமயம் அனு பல்லவி இல்லாமல் இருக்கலாம். பல்லவி, அனுபல்லவி இல்லாமல் சரணங்களே இருக்கும்போது, அதை ஆசிரியர் சிந்து என்று சொல்லுகிறார். சிந்தும் இசைப்பாட்டுத்தான். பல குறவஞ்சிகளில் தரு, சிந்து முதலியவற்றிற்கு இராகம், தாளம் தருக்களிலேயே குறிப்பிட்டிருக்கும். இதனால் இவற்றின் இசைத் தன்மை சிறப்பாய்க் கருதப்பட்டது என்பது நன்கு விளங்கும் (பக். 22).

### 1:1 சிக்கல் நவநீதேசுவர சுவாமி குறவஞ்சி

சந்த விருத்தங்களை ஆங்காங்குப் பாடிச் செல்லும் இக்குற வஞ்சியின் ஆசிரியர், குறவஞ்சிக்கு வரும்போது தாள இசைகளைத் தத்தளித்துப் போகுமாறு கொட்டித் தீர்த்து விடுகிறார். எடுத்து வைக்கும் எட்டெல்லாம் தாளக்கட்டாக்கி மகிழ்கிறார். இவர்தம் இசைப்புலமைக்கு இவை (33- 35 பாடல்கள்) சான்றாகும் (பக் 15).

சதி

33. தத்தாந்தித் தாந்தித் தத்தாந்தி தாந்தித்
தத்தாந்தித் தாந்தித் தத்தாந்தித்
ததித் தத்தாந்தித் தெத்தரி கிடதக தகதித்
தாதித் தெந்தரி கிடதக தகதெங் கிடதக
தாதித் தெந்தரி கிடதக துகதெங்கிடதக
தெங்கிடதக தளங்கு தகுதிகி தகததிங் கணத்தோம்

(1) தத்தாந்தி தாந்தித் தாந்த தகதெந் தரிகிட
தகதித் தாந்தி ததாந்தித் தத்தாந்தி
தத்திக்கிட தத்தித் திக்கிடதக் தக்குதிக்கு
தத்திக்கிட தத்தித் திக்கிடதக தக்குதிக்கு
தித்தகத்திங் கணத்தோம்

தத்தாங்கி சபதம்

34\. தணத்தத் தணதண செனுத்த செனு செனு
திமித்த கிணங்க சேகிணம் தத்தித் தாதா
தித்ததி ததாதரிதா தத்தித்த கதிகித கதக
ததிங் கணத் தோம்.

தரு

35\. வந்தாள் சிங்காரக் குறவஞ்சி மனமகிழ்ந்(து)
அந்தாமணத் தடஞ்சூழ் அழகுசிரை நாட்டில்
— வந்தாள்

(1) பந்து முலைகள் விம்மி மந்தர நிகரென்ன
நந்துங் கரக்கஅணி கந்தர மெதிரென்னச்
செந்தேன் அமிர்தமிடும் விந்தை அதரமென்னத்
தந்த முருந்தாமெனத் தனங்கு ததிங்கணத்
தோமென வந்தாள்

(2) கச்சுமே கலையொடு கனக மணிகள் துன்ன
பச்சை மணி யிழைத்த குச்சுகள் நிரைமின்ன
அச்ச மிடை எனவே அணிகள் திருந்து பின்னச்
தச்செங் கிடதக செங்கிட தகதா ததைத்தை
ததிங்கிணத் தோமென—வந்தாள்

(3) வளமிகு கரமதை வார்கழி மடல் நாணக்
களபநறு மணங்கை குவித்து வந்தெதிர் காண
அளக முகிலைவென் நாரத்தி கொண்டிசை பூணத்
தளிரிள மெய்தோணத் தளங்கு தகதிகி ததிங்
கணத் தோமென—வந்தாள் (பக் 42+43)

மண்ணப் படிக்கரை நீலகண்டர் குறவஞ்சி நாடக ஆசிரியர் திரு. சாமிநாதையர் "உரை செறி செந்தமிழிசையால் குறவஞ்சி நாடகத்தை, உரைத்தேன் பாரில்'' (பாடல். 5) என்று கூறுவதைப் போல் குறவஞ்சி நூல் செந்தமிழிசை நூலாகிறது.

**கட்டுரைகள்**

**தமிழ்நாடு இயல்இசை நாடகமன்றம், சென்னை —வெள்ளிவிழா மலர்—1980**

**இசைக்கலை** : கி.ஆ. பெ. விசுவநாதம், பக். 25-27.

ஆடல், பாடல், கொட்டு என இசைக்கலை மூவகைப்படும். பாட்டு என்பது அக நாடகங்களுக்கும், புற நாடகங்களுக்கும் உரிய

உருவாகும். கொட்டுஎன்பது கொட்டப்படுகின்ற இசைக்கருவிகள். ஓசையின்அளவு, தாளவகை, தூக்கு ஆகியவையும் விளக்கிக் கூறப் பட்டுள்ளன. யாழ், குழல், முழவு, ஏழிசை ஆகியவற்றைக்கூறி, இசையின் எண்11 991 ஆகும் என்றும் கூறப்படுகிறது.

''உயிர் மெய் அளவு உரைத்த ஐம்பாரிலும்
உடல் தமிழ் இயல் இசை ஏழுடன் பகுத்து
மூவேழ் பெய்த ...........................
தொண்டு மீண்ட பன்னீராயிரம்
கொண்டனர் இயற்றல் சொல் வல்லோர் கடனே''

சிதைந்து காணப்படும் இந்நூற்பாவும் எடுத்துகாட்டாக வந்துள்ளது. இதில் தொண்டுமீண்ட என்பது 'ஒன்பது குறைந்த' என்றாகும்.

**துளைக்கருவிக்கு மரம், ச. வே. சுப்பிரமணியன், பக். 45-48.**

துருத்திமூலம் இயக்கப்படுவதும், வாயில்வைத்து உட்காற்றால் இசைக்கப்படுவதும் என துளைக்கருவி இருவகைப்படும். குழல் செய்பொருள்-மூங்கில். நெலிகோலின் தீப்பிழம்பால் குழலில் கருந்துளைகள் இடப்படுகின்றன. வண்டு துளைத்த மூங்கிலே குழலுக்கு ஏற்ற பொருள். சிலப்பதிகாரத்தை ஆதாரமாகக் கொண்டு குழல் ஆகிய வங்கியத்தைச் செய்தற்குரிய பொருள்களாக மூங்கில், சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்காலி ஆகியனவும் குறிக்கப்படுகின்றன. துளைக்கருவிக்குரிய மரத்தைத் தேர்ந்தெடுப்பது பற்றியும் நல்ல விளக்கங்கள் கட்டுரையில் இடம் பெற்றுள்ளன. கொன்றைக்காய், முல்லைக்கொடி போன்றவையும் குழலை ஆக்கப் பயன்பட்டுள்ளன.

தமிழரின் பண்பாட்டு வளர்ச்சி, கலைச்செழிப்புக்கு ஆக்கம் தந்தபோது, கலைப்பொருள்கள்-கருவிகள் பற்றிய எண்ணமும் வளர்ச்சி கொண்டு, அவற்றிற்கு இலக்கணம் வகுத்து மரபு காத்தது எனவும் கூறிமுடிக்கிறார் ஆசிரியர்.

**பழங்கால இசைக் கருவிகள், பா. தாமோதரன்**
இசைக்கருவி கலைவல்லுநர், பக். 87-89.

சங்க இலக்கியங்களிலும், சங்கக் காவியங்களிலும் புராணங்களிலும், இதிகாசங்களிலும், இசையின் சிறப்பினையும், இசைக் கருவிகளின் பெருமையினையும் விளக்கமாகக் காண்கின்றோம். பழங்காலக் கல்வெட்டுச் சிற்பங்களில் பலவிதக் கருவிகளைக் கண்கூடாகக் காண்கிறோம்.

இந்தியா முழுவதும் நால்வகை இசைக்கருவிகளும் 500 இசைக் கருவிகளுக்கு மேலாக உள்ளன. நம் தமிழகத்தில் மட்டும் வழக் காற்றிலும் வரலாற்றிலுமாக ஏறக்குறைய 250 இசைக்கருவிகள் உள்ளன. இசைக்கருவிகளைத் தரத்திற்குத் தக்கவாறு, இசைக்குத் தக்கவாறு, இடத்திற்கு ஏற்றவாறு பாகுபடுத்தி, அவற்றிற்குப் பண் அமைத்து கண்ணெனக் காத்துள்ள தமிழர்தம் பெருமை அகில உலகத்தினரையும் வியந்து போற்றச் செய்கின்றது.

நான்கு வகையான இசைக்கருவிகளை கோவில்களில் பூஜாக் காலங்களில் உபயோகப்படுத்தும் கருவிகளாகவும், மணவினைக் கெனவும், விளையாட்டிற்கெனவும் வீரத்திற்கெனவும், விழாவிற் கெனவும் வகைப்படுத்தி வைத்துள்ளமையால் தமிழர் தம் இசைப் புலமையை நன்கு தெளிவு படுத்தலாம்.

7 தந்தி உடைய செங்கோட்டியாழில் 'மாதர் மடப்பிடி' என்ற சம்பந்தரின் யாழ்முரிப் பதிகத்தைப் பாடமுடியாததனால் 14 தந்தி உடைய 'சகோடயாழை' வாசித்தார் திருநீலகண்ட நாயனார். யாழியின் வளர்ச்சியைக் கூறி, குழல் வகைகள், வீணை வகைகள், தோல்கருவிகள் ஆகியவற்றின் பட்டியலையும் கொடுக்கின்றார் ஆசிரியர்.

**இசைப்பாடலின் சிறப்பு :** சரவணபவானந்தர் பக். 91-92.

இயற்கை யறிவோடு மனத்தை இசைவிப்பது இசை. இறை வனையும் வசப்படுத்தும் தன்மையது. பேரானந்தப்பெருக்கீட்டைக் கூடி நிற்பவர்கள் மறந்து விழித்தெழுந்தபோது, மறுபடியும் அவர்களை அந்த நிலைக்குக் கொண்டு சேர்ப்பது, பக்தியை வளர்ப்பது இசையாகும். மாளா வடிவம் பெற்றது. சித்தர்களின் சொத்தாகிய இசை சகல நோய்களையும் தவிடு பொடியாக்கும்.

இசையினால் இன்ப-துன்பங்கள் இரண்டும் உண்டு. சங்கீதம் பாடி சரமாரி பொழிந்தது ஒரு பக்கம். தலைவெடித்து மாண்டான் என்பது மற்றொரு பக்கம்

சொக்கேசன் பாணபத்திரனாகி யாழ்வாசித்து ஏமநாதனை ஓட்டம் எடுக்கச் செய்தான். சம்பந்தர் இசையால் எலும்பைப் பெண்ணுருவாக்கினார். இசைக்கு அடிமையாகி சுந்தரருக்குத் தூது சென்றான் பரமன் இசை முதலையுண்டபாலனை மீட்டது'

தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, திருவிசைப்பா, திருப்புகழ், திருவருட்பா ஆகிய அனைத்தும் அருளிசை அமுதமே

யாகும். ''இசைப்பாடலின் இயல்பு'' மிகச் சிறப்புடையது. சந்தஇன்ப அருள் மயமாய் அமையப்பெற்றது.

**யாழ்**, எஸ். இராமநாதன், பக். 95-98.

யாழ் தொன்மையான இசைக்கருவி. வேடுவர்கள் வேட்டை யாடுகையில் வெவ்வேறு வில்களின் நாண்கள் வெவ்வேறு ஒலிகளை எழுப்பக்கண்டு, ஒரே வில்லில் பல நரம்புகளைக் கட்டி நாண் களைத் தெறித்தபோது பிறந்தது யாழ் என்பது இசைக்கருவி ஆராய்ச்சியாளர்கள் (Organology) கருதுகிறார்கள்.

ஹார்ப் (Harp) லையர் (Lyre) போன்ற மேல் நாட்டுக் கருவிகள் யாழ் போன்றவையே பர்மா நாட்டுல் யாழ் போன்ற ஸான் (Sawn) என்ற கருவி இன்றும் வழங்குகிறது.

சுட்டப்பெறும் நரம்புகளை யொட்டி யாழ் நால்வகைப் படும். ஆயிரம் நரம்புகள் கொண்ட பெருங்கலம் என்னும் பேரி யாழ் இருந்ததாகவும் அடியார்க்குநல்லார் கூறுகிறார். யாழுறுப்புகள், யாழில் நரம்புகள் கட்டும்முறை, யாழ் வாசிக்கும் முறை, யாழ்க்கரணங்கள் ஆகியவை கட்டுரையில் விளக்கப்பட்டுள்ளன. வீணை, சுரமண்டலி ஆகியவையும் கட்டு ரையில் இடம்பெறுகின்றன.

ஜப்பானின் இன்று வழங்கும் கோடோ (Koto) என்ற கருவியும், சீனா, கொரியா ஆகிய நாடுகளில் வழங்கும் சின் (Chin) என்ற கருவியும் யாழின் வேறு வடிவங்களே என்பது ஆசிரியரின் கருத்து.

**நாதசுரக்கலை** : திருவீழிமிழலை எஸ். நடராஜசுந்தரம்பிள்ளை, பக். 99-105.

இசைக்கருவிகளில் சிறப்பான இடம்பெற்று, தமிழ்நாட் டிற்குத் தனிப்பெருமை தேடித் தந்தது நாதசுரமும் தவிலு மாகும். ''வெளிநாட்டு நூறு இசைக்கருவிகளிலிருந்து வெளி வரும் நாதவெள்ளத்தை, தமிழ்நாட்டு இசைக்கருவியான ஒரு நாதசுரத்தில் காணலாம்''-என்று மறைந்த மாமேதை பேரறிஞர் அண்ணா அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

நாதசுர, தவில் இசைமேதைகள் முறையான குருகுலவாசம் செய்து, குருமுகமாய் பயிற்சிபெற்று, அசுரசாதகம் செய்து, இசை இலக்கண முறை வழுவாதும் ராக மாறுபாடற்ற முறை யிலும் வாசிக்கும் திறமைமிக்கவர்களாக விளங்கியதோடு,

தாங்கள் வாழ்ந்த காலத்தில் இக்கருவிகள் மூலம் ஆற்றிய சாதனைகளுக்காக அவர்கள் பெற்ற புகழும் அடைந்த பெருமைகளும் கணக்கிலடங்கா.

நாதசுரக்கலை மாமேதைகள் திருப்பாம்புரம் சாமிநாத பிள்ளை முதல் பலரைப் புகழ்ந்து கூறி, நீடாமங்கலம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்ற பல மாமேதைகளின் வரலாற்றையும், கதைத் திறமையையும் வெகுவாக விளக்கிக் கூறுகிறது இக் கட்டுரை.

**தவில்கலை :** வலங்கைமான், ஏ. சண்முகசுந்தரம்பிள்ளை, பக். 109-110.

இசைக்கலையில் மேளம் என்ற முறையில் முக்கிய ஸ்தானம் வகிப்பது நாதஸ்வரம், அதற்கு மிக உறுதுணையானது தவில். சுருதி மாதா-லயம் பிதா. தாயாரிடம் பாசப்பிணைப்புடனும் தந்தையாரிடம் கட்டுப்பட்டும் சேயர்கள் நடப்பதே இயற்கை வழக்கு. நாதஸ்வரத்திற்குத் தாயாராகிய சுருதி முக்கியமானது. அதுபோல் தவிலுக்கு 'தா' என்ற சொல் முக்கியமானது. 'தா' என்ற சொல் சரியான உருவத்துடன் ஒலிக்கவில்லையானால் (தாய்) இல்லாத குழந்தைக்கு ஒப்பாகும் என்பது குறிப்பிடத் தக்கது.

தவில் செய்ய உதவும் மரம், தவில் அளவுகள், வளையம், தோல்போர்த்தல், வாரினால் சேர்த்து இழுத்துக்கட்டுதல் முதலியவைகளை விளக்குகிறது இக்கட்டுரை.

தவில் வாசிப்பதற்கு முக்கியமானது தாளம். அகஸ்திய மாமுனிவர் நூற்றெட்டுத் தாளங்களுக்கும் விளக்கம் தந்துள்ளார்.

**மிருதங்கக்கலை:** சி. எஸ். முருகபூபதி, பக் 111-112.

ஒவ்வொரு நாட்டின் மொழிவளம், பண்பாடு, வரலாறு ஆகியவைகள் அந்தந்த நாட்டின் இசையில் பிரதிபலிப்பதை நாம் காண்கிறோம்

பலவித இசைக் கருவிகளில் ஒன்றான மிருதங்கம் பக்க இசைக் கருவியாகும். மிருதங்கம் அடித்து எழுப்பப்படும் தோல் இசைக் கருவியாகும். முறைப்படி உருவாக்கப்பட்டுக் கையாளப்படும் விதத்தில் கையாண்டால், மிருதங்கத்தில் இனிமையான குரலோசை, குழலோசை, நரம்போசை போன்ற இசையை எழுப்பலாம்.

சிறப்பு வாய்ந்த மிருதங்கத்தின் அமைப்பு எப்படி இருக்க வேண்டும், அதைக் கையாளும் விதம் எப்படி அமைய வேண்டும் என்றெல்லாம் இக்கட்டுரை விளக்கிச் செல்லுகிறது.

## 3. இசைப் பணிகள்

**சென்னைப் பல்கலைக் கழகத்தின் இசைத்துறைப் பணிகள்**

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அக்டோபர் ஏழாம் எட்டாம் தேதிகளில் அனைத்துலக இசைவாரம் கொண்டாடப்பட்டது. ஏழாந்தேதி எஸ். பாலசுப்பிரமணியம் அவர்களும், எட்டாந் தேதி செங்கல்பட்டு S. அரங்கநாதன் அவர்களும் திருப்புகழ் இசையரங்கு நிகழ்ச்சிகள் நடத்தினர். இரண்டு நாட்களும் திருவீழிமிழலை நடராஜ சுந்தரம் அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

16-10-80 அன்று கபாலீஸ்வரர் ஆலயத்தில் பல்கலைக் கழக இசைமாணவர்களால் இசைநிகழ்ச்சி ஒன்று நவராத்திரியை யொட்டி நடைபெற்றது.

12-11-80 அன்று திருத்தணி தேவஸ்தானத்தில் கந்தர் ஷஷ்டி விழாவை யொட்டி அருணகிரிநாதரின் திருப்புகழ், கந்தரந்தாதி, கந்தரனுபூதி, கந்தரலங்காரம் இவற்றை அடிப்படையாகக் கொண்டு "வள்ளிதிருமணம்" இசை வடிவில் நடைபெற்றது.

கீழ்க்காணும் தலைப்புக்களில் முதுநிலை (M.A.) ஆய்வுக் கட்டுரைகள்-தமிழிசை தொடர்பாகக் கொடுக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

1. **அருணகிரிநாதரும் அவர் திருப்புகழும்,** பி. எஸ். லோசன்
2. **திருஞானசம்பந்தரும் அவர்தேவாரமும்,** சீ. செண்பகவல்லி
3. **அழகர் குறவஞ்சி** எஸ். சாவித்திரி.
4. **பெத்லஹேம் குறவஞ்சி,** ஜான் பிரிட்டோ.
5. **திருநாவுக்கரசு நாயனாரும் அவர் தேவாரமும்,** எம் கே. விஜயலட்சுமி.

(பிஎச்.டி பட்டப்படிப்பு நிலையில் கீழ்க்கண்ட ஆய்வுப்பணி நடைபெறுகிறது.

1. **திருப்புகழில் சந்த அமைப்பு முறை,** பி. எஸ். லோசன்.
2. **கதா காலட்சேபம்-ஓர் ஆய்வு,** எம். பிரமீளா.

சென்னைப் பல்கலைக்கழக இசைத்துறைத் தலைவர் எஸ் சீதா அவர்கள் 'தமிழிசையும் கர்நாடக இசையும்' என்னும் பொருள் பற்றி பண் ஆராய்ச்சி மாநாட்டில் படித்த கட்டுரை ஒன்று என்பதில் தமிழிசைச் சங்க ஆண்டு அறிக்கையில் இடம்பெற்றுள்ளது.

'குறவஞ்சி நாட கங்கள்' என்னும் பொருள் பற்றி ஒரு கட்டுரை எண்பதாம் ஆண்டு டிசம்பரில் நடைபெற்ற பண் ஆராய்ச்சிக் கூட்டத்தில் படிக்கப்பட்டுள்ளது (அடுத்த ஆண்டு அறிக்கையில் அச்சாகி வெளிவருகிறது).

அவர்களுடைய ஆய்வுப்பணியில்-தமிழிசைக் கலைச்சொற்கள் தொகுக்கும் பணியில்,—'அ' முதல் 'ஆ' வரை முடிந்துள்ளது.

**தமிழிசைச் சங்கம், சென்னை.**

செட்டிநாட்டு ராஜா சர் மு அண்ணாமலை செட்டியார் அவர்களால் இச்சங்கம் நிறுவப்பட்டது. தமிழ் நாடெங்கும் தமிழிசை முழங்க வேண்டும் என்பது அவர் ஆவல். ஆண்டுதோறும் பண் ஆராய்ச்சிக் கூட்டம் நடக்கிறது. தமிழ்ப் பண்கள் இக்கூட்டங்களில் ஆராயப்படுகின்றன. இதன் செயலாளராக லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் பொறுப்பேற்று நடத்தி வருகிறார்கள்.

இவ்வாண்டு 1980 முப்பத்தெட்டாவது ஆண்டாக தமிழிசை விழாவை நடத்தியது. பண் ஆராய்ச்சிக்கூட்டமும் ராஜா அண்ணாமலை மன்றத்தில் நடைபெற்றது. விழாவிற்கு மீ. ப. சோமசுந்தரம் அவர்கள் (சோமு) தலைமை வகித்தார்.

## பண் ஆராய்ச்சி

23-12-80

மதுரை, தமிழ்நாடு அரசு இசைக்கல்லூரி தவில் விரிவுரையாளர் வி. என். ஜி. தட்சிணாமூர்த்தி அவர்கள் தவில் இசை பற்றி ஓர் ஆய்வுக்கட்டுரை படித்து விளக்கம் கூறினார்.

எஸ். இராமநாதன் அவர்கள் ''கீழ்த்திசை நாடுகளில் முல்லைப் பண்'' என்னும் பொருள் பற்றிக் கட்டுரை படித்துச் சீன நாட்டிலிருந்து கொண்டு வந்துள்ள ஒலிப்பதிவை இயக்கச் செய்து காட்டினார்.

திருப்புகழின் தாள நுட்பங்கள் பற்றிச் சென்ற ஆண்டுகளில் நடந்த ஆய்வு தொடரப்பட்டது.

24-12-80

யாழிசைப்புலவர் வி. எஸ். கோமதி சங்கரையர் அவர்கள் '**சிலம்பினுள் நிறங்கள்**'—என்னும் பொருள் பற்றிக் கட்டுரை படித்தார்,

சென்னைப் பல்கலைக்கழக இசைத்துறைத் தலைவர் சீதா அவர்கள் 'குறவஞ்சி நாடகங்கள்' பற்றிக் கட்டுரை படித்தார்.

எஸ். இராமநாதன் அவர்கள் ''வள்ளலாரும் இசையும்'' என்னும் பொருள் பற்றிக் கட்டுரை படித்து, விளக்கங்கூறிப் பாடிக்காட்டச் செய்தார்.

புத்தனேரி ரா. சுப்பிரமணியம் அவர்கள் ''தமிழிசைப் பாடல்களில் சமுதாயச் சிந்தனைகள்''—என்னும் பொருள் பற்றிக் கட்டுரை படித்தார்.

வீ. ப. கா. சுந்தரம் அவர்கள் இசைக்கல்லூரிகளில் இப்பொழுது உள்ள இசைத்துறை வடசொற்களுக்கு உரிய தமிழ்ச் சொற்கள் என்னும் பொருள் பற்றிக் கட்டுரை படித்தார்.

சென்னை அரசி மேரிக் கல்லூரி துணைப் பேராசிரியை தொராதன் தஞ்சை பொன்னையாபிள்ளை அவர்கள் இயற்றியுள்ள நவக்கிரகங்களைப் பற்றிய தமிழ்ப்பாடல்களின் இசை பாடல்சிறப்பு ஆகியவை குறித்து கட்டுரை படித்தார்.

மீ. ப. சோமசுந்தரம் அவர்கள் 'தமிழ் இசையும் மகாகவி சுப்பிரமணிய பாரதியாரும்'' என்னும் பொருள் பற்றிக் கட்டுரை படித்தார்.

23-12-80, 24-12-80 மற்றும் 25-12-80 ஆகிய நாட்களில் படிக்கப்பட்ட ஆய்வுக்கட்டுரைகள் அனைத்தும் அடுத்து வரும் ஆண்டு அறிக்கையில் அச்சாகி வெளிவர இருக்கின்றன.

**தமிழக அரசு இசைக்கல்லூரி, சென்னை.**

இக்கல்லூரியின் மிருதங்க விரிவுரையாளர் டி.ஆர். சீனிவாசன் அவர்கள் ''மூன்று தாள முக்கூடல்'' என்ற முறையில் மிருதங்கத்தைத் தமிழ்நாடு அரசு இசைக்கல்லூரியில் பல வித்வான்கள் முன்னிலையில் வாசித்துக் காட்டியுள்ளார். அது குறித்து அவர் கொடுக்கும் விளக்கம், ''மூன்று தாளத்தைப் பற்றி படங்களை வரைந்தேன். படங்களைப் பார்க்கவும். படத்தைச் சந்திரனுக்குள் சென்ற பூச்சி ராக்கெட் வடிவத்தில் தயாரித்தேன். மூன்று வட்டங்கள் தனியாக ஒரு வட்டம். தனியாக உள்ள வட்டம் அதன் வேலைமுடிந்து பெரிய வட்டத்திற்கு வருகிறது. கீழே உள்ள வட்டங்கள் ஒவ்வொன்றாக அதனுடன் இணைகிறது. முடிவில் ஒன்றாக இணைகின்றன. இதுதான் மூன்றுதாள முக்கூடல்,

**மூன்றுதாள முக்கூடலுக்கு எடுத்துக்கொண்ட தாளம்**

| | | | |
|---|---|---|---|
| திஸ்ரரகம் | 40 | ஆவர்த்தனம் | 120 அட்சரம் |
| சதுஸ்ரதிருபுடை | 15 | ஆவர்த்தனம் | 120 அட்சரம் |
| கண்டசாபு | 24 | ஆவர்த்தனம் | 120 அட்சரம் |
| பலவகையான சொற்கட்டுகள் | | | 24 அட்சரம் |
| (முடிவு) மோரா | | | 48 அட்சரம் |
| தீர்மானம் (கோர்வை) | | | 48 அட்சரம் |
| ஆககூடுதல் | | | 120 அட்சரம் |

**மூன்றுதாள முக்கூடல் விளக்கம்**

நான்கு மத்தளம் (மிருதங்கம்)

1. திஸ்ர மிருதங்கம் 2 சதுஸ்ர மிருதங்கம் 3. கண்ட மிருதங்கம் 4. முக்கிய மிருதங்கம். ஆக 4.

முக்கிய மத்தளம் (மிருதங்கம்) முழக்குபவர் 120 அட்சரத்தில் ஒரு திருப்புகழ்ப் பாடலுக்கு வாசிக்கிறார். இதே நேரத்தில் திஸ்ர மத்தளம் (மிருதங்கம்) வாசிப்பவர் திஸ்ரகதியையும், சதுஸ்ர மத்தளம் (மிருதங்கம்) வாசிப்பவர் சதுஸ்ரகதியையும், கண்ட மத்தளம் வாசிப்பவர் கண்டகதியையும் வாசித்துக்கொண்டே இருக்கிறார்கள். முக்கிய மத்தளம் (மிருதங்கம்) முழங்குபவர் 120 அட்சரத்தில் திருப்புகழ்ப் பாட்டுக்கு முழங்கியபின் பக்கத்தில் இருக்கும் பெரிய வட்டத்திற்குள் 24 அட்சரத்தில் இயங்கும் பல வகையான சொற்கட்டுகளை முழங்கிக் கொண்டிருக்கும் வேளையில் முதலாவதாக சதுஸ்ர மத்தளம் வாசிப்பவர் முக்கிய மத்தளம் வாசிப்பவருடன் இணைய இடம் அளிக்கிறது. இணையவும் செய்கிறார். பின் இரண்டாவதாக திஸ்ரமத்தளம் வாசிப்பவருக்கு முக்கிய மத்தளத்துடன் இணைய இடம் கிடைக்கிறது. இவரும் இணைகிறார். மூன்றவதாக கண்டசாப்பு மத்தளம் வாசிப்பவருக்குக் கடைசியாக இணைய கண்டசாப்பு தாளத்தில் 2 அட்சரம் தள்ளி இடம் கிடைக்கிறது. பின் இவருமாகச் சேர்ந்து மூன்று தாளங்களும் கூடுகின்றன. இதுவே மூன்று தாளமுக்கூடல்*.

---

* ஆசிரியர் எழுதித்தந்த கட்டுரை கையெழுத்துப் பிரதியாக எங்களிடம் உள்ளது.

சென்னை சங்கீத வித்வத்சபை

'இசைக்கலை நுட்பக்கழகம்' எனும் பொருள்பட விளங்கும் சங்கீத வித்வத்சபை ஆண்டுதோறும் இசைமாநாடுகளை நடத்தி இசைத்தொண்டு செய்து வருகின்றது.

54-ஆவது இசை மாநாடு 21-12-80 முதல் 1-1-81 வரை நடைபெற்றது.

27-12-80 அன்று வி. முத்துகிருஷ்ணன் அவர்கள் 'கந்தரலங்காரமும் கந்தரனுபூதியும்' என்னும் பொருள் பற்றி ஆய்ந்துள்ளார்.

29-12-80 அன்று எஸ்.இராமநாதன் அவர்கள் 'தமிழ்நாட்டின் பண் அமைப்பு'— என்னும் பொருள் பற்றி ஆய்ந்துள்ளார்.

அன்றே கோமதி விஸ்வநாதன் அவர்கள் 'தென்னிந்தியக் கோயில்களில் இசை' என்னும் பொருள் பற்றி ஆய்வுசெய்துள்ளார்.

இந்தத் தகவல்களை எல்லாம் எண்பத்தொன்றில் வெளியாகும் சபையின் மலரில் இடம் பெறுகின்றன.

The Journal
of
The Music Academy
Madras

Vol. L11 1981

ஆண்டுச் சந்தா ரூ 15/

## பின்னிணைப்பு

எண்பதில் இசை பற்றிய ஆய்வு குறித்து அறியத் தொடர்பு கொண்டோர் விபரங்கள்:

1. இசைத்துறை, சென்னைப்பல்கலைக்கழகம், சென்னை-5.
2. இசைக்கல்லூரி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர், சிதம்பரம்.
3. மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை.
4. தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரி, சென்னை-28.
5. இசைக் கல்லூரி, அரசர் கல்லூரி, திருவையாறு.
6. தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம், சென்னை-28.

7. கலாக்ஷேத்ரம்,
அடையாறு, சென்னை.

8. இராணிமேரிக் கல்லூரி,
சென்னை-5.

9. தமிழ் இசைச்சங்கம்,
அண்ணாமலை மன்றம்,
சென்னை - 1.

10. சங்கீத வித்வத்சபை,
சென்னை-14.

11. பாலசுப்பிரமணிய சங்கீத
சபா, சென்னை-18.

12. பிரம்மகான சபா,
சென்னை-4.

13. இசைக்கலை மன்றம்,
நிலக்கோட்டை,
மதுரை மாவட்டம்.

14. ஜெயகணேஷ் தாளவாத்ய
வித்யாலயா,
திருவல்லிக்கேணி,
சென்னை-5.

15. நாரதகான சபா,
கரூர்-639 001.

16. பெரம்பூர் சங்கீத சபா,
பெரம்பூர்,
சென்னை-11.

17. தியாகபிரம்ம மஹோத்சவ
சபா, திருவையாறு.

18. ஸ்ரீ கிருஷ்ணகான சபா,
தி. நகர், சென்னை-17.

19. ஸ்ரீ சத்குரு சங்கீத சமாஜம்,
தல்லாகுளம், மதுரை-2

20. ஸ்ரீ வெங்கட்டரமண பாகவத
ஸ்வாமிகள் ஜயந்தி கமிட்டி,
ஐயம்பேட்டை,
தஞ்சை மாவட்டம்.

21. ஸ்ரீ தீர்த்தநாராயண சுவாமி
கள், ஆராதனா விழா
கமிட்டி, திருப்பூந்துருத்தி,
தஞ்சை மாவட்டம்.

22. Indian Fine Arts Society,
3, Stringers Street,
Madras-1.

23. Music club,
10, Viswesvarapuram st,
Madras-4.

24. Alpana,
59/8 M.K. Amman koil st,
Mylapore, Madras-4.

# எண்பதில் தமிழ் நாவல்

**டாக்டர் தா.வே. வீராசாமி**

I

தமிழ் இலக்கியப் படைப்புலகில் பேரளவு செல்வாக்குப் பெற்று விளங்குவது நாவல் தான் என்பதை யாவரும் ஒப்புக் கொள்வர். கவிதை, சிறுகதை, கட்டுரை, நாடகம் என்பவற்றை எல்லாம் விஞ்சிய அளவில் வெளிவந்து தனக்குரிய தனி இடத்தைப் பெற்றிருப்பது நாவல் தான் என்பதில் இந்த ஆண்டு வெளிவந்த புத்தகப் பட்டியலைப் பார்த்தாலே எளிதில் புரிந்து கொள்ள முடியும். குறிப்பாகச் சொல்லப்போனால் இந்தக் காலம் நாவலின் காலம் என்பதில் எவ்விதத் தடையும் இல்லை. அதனால் தமிழ் வெளியீட்டுலகில் நாவலின் செல்வாக்கு மிகவும் வெளிப்படையாகக் காணப்பெறும் வகையில் தலைசிறந்து நிற்கிறது. இந்த ஆண்டில் மட்டும் வெளியான நாவல்களின் எண்ணிக்கையை எடுத்துப்பார்த்தால் இருநூறுக்குப் பக்கத்தில் சென்றுவிடும். வார, மாத இதழ்களில் தொடர்ந்து தனக்கென ஒரு தனி இடத்தை நாவல் பிடித்து வைத்திருக்கிறது. இது தவிரத் திங்கள் வெளியீடுகளெனப் பல பதிப்பகங்கள் பல்வேறு வகைப்பட்ட நாவல்களைத் தொடர்ந்து வெளியிட்ட வண்ணம் உள்ளன. சிற்சில சமயங்களில் முன்னர் வெளியிட்ட நாவல்களையும் இவை மறுபதிப்பாக வெளியிடுகின்றன. தனிப்பட்டவர்களின் நாவல்களும் அவ்வப்போது அரும்புகின்றன. சுருக்கமாகச் சொன்னால் நாவல் என்பது பெருகிவரும் வெள்ளமாகத் தமிழிலக்கியத்தில் வெளிவந்த வண்ணம் உள்ளது இவை எல்லாவற்றையும் படிப்பது என்பது எவராலும் இயலாது. சில நாவல்கள் வெளிவந்த சுவட்டைக் காண்பதுகூட அரிதாக இருக்கும். வந்தவற்றில்

பலவற்றைப் பார்க்க இயலாமற்போவது முழுமையான கருத்தை நாவல் பற்றிக் கொடுக்க இயலாது எனினும் அது நாவல் பற்றிய கருத்தை ஓரளவு முழுமைபெறச் செய்யத் தடையாயிருக்காது. ஆதலால் இக்கட்டுரையை உருவாக்க ஆயிரத்து இருநூறு பக்கங் களுக்கு மேல் படித்த பின்னர்தான் இம்முயற்சி தொடங்கியது என்றால் அதன் பரப்பு எவ்வளவு விரிந்தது என்பதை நன்கு உணர முடியும்.

நாவல் என்ற படைப்பைக் கலை உணர்வோடும் சமுதாயப் பார்வையோடும் உருவாக்கியவர்கள் ஒரு சில ஆசிரியர்கள் தாம். பெரும்பாலான நாவல்கள் காலத்திற்கேற்ப வெளித்தோன்றி அவை தோன்றிய மிகக் குறுகிய காலத்திலேயே அவை பற்றிய எவ்விதச் சலனங்களையும் தோற்றுவிக்க இயலாமல் ஈசல் சிறகு களாய்க் காலக்காற்றில் பறந்து மறைந்து விட்டன. ஒருசில நாவல்கள் பாலுணர்வு வெறியைப் படிப்போர் உள்ளத்தில் பற்றி எரியச் செய்வதால் வணிகப்பொருளாக மாறி விடுகின்றன. தனி மனிதச் சிக்கல்களைப் பல்வேறு கோணங்களில் காட்டுவதையே பெரும்பாலான வெளியீடுகள் முயன்றுள்ளன. நல்லதோர் குறிக் கோள் வெளிப்படாத காலத்தில் இத்தகைய தனிமனிதப் புள்ளிகளைச் சுற்றிச் சுழன்று கொண்டிருக்கும் சுழற்சிகளைத் தவிர்க்க முடியாது. பெண்கள், சமுதாயத்தின் கொடுமையில் சிக்கி எத்தகைய அவலநிலைக்கு ஆளாகின்றனர் என்பதைப் பல்வேறு கோணங்களில் காட்டுவதற்கு ஆண் எழுத்தாளர்களை விடக் குறிப்பாகப் பெண்ணெழுத்தாளர்கள் முன்னணியில் நிற்கின்றனர். தமிழகத்தை மட்டுமே வட்டமிட்ட கதைகளின் களத்தைச் சற்றே விரிவாக்கி மலேசியா சிங்கப்பூர் போன்ற கீழை நாடுகளுக்கும் அமெரிக்கா பிரான்சு போன்ற மேலைநாடுகளுக்கும் தென் ஆப்பிரிக்கா போன்ற இருண்ட கண்டங்களுக்கும் கதை நிகழ்ச்சிகள் செல்கின்றன. அந்த அந்த நாடுகளில் சென்று வாழ்ந்து அவர்கள் பெற்ற உண்மை அறிவின் அடிப்படையில் இத்தகைய கதைகள் உருவாகி இருப்பதால் இவற்றின் சூழல் உண்மை நிகழ்ச்சிகளை உள்ளவாறு உணர்வதற்குப் பெரிதும் துணைபுரி கின்றன என்பது வெளிப்படை.

பழைய ஒழுக்கம், பண்பாடு போன்றவற்றை வற்புறுத்த வேண்டும் என்ற எண்ணங்களை இறுதியிலே கூறினாலும் அவற்றின் எதிரிடை முயற்சிகள் நாவலின் முற்பகுதியில் விரிவாகவும் விளக்கமாகவும் அமைந்திருப்பதால் அவற்றின்

நோக்கம் செம்மையாக வெற்றி பெறவில்லை எனக் கூறலாம். இதிலிருந்து எதற்காக எழுதுகிறார்கள் என்பதன் நோக்கத்தையே திசைதிருப்பி விடுவதால் வரும் விளைவுகள் எதிர்பாரா விளைவுகளாக மாறிப் பழம் பண்பாட்டுமேல் உண்மைப்பற்றுக் கொள்ளாதவாறு இத்தகைய நாவல்கள் செய்து விடுகின்றன. எனினும் வெளி அட்டைகளில் முன்னுரைகளில் இவைகள் பண்பாட்டுக் காவலர்களாகவே பளபளக்கின்றன. உள்ளே நுழைந்து பார்க்கும்போது அவற்றின் பசுத்தோல் போர்த்த புலித்தன்மையாகப் பண்பாட்டின் அழிவு விதைகள் வெடிப்பதைக் காண்முடிகிறது. அவற்றை இனங்கண்டு கொள்வது எளிதாகவே உள்ளது.

சிறுகதை எழுதிப் பின் அதன் வளர்ச்சியையே பெரு நாவலாக்கிய முயற்சியை முன்பு கண்டிருக்கிறோம். இப்போது வானொலியில் நாடகமாக ஒலிபரப்பிய நாடகத்தை நாவலாக மாற்றுவடிவம் செய்யும் முயற்சியையும் காண முடிகிறது. மேலும் ஒரு புது முயற்சி தென்படுகிறது. திரைப்படமாக வந்து வெற்றி நடையிட்ட கதை ஒன்றின் தொடர்ச்சியாக மற்றொரு கதையை எழுதும் முயற்சி காணப்படுகிறது. இதற்கென முன்கதை எழுதிய ஆசிரியரின் ஒப்புதல் பெற்றுத் தன் கதையை தொடர்கின்ற நாகரிகத்தையும் பார்க்கமுடிகிறது. அத்தகைய முயற்சிக்கு முன்னவர் ஒப்புதலளித்து ஊக்குவிக்கும் பண்பாடும் போற்றற் குரியதாகும். பழங்காலத்தில் மரியாதை ராமன் கதை எழுந்தது போல இப்போதும் சிறுவர்க்கு அத்தகைய கதைகளை இக்காலப் பின்னணிக்கு ஏற்பப் புனைந்து தந்து அவற்றைச் சிறுவர்க்குரிய நாவல் என்று பெயரிடும் முயற்சியும் தெரிகிறது.

உளவியல் சிக்கல்களை அடிப்படையாகக் கொண்டு ஒருசில நாவல்கள் வெளிவந்துள்ளன அவற்றில் பெரும்பாலும் பெண்களை மையமாகக் கொண்டு அவர்கள் படும் சிக்கல்களையே வெளிப்படுத்தும் வாயில்களாக உள்ளன. இம்முயற்சியில் பழம் பெரும் எழுத்தாளர்களும் புதிய எழுத்தாளர்களும் முயன்றுள்ளனர். தம்முடைய அப்பாலறிவின் ஓட்டத்தைப் பயன்படுத்தும் இருண்மை நெறிக்குட்பட்ட நிலையிலும் ஒருசில நாவல்கள் பழைய நெறியில் வெளிவந்துள்ளன. குறிப்பாக இவற்றில் மனப் போராட்டங்கள் அவற்றினால் விளையும் சிக்கல்கள் மருத்துவத் துறையில் அவற்றை நீக்கப் பயன்படுத்தும் வழி முறைகள்,

தனிமனிதனின் மேல்—கீழ் மூழ்கி எழும் எண்ண அலைகள் இவற்றையெல்லாம் அறிய வழி செய்கின்றன.

புதிய முயற்சியாகத் தமிழ் நாவல் உலகில் மூழ்கிப்போன கப்பலினைத் தேடிக் கண்டுபிடிப்பதில் உள்ள துன்பங்களைக் கூற முயலும் முயற்சி தோன்றியுள்ளது. அப்போது அண்மைக் காலத்தில் வெளிவந்துள்ள கப்பல் கலை நுணுக்கங்கள் கடலாய்வுத்துறையில் பயன்படுத்தும் பல்வேறு கருவிகளின் பயன்பாடு பற்றிய தெளிவு கிடைக்கும் வகையில் செய்திகளைக் கூறும் முயற்சி வெளிப்படுகிறது. மேனாட்டு அறிஞர்களின் பல்வேறு நூல்கள் இவற்றிற்குப் பயன்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. எனினும் இவற்றால் புதிய கடற்றுறை பற்றிய செய்திச் செல்வம் கிடைப்பதற்கு வழி தெரிகிறது எனலாம்.

திரைப்படம் இன்றைய தமிழ்நாட்டில் எந்த அளவு செல்வாக்குப் பெற்றுள்ளது என்பதை யாவரும் உணர்வர். அத்தகைய உலகில் புகுந்து வாழத்துடிப்பவர்களின் இருவேறு பட்ட உலகின் அமைப்புகளைக் கற்பனைக் கண்கொண்டு பார்க்கின்ற பார்வையும் உண்மையில் நடிக்கச் செல்பவர்கள் எத்தகைய அவலங்களை எதிர்நோக்க வேண்டியுள்ளது என்பதைக் காட்டும் நடப்பியல் பார்வையும் அமைந்த நாவல்கள் வெளி வந்துள்ளன. வரலாற்று நாவல்கள் என்ற தலைப்பில் ஒருசில வந்துள்ளன. அவற்றில் ஒருசில பழங்கால மக்களுணர்வை வெளிப் படுத்துவதில் வெற்றி பெற்றுள்ளன.

சமுதாய உணர்வோடு இதனைத் திருத்திப் புது வாழ்க்கை அமைய ஒளிகாட்ட வேண்டும் என்ற நோக்கில் ஒருசில நாவல்களே வெளிவந்துள்ளன. நாவல்களையே சிவப்பு விளக்காக்கிக் காசு பறிக்கும் கலையாக மாற்றும் கெடுநெறியைச் சுட்டிக்காட்ட இத்தகைய நாவல்கள் தயங்கவில்லை. கூட்டுறவு என்ற பெயரில் மக்கள் நலத்தைக் கொள்ளையடிப்பதை மக்கள் எதிர்த்துப் பழைய சாதிப்பிடிப்பைக் களைந்து புதிய உருவம் பெற்றுப் பொங்கி எழுகின்ற புரட்சியை வெளிப்படுத்த முயல்கிறது.

மலைப்பாங்கான காடுகளில் வாழும் தோட்டத் தொழிலாளர் களின் பசுமைச் சூழலில் காணும் பாலை வாழ்வையும், நகரச் சூழலில் சின்னஞ்சிறு குழந்தைகளைச் சுரண்டும் அரக்க வாழ்வை யும் காட்டும்போது மனிதனை மனிதன் விரும்புகின்ற அன்பு

வெள்ளம் பெருக்கெடுத்தோடுவதற்குப் புது வாய்க்கால் வெட்டும் முயற்சியைக் காணமுடிகிறது. சமுதாயத்தில் காணும் குறைகளை உணர்த்த விரும்பாமல் திடுக்கிடும் நிகழ்ச்சிப் போக்குகளைக் காட்டித் தனிமனிதனின் வீரதீரச் செயல்களைப் பெரிதாகச் சுட்டி அதனால் தனிமனித வழிபாட்டில் பாலுணர்வு மோகத்தில் கட்டுப்பாடற்ற வாழ்க்கைக் கவர்ச்சியில் மனிதனை ஈடுபடுத்தும் ஒரு சில தீய முயற்சிகளுக்கு எதிர்முயற்சிதான் இத்தகைய சமுதாய உணர்வுள்ள நாவல்களின் தோற்றம். இவற்றின் எண்ணிக்கை வெளியீட்டுலகில் மிகக் குறைவாக இருப்பினும் இவைபோன்ற மனித நலம்நாடும் நாவல்கள் தங்களுக்கென அமைந்த இயற்கைக் கலைநய அழகுடன் எதிர்காலத்தில் தனி இடம்பெற்று விளங்கும் எனலாம்.

பொதுவாகக் காணும்போது எண்பதில் வெளியான தமிழ் நாவல்களில் வணிக நோக்கோடு பாலுணர்வுக்குத் தீனிதரும் சிற்றின நாவல்கள் பல்வேறு வடிவில் வெளிவந்துள்ளன. இவற்றின் வாழ்வும் வெகு குறுகிய கால அளவில் முடிந்துவிடும். ஆயினும் உண்மையான மனித நல விருப்போடும் கலை அழகு கொழிக்கவும் எழுந்துள்ள ஒரு சில நாவல்கள் எதிர்கால நாவல் வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடம்பெறும் தகுதி பெற்றுள்ளன. மேலேகண்ட பொதுமைக்கருத்திற்குச் சான்றாக விளங்கும் வகையில் ஒரு சில நாவல்கள் பற்றிய விளக்கங்கள் கீழே தரப்படும். இவை முற்றமுடிந்த பட்டியலன்று. ஒருசில எடுத்துக்காட்டுகளே. பல விடுபட்டிருத்தலும்கூடும்.

II

பொதுவாகத் திங்கள் வெளியீடாக வெளிவரும் வெளியீடு களில் திகிலூட்டும் கதைகள் கொலை களவு ஏமாற்றுப் போன்ற பல இருள் செயல்களின் அடிப்படையில் எழுகின்றன. சுருக்கமாகக் கதைபடிப்பதிலும் எளிய உணர்ச்சிகளுக்குத் தீனியாக விளங்கு வதிலும், உண்மையான சிந்தனை வளர்வதற்குத் தடையாக அமைவதிலும் இவை சிறப்பிடம் பெற்றுள்ளன. எளியநடை, விறுவிறுப்பான கதை ஓட்டம், பச்சையான விளக்கங்கள் போன்றவை பெரும்பாலான இத்தகைய நாவல்களின் வலிமையாக விளங்குகின்றன.

கூப்பிடுங்கள் வருகிறேன்[1] என்ற நாவலில் தெலுங்கு கன்னடம் போன்ற பல மொழிகள் பேசும் மக்கள் வருகின்றனர்.

அதனால் உரையாடல் அந்த அந்த மொழித்தொடர்களும் அவற்றின் அருகில் பொருளும் கொடுக்கப்பட்டுள்ளது. சில இடங்களில் ஆசிரியர் அதன் பொருள் தனக்கும் தெரியாது எனக் குறிப்பிடுவதும் உண்டு. நல்லவன் போல வேடமிட்ட இளைஞன் கொலைகாரன் ஆகிறான். கதையைப் பல பகுதியாகத் துண்டு செய்து இணைக்கின்ற முறை காணப்பெறுகிறது. இம்முறையில் படிப்போர் முன்பின் கதையை அறிந்து படித்தால் மட்டுமே கதையை அறிய இயலும். இதற்கெனத் தனிக் கவனம் செலுத்த வேண்டும். கொலைகாரனின் தம்பி அவனை அடையாளம் கண்டு துரத்தும்போது அவன் மாடியிலிருந்து வீழ்ந்து இறப்பதன் வாயிலாகக் கொடியவனுக்குரிய தண்டனையுடன் கதை முடிகிறது. தொடர்கதையாக வெளிவந்தபின் நாவல் வடிவில் வெளிவருகிறது. இதே ஆசிரியர் எழுதிய **இரவல் உறவுகள்**[2] என்பது பிள்ளையில்லாதவர்கள் ஒரு பையனை எடுத்து வளர்க்கும் போது ஏற்படும் சிக்கலைக் காட்டுகிறது. புதிய சூழலிலிருந்து தப்பிப் பழைய சூழ்நிலைக்கே தப்ப எண்ணித் தன்னையே திருடனாக்கிக் கொள்ளும் ஒரு அபலைச்சிறுவனின் வாழ்க்கையை வெளிப்படுத்தும். ஏராளமான திருப்பங்கள் இதில் வந்துவந்து செல்லும். அதன் விளைவு என்ன நடக்குமோ என்ற திகைப்பை மூட்டும். ஆயின் முடிவு அவற்றின் எதிரிடையாக முடிந்து விடுகிறது.

பணக்காரப் பெண்களை ஏமாற்றும் சாமியார்களின் கதையைப் புதிய பின்னணியில் மர்மச் சூழல்களைப் பின்னவிட்டு விட்டுக் கதையை வளர்த்துச் செல்கிறது **வசந்தா வசந்தானந்தா**.[3] மாற்றுவேடத்தின் சிக்கல் கதையின் போக்கிற்குப் பெருந்துணை செய்கிறது. துப்பறியும் சிங் செய்யும் தீரச்செயல்கள் கதைச் சிக்கல்களை அவிழ்க்க உதவுகின்றன. வாழ்வின் பல்வேறு சிக்கல்களில் சிக்கிச் சினிமாவில் சீரழிந்து கடைசியாகச் சாமியாராகிச் சின்னப்பட்டத்திற்குச் செல்லும் கதையை வலம்புரிஜான் படைத்துள்ளார்[4].

தென்னாப்பிரிக்காவில் வாழும் தமிழ்க் குடும்பம் ஒன்று டர்பன் குளிரில் நடுங்குவது போன்றே ரோஜாவைரம் என்ற வைரத்தை விற்கும் செயலில் ஈடுபட்டு முரடர்களின் அச்சுறுத்தலுக்கு இடமாகி நடுங்குவதை லோகநாதன் யசோதா குடும்பத்தைக் கொண்டு காட்ட முயல்கிறது லக்ஷ்மியின் படைப்பு[5] குடும்பச்சூழலில் விருந்து அந்நாட்டிலே எவ்வாறு தயார்செய்யப்படுகிறது அங்குள்ள ஆப்பிரிக்க வேலைக்காரர்களின்

நிலை ஜபுலானா போன்றவர்களால் எப்படித் தெரிகிறது அங்குள்ள இந்தியர்களின் உண்மை நிலை என்ன என்பவை பற்றி அறிய ரோஜாவைரம் மையமாக அமைகிறது. ஒரு பெண் தன் கணவன் துன்பத்திலிருந்து எப்போது மீள்வான் என அஞ்சும் அச்சத்தைப் பெருக்குவனவாக உள்ளன கதையில் காணும் திடுக்கிடும் செயல்களும் அந்நாட்டு முரட்டு மனிதர்களின் பேச்சுக்களும். போதைப் பொருள்களையும் அழகிய பெண்களையும் கடத்தும்போது நடைபெறும் அச்சமூட்டும் நிகழ்ச்சிகளை ஆங்காங்கே கடல் பின்னணியில் காட்டுவது ராகினி ஒரு ஹிப்பி நீ[6]. பாஸ்கரன், பாலா, ராகினி என்ற மூவரின் வாழ்க்கையை புபேஷ் எப்படிச் சூதுக்காயாகப் பயன்படுத்துகிறான் என்பதை அறிவதும் அவன் பெண்களை வணிகத்திற்குரிய விலைச்சரக்காக மாற்றி எவ்வாறு தன்னின்பம் காண்கிறான் என்பதையும் சூடேறும் வகையில் சொல்லிச் செல்கிறது.

கடலில் மூழ்கிய கப்பலிலுள்ள பொருள்களை மீட்டு எடுக்கும் புதையல் வேட்டையில் மேலைநாட்டவரும் கீழைநாட்டவரும் படும் பாட்டை மிக வேகமாகச் சொல்லிச் செல்லுவது கடலுக்குள் ஜூலி[7]. ஃபார்ஸைத், ஹெய்லி, மக்லீன், வாலஸ் போன்றவர்கள் எழுதும் கதையில் ஏராளமான ஆராய்ச்சிக் குறிப்புகளைப் பயன்படுத்துவது போன்று பல குறிப்புகளைப் பயன்படுத்தியுள்ளார். கப்பலின் மாலுமி எழுதிய குறிப்பு இடையிடையே தரப்படுவதால் 1840களில் படிப்போர் மனம் உலாவ வாய்ப்புக் கிடைக்கிறது. இவ்வாறு பழைய கதையும் பழைய பழைய கதையும் காணும்போதே மனிதமனம் புதையல் காண எப்படி வெறியாய் அலைகிறது என்பதை நன்கு இந்நாவல் இறுதியில் கப்பல் பொருள் யார்க்கும் கிடைக்காமல் கடற்பள்ளத்தில் வீழுமாறு வெடிவைத்த முடிவில் முடிகிறது.

III

தனி மனிதச் சிக்கல்களைப் பல்வேறு சூழல்களில் காட்ட முயன்றுள்ளனர். பிராமணர் குடும்பத்தில் பிறந்த வெங்கிட்டுவின் பல்வேறுபட்ட துன்பங்களைக் காட்டுவதில் விட்டல்ராவின் நூறல்[8] தனியிடம் பெறுகிறது. சங்கரி மாமி சொன்னதாக உள்ள இக்கதை ஆசிரியர்க்கு முற்றிலும் அன்னியமாகப் படாததால் இது நாவல் வடிவம் பெற்றுள்ளது. அப்பளம் உருட்டும் வாழ்க்கையாக அம்மாவின் வாழ்க்கை அமைகிறது. மகனோ எங்கெங்கோ ஓடி ஓடி வாழப் பார்க்கிறான். ‘காபி கிளப்’

முதல் 'கோர்ட்' வரை எத்தனையோ இடங்களில் நுழைகிறான். சொந்தக்காரர்கள் எட்டி உதைக்கும்போது அவற்றையெல்லாம் வடுவாக்கிக் கொள்கிறான். 'காண்டீன் வேலை செய்யும்போது தானும் மணம் செய்து கொண்டால் என்ன என்று எண்ணிப் பார்க்கிறான். அவன் கண்ட 'தூற'லில் 'ஒரே ஜாதியானை வேறு ஜாதியான் கெடுப்பதைவிட அந்த ஜாதியானே கெடுத்து விடுவான்' என்பதுதான். அவன் அத்திப்பூ பூக்கும்போது பார்க்க ஆசைப் பட்டான். அதுபோல் அவனும் புலப்படா எதிர்காலத்தில் புது உண்மை கிடைக்கும் என்ற நம்பிக்கையில் போய்க் கொண்டிருந்தான்.

வேலையிலிருக்கும் தனிமனிதன் தங்கமணி. அவன் தன் சொந்த அத்தைமகள் சில்லாவை மணக்க நினைத்தான். மோட்டார் பணிமனையில் அவன்பட்ட அழுக்குகள் புற அழுக்குகள். ஆனால் அதுவே சில்லாவிடமிருந்து பிரிக்கிறது. அவளோ வணிகச் சரக்காகிக் காரிலே பவனிருவம் கன்னியாகிறாள். அவன் 'அழுக்குப்புடிச்சவனா'க அவளால் ஒதுக்கப் படும்போது அழுக்கு என்பது எது என்ற சிக்கலான கேள்விக்குத் தெளிவான விடையாக அவன் வாழ்வு அமைகிறது.[9]

அழுக்குப்படாத வேலையில் அலுவலகப் பணியிலிருப்பவன் ரகுநாதன். அவன் வெளிநாட்டுத் தூது அலுவலகம் நடத்திய ஓவியக்காட்சிக்கு உதவியதாகத் தற்காலிகமாகப் பணியிலிருந்து நிறுத்தப்படும்போது, அவன் படும் புற அலைவுகள் சென்னையின் புண்களைக் காட்டுகிறது. வேலை எப்படிப் பெறுவது என எண்ணி நலியும்போது அவன் அகத்தின் புண்களைக் காட்டுகிறது அசோகமித்திரனின் **ஆகாயத் தாமரை**[10]. கைரேகைக்காரன், லிப்ட்காரன், சாதாரண எடுபிடி ஆள் இப்படி எல்லோரும் அவனை கடித்துக் குதறுகின்றனர். கிளப்பில் கண்ட ராஜப்பா பழைய தோழி மாலதி ஆகியோர் பரிவும் பரிவற்ற போக்கும் அவனை அலைக்கழித்து ஆட்டுகின்றன. ஆயின் ராஜப்பாவின் பரிவுரை அவனுக்கு அலுவலகத்தில் புதிய நிலையையும் உயர்வையும் கொடுக்கும்போது தனிமனித வாழ்க்கை ஆகாயத்தாமரை போல் பாசி வாழ்வாகப் பற்றிக்கொள்ள ஒரு பெரிய மதில் வேண்டிய வாழ்வாக இன்றமைந்திருப்பதை நன்கு வெளிப்படுத்துகிறது

கல்லூரியில் பயில்பவன் ராமசேஷன். அவன்பெறும் பாலனுபவங்களை நேரோட்டமாகச் சொல்விச் செல்கிறது ஆதவனின்

என் பெயர் ராமசேஷன். இருபது வயதிலே அவன் மாலா,[11] பிரேமா ஆகியோர்க்கு அல்சேஷனாகவும் யந்திரமாகவும் பயன் படும்போது அவன்படும் தனிமனிதத் துன்பங்கள் தனித்தன்மை பெற்றவை. மங்களம் மாமியுடன் உறவுபூண்டு அவன் காணும் தனித்த இன்பங்கள் பாலுணர்வுச் சிக்கல்களில் சிக்கிய பறவையின் துடிப்பாக வெளிப்படுகின்றது.

வெளிநாடு சென்ற இந்தியர்கள் நாட்டுப்பற்றுத் தூண்ட இந்தியா வந்தால் எத்தகைய நிலை ஏற்படும் என்பதை இந்திரா பார்த்தசாரதியின் மாயமான் வேட்டை [12] விளக்கும். அமெரிக் காவில் ஹாவார்ட் பல்கலைக் கழக வேலையை விட்டு இந்தியா வந்த ஜெயராமனை அவன் தங்கை நளினியோ அவள் தோழி சுரேகாவோ வரவேற்கும்போது அவன் செயலை ஏற்கவில்லை. அவனோ இந்திய அரசியல் சூழலில் தான் 'பின்குரலா'கச் செயல் படுவதை உணர்ந்து எதிர்க்கட்சியில் முதலில் சேர்கிறான். ஆளும் கட்சியின் அரவணைப்புப் பெற்று அமைச்சரவையிலும் அவன் தனி யிடம் பெறும்போது நாட்டு நலம் கரையத் தன்னலமே தனியிடம் பெறுவதை உணர்கிறான். சுரேகாவின் கட்டற்ற உறவில் ஓரளவில் அமைதிபெற்றாலும் தன் மாயமான் வேட்டையில் தான் மட்டுமே அரசியல் பலிபீடத்தில் பலியாக இருப்பதை உணர்ந்து அந்த வேட்டையைக் கைவிட்டு மறுபடியும் அமெரிக்காவையே புகலிடமாக அடையும் தனிமனித அவலத்தைக் காட்டும் நாவல் இது இருப்பியல் கொள்கை சில ஆங்காங்கே பேசப்படுகிறது.

வெளிநாட்டுக்குச் சென்ற அறிஞனின் நிலை இப்படி என்றால் இங்கு வாழ நினைக்கும் எழுத்தாளன் விதிதனின் நிலையும் முதலில் ஏமாற்றமே நிறைந்து நிற்கிறது. போலிகளின் இடையே அவன் சிக்கித்தவித்து மறைந்த பின் அவன் தகுதியை உணர்ந்த அரசு அவனுக்கு விழா எடுக்கிறது. செத்தபின் சிலை எடுக்கும் கோலத்தைக் காட்டித் தனிமனிதன் படும் துன்பத்தை அவனைச் சார்ந்தோர் உணர்ந்து வெளிப்படுத்துமாறு அமைகிறது விதிதன் என்ற நாவல்.[13]

தனிமனிதன் வேலை தேடியும் வேலையிலிருக்கும்போதே படும் வேதனையும் இருந்த வேலையை விட்டுத் தாயகத்தில் வேலை செய்ய வந்தவனின் தவிப்பும் கல்லூரியில் பயிலும் மாணவனின் பிறழ்நிலை வாழ்வின் சிக்கலும் இத்தகைய நாவல்களின் ஊடு பொருளாக விளங்குகின்றன.

IV

தமிழ் நாவல் தோன்றிய காலத்திலிருந்து பெண்படும் பாட்டை மிகவும் உருக்கமாகக் காட்டி வருவது **கமலாம்பாள் சரித்திரம்** காட்டும் பாதை. இக்காலச் சமுதாயத்திற்கு ஏற்பத் தமிழ் நாவல்கள் பெண்களைத் தெய்வமாகக் காட்டவில்லை. சிலர் உடைந்த சிலைகளாகக் காட்டுகின்றனர். சிலர் வீழ்ந்த சிலையை எடுத்து நிலைநாட்ட முயல்கின்றனர். இப்படிப் பல முயற்சிகள் நாவல்களில் காணப் பெறுகின்றன. பெண்ணின் ஆசைகள் பலப்பல. அவள் விரும்புகின்ற வண்ணமே வாழ இச் சமுதாயம் அவளை ஏற்பதில்லை. ஆனால் அவளோ தன் நல்லியல்புகளைக் காப்பாற்ற நடத்தும் போராட்டங்களைக் கர்ணனின் படைப்பு[14] விளக்கும்.

பெற்றோர்கள் பெண்களை வளர்க்கும் போது அவர்கள் உள்ளத்தில் யார் அவர்களுடைய கணவன் என்பதைச் சிறு குழந்தையாக இருக்கும்போதே விதைத்துவிடுகின்றனர். அது வளரும் பருவத்திலே எண்ணிப்பார்க்க முடியாத சிக்கலை ஏற்படுத்துகிறது. இதனை ஆர். சூடாமணியின் **கண்ணம்மா என் சகோதரி**[15] காட்டும். மணிவண்ணன் தமயந்தியை மணக்க நினைக்கிறான். அவனைக் கண்ணம்மாவோ சிறுகுழந்தை முதல் கணவனாக எண்ணி அதிலேயே மூழ்கி விடுகிறாள். தன் எண்ணம் நிறைவேறாதபோது மன நோயாளி ஆகிறாள். அச்சம் அவள் வாழ்வைக் கலக்குகிறது. ஓரளவு குணமானபின் குழந்தை அன்பிலே தன்னை ஈடுபடுத்திக் கொள்கிறாள். எனினும் அவள் அடிமனம் பழைய எண்ணச்சுழல்களிலே சிக்கிப் பலருடைய வாழ்விலும் துன்பத்தைக் கொட்டித்தீர்க்கிறது. இவ்வாறு பிறழ்வான இளமை வளர்ப்பு, பெண்ணின் மனத்தை நோய்வாய்ப்படச் செய்வதை நன்கு வெளிப்படுத்துகிறது இந்நாவல்.

அகத்திலே நோய்வாய்ப்படுவதுபோன்று புறத்திலே நோய்வாய்ப்பட்ட பிறர் வெறுக்கின்ற வெண்குஷ்டம் என்ற வெண் புள்ளிகள் பட்ட புள்ளிமானாகப் புஷ்பா படும் வேதனையைக் காட்டுவதில் சிவசங்கரியின் நாவல்[16] பெண்மன வேதனையை நன்குபுலப்படுத்துகிறது. காதலித்தவன் கைவிடுகிறான். மருந்துக்கென்றே தன் வருமானத்தை வற்றடிக்கும் நிலை குடும்பத்தை மேலும் துன்பத்துள் ஆழ்த்துகிறது. எனினும் தன் சேமிப்பை மனிதப்பற்றுடன் மாற்றார் வாழ உதவும்போது அவள் பெண்மை நலம் சிரிக்கிறது.

இதுபோன்றே தன்னைத்தானே சில தாழ்வுணர்வுகளில் ஆழ்த்திக்கொள்ளும் வித்யா மலர்களின் அழகையோ மணத்தையோ நுகர மனம் படைக்காமல் முட்களின் வேதனையை மட்டுமேஎண்ணிப் பார்த்து நடுங்கும் வாழ்க்கையை மற்றொரு பார்வையில் கோமகள்[17] தருகிறார்

சுருக்கெழுத்தாளராக வேலைதேடிவந்த சுகுணா எழுத்தாளர் சுமித்திரனின் ஆளுமையில் தன்னை மறக்கும் நிலையில் அவனது புறக்கணிப்பு அவளைப் புதியபாதைக்குத் திருப்பி அவளையும் ஓர் எழுத்தாளராக மாற்றுகிறது. சாகித்ய அகாதெமி பரிசு பெறும் அளவுக்கு வளர்கிறாள். பண்பாட்டுக்குழலில் வெளி நாடு செல்லும் வாய்ப்பையும் தன் முயற்சியால் சுகுணா பெறுகிறாள். அவள் படும்பாட்டைச் சாவித் துவாரங்கள்[18] கூறும். பெண்கள் திருமணத்தில் எத்தனையோ சிக்கல்கள் எழுந்து அவர்கள் வாழ்க்கையைக் குலைப்பதை லட்சுமி ராஜரத்தினத்தின் உனக்காக மட்டும்[19] என்பது கூறும்,

கல்யாணி ராகம் பாடிய வண்ணமே அறிமுகமாகும் அகிலா படும் துன்பங்களைச் சிவசங்கரி சித்தரிக்கிறார்.[20] அவள் சிரித்தால் சற்றே தூக்கலாகத்தெரியும் முன்னிரண்டு பற்கள். அவள் வாழ்ந்த வறுமை வாழ்வு அவளை நோய்வாய்ப்பட்டுக் கிடக்கும் பணக்கார ஸ்ரீதரனுக்கு வாழ்க்கைப்படுத்துகின்றது. அவளோ பணம்படைத்த வீட்டில் புகுந்தும் பிறந்த வீட்டுக்கு உதவ முடியாத நிலை. மாமியார் கொடுமையை மாமனார் அன்புநிழல் மறைத்தாலும் அந்த நிழல் உடனடியாக மறையும்போது அவள் துன்பம் பெருகுகிறது. உடல்நலம் பெற்ற கணவன் நடக்க ஆரம்பித்ததும் மனைவியைத் தவிர மற்றவற்றை எல்லாம் கவனிக்கத் தொடங்கினான். எல்லாவிதத்திலும் அவள் தனிமைப் படுத்தப்பட்டு மன நோயாளி ஆகும்போது அவளுடைய கணவனின் தம்பி ஹரி மட்டும் அவள் மீது கொண்ட உண்மையான அன்பால் இங்கிலாந்திலிருந்துதிரும்பி வந்து மன்னியை மருத்துவ மனையில் சேர்க்கிறான். அவள் பயம் மெள்ள மெள்ள அகலவும் புதிய வாழ்வு கணவனுடன் பெற முடியும் என்ற நம்பிக்கையில் கால் வைக்கவும் வழி ஏற்படுகிறது. ஏழைப்பெண்ணின் தனிமைக் கொடுமையை இந்நாவல் வடித்துக் காட்டுகிறது.

வறுமை பெண்களின் ஒழுக்கத்தைச் சூறையாடுகிறது என்பதை நீலாவின் சேலத்து வாழ்க்கையைக் கொண்டு மகரிஷியின் புதிய அர்த்தங்கள்[21] விளக்குகின்றது. சந்தர்ப்ப வசத்தால்

இருண்ட வீட்டில் சிக்கிய அவளைக் காதலன் இரவீந்தரன் கைவிடு கிறான். இருட்டுவாழ்விலிருந்த சாரதா நீலாவின் வாழ்வுயர வேண்டிய உதவிசெய்து சென்னையில் புதிய அலுவலகத்தில் பணியில் அமர்த்துகிறாள். அங்கு உடல் ஊனமுற்ற தலைவன் அருணனின் அன்பைப்பெற்ற நீலா மறுபடியும் பல சிக்கல்களுக்கு ஆட்பட்டு இறுதியில் அருணனை அடைகிறாள். புதிய மாற்றங்களை ஏற்கும்போது புதிய உண்மைகளையும் புதிய பொருள்களையும் உணரும்வேளை வந்துவிட்டதை உணர வேண்டும் என்பதை அபலைப் பெண்களின் புறவாழ்வைக் கொண்டு உணர்த்தும் இந்த நாவல்.

பழைய நடைமுறையில் மாறி புதிய நடைமுறையில் இந்து மதியின் **மணல் வீடுகள்** அமைந்துள்ளது.[22] ஒரு மனைவி தனக்குக் குழந்தை பிறக்காது என்பதை உணர்ந்தபின் வேறெருத்தியைக் கொண்டு தன் கணவனால் ஒரு பிள்ளையைப் பெற வேண்டும் என்று ஆசைப்படும் புவனா ஒரு மனநோயாளி. சஸி என்ற பெண்ணைத் தன் கணவனுடன் சேர்த்துத் தன் மனநிறைவடை கிறாள் ஆயினும் தன் கணவன் சஸியிடம் அன்புபாராட்டக் கூடாது என அடக்குகிறாள். அவனோ சஸியை உண்மையில் விரும் பினாலும் மனைவிக்கடங்கிய மரமாகிறான். கிருபாகரன் சஸி என்பவர்கள் புவனாவின் மனநோயின் கையில் பட்ட பொம்மை களாக இயங்குகின்றனர். இக்கதை நிழலன்று. உண்மை என ஆசிரியர் கூறும்போது இன்றைய நிலையில் குடும்பம், பெண்டிர், மண உறவு போன்றவற்றில் புகுந்துள்ள மாறுபட்ட நடைமுறை களின் தலைஎடுப்பைப் பார்க்க முடிகிறது.

போதை மருந்துண்ணுதற்கு ஆட்பட்ட பெண் வனிதா படும் துன்பங்களை காட்மண்டுச் சூழலில் மிக உருக்கமாகக் காட்டுகிறது **மயக்கங்களும் சிலந்திக் கூடுகளும்.**[23] மனித அன்புக்கு ஆட்பட்ட மருத்துவர், போதைப்பொருள்களை விற்பதற்காகவே மனித அன்பைத் துறந்த விலங்குகள் இவ்விரண்டு பிடிகளிலும் சிக்கிய வனிதா இறுதியில் ஒளியின் களத்திற்கு வந்து உய்வதை வாஸந்தி செறிவாகக் காட்டிச் செல்கிறார். மயக்க மருந்துகள் பற்றிய பல செய்திகளை ஆங்காங்கே கூறுகிறார்.

விமலா போதைப்பொருளுக்கு ஆட்பட்டதுபோலவே வீணா ஓவியக்கலைக்கு அடிமை ஆகிப்புகழ்ப் போதைக்குப் பலியாகிறாள். வெளிநாடு சென்று பிரஞ்சுக் கலையில் மூழ்கித் தன் கணவர் வேதா

மகள் ஆகியோரையும் அச்சூழலில் ஒதுக்குகிறாள். குடும்பப்பற்றா ஓவிய மயக்கமா என்ற சிக்கலில் சிக்கிக் கடைசியில் அந்த மாயத் தாகத்திற்கே பலியாகும் அவலத்தை உஷா சுப்பிரமணியத்தின் எத்தனை மணம் எத்தனை நிறம்[24] உரைக்கிறது.

வயதான கவுண்டரின் ஆசைக்குப்பட்ட வள்ளி தன் மனத்தை இளைஞன் தியாகுவிடம் பறிகொடுத்து ஓடிப்போக நினைத்து மறுபடியும் கவுண்டரையே வந்தடையும் அலையும் பெண்மனத்தை மணியனின் நடுவில் எழுந்த சுவர்[25] காட்டும்.

பெண்கள் நிலையைப் போற்றிப் புகழ்ந்த காலம் மாறி விட்டது. அவர்கள்படும் வேதனையை வெளிப்படுத்துவது மட்டு மன்றி மாறிவரும் காலநிலையில் உள்ள உண்மைப்போக்குகளையும் உணர்த்தும் நெறியில் இக்கால நாவல்கள் வெளிவந்துள்ளன.

V

சிறுவர்க்கெனச் சிறு நாவல்கள் எழுதும் முயற்சி தமிழில் பெரிதும் வளரவில்லை. இந்நிலையில் ஆலந்தூர் மோகனரங்கனின் கோணமலை கோவிந்தன் சொக்குப் பிடித்த கதை[26] என்ற வேடிக்கையான கதை வெளிவந்துள்ளது. பழைய காலத்தின் போக்கிலிருந்து ஒருவகையில் ஒட்டியும் மாறுபட்டும் செல்கிறது. உடல் வலிவா அறிவு வலிவா என்ற போட்டியில் அறிவு உடல் வலிவை வெல்கிறது என்பதைக் கூறும்போது கோவிந்தன் என்ற பல சாலி நல்லவன் என்ற சிறுவனின் அறிவுக்கூர்மை முன் தோல்வி அடைவதை மிக எளிய நடையில் கூறிச் செல்கிறது. முடியாத செயலை முடியும் என்று கூறும்போது அதை நிலைநாட்டப் பொய் வருவதும் அந்நிலையை உண்மை வெல்லும் என்பதையும் உணர்த்த இவ்வாசிரியர் முயன்றுள்ளார்.

கல்லூரி மாணவர்களின் வாழ்க்கை இன்று சமுதாயத்தில் ஒரு கொந்தளிக்கும் நிலையாகப்படுகிறது. வெந்தசோறாக வந்த மாணவர்கள் 'நொந்தசோறா'க மாறும் நிலையை ஒளிவு மறை வின்றித் துரைப்பாண்டியனின் நாவல் புலப்படுத்துகிறது.[27] பிள்ளைகளைக் கல்லூரிக்கு அனுப்பிவிட்டுப் பொருளாதாரச் சிக்கலில் சிக்கி மயங்கும் பெற்றோர்களும் படிக்கச் சென்ற நோக்கத்தை மறந்துவிட்டுக் குடி, சீட்டு, அரசியல் போன்றவற்றில் உழன்று தடுமாறும் மாணவர்களும் எப்படி இந்தச் சிக்கலை அவிழ்த்து நல்ல சூழலை நிலைநாட்டுவது என எண்ணிப் பார்க்கும்

அரசும் பற்றி ஒரு முடிசோணா முடிச்சாகக் காட்டுகிறது. இன்றைய கல்லூரி வாழ்வினை வெளிப்படுத்த ஆசிரியரின் பட்டறிவு முனைந்துள்ளது.

VI

திரைப்படங்களாகச் சில கதைகள் வெளிவந்து செல்வாக்குப் பெற்று நிற்கின்றன. அவை சில எழுத்தாளர்களின் சிந்தனையைக் கிளறிவிட்டு அக்கதையையே மேலும் தொடர்ந்து புதுவடிவம் தர வழி செய்கின்றன. அத்தகைய நிலையில் ஸ்ரீதரின் 'கல்யாணப் பரிசி'னைப் பார்த்த தஞ்சை செல்வன் முன்னவரின் ஒப்புதல் பெற்று **வாழி நீ வசந்தி**[28] என்ற நாவலை எழுதியுள்ளார். கல்யாணப்பரிசின் தலைமகன் பாஸ்கர் வாழ்வதற்குப் பம்பாய் சென்று அங்கு விமலாவின் காதலுக்குக் களமாகிறான். எளிதில் ஒப்புதல் தராத பாஸ்கர் மணம்புரிய முடியாதபடி விமலா கொலையுண்டிறக்கிறாள். அவள் குழந்தை சரோவும் பாஸ்கர் முன்னர்க் காதலித்த வசந்தியின் மகன் ராஜாவும் மணம் செய்யும் நிலையில் பாஸ்கர் இறக்கிறான். இப்படித் திடீர்த் திருப்பங்களைத் திரைப் பட உத்திக்கு ஏற்பக் கையாண்டு நாவல் எழுதியுள்ளார்.

திரைப்பட வாழ்க்கையை நாடிச் செல்லும் ரங்கம்மாள் ரம்பாவாகமாறிப் புகழ்பெற்று மின்னும்போது கணவனைப் புறக்கணிக்கும் நிலை ஏற்படுவதைக் காட்டமுயல்கிறது மற்றொரு நாவல் ஆனால் அவளே தவற இருந்தபோது திருந்தி மறுபடியும் கணவனிடமே வந்து சேர்ந்து குடும்பப்பெண்ணாக மாறுவதைக் காட்டுவது ஒருபுறம் எனில் மற்றொரு புறத்தே மாலா என்ற பெண் நடிக்கும்போது முதலாளி மகனின் உள்ளத்தை அறிந்து அதற்கு இடந்தராமல் மறுபடியும் தன்னூர் சென்று தன் அக்காளை இழந்து தவிக்கும் அத்தானுக்கு இரண்டாந்தாரமாகி அவர்கள் பிள்ளைக்குத் தாயாகும் தியாகத்தைக் கூறமுயலும் பகுதியைச் சேர்த்துப் **புதிய நெஞ்சம புதிய உணர்ச்சி**[29] காட்டும்.

இத்தகைய நிலைக்குமாறாக **நடிகை** என்ற பி.சி. கணேசனின் நாவல்[30] திரைப்பட வாழ்க்கையின் இருண்ட பகுதியை நன்கு காட்டிவிடுகிறது. ரோகிணி என்ற பெண் பாவமன்னிப்புக் கேட்கப் பாதிரியாரிடம் சென்று பாவம்செய்ய முதன்முதல் பழக்கப்பட்டுப் பின் உண்மையான காதலைக் குமரேசன் எனும் அரசியல்வாதியின் கணப்பொழுது காலத்தில் உணர்கிறாள். காவல் சட்டத்துறையின் காவலர்கள் அவளுடைய அழகினைச் சுவைக்கின்றனர். பண முடையார் கலை நுணுக்கர்கள் அவளைப் பெரிய நடிகை ஆக்கு-

கின்றனர். வயதான நாட்டிய ஆசிரியரும் அவள் உடலில் பதம் பாடுகிறார். இப்படிப் பல இழிந்த அனுபவங்களைப் பெற்று நீதிபதி சோமசேகரின் ஓவியக்கலையின் உண்மையையும் அவருடைய அந்தரங்க வாழ்க்கையையும் அறிகிறாள். இறுதியில் நீதிபதி மகள் துணைநடிகையாக இருப்பதை அறிந்து சேர்க்கவும் அவர் மகன்தான் குமரேசன் என்ற மோகன் என்பதை உணர்த்தவும் பிரிந்த குடும்பங்களை ஒன்று சேர்த்து உறவு காணவும் கருவியாகிறாள். டைரக்டர் பிரேமுடன் மணவாழ்வு நடத்திப் பிள்ளைப் பேற்றிற்கு ஸ்விட்சர்லாந்து போகும்போது தன் வாழ்வை உலகறியச் செய்யுமாறு எழுத்தாளனிடம் கூறி அதற்குவேண்டிய செய்திகளை அளித்துச் செல்கிறாள். இத்தகைய திரைப்பட வாழ்வின் குறுக்குவெட்டு அதன் உண்மை அறிவைப் பெற வழி செய்கிறது.

## VII

இவ்வாறு தனிப்பட்டவர்களின் நிலையிலிருந்து ஒன்றுகூடி வாழும் வாழ்க்கையில் மக்கள்படும் வேதனையைப் பல நாவல்கள் கூறுகின்றன. வாழ்வில் துன்பப்படுவோர்க்கு உதவும்போது அதன் நல்ல நோக்கத்தைப் புரிந்துகொள்ளாத பிறர்போக்கால் வாழ்வே ஒரு வாழ்க்கையாக அமையாமல் வந்துவிடும் விடுதி வாழ்க்கையாக அமைவதை வில்லவனின் போராடும் உள்ளங்கள் காட்டும். உண்மை ஒருநாள் வெளிப்படும். அப்போது மக்கள் தம் குறை உணர்ந்து திருந்துவர் என்பதற்குச் சான்றாக ராஜன், பத்மினி, கல்பனா ஆகியோர் வாழ்வின் முக்கோணம் காட்டும்படியாகக் கதைநடந்து செல்கிறது. திடுமென நேரும் திருப்பங்கள் நம்புதற்கு இயலாதவையாக அமைந்தாலும் ராஜன் படும் வேதனைகள் அவற்றைப் பெருக்கிக்காட்ட உதவுகின்றன. குடும்ப வாழ்வில் கொள்ளும் ஐயம் எத்தகைய தீமையைத்தரும் என்பதை இது நன்குணர்த்தும்.

குடும்பவாழ்வில் உழைப்பு ஓர் உயரியஇடம்பெறும் அதனைத் தமிழ் நாவலில் ஒன்று உணர்த்தும். வானொலி நாடக வடிவிலிருந்து இது வடிவம் பெற்றது. குலசேகரனின் ஏழைமை சாபமல்ல[32] என்ற இந்த நாவல் பிறர் உழைப்பைத் திருடி வாழ்வது எப்போதும் நன்மைதராது என்ற கொள்கையை உறுதிப்படுத்தும் வகையில் குப்பத்து மக்களின் வாழ்க்கையைப் படைத்துத் தருகிறது. இருசம்மாள் என்ற பெண்ணின் வாயிலாக உழைப்பின் பெருமையை உணர்த்துகிறது பம்பாயின் பின்னணியில்

பரத்தையர் வாழ்வைக் காட்டிப் பெண்களின் துன்பத்தைப் படம் பிடித்துத் தந்துள்ளது திருமணம் (சொர்க்கத்தில்) நரகத்தில் நிச்சயிக்கப்படுகிறது என்ற நாவல்.[33] ஆண்களின் சபலமனத்தைக் காட்டும்போது பெண்கள் குடும்பப்பாங்கில் அதை ஏற்றுநடக்கும் மனத்தையும் கூறுகிறது. ஆனந்தன், முல்லை, மனோரஞ்சிதம் ஆகியோரின் வாழ்வைக்கொண்டு இல்வாழ்வின் இருவகை நிலையை உணர்த்துகிறது. குடும்பச்சண்டையில் மாமனின் கொடுமையில் பகைமை வளர்கிறது. ஆணின் கட்டுப்பாடற்ற வாழ்வில் அளவற்ற பிள்ளைகளும் வறுமையும் பெருகுகின்றது. எனினும் இறுதியில் அன்புள்ளங்கள் ஒன்று சேர்வதை மென்மையாகச் சுட்டிக்காட்டும் ஜாதி மல்லிகை[34]. மேலைநாட்டுக் கலைகளும் கீழைநாட்டுக் கலைகளும் பண்பாட்டு அடிப்படையில் கலக்கும்போது குடும்பத்தின் ஆணிவேர் அசைவதற்கும் இடமுண்டு ஆண் பெண் பிரிவுக்கு வழிவகுக்கும் வாய்ப்புகளும் அமையும் ஆனால் ஆண் மனமும் பெண் மனமும் ஒன்றாக அன்புடை நெஞ்சமாகக் கலந்த வாழ்வே மக்கள் வாழ்தற்குரிய வாழ்வு எனக் காட்டும் நெஞ்சில் படியும் நிழல்கள்[35].

குடும்பப் பிரச்னையில் பெண்படும் வேதனைகளை 'ஊமைக் குயில்'[36] உணர்த்தும். குடும்பத்தில் உடல்உறவைவிட உள்ளத்தின் உறவே முதலிடம் பெறவேண்டும் என்ற லட்சியப்பெண் படும் துன்பங்களை வாழ்வே வா[37] காட்டும் மனோகர், ஷீலா, சியாம், திலீப் போன்றவர்கள் மஞ்சுளாவின் மனப்போராட்டத்தை உச்ச நிலைக்குக் கொண்டு செல்கின்றனர். இறுதியில் தாய்மை வெல்லும் நிலையை உணர்த்தும் ஆண்களின் வெறித்தனத்தில் பெண்கள்படும் துன்பத்தையும் தவறுசெய்த ஆண் தன் தப்பை வெளிப்படையாக ஒப்புக்கொள்ளத் தயங்கும் மனநிலையும் மலர் மன்னனின் அந்த உலகம் விந்தையானது[38] என்ற நாவல் காட்டும். காதலில் சந்தேகம் வந்தால் அது எத்தகைய துன்பங்களைத் தரும் என்பதை 'மோகனப் புன்னகை' கூறும் ராஜா, கலையரசி ஆகிய இருவரின் வாழ்க்கையில் மணிமொழியனார், கருணாகரன் ஆகியோர் செய்யும் பலவிதக் கொடுமைகள் எண்ணிப்பார்க்கத் தக்கவை. இறுதியில் எல்லாக் குழப்பங்களும் தீர்கின்றன. தீயவர் திருந்தினாலும் தண்டனையிலிருந்து தப்ப முடியாது என்பதை வெளிப்படுத்தும் பாரதியின் பாடல் ஒன்றால் கதையின் கருவினைப் பெற்றுக் கல்லூரி மாணவர்களின் காதல் வாழ்வைக் குடும்பப் பின்னணியில் நாடக வடிவந்தோயச் சந்திரன், முரளி, பூமதி, கற்புக்கரசி ஆகியோர் ஊடாட வளர்கிறது 'மலர்மதி'[39]

வேலையில்லாத் திண்டாட்டத்தால் குடும்பம் என்ன பாடுபடுகிறது என்பதை 'வேலைதேடும் விழிகள்'[40] மொழியும். காதலன் சுந்தரத் திற்கு வேலை கிடைக்காதபோது காதலி சுந்தரிக்குக் கிடைக் கிறது. பட்டண வாழ்வில் பல கொடுமைகள் தலைதூக்குகின்றன. நட்பின் துணையால் பல சிக்கல்கள் நீங்குகின்றன என்பதை இந் நாவல் நன்கு காட்டும். ஒருவகையில் வேலையற்ற நிலையைப் பற்றிச் சிந்திக்கத் தூண்டுவது இந்நூல். குடும்பப்பெண் சீதையைப் போன்றிருக்க வேண்டும் என்பதற்கு எடுத்துக் காட்டாகத் 'தெய்வம் பேசுவதில்லை' என்ற நாவலில்[41] வரும் ஜானகி சான்றாவாள். அவள் கணவர் சோணைமுத்து சேர்வை நேரான உள்ளத்தில் குடும்பம் நன்றாக வளர்கிறது. ஆயின் அவர் தம்பி முத்துராமன் அவன் மனைவி கல்பனா ஆகியோரின் தனிப் போக்கில் கூட்டுக்குடும்பம் ஆடத் தொடங்குவதை ராதா வீரண்ணன் நன்கு எடுத்துரைத்துள்ளார்.

அழகம்மாள் தன் கணவனைப் பிரிந்து மகன் பிரகாசத்தை வளர்த்து ஆளாக்குகிறாள். கணவன் ராமதுரை கலைஞன். ஆயினும் குடிப்பழக்கம் அவர்கள் வாழ்வைப் பிரிக்கிறது. இந் நிலையில் மகன் திருமணத்திற்குத் தன் அப்பாவை அழைக்கச் செல் கிறான். அவரைப் பற்றியிருந்த கருத்தெல்லாம் மாறுகிறது. திருமணத்திற்கு வந்திருந்த ராமதுரை தன் இசைச்செல்வத்தை மணமேடையெல்லாம் பரவச் செய்கிறார். இறுதியில் ராமதுரை தன்னிடத்திற்குத் திரும்பிப் போகிறேன் என்று சொல்லும்போது தடுக்கவோ மறுக்கவோ உரிமையற்ற நிலையில்மனைவி நிற்பதைக் காட்டுகிறது ஜெயகாந்தனின் 'காத்திருக்க ஒருத்தி'[42]

## VIII

நகரத்தார் வாழ்வின் நிலையை அனுராதா ரமணனின் 'சாதாரண மனிதர்கள்'[43] சுட்டுகிறது வயதான தந்தையின் கருணை உள்ளம் ஓர் இளம்பெண்ணிற்கு அடைக்கலம் தந்து வீட்டுக்கு அழைத்து வருகிறது. வந்தபோது மனைவி முதல் பலரும் எதிர்க்கின்றனர். புதிதாக வந்தவளோ தெலுங்குப்பெண், தமிழ்க் குடும்பத்தின் நடுவே தவிக்கிறாள். புதியவள் எங்கே தங்கள் செல்வத்தைக் கவர்ந்து கொள்வாளோ என்ற அச்சம் பிறர்க்கு. ஆனால் அப்பாவின் மறைவுக்குப் பின் மற்றவர்கள் மறுத்தாலும் அவருடைய மகன் அவள் துன்பத்தைத் துடைத்து முன்னிற்கும் போது சாதாரண மனிதர்களிலும் தனித்தன்மை வாய்ந்தவர் களிருப்பதுபுலனாகிறது.

பழைய வனத்தின் கேழ்[44] என்ற சி. ஆர். ரவீந்தரனின் நாவல் கொங்குநாட்டு மக்களின் வாழ்க்கையைப் பூவம்மாள் என்ற கிழவியைக் கொண்டு காட்டுகிறது. சாதிப்பழக்க வழக்கங்கள், ஒட்டி உறவாடும் உறவுநிலை, நிலத்தோடு கொண்ட பற்று, கடன் சுமை இவற்றை யெல்லாம் காட்டும்போது இறுதியில் நிலத்தை விற்கப் பழைய மனம் கொண்டவர்களால் பொறுக்க முடியாத நிலையும் பொருளாதாரச்சிக்கலில் இளைஞர்கள் துணையற்ற தனிவழியில் செல்வதையும் காட்டும்போது கொங்கு நாட்டுத் தனிமனம் வீசச் செய்கிறது.

பகுத்தறிவு,சுயமரியாதை இயக்கம் ஆகியவற்றைப் பின்னணியாகக் கொண்டு புனைந்த நாவல் பண்ணனின் தடைக்கல்.[45] இளைஞர்கள் சிற்றூர்களில் பகுத்தறிவு வளரப் பல்வேறு முயற்சிகள் செய்கின்றனர். ஆயினும் சிவக்கொழுந்து போன்றவர்கள் அதற்கு எதிராக வன்முறைச் செயல்களைத் தூண்டிவிட்டு அதற்கு அவர்களே இலக்காகின்றனர். ஆயினும் பெரியார்பாதையில் பகைவரையும் அணைத்துச் செல்லும் நல்வழியைக் காட்டுகிறான் செந்தில் இதில் கொங்குநாட்டு 'அண்ணன்மார் கதை, செல்லாண்டி அம்மன் பூசை போன்றவை பண்பாட்டுச் செல்வமாக வெளிப்படுகின்றன.

## IX

சாதிமத வேறுபாடுகள் இளம் உள்ளங்களை எப்படி எப்படிச் சித்திரவதை செய்கின்றன என்பதை டேவிட் சித்தையாவின் கல்லறைப்பூக்கள்[46] என்ற நாவல் நன்கு உள்ளத்தில் தைக்குமாறு செய்கிறது.

தமிழகத்தில் ஹரிஜனங்கள், நாடார், பிள்ளைமார் என்ற சாதி வேறுபாடு கிறித்துவ மதத்திலும் ஊடாடி இருக்கிறது என்பதை இந்நாவல் தொடக்கம் முதல் இறுதி வரை காட்டிச் செல்கிறது. ஹரிஜன் அருளப்பன் நாடார் கிருபா, பிள்ளை தயானந்தன்,சக்கிலி, பிரமிளா போன்றவர்கள் அன்பால் ஒன்றுபட்டு வாழ நினைத்தாலும் சாதி வேலிகள் மதங்களையும் தாண்டி அவர்கள் நல்வாழ்வைச் சிதைப்பதை உணர்வடிப்படையில் வடித்துத் தருகிறது. கல்வி, பதவி போன்றவை யெல்லாம் அவர்கள் நல்வாழ்வுக்குக் கைகொடுக்காத அவலத்தைக் காண முடிகிறது. பற்பல பைபிள் கதைகள் இதன் நடுவே அமைந்

துள்ளன. எளிய வடிவமும் எளிய நடையும் இந்த நாவலுக்கு வலிமையும் உணர்வும் ஊட்டுகின்றன.

X

தமிழகம் விட்டு வெளி மாநிலமான மலையாள நாடு சென்று திருவனந்தபுரத்தில் சாலைக் கம்போளத்தில் வாழும் தமிழ் மக்களின் வாழ்வோவியத்தைச் சுற்றி ஆ மாதவனின் கிருஷ்ணப் பருந்து[47] வட்டமிடுகிறது. சாமியப்பா தாடியும் மீசையுமாக இருப்பினும் சாது வாழ்வு நடத்தினாலும் அவர் மனம் வட்ட மிட்ட வண்ணமே இருக்கிறது. அவரால் ஆளாக்கப்பட்ட வேலப்பன் அவன் மனைவி ராணி ஆகியோர் களவு மணத்திற்கு உதவியவர் அவர் தான். வேலப்பன் அவர்மீது வெறுப்புக் கொண்டபோது அமைதியாக நின்றவர் அவர்தான். ஆயினும் அவர் மனத்தில் ராணி பிரசாத்க வேண்டும் என்று கேட்டபோது வட்டமிடும் கிருஷ்ணப்பருந்து நிலத்தில் கிடக்கும் எலியைக் கொத்தப் பாய்ச்சலிடும் போக்கினை மிகமிக நுணுக்கமாகக் காட்டிச் செல்லும் கம்போள மக்களின் அன்றாட வாழ்க்கை நல்ல முறையில் கேரள மணம் கமழ வெளிப்படுகிறது.

XI

போலித்தன்மை நிறைந்த சமூக வாழ்வில் அன்றாடம் காணும் மனிதர்களில் பல பொய்ம் முகங்களைக் காணமுடிகிறது' அவற்றை அடையாளம் காட்டமுயல்கிறது நா. பார்த்தசாரதியின் பொய்ம்முகங்கள்[48] என்ற நாவல். இளைஞன் சுதர்சனனின் வாழ்க்கையைக் கூறிச் செல்லும்போது கல்வி நிலையங்கள், சமயக் கூடங்கள், நீதிமன்றங்கள், அரசியல் கட்சிகள் ஆகியவற்றில் வாழும் மாந்தர்களையும் அவர்களின் முரண்பட்ட செயல்களையும் எடுத்துக்காட்டும்போது பொய்ம்மை கொலுவீற்றிருக்கும் கோலத்தை வெளிப்படுத்துகிறது. தலைமை ஆசிரியர் வாசுதேவன், மடாதிபதி மன்றக்குடி மகபதி, தனிப்பயிற்சிக் கல்லூரி முதல்வர் ரகுராஜன், சிண்டிகேட் சிதம்பரநாதன் 'கலம்பகச் செல்வர் சிசுபாலன் ஆகியோரையெல்லாம் காட்டுவதன் மூலம் சமுதாயச் சீர்கேடுகளை அலசிக் காட்டமுயலுகிறது. சமுதாயத்தின் குறை நாடிக் குற்றங்களைச் சுட்டிக் காட்டும் நிலையில் இது உள்ளது.

XII

இருண்மை நிலையில் அப்பால் உலகிற்குக் கொண்டு செல்ல முயலும் அகவயப்பட்ட நாவல்கள் தமிழில் மிகவும் குறைவாகவே

வெளிவருகின்றன. லா. ச. ராமமிர்தம் இத்துறையில் கல் சிரிக்கிறது[49] என்ற படைப்பைத் தந்துள்ளார். குருக்கள் படும் வறுமை அவர் அம்பிகையை வையும் வசவு கோவிலுக்கு வரும் பெரிய மனிதர்கள் பற்றிப் பல எண்ணங்கள் அடிமனத்திலிருந்து மேல் மட்டத்திற்கு வந்து வந்து செல்வதை அலங்கார நடை அழகில் நடத்திச் செல்கிறது இந்த நாவல்.

## XIII

பழைய வரலாற்றைத் தேடி எழுதுவது மிகவும் கடினம், அதிலும் திருவரங்கம் முகம்மதியர்களின் தாக்குதலுக்கு உட்பட்ட போது அரங்கன் திருவுருவைக் காக்க வைணவர்கள் பட்ட துன்பத்தை வரலாற்றுப் பின்னணியோடு ஸ்ரீ வேணுகோபாலன் மதுரா விஜயமாக[50] எழுதியுள்ளார். இவர் எழுதிய 'திருவரங்கன் உலா'வின் தொடர்ச்சி இது. கி. பி. 1360-ஆம் ஆண்டு கொங்கு நாட்டில் நடந்த கதையாகத் தொடர்கிறது வல்லபனை அவன் தாய் அரங்கனைத் தேடும் பணிக்கு அனுப்புகிறாள். வழியில் மதுராங்கினியைப் பிறர் சிறையெடுத்துச் செல்லும் போது அவளுக்குதவ முற்படுகிறான். கற்பூர வியாபாரியின் துணையால் அவன் தப்புகிறான். வழியெங்கும் அவன் பலரிடமிருந்து பல உதவிகளைப் பெறுகிறான். வேதாந்த தேசிகர், மஞ்சரி, அரங்கனைக் கொண்டுசென்ற பழைய நினைவுகளில் மிதக்கும் சிங்கழகர், ஸ்ரீ ராமதாசர், காட்டில் அரங்கனைக் கண்டுபிடிக்க உதவும் எருகுலமக்கள், செஞ்சு இனத்தவர் ஆகியோரின் செயல்கள் இந்நாவலின் உயிர்நாடியாக விளங்குகின்றன. காதலும் கடமையும் இங்குக் குறுக்கிடும்போது கடமையே வெல்கிறது. முகம்மதியரின் இன்பவேட்கையே அவர்களின் இறுதியாக முடிவதை உணர்த்திப் பழைய அரங்கனையே கோவிலில் பூசைக்கு வைக்கும் உயர்ந்த வெற்றியோடு கதை முடிய வல்லபன் துறவியாகிறான். அக்கால அரசியலில் நிகழ்ந்த பல்வேறு குழப்ப நிலைகளையும் மக்கள் வாழ்வில் சமயம் பெற்றிருந்த செல்வாக்கையும் நன்கு வெளிப்படுத்துகிறது இந்நாவல்.

விஜய நகர அரசர் கிருஷ்ண தேவராயரை வீழ்த்த ஜாம்பவதி என்ற பெண்ணும் மற்றவரும் முயன்று இறுதியில் தோல்வியுறுவதைக் குலசேகரனின் ஜாம்பவதி[51] கூறும்.

வரலாற்று நாவல்கள் மிகக்குறைவான எண்ணிக்கையில் வெளிவந்து கொண்டிருந்தாலும் அண்மைக் காலத்தில் மறுபடியும்

பலர் அத்துறையில் ஈடுபட்டுள்ளனர். இக்காலத்தில் பழைய வரலாறு காண்பது அரிது என்பதை உணர்ந்த நிலையிலேயே இங்குச் சிலவற்றைக் காணமுடிந்தது.

## XIV

உலகெங்கும் உலகச் சிறுவர் ஆண்டு என 1979-ஆம் ஆண்டைக் கொண்டாடியது வரலாற்று சிறப்பு மிக்க செயலாகும். அவ்வாண்டில் தமிழகத்தின் தென்பகுதியில் தீப்பெட்டித் தொழிற்சாலையில் வேலைசெய்யும் சிறுவர்களின் துன்ப வாழ்வைத் தீட்டியுள்ளார் இராஜம் கிருஷ்ணன். முற்போக்கு மனம் படைத்த விஜயா தீப்பெட்டித் தொழிற்சாலை உரிமையாளரின் மனைவியாகியும் உழைக்கும் குழந்தைகளின் நல வாழ்வுக்கும் முன்னிற்கும்போது எல்லாவகையிலும் எதிர்ப்பைப் பெறுகிறாள். கணவன் மனைவி உறவு முறிந்து தனித்து நிற்கிறாள். தொழிற்சாலைக் குழந்தைகளுக்காகப் பாடுபடும்போது சமூகச் சீர்திருத்த இயக்கங்களில் காணும் போலித்தன்மையை அறிகிறாள். தொழிற்சாலையில் சாதிவெறி தாண்டவமாடுவதையும், அலுவலக மக்கள் தொழில் புரிய வரும் பெண்களிடம் தவறாக நடந்து கொள்வதையும் ஈவிரக்கமற்ற நிலையில் சிறுவர்கள் கசக்கிப் பிழியப்படுவதையும் எளிய நடையில் கூட்டுக்குஞ்சுகள்[52] எடுத்துரைக்கிறது. கதைமுடிவில் ஆற்றுவெள்ளத்தில் சிறுவர்கள் தொழிற்சாலை பஸ்ஸுடன் அடித்துச் செல்வதைக் காட்டி அந்நிலையில் எல்லாச் சாதிச் சிறுவர்க்கும் ஒரே முடிவுதான் என்பதைச் சொல்லாமல் சொல்லி முடிக்கிறார். இக்காலகட்டத்திலுள்ள பண வெறி குழந்தைகள் மீதுள்ள அன்பைக்கூட அழிக்கிறது. மனித உறவை அளிக்கிறது என்பதைத் தெளிவாகக் காட்டி விடுகிறது.

தமிழக மலைப்பகுதியில் வாழும் மக்கள் பற்றி வெளிவந்த நாவல்கள் மிகமிகக் குறைவு. ராஜம் கிருஷ்ணனின் குறிஞ்சித் தேன், செல்வராஜின் தேநீர் போன்றவை குறிப்பிடத்தக்கவை. அவ்வரிசையில் குறிஞ்சி நில மக்களின் உண்மை வரலாற்றை நெஞ்சு தொடும்படியாக ஏலச்சிகரத்தில் கொ.மா. கோதண்டம்[53] எழுதியுள்ளார். யானைப்பாறைத் தோட்டத்தை பார்க்கப் பார்க்க வெளியுலகம் தெரியாத மக்களின் எளிய வாழ்க்கையில் உண்மை அழகு உள்ளத்தை ஈர்க்கிறது மயில் கண்ணு, பொன்னு மாரி, முத்தையன், பெருமாள், சோமையா போன்றவர்கள் நடமாடும்போது ஏலத்தோட்டமும் அதில் வதியும் மக்களின் துன்ப வாழ்வும் பின்னிப் பிணைந்திருப்பதை அறிகிறோம். இயற்கை

அழகின் உள்ளே மனிதர்படும் துன்பம் கண்டு கழிவிரக்கம் பெருகுகிறது. மலையாண்டிச்சாமி பகை தீர்க்கும் என மலைவாழ் மக்கள் ஊற்றமாக நம்பிய நம்பிக்கையைப் படிக்கும்போது உணர முடிகிறது. யானை மூங்கிலை ஒடிக்கும் சத்தம், காட்டாற்றின் சீற்றம், சூறைக்காற்றுப் பற்றி மக்கள் பாடும் பாட்டொலி இப்படி எத்தனை எத்தனையோ இயற்கைச் செல்வங்களின் நிறமாலைகளைச் சுட்டிக் காட்டும் நாட்டுப் பாடல்கள் ஆங்காங்கே மிளிர்கின்றன. தேம்பாவு, இளசு, ஈட்டி, இருளு, கரி போன்ற மரங்கள் காற்றுக்குக் கரக ஆட்டம் ஆடுவதைக் கூறும்போது குறிஞ்சிச்சூழலின் அழகு வெளிப்படும். காடழிக்கவும், மண்கொண்டு வரவும் மக்கள் படும்பாடு சொல்ல முடியாது. திடுமெனப் பொங்கி வரும் வெள்ளத்தில் உயிர் பிழைக்க அம்மலைவாழ்மக்கள் படும்பாடு துயர வெள்ளமாகும். அக்காள் ஏன் செத்தாள் என்ற காரணம் தங்கைக்குத் தெரியும் என்ற செய்தி வெளிப்படும்போது எத்தனை ஏமாற்றம் எரிமலையாய் வெடிக்கிறது! காட்டுத் தீயை அம்மக்கள் போராடி அவித்தனர். ஆனால் இத்தகைய மனத்தீயை அணைக்க முடியாத நிலையில் அம்மக்களின் வாழ்வு அழியாக்கோலமாகத் துலங்குகிறது.

XV

வெளிநாட்டில் வாழும் தமிழர் வரலாறு பற்றிக் கூறும் நாவல்கள் குறைவு. மு. வ. வின் **அந்த நாளும்'** அகிலனின் **நெஞ்சின் அலைகளும்** சென்ற வழியில் வி. ஏ. எம் எழுதிய **'உள்ளுக்குள்ளேயே'**[54] என்ற நாவல் பர்மாவில் வாழ்ந்த வாழ்வைக் காட்டும். தமிழர்களும் பர்மியர்களும் அன்புபூண வாழ்ந்ததை உணர்த்தும். இந்நாவலாசிரியர் பர்மாவிலேயே பல ஆண்டுகள் வாழ்ந்து நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் அமைத்த இந்திய தேசியப் படையில் பங்கு கொண்டவராதலால் அப்படை பற்றி நெஞ்சு நெகிழும்படி எழுதியுள்ளார். நாடு பிடிக்கவந்த ஜப்பானியர்களிடம் இந்தியர் பட்ட துன்பத்தை உண்மை அனுபவத்தோடு காட்டியுள்ளார். இன வேறுபாடின்றிப் பர்மியரும் தமிழரும் இன்பதுன்பங்களில் பங்கு கொள்ளும் மனித அன்பு துளிர்ப்பதை நன்கு எடுத்துரைக்கிறார். நாட்டுப்பற்றும் காதலும் பிணைந்து கிடக்கும்போது எதிர்பாராத, சில திருப்பங்கள் அவர்கள் வாழ்வை முடமாக்கி **உள்ளுக்குள்ளேயே** வெந்து புடம்போட்ட தங்கமாக மாறும் மக்களைச் செந்தில், வேலாயுதம், கஸ்தூரி,

மாயேலா, சிவகாமி ஆகியோர் வடிவில் காண்கிறோம். நேதாஜியை மனித வடிவில் நாவலில் உலவவிட்டு அவருடன் படிப் போரும் உறவாட வைப்பது புதிய பார்வை.

xvi

இன்றைய தமிழகக் கிராமங்களில் நிலவுடைமையின் பிடிப்பு இன்னும் முற்றிலுமாகத் தகரவில்லை. அரசாங்க யந்திரத்தின் ஏனோதானோப் போக்குகள் கிராம மக்களின் துன்பத்தைத் துடைக்க வழி செய்யவில்லை. ஏழைகள் என்பவர்களுக்குச் சாதிகள் இல்லை. சாதிக் குடிசையும் சேரிக்குடிசையும் ஒன்று சேரும்போது விடியலின் ஒளிக்கதிரைக் காட்ட நினைப்பது சு. சமுத்திரத்தின் 'ஊருக்குள் ஒரு புரட்சி'[55] சட்டாம் பட்டியின் சமுதாய ஓவியம் இது. ஆண்டியப்பனின் ஆசை, தங்கம்மாவின் துடிப்பு, பரமசிவத்தின் ஆங்காரம், சாதி வேறுபாடற்றுக் குழந்தைக்குப் பால் கொடுக்கும் காத்தாயி, பண்ணையார்க்காகப் பக்கத்து ஊர் சென்று எதிரிகளை அடித்துவரும் 'புறநானூற்று வீரர், அடைக்கலம் இப்படிப் பற்பல மக்களைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறது.

கூட்டுறவுச் சங்கம் என்ற அமைப்பு மேல்தட்டு மக்களை உயர்த்த உதவும் சங்கம் என்பதை வெட்ட வெளிச்சமாக்குகிறது. நீதிமன்றங்கள் ஏழைகட்கு எவ்விதத்திலும் உதவாது என்பதை ஆண்டியப்பன் சிறைப்பட்ட நிகழ்ச்சியால் காட்டும். சமூகச் சிக்கல்கள் மனிதர்களை அழுத்தும்போது அவர்கள் பொங்கித் துடிப்பதைச் சாவு மணியிலிலும் காட்டும். சுருக்கமாகக் கூறின், பொருளாதாரச் சமத்துவத்தை வற்புறுத்தாத எந்தப் புரட்சியும் வெற்றி பெறாது, சொத்துரிமையை ஒழிக்காத எந்தப் புரட்சியிலும் ஆன்மா இருக்காது என அறிவுறுத்தும் இந்த நாவல் கூனிக் குறுகிக் கிடந்த மக்கள் நீண்டு நிமிரும் புதிய போக்கைக் காட்டும்.

## அடிக்குறிப்புகள்

1. ராஜேந்திரகுமார், கூப்பிடுங்கள் வருகிறேன், (சென்னை அபிராமி பப்ளிகேஷன், 1980).
2. ராஜேந்திரகுமார், இரவல் உறவுகள், (சென்னை, மாலைமதி வெளியீடு, 1980).
3. புஷ்பா தங்கதுரை, வசந்தா வசந்தானந்தா (சென்னை, கதைக்கதிர், 1980).

4. வலம்புரி ஜான், **அஸ்திவாரங்கள் தெரிவதில்லை** (சென்னை ராமு புத்தக நிலையம், 1980).

5. லக்ஷ்மி, **ரோஜா வைரம்** (சென்னை, பூங்கொடி பதிப்பகம், 1980).

6. புஷ்பா தங்கதுரை, **ராகினி ஒரு ஹிப்பி நீ** (நாகபட்டனம், இமயப்பதிப்பகம், 1980).

7. புஷ்பா தங்கதுரை, **கடலுக்குள் ஜூலி** (சென்னை, அபிராமி பப்ளிகேஷன்ஸ், 190).

8. விட்டல்ராவ், **தூறல்** (சென்னை, கலைஞன் பதிப்பகம், 1980).

9. ஐசக் அருமைராசன், **அடுக்குகள்** (சென்னை, கலைஞன் பதிப்பகம், 1980).

10. அசோகமித்திரன், **ஆகாயத்தாமரை** (சென்னை, கலைஞன் பதிப்பகம், 1980).

11. ஆதவன், **என் பெயர் ராமசேஷன்** (நாகபட்டினம், இமயப் பதிப்பகம், 1980).

12. இந்திரா பார்த்தசாரதி, **மாயமான் வேட்டை** (சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 1980).

13. கவிஞன் பைத்தியம், **விதிதன்** (சென்னை, கலைஞன் பதிப்பகம், 1980).

14. கர்ணன், **உள்ளங்கள்** (சென்னை, கலைஞன் பதிப்பகம், 1980).

15. சூடாமணி, ஆர்., **கண்ணம்மா என் சகோதரி** (சென்னை, கலைஞன் பதிப்பகம், 1980).

16. சிவசங்கரி, **துள்ள முடியாத புள்ளிமான்** (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

17. சோமகள், **என் மனம் உனக்குத் தெரியாதா** (சென்னை, மாலைமதி வெளியீடு, 1980).

18. பிரதிபா ராஜகோபாலன், **சாவித்துவாரங்கள்** (சென்னை, கலைமகள் பதிப்பகம், 1980).

19. லட்சுமி ராஜரத்னம், **உனக்காக மட்டும்** (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

20. சிவசங்கரி, **மெள்ள மெள்ள** (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

21. மகரிஷி, **புதிய அர்த்தங்கள்** (சென்னை, தமிழ்ப்புத்தகாலயம், 1980).

22. இந்துமதி, **மணல் வீடுகள்** (சென்னை, கலைஞன் பதிப்பகம், 1980).

23. வாஸந்தி, **மயக்கங்களும் சிலந்திக் கூடுகளும்** (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

24. உஷா சுப்பிரமணியம், **எத்தனை மணம் எத்தனை நிறம்** (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

25. மணியன். **நடுவில் எழுந்த சுவர்** (சென்னை, மணியன் மாத இதழ், 1980).

26. ஆலந்தூர் மோகனரங்கன், **கோணமலை கோவிந்தன் கொக்குப் பிடித்த கதை** (சென்னை, வசந்தா பதிப்பகம், 1980).

27. துரைப்பாண்டியன், **நொந்தசோறு** (சிவகங்கை, அகரம் வெளியீடு, 1980).

28. தஞ்சை செல்வன், **வாழி நீ வசந்தி** (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

29. பெருமாள், தே. ப., **புதிய நெஞ்சம் புதிய உணர்ச்சி** (சென்னை, குவை பப்ளிகேஷன்ஸ், 1980).

30. கணேசன், பி. சி., **நடிகை** (சென்னை, பூம்புகார் பிரசுரம், 1980).

31. வில்லவன், **போராடும் உள்ளங்கள்** (சென்னை, புத்தகப் பூங்கா, 1980).

32. குலசேகரன். **ஏழைமை சாபமல்ல** (நார்த்தாம்பூண்டி, அமிழ்தம் பதிப்பகம், 1980).

33. செந்தமிழ்ச் செழியன், **திருமணம் (சொர்க்கத்தில்) நரகத்தில் நிச்சயிக்கப்படுகிறது** (சென்னை, - 51, பொன்னெழில் பதிப்பகம், 1980).

34. வேங்கட லட்சுமி, ரா., **ஜாதி மல்லிகை** (சென்னை, வானதி பதிப்பகம்).

35. சுப்பிரமணியன், ஏ.வி., **நெஞ்சில் படியும் நிழல்கள்** (சென்னை கலைஞன் பதிப்பகம், 1980).

36. மன்னார்குடி விசுவநாதன், **ஊமைக்குயில்** (சென்னை, மருத மலையான் பதிப்பகம், 1980).

37. உமாசந்திரன், **வாழ்வே வா** (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

38. மலர்மன்னன், **அந்த உலகம் விந்தையானது** (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

39. நவமணி, **மலர்மதி** (மதுரை, சோமு புத்தக நிலையம், 1980).

40. முல்லைக்கரை கணேசன், வேலை தேடும் விழிகள் (சென்னை, மருதமலையான் பதிப்பகம், 1980).

41. ராதாவீரண்ணன், தெய்வம் பேசுவதில்லை (சென்னை-14 விசாலாட்சி பதிப்பகம், 1980).

42. கல்பனா, காத்திருக்க ஒருத்தி (சென்னை-98, கல்பனா, 1980).

43. அனுராதா ரமணன், சாதாரண மனிதர்கள் (சென்னை, கலைஞன் பதிப்பகம், 1980).

44. ரவீந்தரன் சி. ஆர்., பழைய வானத்தின் கீழே (சென்னை, கலைஞன் பதிப்பகம், 1980).

45. பண்ணன், தடைக்கல் (சென்னை, திருமலைப்பதிப்பகம், 1980).

46. டேவிட் சித்தையா, கல்லறைப் பூக்கள் (சென்னை, பூங்கொடி பதிப்பகம், 1980).

47. மாதவன், ஆ., கிருஷ்ணப் பருந்து (சென்னை, கலைஞன் பதிப்பகம், 1980).

48. பார்த்தசாரதி, நா., பொய்ம் முகங்கள் (சென்னை, தமிழ்ப் புத்தகாலயம், 1980).

49. ராமாமிருதம் லா. ச., கல் சிரிக்கிறது (சென்னை, மோனா மாததமிழ், 1980).

50. ஸ்ரீ வேணுகோபாலன், மதுரா விஜயம் (சென்னை, பூம்புகார் பிரசுரம், 1980).

51. குலசேகரன், ஜாம்பவதி (சென்னை, குவை பப்ளிகேஷன்ஸ், 19.0).

52. ராஜம் கிருஷ்ணன், கூட்டுக் குஞ்சுகள் (சென்னை, பாரிப் புத்தகப்பண்ணை, 1980).

53. கோதண்டம், கொ. மா., ஏலச்சிகரம் (சென்னை, வானதி பதிப்பகம், 1980).

54. வி ஏ. எம், உள்ளுக்குள்ளேயே (சென்னை, பாரிநிலையம், 1980).

55 சமுத்திரம், சு. ஊருக்குள் ஒரு புரட்சி, (சென்னை, மணி வாசகர் நூலகம், 1980).

# எண்பதில் ஆங்கிலத்தில் தமிழ்

ம.ரா.போ. குருசாமி

'மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமை இல்லை; திறமான புலமையெனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்'.

செந்தமிழ்த் திறத்தின் சீர்மையைப் பரப்பும் தொண்டு இரு வகையினது. ஒன்று அகப்பணி; அஃதாவது தமிழரிடையே ஆற்றும் தமிழ்ப்பணி. மற்றது புறப்பணி; அஃதாவது பிறமொழியாள ரிடையே ஆற்றும் தமிழ்ப்பணி.

அகப் பணி செய்வோரினும், ஒருவகையில், புறப்பணி செய் வோர் தமிழுக்கு வலிமை தேடுவதில் சிறப்புடையர் எனலாம். நமக்குள் நாமே பெருமைப்பட்டுக் கொள்வதால் உள்ள வலிமை நலியும்; நம் பெருமையைப் பிறர் உணர்ந்து போற்றும்போது வளரும், இவ்வகையில் பிற மொழியாரிடையே தமிழ்ப்பணி ஆற்றுவோர்க்குத் தனிச்சிறப்பு உண்டு என்பதில் ஐயமில்லை.

இப்புறப்பணிக்கு ஆங்கிலத்தைக் கருவியாக்க் கொள்வது இயல்பு. அயல்மொழிகளிலே பாரதத்தில் ஆங்கிலம்பெற்ற இடத்தினைப் பிற அயல்மொழிகள் பெறவில்லை. எனவே, ஆங்கில மொழிவாயிலாகந் தமிழ்ப்பணி புரிவோர் நம்மிடையே பலர் இருப்பர்; ஆங்கிலமல்லாப் பிற அயல்மொழி வாயிலாகவும் பணிபுரிவோர் உளராயினும், அவர்கள் எண்ணத்தில் உயர்ந்திருப் பினும், எண்ணிக்கை குறைவே.

---

குறிப்பு: இக்கட்டுரை இந்தியாவில் ஆங்கிலத்தில் தமிழ்பற்றி எழுந்த !ஆய்வுகளை மட்டுமே அடிப்படையாகக் கொண்டுள்ளது.

ஆஷர், ஜார்ஜ் ஹார்ட் போன்றவர்கள் அயல்நாடுகளிலிருந்தே தமிழருமை உணர்ந்தும் உணர்த்தியும் வருகின்றார்கள். அவர்கள் 1980இல் தமிழ் தொடர்பான என்ன கட்டுரைகள் எழுதி வெளியிட்டனர் என அறியும் வாய்ப்புக் கிட்டவில்லை. அப்படியே பாரதத்துப் பல்வேறு பல்கலைக் கழகங்களின் ஆய்விதழ்களில் தமிழ் தொடர்பான ஆங்கிலக் கட்டுரைகள் வந்திருப்பினும், விவரம் அறியும் வாய்ப்பினைப் பெறவில்லை. எனினும், ஆங்கில வாயிலாகத் தமிழ்ப்பணி நடைபெறுகிறது என்பதை ஒருவாறு உணர்த்துவது நல்லது என்பதால் கிடைத்த விவரங்கள் கொண்டு எழுவது இச்கட்டுரைக் குறிப்பு.

சாகித்திய அகாதெமியின் முத்திங்கள் வெளியீடாகிய Indian Literature பாரத மொழிகள் அனைத்துக்கும் இடம் கொடுக்கும் ஆங்கில ஏடாகும். இந்திய இலக்கியப்பணி பற்றிய திறனாய்விலும் அறிமுகப்பணியிலும் குறிப்பிடத்தக்க வகையில் சிறந்த பணியாற்றுவது, இவ்விதழ்.

1980ல் வெளிவந்த இதழ்கள் பற்றிய விவரம் வருமாறு:

இதழ் 1. சனவரி—ஏப்ரல் 1980: இன்றைய இந்தியக் கவிதை.

,, 2, மே—ஆகஸ்டு 1980 : இந்தியச் சிறுகதை விளைச்சல்/ களஞ்சியம்.

,, 3. செப்டம்பர்—அக்டோபர் 1980 : கவிதை மணியின் பட்டைகள்.

4. இந்திய இலக்கியம் பற்றிய ஆண்டுக் கண்ணோட்டம்

இவற்றுள் முதல் இதழும் இரண்டாவது இதழும் சாகித்திய அகாதெமியின் வெள்ளிவிழாச் சிறப்பு வெளியீடுகளாகும்.

முதல் இதழ் இன்றைய இந்தியக் கவிதைகளை அறிமுகம் செய்வதைக் குறிக்கோளாகக் கொண்டது ஐந்நூற்றுத் தொண்ணூற்று மூன்று பக்கம் கொண்ட இந்தச் சிறந்த தொகுப்பில் பத்தொன்பது இந்திய மொழிக் கவிதைகள் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன; (இந்திய) ஆங்கில மொழிக் கவிதைக்கும் இடம் உண்டு.

ஞானக்கூத்தன், சி. மணி, புவியரசு, மீரா, அப்துல் ரகுமான், வல்லிக்கண்ணன் உட்படத் தற்காலத்துள்ள பத்தொன்பது கவிஞர்களின் தமிழ்க் கவிதைகளின் மொழிபெயர்ப்பினை இத் தொகுப்பிலே காணமுடிகின்றது பத்தொன்பது பேர்களின் இருபத்தேழு கவிதைகளும் புதுக்கவிதை என்ற ஒரே வகையைச் சேர்ந்தன. வாழும் கவிஞர்கள் எழுதி வெளியிட்ட மரபுவழிக் கவிதைகளில் ஒன்றுகூட இத்தொகுப்பில் இடம்பெறவில்லை. மரபுவழிக் கவிதைக்கு ஒரே சான்றாகச் சங்ககாலத்து நக்கீரரின் நெடுநல்வாடையின் சில வரிகள் இதில் இடம்பெற்றுள்ளன; அதுவும் முழுமையாக இல்லை. சில வரிகளே. தமிழ்க் கவிதைகளின் இந்தத் தொகுப்பினைப் பார்க்கும் பிற மொழியாளர்கள் தமிழ்க் கவிதைப்படைப்பைப் பற்றி ஒரு தவறான முடிவுக்கு வருவார்கள். 'தமிழில் இன்று வெளிவரும் கவிதைகள் எல்லாமே புதுக்கவிதை களே; மரபுவழிக் கவிதை இயற்றும் எண்ணமே இன்று தமிழ்க் கவிஞர்களுக்கு அடியோடு இல்லை' என்ற முடிவு ஏற்படும் வகை யில் இந்தக் கவிதைத்தொகுப்பு அமைந்திருப்பது பெரிதும் வருந்தத்தக்கது. இந்தக் கருத்தை வலியுறுத்துமாப்போலே மிகப் பழங்காலத்து மரபுக் கவிதை மட்டுமே இதில் இடம்பெற்றுள்ளது. 'இன்றைய இந்தியக் கவிதை' என்ற தொகுப்பிலே 'நெடுநல் வாடை' எப்படி இடம் பெறுகிறது என்று எண்ணிப் பார்த்தாலும் 'மரபுவழிக் கவிதையின் சுவடுகூட இன்றைய தமிழ்க் கவியரங்கிலே இல்லை' என்ற எண்ணம் வலியுறுவதற்கு இடம் இருக்கிறது.

புதுக்கவிதையின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் பெருமை யோடும் பெருமிதத்தோடும் வரவேற்க வேண்டும். அதே நேரத்தில் மரபு வழிக் கவிதைக்கு முழு இருட்டடிப்புச் செய்வதை எப்படி ஏற்கமுடியும்!

மற்றொன்றும் குறிப்பிடவேண்டும்; ஏதோ ஒரு குறிப்பிட்ட கண்ணோட்டமும் அணுகுமுறையும் கொண்ட ஒரு வட்டாரமே இக்கவிதைத் தொகுப்புப் பணியில் இடம்பெற்றிருக்கிறது என்ற எண்ணம் உண்டாவதற்குச் சாகித்திய அகாதெமி இடம்கொடுத்து விட்டதோ என்ற ஐயம் எழ இடமிருக்கிறது.

இரண்டாவது இதழ் இந்திய மொழிகளில் பெரும்பாலான வற்றில் வெளிவந்து 'சிறப்பு'ப்பெற்ற சிறுகதைகளின் மொழி பெயர்ப்புத் தொகுப்பாகும். ஆங்கிலத்தில் படைக்கப்பட்ட சிறு கதையும் இடம் பெற்றிருக்கிறது.

ஐந்நூற்றுத் தொண்ணூற்றாறு பக்கம் கொண்ட இத்தொகுப்பில் தி. ஜானகிராமன், என். ரகுநாதன் ('இந்து'வில் பணியாற்றியவர்) 'அசோகமித்திரன்' நீல பத்மநாபன், ஆதவன் சுந்தரம் ஆகியோரின் கதைகளின் மொழிபெயர்ப்பைக் காணுகிறோம். மொத்தம் அறுபத்திரண்டு கதைகளில் ஐந்து தமிழ்க்கதைகள் இடம் பெற்றுள்ளன.

இந்த ஐந்து தமிழ்க் கதைகளின் சிறப்பைப் பற்றிக் குறை கூறுவதைவிட, இவற்றினும் சிறந்த தமிழ்ச் சிறுகதைகள் இதே காலகட்டத்தில் படைக்கப்பட்டுள்ளனவே என்று எண்ணிப்பார்ப்பதே கணிப்புக்கு உரிய முறையாகத் தோன்றுகிறது. பிற மொழியாளரிடையே தமிழ்ப் படைப்பிலக்கியத்தை அறிமுகம் செய்யும் போது, உள்ளனவற்றில் உச்சமாகச் சிறந்தவற்றையே அறிமுகம் செய்வது முறையாகும்.

உள்ளவற்றில் சிறந்தனவற்றையே தேர்ந்தெடுப்பதில் சாகித்திய அகாதெமிக்கு உள்ள நடைமுறைச் சிக்கல் என்ன என்பது நமக்குத் தெரியவில்லை.

மூன்றாவது இதழில் எட்டுக் கட்டுரைகள் இடம்பெறுகின்றன. எட்டில் ஒன்று தமிழ் இலக்கியத் தொடர்பானது. "தமிழ் அகப்பொருட் கவிதைகளில் தோழி" பற்றியது இக்கட்டுரை.

தமிழகத்தில் ஒப்பிலக்கியத் துறையில் சிறந்த பணியாற்றுவோர் மிகச் சிலரே. அவர்களுள் ஒருவர் ஆங்கிலப் பேராசிரியராகிய செல்லப்பன். செல்லப்பனும் எம் எஸ். பிரபாகரனும் கூட்டாகப் படைத்தது இந்த ஆய்வுக் கட்டுரை.

'தோழி' பற்றி வ. சுப. மாணிக்கம் முதலாகப் பல தமிழ் ஆய்வாளர்கள் எழுதியுள்ளனர். அவர்கள் யாவரும் கொண்ட அணுகுமுறையை மறுக்காமல் ஏற்கும் கட்டுரையாளர்கள் முருகியல் நோக்கிலும் பாகுபாட்டுளவியல் நோக்கிலும் 'தோழி'யின் பங்குபற்றி இக்கட்டுரையில் கருத்துரை வழங்கியுள்ளனர். மேலும், ஷேக்ஸ்பியர் முதலான மேலைநாட்டுப் படைப்பாளர்களின் கதைமாந்தரோடும் ஒப்பிட்டுக் கணித்துள்ளனர்.

தலைவியின் உள்ளுணர்வின் மறுபதிப்பாக எதிரொலிப் பாத்திரமாக—தலைவியின் மற்றொரு கூறாகத் தோழியை ஒப்பிலக்கிய நோக்கிலும் பாகுபாட்டுளவியல் அடிப்படையிலும் கணித்துள்ள இக்கட்டுரை தமிழாய்வுக்குச் சிறந்த கொடையாகும்.

நான்காவது இதழ் இந்திய இலக்கிய அரங்கின் 1979ஆம் ஆண்டுக்குரிய நெட்டோட்டப் பார்வையைத் தருவது. இந்த இதழை வைத்து அயல்நாட்டார் முடிவு செய்வதாயின், 1979இல் தமிழ் இலக்கிய அரங்கு மூடிக்கிடந்தது என்றுதான் சொல்ல வேண்டும். ஏனெனில், இதில் தமிழ் இலக்கியப்பணி பற்றிக் கட்டுரையே இல்லை!

அடுத்து, திராவிட மொழியியற் கழக (Dravidian Linguistios Association) வெளியீடாகிய மொழியியல் ஆய்விதழ் குறிப்பிடத் தக்கது தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முதல் துணைவேந்தராகப் பணி ஏற்றுள்ள வி. ஐ. சுப்பிரமணியத்தின் சீரிய முயற்சியால் உருவாகி உலக அரங்கில் நல்ல புகழ் பெற்றிருப்பது திராவிட மொழியியற் கழகம். அக்கழகம் வெளியிடும் அரையாண்டிதழின் 1980க்கு உரிய இரண்டு வெளியீடுகள் நம் நாட்டத்திற்கு உரியவை

1980 சனவரி மாதம் வெளிவந்த இதழில் தமிழ் மொழியியல் தொடர்பாக இரண்டு கட்டுரைகள் காணப்படுகின்றன.

டி. பாலசுப்பிரமணியன் எழுதியுள்ள கட்டுரை 'பேச்சுத் தமிழில் காணும் உயிர் ஒலிகள்' என்பது. பாலசுப்பிரமணியத்துக்கு எடின்பரோ பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்குதற்கு. அடிப்படையாக அமைந்த ஆய்வுரையின் பகுதியே இக்கட்டுரை பேச்சுத் தமிழில் காணப்பெறும் ஒலி உயிர் பற்றிய ஆய்வுக் குறிப்புகளை இக்கட்டுரை திரட்டித் தருகிறது. ஒலிப்பதிவுக் கருவியின் துணையால் ஒலிவடிவை வரிவடிவாகக் காணும் கலை நுணுக்கத்தை இக்கட்டுரையில் காணலாம். இக்கட்டுரையாளரின் ஆய்வின்படி பதினான்கு உயிர்கள் உள்ளன. அவற்றில் குறில் ஏழு நெடில் ஏழு ஓரசை ஈரசைச் சொற்களில் உயிர் முன்பின் வருகை குறித்த அட்டவணைகளும் வரைபடங்களும் உயிர் ஒலி பற்றிய நிலையை விளக்குகின்றன.

ஆர். கோதண்டராமன் 'தெரிநிலை வினைப்பெயர்களின் இயைபு உருபுகள்' என்ற தலைப்பில் கட்டுரை எழுதியுள்ளார். குறிப்புவினைப் பெயர்கள் பற்றிய மற்றொரு கட்டுரையின் தொடர்கருத்துரையாக அமைவது இது. தெரிநிலை வினைப் பெயர்களின் இயைபு உருபுகளுக்குப் பண்டை நூல்களான கலித்தொகை, பரிபாடல் போன்றவற்றிலிருந்து சான்று காட்டுகின்றார் கட்டுரையாளர். வினையெச்சத்திற்கும் வினைப்பெயர்க்கும் உள்ள தொடர்பைக் கட்டுரை விளக்க முயல்கிறது. பொருளமைப்பிற்கு

இயைபு உருபுகள் அமைந்துள்ள நிலையிலிருந்து இருவகைகளைக் காணுகிறது; அவற்றை நெடில் உருபுகள் குறில் உருபுகள் எனப் பகுக்கிறது. அசையுருபாகிய 'அன்' என்பது பொருளுடைய ஒலியாகக் காண முயல்கிறது. இப்பொருளியைபு நெறியை முழுதும் வரையறுக்க இயலாத நிலையையும் குறிக்கிறது கட்டுரை.

1980 ஜூனில் வெளிவந்த இதழில் தமிழ்மொழியியல் தொடர்பான நேரடிக் கட்டுரை ஒன்றும் இடம்பெறவில்லை; எனினும், மதிப்புரைப் பகுதியில் 'தொடக்கத்தமிழ்' என்ற பயிற்சி நூல் பற்றிய கணிப்புரை இடம்பெற்றிருப்பது குறிக்கத் தக்கது.

கௌசல்யா ஹார்ட், ஜார்ஜ் ஹார்ட் III இவர்கள் எழுதிய 'தொடக்கத்தமிழ்' நூல்பற்றி ரோட்னே எப்.மோகின் மதிப்புரை எழுதியிருக்கிறார். இதில் இந்நூல் இந்தியப் பதிப்பாக வந்துள்ளதை மதிப்புரையாளர் போற்றுகிறார். 35 பாடங்களில் பெரும்பாலும் இலக்கணக் கருத்துகளை இந்நூல் எடுத்தாண்டுள்ளது. பாடமுடிவில் இடம்பெறும் இலக்கணப்பகுதி பயன் தரத் தக்கதாயுள்ளது. சிற்சில பண்பாட்டுக் குறிப்புகள் காணப்பெறினும் அவற்றுக்குரிய விளக்கங்கள் இல்லை. அயல்மொழியாளர்க்குத் தமிழ் கற்பிப்பதற்குச் செம்மையான நூல் என இதனைக் கூறும்போது இதிலுள்ள குறைகளையும் மறைக்காமல் எடுத்துரைக்கிறார் மதிப்புரைகாரர்.

இனி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தமிழியல்/ Journal of Tamil Studies பற்றி.

1980 இரண்டு இதழ்கள் (17, 18) வெளிவந்துள்ளன. முதலாவதாகிய 17இல் எட்டுக் கட்டுரைகள்; அவற்றில் ஏழு ஆங்கிலக் கட்டுரைகள். 18ஆம் இதழில் பத்துக் கட்டுரைகள்; யாவும் ஆங்கிலத்தில்.

இரண்டு இதழ்களிலுமாகச் சேர்த்து 1980இல் தமிழியல் வெளியிட்டகட்டுரைகளின் வகைமையும் எண்ணிக்கையும் பின்வருமாறு:

| | |
|---|---|
| அஞ்சலிவழித் திறனாய்வு | 4 |
| பண்பாட்டு வரலாறு, பண்பாடு | 3 |
| வரலாறு | 3 |
| மொழியியல் | 3 |

| | |
|---|---|
| ஒப்பிலக்கியம் | 2 |
| திறனாய்வு (புலவர்) | 1 |
| சுவடியியல் | 1 |

இதழ் 17இல் 'சங்க காலத்து இசைபற்றிய பிற்காலச் சான்று' பற்றிப் பேரறிஞர் மு. அருணாசலம் எழுதியுள்ள கட்டுரை முதலாவதாகும்.

சங்க காலத்து இசை பற்றிய குறிப்புகள் யாப்பருங்கல உரையில் காணப்படுகின்றன எனக் கண்டு விளக்குகிறது இக்கட்டுரை. தொன்னூல்களும் உரைகளும் மட்டுமன்றி, பதினோராம் நூற்றாண்டில் அமிதசாகரனாரால் எழுதப்பெற்ற யாப்பருங்கலத்தின் உரையிலும் தொன்மைத் தமிழிசைபற்றிய சான்று கிடைக்கிறது. வெளிவிருத்தத்தில் அடிதொறும் இறுதியில் திரும்பத்திரும்ப வரும் தொடர் பல்லவியாகவும், ஒவ்வோரடியும் சரணமாகவும் கொள்ளத்தக்கன. பதினைந்தாம் நூற்றாண்டு இறுதியிலும் பதினாறாம் நூற்றாண்டு இடைப்பகுதி வரையிலும் வாழ்ந்த புரந்தரதாசரே முதன்முதல் கீர்த்தனைகள் இயற்றியவரென்று கொள்ளத் தேவை இல்லை. அதற்கு முந்தியவை அன்னமாசாரியார் பதங்கள் என்பர். அன்னமாசாரியார்க்கும் புரந்தரதாசர்க்கும் முன்பே தமிழில் கீர்த்தனைகள் உண்டு. கீர்த்தனை என்ற பெயர் இல்லாவிடினும் அதற்குரிய கூறுகள் பழந்தமிழ் இசையில் உண்டு.

தமிழ் இசை வரலாற்றில் இப்படி ஒரு சிறப்பான குறிப்பினை வழங்குகிறது இம்முதற் கட்டுரை.

இரண்டாவது கட்டுரை ஆ. வேலுப்பிள்ளை எழுதியது. தொன்மையான பிராமிச் சாசனங்களை முதன்மை அடிப்படையாகக்கொண்டு தொல்லிலங்கைச் சமுதாயத்தில் தமிழின் செல்வாக்கு இருந்தமையினை நிறுவும் முயற்சியுடையது இக்கட்டுரை.

இலங்கை வரலாற்றுக்குத் தமிழ்க் கொடை மிகுதி என்பதை இருட்டடிப்புச் செய்வதும் புறக்கணிப்பதும் பொருந்தாச் செயல்கள் என்பதைச் சாசனச் சான்றுகள் கொண்டு விளக்கி வேலுப்பிள்ளை எழுதிய ஆய்வுரையின் இரண்டாம் பகுதி இந்தக் கட்டுரை.

மூன்றாவது கட்டுரை 'திராவிட இந்தியாவில் நீகிரோவக் கூறுகள்' என்ற தலைப்பில் க. ப. அறவாணன் எழுதியதாகும்.

திராவிட வரலாறு பண்பாடு—நீகிரோ வரலாறு பண்பாடு. இவற்றிடையே பொதுமைக்கூறுகள் பல உள என்பதைப் பல துறைச் சான்றுகொண்டு விளக்கும் கட்டுரை. இன்றைய நிலையில் இக்கட்டுரை முடிவுகள் சிலவற்றில் ஐயமும் தடையும் இருப்பினும், ஆழ்ந்த ஆய்வு முயற்சிக்குக் கால்கோளாக இக்கட்டுரையினைக் கொள்ளலாம். இதனைக் கட்டுரையாளரும் குறிப்பிட்டுள்ளார்.

'கோல்' என்னும் நீட்டலளவை பற்றியது கொடுமுடி சண்முகம் அவர்கள் எழுதியுள்ள கட்டுரை.

கோல் என்னும் நீட்டலளவை பற்றிய குறிப்பினைச் சிலப்பதிகாரம், யாப்பருங்கலம் முதலான நூல்களில் காணலாம். தொன்றுதொட்டு இன்றுவரை சிற்பத்துறையினர் கோல் அளவையைக் கையாண்டு வருகின்றனர். சிந்துவெளி ஆய்விலும் கோல் அளவு இடம்பெறுகிறது. 'கோல்' என்பதன் நீளம் என்ன என்பதை வரையறுத்துக் காட்டுகிறது இக்கட்டுரை. ஏறத்தாழ எண்பத்தி நான்கு சென்டி மீட்டர் கொண்டது கோல்; இது முடிவு.

'தொண்டை மண்டலத்தின் பழைய வண்ண ஓவியங்கள் பற்றி எஸ்.டி. பாஸ்கரன் ஒரு கட்டுரை எழுதியுள்ளார்.

மாமண்டூர், மாமல்லபுரம், பனைமலை, காஞ்சீபுரம், அர்மாமலை, திருமலை, திருப்பருதிக்குன்றம் முதலிய பாறைகள், குடைவரைகள், ஆலயங்கள் முதலியவற்றில் பல்லவர் ஆட்சி முதல் விசயநகரத்தார் ஆட்சி வரை தீட்டப்பட்ட ஓவியங்கள் பற்றி ஆராய்வது இக்கட்டுரை. ஓவியங்கள் பழங்காலத்தில் தீட்டப்பெற்ற முறை பற்றிப் பயனுடைய குறிப்புகள் இதில் காணப்படுகின்றன.

ஒப்பிலக்கியத் துறை தமிழில் அண்மைக்காலத்தில் குறிப்பிடத் தகுந்த அளவு கிளர்ச்சி பெற்றுள்ளது. எண்பதின் இரண்டு இதழ்களில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு கட்டுரை இடம்பெற்றிருப்பது மகிழ்ச்சி தருகிறது. ஒப்பிலக்கியத்துறைக்கு இன்னும் மிகுதியான இடம் ஒதுக்குவது தமிழியல் பாரெங்கும் பரவுவதற்கு மிகவும் உதவியாக இருக்கும் என்பதைக் குறிப்பிடவேண்டும்.

17ஆம் இதழில் செல்லப்பனும் எம். வாதபுரீசுவரனும் இணைந்து ஹென்ரி வாகனையும் திருஞானசம்பந்தரையும் சமயக் கவிஞர்கள் என்ற முறையிலே ஒப்பிட்டுக் கட்டுரை வடித்திருக்கிறார்கள். சிறப்பான கட்டுரை.

காண்பன யாவற்றிலும் இறைச்சார்பே காணும் கருத்தொற்றுமையினை ஹென்ரி வாகன், திருஞானசம்பந்தர் ஆகியோர் பாடல்களில் கண்டு விளக்கும் ஒப்பிலக்கியத் திறனாய்வாக நன்கு அமைந்துள்ளது இக்கட்டுரை. காலம், இடம் என்ற வரையறை கடந்து ஒன்றிய காட்சி அமைவதை இருபெரும் சமயக் கவிஞர்களைக் கொண்டு தெளிவுறுத்துகின்றது இந்த நல்ல கட்டுரை.

தமிழிலுள்ள அடியண்ண ஒலிகள் மராத்தியச் சொற்களில் அமைந்திருப்பதை விசுவநாத் கைரே விளக்குகிறார் ஒரு கட்டுரையில். ஒப்பிலக்கண அடிப்படையில் எழுந்த இப்பொறியியற் கட்டுரை ஏழாவது கட்டுரையாகும்.

(எட்டாவது கட்டுரை மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளில் தோட்டப்புறச் சமுதாயம் பற்றி விளக்கும் விரிவான தமிழ்க் கட்டுரை; இரா. தண்டாயுதம் நன்கு பாடுபட்டு எழுதியிருப்பது).

இதழ் 18 : பத்துக் கட்டுரைகள் கொண்டது. பத்தும் ஆங்கிலக் கட்டுரைகளே.

முதற்கட்டுரை கிரிகரி ஜேம்ஸ் எழுதியது. ஐரோப்பாவில் தமிழ்ச் சுவடிகள், கையெழுத்துப் படிகள் வைத்துப் பேணுகின்ற 83 நிறுவனங்களை அறிமுகம் செய்வது இக்கட்டுரை. கட்டுரையாளரை அணுகினால் விரிவான விவரங்கள் கிடைக்கும் என்ற குறிப்பினைக் கட்டுரையில் காணுகின்றோம். ஆனால், அவர் முகவரி கட்டுரையில் இல்லை...சுவடிகளையெல்லாம் அச்சிட்டே தீர்வதென உறுதி கொண்டுள்ள தமிழக அரசுக்கு இதுபோன்ற செய்திகளைத் தரும் கட்டுரைகள் பெருங்களஞ்சியம் கிடைத்தது போன்றதாகும்.

என். குமாரசாமி ராஜா எழுதியுள்ள கட்டுரை அடுத்தது. மலையாளத்திலுள்ள பல்லொலி/அண்பல் ஒலி சார்ந்த ஒலிகளைப் பற்றி ஆராயும் மொழியியற் கட்டுரை. தமிழொடு மொழியியல் வகையால் தொடர்புடைய மலையாள மொழி பற்றியது.

செல்லத்துரை குணசிங்கம் எழுதியுள்ள வரலாற்றுத் துறைக் கட்டுரை மூன்றாவதாகும். இலங்கையின் திரிகோணமலை மாவட்டத்தில் கட்டுரையாசிரியர் அகழ்வாராய்ச்சி செய்துள்ளார். இவ்வகழ்வாராய்ச்சியால் சோழர் காலத்துச் சாசனங்கள் பல புதியனவாகக் கிடைத்துள்ளன. அவற்றைக் கொண்டு அப்பகுதியில் சோழப்பேரரசின் செல்வாக்கு எவ்வாறு இருந்ததென ஆய்வது இக்கட்டுரை.

ஒப்பிலக்கியத் துறையில் நல்ல பணிபுரியும் ஆங்கிலப் பேராசிரியராகிய வி.சச்சிதானந்தமும் டி.ஜெயபாலனும் இணைந்து உருவாக்கிய கட்டுரை நான்காவதாகும்.

புரட்சிகள் பல 'வெடித்த' காலத்தில் வாழ்ந்தவர் ஆங்கிலக் கவிஞர் பைரன்; அவருடைய படைப்பாகிய 'கெய்ன்' என்ற பாத்திரத்தையும் புரட்சிக்கவிஞர் பாரதிதாசனின் படைப்பாகிய இரணியனையும் ஒப்பிட்டுக் கணிப்பது இக்கட்டுரை.

ஈ. சா. விசுவநாதனின் கட்டுரை அடுத்து இடம்பெற்றுள்ளது உரைநடை வேந்தராகவே புகழ் சான்ற திரு வி. க. வின் பாடல் களைக் கொண்டு, திரு வி க. படைப்பை ஆராய்வது இச்சிறு கட்டுரை திரு வி. க வின் பாடல்கள் கவிதைகள் எனக் கொள்ளத் தக்கனவா என்ற ஐயத்தைக் கேள்வியாக்கி விடை காண்பது இக் கட்டுரையின் சிறப்புக் கூறு.

ஆறாவதாக இடம்பெற்றுள்ள கட்டுரை, சென்னைப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் ஜி. ஆர். தாமோதரன் எழுதியதாகும். இது, தொலைதூரங்களில் உள்ள பல்வேறு நாடுகளில் விளங்கும் பண்பாடுகளில் தமிழர் கொடையால் அமைந்த பங்கும் உண்டு என்பதைச் சான்றுகள் தந்து விளக்குவது இக்கட்டுரை. 'கலைக்கதிர்' என்ற விஞ்ஞான இதழ் தொடங்கிய வரும், தொழில் விஞ்ஞானியுமாகிய தாமோதரன் விஞ்ஞானத் தமிழ் வளர வேண்டுமென்ற கருத்தை இக்கட்டுரையில் வற்புறுத்தத் தவறவில்லை. பண்பாட்டு வரலாற்றில் வலிவுற்ற தமிழ்மொழி விஞ்ஞானத்துறையில் நலிவுற்றால் நலம் விளையாது என்பதை நினைவுறுத்துகிறது தாமோதரனின் கட்டுரைக் குறிப்பு.

18ஆம் இதழின் இறுதியில் உள்ள நான்கு கட்டுரைகள் தமிழ் மொழி, பண்பாடு, ஆராய்ச்சி ஆகிய துறைகளுக்கு மிகமிகச் சிறப் பான தொண்டாற்றி, மறைந்த சான்றோர் நால்வர்க்கு அஞ்சலி செலுத்துவனவாக அமைகின்றன. மயிலை சீனி. வேங்கடசாமி, நா. வானமாமலை, தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், தனிநாயக அடிகள் ஆகிய சான்றோர்களின் நினைவஞ்சலியாகிய கட்டுரை களில் அவர்களின் பணிகளின் திறன் கணிப்பும் உணர்கிறோம்.

பாரதத்திலும் வெளிநாடுகளிலும் வெளிவரும் ஆய்விதழ்கள் பலவற்றில் தமிழ்மொழி, இலக்கியம், வரலாறு, பண்பாடு தொடர்பான கட்டுரைகள் அவ்வப்போது வெளிவரத்தான் செய் கின்றன. ஆனால், அவற்றை ஓரிடத்தே ஒருசேரக் கண்டு பயனடையும் நிலை இதுவரை தமிழகத்தில் உருவாகாதது உண்மையில் ஒரு பெருங்குறையேயாகும். இக்குறையைச் சுட்டிக் காட்டுவதோடு இக்கட்டுரை நிறைவுறுகின்றது.

# Book Reviews In 1980

V. MURUGAN

This paper seeks to examine the development of Tamil Studies, both vertical and horizontal, in 1980 through reviews of books written **in** and **on** Tamil. These books include the fruits of both creative faculties and critical vitality, books that belong to the realms of the practice of literature and the theory of it. The first part of the paper will concern itself with the characteristic professional obligations of a reviewer, his relation to the reading public as well as to the world of art and the role he is to play in the realm of literary education, and again with the way he differs from the professional literary or rather academic critic and also the places where the critic and the reviewer ovarlap and complement each other. The second part of the paper will take a look at the practice of book reviews in various journal and magazines.

Through generations we have been **valuing** literature and other works of art, both oral and printed. We have been taking interest in them and assigning positive worth to them. This is how we are able today to have in our possession an invaluable wealth of books, infinitely rich and various, belonging to various historical and cultural phases that include the unrecorded epochs of human civilization. This could not have been possible if there had not existed a public

to read these books, appreciate and treasure them. This in turn could very well have been the result of certain elite readers of the society taking the artefacts to the door-steps of the generality of men. Hence reviewing, in the wider sense of the term, is not a new discipline, not a by-product of the advanced literary techniques evolved by the modernized literary realm. In fact, it dates back to those days when the written word was a far-fatched dream to mankind, when 'education' of the society was largely a matter of transmission through word of mouth. It was a time when valuing literature was synonymous with the evaluation of literature. The fact that literature lived in the memory of men for many a generation during the 'unformed' phases of human evolution, that it had a continued existence for centuries despite the total absence of any material means to preserve it, despite the uncontained fury and ravages of the phenomena of nature and man, goes to prove that mankind had had an intuited interest in literature and that this interest had been from time time awkened, aroused, renewed and stimulated by the more informed ones. Literature or for that matter any art form is the experience of the reader, visual and auditory. Though one cannot identify an artwork with the individual experience of the reader, the destinies of a created work are, in a large measure, determined by the reading individuals. Consequently, an artefact is nothing outside the experiences in reading or listening to by the readers. This experiences of the reader, in a vast majority of cases, is not direct, first hand; it is a derived experience. In the realm of arts 'middlemen' have to exist necessarily, just as they are a necessary evil in commerce and industry. A public that tries to do without the help of these middlemen brutalizes art and miscreates its cultural value. John Stuart Mill is right when he says that 'a poem is not heard but overheard'. These middle men exist at two levels; one, at the level of securing a reader for a book and a book for a reader. This is the primary level. There is the secondary level where directions and representations are given to a given work, where an attempt

at its recreation is made through a study of its ontological features and through a comparison and contrast of it with the other works of the same genre or theme. The primary responsibility the reviewer is entrusted with, and with the secondary one the academic critic is concerned. Though it is by no means an attempt at undermining the vital role the academic critic plays in the realm of literary education and at belittling his domineering literary personality, it must be emphasized here that he is in more than one way dependent on the reviewer. Literary criticism of a work would be the moonlight over a desert, if the work does not have a reader. And finding the reader the reviewer does for the literary critic It is not just that. The reviewer's function is much more complex than what appears, to be. A poem is not merely the experience of the reader; it is as I. A. Richards puts it, the 'experience of the right kind of reader'. Impliedly, theexperience of a reader is possible only with the right kind of book. As such, the reviewer, if he is to justify his existence as a reviewer, has to get the right book to the right reader. He is, given his humanistic and sociological obligations and responsibilities, bound to be a reader **par excellence**, well-versed in the psychology and sociology of the reading public. Thus his is three fenctions rolled into one: a trained reader, a social scientist and a psychological worker. At another level, the reviewer's job is two - dimensional. On the one hand, he acts as a bridge between the author and his readers. On the other, he prepares the ground, both in positive and negative ways, for the scholarly examination of the work by the academic critic.

As for the differences between the reviewer and the literary critic, the former is not very much concerned with the 'correction of taste', nor has he the scope for penetration and scientific objectivity which are the cardinal tenents of literary criticism proper. While the review tends to lead (or mislead) an **immediate** reader as to the readability and purposiveness

of a printed work, criticism provokes the reader to see the work in terms of its intrinsic abilities to **live**. While the latter, at both ends, is the concern of the trained minds, the former at its receiving and belongs to the generality of the reading public, at least it is so in this part of the world. While book reviews in the West tend to be more and more a serious and rigorous discipline bringing in the complex tools of literary criticism, we are still struggling even to see the **activity** of reviewing books a wholesome branch of literary study. Another seminal difference between the review of a current book and criticism is that the former is a judicial undertaking, a kind of value judgement with the reviewer in the position of a 'judge' while the latter is scholarly or academic in nature. The reviewer is expected to make an evaluative criticism, to give a clear indication of whether or not he thinks the book worthreading. On the other hand, the academic critic is concerned with the scholarly organization of literature with its multi-faceted ontological and thematic structure. The reviewer has in mind the fact that in current literature and scholarship there is an audience that wants to select its reading and that his function is one of teaching. This function may be called a judicial activity with the reviewer in the happy position of a judge As long as he is concerned with this verdict - passing activity, his work constitutes, both in the positive and nagative sences, a prologue to academic criticism, leading the critic into the living edifice of literature. But when the reviewer assumes an academic function, he tends to go wrong. While the job of the academic critic is to add to our understanding of the writer, the reviewer by virtue of his position as a judge frequently takes to praising or blaming the writer, inflating or deflating his reputation-and this is not considered unbecoming or improper on the part of the reviewer. The reviewer, a spokesman of the contemporary reading public, bases his taste and has his standard on the ideal or actual taste of the contemporary society, Naturally

that which does not conform to the conventions and convictions of the age is looked upon by him with suspicion or hostility, whereas the academic criticism, by virtue of its being a systematic study of literature tries to identify a writer's work using the tools of description, analysis and comparison. A review is 'based on good taste' - the taste of the reviewer as well as the taste of the contemporary society which he seeks to represent - and 'good taste, is a skill founded by practice on the knowledge' the reviewer has, whereas 'academic criticism is a structure of knowledge and knowledge has the power of veto over taste'. And while the academic critic with his "madness of much learning" has to unlock for the reading public the ontological and thematic organizations of the given artwork, the reviewer of it prepares the reader toward a primary understanding and foretaste of thematic structure of it. That is bringing in an analogy - while the reviewer is satisfied with guiding the reader towards the fruits of the tree telling him whether the fruits are ripe and delicious or unripe and bitter, the academic critic's concern is the tree in its totality, starting from its roots, through its cells, boughs and leaves, the beauty or otherwise of its flowers, the sweetness or bitterness of its fruits, to the adaptation of the tree to the changing rhythms of the seasons seeing the positives and negatives with the same critical sympathy and understanding, taking care throughout not to resort to any kind of 'sentence first and verdict afterwards' attitude. Thus in a civilized society review and criticism are co-existants, complementary. A harmonious relatedness between the two provides the reader with the right stimulus toward the understanding and enjoyment of the work.

The function or the benefit of review in literary education is manifold. As it is concerned with establishing a primary link between the work and the public, it has certain positive influences. Even the meanest student, who lacks the scholarly information of his betters, could make valid comments on the language and structure of the text. He need not wait for

the discussion and evaluation of the text, till he acquires an adequate store of literary, biographical and historical information. What is required of him in reviewing a book is that he should read the text closely from the beginning to the end, dispassionately, perceiving the unity that underlies the work. In such a primary readlng, the reviewer, notwithstanding his judicial approach, must view the given book with a **felt** sympathy. This sympathy combined with poise and understanding gives the review a sense of authenticity and genuineness. It is this characteristic of the reviewer more than anything else, that is responsible for establishing a living connectedness between the book and its readers.

Now coming to the reviews of book in and on Tamil in 1980, we find the state neither too envious nor too discouraging. It has no doubt been taking firm roots in literary education with a number of newspapers and journals both in English and Tamil fostering and nourishing it scrupulously. The significant among them include The Hindu, Indian Express (both English dailies), Journal of Tamil Studies (half-yearly, bilingual), Studies in Tamilology (Tamiḷayvu of the Madras University, Tamilarasu (monthly, English and Tamil) Dīpam (a Tamil monthly) and Saiva Siddhanta (quarterly). Here is a cross-section of the books reviewed in these journals and magazines during the year 1980.

**THE HINDU**

**January**

1. Lakshmi Narayanan, V., **Kongu Nattu Komagan**, (Madras-5, Star Publications) Reviewer: Govindarajan.
2. Chandrasekaran, R. E., **Mounam Kalaikirathu** (Madras-17 Narmada Pathippagam) Reviewer: P. Sundaresan.
3. Ramasamy, S. S., **Suriya Olimoolam Sakthi** (Madras-98, New Century Book House) Reviewer: S. R. Govindarajan (SRG).
4. Chandilyan, **Mangala Devi** (Madras-17, Vanathi Pathippagam), Reviewer: P. Sundaresan.

5. Kovi Manisekaran, **Raja Karchanai**, (Madras-1, Thirumagal Nilayam) Reviewer: SRG.
6. Aravindan, M. V., **Silambu Chelvi** (Trichi-8, Kannammai Pathippagam,) Reviewer: M. Arunachalam.

**February**

1. Iniyavan, **Vedanthangal**, (Vinayakanallur, Chingleput Dt, Vasuki Noolagam) Reviewer: M. R. Rangarajan.
2. Kamatci Srinivasan, **Tirukkuralum Viviliamum** (Madurai University) Reviewer: K. K.
3. Navaliyur Natarajan, **History of Sanskrit Literature in Tamil** (Madras-17, Sangeetha Pathippagam), Reviewer: Srirama Desikan.
4. Narayanan, V., **Kalaivanar**(Madras-17, Kalaivanar Nilayam) Reviewer: G. Ramakrishnan.
5. Pattammal, D., **Madhava., Geethem** (Madras - 2, Higginbothams Ltd.) Reviewer: SVK.
6. Annals of Oriental Research (University of Madras XXVIII, Part II) Reviewer: RNS.
7. Najan, V., **Sarva Mangala (Mahaamaha Mahathuvam)**, (Pradipa Prasuram) Reviewer: RRC.
8. Ilanthuraivan, **Gnana Chitharalkal** (Kavi Govindan Pathippagam) Reviewer: V. R. Balasubramanian.
9. Iniyavan, **Ellam Manasuk kulle** (Vasuki Noolagam) Reviewer: VRB.

**March**

1. Gnanasambandam, A.S., **Ravanan Matchiyum Veezhchiyum** (Madurai, Meenatchi Puthaga Nilayam) Reviewer: M. Arunachalam.
2. Jagasirpiyan, **Indira Dhanusu** (Vanathi Pathippagam) Reviewer: M. R. Rangarajan.
3. Balasubramaniam, S. R., **Later Chola Temples** (Madras-28, Mudgala Trust) Reviewer: R. Nagasamy.

4. Vaandu Mama, **Veerakesariyin Yattirai and Meen Azhagi** (Vanathi Pathippagam) Reviewer: MRK.

5. Vasantha. R., **Chalanam**, (Madras-14, Palaniappa Brothers) Reviewer: P. Sundaresan.

6. Kavignar Bekan, **Tamilthai Pillai tamil** (Trichi, Santhi Pathippagam) Reviewer: Vedham.

7. Lakshmi Rajarathinam, **Idaiyakoil** (Madras-4, Kalaimagal Karialayam) Reviewer: SRG.

**April**

1. Hamsa Danagopal, **Ennetheril Aval** (Meenatchi Puthaga Nilayam) Reviewer: SRG.

2. Anuthama, **Suruthibetham** (Madras, Amudha Nilayam) Reviewer: SRG.

3. P. Nilakantan, **Paavangal Dharmangalaginrana** (Vanathi Pathippagam) Reviewer: P. Sundaresan.

4. Velayutham, N.A., **Kavimanium Avarathu Kavitai Kanikalum** (Nagarcoil, Anbu Nilayam) Reviewer: A. N. Maharabooshanam.

5. Sakthi Devi, **Kovai Nagara Varalaru** (Coimbatore, 34- Sakthi Devi Printers) Reviewer: C. Murugadoss.

6. Chandilyan, **Kamban Kanta Pengal** (Vanathi Pathippagam) Reviewer: S. N. Srirama Desikan.

7. Gowrirajan, **Aval Oru Vanavil** (Madras-56, Murugan Pathippagam) Reviewer: P. Sundaresan.

8. Jayarathan, **Antha Iravin Pannirendumani Nerangal** (Madras-17, Thirumagal Pathippagam) Reviewer: Vedham.

9. Govindrajulu, S. and Chandrasekaran, M., **Thirukkural in Ancient Scripts** (Madras Christian College) Reviewer: K. V. Raman.

10. Rajam, N., **Ilamaiyin Ragasiyam** (Vanathi Pathippagam) Reviewer : S. Swaminathan.

11. Aranthai Narayanan, **Jakka** (Madras-98, New Century Book House) Reviewer: S.R. Govindarajan.

**May**

1. Kannan, R,. **Vellai Kakkaikal** (Madras-5, Tamil Writers Co-operative Society) Reviewer: P. Sundaresan.
2. Neelamani, K. P., **Anbu Panikku Oru Annai Teresa** (Madras-28, Gayathri Publication) Reviewer. M.S.
3. Mahadevan, K. and Rajaram, K., (Translaters) **Ariviyal Kantupidippukkalin Varalaru** (Madras-31, Southern Languages Book Trust) Reviewer: C. Raghavan.
4. Subramaniam, Puthaneri. **Enrum Ilamai** (Madras-18, Cenotaph, First St) Reviewer : R. Sundaresan.
5. Chellaiah M., **Seithikal** (Palaniappa Brothers) Reviewer: R. Sundaresan.

**June**

1. **Perunchitranar Padalkal Kanicharu**, 3 Vols. (Madras-5, Thenmozhi Min Achagam) Reviewer: R. Sundaresan.
2. Selvaganapathi, Pon. **Nizhalgalai Nokkiya Poruttangal** (Madras-2, Makkal Veliyeedu) Reviewer: Krishna Srinivas.
3. Vimalanandham, Madhu. S., **Tamil Ilakkia varalaru** (Madras-5, Meenatchi Puthaga Nilayam) Reviewer: M. Arunachalam.
4. Jayakanthan, **Paattimarkalum Pethimarkalum** (Meenatchi Puthaga Nilayam) Reviewer: S.R. Govindarajan.
5. Ramasamy, N.S., **Mamallapuram An Annotated Bibliography** (Madras-28, New Era Publications) Reviewer: K. N. Bhashyam.
6. Jambunathan, M.R., **Rig Vedam Part, II** Trans. in Tamil. (Bombay-52, Radha Nivas) Reviewer : Seshadri.
7. Puliyur Kesikan, **Shri Mangadu Kamatchiamman varalarum Pugazharamum** (Madras-24, Vijayavani Publications) Reviewer: Vedham.
8. **Thirukkannapuram, Puranam Souriraja Permal Temple, Thirukkannapuram** (Tanjore) Reviewer : DVV.

9. Kalyan, **Sri Vidayapuram Mahan Charithamum Mahamaya Vilakka Uraiyum** (Madras-14, Trisakthi Pathippagam) Reviewer: MCS.

**July**

1. Subramanian, S.V., (editor) **Kuvalayanandam 1 and 2 Chandiralokam** (Madras-20, Tamil Pathippagam) Reviewer: K. Karunakaran.
2. Manian, **Ennai Pada Sonnal** (Palaniappa Brothers) Reviewer: K. Sundaresan.
3. **Winslow's A Comprehensive Tamil and English Dictionary** Reviewer: G. Ramakrishnan.
4. Jayanthan, **Arumbukalai** (Madras-17, Narmada Pathippagam) Reviewer : P. Sundaresan.
5. Bhaskaran, N. Naloor , **Kolangal** (Madras-88, Banu Pathippagam).
6. Velusamy, N., **Seerudai Kanda Chemmal** (Madras-1, Paari Nilayam) Reviewer: Bhashyam.
7. Gnanaprakasam and Kalyani, T., **Maavatta Aatchi Thalaivar** (Thirunelvely, Arivuchudaragam) Reviewer: G. Ramakrishnan.
8. Sambandan, Ma. Su., **Achum pathippum**(Madras-1, Tamilar Pathippagam, Paari Nilayam).
9. Nachiappan, C.N., (Commentation), **Anjaneyar Kavasam and Navagraha Stotram** (Karaikudi, Ponnazhagammal Noolagam).

**August**

1. Sundaravadivelu, N.D., **Nanju Undavar** (Vedharanyam Kasturiba Gandhi Kanya Gurukulam) Reviewer : M. R. Rangarajan.
2. Balakumaran, **Eadho Oru Nadhiyil**(Narmada Pathippagam) Reviewer: P. Sundaresan.
3. Maharishi, **Koodu Sellum Paravai** (Madurai, Meenatchi Puthaga Nilayam) Reviewer: P. Sundaresan.

4. Ganapathi, V., **Satya Jothi** (Madras-4, 12, Dwaraka Colony) Reviewer: P. Sundaresan.

**September**

1. Parthasarathi, N.C. and Dwaraka Parthasarathy, **Compositions of Sri Ramnad Srinivasa Iyengar** (Madras-36, Sangeeta Kalasala Publications) Reviewer: SVK.
2. Vaandu Mama, **Athisaya Veenai** (Vanathi Pathippagam) Reviewer: M.R. Rangarajan.
3. **Gujarathi Chirukataikal** (New Delhi, National Book Trust) Reviewer: C. Raghavan.
4. Maladhi Sundar, **Vakil Sumitra** Trans. SVS (Vanathi Pathippagam) Reviewer: S.R. Govindarajan.
5. Balasubramanian, C. **A Study of the Litreature of the Chera Country** (Madras University) Reviewer : A. N. Maharabushanam.
6. Balasubramanian, Ku. Ma., **Mudarkural** (Vanathi Pathippagam) Reviewer: M.R Rangarajan.
7. Ismail, M. M., **Allavin Azhagia Thirunamangal** (Madras-1, Millat Publishers) Reviewer. Sujaudin Sarkar.
8. Arangarajan. S. **Porul Kol** (Paari Nilayam) Reviewer: S.N. Srirama desikan.
9. Kavi Iyarappan, **Deiva Darshanam** [(Madras-15, Barathi Kalaikazhaga Veliyeedu) Re,iewer: Vedham.

**October**

1. Sri Acharya, P. and Saraswathi Ramanathan, **Kamban Kalaikkovilukku Oru Kaivilakku** (Vanathi Pathippagam) Reviewer: MCS.
2. Manisekaran, Ko.Vi. i. **Makudangal** ii. **Porkizhi** (Vanathi Pathippagam) Reviewer: R. Sundaresan.
3. Ghori, A.A. W.K. **Thadumatrangal Pathinanju** (Palayankottai, Maharajanagar) Reviewer: M.R. Rangarajan.
4. Gopalan, S., **The Social Philosophy of Tirukkural** (Madras-31, East-West Press) Reviewer: P. S. Narayanan.

**November**

1. Gurusamy Sarma, Su. Vai., **Premakalavadyam**, (Madras-35, Vanavil Prasuram) Reviewer: R. Sundaresan.
2. Neela Padmanathan, **Vattathin Veliye** (Narmada Pathippagam) Reviewer. M.R. Rangarajan.
3. Yogi, S. T. S., **Kavi Ulagil Kamban** (Madras-17, Yogiar Publication) Reviewer: MCS.
4. Kasirajan, R., **Ulakak Kappiyangal** (Madras-96, Perungudi, Tamil Pathippagam) Reviewer: M. Arunachalam.

**December**

1. Subramanian, S.V. (ed) **Prabandatheepam** (Tamil Pathippagam) Reviewer: A.A. Manavalan.
2. Chidambaram, V.N., **Punniya Boomiyil Punitha Yathirai** (Vanathi Pathippagam) Reviewer: K. N. Bashyam.
3. Gnanaprakasam, V. M. and Kamaliah, K. C. (eds) **Ayvulagam Porrum Asiriya Manikal** (Academy of Tamil Culture) Reviewer: A.A. Manavalan.
4. Periasamy Thooran (Comp.), **Barathiyum Samugamum** (excerpts from poems) (Vanathi Pathippagam) Reviewer: S. Kandasamy.
5. Rajam Krishnan, **Koottuk Kunjugal** (Madras-5, Paari Puthagap Pannai) Reviewer: P. Sundaresan.
6. Aranga Srinivasan, **Manitha Divam Gandhi Kathai** (Trichy, Tiruvalluvar Pathippagam) Reviewer: A.K. Chettiyar.
7. Muthuganesan, **Amudham**, (Tanjore, Appar Puthaga Nilayam) Reviewer: Vedham.
8. Dasan, N. R., **Enadu Idayam Unadu Vasalil** (Sivaganga, Arangam Publications) Reviewer : P. Sundaresan.
9. Mohan, Justice, S. **Chinthanai Malarkal** (Madras-1, Thirumagal Nilayam) Reviewer : MS.
10. **Tamil Eelam** (London Eelam Tamils Association)Reviewer; M. Pattabiram.

## INDIAN EXPRESS

**January**

Sundararajan, K. V , **The Art of South India: Tamilnadu and Kerala**, Reviewer: N.S. Ramasamy.

**February**

Balasubramaniam, S. R., **Later Chola Temples**, Reviewer: N.S. Ramasamy.

**July**

1. Kuppusamy, A.,: **The Crest Jewel of Divine Dravidian Culture**.
2. Maharajan, S., **Thiruvalluvar**(Sahitha Academy) Reviewer: Dr. S. Thiruvengadachari.
3. Thirumalai, R., **Rajendra Vinnagar** (TamilNadu State Archaelogy Dept. Manuscript).
4. Nagasamy, R., **Art and Culture of Tamilnadu** (Department of Archaelogy).

**August**

1. Sankar Raj Naidu, S. and Ganesan, S. N. (Translators) **Silappathikaram** of Ilango Adigal in Hindi (Madras University).
2. Burton Stein, **Peasant State and Society in Medieval India** (Oxford University Press) Reviewer: Krishnan.

**November**

1. Gopalan, S., **The Social Philosophy of Tirukkural** (Madras-31. Affiliated East-West Press).
2. Murugesa Mudaliyar, N., **The Relevance of Saiva Siddhanta Philosophy** (Annamalai University).
3. Mahalingam (Editor-in-Chief) **Mythology to History through Astronomy** (Pollachi, NIA Publications).
4. Sampath Iyengar, G.S. and Seshadri, G.S. **Kishkinda to Lanka** (Madras, International Society for the Investigation of Ancient Civilization).

5. **Ananda Vikatan Pon Vizha Malar** (Madras-2, Vasan Publications).

**SAIVA SIDDHANTA** (Quarterly)

**The Saiva Siddhanta Maha Samajam, Madras-4.**

1. Shanmugam Pillai, M (ed), **Thanigai Venba with notes** Publisher : T. K. Narayanasamy (2. Seetharamanagar, Cuddalore).
2. Ambigai Pahan, S., V. **Kanagasabai Pillai** (Sri Lanka, Mallakam).
3. Ramachandran, T.N. (English Trans.) **Barathi, Vinayakar Naan Mani Maalai.**
4. **Kandapurana Manetheral** (Pub : T. K. Narayanasamy Cuddalore).
5. Murugesa Mudailiyar, N., **The Relevance of Saiva Siddhanta Philosophy** (Annamalai University) Reviewer: P. Thirugnanasambandan.
6. Arunachalam, P., **Saiva Samayam : An Introduction** (Nagarcoil Ramavarmapuram) Reviewer: C.N. Singaravelu.
7. Ramachandran, T.N. (Trans), **Bharatiyar's Kuyil Pattu,** Text with Trans. (Tanjore, TNR Memorial Library).

**JOURNAL OF TAMIL STUDIES**

1. **Winslow's a Comprehensive Tamil and English Dictionary** (New Delhi, Asian Educational Services), Reviewer K.D. Thirunavukkarasu.
2. Richard L. Gage, **Daisaku Ikeda and Yasushi Inoue, Letters of Four Seasons,** Trans. (Tokyo, Kodansha International Ltd) Reviewer. V. Murugan.
3. Bhaskaradas, E.K., **Akapporul Patalkalil Toli** (Coimbatore, Krishnasamy Nagar) Reviewer : K. D. Thirunavukkarasu.
4. Sundaramurthy, E., **Tirukkural Parimelalakar Urai : Nunporul Maalai** (Madras, Thenmozhi Noolagam) Reviewer : K.D. Thirunavukkarasu.

5. Mayandi, R, **Sanga Ilakkiyathil Karpanai** (Madras-29, Aiyavu Naidu Kudiyiruppu), Reviewer: L.Gloria Sundaramathi.

6. Maharishi Devendranath Tagore, **Narayan Choudhri**, Trans. K. Meenatchisundaram, Reviewer: N. Gadikachalam.

7. Aranga Srinivasan, **Manitha Thaivam Ganthi Kaathai** (Trichi, Chinna Cheety Street,Thiruvalluvar Pathippagam) Reviewer: A. Sivalinganar.

**TAMIZHAIYU-Mathippurai** Maalai, University of Madras.

1. Shanmugam Pillai, M. (ed), **Tiruttanikai Kanthappa Aiyar**, Tiruttanigai Sannithi, Publisher: T. K. Narayanasamy, (2, Seetharamanager, Cuddalore Reviewer: V. Jayadevan.)

2. Balasubramanian, R., **Tamilarnattu Vilaiyattukal** (Madras, International Institute of Tamil Studies) Reviewer: V. Jayadevan.

3. Subramaniam. S. V. and Irulappan, K. M. (eds) **Heritage of the Tamils: Language and Grammar** (Madras, International Institute of Tamil Studies) Reviewer: V. Jayadevan.

4. Sambandan, Ma. Su., **Accum Pathippum** (Madras-1, Tamil Pathippagam) Reviewer: M. Shanmugam Pillai.

5. Bhagavati, K. **Tamilar Aadaikal** (Madras, International Institute of Tamil Studies) Reviewer: K. Krishnamurthi.

6. Subramanian S. V. (ed) **Pirabanta Deepam** (Madras-96, Perungudi, Tamil Pathippagam) Reviewer : A. A. Manavalan.

7. Arangarasan, Maruthur S., **Porul Kol** (Trichy, Maruthur. Balamurugan Pathipagam) Reviewer : E. Sundaramurthy,

8. Mangala Murugesan, N. K., **Tamilar Aatchi Murai; Sanga Kalam** (Madurai Koodal Publishers) Reviewer: E. Sundaramurthi.

This is not a complete list. There are magazines like **Deepam** and **Tamilarasu** that help the reading generality to 'overhear' (to use John Stuart Mill's term) some of the fruits

of scholarship and creativeness. What this popular public medium does toward furthering the cause of literary education in particular and that of human civilizedness in general cannot be slighted. The social scientist will agree that in this extremely time-governed, time-conscious age, the role of book reviews is significant. They are in their own way responsible for drawing the reader to the world of books. A number of books on popular subjects owe their popularity to the positive 'propaganda' given by public journals and magazines. Today an average reader invariably turns to the reviewer to select his reading, to be guided to the right book. The writers too, at least those in their formative stages, look to the reviewer to get the a sympathetic reader. This state of affairs imposes a special kind of responsibility on the reviewer as much as on the journal. As he is expected to perform a vital role in stabilizing the upper layers of the realm of literary education, in furthering the right kind of literary consciousness, he has to transcend the barriers of personal prejudices and such extraneous considerations as political convictions, religious predictions and so on. An intellectual understanding of the writer, a critical sympathy for him must pervade the whole of his review. He should at no stage lose sight of the fact that he is dealing with an experience alive and living, an experience which can never be good or bad, moral or immoral but can only be artistic or inartistic or non-artistic.

Now, a look into the reviews of the books listed above gives one the inevitable feeling that we are yet to come of age in this sphere. Our review - consciousness like many other fruits of human intelligence is acquired from the Western soil, which by itself cannot be wrong or unnatural. After all, interdependence and interfertilization are the marks of human growth and development. It is undeniable that many positives characterize our reviews. There is, for example, Indian Express reviewers creative criticism of the works in hand (16-11-80). Such reviews impressively exemplify the

right approach to the study of an artefact. Again there is K D. Thirunavukkarasu's poised evaluations in the Journal of Tamil Studies, bringing in his tested critical insights and literary scholarship. Some of the reviews in The Hindu are noted for their objectivity and dispassionateness. A. A. Manavalan's reviews, in their economy of words and balance, exemplify the right approach to the popular kind of literary studies.

However, one is tempted to compare these reviews with those in Hudson Review, The Times Literary supplement and other such journals. These journals compulsively reveal the fact that review is a serious kind of activity, a scientific discipline, which X and Y cannot take to. In the Western world, it is a passionately cultivated branch of scholarship being fed and watered by minds of acknowledged erudition and tested poise. Their intellectual courage and integrity which they bring to bear on their reviews have contributed in no small a measure to the growth of time-honoured works of art. Our reviews in this respect are in an unenviable position. Some of the reviews in The Hindu make one wonder whether we have understood the art and science of book-review at all. A majority of reviews in this daily are but sentences outlines of the thematically significant chapters. Another unhelpful attitude of a number of Tamil reviewers is that they seem to conceive of the valuing and evaluation of created piece as identical with one another. There are certain journals-the journals avowedly concerned with setting standards in criticism - which frown at the very idea of a critical examination in reviewing. The reviewers working for these journals content themselves in pointing out the errors in printing. It is sad to note that some of us, in our passion to be 'polite' and 'unoffending', give a go-by to our intellectual honesty and courage, the type of courage that will make one call a spade a spade. Another uncreative tendency one notices in the reviews of books in newspapers is that these newspapers have handful of reviewers who will review books of all disciplines

of human thought. Thus one finds the same man reviewing a work on architecture, another on drama and a third on religion. The principal danger in this type of review is that the reviewer cannot bring in an abiding sense of scholarship equally in all his reviews. Again, there is the danger of the reviewer applying the same yardstick to all the genres of the art which will tend to hamper the creative development of the discipline of review-writing. Though this is understandable in this world of mammon - worship and mechanisticness, it will not help either the cause of scholarship or that of literary education. The journals and newspapers might well enlist the services of specialists for reviewing the specialists works. It will not be in the interests of shaping a discriminative reading public and of fostering the growth of a **readable** print, if the reviewer does not have the courage to distinguish a horse from a donkey and if he uncreatively resorts to certain stereotypes like "it is an appreciable attempt" and "the writer has made a good attempt at.. ..." There is still another unwholesome trend among the reviewers in Tamil, namely, their going in for "The first chapter deals with......" "The second chapter speaks about.. ..." and so on.

It is unjust to take it too far. We are a developing nation not only in economic and political spheres but in the realm of education also. Growing through errors is recognized to be a psychologically healthy trend. But let the perfection be not far off.

# எண்பதில் மரபுக் கவிதை

ச. வே. சுப்பிரமணியன்
அன்னி தாமசு

I

காலம் காலமாகத் தொடர்ந்து பின்பற்றப்பட்டும் பயின்றும் வரும் எண்ணங்கள் சொல் செயல் பொருள்... எதுவாயினும். மாறாது அமைவது பற்றி மரபு எனச் சுட்டத்தக்கது. ஏற்கெனவே நிலவிவரும் கொள்கைகள், கோட்பாடுகள், முறைகள், மரபு எனப் படுவதால், மாறாமையே மரபு எனத் தோன்றும். ஆயின் அடிப் படை மாறாது இருக்க, அதனில் வேரூன்றிய வளர்ச்சியும் விரிவும் கூட மரபில் புதுமை சேர்க்கலாம். எனவே பழங்காலந் தொட்டு அமைவதனைப் பழமரபு எனவும், அதில் மாறிவரும் புதுமை யினைப் புதுமரபு எனவும் மரபுமாற்றம் எனவும் கூறலாம் மாறுவது மரபல்ல எனத் தோன்றினும், அம் மாற்றம் பயிற்சியும் ஆட்சியும் செல்வாக்கும் பெற்று விளங்கும்போது, அதுவும் மரபாக உருவாகுதல் உண்டு

இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க்கவிதை வரலாற்றில் மேனாட்டு இலக்கியத் தாக்கம் காரணமாக வரம்பில் கவிதை தனி இடம் பெறுகின்றது. புதுக் கவிதை எனும் பெயருடன் இது தனித்து வளர்ந்தும் விரிந்தும் பயின்றமை பற்றி, பழ முறைப்படி எழுந்த கவிதைகள் மரபுக்கவிதை என அடை சேர்த்து மொழியப்பட லாயின. இங்கு மரபு எனப்படுவதால், யாப்பு - வடிவ அமைப்பில் மரபுநிலை கருதப்படுகின்றது எனக் கூறலாம்.

பொருள், வடிவம் வெளியீடு ஆகிய முக்கூறுகளால் கவிதை உருவாகும் என்பதால், மரபு எனப்படும்போது இம்மூந்நிலை களிலும் உள்ள மரபு நிலை, மரபுத்தொடர்ச்சிப்பாங்கு, ~~கருதப்~~

கருதப்படல் வேண்டும் என நினைக்கலாம். ஆயின், புதுக்கவிதை என்பதிலிருந்து அடிப்படையில் வடிவமே இம் மரபுக் கவிதையை வேறுபடுத்திக் காண முதன்மைக் கருவியாக, இன்றியமையாத துணையாக அமைவதனால், வேறுபடுத்திப் பகுத்துக் காண உதவியாக அதுவே கொள்ளப்படுகின்றது.

'கைக்கிளை' என்பதால், பொருளில் மரபுத்தொடர்ச்சி காட்டி வடிவில் புதுக்கவிதையாகும் நூல்களும் (சான்று: ஒரு கைக்கிளை, வில்லியனூர் பழனி, தமிழ்ப் புத்தகாலயம், 1980), 'சிலேடை' என்பதால் வெளியீட்டில் மரபுத்தன்மை கொண்டு வடிவால் வரையறையின்மை கொள்ளும் பாநூல்களும் இங்குக் கொள்ளப்படவில்லை.

(சான்று : டாக்டர். கலைஞரின் சிலேடைகள் (தொகு) கங்கா மணியன், தாமரை வெளியீடு, 1980)

எண்பதில் வந்த மரபுக்கவிதைத் தமிழ் நூல்களைக் காணும் போது, சில பொதுவான எண்ணங்கள் தோன்றுகின்றன.* எண்பதிலேயே எழுதப்பட்டு அவ் ஆண்டிலேயே வெளிவந்த மரபுக் கவிதைகள் ஒருபகுதியாக, பல முன் ஆண்டுகளில் எழுந்த பாவும் சிறு நூலும் முழு நூல்வடிவில் உருவாகிக் காலப்பண்மையும் பெருக்கும் கொள்வது மற்றொரு பகுதியாக அமைகின்றது. முன்பே அச்சுவடிவம் கொண்டு தற்போது மீண்டும் பதிப்புருவம் கொள்வனவும், நூற்றாண்டுக் காலப் பழமையுடையதாயினும் தற்போது மட்டுமே அச்சில் ஒளிருவனவும் கூடக் காணப்படுகின்றன. பாரதி, பாரதிதாசன், கலியாண சுந்தரம் பாடல் பதிப்புகள் முன்னதிலும், ஞாயிறு ஆயிரம் எனும் தண்டபாணி சுவாமிகள் படைப்பு போன்றன பின்னதிலும் சான்றாகிப் பொருந்துகின்றன.

எனவே 1980 - இல் வெளிவந்த சுமார் முப்பத்தைந்து தமிழ் மரபுக் கவிதை நூல்களிலும் எழுபத்தைந்து விழுக்காடளவே புதியதாக அச்சொளி காண்பனவாக அமைகின்றன. இவற்றுளும் பல முன் ஆண்டிலேயே - முன் பல ஆண்டுகளிலேயே உருவாகிக் கால இடைவெளி காட்ட வாய்ப்பு உண்டு எனக் கவிஞரின் முன்னுரையும் சில பாடலின் அடிக்குறிப்பும் காட்டுகின்றன. உள்ளெழுச்சியின காரணமாக உருவாகி, எண்ண வடிகாலாகிச் சொல் வடிவம் பெற்றுக் கவிதை ஆக்கம் கொள்கின்றது எனினும்

* Refer:-Indian Literature, Vol XXIV, No. 6 (November - December 1981), Pp. 167 - 174; "Tamil - The Progressive Path" - S. V. Subramanian.

பல ஆண்டு முயற்சியும் பெருங்கவிதையை உருவாக்குவதால், ஆக்க ஆண்டும் அச்சியாண்டும் வேறுபட வாய்ப்பு அமைகின்றது. அரங்க சீனிவாசனின் 'மனித தெய்வம் காந்தி காதை' இவ் ஆண்டின் அச்சுவெளியீடானபோதும் அரங்கேறியது முன் ஆண்டாகக் குறிக் கப்படுதல் (1979) இங்குச் சான்றாகத் தக்கது. நூலுள் இக்குறிப்பு அமைகின்றது.

இறைமணி ஆழி கோள்கள் எண்ணின் ஆங்கில ஆண்டின் கண்
நறை மொழி அரங்க சீனிவாசன் உள் நயந்து பாடும்
பொறை மலி காந்தி அண்ணல் புண்ணியப் புனிதக் காதை
நிறைவுற அறிஞர் முன்னே நெடிது அரங்கேறிற்று அன்றே (68)

(இறை 1, மணி 9, ஆழி 7. கோள்கள் 9. இறைமணிஆழிகோள்கள் - 1979 ஆம் ஆண்டு).

எண்பதின் இம் மரபுக் கவிதை நூல்களைப் பலவகையாகப் பகுத்துக் காணலாம். ஏற்கெனவே கண்டவிதம், முன்பு வழங்கி யதை நூலாகத் தொகுத்தனவும், நூலாகப் புதிதாக எழுதப் பட்டனவும் உள. அன்றியும் பாடலின் பொது அமைப்படிப் படையினைக் கொண்டு காணும் போது, தனிப்பாடல் நிலையின எனவும் தொடர்ப்பாடல் நிலையின எனவும் பகுத்துக் காணவும் முடிகின்றது. இவற்றுள், பெரும்பான்மை தனிப்பாடல் நிலை யினவும், சிறுபான்மை தொடர்ப்பாடல் நிலையினவும், ஏற் கெனவே உதிரிச் செய்யுளாகத் - தனிப் பகுதியாக மலர்களிலும், பத்திரிகைகளிலும் பிற தொகுப்புகளிலும் வெளிவந்து, பின் இங்கு எண்பதில் இப்போது கிடைக்கும் நூல்உருக் கொள்வனவாம். பிற, அதாவது சிறுபான்மை தனிப்பாடல் நிலையினவும் பெரும் பான்மை தொடர் நிலையினவும் நூலுருவுக்காகவே எழுதப்பட்டு, அந்நோக்க நிறைவேற்றம் பெறுவனவாம்.

மரபு வடிவு பின்பற்றப்பட்ட இந்நூல்களைக் காணும்போது, யாப்பு நிலை பற்றிய சில எண்ணங்களும் பகுப்பு நிலைகளும் வெளிப்படுவதைக் காணலாம். மரபு வடிவங்களுள், ஓரளவு கடின வரையறையுடைய நாற்பா—இனம் போன்றவற்றால் ஆகி வருவன ஒருபாலாக, சிந்து, கண்ணி, தாழிசை போன்றன செய்யுள் வடிவாகி அமைவனவும் காணப்படுகின்றன. அத்துடன் நாட்டுப் புறப்பாடல் மெட்டு பின்பற்றப்பட்டு அமைதலும், கீர்த்தனை அமைப்புகளும் காணப்பட்டு, இசையடிப்படையிலுருவான புது மரபு வடிவங்களையும் தருகின்றன,

இம்மரபுக் கவிதைகள் யாருக்காக எழுதப்படுகின்றன எனவும் சிந்திக்கலாம்; யாரால் எழுதப்படுகின்றன எனவும் நினைக்கலாம்.

யாப்பிலக்கண மரபு முற்றிலும் தெரிந்தவரும் அவற்றைப் பற்றிய எண்ணம் இல்லாதவரும் கூடப் புதுக்கவிதை புனைகின்றபோது தமிழ்-இலக்கணக் கல்வி முழுமையுடைய பண்டிதர்—கவிஞர்—இளைஞர் - ஆசிரியர்...... மரபுக்கவிதை புனைகின்றனர். ஆயின் இவை பண்டிதர்க்காகவே எழுதப்படும் கடுநடையினவாகவோ, கற்றவர்க்கு மட்டுமே பயன்படும் சொற்கோப்பினவாகவோ அமையாமையால் இவற்றிற்கோர் பொது அவையைத் தேடித் தர இடனமைகின்றது. இசை வழியாகப் பிரச்சாரம் பெற்றுப் பொது மக்களை அடையும் பாங்கில் கீர்த்தனையாகவும்(அமுதத்தமிழிசை-கு. சா. கிருஷ்ணமூர்த்தி, முத்தமிழ்ப்பண்ணை), பிஞ்சு உள்ளங்களையும் தொடும் வண்ணம் எளிய உருவில் குழந்தைப் பாடலாகவும் (எலி கடித்த பூனை -குழ. கதிரேசன், மீனாட்சி புத்தக நிலையம்) கூட இவை வடிவ வெளியீடுகள் பெற்றுள்ளன.

ஏற்கெனவே நிலவிவந்த மரபுகளின் பின்துணையோடு எழுந்த இந்நூல்களைப் புதுமை நூல்கள் எனவோ எண்பதின் சீர்மையுடையன எனவோ கூறலாமா என ஐயம் தோன்றலாம். இவை ஏற்கெனவே வழங்கி வந்த மரபுக் கவிதைகளின் வெறும் மறு உருவாகவோ, பதிப்பாகவோ, நகலாகவோ...அமையுமெனின் இவை சிறப்புக்குரியன வாகா. ஆயின் கவிஞனின் தனித்தன்மையும் காலத்தின் புதுமையும், சூழலின் சார்பும், சொல் புதிது—சுவை புதிது .. என்ற மரபினை அளிக்கும்போது, 'இவை மரபு நெறியின் வளர்ச்சிப் பாதையில் பிற பல மைல் கற்களாக உருவாகின்றன.

மரபு வடிவிலமைந்த இப்பாடல்களை, மரபுப்பொருள் பாடுவன எனவும் புதியபொருள் நவில்வன எனவும் கூட அணுகலாம். இப்புதுமைப்பொருள் முற்றிலும் நவமானதாக அன்றி, புரட்சி, பொதுவுடைமை, மார்க்சிசம்... போன்ற 'புதுமரபு' நிலையினவாகவே காணப்படுகின்றது. மரபுப்பொருள் எனக் கருதும்போது அகம், புறம், அறம், பக்தி, இயற்கை, வரலாறு, நிகழ்வு...என விரிந்து செல்ல வாய்ப்பு அமைகின்றது.

பொருளில் போன்றே வெளியீட்டிலும் மரபும்—புதுமையும் கருதலாம். அணி, கற்பனை, மிகைக்கூற்று, வருணனை, குறியீடு ...போன்ற இதன் பல கூறுகளில் பழமையும் புதுமையும் இணைகின்றன. கவிஞனின் தனித்த ஆளுமையும் ஆற்றலும் இதற்கு இடனும் களனும் வகுக்கின்றன மரபு நிலத்தில் ஆழ வேரூன்றியும் புதுமை வானில் கிளைபரப்பியும் இவரும் இவர் கவிதையும் அமைவதாகத் தோன்றுகின்றது.

எண்பதின் இந் நூல்களின் ஆசிரியர், தம்மோடு ஒத்த காலத்தினரின் (Contemporaries) தோய்வு காட்டுவதுடன், இந்நூற்றாண்டின் கவித்தலைமுறையினரின் தாக்கமும், முன் நூற்றாண்டுகளின் பழந்தலைமுறைக் கவிஞரின் செல்வாக்கும், ஏன், சங்க இலக்கியம் தொல்காப்பியம் வரைச் செல்கின்ற பழநோக்கும் காட்டி அமைகின்றனர். இதனால் 'காலமும் மரபும்' எனக் கருதும் போது முந்திய காலங்கள் பலவற்றின்—காலநிலைகள் பலவற்றின் மரபுத்தொடர்ச்சி அமைவதாகக் கருத முடிகின்றது. பொருள், வடிவம், வெளியீடு ஆகிய முந்நிலையிலும் இதனைக் காண முடிகின்றது. இலக்கிய வகை, இலக்கிய அமைப்பு, தொடராட்சி, உவமை, சொல்லாட்சி, குறியீடு... போன்ற பல வகைகளில் இம் மரபு புலப்படுகின்றது. கதிரவன் ஏழு பரிபூண்ட தேரில் வருவதாகத் தரப்படல் (ஒன்பது செண்பகப்பூ, 156) இதற்கு ஒரு சான்றாம்.

இவ்வாறு மரபு பின்பற்றப்பட்ட விடத்தும் சில பொது—புது மாற்றங்களும் காணப்படுவது சுட்டத்தக்கது. முன் நூற்றாண்டுகளில் இறைவனுக்கும் மன்னனுக்கும் அமைந்த தலைமை இங்குப் பெரும்பாலும் மனிதனுக்கு ஆகின்றது. வரலாற்று நாயகனும், அரசியல் தலைவனும், தேச அன்பனும் காலத்திற்கேற்ப இவ் இலக்கியத் தலைமை பெறுகின்றனர் எனல் பொருந்தும். புராணமும் புனைவும் பாடுபொருளாவது ஓரளவு தவிர்க்கப்பட்ட பகுத்தறிவுலகச் சூழல் இவ் உண்மைப் பொருளிலக்கிய—யதார்த்தவியல் இலக்கிய—அமைப்பில் இணைக் காரணமாகின்றது. ஆயினும் முற்றிலும் புனைவும் கற்பனையும் மறைந்தன எனக் கூறவியலாத அளவிற்கு அதுவும் பல பரிணாமங்களைக் காட்டி விரிந்தே அமைகின்றது. இவ் இரு கூறுகளும் கவியாக்கத்தில் இன்றியமையா அடிப்படையிடம் பெறுதல் பற்றி, விஞ்ஞான உலகிலும் இச்சுவை—மணங்கள் இடம்பெறுதலை, மரபு மனமுடைய கவிஞர் வாழ்வது வரை மாற்றல் இயலாது எனக் கருதலாம்.

## II

எண்பதின் மரபுக் கவிதைகளின் போக்கும் நோக்கும் பற்றிய எண்ணங்களைத் தேர்ந்துகொள்ள பதின்மூன்று நூல்கள் அடிப்படையாகக் கொள்ளப்படுகின்றன (நூற்றொகை காண்க). இவற்றை, அமைப்படிப்படையில் பலவாறாகப் பகுத்துக் கொண்டு பொருள் நிலைகளும், பயன் நோக்கும் பிறவும் கணிக்கப்படுகின்றன.

பழ மரபுப்படி, இவற்றைத் தனிப்பாடல்—தொடர்ப்பாடல் தொகைப்பாடல் எனப் பிரிக்க முடியும். ஆயின் தொகை, பல தனி அல்லது தொடர் அல்லது இரண்டாம் தொகையாக அமைவது பற்றி, அத்தொகைப்பாடல் எனும் பகுப்பைப் பிறவிரண்டனுள்ளும் பிரித்து அடக்கல் சாலும்.

தனிப்பாடல், தொகுதிகளில் இடம்பெறுகின்றன. இவை பழங்காலம் போன்று பல ஆசிரியரின் ஒருவகைப் பாட்டு —பொருள் நிலைத் தொகுப்பாக அன்றி ஓராசிரியரின் பலபொருட் பாடல் களின் தொகுப்பாதல் பொதுமை. காலப் பன்மையும் உண்டு. அத் துடன் பல இடங்களில் பல நோக்கங்களுக்காகப் பாடப்பட்டன வாகவும் ஏற்கெனவே தனிச்செய்யுளாக வெளிவந்தனவாகவும் கூடக் காணப்படுகின்றன. வானொலி, கவியரங்கம் எனப் பொது மக்கள் நோக்கோடு இயற்றப்பட்டனவும், இலக்கியப் பத்திரிகை, மாணவர் மன்றம் எனக் கற்ற அவைக்காக எழுதப்பட்டனவும், அமைகின்றன.

ஒரு பாடலாலமைதல் ஓரளவு அருமையாயினும், ஒரு சில செய்யுளால் ஒருபொருள்மேல் எழும் ஒருதலைப்புப்பாடல் பெரும்பான்மை காட்டுகின்றன செறிவாக ஒரு கருத்தை ஒரு சில அடிகளில் கூறும் பழமை, இன்று புதுக்கவிதையின் பாங்காகி, ஒரு சில பாடலளவுக்கு விரிவதை மரபுக் கவிப்பான்மை யாக்கு வதாகக் கூறலாம். தமிழகத்துப் பாவலரும், வெளிநாட்டுத் தமிழ்ப் பாவலரும், மரபுத் தனிக்கவிதைப் படைப்பில் பங்கு பெறுகின்றனர்.

இத் தனிப்பாடல் தொகுதிகளின் பெயர் நிலைகளே, பெரும் பாலும் அவற்றின் 'தனிப்பாடல்-தொகை'ப் பாங்கைப் புலப் படுத்தும் வண்ணம் அமைகின்றன. **பூச்சரம்** (தமிழே எல்லாம்-இரண்டாம் பாகம்: பூச்சரம், கரு. நாகராசன், தமிழ்ப் பதிப்பகம், சென்னை), **உதிரிப்பூக்கள்** (உதிரிப்பூக்கள்—மலேசியப் பாவலர் பொன் அன்பரசன், பாவை பதிப்பகம், சேலம்), **மலர்ச் செண்டு**—(மலர்ச்செண்டு- கவிஞர் சமதர்மன், கமலப் பிரியா பதிப்பகம், சென்னை) போன்றன சான்றுகள். சிந்துபாடும் சிற்றாறு எனும் நூல், உட்பகுதிகளில் எல்லாம் 'மலர்' எனப் பெயர்பெறுதலும் இங்குச் சுட்டத்தக்கது.(சிந்து பாடும் சிற்றாறு-கவிஞர்மணிமொழி, ஜெயலட்சுமி பதிப்பகம், சென்னை). உள்ளே அமையும் பல கவிதைகளுள் ஒன்றன் தலைப்பு, நூலுக்குத் தலைப்பாகும் பொதுமை துறைவனின் 'ஒன்பது செண்பகப் பூ'வில் (ஒன்பது

செண்பகப்பூ—துறைவன் கவிதைகள், வானதி பதிப்பகம், சென்னை). மேனாட்டுக் கவிதையின் தாக்கமும் தோய்வும் கூட தலைப்பு அமைக்கக் காரணமாகலாம் எனும் எண்ணம் தேவ மைந்தனின் 'புல்வெளி'யைப் பார்க்க ஏற்படுகின்றது (புல்வெளி-தேவ மைந்தன் (புனை), அன்னை வெளியீடு, புதுவை). வால்ட் விட்மனின் 'லீவ்ஸ் ஆப் கிராஸ்' எனும் புதுக்கவிதை நூலின் தோய்வை, இத் தொகுதியின் தலைப்பு மட்டுமின்றி மரபில் கவிதைப் பகுதியும் (பக். 31 64) காட்டுகின்றது போலும். எளிய பொருளையும் பாடுதல் எனும் பொதுமையை இத்தலைப்புகளும் உணர்த்துகின்றன.

உணர்ச்சிக்கு வடிகாலாக மட்டும் எழுதப்பட்டனவோ எனத் தோற்றம் தரும் கவிதைகளும்,உயர் இலட்சிய நோக்குடன் எழுதப் பட்டனவாகக் குறிக்கப்படும் செய்யுட்களும், இவற்றில் அமைகின்றன. இதனால், இவை முறையே தன்னுணர்வுக் கவிதையாகவும் அறிவுரைக் கவிதையாகவும் அமைகின்றது. பெரும்பாலும் மொழித்தூய்மை கடைப்பிடிக்கப்படுகின்றபோதும் பிறமொழிச் சொற் கலப்பும் இயல்புக் கூறாய் அமைந்துவிடுகின்றன. பண்டித நடை பின்பற்றப்படுவதும், பாமரச் சொற்கோவை அமைவதும் காணப்படுகின்றது. முன்னிலை விளிச்சொற்களால் வாசகருடன் நேரடித் தொடர்பு கொள்ளுவதும் தன்னைத் தனிமைப்படுத்தி விலகி நின்று ஆசிரியர் கவிதை புனைவதும் அமைகின்றன. கவிஞன் சில பாத்திர வாயிலாக வெளிப்படும் பண்டைய அகமரபுக் கவிதைகள், இங்கு புறப்பாடலிலும்—புறமாந்தரிலும் கவிஞன் மறைந்து நின்று உரையாடும் கூற்றுகளாகி வருகின்றன. இயற்கையைப் பார்த்துப்பேசும் அகமரபு, இங்கு இயற்கையை நோக்கிக் கேள்விகள் கேட்கும் புறச் செய்யுளில் இணைகின்றது.

காதல், பாடல் பொருளாதலின் பழமை, எண்பதிலும் தொடர்கின்றது. இதனையே முழுப்பொருளாகக் கொண்டெழுந்த பலபாடலின் தொகுப்பாக அமைகின்றது கவிஞர் சமதர்மனின் மலர்ச்செண்டு.

> என்னிளமைப் பருவத்தில்
> இன்பத்தைத் தந்திட்ட
> கன்னியரின் அன்புறவைக் கொண்டு-நான்
> கவிதையாக தொகுத்த மலர்ச்செண்டு (பக். 64)

என்ற முடிவும் இதனை உணர்த்துகின்றது. இவ்வாறு முழுமை யாக அன்றியும் காதல் கவிதைப் பொருட்கூறாதலை, ஒன்பது செண்பகப்பூ (காதலர் சோலை), சிந்துபாடும் சிற்றாறு (நெஞ்சப் பூக்கள்) எனும் நூற்பகுதிகளும், உதிரிப்பூக்கள், புல்வெளி ஆகிய வற்றின் சில தலைப்புக் கவிதைகளும் காட்டுகின்றன.

இக்காதல் கவிதைகளில் பண்டைய மரபின் கிளவிநிலை—கூற்றமைப்பு வெளிபடுகின்றது எனினும் களவுத் தலைவனின் இன்பம் நவில் கூற்றாகவும், பழம் நினைவுச் சொற்கோப்பாக அவை பெரும்பாலும் அமைந்து, பிறிதொரு பாத்திரமன்றி, வாசகர் கேட்போராக அமையும் நிலையுடன் பொருந்துகின்றன எனலாம். தேவமைந்தனின் 'உள்ளார் சொல்லோ பாங்க' ஆசிரியத்தில், பாங்கனுக்குத் தலைவன் உரைப்பதாக அமையினும் முற்றும் மாற்றம் கொண்டு, தலைவியையன்றித் தமிழை நயந்த தாகப் பாடுதல், 'தமிழ் விழைந்த தலைவன் பாங்கற்கு உரைத்தது' (பக்.15) எனத் துறைக்குறிப்புப் பெறல் புதுமை யாகச் சுட்டத்தக்கது. இதனை 'அகத்துறைப் போலி' எனலாம் போலும்.

தலைவனாக நின்று பாடுதல் பெரும்பான்மையாயினும் தலைவியின் குரலும் ஒலிக்கின்றது. உதிரிப்பூக்கள், தலைவனைப் புகழும் தலைவியை (பக் 99), தோழியிடம் தூதுரைத்தலை (பக். 103), அவனை அழைத்து வரக் கூறுதலை (பக். 102), கடல் கடந்த அவனுக்கு(த் தற்கால மரபை ஏற்று) மடலனுப்புதலை (பக். 110-112) எல்லாம் தருகின்றது. தலைவன் தலைவி உரையாடலாகக் கவிதையமைத்தலும், பிரிந்த காதலன் மடலெழுதுதலும் (பக். 50-57) 'சிந்துபாடும் சிற்றாறு' தருகின்றது. உணர்வுகளன்றி நிகழ்வு கள் முதன்மை பெறும் மரபு இங்கு அமைகின்றது.

துறைவனின் கவிதை, எறும்புக் காதலரை மரபுச் சூழலில் காட்டுவது மரபு அமைப்பில் தருவது 'எள்ளல்' தோற்றம் கொள் கின்றது. அங்கதத் தொனியாகி யமைகின்றது.

சுடுவெயில் எரிக்கும்
    நெடுமணற் பாலைச்
சிறுபுதர் தீய்ந்த
    செல்வழி மருங்கின்
வெண்ணோய் அரித்த
    புண்ணறுங் கள்ளி

அடிநிழற் சோலையில்
அமர்ந்து
காதல் செய்தனர்
ஈரெறும் பினரே (பக். 55)

புலவி (பொறாமை, பக். 59), குறியிடம் தவறுதல் (காத்திருந் தேன், பக். 64-65), கைக்கிளை (எவனோ ஒருவன், பக். 69-70), பிரிவு (இனி..., பக். 71-72), அலர் (இதுபோல் ஒருநாள் பக். 66-67) போன்ற அகமரபுப் பொருண்மைகளும் துறைவன் பாடலில் விரவு கின்றன. தலைவன் தலைவிக்கிடையேயுள்ள காதலை, மின்னல் களிடையேயும், நிலமகளிடத்தும் காட்டுவதில் இவரது கற்பனை தனியுருவம் கொள்கின்றது (பக். 73-76).

அகப்பொருள் பாடுபொருளாகும்போது இம்மரபு பின்பற்று தலையும் புதுமையையும் இணைத்தே தருகின்றது கலி பரிபாட்டு-அகவல் என்ற வரையறை நீங்கி சிந்து, கீர்த்தனை போன்ற எளிய வடிவங்களும் விருத்த இன உருவங்களும் பெற்று வருகின்றன. இதனால் எளிமையான வெளியீடு, குறிப்புப்பொருள் இன்மை உள்ளுறை கருதாமை, இன்பம் தரும் நயம், இசையினிமை என் பனவே நோக்கமாகத் தோன்றுகின்றன.

அகமல்லாதது அனைத்தும் **புறம்** எனப் பிற பொருண்மைகள் அனைத்தையும் பிறிதொரு பகுப்பில் அடக்கல் சாலும் எனினும், காலத்திற்கேற்ப இது பலவாகப் பகுத்துக் கொள்ளப்படும் வாய்ப்பும் இடமும் அளிக்கின்றது. மரபுப்பொருண்மை பலவும் பாடல்பொருளாகி இடம்பெறுவதோடு, காலத்தால் பிற்பட் டனவும், சில தற்காலப் பொருண்மைகளும் கவிதையாக்கத்திற்குக் கருவாகின்றன.

புற வீரத்திற்காகத் தலைவன் புகழ்பாடுதல் என்ற பழமை நிலைமாறி, சில குறிக்கோளுக்காகப் பாடுதல் என்ற அமைப்பு ஏற் பட்டு விட்டதை 'எதற்காகப் பாடுகின்றேன்' எனக் கேள்வி யெழுப்பிப் பதிலளிக்கும் கவிஞர் தருகின்றனர். நினைவில் குமிழி யிட்டது மாயாது மறையாது நிற்பதற்கு இவர் எழுதுவது ஒரு பாலாக (புல்வெளி பக் 28 எதற்காக எழுதுகிறேன்), சமுதாயத் தில் சில மாற்றங்கள் ஏற்படுத்தும் போர்க்குரலாகவும் கவிதை புனைவதை கரு. நாகராசன் 'பூச்சரம்) காட்டுகின்றார்.

சாதிப்பேய் ஓட்டுகின்ற
சவுக்காகும் என்பாட்டு
பேதமெனும் மாளிகையைப்
பிளக்கும் என்கவி வேட்டு

நீதியிலா நெஞ்சினுக்கு
நெருப்பாகும் என் கவிதை
பாதகரை மாய்க்கின்ற
படைமுரசு என் எழுத்து (பக். 5)

நோக்கில்-நினைவில் ஏற்பட்ட இப்புதுமை காரணமாகக் கவிதைகளின் பாடுபொருளும் வேறுபட்டு அமைந்து காணப்படு கின்றன. சமுதாயத்தின் மாற்றங்கள், கல்வியின் ஏற்றம், புதிய உலகை ஆக்கும் முனைப்பு என்ற பல சூழலால் தீமையைச் சாடு கின்ற, ஏற்றத்தாழ்வுகளை எதிர்க்கின்ற, மூடநம்பிக்கைகளை அழிக்கின்ற உணர்வெழுச்சியாக இது அமைகின்றது. இதனால் பூஞ்சோலைகளும் புல்லாங்குழலுமன்றி, எரிமலைகளும் எதிர்ப்புக் குரலுமாக இக்கவிதைகள் உருவாகின்றன எனக் கூறலாம். சிவப்புக் கவிதைகள் எனவும் புரட்சிப் பொறிகள் எனவும் சுட்டும் படி இவை அமைகின்றன.

அதே வேளையில் கவிதை பழமரபிலும் செல்வதைப் பாடற் பொருண்மைகள் பிற காட்டுகின்றன. கவிச்சுவையின் மனத்தை நிறைக்கும் ஆனந்த நிலையைக் 'கவிதை' எனும் தலைப்பில் துறைவன் தருவது இக்காலத்தும் உணர்ச்சிப் புதுமையுடைய நயமான கவிதைகள் இயற்றப்படுதல்-விரும்பப்படுதல் என்பதைத் தருகின்றது.

சொற்கள் சித்திரத்
திரைச் சீலை
சொற்கள் நாடக
மாந்தர் குழாம்
சொற்கள் வழங்கும்
பின்னிசை அச்
சொற்களின் நாடக
மே கவிதை (பக். 198)

மரபுப் பொருண்மைகளில், தலைவன் புகழ் பாடுதல் என்பது புறத்தின் பாடாணாக உருவாகின்றது. முன்னிலைப் புகழ்ச்சி யாகி, அரசவைக் கவிதையாகிய இப்பழங்காலநிலை எண்பதின் பாடலில் படர்க்கைப் புகழாக அமைகின்றது. வாழும் தலைவரை நேரடியாக வாழ்த்தும் பழம்பாங்கு இங்கு, வாழும் தலைவருடன் மறைந்த பெரியோரை, அண்மைக் காலத்தவரை-பல் நூற் றாண்டு பழமையினரை, நம் நாட்டினரை-அல்லாரை, அவர் சிறப்புப் பற்றி உயர்த்தி மொழிதலாக அமைகின்றன.

வாழ்த்துதல் என்பதும் அவர் மறைவில் வருந்துதல் (சரம கவிதை)என்பதும் இவற்றில் இனங்காண முடிகின்றது.உலகளாவிய அளவில் பெரியோரான பிறநாட்டினரையும் போற்றும் தமிழன் உணர்வு புலப்பட, ஷேக்ஸ்பியர், ஐன்ஸ்டீன் ஆகியோர் துறைவன் கவிதையில் புகழப்படுகின்றனர்.(பக். 103-109, 110). நாடளாவிய நிலையில் சமயவாதியும், அரசியல் தலைவரும் இப்போற்றுதலைப் பெறுகின்றனர். புத்தன், காந்தி, நேரு என்போரையும் துறைவன் கவிதை போற்றுகின்றது (பக். 128, 93-96, 106, 107.) அமுதத் தமிழிசை, இராமகிருஷ்ண பரமகம்சர் (63), சாரதாமணி (64), விவேகானந்தர் (65) ஆகியோரைச் சிறப்பிக்கின்றது 'உதிரிப் பூக்கள்', சிங்கப்பூர் ஆட்சியாளரான துங்குவைப் புகழ்வதும் இத் துடன் இணைத்துக் கருதத்தக்கது (பக். 97).

தமிழகத்தின் தலைசிறந்தவர் இவ்வாறு போற்றப்படுவரில் முன்னிற்கின்றனர்.பல நூற்றாண்டுகட்கு முற்பட்ட இளங்கோவும் (அமுதத் தமிழிசை-பாடல்.62) கம்பனும் (சிந்துபாடும் சிற்றாறு 85-87), அருணகிரிநாதரும் (ஒன்பது செண்பகப்பூ-126) புகழ்ப்படு வதுடன் இந்நூற்றாண்டு இலக்கிய, அரசியல் அறிஞரும் பாடப்படு கின்றனர். கவிஞருள், பாரதியும் (ஒன்பது செண்பகப்பூ-96-98; பூச் சரம் 63-64;அமுதத்தமிழிசை பாடல் 66), பாரதிதாசனும் (ஒன்பது செண்பகப்பூ 99-103; பூச்சரம் 65-66, உதிரிப்பூக்கள் 78-79) முன் நிற்கின்றனர். கவிஞரும், இலக்கிய அறிஞரும், ஆய்வு வல்லுநரும் பேராசிரியருமான பலர் புகழ்ப்படுவோரில் இடம்பெறுகின்றனர்; இராமலிங்க வள்ளலார் (அமுதத் தமிழிசை-பாடல் 67), பட்டுக் கோட்டை கலியாணசுந்தரம் (பூச்சரம் 67), பெருஞ்சித்திரன் (உதிரிப்பூக்கள் 75), மறைமலை அடிகள் (உதிரிப்பூக்கள்-85), பாவாணர் (புல்வெளி 20-21, உதிரிப்பூக்கள் 88, 89), சாரங்கபாணி (உதிரிப்பூக்கள் 87), அ. சீனிவாசராகவன் (ஒன்பது செண்பகப்பூ 104-105), பெரியார் (பூச்சரம் 56-59, உதிரிப்பூக்கள் 86) போன்று பலர்.

வரலாற்று நாயகர் என்ற அடிப்படையால், உண்மையின் போக்கில் போற்றும் யதார்த்தவியல் இவற்றில் அமைகின்றது. தலைவரின் தன்மைகளைக் கூறுதல், இயல்புகள் சுட்டல், ஆற்றல் நவிலல், உயர்வு உணர்த்தல், சிறப்புச் சொல்லல் என இவை அமை கின்றன.

கையறுநிலையின் வகையுள் அடங்குவதாகக் கருதத்தகும் சரம கவிகளும் இத்தகு தலைவர் சிலரைப் பாடுபொருளாக-பாடல்

தலைமையாகத் தருகின்றன. இறப்புக் காரணமாக ஏற்பட்ட பிரிவு பற்றிய ''சூழல் கவிதை''களாக இவை அமைகின்றன. நேரு (சிந்துபாடும் சிற்றாறு 33-34), அண்ணாத்துரை (சிந்துபாடும் சிற்றாறு 29-32), பெரியார் (சிந்துபாடும் சிற்றாறு 35), காமராசர் (உதிரிப்பூக்கள் 83-84), வாணிதாசன் (உதிரிப்பூக்கள் 80-82) என அரசியல்வாதியும், இலக்கியவாதியும் இழப்புக் கவியில் பாடப் பெறுகின்றனர்.

இவ்வாறு. பெயர்க்குறிப்புடன் அமையும் மாந்தர் பாடற் தலைமை பெறுவதுடன் பொது மாந்தர், இலட்சிய மனிதன் எனப் பெயர்சுட்டாத் தலைமையும் அமைவது காணப்படுகின்றது. சில கருத்து எண்ண விளக்க நோக்கமே களனாக இவை அமைவதாகக் கொள்ளலாம். இலட்சிய நோக்கம் பற்றி எவன் சிறந்த மனிதன் எனும் வரையறை குறிக்கோளாகி அம் மனிதன் பொதுமையுடன் பொருளாகின்றான் (ஒன்பது செண்பகப்பூ-86).

கண்ணிலும் மேலாக மதிப்பேன் அவன்
கால் தூசியைக் கூட வணங்கியே துதிப்பேன் —(கண்)
எண்ணம் சொல் செயல் எதனாலும் பிறர்மனம்
புண்படச் செய்யாத புனிதனை-என்னிரு—(கண்)
இன்னலால் ஒருவன் துடித்திடும் போது
இதயம் கனிந்து இரங்கி அன்போடு
தன்னலம் கருதாது தாங்கிப் பரிவோடு
தடுத்தாட் கொண்டிடும் தன்மயனை-என்னிரு —(கண்)
(அமுதத் தமிழிசை-பாடல்-6 8

என அவன் போற்றுதலுக்குரிய புண்ணிய புருடன் ஆகின்றான்.

கலைத்துறையில் சிறந்தவரும் இத்தகு பொதுமைப் பொருண்மையாகிப் பாடலில் இடம்பெறுவதைத் துறைவனின் 'நடிகை' காட்டுகின்றது (ஒன்பது செண்பகப்பூ-193).

குடும்பம்-உறவு எனும் சூழல்களும் சில இனிய உறவுகளைப் பாடு பொருளாக ஏற்றுகின்றது. தாய், தந்தை, பாட்டன், பாட்டி, குழந்தை என்பவர் இந்நிலையில் சுட்டத்தக்கனர். கவிஞன், தனது தனியுறவுகளின் அடிப்படையிலேயே இவற்றை இயற்றியிருக்கக் கூடுமெனினும், பெயர் சுட்டாமை, பொதுமைப் பொருண்மையுள் இவற்றைக் கொணரச் செய்கின்றது. குழந்தை வாசகருக்கு ஏற்ப, நெஞ்சம் இனிக்கும் வகையில், குழ. கதிரேசன், தாய் (4-5, 13-14), தாய் தந்தை-அண்ணன்-அக்காள் முதலிய குடும்ப அங்கத்தினர்

(7-8), பாட்டி,—தாத்தா (அறுபதாம் கலியாணம் 17-19) போன்ற வரைப் பாடுகின்றார். பொதுவாசகருக்கு இயற்றப்பட்ட நூலிலும் தாய், குழந்தை, மனைவி, ஆகியோர் பாராட்டப் பெறு பவராகின்றனர். தாயைச் சிறந்த தெய்வமாகவே காட்டுதலும் (அமுதத் தமிழிசை-77, சிந்துபாடும் சிற்றாறு 13-14), மனைவி யைத் தேவையாகச் சுட்டுதலும் (சிந்துபாடும் சிற்றாறு 18-19) உண்டு. 1979 குழந்தையாண்டானமை பற்றி, தொடர்ந்த ஆண் டிலும் குழந்தை பாடுபொருளானமையின் கால இயைபும் சுட்டத் தக்கது. குழந்தைக்கு அறிவுரை கூறுதலும் (பூச்சரம் 82-86), குழந்தை குடும்பத்தின் செல்வமாதலைப் பாடுதலும் (சிந்துபாடும் சிற்றாறு 15 16) பெற்ற மனப்பிணைப்போடு மழலையரை வாழ்த் தலும் (பூச்சரம் 70-71, ஒன்பது செண்பகப்பூ 43-46) குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டமும் (சிந்துபாடும் சிற்றாறு 88-90, பூச்சரம் 37) இவற்றுள் பொருட்பன்மை காட்டி, நயமுறப்பாடுதலும் பிரச்சார நோக்கமும் தருகின்றன.

பொதுநிலையில், 'பெண்' கவிதைப் பொருளாகுதலும் இங்கு இணைந்தே நினைக்கத்தக்கது. பெண்மை பெருமையுடைத்து எனப் பேசுதல் (அமுதத் தமிழிசை 78), பெண்மையைப் போற் றுதல் (உதிரிப்பூக்கள் 77) கன்னியரை, அழகாக, நிலவாகக் காட் டுதல் (ஒன்பது செண்பகப்பூ 13-14, 195), ஆக்கும் —அழிக்கும் பெண்வன்மையைக் குறித்தல் (சிந்துபாடும் சிற்றாறு 82) என நோக்கமுடனும், நினைவுச் சித்திரமமைக்கும் பாங்குடனும் இப் பெண் பொருளாகின்றாள். சிறிது காலமுந்திய பெண்கள் ஆண்டும் இதற்குக் காரணமாகலாம்.

இவ்வாறு, மனிதர்-தலைவர் பாடற்பொருளாதல் ஒரு பாலாக, சில நூல்களும் இடங்களும் கூடப் பாடுபொருளா கின்றன. மனம் கவர்ந்தமை பற்றியும், இன்பம் தந்தமை குறித்தும், சிறப்புடைமை கருதியும் இவை சொற்சிற்பங்களில் சிறப்பிக்கப்படுகின்றன எனலாம். அமுதத்தமிழிசை, திருக்குறள் (96-97), சிலம்பு (98 இவற்றைப் பாடிப் போற்றுவதும், தமிழ் இலக்கிய வணக்கம் (98) வாயிலாகப் பல இலக்கியங்களைச் சுட்டு வதும், இசை கேட்கும் பொது மக்கட்கும் இவ் இலக்கியம் பற்றித் தெரிதல் வேண்டும் என்ற நோக்கமும் பற்றியாகலாம்.

மலேசியப்பாவலர், மலேசியா, சிங்கப்பூர் ஆகிய வாழும் நாடு களைப் பாடுவதுடன் தாய்நாடான இந்தியாவையும் தன் ஆளுமை தோன்றப் பாடுகின்றார் (உதிரிப்பூக்கள் 91, 94, 96). பல ஊர்

களைக் கண்டு, வாழிடமாகக் கொண்டமை பற்றித் துறைவன், திருநெல்வேலி, சண்டிகர், நாகலாந்து, ஏற்காடு, கொனாரக் ஆகிய இடங்கட்குக் கவிதையாக்குகின்றார் (ஒன்பது செண்பகப்பூ 143, 144, 146, 148, 149).

இடம் பாடுபொருளாகும் இதனுடன் ஓரளவு இணைத்துக் கருதத்தகும் வகையில் 'இயற்கை' பாடுபொருளாதல் குறிக்கத் தக்கது. குறிப்பிட்ட இடம் பெயர்ச்சுட்டுடன் அமையும் முன் நிலைக்கு மாறாக, இங்கு இன்பம் தரும் இயற்கைப் பொருள்கள் பல நயமுடன் புனையப்படுகின்றன. இயற்கையை இணைப்பொரு ளாகவோ துணைப்பொருளாகவோ அன்றி, முதற்பொருளாகவே கொண்டு பாடும் நிலையாக இது பொருந்துகின்றது. இயற்கை யைப் பாடும் போதும், அதனை மட்டும் அவ்வாறே அமைத்துச் செல்வது காணப்படுவதுடன், சில கருத்துகளை இணைத்துத் தரு வதும் உண்டு. வெறும் நயமுடை வருணனையாகாது பயன் நோக்கும்கொள்வதாக இதனைச் சுட்டலாம். அறிவுரைகள் போன்றகருத்துகளை ஏற்றிப் பாடுதலும், குறியீடு போன்று அமைத்தலும், இதன்கண் பொருந்த வாய்ப்பமைகின்றது.

குழந்தைப் பாடலில் அமையுமிடத்துப் பெரும்பாலும் எளிய சிறிய விளக்கப் பாடலாக இயற்கை உருவாகின்றது. குழ. கதிரேசனின் நூல், வெயில் (6), கடல் (9-10, 22, 23, 28-29), நிலா (11- 2), மேகம் (24-25), முள் (32-33), நாய் (26-27), பூனை (30-31), கிளி (52) ஆகியவற்றைக் குழந்தையின் கண்ணோட்டத்துடன் தரு கின்றது. கிளி'ப்பாடல் சுதந்திரமெனும் பொருண்மை வெளி யீட்டுக் கருவிநிலையில் உருபெறுவதாகக் கொள்ளமுடிவதால் பிறவற்றினின்று மாறி அமைகின்றது. எந்தப்பொருளும் பாடு பொருளாக இடம்பெறலாம் என்பதனை 'முள்' உணர்த்துகின்றது.

பிற நூல்கள், தென்றல் (பூச்சரம் 39. ஒன்பது செண்பகப்பூ18), கடல் (பூச்சரம் 46, சிந்துபாடும் சிற்றாறு 92-94), மேகம் (சிந்து பாடும் சிற்றாறு 79, ஒன்பது செண்பகப்பூ 20), மழை (பூச்சரம் 106-7, புல்வெளி 6 9, 21), தாமரை (சிந்துபாடும் சிற்றாறு 80), வேலிப்பூ (ஒன்பது செண்பகப்பூ 11), பூ (ஒன்பது செண்பகப்பூ 22), தளிர் (ஒன்பது செண்பகப்பூ 15), செடி ( ,, 27), ஞாயிறு ( ,, 28), ஒளி ( ,, 25), நட்சத்திரம் ( ,, 19), கூதிர் (புல்வெளி 14), காலம் (சிந்துபாடும் சிற்றாறு 83-84) எனப்பல இயற்கைப் பொருளைப் பாடுகின்றன. இடமும், காலமும் பாடப்படுதலை இவை புலப்

படுத்துகின்றன. இயற்கைப் பொருளோடு உரையாடலும், அதனை வாழ்வின் தத்துவக் குறியீடாகக் காணுதலும், இங்கு உண்டு எனலாம்.

ஊனுரு மனிதக் கூட்டம்
உருக்குலைந் தழிவ தைப்போல்
வானூரும் முகிலி னங்கள்
வடிவங்கள் காட்டி மாயும் (சிந்துபாடும் சிற்றாறு 79)

இயற்கையைத் தனித்த ஒன்றாக அன்றி வாழ்வோடு இரண்டறக் கலந்து இணைந்ததாகக் கருதும் பாங்கும் இவற்றில் தெளிகின்றது.

கபடு சூதிலா(து)
உழைப்பவர் களிப்பும்
கண்களில் ஊறும்
கருணை நல் ஒளியும்
சுவடி தேடிடும்
புலவர் போல் எங்கும்
சுழன்று சுழன்று
சுரும்பென நாடிக்
களஞ்சிய மொன்று
சமைத்தது தென்றல் (ஒன்பது செண்பகப்பூ 18)

தேவமைந்தனின் 'பெயல்பாட்டு' சங்க இலக்கிய நெடு, பாடலின் சாயல் கொள்ளுகின்றது (புல்வெளி 6—9). இயற்கை பற்றிய நீண்ட பாடல் அமைக்கும் நிலையாக இது பொருந்து கின்றது. ஐந்நில வருணனை மரபாக இது அமைகின்றது.

குப்பைக் கூளம்கூடப் பாடலில் பொருளாகி இடம்பெறும் வாய்ப்புக் கொள்வதைத் துறைவனின் 'கூளம்' கவிதை காட்டு கின்றது (பக். 180—81). அத்துடன், இயற்கை மட்டுமன்றிச் செயற்கைப்பொருளும் பாடப்படுகின்றமையைத் துறைவனின் பாடல் பொருளான சாலைகள் (பக். 175), ஒலிபெருக்கி (பக். 177), செருப்பு (பக். 185) போன்றன புலப்படுத்துகின்றன இயல்பு கூற லாகவும் எண்ண வெளிப்பாட்டிற்கு வாய்ப்பாகவும் இவை இணை கின்றன. இருண்மையுடனும், குறியீட்டுடனும் கூட இவை அமை கின்றன போலும்.

நெஞ்சென்னும் என் குடிலில்
நினைவுகளின் பெருங்குப்பை
கொஞ்சமல்ல நான் சேர்ந்த
குவியல் நிதிக் கோட்டை

நஞ்சாகத் தோன்றலாம்
உங்களுக்கு நமக்கிதுவே
எஞ்சாத பொன்னுலகம்
இந்திரனார் சாம்ராஜ்யம் (ஒன்பது செண்பகப்பூ 181)

என 'கூளம்' விளக்கப்படுகின்றது. பாரதியின் வழியில், 'பழம்பாய் பத்திரிகை' சூழல் இங்கும்பொருந்துகின்றது எனலாம். விஞ்ஞானம் (ஒன்பது செண்பகப்பூ 84), காலத்திற்கேற்ற பாடு பொருளாகக் கருதத்தக்கது.

இயற்கை போன்றே இறைமையும் பாடுபொருளாகுதல் காலங்காலமாகத் தொடர்ந்து எண்பதிலும் காணப்படுகின்றது. இறைவரை ஏற்றுதலும் போற்றுதலும், வெறியின்றியும், தத்துவ ஆழங்களின்றி எளிமையாயும், பல வேளைகளில் பல இறை வரையும் பாடும் சமதர்ம நோக்குடனும் அமைவது குறிப்பிடத் தக்கது. முன்னிலைப்பரவல் பெரும்பான்மையாக அமையினும் படர்க்கையில் இறைப்புகழ் பேசுதலும் உண்டு. பொதுநிலையில் அமைவதுடன், தன்னனுபவம் கூறலாகித் தன்னுணர்வு இணைத் தலும், தன் மனத்திற்குக் கூறும் - கட்டளையிடும் - அறிவுறுத்தும் பாங்குடனும் வருகின்றது. இறைவனை வாழ்த்துதல், வணங்கு தலுடன், வேண்டுதலும், இரங்குதலும், முறையிடுதலும் உண்டு.

பிற தொகுதிகளில் அருகியும் (ஒன்பது செண்பகப்பூ 47—48; 137—138; 139—140), இன்றியும் அமையும்போது, இப்பொருள் 'அமுதத் தமிழிசை'யில் முதன்மை பெறுகின்றது. பக்தனாக நின்று இறைவனைப் பாடுதல் ஒருபாலாக, தலைவியாக நின்று பாடும் அகம்சார் அருளியலும் இதன்கண் மிக்கு அமைந்து மரபு காட்டு கின்றது. இறைவர் மட்டுமன்றி இயற்கையும் வணங்கற் பொருளா வதனை இதன் ஞாயிறு வணக்கம் (பாடல்1) காட்டுகின்றது. இளங்கோவின் மரபு பின்பற்றலாகவோ, வழக்கத் தொடர்ச்சி யாகவோ இது கருதத் தக்கது.

குறிப்பிட்ட இறைவரைப் பாடுவதுடன் 'பொதுஇறை' வாழ்த்தும் வணக்கமும் அமைவது முன்னேற்ற மனப்பான்மையை, - எம்மதமும் சம்மதம் எனும் எண்ணத்தை, ஒற்றுமையுணர்வை, வேறுபாடற்ற சமுதாய மன உருவாக்கத்தை அடிப்படையாகக் கொள்வதாகக் கருதலாம் (அமுதத் தமிழிசை பாடல் 2—10).

இறைத்தலைவர்களில் பலர் பாடப்படுகின்றனர். சிவன், சக்தி, திருமால், முருகன் ஆகியோர் பிறகடவுளரை விட மிகுதி

யாகுப் பாடப்படுதலை அமுதத் தமிழிசை காட்டுகின்றது (13—17, 18—25, 28—32, 33—48) விநாயகர் கலைமகள்,அனுமன்,ஐயப்பன், சாயிபாபா போன்றோரும் பாடற் தலைமை பெறுவதை இத்தொகுதி காட்டுகின்றது (11,12,49,50—51, 52) கவிதை நூலின் தொடக்கம் கலைமகள் வாழ்த்துடன் அமைதலை, 'எலி கடித்த பூனை, தருவது, குழந்தைஇலக்கியத்தனித்தன்மையாகவும்,கல்விக் கடவுள் வாழ்த்துப் பொருத்தமாகவும் கருதத்தக்கது. முன்பும் இது அமைந்து மரபுத்தன்மை கொள்வதைக் கவிமணியின் மலரும் மாலையும் போன்றன காட்டுகின்றன.

'அமுதத் தமிழிசை' தரும் கண்ணகி வணக்கம் (27) இங்குச் சிறப்பாகச் சுட்டத்தக்கது. காப்பியப் பாத்திரத்தைக் காப்பியக் காலத்துக்குப் பின், நாட்டார் வாழ்வில் கடவுட்டன்மையுடன் அணுகிய பின், எண்பதிலும் இறையாகப் போற்றுதல் குறிப்பிடத் தக்கது.

கண்ணகி தேவி - வீரக் - (கண்ணகி தேவி) - உனது
கழலினைத் துணையெனக் கருதினேன் அருள்புரி= (கண்ணகி)
மண்ணிலே கற்பின் மகிமையே - ஒரு
பெண்ணுருக் கொண்டு வந்ததோ - வென
எண்ணியே இந்த வையமெல்லாம்
ஏற்றியே தினம் போற்றிய வணங்கிடும் - (கண்ணகி)
இன்னுயிர்க் காதலன் தன்னுயிர்க் கவர்ந்த
மன்னவன் உயிர்தனை மாய்த்து - மதுரை
தன்னையும் எரிமூட்டிப் பதியுடன்
விண்ணகம் சென்ற வீரச் செந்தமிழ்க்—(கண்ணகி)

தேவியின் வணக்கச் சார்புடன் அமைவதாகவும், பாரதி பாரத நாட்டையும் செந்தமிழ்த்தாயையும் வழிபடு கடவுளாக - சக்தி யாகப் பாடியதன் செல்வாக்காகவும் இதனை எண்ணலாம். இறை வழிபாடு, புறநிலையில் அமைவதின் பெரும்பான்மை கருதிப் போலும் துறைவன், அக வழிபாட்டின் - எப்போதும் இறைநிறை சிந்தனையின் உயர்வைப் பாடற்பொருளாக்குகின்றார் (ஒன்பது செண்பகப்பூ 133).

**அகஞ்சார்கின்ற பக்தி** நிலை, மறுமலர்ச்சியடைவதை கு.சா. கிருஷ்ணமூர்த்தி பலபடத் தருகின்றார்(அமுதத் தமிழிசை - பாடல் 43,45,47, 53—61). தலைவன் வரவேண்டும் எனக் குயிலைக் கூவத் தலைவி வேண்டல், தலைவன் புகழைப் பாடும்படிக் கிளியிடம்

தலைவி கூறல், தலைவன் வருவானோ எனத் தலைவி ஏங்குதல், தலைவனை நம்பி ஏமாந்ததாகத் தலைவி வருந்துதல், பிரிவுத் துயரால் புலம்பல், தலைவனை அழைத்துவரத் தோழியிடம் கூறல், தலைவனைப் பற்றித் தோழியிடம் வினாவல் எனத் தலைவிகூற்று பலவாறாகப் பல்கி அமைகின்றது. காமம்மிக்க கழிபடர்கிளவி இங்கு அமையாதபோதும், இயற்கைப் பொருளான கிளி - குயிலுடன் பேசுதல் வருவது சுட்டற்குரியது. சிவன் - திருமால் - முருகன் ஆகியவர் இங்குக் காதல் தலைவராகின்றனர். இவை கைக்கிளையாக அன்றிக் களவின்பம் துய்த்த பிற்கூற்றாக அமைதல் பெரும்பான்மையாகத் தோன்றுகின்றது.

கண்டதுண்டோடி என் காதலரை
காரிகையே எங்கேனும் - நீ (கண்ட)
அண்டர் படைக் காவலனை ஆதி சக்தி தன் பாலனை
தொண்டர் பணியும் சீலனைஜோதி வடிவேலனைக் = (கண்ட

பண்டைய நாள் பழக்கமடி இன்று நேற்றல்ல
பழகி அறிந்த சுகம் மனமும் மறக்குதில்லை
எண்டிசை நோக்கினும் எழில் முகம் அல்லாமல்
ஒன்றையும் காணாது உள்ளம் உருகித் தவித்ததடி—(கண்ட)

கொண்டவன் போல் வந்தென் கோபக் குறிப்பகற்றிக்
குலவிக் குலவி முத்தம் கொடுத்துக் கொஞ்சி அமுதத்
தண்டமிழ்ப் பேசி யென்னுடல் உயிரில் ஒன்றாய்க் கலந்த
சர்வ பரிபூரணனை சண்முக னென்னும் தீரனை—(கண்ட)

தலைவி கூற்றுடன், தாயின் கூற்றாகவும் இப்பக்தியகப்பாடல் அமைவதைச் சிலபாடல் புலப்படுத்துகின்றன. தலைவியின் களவு வாழ்வை உணர்ந்து நற்றாய் நவிலல் பண்டை இலக்கிய மரபன் றெனினும் பக்தியிலக்கியச் சார்புடன் இது பொருந்துவதாகக் கொள்ளலாம். குறிமீண்டு வரும் தலைவியைத் தாய் வினாவல், தலைவியைத் தாய் கடிதல், தலைவியைத் தலைவன் காதலை விட்டு விலகத் தாய் வேண்டல் எனப் பல பொருட்டுறை அமைந்து, தலைவன் புகழ் மறைமுகமாக வெளிப்பட வாய்ப்பளிக்கின்றன.

இறை விழாவும் சமுதாய விழாவும் பாடற் பொருளாவது இவ் எண்பதின் தனிப்பாடலின் பிறிதொரு நிலையாக அமைகின்றது. பண்பட்டுக் கூறுகளின் விளக்கமாகவும் இவை கருதத்தக்கன. நவராத்திரி விழா (அமுதத் தமிழிசை - பாடல் 26) அருகியும், தைப் பொங்கல் (பூச்சரம் 69,107; சிந்துபாடும் சிற்றாறு 24—25; ஒன்பது செண்பகப்பூ 155) ஓரளவு பெருகியும் பாடுபொருளா

கின்றன. துறைவனின் கவிதைத் தொகுதி பல விழாக்களைப் பற்றிப் பேசுவது குறிப்பிடத்தக்கது (ஒன்பது செண்பகப்பூ 158—168). இசுலாமியரின் நோன்புப் பெருநாள், இந்துக்களின் தீபாவளி, கிறிஸ்தவரின் இயேசுபிறப்பு, நாகாலாந்து மக்களின் கல்நடு விழா-என இது அமைந்து, ஒருமைப்பாட்டுணர்வை, மக்கள் பொதுப் பண்பாட்டுப் பாங்கை, மதக்கொள்கை ஒப்புமையை - ஒற்றுமையைப் புலப்படுத்தும் நோக்கம் கொள்வதாகத் தோன்றுகின்றது. மதவெறியும் பிறசமயக் காழ்ப்பும் இன்றி இலக்கியம் அமைக்கும் இக்காலக் கோட்பாடு இவற்றில் வெளிப்படுகின்றது.

**அறம்**, பாடுபொருளாவதும் மரபு நிலை காட்டுகின்றது. சில பொது அறங்களை - நீதிகளை மீண்டும் மீண்டும் பேசும் விருப்புப் புலப்படுவதை எண்பதின் கவிதைகள் காட்டுகின்றன. அறிவுறுத்தும், கற்பிக்கும் சீர்திருத்தும் நோக்கம் பற்றி இவ் அறக்கருத்துகள் குழந்தைப்பாடலிலும், இசைப்பாடலிலும், பிற கவிதையிலும் பொதுஇடம் கொள்கின்றன. பொது அறம் கூறுதலாகவும் பிறரை முன்னிலைப்படுத்தி அறம் உணர்த்தலாகவும் இவை காணப்படுகின்றன. ஒரு பாடலில் பல அறங்களை இணைத்து உணர்த்தலாக அமையும் நிலை காணப்பட (புல்வெளி 22, பூச்சரம் 78, 87—92), ஒரே ஒரு கருத்தை வலியுறுத்தல் பாங்கும் அமைகின்றது. அறம் கூறுதல் என்ற பொதுநிலையுடன் பிரச்சார நோக்கும் இணைவது சில குறிப்பிட்ட பொருண்மைச் சார்பில் புலப்படுகின்றது.

குழந்தைப் பாடலில், நேரடியாக அறம் கூறுதல் காணப்படுகின்றது.

உழைத்து வாழ வேண்டும் - என்றும்
 உயர்ந்து நிற்க வேண்டும்
தழைத்து வாழும் பயிர்கள் - போலத்
 தாழ்ந்து பணிய வேண்டும் (எலிகடித்த பூனை 2)

எறும்பு போலச் சுறுசுறுப்பாய்
 இருந்திட வேண்டும் - சிறு
சேமிப்பாலே சுறுசுறுப்பைக்
 காட்டிட வேண்டும் ( ,, 37)

தம்பி எனவும் தோழா எனவும் அழைத்து அறிவுறுத்தலும், மனத்திற்குச் சொல்லி அமைதலும், பொதுவாக முன்னிலைச் சொல் இன்றிக் கூறுதலும் கீர்த்தனையில் அமைகின்றது (அமுதத் தமிழிசை - பாடல் 69,70,72,73,76).

வரதட்சணை எதிர்ப்பு (அமுதத் தமிழிசை 74,75), திருமணச் செலவு குறைக்க வேண்டும் எனல் (ஒன்பது செண்பகப்பூ 39) போன்றன பிரச்சார நோக்குக் கொள்கின்றன. தற்காலப் பொருளாகவும், சமுதாயச் சூழலில் எழுந்த பிரச்சினைத் தீர்வாகவும், சீர்திருத்த எண்ணமாகவும் இவ் அறமுணர்த்துதல் அமைகின்றது.

அன்றியும், அன்பு (அமுதத் தமிழிசை 69,76; ஒன்பது செண்பகப்பூ 85), அறத்தின் வெற்றி (பூச்சரம் 102),

துணிவு (ஒன்பது செண்பகப்பூ - 31)

உழைப்பு ( ,, 87 - 89)

தாளாண்மை (பூச்சரம் 41,62)

அடக்கம் (சிந்துபாடும் சிற்றாறு 44—45)

மானம் ( ,, 63, உதிரிப்பூக்கள் 30, பூச்சரம் 29)

வீரம் ( ,, 26—27)

பண்புடைமை (பூச்சரம் 75)

உண்மை (ஒன்பது செண்பகப்பூ 182 - 183)

அமைதி (சிந்துபாடும் சிற்றாறு 101...104)

கடமை (பூச்சரம் 44,47 - 48 உதிரிப்பூக்கள் 20), ஒற்றுமை (உதிரிப் பூக்கள் 45)

வெகுளாமை (பூச்சரம் 40)

கள்ளுண்ணாமை ( ,, 45)

ஆணவம் கூடாது (அமுதத் தமிழிசை 70), தீ நட்பு (அமுதத் தமிழிசை 73)

விளையாட்டு வினையாகலாம் (அமுதத் தமிழிசை 72) போன்ற பல கருத்துகள் இவற்றில் இடம் பெறுகின்றன.

அறமுணர்த்துவதையே நோக்கமாகக் கொண்டு, பல்வகை அறங்களைத் தொடர்ச்சங்கிலியாக அமைத்து, மிக நீண்ட பாடல் அமைப்பது 'பூச்சர'த்தின் தனித்தன்மையாகக் காணப்படுகின்றது (பக். 87-92: புதுமை மோகம்). அத்துடன் சொற்பின்வரு நிலை அணி பயின்று, சொல் விளையாட்டுப் போன்று அமைந்து, வெளியீட்டு நிலையால் அறமுணர்த்தல் கவர்ச்சியாக்கப்பட்ட பாங்கையும் பூச்சரம் தருகின்றது. 'மை', 'ஆமை', 'மது' எனும் சொற்கள் பயின்று (பக். 43: ஆமைகள், பக். 61: மைகள், பக். 80: மது வகை),

தீண்டாமை தனை யின்னும் சுடுகாடு
செலுத்தாமை தான் இங்கே பெருங்கேடு
வேண்டாமே துயர் ஆமை இவையென்று
விழையாமை நலமாமோ நமக்கின்று (43)

அகத்தினில் வேண்டும் உண்மையுமே—செயல்
அனைத்திலும் வேண்டும் நேர்மையுமே
மகிழ்ச்சியைத் தந்திடும் உரிமையுமே—நல்
மதிப்பினைத் தந்திடும் திறமையுமே (61)

நிம்மதியாம் என்னுமது வேண்டு மென்றால்
நேர்மை யென்னு மதுவேண்டும் யாவருக்கும்
நம் மதியைப் போக்குகின்ற மதுவு முண்டு
நாமுமது தனையுணர்ந்து போக்க வேண்டும் (80)

என அறப்பாடல் வெளியீடாகின்றன.

பொது அறங்கள் இவ்வாறு பேசப்படுவதுடன் இல்லற இன்ப வாழ்வும் அதன் காரணமும் சுட்டப்படுவதும் பூச்சரத்தில் உண்டு (53-56). குறிக்கோள் உலகு, உலகில் இன்பம் நிலவலின் விருப்பம், புதியதோர் உலகு செய்யும் துணிவு என்பனவும் சீர்திருத்த நோக்குடன் அமைவதால் இங்குக் கருதத்தக்கன (ஒன்பது செண்பகப்பூ 81, 196; அமுதத் தமிழிசை 79). இவை அறத்தை உருவ நிலைக்கு, பருப்பொருள் நிலைக்குக் கொண்டு வருகின்றன.

சமுதாய அறங்கள், இக்காலக் கவிதையின் சமுதாயச் சூழல் பொருளாகப் பாடுபொருளில் பெரும்பான்மையிடத்தைப் பெறுகின்றன. நூல் கூறும் அறம் ஏட்டுச்சுரைக்காயாக வன்றி அனைவருக்கும் பயன்பெறும் சத்துணவாக அமைதல் இங்குப் பொருந்துகின்றது. பொது அறம் உணர்த்தலாக மட்டுமன்றி, எழும் பிரச்சினைகட்குத் தீர்வு காணும் நோக்குடன் இவை பாடப்படுகின்றன. மனத்தில்—மனத்தளவில் கடைப்பிடிக்கப்படும் அறங்களாக மட்டும் இவை அமைந்து விடாது, சொல், செயலளவுகளில் பின்பற்றப்பட வேண்டிய இன்றியமையா நிலைகளாக, தேவைக் கூறுகளாக, முன்னேற்றப் பாதையின் படிநிலைகளாக சமுதாய ஈடேற்றத்தின் மைல்கற்களாக அமைகின்றன எனக் கூறல் சாலும்.

இத்தகு பொருண்மையின பெரும்பாலும் பிரச்சார நோக்கம் கொள்வது இயல்பு. கடிந்துரைத்தலாகவும், பழித்து அறிவுறுத்தலாகவும் இவை அமைதல் ஒரு பாலாகத் தற்கால நிலைக்கு

இரங்குதலாகவும், பகுத்தறிவியக்க வெளியீடாகவும் அமைதலும் உண்டு. இதனால் இவை பொழுதுபோக்கு இலக்கியமாகவன்றி இலட்சிய எழுத்தாகின்றன. பெரும்பாலும் முன்னிலை விளித் தொடர் இணைவுகளுடனும், கேள்விகள் பல எழுப்பும் வெளியீட்டுடனும் (பூச்சரம் 6-7) இவை அமைகின்றன.

பொதுவுடைமை (பூச்சரம் 27, 28), முதலாளி வர்க்க எதிர்ப்பு (பூச்சரம் 12), இதன் தொடர்பான, ஏற்றத்தாழ்வு கூடாது (சிந்து பாடும் சிற்றாறு 59, 60, 62, 73-75), உழைப்பவனுக்கே நிலமும் உரிமையும் (பூச்சரம் 24, 25) போன்ற எண்ணங்கள், கொத்தடிமை எதிர்ப்பு (பூச்சரம் 13), சாதி எதிர்ப்பு (பூச்சரம் 12), சாதி பேதமும் தீண்டாமையும் (பூச்சரம் 42, 74, 77), மதவெறி (பூச்சரம் 79) சமுதாய நோய்கள் (பூச்சரம் 35), தீய மனிதர் உருவாகச் சூழல் காரணமாதல் (பூச்சரம் 38), எனப் பல சமுதாய நிலைப் பொருண்மைகள் உள. தொழிலாளர் (சிந்துபாடும் சிற்றாறு 81), தொழிற்சாலை முன்னேற்றம் (பூச்சரம் 97-101), வறுமை ஒழிப்பு (சிந்துபாடும் சிற்றாறு 78), வேலை இல்லாப் பட்டதாரி (சிந்துபாடும் சிற்றாறு 76) எனச் சில பொருளாதாரச் சூழலும் காட்டப்படுகின்றன.

அரசியல் தீமைகளும் ஆட்சிச் செம்மையின்மைகளும் (பூச்சரம் 8-9, 21, 22-23), புரட்சியும் அமைதியும் (பூச்சரம் 49-52, சிந்து பாடும் சிற்றாறு 25), சுதந்திரம் (பூச்சரம் 105, உதிரிப்பூக்கள் 50, 92-93, சிந்துபாடும் சிற்றாறு 43-44), பத்திரிகைச் சுதந்திரம் (பூச்சரம் 10-11), தேசியக்கொடியைப் போற்றுதலும் அங்கதப் படுத்துதலும் (பூச்சரம் 80, 104) என அரசியல் சார்புப் பொருண் மைகளும் இணைகின்றன.

மூடப்பழக்க வழக்கம்—நம்பிக்கை எதிர்ப்பு (பூச்சரம் 31, 32) பகுத்தறிவு போற்றுதல் (பூச்சரம் 87), பெண் உரிமை கோருதல் (பூச்சரம் 72-73, 103) என நல் சமுதாய ஆக்க நோக்கம் பலவும் அமைகின்றன. இலட்சியவாதி (சிந்துபாடும் சிற்றாறு 61), ஆசிரியன் சிறப்பாக இருக்க அறிவுரை (பூச்சரம் 33-34), நூலகம் (பூச்சரம் 18-19), தீய எழுத்தாளரையும் தரமில் நூல்களையும் கடிதலும் அங்கதப் படுத்துதலும் (பூச்சரம் 12, 14-15, 16, 20, 36 புல்வெளி 23), திரைப்பட உலகின் பாடல் திருட்டு (பூச்சரம் 17) எனக் கல்வி இலக்கியத்துறைச் செய்திகளும் பாடற் பொருளா கின்றன.

சில பத்திரிகைச் செய்திகளும், நிகழ்ச்சிகளும் பாடலுக்குப் பொருள் தருவது இங்குக் குறிப்பிடத்தக்கது. வெண்மணி நிகழ்ச்சி சாதிக் கொடுமை பற்றிக் கவிஞனைப் பாடச் செய்கின்றது (பூச்சரம் 30). இலங்கைத் தமிழரும் பாடற்பொருளாகின்றனர் (சிந்துபாடும் சிற்றாறு 71-72, உதிரிப்பூக்கள் 41). சமயத்தின் பெயரால் கூட்டத்தற்கொலை நிகழ்ந்த மேனாட்டுச் செய்தியும் பாடப்படுகின்றது (பூச்சரம் 79). பிரச்சினையும், நெஞ்சைத் தொடும் நிகழ்வும் பாடப்படலாக இவை பொருந்துகின்றன. காவிரியையும் கங்கையையும் இணைத்தல் பற்றிய எண்ணமும் பாடலில் தெளிகின்றது (எலி கடித்த பூனை 15-16).

'தமிழ்' பாடுபொருளாவது மிகப் பரவலாகக் காணப்படுகின்றது. தனித்தமிழ் இயக்கம், தமிழிசை இயக்கம் போன்றனவற்றின் தோய்வும் இப்பகுதிப் பாடலில் புலப்படக் காணலாம். பாரதி போற்றிய தமிழ்நாட்டுணர்வும், பிறமொழியாதிக்கத்திலிருந்து தமிழ்மொழியைக் காக்கும் திராவிட உணர்வும்கூட இப்பொருட்பன்மைக்குக் காரணமாகலாம். இந்தி மொழி எதிர்ப்பும் தமிழ்மொழி பற்றிய முன்னோக்கச் சிந்தனைகளைத் தந்திருக்க வேண்டும். தனிப்பாடலில் மட்டுமன்றி, தொடர்ப்பாடலிலும் (இக்கட்டுரையின் பிற்பகுதியில் விளக்கப்படும்), தமிழ் பாடப்படுவது இதன் வன்மையைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

தமிழ்நாடு பாடற் பொருளாவதில் சில தனி நிலைகள் காணப்படுகின்றன. இந்திய நாட்டில் உட்பட்ட நிலையில், தேசிய உணர்வுடன் 'நாடே தெய்வம்' எனக் கொள்ளுதல் உண்டு (அமுதத் தமிழிசை 80) யாதும் ஊரே எனும் எண்ணத் தொடர்ச்சியும் காணப்படுகிறது (ஒன்பது செண்பகப்பூ 83). இவ்வாறன்றித் தமிழ்நாடு தனித்துச் சிறப்பிக்கப்படுதலும் காணப்படுகின்றது. அமுதத் தமிழிசை 82,90), பல்மரபுச்சிறப்பும் வளமுமுடைய இந்நாட்டின் தற்கால இழிநிலையும் தெளிவாக்கப்படுதல் பிறிதொரு வெளிப்பாடாகின்றது (அமுதத் தமிழிசை 71, 81).

நாட்டைக் காட்டிலும் மொழிபற்றிய சிந்தனைகள் கவிஞரிடையே மிக்கு அமைவதாகத் தோன்றுகின்றது. பொதுநிலையில் மொழி போற்றாமையைக் கடிதலும் தாய்மொழிக் கல்வியும் பாடுபொருளாதல் சுட்டத்தக்கது (பூச்சரம் 29 93-96), தமிழ்மொழிச் சிறப்பை ஏற்றுதல் அமுதத் தமிழிசை 84, 85, 89, 92, உதிர்ப் பூக்கள் 9, 11, 25, 32, 34, 36, 62, 74. (சிந்துபாடும் சிற்றாறு 11-12,

20-21, 22-23), தமிழ்மொழி காத்தலைக் கூறுதல் (சிந்துபாடும் சிற்றாறு 66-65, 66-67, 68, 69), தமிழ்மொழிப்பற்று (உதிரிப்பூக்கள் 53, 55), தமிழ்மொழியைக் கடவுளாகவும் தாயாகவும் (அமுதத் தமிழிசை 83, 87, 91), காதலியாகவும் (அமுதத்தமிழிசை 88, 95) போற்றுதல், தமிழ்ப்பாட்டு (சிந்துபாடும் சிற்றாறு 91, 95-100), அமுதத் தமிழிசை 86), தமிழ் இசை (அமுதத் தமிழிசை 93, 94) என்பன சிறப்பிக்கப்படுதல் என இது விரிகின்றது. தமிழனையே அழைத்து அவன் மொழிச்சிறப்பைக் கூறுதலும், நிலாப்போன்ற இயற்கைப்பொருளை விரித்துப் பெருமை அறிவித்தலுமாக அமையும் பாடல்கள் இவற்றில் காணப்படுகின்றன.

நாடும் மொழியும் போன்று, மக்களும், தமிழர் என்ற நிலையில் பாடல் கருவாகின்றனர். தமிழினம் உயர்ந்த நிலையிலிருந்து தாழ்மையுற்றுவிட்டனர் எனும் கழிவிரக்கம்பற்றி, அவர் நிலையை மாற்றி ஏற்றம் செய்தற் பொருட்டு நெஞ்சக் கண்ணீர் அவலமாக இவை எழுகின்றன எனலாம் (உதிரிப்பூக்கள் 13, 15 17, 18-19, 22-23, 59, 64-67, 68-69) பாரதியின் சாயலுடன் மலேசியப்பாவலர் தரும் சில அடிகள் இங்குச் சுட்டத்தக்கன.

மேடைதனி லேறி மேன்மைத் தமிழ்ச் சொல்லை
பாடையில் வைப்பாரடி—கிளியே
பாழும் தமிழரடி......
சாதிகுல மென்றே சர்ச்சை தனை வளர்த்தே
ஓதிப் பிரிவாரடி—கிளியே
ஒன்றியே வாழாரடி .. (உதிரிப்பூக்கள் 15, 16

தமிழினப் பெருமையைப் பற்றி மிகுதியாக நினைத்தலும் அவ்வின ஈடேற்ற முயற்சியில் போர்முரசு கொட்டி (உதிரிப் பூக்கள் 24) கவிதை வாயிலாக ஈடுபடலும், இவ்வாறு வெளிநாட்டுத் தமிழ்ப் புலவர் படைப்பில் அமைவது சிந்திக்கத்தக்கது.

நெஞ்சில் தமிழுணர்வு
நினைவில் தமிழ் வாழ்வு
விஞ்சிய புதுமை வேட்கை
விளைநிலம் என்றன் உள்ளம்
நெஞ்சுவந் தேற்றத் தொண்டு
நிலையுற வேண்டி நாளும்
எஞ்சிய பணியி லென்றன்
இனத்தவர் மீட்சி காண்பேன் (உதிரிப்பூக்கள்-64)

இத்தகைய பல பொருண்மைகளிலிருந்து பொதுப்போக்கில் மாறுபட்டு, தத்துவ விசாரமாகவும், சில எண்ணங்களுக்கு உருவளிப்பது போலவும் பாடல்கள் அமைவதுண்டு. இவை ஓரளவு அருமையுடைத்தேனும், துறைவன் 'தத்துவம்' எனத் தனிப் பகுதி அமைப்பது குறிப்பிடத்தக்கது. உயிர் (113), பிறப்பு (118-119), தலைமுறை (120-121), எண்ணங்கள் (122), வெற்றி தோல்வி (130) விடுதலை (33-35) போன்றன சில, அருவ உண்மைகளைப் புலப் படுத்தும் நோக்கம் கொள்கின்றன. மனம் (புல்வெளி 30), மானிட சாதனை (ஒன்பது செண்பகப்பூ 171) பற்றிய கருத்துகளும் இங்குச் சிந்திக்கத்தக்கன.

தனிப்பாடலின் இப் பல்வகைப் பொருண்மைகள், வகை மையை (Variety) விரும்பும் கவிஞனின் மனப்பாங்கினைப் புலப் படுத்துகின்றன. அத்துடன் பல்பொருளும் பாடப்படும் காலப் பான்மையையும் காட்டுகின்றன. பலசூழலில் எழுதப்பட்டமை யால் கவிஞனின் வெவ்வேறுபட்ட பார்வையை, மனப்பாங்கை வெளிப்படுத்துவதாகவும் கொள்ளலாம் நன்மையான அனைத் தையும் போற்றும் 'வாழ்த்துப் பொருண்மை'யும் இங்கு அமைவது (அமுதத் தமிழிசை பாடல் 100), சிறப்பும் உய வும் முன்நோக்க மாகக் கொண்ட கவியியல்பையும் காட்டுகின்றது.

தனிப்பாடல்தொகைகளைவிடத் தனித்தொடர்ப்பாடல் நூல் களும், தொகுப்புகளும் எண்ணிக்கையில் குறைவு காட்டினும், சில தனித்தன்மைகளுடன் திகழ்கின்றன. இத்தொடர்ப்பாடல் நூல் கள், கதைப்பொருட் தொடர்புடையன எனவும், அத்தகு இணைக்கும் கதைக்கூறு இல்லாதன எனவும் இருநிலையில் அமை கின்றன. கதைத்தொடர்பு இல்லாதனவற்றைப் பொதுநிலையில் பிரபந்தம் எனும் மரபு வகையில் அடக்கலாம் எனினும் தொண் ணூற்றாறு எனும் வகைநிலையுள் அடங்குவனவும் அடங்காதன வும் இப்பகுப்பில் அமைகின்றன. சான்றாக, பிள்ளைத்தமிழ் (பாளையம் கேசியெம் பிள்ளைத்தமிழ், நாஞ்சில் ஆ. ஆரிது, பாபு வெளியீடு, நாகர்கோவில்) பிரபந்த மரபுநிலை காட்ட, ஆத்திசூடி (புதிய ஆத்திசூடிகள்-பன்னிரண்டு (பதி) ச. மெய்யப்பன், மணி வாசகர் நூலகம்) தொண்ணூற்றாறுள் உட்படாது அமைகின்றது. இவ் 'உட்படா' வகையிலும் நெறிசூடி நல்வழிப்பா போன்று (நாச்சியப்பன் பாடல்கள், பக். 210 214, 215-224) மிக முந்தைய நூல் தொடர்ச்சி காட்டுவனவும், 'தமிழே எல்லாம்' போன்று (கரு.நாகராசன், தமிழ்ப் பதிப்பகம், சென்னை) இந்நூற்றாண்டு

பாரதியின் கண்ணன்பாட்டமைப்புத் தோய்வு காட்டுவனவும் உண்டு.

'கதை'த் தொடர்புடைய எண்பதின் நூல்களிலும் இருவகைகள் காணமுடிகின்றது. ஒன்று புனைவு, மற்றது வரலாறு. இவற்றுள் பின் வகையான வரலாறு, பெரும்பாலும் காவிய அமைப்புக் கொள்கின்றது. முதனூலாகவும் வரலாற்றடிப்படையாகவும் பிற பல நூலமைய, காவிய ஆக்கம் அதனை இலக்கியமாக்கி உருவளிக்கும் இந்நிலை 'மனித தெய்வம் காந்தி காதை' (அரங்க சீனிவாசன், திருவள்ளுவர் பதிப்பகம், திருச்சி) போன்றவற்றில் அமைகின்றது. 'புனைவு' வகை அருகி உண்மை நிகழ்வை அடிப்படையாக்கித் தோன்றியிருக்கலாமெனினும், மொத்த அமைப்பில் புனைவிலக்கியமாகின்றது. குழந்தைக் கவிதை நூலில் (எலி கடித்த பூனை) இப் புனைவு வகை எளிய குறுகிய வடிவம் பெறுகின்றது. அதிலும், நாடக நிலையும் (கொள்ளை இன்பம், 47-51), சிறு நிகழ்ச்சி மையமும் (பொங்கல் 20-21, நல்ல தங்கை 41-46, தம்பியைக் காணவில்லை 34-35), கதைப்போக்கு அமைப்பும் (எலி கடித்த பூனை 40-43) காணப்படுகின்றன. பிற நூலில் சான்றுக் கதைபோன்ற அமைப்பும் சிந்துபாடும் சிற்றாறு 46-48 நன்றி ஒரு கேள்வி) பொதுவான கதைகூறும் நோக்கமும் காணப்படுகின்றன. கதையிலக்கியம் வரவேற்கப்படுகின்ற இக்காலத்தும், கவிதையில் கதை கூறல்-பாவியம் அமைத்தல் அருகியது எனினும், கவிஞர் நாச்சியப்பன் அதனைத் தம் பாடல் தொகுதியில் பெரும்பான்மையாக அமைப்பது குறிப்பிடத்தக்கது. கதைத்தன்மை யின்றெனினும் இவரது 'மங்கல மங்கை' பாரதிதாசனின் 'குடும்ப விளக்கு' மரபைப் போற்றி, பின்பற்றி எழுந்துள்ளது.

இவ்வாறமையும் பகுப்புள் அடங்கத்தக்கனவாகவே இவ்வாண்டின் நெடும்பாடல்கள் பெரும்பாலும் காணப்படுகின்றன. இவற்றை மரபு நிலையிலக்கிய அமைப்புடனும், பொருளுடனும் ஒப்பிட்டுக் காணும்போது பல இணைவுகள் தென்படினும், புதுமைகளும் வளர்ச்சியும் இல்லாமலில்லை. ஏற்கெனவே கண்டவிதமாக புராண மாந்தரும் இறைவரும் முதன்மையும் தலைமையும் பெறுவதனைவிட வரலாற்று நாயகர்களும், அரசியல் தலைவரும் முக்கியத்துவம் பெறுகின்றனர் இதனால் இலக்கியம், புனைவியல்-கற்பனையியலை விட்டு யதார்த்தவியலை நோக்கி முன்னேறிச் செல்கின்றது எனக் கூறலாம்.

கதைத்தொடர்பு இல்லாத வகையின் பிரபந்த நிலைபற்றி நினைக்கும்போது, அதிலும் முழுமையான மரபு போற்றுதல் ஒரு பகுதியாக மட்டுமே அமைகின்றது. இனியவை இருநூறு (சோலையப்பன், அருணோதயம்), சீட்டுகவி (அண்ணாமலை ரெட்டியார், உமா நூலகம்), அருட்பெருஞ்சோதி அட்டகம் (சரவணானந்தா, இராமலிங்கர் நற்பணி மன்றம்) திருப்பதி திருப்புகழ் (காமாக்ஷிதாசர், கேரட் ஒர்க்ஸ் பப்ளிகேஷன்ஸ்), செட்டி நாட்டரசர் மெய்க்கீர்த்தி மாலை(இளங்கோவன், பூகந்த வெண்பா (இராமானுஜக் கவிராயர், நம்மாழ்வார் சபை) என இவ்வாண்டில் வந்த, பெயர்க்குறிப்புக் கிடைக்கும் நூல் சில, முன்னிலக்கியப் பெயரொப்புக் காட்டுகின்றன.

அன்றியும், பிரபந்த இலக்கண மரபில் அடங்கத் தக்கதாகப் பிள்ளைத்தமிழே அமைகின்றது. ஆரிது இயற்றிய பிள்ளைத் தமிழ் முழுமையாக மரபு போற்றியுள்ளது. பத்துப் பருவங்கள், பல சீர் விருத்தயாப்பு என்பன மரபுப்படி அமைகின்றன. தலைவர்க்கேற்பவும், காலத்திற்கேற்பவும்,

.. முரட்டுக் கதரின் கேசியெம்
முக்காற் சிறுதேர் உருட்டுகவே
மூன்று வண்ணக் கொடி நிழலில்
முக்காற் சிறுதேர் உருட்டுகவே (பக்.57)

போன்ற செய்தி-பகுதிகள் அமைகின்றன. சுதந்திரத்திற்காக உழைத்தவர்களை, முயன்றவர்களைப் பாடும் உணர்வும், தேசிய உணர்வும், மனிதாபிமான உணர்வும் இத்தகு தலைவரைத் தேர்ந்தெடுப்பதில் மிளிர்க்கின்றன. இவ்வாறு உயர்வுடை அரசியல் தலைவரைப் பிள்ளைப் பருவத்தில் ஆக்கிப் பாடுதலுக்கு மாறாக, ஆண், பெண் குழந்தைகளையே இப் பருவங்களில் பாடுவதை நாச்சியப்பன் காட்டுகின்றார். வாழ்த்தில் தொடங்கி, செங்கீரை முதல் அம்புலிப் பருவங்களைக் கூறியபின் அம்மானை, நீராடல், ஊசல், சிற்றில், சிறுபறை, சிறுதேர் (நடை வண்டி) எனப் பதின்மூன்று பருவங்களாலமைப்பதிலும் புதுமை உண்டு.

ஆளை மயக்கும் சிரிப்புடையாய்
அள்ளிக் கொள்ளத் துடிக்கின்ற
பேழைச் செல்வம் போன்றவனே
பேரின் பத்தை வளர்ப்பவனே

காளை நடை நீ பயின்றிடவே
கையால் தள்ளு நடைவண்டி
வீழா திருகப் பிடித்தபடி
விரைந்து தள்ளு நடைவண்டி (பக். 237)

பருவத்துக்கு மூன்று பாடலாக இது அமைகின்றது. பேரிலக்கிய ஊற்றுப்பாகவும் இப் பிள்ளைத் தமிழ் அமைவதை 'மனித தெய்வம் காந்தி காதை' காட்டுகின்றது. பருவத்திற்கொரு பாடலாக காந்தியின் பிள்ளைப் பருவம் பாடப்பட்டு, ஒத்தும்-வேறுபட்டும் அமைகின்றது.

பிரபந்த இலக்கணங்களில் கூறப்படாதபோதும், இலக்கிய வகையாகி, வழக்கும் பயிற்சியும் பெற்ற சில பல மரபு வகைகளும் இவ் எண்பதின் நூல்களில் இடம்பெறுகின்றன. சித்தரின் வாலைக் கும்மி போன்றனவற்றின் செல்வாக்கும், நாட்டுப்புற இலக்கியப் போக்கின் தோய்வும் காரணமாக, எண்பதிலும் கும்மியிலக்கியம், ஏட்டிலக்கியமாக உருவாகின்றது (உதிரிப்பூக்கள் 11-12) செந்தமிழ் மொழி இங்குப் போற்றப்படும் பொருளாகின்றது.

கொட்டுங்கடி கும்மி கொட்டுங்கடி—இது
கொஞ்சு தமிழ் என்று கொட்டுங்கடி—உல
கெட்டுத் திசையினும் செந்தமிழின்—புகழ்
எட்டிடவே கும்மி கொட்டுங்கடி (பக். 12)

ஆத்திசூடி, இந்நிலையில் கருதத்தக்க மற்றொரு மரபு வகையாகும். ஔவையின் பாடலைப் பின்பற்றி, இந்நூற்றாண்டில் பாரதியும் பாரதிதாசனும் பாடி, இதன் மறுமலர்ச்சிக்கு வித்திட்டனர். ஏற்கெனவே வழங்கிய ஆத்திசூடியின் வளர்ச்சியாக வெண்பாவும், கதைகளும் இயற்றும் அமைப்புக்கு மாறாக, புதிய ஆத்திசூடிகள் இயற்றலாக, காலத்துக்கேற்ற கருத்துக் கூறலாக, எளிமையாக அறம் உணர்த்தலின் தொடர்ச்சியாக இவை அமைகின்றன. தமிழ்சூடி (வ. சுப. மாணிக்கம்), ஆய்வுசூடி (தமிழண்ணல்) பொதுவுடைமை ஞான அறிவுசூடி (ந. சஞ்சீவி), நெறிசூடி (நாரா. நாச்சியப்பன்), அறவியல்சூடி (ச. மெய்யப்பன்), நீதிசூடி (சோம. இளவரசு) முத்துச்சூடி (ரெ. முத்துக்கணேசன்) எனப் பெயர் மாறுபாடு காட்டினும் சூடி' எனும் நிலையில் ஒப்புமை கொண்டு, ஒரு இலக்கிய வகைத்தன்மை காட்டுவதும் இங்குச் சுட்டத்தக்கது. அவ்வாறே அமைப்பில் பெரும்பான்மை மாற்றம் இன்றெனினும், கருத்தோட்டத்தில் புதுமை இணைவது காணலாம்.

இக்காலத்திற்கு ஒவ்வாக் கருத்தும்—அரசனைப் போற்று (முத்துச்சூடி), தமிழனுக்கு உரிய தனித்த அறிவுரையும்-செந் தமிழோது (வரதநாதன் ஆத்திசூடி), 'நீதி' என்பதுள் உட்படாப் பொது எண்ணமும்—மீன் வளம் பெருக்கு (நீதிசூடி), பொது வுடைமைக் கோட்பாடும்—தனியுடைமை தவிர் (அறிவியல் சூடி,) பகுத்தறிவுச் சிந்தனையும்—மதமொரு மடமை (பொதுவுடைமை ஞான அறிவுசூடி) வாழ்வியல் சிந்தனையும்—யான் என தகற்று (ஆய்வுசூடி), இக்கால நிலை புலப்பாடும்—ஓசி கேளேல் (தமிழ் சூடி) பிறவும் அமைதல் குறிப்பிடத்தக்கது.

வாய்ப்புக்கேற்பச் சில முதலெழுத்துகளை விட்டும் விலக்கியு மமைவதால், இவை எண்ணிக்கையில் சுருங்கியும் (9 :, வாணி தாசன்—புதிய ஆத்திசூடி), பெருகியும் (122, தமிழண்ணல்-ஆய்வு சூடி) வருகின்றன. இயக்கம்போன்று, ஆத்திசூடி, பல தற்கால அறிஞரிடம் கேட்டு எழுதப்படும் நிலை இங்கு, இத்தொகுதியில் வெளிப்படுகின்றது.

நல்வழி, ஆத்திசூடி போன்று, பிறிதொரு மரபு வகை நிலை காட்டுகின்றது. '44 வெண்பாக்களைக் கொண்ட நாச்சியப்பன் நல்வழி... தன்மான இயக்கத்தின் புதுக் கருத்துக்களை ஓட்டமான நடையில்' தருகின்றது (பக். 252, நாச்சியப்பன் பாடல்கள்). வணக்கமாக இரு வெண்பாவும், நூற்பயனாக இருவெண்பாவும் நூல் முன் அமைந்து அறிவுரை இலக்கியமாக, அறநூலாக இந் நல்வழிப்பாவினைச் சுட்டுகின்றன. வடிவில், அமைப்பில் மரபு காட்டினும் காலத்திற்கேற்ற கருத்து மாற்றம் காட்டப்படுகின்றது.

சாதி பதினாயிரமாம் சண்டை பல கோடி யிவை
வேதிய ரென்போரால் விளைந்த வினை – மேதினியில்
செந்தமிழர் சாதிப் பிரிவினைகள் செய்தநிலை
மைந்த! இவை நமக்கு மாசு (பக். 216)

என முன்னிலைப்படுத்தி அறிவுறுத்தலும்,

தாய் மொழியைப் போற்றாதான் தன் மானம் போற்றாதான்
தாய் நாட்டைப் போற்றாதான் இம்மூவர்—ஆயுங்கால்
வையப் பெரும்பகையாம் வந்தெதிர் நிற்பரேல்
நையப் புடைத்தலும் நன்று (பக். 220)

என வீறுகொண்டெழுந்து சாட்டையடியாகச் சொற்களை வீசுத லும் இதன்கண் அமைகின்றன.

இயக்க இலக்கிய வகையாகவும், வேண்டுதலின் பேரில் எழுதப் பட்டதாகவும் அமைந்த ஆத்திசூடிபோல, பாரதியின் கண்ணன் பாட்டின் அடிப்படையில கரு. நாகராசனின் தமிழ்ப்பாட்டும், ‚தமிழே எல்லாம்' என்ற பெயரில் உருவாகியுள்ளது. இறைவனான கண்ணனை இறைநிலையில் மட்டுமன்றிப் பல உறவு-தொடர்பு நிலையில் கண்ட கவி பாரதிக்கு ஒப்ப, தமிழைப் பல கோணங்களில் அணுகுதல் இங்கு அமைகின்றது. பல தனிப்பாடல்களாக இவை அமையினும் ஒருமை நோக்கில் இயற்றப்பட்டு ஒரு தொகையாக அமைவது கருதி, தொடர்நிலைப் பாட்டுடன் வைத்துக் கருதப்படு கின்றது. பாரதியைவிட இன்னும் பல கோணங்களில் தமிழைப் பாடுவதால் இதில் வளர்ச்சியும் அமைகின்றது. முப்பத்திரு அணுகு முறையில் உருவ, அருவ உறவுகளாக-பொருளாக-பண்பாக-பண் பினராக இவை காணப்படுகின்றன. 'மாதா பிதா குரு தெய்வம், என்ற முறையைப் பின்பற்றிப்போலும் கவிஞர், 'தாய் தந்தை ஆசான் தெய்வமாகத் தமிழைப் பார்க்கத் தொடங்கிப் பின் பிறவற்றிற்குச் செல்கின்றார். காலத்திற்கேற்ப நீதிபதியாகவும் மருத்துவனாகவும் தமிழைப் பார்த்தலும் தமிழ்ச்சமயம் உரு வாக்கலும் தனித்துச் சுட்டத்தக்கன. முன்னிலைப்பரவலும், படர்க்கைப்புகழ்தலும், தமிழே பேசலுமாகப் பல நிலையில் இப் பாடல்கள் அமைந்து பல யாப்பில் ஆக்கம்பெற்றுச் சுவை சேர்க் கின்றன.

'தமிழ்த்தாய்' சிறப்பிக்கப்படுமிடத்து, அவள் தன்மையையும் ஆற்றலையும் கவினுற விளக்குகின்றார் கவிஞர்.

தேனுக்குச் சுவையீந்து அமுதுக்குச் சிறப்பீந்து
திருத்தமுடன் பயிலுவோர் தம்
ஊனுடனே உயிரினையும் உருக்குகின்ற ஆற்றலிவள்
ஒருத்திக்கே இங்கு உண்டு... (பக்.2)

அன்னையிவள் பேர் சொன்னால் அகத்தினிலே புத்துணர்ச்சி
அரும்பி வரும் முதியவர்க்கும்
இன்னலிலே நொந்து மனம் வாடையிலே தமிழென்றால்
இன்பவொளி விரைந்து வீசும்... (பக்.2)

எல்லாம் தமிழ், உயர்ந்தது அனைத்தும் தமிழ், உயர்வும் உறுதியும் அளிப்பது தமிழ் எனும் அனுபவ உண்மைப் புலப்பாடாகக் கவிகள் புனையப்படுகின்றன எனலாம். விஞ்ஞான யுகத்திலும் மொழி போற்றும் மொழியை முதன்மையாகக் கருதும்-ஏற்றும் நிலையாக இது பொருந்துகின்றது.

உன் துணையால் யானிந்த உலகினையே வென்றுவரும்
உறுதி காண்பேன்
நன்மதியே விண்மதியை நானடைந்தால் அங்கும் உன்
நற்பேர் ஓங்கும்
என்றுமிலை உனக்கீடு என்பதனை இவ்வுலகம்
ஏற்கும் அந்நாள்
ஒன்றுவரும் விரைவினிலே என்னருமைக் காதலியே
உன்பேர் வாழ்க (பக். 34)

எளிமையும், இனிமையும் மனங்கவர் சந்தங்களும் இக் கதைத் தொடர்பில்லாத் தொடர்ப்பாடல் வகைகளில் அமைவது, காலத் திற்கேற்ற கோலமாகவும் கருதத்தக்கது.

கதையிணைவுடைய தொடர்ப்பாடல் அமைப்பதில் கவிஞர் நாச்சியப்பன் முன்நிற்கின்றார். அவரது பாடற்றொகுதி பதினொறு சிறுகதைகளைத் தருகின்றது. நடப்பும் புனைவும் இக்கதைகளில் இணைவதை ஆசிரியனின் குறிப்பு வெளிப்படுத்து கின்றது. பெரும்பாலும் இவை குறுகி அமையினும், 'இளவரசி முல்லை' (பக்.135-191) அளவுப்பெருக்கம் காட்டுவதுடன் கரு வமைப்பிலும் கதையளவிலும் 'சிறுகதை'யைவிடப் பரப்புக் கொள்கின்றது. 'குறுங்காப்பியம்' அல்லது 'சிறு காப்பியம்' என்ற நிலையும் ஒரு சில பாடலுக்கு ஏற்புடையதாகத் தோன்றுகின்றது.

காலப் பழமையுடைய புராணமும், பழக்கமும், கருத்துமாக அன்றிப் புதுமை எண்ணங்களின் சேர்க்கையாக, புரட்சிக் கருத்து களின் புலப்பாடாக, சில உலகியல் உண்மைகளை வெளிப்படுத்து வதாக, சீர் திருத்தமும் அறங்கூறல் நோக்கும் இணைவதாக இக் கதைகள் அமைவது சிறப்பாகச் சுட்டத்தக்கது. சாதிமத பேதங் கள், வலியோர் மெலிந்தோரை வருத்துதல், தீண்டாமை, மூடப் பழக்க வழக்கங்கள், சமுதாயப் பிரச்சனைகள், பெண்ணுரிமை அறவொழுக்கம், தொழிலாளர் வாழ்வு, சமய எதிர்ப்பு, பகுத்தறிவு வாதம் எனப் பல சிந்தனைக்குரிய செய்திகள் இங்குக் கவிக்கதைஉருவம் பெறுகின்றன.

நம் நாட்டுச் செய்தி கதையாவதுடன் பிறமக்கள் உணர்வும் கதையாவதை 'பொன்னும் வெள்ளியும்' காட்டி, கவிஞன் என்ற அடிப்படையில் ஒத்துணர்வு கொள்ளச் செய்கின்றது. தீயவன் செய்ய நினைந்த நன்மையும், அவன் பொதுவியல்பால் தீமை

யாகவே முடிவதை-கவிஞன் உயிர்ப் பிரிவுக்குக் காரணமாவதை இந்தக் கஜனி-பர்தோசி கதை காட்டுகின்றது.

விருத்தமும், கலிவெண்பாவும், சிந்துமாக இக்கவிக்கதைகள் உருவாகின்றன. நூலின் முன்னுரை தரும் திறனாய்வாளர் உரை இக்கதைப்பாடலின் பல பண்பு நலன்களை, உவமை நயங்களை, கருத்துயர்வுகளை விளக்கி அமைகின்றன. கதை கூறும் நிலையில், நிகழ்வுகளைக் கொண்டுசெல்லும் நிலையில் எளிய உத்திகள் பொருந்துகின்றன. மரபுக் கவிமுறை பின்பற்றப்பட்டபோதும் பொதுமக்களும் புரிந்து கொள்ளும் நடையெளிமை இணைகின்றது அன்பும், அறமும், தியாகமுமாகிய பொதுமைப்பொருள் இக்கதை கட்கு அடிப்படையாவதால் இவை கால ஆதிக்கத்தால் அழியாத உருக்கொள்கின்றன எனலாம்.

உண்ண வரும் பேரலைகள் கண்டும் அங்கே
உறுதியுடன் உயர்ந்திருக்கும் கரையைப் போலே
மண்ணுலகில் நிலைத்திருக்கும் புகழைக் காண
மனங்கொண்டேன் உதவிடுவாய் கவிதை மன்னா (பக்.98)

என்ற கவியாற்றல்-கவிதையாற்றல் இங்கும் கருதத்தக்கது. கதைச் செய்திகளின் நிகழ்வுகளின் செறிவுப்போக்கால் இவற்றில், கவி நயம் கருதிய தனிப்பகுதிகள் அமையாது, அணிநலனும் பிறவும் கதைப் போக்கிலேயே இணைந்து செல்கின்றன.

புனைவியல் மாந்தரைத் தலைவராகக் கொண்ட இக் கதை யிலக்கியங்களுக்கு வேறாக, வரலாற்று மாந்தர் தலைவராக அமைக்கப்படுகின்ற இலக்கியங்கள் தனிவகையாகின்றன. இவற் றுள், நெடும்பாடல், காவியம் என இருபகுப்பு நிலைகள் காணப் படுகின்றன. நாச்சியப்பன் பாடல்கள் தரும் ‘ஈரோட்டுத்தாத்தா’ முதல் வகையைச் சாரும். காவிய அளவுக்கு-அமைப்புக்கு விரியாப் பண்பு பற்றி இது நெடும்பாடல் என அடக்கப்படுகின்றது. ஒரு தலைவனை மையமாகக்கொண்டு போற்றுதலாக, தலைவன் இயல்பு-தன்மை-வாழ்வு உணர்த்தலாக இது அமைவதால், தனிப் பாடலின் புறப் போற்றுதலுக்கு மாறாக, பல கருத்து இணைவும் எண்ணப்பன்மையும் கொள்கின்றது. பல்வகைப் பகுதிகளாகப் பகுப்புண்டு வெண்கலிப்பா, பல்வகை விருத்தங்களால் இது உருவாகுகின்றது. வரலாற்றுச் சாதனைகளின் பட்டியலாக, பகுத்தறிவுத் தொண்டனாகப் பெரியாரை இங்குப் புனைகின்றார். வாழ்க்கை வரலாற்றிலக்கிய வகையாகவும் இதனை எண்ணலாம்.

காவியத் தன்மையும் அமைப்பும் கொண்டு, கலைஞர் காவியமும் (வே. கபிலன், வான்மதி பதிப்பகம், சென்னை), மனித தெய்வம் காந்தி காதையும் இவ்வாண்டில் வெளிவந்துள்ளன. முன் வந்த தமிழ்க் காவியப் புனைதிறன் இவற்றுள் செல்வாக்குக் கொள்கின்றன முந்தையது, இளங்கோவின் சிலப்பதிகார அமைப் பொட்டுதலைக் காட்ட, பின்னது கம்பனின் கவிக்கோயிலை மாதிரியாகக் கொள்கின்றது. எனினும் இம்முன் மாதிரிகளி லிருந்து காலத்திற்கேற்ற மாற்றங்களை இந்நூல்கள் கொள் கின்றன. சீரான ஒழுக்கும் ஏற்ற இறக்கமுடைய கதைபோலன்றி, வரலாறாக இருப்பதால், இவை செய்திச்செறிவாக அமைந்து களிப்பூட்டலாம். ஏற்கெனவே முடிந்துவிட்ட ஒரு அரசியல் யுகத் தலைவனின் வரலாறாக ஒன்றும், வாழும் தலைவன் வாழ் வாகப் பிறிதும் அமைவது, இவற்றிடையும் வேறுபாடமைய வழி யமைக்கின்றது.

சிலம்பை யொத்து, கலைஞர் காவியம் செல்கின்றமை பல கூறு களில் வெளிப்படுகின்றது. தொடக்கம், 'மங்கல வாழ்த்து' எனத் தலைப்புப் பெறலும்,

வாழிய நிலமகள் வாழிய பாரினில்
ஏழிசைத் தமிழர் ஏற்றம் பெற்றிட
உலவிடும் கலைஞர் உயர்மனப் பாங்கில்
நிலவிடும் என்தாய் நிலமகள் வாழிய (பக். இல்லை.)

என முதற்பாடல் அமைதலும், தொடர்ந்து ஞாயிறு, மதி, மழை, தமிழ் என்பன வாழ்த்தி வணங்கப்படலும், காவியம் பெரும் பாலும் ஆசிரியத்தில் கொண்டு செல்லப்படுதலும் இவ் எண்ணத்தைத் தருகின்றன.

கண்டப்பகுப்பின்றி 33 பகுதிகளில் அமையும் இந்நூலின் முதற் பகுதித் தொடக்கம், 'உலகம் உவக்க...' (பக். 1) என அமைந்து திருமுருகாற்றுப்படையை நினைவூட்டி, சங்கச் சார்பும் புலவர் கொள்வதைக் காட்டுகின்றது. முதற்பகுதியான, 'தமிழக விளிம்பில்', காப்பியச்சூழலையும் பின்புலத்தையும், தலைவன் மரபையும் தோன்றுமிடத்தையும் தெளிவுறுத்தியமைகின்றது. பெரும்பாலும், ஒவ்வொரு பகுதியின் இறுதியிலும் கவிஞனின் குரல் வெளிப்பட்டு, தொடர்ந்த பகுதியில் வரப்போகும் செய்தியினை நுதலியமைகின்றது.

நான்காம் பகுதியிறுதியே காவியத் தலைவன் பிறப்பைத் தருவதும் (கால முள் கணிப்பு), ஆறாம் பகுதி கதையாகவன்றி இசைப்பாட்டான தாலாட்டாக உருவாவதும் (நான் உறங்க நீ உறங்கு) குறிப்பிடத்தக்கன. தண்டி கூறும் காப்பிய உறுப்புகளும், காப்பியத்தன்மைகளும் இந்நூலில் முழுமையாக அமைந்து அழகுறுவதை நூலின் முன்னுரை (காவியத்திறனாய்வு, சிலம்பொலி செல்லப்பன்) காட்டுகின்றது. கலைஞரின் 'நெஞ்சுக்கு நீதி' அடிப்படை நூலாக, 'கலைஞர் காவியம்' அம்முதனூற்கு வழி நூலாயதை ஆசிரியனின் முன்னுரை வடிக்கின்றது முன்னோர் மொழிபோற்றல் இடம்பெறுகின்றது.

காப்பியத் தலைவனின் இளமையும் குடும்ப வாழ்வும் அரசியற் சார்புடைய புறவாழ்வும், நெஞ்சத்து நினைவும் ஆக்கங்களும், செயலும் சீர்மைகளும், போர்க்குரலும் புரட்சியும் எல்லாம் காவியக்களனில் வெளிப்படுத்தப்படுகின்றன. அண்ணாவின் மறைவும் கலைஞர் ஆட்சியுமாகக் காப்பியம் முற்றாது முடிகின்றது,

எல்லார்க்கும் பொதுவாகி ஏழைக்கு உயிராகி
இல்லாதார் துயரத்தை இல்லாம லாக்கிவிட
அரசாளும் நாயகனின் அடிச்சுவடை அவர்வழியில்
முரசறைந்து பின்தொடர முடிக்காமல் முடிகின்றேன்(பக்.293)

'பின்னுரை போன்று, டாக்டர் கலைஞரின் சாதனைப்பூக்கள்' பட்டியல்படுத்தப் படுகின்றன.

கவிஞர் அரங்க. சீனிவாசனின் மனித தெய்வம் காந்திகாதை அளவிலும், அமைப்பிலும், காப்பியத் தலைவனின் வாழ்வாகிய காலப்பகுதியிலும் பரப்பும் அளவுப் பெருமையும் கொள்கின்றது. வழங்கிய கதையொன்றை—மக்களிடம் செல்வாக்கு மிகுதிபெற்ற கதையைக் காவியமாக்கும் மரபுக்கு மாறாகச் சில ஆண்டுகட்கு முந்தைய வரலாற்றைக் காவியமாக்கும் புதுமை இதில் பொருந்துகின்றது. காப்பியம் வாழ்க்கை வரலாறாக அமைதலாகவும் இது காணப்படுகின்றது அரசியல் காப்பிய மெனவும், அறவியல் நெறிக் காப்பியம் எனவும், சமயவியல் காப்பியமெனவும், பக்திக் காப்பியமெனவும், வாழ்வியல் காப்பியமெனவும் கூறத்தக்கதாக பல பொருட்கூறுகளும் இடம்பெற்று, முதன்மை கொண்டு அமைதல் புலப்படுகின்றது.

விருத்த அமைப்பு, காப்பியத்திற்கு மரபுவடிவத் தொடர்ச்சியை வெளிப்படுத்துகின்றது. பல்வகைச் சந்தமும், ஓசைவிரைவுமுடைய பாடல்கள் விரவி வருகின்றன. இருசீராகிக் குறுகிய அமைப்புடைய பாடலும் உள (2702-25).

ஒளிர வாழ்விலே
எளிமை பூண்டதால்
களிகொள் சாந்தியும்
அளியும் மேவினார் (2722)

எதுகையும் மோனையும் இல்லாப் பாடலே இல்லை எனக் கூறுமளவிற்குத் தொடைநயம் சிறக்கச் செய்யுட்கள் யாக்கப்படுகின்றன.

காப்பிய மரபுக் கோட்பாடுகள் பல பின்பற்றப்படுவதுடன் தலைவன், காலம் இவற்றிற்கேற்பப் புதுமைகளும் பின்பற்றப்படுகின்றன. காண்ட, படலப் பிரிவுகள் அமைகின்றன. பாயிரம், காப்புக் கூறும்போது இறை (கண்ணன்) வணக்கத்துடனமைந்துவிடாது. இந்திய தேசியத்தலைவர் பலரைப் பாடுவதுடன், ஆசிரியனின் ஆளுமையிணைவுடன் பிறப்பு, ஆசான், சாபக்கேடு, வறுமைகளைப் 'போற்றுதல்' புதுமையாகும் நூல் வரலாறும் அவையடக்கமும், மரபுத்தொடர்ச்சி காட்டுகின்றன.

எழுவாய் குறைந்த தொடர் காணின்தோன்றா எழுவாய் அமைத்துத்
தழுவா நிற்பர் தமிழ்ப்புலவர் தமியேன் வாக்கில் நயம் குறையின்
வழுவாய் விட்டது என இகழார் வாக்கில் நயங்கள் வருவித்துக்
கழுவாய் கண்டு மகிழ்வர் எனும் கருத்தால் நாவை அசைக்கின்றேன் (31)

கம்பன் சடையப்ப வள்ளலுக்கு நன்றி நவிலல்போல், கவிஞர் பெரும்பட்டியலமைக்கின்றார். இக்கால மரபைப் பின்பற்றிக் 'காணிக்கை'யும் மரபைத் தொடர்ந்து தன்னறிமுகமும் அரங்கேற்ற ஆண்டும் அமைக்கின்றார்.

காண்டம் தோறும் காப்பமைக்கும் கம்பனிலும் முன்சென்று படலம் தோறும் கண்ணன் துதி தருகின்றார். அவ்வாறே கம்பன் கவிக்குரல் பல்லிடங்களில் 'கூறினேன்' எனவும் 'கூறுவாம்' எனவும் வெளிப்படுதல்போல, ஒவ்வொரு படலக் காப்பிணைத்

தொடர்ந்தும் 'தோற்றுவாய்' அமைத்து 'நுதலிப்புகுதல்' உத்தி மேற்கொள்ளப்படுவதில் அமைப்பொருமை புலப்படுவது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. அன்றியும் தேவைப்படுமிடத்து இடையிலும் அக்குரல் ஒலிக்கின்றது. இணைப்புக் கண்ணியாக, தொடர்ச்சி ஏற்படுத்தவும், காட்சி-செய்தி மாற்றம் தரவும் இது பயன்படுகின்றது (சான்று: 3172)

முன்னோர் மொழிபோற்றல் உத்திப் பயிற்சியால், முன் இலக்கியம் பலவற்றையும் கற்கின்ற தன்மையை, நினைவூட்டுகின்ற இயல்பை இப்பெருங்காப்பியம் அளிக்கின்றது. கம்பனின் 'வெந்த புண்ணில் வேல்' நினைப்பூட்டப்படும் வண்ணம், கவிஞரின்,

வீசிய நெடிய வாள் வெட்டிய புழையிடை
மூசிய கனல் எரி மூளவே நுழைத்தென... (2421)

போன்ற பகுதிகள் அமைகின்றன.

காப்பிய அமைப்புள் பிரபந்தத்தை இணைத்தலாக அமையும் பகுதிகள் புது உத்தி நோக்க நிலையில் சுட்டத்தக்கன. பிள்ளைத் தமிழும் (493—502), புலம்பலும் (1609—19) போன்றன இவ்வாறமைகின்றன. தமிழ்மரபு இணையக் காவியம் ஆக்கும் கவிஞன் விருப்புப் புலப்பாடாக இதனை எண்ணலாம்.

ஆருயிர் வருக எங்கள் அருட்செல்வம் வருக அன்பின்
வாரிதி வருக ஞான வாரணம் வருக இந்தப்
பாரதம் காக்க வந்த பண்ணவ வருக என்று
சீரினில் உயர்ந்த தாயர் சிரித்தழைத்திட நடந்தார் (894)

காப்பியங்கள் கிளைக்கதைகளைக் கொண்டமையும் மரபிற்கேற்ப சிரவணன் கதை (521-67), அரிச்சந்திரன் கதை (584-709) போன்ற பல, தலைவர் வாழ்வுடன் இணைந்து, காப்பியப் போக்கிலிருந்து மாறுபடாது வருவது சிறப்பாகச் சுட்டுதற்குரியது. காப்பிய நிகழ்வுப்போக்கில் கதிர்—மதி உதயங்கள் மறைவுகள் காலக் கணிப்பாகவும் இயற்கை வருணனையாகவும் அமைவதற்கேற்ப, இக்காதையும் அமைகின்றது. தற்குறிப்பேற்றமும், இவற்றில் இணைகின்றது (3885-86). தமிழ்மொழியைப் போற்றும் கவிமரபும் காலமரபும் கூடக் காப்பியத்தில் இயைந்து வருவது சுட்டற்குரியது.

புத்தமிழ்ப் புதுக்கனி வர்க்கமும்
முத்தமிழ்ச் சுவைப் பாலுமுன் னாகிய
சத்துவத்தின் தனிச்சுவை உண்டியை
வித்தகர்க்கு அவண் வேறு படைத்தனள் (2055)

திரிபும், மடக்கும், சிலேடையும், ஒலிக்குறிப்பும் பயிலும் வண்ணம் யாப்பு-அணியிலக்கண மரபுகளை-அழகுகளைப் பயன் கொள்ளும் கவிநிலை புலப்படுகின்றது. இவையும் சொற்சிலம்பாக அன்றி, நயமுற அமையும்போது சிறப்புக் கொள்கின்றன.

கும்புஇட்டுக் காகம் குதறுமுன்னே கொடுநாயும் கழு
கும் பிட்டு உக்கு ஆகம் குலையு முன்னே வையைக் கோடு
சுவைக்
கும்பிட்டுக்காக அடைத்தவனைப் பங்கிற் கொண்டவனைக்
கும்பிட்டுக் ''காகண் எதிர் வா'' என்றே துதி கூறுமினே
(3966)

பல்சுவைக் கலவையாகக் காப்பியம் அமைக்கும் இயல்புப் பொருத்தம் இங்கும் மிளிர்கின்றது. காந்தியடிகளின் உண்ணா விரத நோன்பு ஏற்படுத்திய அவலச்சுவை கவிஞனின் நெஞ்சக் கண்ணீராக வெளிப்படுகின்றது.

சூடலை இழந்த மாலை தொடுத்தலை இழந்த மென் பூ
ஆடலை இழந்த மன்றம் அணிதலை இழந்த பொற்பூண்
பாடலை இழந்த வீணை பயில்தலை இழந்த நூல்கள்
நாடலை இழந்த உள்ளம் நாடு அலைபடும் இந் நோன்பால்
(4171)

புனைவியல் காப்பிய மரபிற்கு மாறாக, யதார்த்தவியல் காப்பியமாக அருட்கவியின் இக்காதை படைக்கப்படுகின்றமையால், பழங் காப்பிய மரபுறுப்புகள் இன்றியும், மாறியும் வருவது இங்குப் புலப்படுகின்றது. பெருங்காப்பியம் எழக் காலச்சூழலின் அழுத்தம் காரணமாதலை இக்காப்பியம் காட்டுகின்றது. எனினும் பேரிலட்சியம் ஒன்றைப் போற்ற, அதற்கு இவ்வகையிலும் நிலைத்த உருவளிக்க அமைந்த பெருமுயற்சியாக இக்காப்பியம் அமைகின்றது. நான்கடிகள்கூட இல்லாத குறைக் 'கவிதை' களில் நிறைவுகாணும் தற்கால நிலைக்கு மாறாகப் பேரிலக்கியம் படைக்கும் 'முரணே' தனி அழகும் ஓங்குதலும் கொள்கின்றது எனலாம். விருத்தப் பாக்களைப் வளர்த்த கம்பன் இனத்தைச் சார்ந்த கவிஞர்கள் இன்னும் தமிழகத்தில் மறைந்துவிடவில்லை என்பதனை இம் மனித தெய்வம் காந்தி காதை காட்டுகின்றது.

பொதுவாக, மரபுக் கவிதைகள் இன்னும் மக்கிவிடவில்லை என்பதை இவ் எண்பதின் செய்யுள் நூல்கள் காட்டுகின்றன. ஏற்கெனவே கண்டவிதமாக, இவை, மரபுக் கவிதையின் வெறும் மாற்றுப் பதிப்புகளாக அன்றிப் புத்துணர்வுப் போக்கும் கொள்கின்றன. காலத்திற்கேற்பவும் பயன்பாட்டு நோக்குடனும் இலக்கியம் உருவாக்கும் பாங்கு புலப்படுத்துகின்றன.

## நூற்றொகை

1. அமுதத் தமிழிசை - கிருஷ்ணமூர்த்தி கு. சா., (சென்னை, முத்தமிழ்ப் பண்ணை)
2. உதிரிப்பூக்கள் - அன்பரசன், (சென்னை, பூங்கொடிப் பதிப்பகம்).
3. ஒன்பது செண்பகப்பூ - துறைவன் (சென்னை, வானதி பதிப்பகம்).
4. கலைஞர் காவியம் - கபிலன், வே., (சென்னை, வானதி பதிப்பகம்).
5. சிந்து பாடும் சிற்றாறு - மணிமொழி (சென்னை, பூங்கொடிப் பதிப்பகம்).
6. தமிழே எல்லாம் - நாகராசன், கரு., (சென்னை, தமிழ்ப் பதிப்பகம்).
7. நாச்சியப்பன் பாடல்கள் - நாச்சியப்பன், நாரா., (சென்னை, தமிழாலயம்).
8. புதிய ஆத்திசூடிகள் 12 (பதி), மெய்யப்பன் (சென்னை, மணிவாசகர் நூலகம்).
9. புல்வெளி - தேவமைந்தன் (புதுச்சேரி, அன்னை வெளியீடு)
10. மலர்ச்செண்டு - சமதர்மன் (சென்னை, கமலப்பிரியா பதிப்பகம்).
11. மனித தெய்வம் காந்தி காதை - அரங்க சீனிவாசன், (திருச்சி, திருவள்ளுவர் பதிப்பகம்).
12. எலிகடித்த பூனை - கதிரேசன், குழ., (சென்னை, மீனாட்சி புத்தக நிலையம்).
13. பாளையம் கேசியெம் பிள்ளைத்தமிழ் - நாஞ்சில் ஆ. ஆரிது (நாகர்கோவில், பாபு பிரசுரம்).

# எண்பதில் இலக்கிய ஆய்வு

ர. விஜயலட்சுமி

ஒரு மொழியின் இலக்கிய வளம், அம்மொழியில் எழுந்த பல்வேறு பொருளடிப்படையில் எழுந்த படைப்புகளால் செழிப்பூட்டப்படுகிறது. இலக்கியத்துடன் கூட, அவ்விலக்கியத்தின் மேலெழுந்த ஆய்வுகள், திறனாய்வுகள் ஆகியனவும் மேலும் மொழிவளம் சிறக்க உதவுகின்றன. இலக்கிய ஆய்வாளர்கள், ஏற்கனவே படைக்கப்பட்ட இலக்கியங்களைத் தரம்பிரித்து, அவற்றின் திறனையும், நலனையும், அறிஞர்கட்கும் இலக்கிய ஆர்வமிக்க வாசகர்கட்கும் சமர்ப்பிக்கின்றார்கள். ஏன் இவர்கள், இலக்கிய உலகில் வழிகாட்டிகளாகவும், மதிப்பீட்டாளர்களாகவும் பணியாற்றுகிறார்கள் என்று கூடக் கூறலாம்.

இலக்கிய ஆய்வாளர்கள் பல்வகைத் தரத்தினர். அவர் தரத்திற்கும் திறனுக்குமேற்ப ஆய்வின் நெறிமுறையும் வேறுபடுகிறது. இன்றைய நிலையில், தமிழ் ஆய்வில், ஒரு நெறிமுறைக்குட்படுத்தப்பட்ட (Methodology) ஆய்வின் நலனையுணர்ந்ததால் ஏற்பட்ட விழிப்புணர்ச்சியை, நம்மால் ஓரளவு உணரமுடிகிறது. எனினும், முழுமைபெறும் வழிநோக்கி அறிவியலடிப்படையில் நாம் விரைந்தாலன்றி, கடந்த கால வளர்ச்சியை திரும்பிப் பார்த்துக் கழிவிரக்கம் கொள்ளும் நிலை வந்துவிடும். இன்று தமிழில் ஆய்வுகள் பல, பட்டங்கள் பெறவேண்டிப் பல்கலைக் கழகங்கட்கு அளிக்கப்படுகின்றன. இவை தவிர ஆய்வு நிறுவனங்களும், தமிழ் ஆர்வமிக்கோரும் ஆய்வுகளை நிகழ்த்தி வருகின்றனர்,

இலக்கிய ஆய்வாளர்கள் உணர்ச்சிவசப்பட்டு நடுநிலை குன்றி விட்டால், அவர்கள் உலகிற்கு அளித்த முடிவுகள், இலக்கிய நெறி பிறழ்ந்து செல்ல வழிவகுத்துவிடும். சான்றற்ற முடிவுகள், வழிவரும் ஆய்வாளர்களால் முடிந்த முடிவுகளாகக் கொள்ளப் படலாம். இம்முடிபுகளே மேற்கோளாகக் காட்டப்பட்டு, அவற்றை அடிக்கற்களாகக் கொண்டு உயர்மாடிக் கட்டடங்களே எழுப்பப்படலாம். ஆனால் இவை காலத்தின் வேகத்திற்குத் தாக்குப்பிடிக்க முடியாமல் பின்னர் தரைமட்டமாகிவிடும். எனவே மொழியின் வளர்ச்சி வலுமிக்க, செழிப்புள்ள, கவின் கொண்ட, இலக்கியங்களாலும் திறன்நிறைந்த, நடுவுநிலை குன்றா ஆய்வுகளாலும் மேம்படுத்தப்பட வேண்டும்.

எண்பதில் ஆய்வு நூல்கள் என்ற இந்தத் தலைப்பு பெரு நோக்கில் திறனாய்வு நூல்கள், இலக்கியக் கட்டுரைகள் இலக்கிய ஆய்வு ஏடுகள், ஒப்பிலக்கியம் போன்ற எல்லாவற்றையும் உள்ளடக்குமாயினும், பரப்புக் குறுக்கம் வேண்டி இத்தலைப்புகள் தனித்தனியாக வேறு ஆய்வாளர்களால் இத்தொகுப்பில் ஆயப் பட்டுள்ளது. இத்தலைப்புகளில் அடங்காத ஏனைய அச்சேறிய நூல்களை மாத்திரமே பிரித்தெடுத்து இக்கட்டுரையை எழுதி யுள்ளேன்.

இத்தகைய நூல்கள் ஏழு இங்கு நோக்கப் படுகின்றன இவை க. காந்தியின் '**தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்**, கே. பகவதியின் '**தமிழர் ஆடைகள்**'[2] அ. தட்சிணாமூர்த்தியின் **தமிழர் நாகரிகமும் பண்பாடும்**[3] கு. முத்துராசனின் '**சங்ககாலம்**'[4] இரா. காசிராஜனின் '**உலகக்காப்பியங்கள்**'[5] இரா. மாயாண்டியின் '**சங்க இலக்கியத்தில் கற்பனை**'[6] மொ. அ. துரை அரங்கசாமியின் '**சங்ககாலச் சிறப்புப் பெயர்கள்**'[7] என்பனவாம். இவற்றுள் முதல் மூன்றும் தமிழ் இலக்கியங்களைத் துணைகொண்டு தமிழர் பண் பாட்டின் பல்வேறு கூறுகளையும் வெளிக்கொணரும் முயற்சி யாகும். நான்காவது நூல் உலகின் பல்வேறு நாடறிந்த காப்பியங் களையும் அவற்றின் நலன்களையும் தமிழில் தர எடுத்த முயற்சி யாகும். இறுதி மூன்றும் சங்க நூல்களின் சிறப்புக்கூறுகள் சில வற்றைக் கூறி நிற்கின்றன.

முதலில், பண்பாட்டுக் கூறை வெளிப்படுத்தும் நூல்களுள் ஒன்றான க. காந்தியின் **பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்** என்ற நூலை நோக்குவோம். ஆசிரியரின் பிஎச். டி. ஆய்வேடாகச்

சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பட்டு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் அச்சேற்றப்பட்டது இந்நூல் தொல்காப்பியம், சங்கஇலக்கியம், (எட்டுத்தொகை, பத்துப் பாட்டு) சிலப்பதிகாரம், மணிமேகலை, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் ஆகியவற்றை ஆய்வு அடிப்படை நூல்களாகக் கொண்டு, இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

நூலாசிரியர் கூற்றுப்படி 'தமிழர் பண்பாட்டு மரபுகளை உணர்த்தும் இவ்வாய்வில் சமுதாயப் போக்கே சிறப்பாகக் கருதப் பட்டுள்ளது எனவே இங்கு தமிழரின் பொதுவான, சிறப்புமிக்க பழக்கவழக்கங்களும், நம்பிக்கைகளுமே ஆய்வுக்கு மேற்கொள்ளப் பட்டுள்ளன. மேலும், தமிழரின் தனித்த சில மரபுக்கூறுகளை இனங்கண்டுணரவும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.''[8]

தமிழரின் பழக்கவழக்கங்கள், தமிழரின் நம்பிக்கைகள், தமிழரின் நம்பிக்கை வயப்பட்ட பழக்க வழக்கங்கள், தமிழரின் வாழ்வியல் மரபுகள் என்ற ஐந்து பெருந்தலைப்புகளினடிப் படையில் அமைக்கப்பட்டுள்ளது இந்நூல். ஆசிரியர் தன் முன் னுரையிற் கூறும் பின்வரும் பகுதி அவர் ஆய்வில் கைக்கொள்ள விழைந்த நெறிகளைப் புலப்படுத்துகிறது.

''மக்களினங்களின் பழக்கவழக்கங்களையும் நம்பிக்கை களையும் ஆராய்வதற்குப் பல கல்வித் துறைகளின் அறிவு தேவை யான ஒன்றாகும். அவற்றில் குறிப்பிடத் தக்கவையாகச் சமூக வியல், மானிடவியல் (Anthropology), உளவியல் (Psychology) ஆகியவை அமைகின்றன. பழக்க வழக்கங்கள் சமூகவியல் சார்ந்த தாக அமையினும் தமிழரின் சிறப்பினை உணர்வதற்கு ஒப்பாய்வு இன்றியமையாத காரணியாக அமைவதால் சமூக மானிடவியல் (SocialAnthropology) கண்ணோட்டங்கள் இடையிடையே மேற் கொள்ளப்பட்டுள்ளன.''[9]

ஆசிரியர் எந்த நெறிகளின் வழி தன் தரவுகளை ஆய்வு செய் திருக்கின்றாரோ, அவற்றின் தெளிவான விளக்கங்களை நூலில் அளித்திருந்தால் பயனுடைத்தா யமைந்திருக்கும். இவ்விளக்கங்கள் ஆசிரியர் கையாள்வதாகக் கூறும் சமூகவியல், சமூக மானிடவியல், உளவியல் போன்ற துறைகளில் நற்பயிற்சி பெறு வாசகர்கட்கு துணையாயமைந்திருக்கும். ஆசிரியரின் ஆய்வில். சமூகவியல், சமூக மானிடவியல் கண்ணோட்டங்களின் தனித்தன்மைகளை எங்கும் விளக்கவில்லை.

அண்மைக்காலம்வரை, இத்துறைகள் இரண்டும் ஒன்றாகவே இயங்கி வந்திருக்கின்றன. சமூகவியல் (Sociology) சமூக மானிடவியலை (Social Anthropology) விடப் பழமையானது. சமூகவியல் ஆய்வுகள் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி, பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி ஆகிய காலப்பகுதியிலேயே ஆரம்பமாயின. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சமூக மானிடவியல் துறை தொடங்கிற்று. இன்றும் சமூகவியலையும், மானிடவியலையும் ஒன்றாகச் சேர்த்து ஆயும் ஆய்வகங்கள் பல ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உண்டு. பெரும்பாலான சமூகவியல் ஆய்வாளர்கள், தொழில் நுட்பத் துறைகளில் வளர்ச்சியடைந்த சமுதாயங்களைப் பல்வேறு கோணங்களிலிருந்தும் ஆய்கின்றனர். தமது தரவுகளை (Data), பின்புல அறிவினை (background knowledge) வரலாற்று ஏடுகளிலிருந்தும், புள்ளியியல் (Statistical) விபரங்களிலிருந்தும் சமகாலச் செய்திகளை வினாநிரல்களிலிருந்தும் (Questionaires) அறிகின்றனர். பிற பண்பாடுகளை அறிவதில் ஆர்வமுள்ளவர்கள் மானிடவியல் ஆய்வாளர்கள்.இவர்களது ஆய்வுகள் பெரும்பாலும் சமுதாய அமைப்புகள், உரிமைகள், மக்களிடை நிலவும் உறவுகள் சமுதாயத்தை ஒன்றிணைத்து வைக்கும் சில கட்டுப்பாடுகள் (obligations), அவர்கள் பண்பாடு, பழக்கவழக்கங்கள், மக்கள் நடைமுறைகள் பற்றி அமையும். ஆனால் சில சமயங்களில் மானிடவியல், சமூகவியல் இரண்டும் ஒன்றுடன் ஒன்று சேர்ந்து ஆயப்படுவதுமுண்டு இங்கிலாந்தில் சமூக மானிடவியல் ஆய்வுகள் மனிதஇன ஆய்வுகளிலிருந்தும் தெளிவாக வேறுபடுத்தப்பட்டுள்ளது. மனிதஇன ஆய்வாளர் பெரும்பாலும் வரலாற்று ஏடுகளில்லாத மக்கள் சமுதாயங்களைப்பற்றி ஆய்வர். மேற்கூறிய ஆய்வுத் துறைகள் தவிர, அமெரிக்காவில் பண்பாட்டு மானிடவியல் (Cultural anthropology) என்ற இன்னொரு ஆய்வு இயக்கமும் அண்மையில் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இத்துறையில் ஆய்வு நிகழ்த்துவோர் பெரும்பாலும் பண்பாட்டு நோக்கை அடிப்படையாகக் கொண்டே தம் ஆய்வுகளை மேற் கொள்வர்.

மேற்கூறிய எந்த நெறிகளின் எந்தக் கூறுகளைத் தன்னாய்வில் எந்தெந்த இடத்தில் கையாண்டுள்ளார் என்பதை இந்நூலாசிரியர் விளக்கியிருப்பின் படிப்போர்க்கு உதவியாக இருந்திருக்கும். மேலும் பழக்கம், வழக்கம், பழக்கவழக்கம் என்ற மூன்று சொற்களையும் விளக்கும்போது (ப. 12, 13, 14) ஆசிரியர், பழக்கம்

என்பது தனிமனிதனைச் சார்ந்தது என்றும், வழக்கம் என்பது சமூகத்தைச் சார்ந்ததென்றும் கூறுகிறார். பழக்கவழக்கம் என்பது பற்றிக் கூறும் பகுதியில் இவ்விளக்கங்களையே வேறு சொற்களிற் கூறுகிறார் பழக்கவழக்கத்திற்குத் தனியான சிறப்பு விளக்கம் எதுவும் தரப்படவில்லை. இந்நிலையில் இதை ஒரு தனிப்பிரிவாகப் பகுத்து, விளக்கம் அளிக்க முயலும் முயற்சி பயனுடைத்தா?

பழக்க வழக்கங்கள் என்ற தலைப்பின் கீழ் கொடுக்கப் பட்டுள்ள விழாக்களும் அவற்றின் சில பிரிவுகளும் நம்பிக்கை வயப்பட்ட பழக்கவழக்கங்களின் கீழ் அமைவது பொருந்தும். இதை ஆசிரியரே அவர் கூற்றாகக்கூறும் பின்வரும் சொற் றொடரினால் ஏற்றுக்கொள்வது புலப்படுகிறது. 'விழாக்கள் நம்பிக்கையின் காரணமாக மனிதன் மீவியற்கைச் சக்திகளைத் தனக்குச் சாதகமாக்க முயன்ற நிலையில் தோன்றியனவாகவே காட்சிதருகின்றன'' (ப. 53). மேற்கூறிய கூற்றே விழாக்கள் நம்பிக்கை வயப்பட்டதொன்றென்பதை எடுத்துக்காட்டுகின்றது. விழாக்களில் ஒன்றாய காமன் விழா கன்னிப் பெண்களால் தமக்குச் சிறந்த கணவன் கிட்டவேண்டும் என்ற நம்பிக்கையின் அடிப்படையிற்றான் கொண்டாடப்படுகிறது. இத்தகைய விழாக்கள் நம்பிக்கை வயப்பட்ட பழக்கவழக்கங்களுள் கீழ் சேர்க்கப்படலாம்.

நான்காம் தலைப்பான மீவியல்பாற்றல்கள் பற்றிய நம்பிக் கைகள் என்பதன் கீழ் கடவுள் நம்பிக்கை, இயற்கை வழிபாடு, இறை வழிபாடு, அணங்கு, சூர், பூதம், கூற்றுவன், பேய் முதலிய வற்றைப் பற்றி விரிவாக ஆய்ந்து செல்லும் ஆசிரியர், மணி மேகலை, சிலப்பதிகாரம் போன்ற நூல்களில் இடம்பெறும் வித்தியாதரர்கள், சாரணர்கள் பற்றி எதுவும் கூறவில்லை. வித்தியாதரர்கள் இந்துசமய நூல்களில் ஆங்காங்கு தென் பட்டாலும், ஜைன நூல்களில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெறுகின்றனர். இதேபோல் சாரணர்கள் பௌத்த இலக்கியங் களில் அடிக்கடி இடம்பெறுகின்றனர். இவர்களுக்குள்ள பறக்கும் ஆற்றல் மீவியல்பாற்றலிறின்பாற்படும். இப்பாத்திரங்கள் பற்றிய ஆய்வும் முழுமையான ஆய்விற்கு ஒரு சேர்க்கையாகும்.

மடலூர்தல், சிலம்புகழி நோன்பு, மணம், ஏறுதழுவுதல் போன்றவற்றிற்குச் சிறப்பான விளக்கங்கள் இங்கு காணப்படு கின்றன. இவ்விளக்கங்கள், பல்வேறு நூல்களில் பரந்துபட்டுக்

கிடக்கும் செய்திகளை ஒருங்கு சேர்த்துக் கொடுத்து ஆயப் படுவதால் வலுப்பெறுகின்றன.

தமிழரின் நம்பிக்கைகள் பற்றிய தலைப்பின்கீழ் தேர்வு என்று ஒரு சிறுதலைப்பைக் காண்கின்றோம். (ப. 109). இங்கு, நம்பிக் கைகளை நம்பிக்கைகளா எனத் தேர்வதற்கு, சந்தேகித்தல், நம்பிக்கை பற்றிய கருத்து, நம்பிக்கைபற்றி முடிவெடுத்தல், என்று மூன்று அடிப்படைகளை அலகுகளாகக் கொள்வர் என ஆசிரியர் கூறுகின்றார். இக்கூற்றிற்கு 'என்சைகிளோபீடியா பிரிட்டானிக்கா' (Encyclopaedia Britanica) விலுள்ள பின்வரும் சொற்றொடரை மேற்கோள் காட்டுகின்றார்.

"The different degrees of belief may be roughly indicated by the following scale. 1. Surmising or Suspecting 2. opinion 3. Conviction."[10]

'என்சைகிளோபீடியா பிரிட்டானிக்கா'வில் இந்த அலகுகள் (Scales) நம்பிக்கைகளை நம்பிக்கைகளா எனத் தேர்வதற்கன்றி, நம்பிக்கையின் உருவாக்கத்திலுள்ள வேறுபட்ட நிலைகளைக் அளப்பதற்காகவே எடுத்துக்கூறப்பட்டுள்ளன. இதைத் தேர் வாகக் கொள்ளல் ஓரளவு மயக்கத்தை ஏற்படுத்தலாம்.

நம்பிக்கைகளை பொதுவில் இருவகையாகப் பகுக்கலாம்.

1. ஒன்றின் மேலுள்ள நம்பிக்கை (Belief in Something)

2. ஒன்றைப் பற்றியுள்ள நம்பிக்கை (Belief abcut Someth ng)

முதலாவதாகிய, ஒன்றின் மேல் நம்பிக்கை ஏற்படும்போது, அந்த ஒன்றின்மேல் ஒருவனுக்கு ஒருபற்றுதல் அதை ஏற்றுக் கொள்ளும் ஒரு மனப்பண்பு ஆகியன ஏற்படுகின்றன. எடுத்துக் காட்டாக, 'கடவுளின் மேல் ஒருவனுக்கு நம்பிக்கை' உண் டெனும்போது அவன் கடவுளை ஏற்றுக்கொண்ட தன்மை புலப் படுகிறது. ஆனால் நாம் 'கடவுளைப் பற்றி ஒருவனுக்குள்ள நம்பிக்கை' எனும் போது கடவுளை அவன் ஏற்றுக் கொண்டான் என்பது முற்றும் பொருளல்ல. இது தவிர, நம்பிக்கைகள், அறிவுக்குகந்த நம்பிக்கைகள் (Reasonable beleifs) அறிவுக் கொவ்வா நம்பிக்கைகள் (unreasonable) என்றும் பகுக்கத்தக்கன. இவ்விரண்டனுள், அறிவுக்குகந்த நம்பிக்கைகள் சான்றுகளுடன் (Evidence) நிறுவக்கூடியவை எனவும், அறிவுக்கொவ்வா நம்பிக்கைகள் சான்றுகளுடன் நிறுவ முடியாதவை எனவும் கூறலாம். ஆனால் சில சமயங்களில், ஒரு காலத்தில் அறிவுக்

குகந்ததாக இருந்த நம்பிக்கைகள் இன்னொரு காலச் சூழ்நிலையில் அதாவது மேலும் வளர்ச்சியடைந்த சூழ்நிலையில் அறிவுக் கொவ் வாதவையாகத் தோன்றலாம். அறிவு வளர்ச்சியின் தாக்கம் இவற்றின் நிர்ணயத்தில் பெரும்பங்கு வகிக்கின்றது.

இந்நூலில், நம்பிக்கை என ஆசிரியர் கொள்வன எவ்விதம் பழக்க வழக்கத்தினின்றும் வேறுபடுகின்றது என்பதை விளக்கி யிருந்தால் நூலிற்குச் சிறப்பையும், படிப்போர்க்கு மயக்க மின்மையையும் அளித்திருக்கும்.

நம்பிக்கைகளில் ஒன்றான நிமித்தம் பற்றிய ஒரு நல்ல செய்தித் தொகுப்பு இங்கு காணப்படுகின்றது.[11] ஆழி இழைத்தல், கூடலிழைத்தல் பற்றிய செய்திகள் நன்கு தொகுக்கப்பட்டிருப் பினும், இவற்றின் பெயர்த்தோற்றம் பற்றிய ஆய்வு பயனுடைத் தாயிருந்திருக்கும். தொடக்கத்தில், ஆழி இழைத்தல் என்பது தலைவனைப் பிரிந்த பெண்கள் தலைவன் வருவானோ வர மாட்டானோ என்பதைத் தெரிந்து கொள்வதற்காக கடலலைகள் கரையில் இழைத்த வரிக்கோடுகளை எண்ணித் தெரிந்து கொண்டனர் பின்னர் இதுபோன்ற கோடுகளை வரைந்து அவற்றின் எண்ணிக்கையை எண்ணி தம் விருப்பங்கள் ஈடேறு வதற்காக எண்களாக எனத் தெரிந்து கொண்டனர் எனலாம்.

நம்பிக்கைகள் என்ற இரண்டாம் பகுதியின் கீழ் நிமித்திகர், ஆழியிழைத்தல், விரிச்சிகேட்டல், நன்னிமித்தங்கள், புள், ஓந்தி, பல்லி, காக்கை, காரிப்புள், மாந்தர் உறுப்புக்கள், கண்துடித்தல், தும்மல், தீ நிமித்தங்கள், மரம், உன்னம், பறவை முதலிய பல் வேறு பொருட்கள் தொடர்பான நம்பிக்கைகளைப் பற்றி விபர மாகக் கூறிச் செல்கிறார். ஆசிரியர் மூன்றாம் பகுதியில் தமிழரின் நம்பிக்கை வயப்பட்ட பழக்கவழக்கங்களைத் தொகுத்துப் பல் வேறு தலைப்புகளில் தருகின்றார் இரண்டாம் பகுதியில் கூறப் படும் ஆழிஇழைத்தல், விரிச்சிகேட்டல் ஆகிய இரண்டும் நம்பிக்கை வயப்பட்ட பழக்கவழக்கங்களே ஆகையால் மூன்றாம் பகுதியில் உள்ளடக்குவது பொருந்தும்.

தமிழரின் மீவியல்பாற்றல்கள் பற்றிய நம்பிக்கைகளில், இயற்கை வழிபாடு, இறை வழிபாடு, அணங்கு, சூர், பூதம், வானவமகளிர், பூத வகைகள், கூற்றுவன், பேய் பற்றிய செய்திகளைத் தொகுத்து அளிப்பதுடன் அங்காங்கு இவற்றைப் பற்றிய பல்வேறு ஆசிரியர் களின் விளக்கங்களையும், தொகுத்துப் காட்டியிருக்கிறார்.

இவற்றுள் அணங்கு கடந்த சில ஆண்டுகளுள் மேனாட்டுத் தமிழ றிஞர்களான ஜி.எல் ஹார்ட் (G.L. Hart), கமில் சுவெலபில் (Kamil Zvelebil) பரோ (Burrow)[12] போன்றோர் கவனத்தை ஈர்த்துள்ளது அணங்கு பற்றிய பல்வேறு கருத்துக்களுள் அது பெண்களிடையும், அரசர்களிடையும் உறையும் ஒரு புனித ஆற்றல் (Sacred Power) என்னும் கொள்கையை முதலில் தொடங்கி வைத்தவர் ஜி எல். ஹார்ட் தமிழ் இலக்கியங்களைக் குறிப்பாக சங்க இலக்கியங்களைத் தன் ஆதாரமாகக் கொண் டெழுதிய இவ்விளக்கம் எந்த விதத்திலும் பொருந்தியதாகத் தெரியவில்லை. இதை இத்தகைய ஒரு நூல் எழுதிய ஆசிரியர் விரிவாக எழுதி இருந்தால் அது ஓர் பயனுடைய அளிப்பாக (Contribution) அமைந்திருக்கும். அணங்கு பற்றிய பல்வேறு செய்திகளையும் திரட்டி அளிக்கும் ஆசிரியர் இக் குறிப்பிட்டப் பகுதியில் ஆதாரப்பூர்வமாகத் தன் கொள்கைகளை நிலைநாட்டி இருத்தல் இன்றியமையாதது. எடுத்துக்காட்டாக பெண்மையில் அணங்கு உறைவதாகக் கருதும் நம்பிக்கை பற்றி ஹார்ட் பெண் கள் பூப்புக்கு வந்த காலந்தொடங்கி அவர்களது உடலில் அணங் காகிய புனித சக்தி புகுந்து கொள்வதாகவும், அது பெரும்பாலும் அவர்களின் மார்பகங்களிலும், சிறுபான்மை அல்குலிலும் தங்குவ தாகச் சுட்டுவார் (ப.279). மேலும் அவர் சங்க அகப்பாடல்களில் களவுக்குரிய மகளிர் தழையுடை அணிவது அணங்குகளின் பாதிப் பிலிருந்து தங்களைப் பாதுகாக்கும் என்ற நம்பிக்கையின் அடிப் படையில் அணிவதாகக் குறிப்பிடுகிறார். இக்கருத்துக்களை எடுத்துக்காட்டும் இந்நூலாசிரியர் இக் கருத்து ஆய்வுக்குரியது என் பதை மட்டுமே கூறி விட்டுச் செல்கிறார் .மேற்கூறிய ஹார்ட்டினு டைய கொள்கையை முற்றும் ஆயும்பணி இத்தகைய ஆசிரியர் போன்ற ஆய்வாளர்க்குரியதே! அதைத் தொட்டுக்காட்டிவிட்டுச் செல்வது, முழுமையான ஓர் ஆய்விற்கு முற்றிலும் உண்மையுடை யவர்களாக இருக்கும் நிலையிலிருந்து தவறிவிடுவதே பிறழ்வ தாகும்.

காலன், கூற்றுவன், எமன் முதலிய சொற்கள் உயிருண்ணுந் தெய்வங்களாகப் பொதுவாகப் நம்பப்படினும் அவை இலக்கியங் களில் சில இடங்களில் வேறுபட்டவர்களாகத் தென்படுகின்றனர் எனக் காட்டி, அவைகட்கு எடுத்துக்காட்டுகளையும் சுட்டியிருப்பது பயனுடைத்து. ஆசிரியர் காட்டும் பல எண்ணங்கள் இத்துறையில் மேலும் ஆய்வு நிகழ்த்துவோர்க்கு முதற்கல்லாக அமைந்துள்ளன,

இவர் அடியெடுத்துக் கொடுத்துவிட்டுச் செல்லும் சில பகுதிகள் மேலும் வளர்க்கத்தக்கவை; வளர்க்க வேண்டியவை.

இதுவரையில் பகுத்துப்பார்த்த இந்நூலை ஆய்வுநிலையில், முழுமையாக நோக்கின் இதுவரை தொகுத்தளிக்கப்படாத பல செய்திகளைக் கொண்ட நல்லநூல் என்றே கூறலாம். அதுவும் படிப்போர்க்கு இடர் அளியாத வகையில் எடுத்துக்காட்டுக்களாகக் காட்டப்படும் பகுதிகளும் அதே பக்கத்தில் அடிக்குறிப்பில் அமைத் திருப்பது செப்பனிட்ட பாதையில் வண்டி செலுத்துவது போலமை கிறது.

சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு பிஎச்.டி பட்டத்திற்கு அளிக்கப்பட்டு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் அச்சேற்ற பட்ட இன்னொரு நூல் கே. பகவதியின்' '**தமிழர் ஆடைகள்**''. தமிழர் ஆடையைப் பற்றிய அறிவைப் பெறுவதற்கும், அதன் வழிப் புலனாகும் வாழ்வியற் கூறுகளை அறிதற்கும், தமிழர் ஆடைகள் பற்றிய செய்திகள் ஆய்வு செய்யப்படுகின்றன என ஆசிரியர் தன் ஆய்வின் நோக்கமாகக் கூறுகிறார்.

இவ்வாய்விற்குத் தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப் பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சீவக சிந்தாமணி, நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் தேவாரம், நந்திக் கலம்பகம், கம்பராமாயணம், சூளாமணி, கல் லாடம், முத்தொள்ளாயிரம். மூவருலா, தஞ்சைவாணன் கோவை, கலிங்கத்துப்பரணி, அம்பிகாபதிக் கோவை, பெரியபுராணம் ஆகியன பயன்படுத்தப்பட்டுள்ளன.

இந்நூல் பெரும் பிரிவாக இருபகுதிகளாகப் பகுக்கப்பட்டு முதற்பகுதி உடைபற்றிய சொற்கள் - ஓர் ஆய்வு, தமிழர் உடைகள், உடுத்தும் விதங்கள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், மீவியல்புக் கூறுகள், ஆடைத்தொழில் என்ற நான்கு பகுதி களையும், இரண்டாம் பகுதி ஆடை பற்றிய கலைச்சொற்கள், பழமொழிகள், நம்பிக்கைகள் முதலியன பற்றிய செய்திகளையும் கூறுகின்றன. என ஆசிரியர் தன் முன்னுரையில் கூறினும் முற்பகுதி நூல் அமைப்பில் ஐந்து பகுதிகளைக் கொண்டு விளங்குகின்றது பழக்க வழக்கங்கள் - நம்பிக்கைகள் தனியாகவும் (பக். 119.) மீவியல்புக் கூறுகள் தனியாகவும் (பக். 183) கூறப்படுகின்றன.

ஆடை பற்றிய சொற்களை வரலாற்று வளர்ச்சி நோக்கில் இலக்கிய வாரியாகப் பகுத்தளித்திருக்கிறார். உடை என்பது உடம்பைச் சுற்றி இருப்பதாலும் ஆடை என்பது உடம்பை அடுத்து இருப்பதாலும் அப்பெயர் பெற்றன எனக்கூறி இதுபோல் ஏனைய சொற்களுக்கும் சொல் ஆய்வு காண்கின்றார். தழை, நாருடை, துகில், கலிங்கம், அறுவை, சிதார், நானை, காழகம், மடி, பட்டு, பூங்கரை, நீலம், தூசு, புட்டகம், கம்பல் போன்ற முப்பத்தேழு ஆடையுடன் தொடர்பான சொற்களுக்கு விளக்கம் தரும் இப்பகுதி பெருமுயற்சியுடன் ஆதாரங்கள் காட்டி எழுதப் பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக, துகில் பட்டென்பதும் பொது நோக்கில் ஒன்றெனக் கொள்ளப்படினும், துகில் பட்டினைவிட வேறானது என எடுத்துக்காட்டி விளக்கப்பட்டுள்ளது. சிதார், சிதர்வை, சிதர், சிதவற்றுணி எனக் கூறும் வழக்குண்டு புட்டகம் என்ற ஆடை பரிபாடலில் மாத்திரம் காணப்படுவதொன்று. இதை நீராடும்போது அணியப்படும் என 'பிரீபல்லவன்இன்டெக்ஸ்' (Prepallavan Index) எழுதிய என். சுப்பிரமணியன் கூறினும், இது வேறு சான்றுகளால் வலியுறுத்தப்பட்டாலன்றி முற்றும் முடிந்த முடிவாகக் கொள்ள முடியாது. 'புட்டக' (Phuttaka) என்பது ஒருவித ஆடையைக் குறிக்கும் சொல்லாக பாலி திவ்யாவதான சூக்தத்தில் (Divayavadna Sutta) வந்துள்ளதாக மொணியர் வில்லியம்ஸ்(Monier Williams)தன் சமஸ்கிருத ஆங்கில அகராதியில் கூறுகின்றார்[18].

நாருடை பற்றிய விளக்கத்தில் "குறவர், முனிவர், புலவன், விருச்சிகன், விரிசிகை, வேட்டுவன் போன்றோர் மரவுரிவுடையினை உடுத்தியோராகக் காட்டப்பட்டனர் எனக் கூறுகின்றார். குறவர், முனிவர், புலவன், வேட்டுவன் போன்றோர் ஒரு தொகுதி மக்களையே குறிக்கும். ஆனால் விரிச்சிசனும், விரிசிகையும் இரு முனிவர்களின் பெயரைக் குறிக்கும். இவர்களை முனிவர்கள் என்ற பகுப்பில் அடக்குதலேயன்றி தனிப்பகுப்பாக அமைப்பது பொருந்தாது. மேலும் ஆடை வகைகளில் வாலிது (பக். 50) என்ற ஒரு பகுப்பு இந்நூலில் இடம்பெறுகின்றது. இதற்கு ஆசிரியர் அகம் 262ஆம் பாடலைத் துணை கோரியுள்ளார் இங்கு வாலிது என்பது வெண்மையான, தூய்மையான உடையைக் குறிக்க இடம் பெறுகிறதேயொழிய இதுவொரு ஆடை வகையாகாது. தலைவி தன் துயரத்தில் அழுக்கேறிய ஆடையினளாயிருக் கின்றாள் என்பதைக் குறித்தே மேற்கூறிய அடி இடம்பெறுகிறது.

வங்கச்சாதர் (பக். 31) என்ற குறிப்பு வங்க நாட்டிலிருந்து வந்த சாதர் என்ற வகை உடையையே குறிக்கும். இதுபற்றிய மேலும் சில பகுதிகளை மொனியர் வில்லியம்ஸ் தனது அகராதியில் தருகிறார். 'சத' (Sata) என்பது ஒருவகைப் பாவாடை; உட்பாவாடை; ஒருவகை அங்கி, ஒரு துணி முதலியவற்றைக் குறிக்குமென்பார். அத்துடன் பாளியிலும் ஒரு அங்கியைக் குறிப்பதாகவே இது இடம்பெறுகிறது. பொதுவாக இப்பகுதி பல்வேறு இலக்கியங்களிலிருந்தும் செய்திகளை நன்கு தொகுத்து ஆடை பற்றிய வேறுபாடுகளைத் தெளிவுற உணர்த்துகிறது.

இரண்டாவது பகுதியில் உடைகள் உடுத்தப்படும் முறைகள் கூறப்படுகின்றது. உடுத்தும் உடைகளைக் குறிக்கத் தைஇ, உடீஇ, அணிந்து, சேர்த்து முதலிய பல சொற்களையும், இறுக்கிக் கட்டும் உடைகளான கச்சை, கச்சி போன்றவை அணியும் முறையைக் குறிக்க விசித்த, வீக்கிய, கட்டிய போன்ற வினைகளைப் பயன்படுத்துவதையும், போர்த்த, மறைத்த போன்ற வினைகள் போர்வை அணிவதைக் குறிக்கவும் வருகின்றன என்று கூறுகிறார். வினையடிகள் பயன்படுமாற்றை நோக்கி அவை எத்துணை உடையென வேறுபடுத்தலாம் எனக் காட்டுகிறார். மேலும் குழந்தைகள், ஆடவர், அரசர், போர்வீரர்கள், காவலர் போன்றோர் அணிந்த உடைவகைகளை இலக்கிய ஆதாரங்களுடன் விளக்கிச் செல்கிறார். முனிவரைப் பற்றி எழுதிய பின்வரும் பகுதி (பக்.68)பொருத்தமாகத் தெரியவில்லை. ''சைவ முனிவனை நாணமும் உடையும் நீத்த நிலையினனாக மணிமேகலை (3:88) காட்டும் பெருங்கதையில் யூகி சைவ முனிவன் வேடத்தில் 'கல்லூண் கட்டிய அரையினனாக' (4 : 7 : 158) காட்சி தருகிறான் சிந்தாமணியில் சைவத் துறவியார் உடை முழுவதையும் நீக்கும் தன்மை அமைகிறது இவ்வாறு சைவ முனிவர் உடையுடுத்தும், நீத்தும் காணப்படும் வேறுபட்ட நிலைகளுக்கு அடிப்படைக் காரணம் தெளிவுறவில்லை'' என்று ஆசிரியர் கூறுகிறார். மணிமேகலையில் வரும் (மலர் வனம் புக்க காதை) ''நாணமும் உடையும் நன்கனநீத்து'' என்ற அடி தவலருஞ் சிறப்பின் அராந்தாணத்துள்ளோனுக்கு (3: 87) சென்று சேர்கிறது. அராந்தாணத்துள்ளோன் என்பதிலிருந்து இவன் அருகன் இடத்திலிருப்பவனான ஜைன முனிவன் என்பது புலப்படுகிறது. இன்னும் இக்கருத்தை மண்ணாமேனியன்என்பதும் வலியுறுத்தும். பெருங்கதையில் யூகி சைவ முனிவனாகக் கூறப்படவில்லை

(4.7:138). சிந்தாமணியில் சைவத் துறவியர் முழுவதையும் நீக்கும் தன்மை எங்கும் இடம் பெறவில்லை. ஜைனர்களிடை திகம்பரர், சுவேதாம்பரர் என்ற இரு பிரிவுண்டு. திகம்பரர்-திக்கை ஆடையாகக் கொள்வதால் இப்பெயர் பெற்றவர். சுவேதாம்பரர் வெள்ளுடை அணிவதால் அப்பெயர் பெற்றவர். தமிழ் இலக்கியங்களில் இடம்பெறும் ஜைனத்துறவிகள் பெரும்பாலும் திகம்பரரே. அதனால் அவர்கள் மண்ணாமேனியன் போன்ற இத்தகைய ஆடைகளால் குறிப்பிடப்படுகின்றனர்.

முனிவர் என்ற சிறுதலைப்பை யடுத்துத் துறவியர் என்ற சிறுதலைப்பு அமைகிறது. முனிவர்களுக்கும் துறவியருக்கும் வேறுபாடு சுட்டும் வகையிலமைந்த விளக்கம் இங்கு காணப் படாமையால் இரண்டையும் ஒரே தலைப்பிலேயே கொடுத் திருக்கலாம்.

பழக்க வழக்கங்கள்-நம்பிக்கைகள் என்ற பகுதியைத் தொடர்ந்து வரும் ஆடையும் தொழிலும் என்ற பகுதி நன்கு ஆய்ந்து எழுதப்பட்டுள்ளது. மூலப்பொருட்கள் சேகரித்தல், மூலப் பொருட்களைத் தயார்ப்படுத்தல், நூல்நூற்றல், பாவு, நெய்தல், மணமூட்டல், தைத்தல், வணிகம், வெளுத்தல் போன்ற சிறு பகுதிகளின் கீழ் ஆடைத்தொழில் வகை வண்ணம் புலப் படுத்தப்பட்டுள்ளது.

இலக்கியச் சான்றாதாரங்களைக் கொண்டு முடிந்தவற்றிற் காவது அணிந்த வகைப் படங்கள் ஆங்காங்கு கொடுத்திருந்தால் சிறப்புடைத்தாயிருந்திருக்கும். இரண்டாம் பகுதியிலுள்ள கலைச் சொல்லகராதி பெரும்பயனுடையது. அதே போல் இலக்கியத்தில் ஆடையின் பல்வேறு வகையினவும், பயிலுமிடங்களின் தொகுப்பும் நூலைப் படிப்போர்க்கு உதவியளிப்பதாய் உள்ளது. சில இடங் களில் மேற்கோள் எண்கள், நூல்கள் தவறாக அச்சிடப் பட்டுள்ளன. இவை இரண்டாம் பதிப்பில் தவிர்க்கப் படலாம்.

ஆசிரியர் வரலாற்றுக் கண்ணோட்டத்தில் இவ்வாய்வு அமைவதாகக் கூறினும் தமிழ்நாட்டு வரலாற்றை ஒட்டி ஓரளவு தான் தொட்டுச் செல்லப்படுகிறது. காலவாரியாகப் பகுக்கப் பட்டு அணியும் முறையில் மாற்றங்கள், வளர்ச்சி நிலை ஏதாவது தென்படுகிறதா என்பதையும் நோக்கியிருந்தால் பயனுடையதாக இருக்கும்.

பண்பாட்டு நோக்கில் மூன்றாவது நூலாக அமைவது அ. தட்சிணாமூர்த்தியின் ''தமிழர் நாகரிகமும் பண்பாடும்''. இந்நூலின் இரண்டாம் பதிப்பு இது. இந்நூலின் தன்மையை, இரண்டாம் பதிப்பின் முன்னுரையில் ஆசிரியர் கூறியுள்ள பின் வரும் பகுதியிலிருந்து அறிய முடிகிறது.

''தமிழ் நாட்டுப் பல்கலைக் கழகங்களில், தமிழ் இலக்கியத் தினைச் சிறப்புப் பாடமாகப் பயிலும், இளங்கலை, முதுகலை மாணாக்கர்க்குத் தமிழர் நாகரிகமும் பண்பாடும் என்பது பாடமாக அமைந்துள்ளது. ஆனால் எல்லாப் பண்பாட்டுக் கூறுகளையும் மாணாக்கர் ஒரே நூலிற் கண்டு பயன்பெற வாய்ப்பில்லை. பல நூல்கள் ஆங்கிலத்தில் உள்ளன. அவையும் மிகப்பலவாக உள்ளன. எனவே மாணாக்கரைக் கருத்திற் கொண்டு தமிழர் நாகரிகமும் பண்பாடும் என்னும் எளிய நூலை ஏழாண்டிற்கு முன் எழுதத் துணிந்தேன். இது அறிஞர்குரியதன்று' ஆய்வு நூலுமன்று. பெயர்வாய்ந்த பெருமக்களின் நூல்களைப் பயின்று எழுதிய கருத்துத் தொகுப்பு நூலேயாகும்', (முன்னுரை பக். vii)

ஆசிரியரே நம் நூலைத் தரம்பிரித்துக் கூறிவிட்டார். இதை ஒரு ஆய்வு நூலாகக் கொள்ளமுடியாது. தமிழ் மக்கள் நாகரி கத்தையும் பண்பாட்டையும் ஆங்காங்கு இலக்கியச் சான்றுகளை யும் ஏனைய இலக்கிய வரலாற்றாசிரியர் கூற்றுக்களையும் துணை கொண்டு கூற முற்படுகின்றார். ஆசிரியர்கள் கூற்றுக்கள், கூற்றுக் களாகவே நின்றுவிடுகின்றனவேயன்றி எங்கே, எப்பொழுது கூறப் பட்டவையென்று இந்நூலைப் படிக்கும் ஏனைய ஆய்வாளருக்கு வேண்டிய செய்திகளைத் தரத் தவறி விடுகிறார். இலக்கிய மேற் கோளுக்கான எண்கள் அடைப்புக் குறிக்குள் கொடுக்கப்பட்டிருக் கின்றன. இத்தகைய சில குறைபாடுகளை நீத்து நூலைநோக்கின், சங்ககால அரசியல், போர் முறை, சமூக அமைப்பு, வணிகம், இறப்பும் அதன் தொடர்பானவைகளும், கல்வி, சமயம், மக்கள் நம்பிக்கை, ஓவியம், இசை, சிற்பம், நடனம், மருத்துவம், நீதி பிறபண்பாட்டுத் தாக்கம் முதலிய பலசெய்திகள் நாற்பத்தெட்டுத் தலைப்புக்களில் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

ஒவ்வொரு தலைப்பின் கீழும் இலக்கியச் சான்றுகள் தரும் செய்திகளைத் தொகுத்தளித்து அதன் மூலம் தான் கொள்ளும் முடிவுகளைக் கூறுகின்றார். செய்திகளைத் தொகுத்தளிப்பதில் சிறந்து விளங்குகிறது இந்நூல். ஆனால் ஆசிரியர் காட்டும் பல

முடிவுகளுக்கு ஆதாரங்கள் கொடுக்கப்படவில்லை. கொடுக்கப் பட்டுள்ளவையும் முழுமையாகக் காணப்படவில்லை. இது ஆய்வு நூலல்ல என ஆசிரியர் கூறியிருப்பினும், தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களில் தமிழ் இலக்கியத்தினைச் சிறப்புப்பாடமாகப் பயிலும் இளங்கலை, முதுகலை மாணவர்களைக் கருத்தில் கொண்டு எழுதியுள்ளபடியால் சான்றாதாரங்களை விபரமாகக் கொடுத்து, முடிவுகளைத் தெளிவுறுத்துவது ஆய்வு மாணவர் கட்கு வழிகாட்டியாக அமையும்.

தமிழர் பண்பாட்டு வரிசையிலமைந்த இன்னொரு நூல், கு. முத்துராசனின் **சங்க காலம்** இவர் தன் முன்னுரையில் (பக்.IV) "மிகவும் பழமையாக விளங்கும் தொல்காப்பியம் முதல் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக் காப்பியமாகிய மணிமேகலை வரையுள்ள பழந்தமிழ் பொற்பேழைகளையெல்லாம் ஆய்வுக் கண்ணோட்டத்தில் துருவித்துருவி ஆய்ந்தே இந்நூலை யாத் துள்ளார் என்று கூறுகிறார். பன்னிரண்டு இயல்களாகப் பகுக்கப் பட்டு உள்ள இந்நூல் சங்கம் உண்மை, இன்மை, கால வரையறை, தொல்காப்பியம், திருக்குறள், மேற்கணக்கு, காப்பியங்கள், ஐந்திணைப் பாடல்கள், புறப்பாடல்களின் பாங்கு, இலக்கியச் சிறப்புக்கள், மக்கள் வாழ்க்கை முறை, சமய நெறி முதலிய பல செய்திகளைக் கொண்டுள்ளது.

சங்கம் என்ற அமைப்பின் உண்மை, அதைப்பற்றிய பல்வேறு செய்திகள் முதலியவற்றை இலக்கியங்கள், பட்டயங்கள் ஆகியன வற்றிலிருந்து சேகரித்துக் கொடுத்துள்ளார். ஏனைய தமிழ் இலக்கிய வரலாற்றாசிரியர்கள் கருத்துக்களையும் காட்டு, சங்கம் என்ற அமைப்புப் பண்டைத் தமிழகத்தில் இருந்து தமிழ் ஆராய்ந் தது உண்மை என்று கூறுகிறார். சங்ககாலத்தின் கீழ் எல்லையாக கி. பி. இரண்டாம் நூற்றாண்டைக் கொள்கிறார். தொல் காப்பியத்தின் காலத்தை ஏனைய ஆசிரியர்களின் கூற்றின் துணை கொண்டு, நிறுவ முயன்றாலும், இவரது முடிவை முடிந்த முடிவாகக் கொள்ள முடியவில்லை. இதுபற்றி மேலும் ஆய்வதற்கு இடமுண்டு.

தொல்காப்பியர் காட்டும் சமுதாய ஆய்வில் அகம் புறம் பாகுபாடு இவற்றின் உட்பிரிவுகள், திணை, துறை ஆகியவற்றைத் தொகுத்து மேற்கோளுடன் கூறுகிறார். இதேபோல ஏனைய பகுதிகளின் கீழும் தொகுப்பு நிலையில் இந்நூல் சிறந்து விளங்கு கிறது. ஆழ்ந்த ஆய்வு நிலையில் சில பாடல்கள் எழுந்த காரணம்,

இலக்கியக் கூறுகளின் இன்றியமையாமை முதலியவை நோக்கப் படவில்லை என்றே கூற வேண்டும். சிலப்பதிகாரத்தையும் மணிமேகலையையும் சங்க நூல்களாகவே கொண்டு ஆயும் ஆசிரியர், சமய நெறி என ஒரு இயல் தன் நூலில் ஒதுக்கியிருப் பினும் ஆங்குக் காணப்படும் சமயக் கருத்துக்களை விளக்குவதில் சிறிதேனும் முயலவில்லை. இதுவரை கருத்துத் தொகுப்புநூல் களாக வந்த பல்வேறு நூல்களுடன் இன்னொரு நூலாக இந் நூல் சேர்க்கப் படுகிறது.

அடுத்து ''உலகக் காப்பியங்கள்'' என்ற தலைப்பில் இரா. காசிராஜனால் எழுதப்பட்ட நூலைக் காண்போம். இந் நூல் இருபத்திநான்கு உட்தலைப்புக்களைக் கொண்டமைகிறது. அவையாவன காப்பியக் கொள்கை, காப்பியத் தோற்றமும் வளர்ச்சி நிலைகளும், காப்பிய வகை விளக்கம், பாபிலோனிய சுமேரிய காப்பியம், பினீசிய காப்பியம், கிரேக்கக் காப்பியங்கள், ஹீப்ரு மொழியும் பழைய கிறிஸ்துவக் காப்பியமும், லத்தீன் மொழிக் காப்பியங்கள், ஆங்கிலக் காப்பியங்கள், அரேபிய பாரசீகக் காப்பியங்கள், செர்மன்மொழிக் காப்பியம், பிரஞ்சு மொழிக் காப்பியம், ஸ்காண்டிநேவிய காப்பியம், இத்தாலி மொழிக் காப்பியம், நெதர்லாந்து காப்பியம், ருசிய மொழிக் காப்பியம், ஸ்பானிய மொழிக் காப்பியம், போர்ச்சுக்கீசியக் காப்பியம், அமெரிக்கக் காப்பியம், செர்பிய மொழிக் காப்பியம், சுவிஷ் மொழிக் காப்பியம், சைன, சப்பானியக் காப்பியம், பிற மேலைநாட்டுக் காப்பியம், இந்தியக் காப்பியங்கள். இந்த உட்தலைப்புக்களில் முதல் மூன்று தலைப்புக்களில் காப்பியத்தின் தன்மை தோற்றம் வளர்ச்சி வகை முதலானவற்றைக் கூறுவதாக ஆசிரியர் தன் முன்னுரையில் கூறுகிறார்.

முதலாவது தலைப்பான ''காப்பியக் கொள்கையின்'' கீழ் காப்பியத்தைச் குறிக்கும், 'எபிக் (Epic) என்ற சொல்லின் விளக்கம், காப்பியக் கதை காப்பிய இயக்கத்திற்கு வேண்டிய கால, இடச் சூழல்களின் தேவை, காப்பிய நோக்கம், தலைவன், தலைவனுக்குத் துணைநின்று கதையை நடத்த உதவும் பல் வேறு பாத்திரங்கள், காப்பியத்தின் முக்கியக் கூறுகள், காப்பிய மொழிநடை, காட்சியமைப்பு, ஏனைய காப்பியப் பண்புகள் பற்றிய செய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன.

இரண்டாவது தலைப்பான, ''காப்பியத் தோற்றமும் வளர்ச்சிப்படி நிலைகளும்'' என்பதன் கீழ், தோற்றம் பற்றிப்

பல்வேறு நாட்டுக் காப்பியங்களினதும் தோற்றத் ஆய்ந்த, டபிள்யூ. பி. கேர், (W. P. kerr) விண்டனிட்ஸ், (Winternitz) ஆபர் குரோம்பி(Aber crombie)போன்றோர் கருத்துக்களை அடிப் படையாக வைத்து எழுதிச் செல்கிறார். பல இடங்களில் பல்வேறு ஆசிரியர்களின் கருத்துக்கள் மொழிபெயர்க்கப் பட்டுள்ளனவேயன்றி நூலாசிரியரின் தனிப்பட்ட கொள்கைகள், கருத்துக்கள் விளக்கப்படவில்லை. இந்திய இலக்கியப் பின்னணியில் காப்பியங்களின் வளர்ச்சிப் படிநிலைகள் முதலியவற்றை எதிர் பார்க்கும் வாசகர்கட்கு இங்கு ஓரளவு ஏமாற்றம்தான். இதையே தான் ''காப்பிய வகை விளக்கம்' என்ற மூன்றாம் தலைப்பிலும் காணமுடிகிறது. அதை அடுத்த நாலாவது இயலிலிருந்து இருபத் தியைந்தாம் இயலாகிய இறுதி இயல்வரை அந்தந்த மொழி யிலுள்ள சிறப்பமைந்த காப்பியங்களின் சுருக்கம். சில இடங்களில் விரிவானவிளக்கம், பாடல்களின் மொழிபெயர்ப்பு போன்றவை அளிக்கப்பட்டுள்ளன. ஆங்கிலமொழியைப் படித்துப் பயனடைய முடியா வாசகர்கட்கு உலகின் பல்வேறு மொழிகளிலுள்ள புகழ் பெற்ற காப்பியங்களை அறிந்துகொள்ள இந்நூல் உதவியளிக்கும்.

மொ. அ. துரை அரங்கனாரால் எழுதப்பட்ட ''சங்க காலச் சிறப்புப்பெயர்கள் (இலக்கியச் சிறப்புப்பெயர்களும், குடி பற்றிய சிறப்புப்பெயர்களும்)'' என்னும் நூல் இவ்வாண்டு இரண்டாம் பதிப்பாக வெளிவந்துள்ளது. சென்னைப் பல்கலைக் கழகத்தில் நாற்பத்தியெட்டாம் ஆண்டு எம். ஒ. எல், பட்டத் திற்காக வழங்கிய ஆங்கிலக் கட்டுரையின் தமிழாக்கம் இது.

இரண்டு பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு முதற்பகுதி சங்ககால இலக்கியச் சிறப்புப் பெயர்களையும், இரண்டாவது பகுதி குடிபற்றிய சிறப்புப் பெயர்களையும் கொண்டமைகிறது. முதற்பகுதியில் உருவகங்கள் இயற்பெயராக வருதல், உவமைகள் இயற்பெயர்களாக வருதல், மனங்கவரும் கலையழகு வாய்ந்த புனைந்துரைச் சொற்றொடர்கள் இயற்பெயர்களாக வருதல், மனங்கவரும் சொற்றொடர்கள் சிறப்புப் பெயராக வருதல் விரிவான பொதுவகையில் அமைந்த சிறப்புப் பெயர்கள், முதலியன அடங்கியுள்ளன. இரண்டாவது பகுதியில் தமிழரும், தமிழகமும், மூவேந்தர், மூவேந்தர் ஆட்சியில் அடங்காத குடிகள், தமிழக எல்லைப்புறத்தில் வாழ்ந்த குடிகள், அயல்நாட்டுக் குடிகள் முதலியன இடம்பெற்றுள்ளன.

நூலில் உள்ள முதற்பதிப்பின் முன்னுரை ஆசிரியர் நோக் கிற்கும் பரப்பு எல்லைக்கும் சிறந்த ஆடியாக விளங்குகிறது. இது

தேர்ந்தெடுத்த அழகிய சொற்களால் தெள்ளிதே, நூலின் முழுமையையும் அலசி, ஆசிரியரின் முக்கிய நோக்கங்களைக் கூறுகிறது. இவர் நூலில் எல்லைக்கோடாகச் சங்ககால இலக்கியச் சிறப்புப்பெயர்கள், குடிசிறப்புப் பெயர்கள் இரண் டையுமே கொண்டுள்ளார். ஒவ்வொரு தலைப்பின் கீழும் சிறுசிறு தலைப்புக்கள் கொடுத்து, சங்ககாலப் பாடல்களில் வரும் சிறப்புப்பெயர்களை கொடுத்து, சங்க காலப்பாடல்களில் வரும் சிறப்புப்பெயர்களை அழகுற ஆய்ந்துள்ளார். சங்க நூல்களைக் கற்கும் எவருக்கும் இந்நூல் விளக்கமளித்துப் பேருதவி புரியும். இவ்விதம் நன்முறையில் எழுதப்பட்ட இந்நூலின் பிற்சேர்க்கையில் மேற்கோள்களாக எடுத்தாண்ட நூல்களையும் அவைபதிப்பிக்கப் பட்ட இடம், ஆண்டு முதலியவற்றையும் ஆய்வு நெறி முறைப்படி கொடுத்திருந்தால், சிறப்பாக அமைந்திருக்கும்.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் பி. எச். டி. பட்டத்திற்காக அளிக்கப்பட்டு நூல் வடிவில் அச்சிடப்பட்ட இன்னொரு ஆய்வேடு இரா. மாயாண்டியின் ''சங்க இலக்கியத்தில் கற்பனை.''

ஆசிரியரின் கூற்றுப்படி (பக் 5) ''சங்க இலக்கியத்துக் கற் பனைகள் எல்லாவற்றையும் ஆராய்வது எல்லைக்கு உட்பட்ட ஓர் ஆராய்ச்சியாக இருத்தல் இயலாதாகலின், சங்க இலக்கியத்துக் கற்பனை யமைப்பினை விளக்கக் கூடியனவாகச் சிலவற்றைத் தேர்ந்துகொண்டு அவற்றின் வாயிலாக அக்காலத் தமிழிலக்கிய உலகத்தின் கற்பனைக் கொள்கையினை விளக்குகின்றது'' இவ் வாய்வுநூல்.

இலக்கியத்தில் கற்பனை, கற்பனையின் வகைகள், அகப் பொருள் இலக்கியங்களின் கற்பனைச் சிறப்பு, இயற்கை பற்றிய கற்பனை, புறப்பொருள் இலக்கியங்களில் கற்பனை, கற்பனையும், அணிநலமும், சங்கப்புலவர் கற்பனைத்திறன் என்று ஏழு தலைப்புகளில் பகுக்கப்பட்டுள்ளது இந்நூல்.

இலக்கியத்தில் கற்பனை என்ற முதல் பகுதி, பல்வேறு இலக்கியத் திறனாய்வாளர்கள், இலக்கிய ஆசான்கள் ஆகியோர் வெளியிட்ட கருத்துக்கள் ஒட்டுப்போடப்பட்டுப் படைக்கப் பட்டுள்ளது போன்ற ஒரு உணர்வை ஏற்படுத்துகிறது. ஆசிரியர் சொந்தக் கருத்தை எங்காவது தெளிவாக வெளிப்படுத்த முனை கிறாரா? என்று பார்ப்பின் ஏமாற்றம்தான் மிஞ்சுகிறது. தொடர்ந்து வரும் பகுதியான 'கற்பனையின் வகைகளில்

மேனாட்டு இலக்கியத் திறனாய்வாளர்கள் கற்பனையை வகைப் படுத்தியமை, அவற்றை விளக்கியமை பற்றிய விவரங்கள் காணப் படுகின்றன.

நூலின் முழுமையையும் நோக்கும்போது, (ஆசிரியர் வார்த்தைகளில்) 'கற்பனை பற்றிய மேனாட்டாரின் கொள்கை களும், பாகுபாடுகளும் காலத்தால் பன்னூற்றாண்டுகட்கு முற் பட்ட சங்கப் பாடல்களுக்கும் பொருந்திவரக் காண்பதில் (ப.55) ஆசிரியர் அடையும் வியப்பிலும், மகிழ்ச்சியிலும் வாசகர்களைப் பங்குபெற எதிர்பார்க்கிறார் எனலாம். புதிதாக எதையும் தானே பகுக்கவோ அன்றேல் அடியெடுத்துக் கொடுக்கவோ தவறி விடுகிறார்.

இத்தகைய நிலை மாறி ஏற்கனவே உள்ள கருத்துகட்குப் புத்தூட்டம் அளிக்கும் வகையில் சொந்தச் சிந்தனைகள் பெருகி னால்தான் நம் இலக்கிய ஆய்வுகள் தழைக்கும். அன்றேல் நம் ஆய்வு வளர்ச்சியில் தேக்க நிலையைத்தான் நாம் எதிர்பார்க்க முடியும்.

## அடிக்குறிப்புக்கள்

1. காந்தி, க., **தமிழர் பழக்கவழக்கங்களும், நம்பிக்கை களும்** (சென்னை, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்).
2. பகவதி. கே., **தமிழர் ஆடைகள்** (சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்).
3. தட்சிணாமூர்த்தி, அ., **தமிழர் நாகரிகமும் பண் பாடும்**, 2ஆம் பதிப்பு (தஞ்சாவூர், வெற்றிச்செல்வி வெளி யீட்டகம்).
4. முத்துராசன், கு., **சங்ககாலம்**, (சேலம், தேன்தமிழ்ப் பதிப்பகம்).
5. காசிராஜன், இரா., **உலகக் காப்பியங்கள்** (சென்னை, தமிழ்ப் பதிப்பகம்,)
6. மாயாண்டி, இரா., **சங்க இலக்கியத்தில் கற்பனை**, (சென்னை, மணிமேகலைப் பிரசுரம்,).
7. துரைஅரங்கசாமி,. மொ. அ, **சங்க காலச் சிறப்புப் பெயர்கள்** 2ஆம்-பதிப்பு (சென்னை, பாரி நிலையம்,).
8. காந்தி, க., அதே நூல், பக்.5-6.
9. மேற்படி. பக். 5.

10. Encyclopaedia Britanica Vol. 3 (United States, 1972), p. 437

11. காந்தி, க , அதே நூல், பக். 109.

12. Hart, G L., Poems of Ancient Tamil, Their milieu and their Sanskrit Counterparts, Berkeley (California, 1975)

Hart, G. L., The Relationship between Tamil and Classical Sanskrit Literature, Otto Harrassowitz, (Wiesbaden, 1976).

Burrow, T., Review on George Luzeruse Hart, The relation between Tamil and Classical Sanskrit Literature (A History of Indian Literature. ed. J. Gonda, Vol.X.Fasc.2) Wiesbaden, Otto Harrassowitz. 1976. Pp. 317-351. Indo—Iranian Journal Vol. 21, 1979, Pp. 282-284.

13. Monier Williams, Sanskrit English Dictionaıy, p. 718, Col. 3.

# மொழிபெயர்ப்பு நூல்கள்

**ந. கடிகாசலம்**

இருபதாம் நூற்றாண்டில் மொழிபெயர்ப்பு ஓர் அரிய கலை என ஏற்றுக்கொள்ளப்பட்டு விரைவாக வளர்ந்தும் வருகிறது. ''பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத்' தத்தம் மொழிக்குக் கொண்டு வருவதில் பெரும் ஈடுபாடு காணக்கிடக்கிறது.

பிற இந்திய மொழிகளில் வெளியான பல இலக்கிய நூல்கள் தமிழிலும் வெளிவருகின்றன. மூலநூல்களைப் படிப்பதுபோன்ற இன்பத்தை மொழிபெயர்ப்பு நூல்களைப் படிக்கும்போது அடைவதில்லை என்ற குறை இப்போது இல்லை என்று கூறுமளவுக்கு மொழிபெயர்ப்பு மிகவும் சிறந்த முறையில் வளர்ந்துள்ளது.

1980-இல் தமிழில் மொழிபெயர்ப்புச் சிறந்து விளங்கிய நிலையைச் சில மொழிபெயர்ப்பு நூல்களின் துணைகொண்டு நிறுவ முயன்றுள்ளேன். 'ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என இதை எடுத்துக்கொள்ளவேண்டும் நாவல், சிறு கதை, நாடகம், கட்டுரை என்ற பல இலக்கிய வடிவங்களிலான நூல்களைப் பார்வைக்கு எடுத்துக்கொண்டால் தமிழில் வெளியாகும் மொழிபெயர்ப்பு நூல்கள் சிறந்தே விளங்குகின்றன என்பதில் ஐயமில்லை.

**''இலட்சிய இந்து ஓட்டல்''**

(Adarsha Hindu Hotel—Bengali)

''பதேர் பாஞ்சாலி'' என்னும் புகழ்பெற்ற நாவலை எழுதிய விபூதிபூஷண் பந்தோபாத்யாயா அவர்களின் அழியாப் புகழுக்கு மேலும் அணி சேர்க்கும் நாவல்தான் ''இலட்சிய இந்து ஓட்டல்.''

சாமானியன் ஒருவனைப் பற்றிய இந்த நாவல்—'சொந்த அநுப வத்தால் தூண்டப் பெற்று' விபூதிபூஷண் எழுதியுள்ள நாவல் வகையை ஒத்தது இந்நாவலில் விபூதிபூஷண் ''சாமானிய மனித னிடம் காணும் அசாமானியமான பண்பு என்னும் தம்முடைய லட்சியத்தைத்தான் தலைசிறந்ததாக எடுத்துக்காட்டியிருக்கி றார்'' என க்ஷிதீச ராய் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

ஹாஜாரி என்னும் பெயர் கொண்ட சமையல்காரன் இந் நாவலின் கதாநாயகனாக விளங்கினான். தனக்குத் தொழிலில் திறமையும் நம்பிக்கையுமிருந்தும், நல்ல நிலைக்கு வரமுடிய வில்லையே என்ற ஏக்கம் ஹாஜாரியின் உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண்டேயிருக்கிறது. படிப்படியாக முன்னேறி, நல்ல வாழ்க் கையை ஹாஜாரி அடைந்து விடுகிறான். இதற்காக, யாரையும் கெடுக்கவோ, அழிக்கவோ, தீங்கு செய்யவோ முற்படவில்லை என்பது அவனுடைய பெருமையை உணர்த்தும் எனலாம். நல்ல வாழ்க்கை நேர்ந்தவுடன், தன்னால் இயன்ற அளவுக்கு மற்ற வருக்கு உதவி செய்கிறான் தான் வேலைபார்த்த எசமானன் நொந்துபோனபோது அழைத்து வந்து, மிக்க பெருமிதத்துடன் தன் ஓட்டலில் அமர்த்தி, ஓட்டலைக் கவனித்துக் கொள்ளச் செய்கிறான் ஹாஜாரி. எவர் மீதும் பொறாமைப்படாமல் தான் முன்னேற வேண்டும் என்ற வாழ்க்கை இலட்சியத்தைக் கைக் கொண்ட ஹாஜாரி எனும் சாதாரண சமையல்காரனின் கதை தான் 'இலட்சிய இந்து ஓட்டல்'.

இந்நாவலைத் தமிழாக்கம் செய்திருப்பவர் த. நா. சேனாபதி அவர்கள், வங்க மொழி நாவல்களைத் தமிழுக்குத் தந்தவர் இவர். 'இலட்சிய இந்து ஓட்டல்' அவர்தம் எளிய தெள்ளிய செவ்விய தமிழ்நடையில் அமைந்து நாவலைச் சிறக்கச் செய்கிறது என்றால் மிகையாகாது. ஆரம்பம் முதல் முடிவு வரையிலும் விறுவிறுப்பாக- இலட்சிய ஓட்டத்துடன் கூடிய இந்நாவல் மொழிபெயர்க்கப்படும் போது மூலநாவலின் எத்தன்மையும் மாறாதவாறு மொழிபெயர்ப் பாளர் கவனித்துக் கொண்டிருக்கிறார். அத்தியாயமின்றி, தொடர்ச்சியாக 249 பக்கங்களில் அமைந்துள்ள இந்நாவலைப் படித்துமுடித்த பின்னர் நமக்கு ஏற்படும் 'திருப்தி'யே மொழி பெயர்ப்பாளரின் வெற்றிக்குச் சான்று பகர்கின்றது.

## ''குஜராத்திச் சிறுகதைகள்''
## (Gujarati Vartao)

யஷ்வந்த சுக்லா, அனிருத்த பிரம்ம பட் ஆகிய இருவரும் தொகுத்துள்ள இந்நூலில் 'இடைச்சி' முதல் 'திருடி' வரை 20 மிக அருமையான சிறுகதைகள் இடம் பெறுகின்றன.

அம்பாலால் ஸாகர்லால் தேசாய் எழுதிய ''சாந்திஹாஸ்'' (1900) என்னும் கதையே குஜராத்தி மொழியின் முதல் சிறுகதை. எண்பது ஆண்டுகளில் குஜராத்தியில் சிறுகதையின் வளர்ச்சி கணிசமான அளவில் அமைந்துள்ளது. இந்நூலில் காணும் 20 சிறுகதைகளும் குஜராத்தி மக்களின் பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் எடுத்துரைக்கும் நிலையில் அமைந்துள்ளன.

**இடைச்சி :** மலயானில் என்பவரால் எழுதப்பெற்ற இச் சிறுகதை ஆண்களின் சபல புத்தியை மிகத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகிறது. பால் விற்கும் இடைச்சி தலீ. அழகானவள்; திருமணம் ஆனவள். திருமணம் ஆகிவிட்ட ஸந்தன் என்பவன் அவளழகைக் கண்ணாலேயே பருகி விடுபவன். அவளைத் தொடர்ந்து சென்றவன் பேசிக் கொண்டிருக்கும்போதே, அவள் அவனுடைய மனைவியை அங்கே அவனுக்குத் தெரியாமல் வரவழைத்துவிட்டாள். இதைக்கண்ட ஸந்தன் திகைத்துப் போனான். இதுதான் கதை. இந்தக் கதை சொல்லப்பட்டிருக்கும் முறையும் பாத்திரப் படைப்பும் சிறந்த முறையில் அமைந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

**கேமி :** திவிரேஃப் எழுதிய இச்சிறுகதை ஒருபெண்ணின் மன உறுதியை விளக்கும் வகையில் அமைந்துள்ளது. கேமி என்னும் பெயருடைய துப்புரவுத் தொழிலாளி ஒருத்தி, தனியா என்பவனை மணந்து கொள்கிறாள். ஆனால், அவன் விரைவிலேயே இறந்து விடுகிறான். அழகான கேமி மறுமணம் செய்து கொள்ளாமல், தனியாவின் வேண்டுதல்களை நிறைவேற்றப் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறாள். சிறுகச் சிறுகப் பணம் சேமிக்க ஏழு ஆண்டுகள் ஆகின்றன. கணவனின் பிரார்த்தனையை நிறைவேற்றிய பிறகு, ''இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு என்வாழ்க்கையைக் களங்கப்படுத்திக் கொள்ள மாட்டேன்'' எனக் கூறி, மறுமணம் செய்து கொள்ளாமலே வாழத் தலைப்படுகிறாள் கேமி. கதையைப் படித்து முடித்தபிறகு கேமி ஓர் இலட்சியப் பெண்ணாக நம் நெஞ்சில் உலவுகிறாள்.

**தாயின் மடியில்:** இச் சிறுகதை கொடூரத்தன்மை படைத்த ஒரு மாமனாரைப் பற்றியது; சுந்தரம் என்பவரால் எழுதப் பெற்றது. நீண்ட நாட்களுக்குப் பிறகு வந்து தன் மருமகளைக் கூட்டிப்போகும் மாமனார் போகும் வழியிலேயே அவளைக் கொன்று புதைத்து விடுகிறான். அவளுடைய கணவனும் மாமனாருக்கு இந்தக் காரியத்தில் உறுதுணையாகக் விளங்கு கிறான். கணவனின் கோழைத்தனமும், மாமனாரின் கொடூரத் தன்மையும் இச்சிறுகதையில் படம்பிடித்துக் காட்டப்பெற் றுள்ளன.

**என் சம்பாவின் புருஷன்:** விதவைப்பெண்ணின் வாழ்க்கை யைப் படம் பிடித்துக்காட்டும் இச் சிறுகதையை எழுதியவர் உமா சங்கர் ஜோஷி. லக்ஷ்மி என்னும் இந்தக் கதைத்தலைவி உல்லாச வாழ்க்கையின் நுழைவாயிலில் அடியெடுத்து வைத்தபோதே, அவள் கணவன் கண்களை மூடிவிட்டான். நான்கு மாதக் குழந்தை சம்பாவை வளர்த்து ஆளாக்கி அவளுக்குத் திருமணமும் நடத்தி விட்டாள். ஆனால் சம்பாவின் கணவனும் இறந்துவிடுகிறான்; தொடர்ந்து லக்ஷ்மியும் இறக்கிறாள். ஆனால் தன் தாய்க்குப் போட்டியாக சம்பா தன் மகளை வளர்க்கிறாள். விதவைத் தாயின் மனப்போராட்டத்தை இக் கதை சித்திரிக்கிறது.

இந்த வீடும் அந்த வீடும், ஒலிகளும் ஒளிகளும், மறுமணம், நீலியின் ஆவி, வாத்ரக் நதிக்கரையினிலே, பெற்ற மனம், சபிக்கப் பட்ட குயில், குருக்ஷேத்திரம், நீங்கள் வருவீர்கள் இல்லையா?, ''பிராக்கெட்''டுக்குள்ளேயும் இல்லை ''பிராக்கெட்''டுக்கு வெளி யேயுமில்லை, கொள்ளி, ஸரஓும் ஷம்பாவும், ஜன்னல், திருடி ஆகிய சிறுகதைகள் இந்நூலை அணி செய்கின்றன.

'தனது உருவ முன்னேற்றத்திற்காகப் புராணக் கதைகளிலும், நாடோடிக் கதைகளிலும் உள்ள சில அமைப்பு முறைகளைப் பயன் படுத்திக் கொண்டது எனனவோ உண்மைதான்...ஆனால் இன் றைய சிறுகதைக்குப் புராணக் கதைகளோடும் வழிவழிவந்த பரம் பரைக் கதைகளோடும் நேரடித் தொடர்புண்டென்று கூற இய லாது...புராணக் கதைகளை நவீன காலத்துக்கு ஏற்றாற்போல அமைத்துப் பார்க்கும் முயற்சியையும் புதிய சிறுகதை எழுத் தாளர்கள் மேற்கொண்டுள்ளனர். இப் புதிய எழுத்தாளர்களில் துணிவும் இருக்கிறது; சொற்களின் ஆழத்தில் மூழ்கி அவற்றை ஆளும் ஆர்வமும் இருக்கிறது...முயற்சி திருவினை ஆக்கும் என்று

உறுதிப்பாட்டோடு புதிய எழுத்தாளர்கள் தோன்றிக் கொண்டிருக்கின்றனர். எதிர்காலக் குஜராத்திச் சிறுகதை இலக்கியத்துக்கு, இது நம்பிக்கையளிக்கும் விஷயம் ஆகும்' என்பதை இந்நூலில் இடம் பெற்றுள்ள சிறுகதைகளைப் படிக்கும்போது உணர முடிகிறது.

யஷ்வந்த் சுக்லாவும் அனிருத்த பிரம்ம பட்டும் தொகுத்தளித்துள்ள இந்தக் குஜராத்திச் சிறுகதைத் தொகுப்பினை ஏ ஜி. எத்திராஜுலு அவர்கள் மிக அருமையாகத் தமிழாக்கம் செய்திருக்கிறார். மூலத்திற்கு எந்த வகையிலும் இவர் 'துரோகம்' செய்யவில்லை என்று கூறலாம்.

''கடைசியில் இதுதான் மிச்சம்''
(Chivaraku Migiledhi-Telugu)

தற்காலச் சமூக வாழ்க்கையைப் பிரதிபலித்து, அதற்கு ஒரு பொருளையும் முக்கியத்துவத்தையும் தரும் முயற்சியே நாவல் என்பர். மேலைநாடுகளில் பிறந்த நாவல், ஒரு மாபெரும் இலக்கிய வெள்ளமாகப் பெருகி, உலகத்தையே மூழ்கடித்திருக்கிறது. இந்திய மொழிகளிலும் நாவல் இலக்கியமாகப் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருக்கிறது.

ஆந்திராவின் கிராமங்களில், வெண்நிலவில் திறந்த வெளிகளில் பலவகைக் காய்கறிகளுடனும் பலகாரங்களுடனும் விருந்துண்ட பிறகு நாட்டுக்கதைகள் சொல்வது பழக்கமாக இருந்திருக்கிறது. இக்கதைகள் நாவல் இலக்கியத்திற்கு ஓர் உருவைக் கொடுப்பதற்கு அடிப்படையாக அமைந்தன எனலாம். வளரும் தெலுங்கு இலக்கியம் படைத்துக் கொண்டிருக்கும் பல புதிய இலக்கிய வகைகளில் நாவலும் ஒன்றாகத் திகழ்கிறது.

கோபி சந்த் மனோதத்துவ நாவலை முதன்முதலில் படைத்து முன்னோடியாகத் திகழ்கிறார். கிருஷ்ணா ராவ், புச்சி பாபு, ராசகொண்ட விசுவநாத சாஸ்திரி ஆகியோர் மனோதத்துவ நாவலின் வளர்ச்சிக்குப் பேருதவி செய்தவர்கள் எனலாம். ஃபிராய்டு, யூங் ஆகியவர்களின் செல்வாக்கு இவர்களுடைய நாவல்களில் மிகவும் தெளிவாகத் தெரிகிறது. புச்சி பாபு எழுதிய 'கடைசியில் இதுதான் மிச்சம்' என்னும் இந்நாவல், ஈடிபஸ் காம்ப்ளக்சை ஆதாரமாகக் கொண்டு, மேலைநாட்டுத் தத்துவங்களுக்கு ஏற்ப எழுதப்பட்டுள்ளது. தெலுங்கு நாவல் இலக்கியத்தில் இந்நூல் மிகுந்த சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கிறது.

எனவே சீனரைத் தொடர்ந்து குடியமர்த்தும் போக்கை வெள்ளையர் விட்டுவிட்டனர். சொன்னபடி 'ஆட' ஆட்களைத் தேடினர். இந்தியா, அதிலும் தென்னிந்தியா, அதிலும் குறிப்பாக, தமிழகம், அவர்தம் தேடுதலுக்கு இனிய விடையளித்தது. எனவே தெரிவிக்கப்படாமலும், தெரிவிக்கப்பட்டும் பன்னூறு தமிழர்கள் ஆப்பிரிக்க வெள்ளையர் குடியிருப்புகளுக்குக் கப்பலில் கொண்டு செல்லப்பட்டனர். சீனர்களுக்கு அடுத்த படியாக, உள்ளூர் வாழ் ஆப்பிரிக்கரும், வெள்ளையர் விருப்பத்திற்கு 'ஆடி' வேலைபுரிய அணியமாக இல்லை. ஆப்பிரிக்கர், தம் இன வழக்கப்படி ஆண்டில் ஆறு திங்கள் வேலை செய்துவிட்டு, எஞ்சிய ஆறு திங்கள் விடு முறை எடுத்துக்கொள்வர்.[2] ஆறு திங்கள், தம் தோட்டங்களுக்கும், சுரங்கங்களுக்கும் விடுமுறைதர வெள்ளையர் அணியமாக இல்லை. எனவே, இச்சூழல், தமிழகத்தினின்று மேலும் ஆட்கள் செல்ல வாய்ப்பாயிற்று. எனவே தமிழரின் வரத்துப் பெருகிற்று. இந்தியாவைவிட ஆப்பிரிக்காவில் 'கூலி'யும் சில சலுகைகளும் நிரம்பக் கிடைப்பதை அறிந்துகொண்ட தமிழ்த்தொழிலாளர், தம் உறவின ஆட்களைத் தாமே அழைத்துக்கொள்ளத் தொடங் கினர். தாமாகவும் சிலர், ஆப்பிரிக்காவை நோக்கிச் செல்லத் தொடங்கினர். ஆப்பிரிக்காவில் தமிழர் குடியேற்றம் பேரளவிற்கு நிகழ்ந்தது—இந்த அடிப்படையில்தான்!

தமிழர் எண்ணிக்கை ஓரளவு பெருகின நிலையில், சில டாக்டர்களும், ஆசிரியர்களும், சொற்பொழிவாளர்களும் பிற் காலத்தில் செல்வாராயினர். இந்தத் தமிழர் செலவும், பெரும் பகுதி கிழக்காப்பிரிக்க நாடுகளிலும், சில தீவுகளிலும் அதிலும் குறிப்பாக, ஆங்கிலக் காலனிகளில் மட்டுமே மிகுதியாக நிகழ்ந்தது. ஆப்பிரிக்காவை, ஆங்கிலேயரைக் காட்டிலும் கூடுதலாகப் பங்கிட்டுக் கொண்ட, பிரஞ்சு, ஆப்பிரிக்கக் காலனிகளில், தமிழர் குடியேற்றம் பொதுவாக நிகழவில்லை.

இவற்றுள் 'இந்தியத் தன்னாட்சிக்குப் பின்பு' தமிழர் குடியேற்றம் என்பது ஏறத்தாழ இல்லை எனலாம். விரல்விட்டு எண்ணத்தக்க சில படித்த தமிழர்கள் தம் பணி நிமித்தமாக ஆப்பிரிக்க நாடுகளில் வேலை செய்கிறார்கள் என்ற அளவுடன் மூன்றாவது பகுதி முடிந்துவிடும். எனினும், புதுச்சேரியினின்று, பிரஞ்சுக் குடிமக்களாகி, பிரான்சின் பலவேறு முன்னைய காலனி நாடுகளில் பணியாற்றும் தமிழர் எண்ணிக்கை கணிசமானது.

## பிரஞ்சு ஆப்பிரிக்கா




அளவு : 0 மைல்கள் 1000
Kilometres

### பிரஞ்சு ஆப்பிரிக்காவில் தமிழர்

ஆப்பிரிக்கக்கண்டத்தின்மேற்குக்கரையிலும், மேற்குக்கரையை ஒட்டியும், நடுவிலும் அமைந்துள்ள பல நாடுகள் பிரஞ்சுக்காரர்தம் ஆட்சியின் கீழேயிருந்தன. மொராக்கோ, அல்சீரியா, துனிசியா, மொரிட்டானியா, மாலி, நைசேர் ,சாடு, செனகால், கினியா, ஐவரி கோசுட், தோகோ, பெனென், மைய ஆப்பிரிக்கா, செயிர், கபோன், காமரூன், மலகாசி, அப்பர் வோல்டா, மொரீசியசு, இரியூனியன், கொமரோத்தீவுகள், சிபூதி ஆகிய இருபத்திரண்டு நாடுகள் பிரஞ்சுக்காலனி நாடுகளாக இருந்தவை. இந்நாடுகளில் தமிழர் குடியிருப்பு எதுவும் பொதுவாக இல்லை.

எனினும், ஆங்காங்கே ஒரு சில தமிழ்க் குடும்பங்கள் இருந்தன; இன்றும் இருக்கின்றன. இவை, தமிழ்பேசும் பகுதியான புதுச்சேரி மாநிலத்தினின்று, பிரான்சிற்குக் குடியேறி பிரஞ்சுக் குடி மக்களாகிவிட்ட தமிழ்க்குடும்பங்கள்.

**பிரஞ்சுத் தமிழர்**

பிரான்சிலும், பிரஞ்சு பேசப்படும் நாடுகளிலும், குறிப்பாகப் பிரஞ்சு ஆப்பிரிக்காவிலும், சிறந்தபொறுப்புகளிலும், நல்ல வருவாயுடனும் மதிக்கத்தக்க நிலையில் தமிழர்கள் ஓரளவு குறிப்பிடத்தக்க எண்ணிக்கையில் இருப்பினும், அப்பகுதிகளில் 'தமிழ்' என்பது வாசனைக்குக்கூட இல்லை. இதற்கான காரணத்தை ஓரளவாவது அறிந்து கொள்ளுதல், பின்னே பிரஞ்சு பேசும் நாடான செனகாலில் தமிழ், பல்கலைக்கழக அளவில் அறிமுகப்படுத்தப்பட்ட தன்மையையும் தலைமையையும் விளங்கிக்கொள்ள உதவும்.

புதுச்சேரி, இந்தியாவின் கிழக்குக் கடற்கரையில் உள்ள ஒரு சிறு மாநிலம். புதுச்சேரி, காரைக்கால், மாகி, ஏனம் ஆகிய பகுதிகளை ஒன்றாக்கி, பிரான்சு அரசு, தன் குடியிருப்பு நாடாக வைத்திருந்தது. இந்திய ஆங்கிலப் பகுதிகள் 1947 இல் தன்னாட்சி பெற்றன. எனினும், 1954 வரை, புதுச்சேரி பிரான்சின் ஒரு குடியிருப்பாகவே இருந்து வந்தது. புதுச்சேரி மாநிலத்தில் பிரஞ்சு, ஆட்சிமொழியாக விளங்கியது. புதுச்சேரி பிரஞ்சுக் கல்லூரியில் புகுமுக வகுப்பளவில் (Bac) திறமாகத் தேர்ச்சிபெற்ற தமிழர், பிரான்சு அரசின் உதவித்தொகையும், போக்குவரத்துப் பயணச் சீட்டும் பெற்று ஆண்டுதோறும் பிரான்சிற்கு வந்து உயர்கல்வி கற்று வந்தனர். உயர்கல்வி பெற்றபின் இவர்களுள் பெரும்பாலோர், ஏன் அனைவருமே தம் தாயகம் திரும்புவது இல்லை. பிரான்சிலும், பிரான்சின் பிற காலனி நாடுகளான இந்தோ-சீனா, மடகாசுகர், இன்ன பிற ஆப்பிரிக்க நாடுகளிலும், சிலர், பிரான்சுத் தூதரகங்களிலும் நல்ல பொறுப்பில் அமர்ந்தனர். அமர்ந்த அன்னோர், தாமாகத்தம் உறவினரையும், நண்பர்களையும் பிரான்சிற்கு அழைத்துக் கொண்டனர்; அவர்களுக்கு வேலைகளும் பெற்றுத்தந்தனர்.

இவர்கள்அன்றி,பல்கலைக்கல்விபெறஇயலாப்புதுவைத்தமிழர், பிரஞ்சுப் பட்டாளத்தில் சேர்ந்தனர். இந்தியப் பட்டாளத்தைப் போல, பிரஞ்சுப் பட்டாளத்தினர்க்குத் திருமணத் தடையில்லை. எங்கும் தம் மனைவி மக்களுடன் சேர்ந்து பிற அலுவலர்போலப்

பணியாற்றலாம். அதுவும், பிரான்சு தவிர, பிற வெளிநாடுகளில், பிரஞ்சுத் தமிழர்க்குக் கல்லூரியிலோ, அலுவலகத்திலோ, பட்டாளத்திலோ வேலையாற்ற வாய்ப்புக் கிடைத்தால், அவர்களுக்கு எனச் சிறப்பூதியம் நல்கப்பட்டது. அஃது ஏறத்தாழச் சம்பளத்திற்கு இணையான அளவு இருக்கும். உலகில் பிரஞ்சுச் சம்பளம் மிகுதியான ஒன்றாகும். எடுத்துக்காட்டாக,

இந்தியாவின் ஒரு மணி நேர உழைப்பிற்குச் சராசரி ஊதியம் ரூ3/=[3]

பிரஞ்சுக்காரனின் ,, ,, ,, ,, ரூ55/=

வெளிநாடுகளில் பணியாற்றும் பிரஞ்சுக்காரர், ஊதியத்துடன் குறிப்பிடத்தக்க அளவிற்கு வெளிநாட்டுப்பணிச் சிறப்பூதியமும் பெறுவர். அன்றியும் வாரத்திற்கு 35மணி நேரமே வேலைநேரம். (இந்தியாவில் 48 மணி நேரம்) சனி, ஞாயிறு பெரும்பாலும் விடுமுறை. பதினொரு மாதம் வேலைசெய்தால் ஒரு மாதம் சம்பளத்துடன் கட்டாய விடுமுறை; பள்ளி கல்லூரிகளில் பணியாற்றுவோர்க்கு ஆண்டிற்கு மூன்று மாத விடுமுறை; பள்ளி, கல்லூரிகளில் பணியாற்றுவார், தமக்குரிய வகுப்பு நேரங்களுக்கு மட்டும் சென்று வந்தாலே போதும்; முழுநாள் அலுவலகம்போலப் பள்ளிகளில் இருக்க வேண்டியதில்லை; வெளிநாடுகளில் பணியாற்றுவோர் தம் பிள்ளைகளுக்குச் சிறப்புப் பணமும், அவர்தம் கல்விக்குரிய செலவும் பிரான்சு அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும்; ஒவ்வோர் ஆண்டும் விடுமுறைக்கு இருக்கும் இடத்தினின்று, பிரான்சிற்குச் சென்று ஓய்வு எடுத்துத் திரும்ப வானூர்திச் சீட்டுகள் குடும்ப உறுப்பினர் அனைவர்க்கும் வழங்கப்படும்.

ஆப்பிரிக்காவின் கடலோரப் பகுதிகள் தவிர, உள்நாட்டுப்பகுதிகள் பெரும்பாலும் வெப்பம் வீசுவன. எனவே, பிரஞ்சு-ஆப்பிரிக்கக் காலனி நாடுகளை வெப்பத்தைத் தாங்கப் பழக்கம் பெறாத பிரஞ்சு வெள்ளையரைவிட, புதுச்சேரி போன்ற பிரஞ்சுக் காலனி நாட்டினர் பிரஞ்சு வெளிநாட்டு வாய்ப்புகளை எளிதில் பெற்றனர்; தட்ப வெப்பத்தையும் எளிதில் தாங்கிக் கொண்டனர். இவ்வகையில், பிரஞ்சு ஆப்பிரிக்கக் காலனி நாடுகளில், புதுவைப் பிரஞ்சுத் தமிழர் பள்ளிகளிலும், புகுமுகவகுப்புக் கல்லூரிகளிலும், பிரஞ்சுத்தூதரகங்களிலும், பட்டாளத்திலும் ஆங்காங்கே பணியாற்றி வந்தனர்.




ANCIENT COMMERCIAL ROUTES

BETWEEN ASIA AND AFRICA

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதாம் ஆண்டை ஒட்டிப் பிரஞ்சு, ஆப்பிரிக்கக் காலனி நாடுகள் ஒவ்வொன்றாக விடுதலை பெறத் தொடங்கின. இவை அரசியல் அளவில் மட்டுமே விடுதலை பெற்றன. பொருளியல், சமூகவியல் அளவில் முற்றுமாகப் பிரான்சையே தழுவி நின்றன; நிற்கின்றன. எனவே, பிரஞ்சுக் குடி மக்களின் தொடர்நீடிப்பு, அடிப்படையே பள்ளி, கல்லூரி, பல்கலைக் கழகம், அலுவலகங்களில் நிலைத்துள்ளது. ஒவ்வொரு நாடும், தம் படைகளைத் தன்னாட்சிக்குப் பிறகு நிறுவிக் கொண்டாலும், பாதுகாப்பிற்கு எனப் பிரஞ்சுப் படை ஏறத்தாழ ஒவ்வொரு நாட்டிலும் உள்ளது. எனவே ஆங்காங்கு வாழ்வு பெற்றுள்ள புதுவைப் பிரஞ்சுத் தமிழர்களும், ஆங்காங்குத் தம் பணிகளில் நிலைத்துள்ளனர்.

**தமிழ்க்கல்வி**

செல்வம், வசதி, வாய்ப்பு, கல்வி, ஓய்வு ஆகியன இருந்த போதிலும், பிரஞ்சுத்தமிழர் தம் தாய்மொழி பற்றி அக்கறை கொள்ளவே இல்லை. பெரும்பாலான குடும்பங்களில், பெற்றோர்களைத் தவிர பிள்ளைகளுக்குத் தமிழே தெரியாது. அப்படித் தமிழ் தெரியும் எனக் கூறுவோரும் எழுபத்தைந்து விழுக்காடு பிரஞ்சுச்சொற்களைக் கலந்து ''மணிப் பிரஞ்சுத்'' தமிழில் பேசுவர். தங்களுக்கும் தம் பிள்ளைகளுக்கும் ''தமிழ் வேண்டா'' என்பதே பலரது கருத்து பிரஞ்சில் பேசுவதே பெருமை எனக் கருதும் இயல்பினர்; கேவலம்? தாய்நாடு (இந்தியா) விடுமுறைக்காகத் திரும்பும்போதுகூடத் தமிழால் ஒரு பயனும் இல்லை. எனினும், பாரீசு விமானங்கள் தில்லி, பம்பாய் விமான நிலையங்களில்தான் அங்கச் சோதிப்பைச் சந்திக்க வேண்டியிருக்கிறது. அங்கும் ஆங்கிலம் பேசவேண்டும்; இல்லையேல் இந்தி பேச வேண்டும்; தமிழில்பேசினால்புரிந்துகொள்ள அங்கே பொதுவாக ஒருதமிழனும் சுங்க அதிகாரியாக இருப்பதில்லை என்றும் ஆக இந்தியச் சுங்கச் சோதிப்பிற்குக் கூடத்தமிழ் பயன்படுவதில்லை என்றும் பின் எதற்குத் தமிழ் என்றும் பிரஞ்சுத்தமிழர் வாதிடுவர்.

ஒரு சில பிரஞ்சுத்தமிழர் விதிவிலக்காக இருந்து தமிழர் நலனுக்கான சில அமைப்புகளை உருவாக்கி, தமிழ் மொழியறிவு, தமிழ்ப் பண்பாட்டைப் பின்பற்றல் முதலியவற்றைப் பரப்ப முயன்றனரேனும், தமிழர்தம் ஒத்துழைப்பு கணிசமான தொகையாக வாழும் பிரான்சிலும், புற குடியிருப்பு நாடுகளிலும் கிடைக்காமற்

போகவே தம் முயற்சிகளை விட்டுவிட்டனர். இதனால், தமிழுக்குப் பல்கலைக் கழக அளவில், பிரான்சிலும் இடம்பெறத் தமிழர் முயலவில்லை; அன்னோரால் முடியவில்லை; பிரஞ்சு பேசப்படும் பிற ஆப்பிரிக்க நாடுகளிலும் அன்னோர் தமிழுக்கு இடம்பெற முயலவில்லை.

### தமிழர் அல்லா 'இந்தி'யர்தம் சாதனை

இந்தி, பஞ்சாபி, குசராத்தி, மொழியினர், வெளிநாடுகளில் உள்ளனர்; அவ்வந் நாட்டுக் குடிமக்களாகவும் உள்ளனர். ஆப்பிரிக்காவில் குறிப்பாகக் குசராத்தியர், தென்னாப்பிரிக்கா, கென்யா, உகாந்தா, மடகாசுகர், மொரீசியசு போன்ற நாடுகளில் மிகுதியாக உள்ளனர். அவரிடையே உள்ள ஒற்றுமையும், தம் தாயக மாநிலத்தினின்றும், தில்லி அரசிடமிருந்தும் கிடைக்கும் ஒத்துழைப்பும், சராசரி ஒவ்வொருவனுக்கும் இருக்கும் மொழிப் பற்றும், ஆப்பிரிக்க நாடுகளில் அன்னோர் தம் மொழியை வளப் படுத்தி வருகின்றனர்.

தமிழர்தம் அளவில் மொழிப்பற்றுக் குறைந்தவர்; ஒற்றுமை உணர்வற்றவர்; தாய் நிலமான தமிழக அல்லது புதுவை மாநிலங் களினின்றும் எவ்வகை உதவியும் ஊக்குவிப்பும் கிடைக்காதவர்; தில்லி மைய அரசின் பொதுவான புறக்கணிப்பிற்குள்ளாகுபவர் இந்தியத் தூதரகங்களின் அரவணைப்பு இல்லாதவர். எனவே தமிழர் தொகை பெரிய அளவில் இருந்தபோதும், தமிழ் அமைப்பு கள் செழிப்புற இயங்க முடிவதில்லை.

### இந்தியத் திரைப்படங்களின் சாதனை

ஆப்பிரிக்காவில் குறிப்பாகப் பிரஞ்சு ஆப்பிரிக்கா முழுவதும், செல்வாக்குள்ள பிறிதோர் ஆற்றல், இந்தித் திரைப்படங்களின் வரவும் பெருக்கமும் செல்வாக்கும் ஆகும். இந்தித் திரைப்படங் கள், இந்திமொழியையும், இந்திப் பாடல்களையும் பல ஆப்பிரிக்கர் தெருவில் முணுமுணுக்கும் அளவிற்குச் செய்துள்ளன. ஒரு தமிழ்ப்படம் வந்ததில்லை—தரமற்ற இந்தித் திரைபடங்கள் பல இந்தியா வாழ் இந்தி மக்கள் முயற்சியாலும், வெளிநாடு வாழ் இந்திமக்கள் கூட்டமைப்புகளாலும், இந்தியத் தூதரங்களின் 'ஆசி'யாலும் ஆப்பிரிக்கா முழுதும் 'சக்கைபோடு' போடுகின்றன. செனகால் நாட்டுத் தலைநகரான தக்காரில் பாதிக்கு மேற்பட்ட எண்ணிக்கையுள்ள திரையரங்குகளில் இந்தித் திரைப்படங்கள், பிரஞ்சுத் துணைத் தலைப்புகளுடன் வெற்றிநடையிடுகின்றன. ஒரு

பிரஞ்சுக் காலனியே (புதுச்சேரி) தமிழர் காலனியாக இருந்த போதும் ஒரு தமிழ்ப்படம், பிரஞ்சு உட்தலைப்புப் பெற்று இங்கு வந்ததில்லை.

**இந்தியத் தூதரகங்களில் தமிழின் இடம்**

பிரஞ்சு ஆப்பிரிக்க நாடுகளில் இந்தியத் தூதரகங்கள் இருக்கின்றன. இந்நாடுகளில் பொதுவாக இந்தியக் குடியிருப்புகள் இல்லை. காரணம் இவை பிரஞ்சை ஆட்சிமொழியாகக் கொண்டவை. எனினும், பிரஞ்சுக் காலனியான புதுச்சேரியைச் சார்ந்த தமிழ்க் குடும்பங்கள் ஆங்காங்கே உள்ளன. அக்குடும்பத்தினர்க்கு ஆங்கிலம் பேசத் தெரியாது; பிரஞ்சு பேசும் இயல்பினர்; தமிழைப் பெற்றோர் ஓரளவு பேசுவர். பெரும்பாலும் ஆண்டு தோறும் அல்லது ஒரு சில ஆண்டுகள் இடைவெளி விட்டு அன்னோர் இந்தியா (புதுச்சேரி) செல்வர். அப்போது இந்திய நுழைவொப்புதல் (Visa) பெறுதல் பொருட்டு அன்னோர் இந்தியத் தூதரகங்களை அணுகுவர். குடியரசுநாள் போன்ற இந்திய விழாக்களில் பங்கேற்பர். அப்படி இருந்தும், இந்தியத் தூதரகங்கள் ஒரு தமிழனைக் கூடத் தம் அலுவலகங்களில் கொண்டிருக்கவில்லை. ஒரு நாட்டுத் தூதுவர் கூட இந்நாடுகளில் தமிழராக இருந்ததில்லை. ஒரு சிறு அலுவலன் கூடத் தமிழனாக இருப்பதில்லை. தூதரகங்களுக்கு இந்தியாவினின்று இந்திமொழியில் நாளிதழ்கள், வார இதழ்கள், மாத இதழ்கள் வருகின்றன. பெயருக்குக் கூடத் 'தமிழ்' இதழ்கள் வருவதில்லை. 'எனவே' இந்தியத் தூதரங்கள் முற்றுமாக 'இந்தித் தூதரகங்களாக' இருப்பதால், அவற்றின் வழி தமிழ்க் கல்வி கடுகளவுகூட ஆன்ம ஆதரவு பெற வழியில்லாமற் போய்விட்டது.

தமிழ்க் கல்விக்கு ஆதரவற்ற சூழலில், இந்திமொழி, இந்தியத் தூதரகத்தின் வெளிப்படையான ஒத்துழைப்புடன், உள்ளூர் இதழ்களில் விளம்பரப்படுத்தப்பட்டுக் கட்டணம் எதுவும் இன்றி ஆப்பிரிக்கருக்குப் பயிற்றுவிக்கப்பட்டது. ஆண்டுதோறும், இந்திமொழிப் பயிற்சிச் சான்றிதழ்கள், இந்தியத் தூதுவர் தலைமையில், செனகால் அமைச்சர் முன்னிலையில் விழாவைத்து வழங்கப்பட்டன. இதழ் விளம்பரம், சான்றிதழ், அச்சடிப்பு, விழா விருந்து செலவினங்கள் அனைத்தையும் இந்தியத்தூதரகம் ஏற்றது.

ஆக, பிரஞ்சுத்தமிழர் ஒத்துழைப்பும் இன்றி, இந்திய அரசினர், இந்தியத்தூதரக உதவியும் இன்றி, தமிழ்நாடு,

பாண்டிச்சேரி ஆகிய தமிழ் மாநில அரசுகளின் துணையும் இன்றி, செனகாலில் முதன்முதல் தமிழ், பல்கலைக் கழக அளவில், இரண்டாவது மொழிகளுள் ஒன்றாக 1979-இல் அறிமுகப்படுத்தப் பட்டது.

ஆங்கில ஆப்பிரிக்க நாடுகளில் தமிழர்கள், தொகை தொகையாக வாழ்ந்தபோதும், தமிழ், பல்கலைக் கழக அளவை எட்ட வில்லை.

பிரான்சின் ஒரு காலக் காலனியாக, தமிழ் பேசப்படும் புதுச்சேரி இருந்தபோதிலும், பிரஞ்சுத்தமிழர் தொகையாக வாழும் பிரான்சிலோ, பிரஞ்சு பேசப்படும் பிற நாடுகளிலோ, பிரஞ்சு ஆப்பிரிக்க நாடுகளிலோ, தமிழ், பள்ளியைக் கூட எட்டிப் பார்த்ததில்லை.

தமிழைப் பரப்ப வேண்டிய கடமையை ஏற்க வேண்டிய தமிழ் மாநிலங்களான புதுச்சேரி தமிழ்நாடு அரசுகளும், அவற்றை மேலாட்சி செலுத்துகின்ற தில்லி மைய அரசும், அதன் தூதரகமும் தமிழுக்கு வெளிநாடுகளில் வாய்ப்புச் செய்யத் தவறிய நிலையில், செனகால், தமிழுக்கு அரியணை அளித்துச் சிறப்புச் செய்ததற்கு மூலமுதற் காரணர் செனகால் நாட்டின் அன்றைய அதிபர் லியோ போல்டு செதார் செங்கோரே ஆவார்.

**செனகாலில் தமிழ்**

அதிபர் செங்கோர், பாரீசுப் பல்கலைக் கழகத்தில், உயர்தனிச் செம்மொழிகளான இலத்தீன், கிரேக்கம், உரோமன் இவற்றில் பட்டம் பெற்றவர்; பிரஞ்சுமொழி இலக்கணத்தில், பிரஞ்சுப் பல்கலைக் கழகப் படிப்பிலேயே உயர்வான 'அக்ரிசே' பட்டம் வாங்கிய முதல் ஆப்பிரிக்கர்; பிரஞ்சுமொழிப் பெரும் பாவலர்; அவர் பாரீசில் படிக்கும்போது, மொழியியலையும், இனவியலையும் படித்தார்; மொழியியலை அவர் பேராசிரியை ஓம்பர்சரிடம் பயின்றார்.[5] பேரா. ஓம்பர்சர், திராவிட எகிப்திய ஆப்பிரிக்க நாகரிகமும், மொழிகளும் தொடர்புடையவை என்ற கருத்தினர்; இக்கருத்தில் பல கட்டுரைகளை அவர் பிரஞ்சுமொழியில் அக் காலத்திலேயே எழுதியுள்ளார். திராவிட ஆப்பிரிக்கத் தொடர் புண்மையை ஓம்பர்சரே, தம் மாணாக்கரான செங்கோர் மனத்தில் விதைத்தார்.

பிரான்சில் பிரஞ்சுமொழிப் பேராசிரியராகப் பணியாற்றிய செங்கோர், தம் நாட்டின் அரசியல் தேவையை முன்னிட்டு அரசியலில் இறங்கினார்; தன்னாட்டு விடுதலைப்போரை முன்னின்று நடத்தினார். 1960 ஏப்பிரல் 4 இல், செனகால் பிரஞ்சு நேராட்சியினின்று விடுதலை பெற்றது. முறையான தேர்தல் நிகழ்ந்தது. செங்கோர் அதிபராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். தம் நாட்டு அரசியல் பணிகளினூடே ஆய்வுப் பணியையும், கவிதைப் படைப்புப் பணியையும் தொடர்ந்து நடத்தி வந்தார். திராவிட ஆப்பிரிக்க மொழியுறவுகளை ஆராய உரிய ஆய்வாளர் களைத் தந்து உதவும்படி அப்போது (1972 அளவில்) தலைமை அமைச்சராக இருந்த இந்திராகாந்திக்கு மடல் எழுதினார். இதன் விளைவாக தக்கார் கல்லூரி ஒன்றில் துணை முதல்வராகப் பணி. யாற்றிக் கொண்டிருந்த ஓர் ஆப்பிரிக்கர் 1974 அளவில், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் மொழியியல் துறையில் தமிழையும், செனகால் மொழியான ஒலாப் மொழியையும் ஒப் பிடும் ஆய்வில் ஈடுபட்டார். ஏறத்தாழ அதற்குச் சற்று முன்ன தாக. மைசூர் இந்திய மொழிகள் நிறுவனத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த ஒரு சமஸ்கிருதப் பட்டதாரியை, இந்திய அரசு ICCR வழி, தேர்ந்தெடுத்துத் திராவிட மொழியாராய்ச்சிக்குத் தக்கார் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பிற்று. ஏறத்தாழ முழுச் செலவையும் செங்கோரின் செனகால் ஏற்றது. இம் முயற்சியின் விளைவாக, ஆப்பிரிக்காவில் புகழ்பெற்ற தக்கார் பல்கலைக் கழகத்திலும், தமிழகத்தில் புகழ்பெற்ற அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும், திராவிட-ஆப்பிரிக்க மொழியொப்பாய்வு பல்கலைக் கழக அளவில் தொடங்கப் பெற்றது.

அதிபர் செங்கோர் தம் முயற்சியை அதனுடன் நிறுத்திக் கொள்ளவில்லை. அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் ஆதிநாராயணாவையும், திராவிட மொழியியல் உயர் மையத்தின் இயக்குநரான ச. அகத்தியலிங்கத்தையும் 1976இல், செனகால் நாட்டு விருந்தினராக அழைத்து, நாடு முழுவதையும் சுற்றிக்காட்டிச் சிறப்புச் செய்தார்.

1974இல் தம் புகழ்மிக்க ஆசியக் கண்டச் சுற்றுலாவின்போது செங்கோர் இந்தியாவிற்கு வருகை தந்தார். குறிப்பாக, சென்னை நகருக்கு வந்தார் தமிழக அரசு உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறு வனம் வழி வரவேற்பு ஏற்பாடு செய்திருந்தது. தமிழறிஞர்

களுடன் கலந்துரையாடலுக்கும், கிண்டி ஆளுநர் மாளிகையில் ஏற்பாடு செய்திருந்தது. 'நீக்ரோத்துவமும் திராவிடப் பண்பாடும்' எனும் தலைப்பில் அறிஞர் செங்கோர் சென்னை இராசாசி மண்டபத்தில் மே 23, 1974இல் ஓர் அரிய ஆய்வுரை நிகழ்த்தினார்.[5]

அதிபர் செங்கோர் தம் சென்னை வருகையை அடுத்து 1975இல் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பணியாற்றிக் கொண்டிருந்த க ப. அறவாணன், தக்கார் பல்கலைக் கழகத்திற்கு அழைக்கப்பெற்றார். 1977 சனவரி முதல் தக்கார் பல்கலைக் கழக ஆப்பிரிக்க அடிப்படை ஆய்வகத்தில், அறவாணன் அமர்த்தப் பட்டார். இருவர் முன்பே மொழியியல் ஒப்பாய்வில் ஈடுபட்டிருந்த நிலையில், அறவாணன் திராவிட-ஆப்பிரிக்க ஒப்பாய்வை மானுடவியல் அடிப்படையில் ஆராயப் பணிக்கப்பட்டார்.

அறவாணன் வருகைக்குப் பின்னர், தக்கார் பல்கலைக் கழகத்தில், தமிழிற்கு அரியணை பெறும் பணி ஊக்கம் பெற்றது. 1977, மார்ச் 1, செவ்வாய்க்கிழமை, அன்றைய செனகால் உயர் கல்வி அமைச்சராக இருந்த உசுமான் காமராவைச் சந்தித்துப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையைத் தொடங்கும்படியும், எவ்வகை ஊதியமும் இன்றிப் பணியாற்ற திருமதி. தாயம்மாள் அறவாணன் அணியமாய் இருப்பதையும் எழுத்து மூலமாகவும், நேர் உரையாட்டு மூலமாகவும் அறவாணன் எடுத்துரைத்தார். இம் முயற்சி 1979 தொடக்கம் வரை வெற்றி பெறவில்லை. தக்கார் பல்கலைக் கழகத்தில், தமிழ்மொழியை அறிமுகப்படுத்த, தமிழைப் பதினான்கு தேசிய மொழிகளுள், ஒன்றாக ஏற்றுக் கொண்டுள்ள இந்திய அரசின் உதவியைச் செனகால் அரசு நாடியது எதிர்பார்த்த பலன் இல்லை. முடிவில், அதிபர் செங்கோர் தம் தனி ஆர்வத்தின் பேரில், தமிழ்மொழிப் பாடம், 1979ஆம் கல்வியாண்டில் தக்கார் பல்கலைக் கழகத்தில் தொடங்கப் பெற்றது. ஆப்பிரிக்கர் தமிழ்ப்பாடம் பயிலச் சேர்ந்தனர். தாயம்மாள் அறவாணன் தமிழ் இணைப்பேராசிரியராக அமர்த்தப் பெற்றார். தொடங்கிய நாள் முதல் தமிழ் வகுப்பு இடையறாது நிகழ்ந்து வருகிறது. உலகில், பிரஞ்சுமொழி வழி, பல்கலைக் கழக அளவில், தமிழ்பயிற்றுவிக்கப்படுவது தக்கார் பல்கலைக் கழகத்தில்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

**பிரஞ்சுத் தமிழர் பண்பாட்டுக் கழகம்**

புதுச்சேரி மாநிலத்தினின்று, பிரஞ்சுக் குடிமக்களாகி, பிரான்சிலும், பிரஞ்சு பேசும் நாடுகளிலும், பிரஞ்சு ஆப்பிரிக்க நாடுகளிலும், செல்வத்துடனும், செல்வாக்குடனும் கணிசமான எண்ணிக்கையில் தமிழர், தம் குடும்பத்துடன் வாழ்ந்து வருவது முன்பே எடுத்துக் காட்டப்பட்டது. அவரிடம் தமிழுணர்வு இல்லை என்பதைவிட, அன்னோர்க்குத் தமிழுணர்வையும் தமிழ் அறிவையும் ஊட்டத் தாயக மாநில அரசுகள் தவறி விட்டன என்பதே மிகு பொருத்தம். இந்நிலையை மாற்றத் தக்காரை மையமாகக் கொண்ட 'பிரஞ்சுத் தமிழ்ர் பண்பாட்டுக் கழகம்' என்ற அமைப்பு அறவாணன், திருமதி அறவாணன் முயற்சியில் உருவாக்கப்பட்டது. தக்கார் வாழ் ஒரு சில தமிழ்க் குடும்பப் பிள்ளைகளுக்கு ஞாயிறுதோறும் தமிழ் பயிற்றுவிக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இம்முயற்சிக்குப் பிரஞ்சுத் தமிழர் குடும்பங்கள் பேரளவு ஒத்துழைப்பைக் காட்டின. எனவே, தமிழ் வகுப்பைத் தொடர்ந்து, மாதம் ஒரு நாள், தமிழர் வரலாறு, தமிழ் இலக்கிய வரலாறு, கலந்துரையாடல்கள் நிகழ்த்தப்பெற்றன. இக்கலந்துரையாடல்களில் வயதுவந்த தமிழர் அனைவரும் பங்கேற்க அழைக்கப்பெற்றனர்.

பல்கலைக் கழகத்திலும், தனிப்பட்ட முறையில் வீட்டிலுமாக நிகழ்ந்து வரும் இத்தமிழ்ப்பணி தொடர்வது தமிழர் காட்டும் ஆர்வத்தைப் பொறுத்தும், செனகால் அரசு, தமிழக அரசு, இந்திய அரசுகளைப் பொறுத்தும் உள்ளன.

தமிழர், தாமாகத் தொலைநோக்குடன் செயலாற்றும் போக்கினர் அல்லர். அன்றன்று தீரும் வயிற்றுவசதித் தீனிகளில் மகிழ்வுறும் போக்கினர். எனவே அடிமட்டத்தில் இருந்து, ஒவ்வொருவராக உணர்வுறுத்தித் தமிழரை மேல்மட்டத்தில் கொண்டுவந்து நிறுத்துவது என்பது ஒல்லாது. அறிஞர்கள் தொலைநோக்குடன் சிந்தித்துத் தம் முடிவுகளைக் குடிகளின் நலனுக்குத் தக, அரசு வழியிலும், அமைப்புகள் வழியிலுமே தமிழினத்தை உலக இனங்களுள் மதிக்கும் இனமாக உயர்த்துதல் வேண்டும்.

அறிஞர் செங்கோர் செனகால் அரசினின்று 1980 திசம்பருடன் தாமாக முதுமை கருதியும், ஓய்வு கருதியும், அதிபர் பணியினின்று ஓய்வு பெற்றுள்ளார். எனவே, இனி அவரால், அதிகாரச்

சார்பின்றி எதனையும் செய்தல் எளிதன்று. செனகால் அரசு, தமிழையும், திராவிட ஒப்பாய்வையும் தொடர்ந்து வைத்திருக்க, தமிழக, இந்திய அரசுகளின் கைகளையே எதிர்நோக்கும்; அவ்வாறு எதிர் நோக்குவது இயல்பானதே.

தமிழக அரசு, 1974 இல் மைய அரசின் நடைமுறை வேண்டுதலுக்கிணங்க, செங்கோரை அழைத்துச் சிறப்புச் செய்தது. எனினும், அக்காலத்திலேயே இருபதுக்கும் மேற்பட்ட ஈரோப்பியப் பல்கலைக் கழகங்களில் மதிப்பு டாக்டர் பட்டம் பெற்ற, செங்கோருக்கு, அவர்தம் சென்னை வருகையின்போது, ஒரு மதிப்பு டாக்டர் பட்டம் தரத் தவறியது.

ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டைத் தம் நாட்டில் நடத்தத் தாமாகவே முன்வந்திருந்தார் செங்கோர். பின்னர், தமிழக அரசின் வேண்டுகோளுக்கிணங்கவும், 1978 இல் செனகாலில் பொதுத்தேர்தல் இருந்ததை ஒட்டியும் தமிழ் மாநாட்டை மதுரையில் நடத்த விட்டுக்கொடுத்தார் செங்கோர். அதற்கு செங்கோரை, தமிழக முதலமைச்சர் 1981 மதுரை மாநாட்டில் கலந்துகொள்ள அழைத்திருந்தார். ஆனால் ஒரு நாட்டின் அதிபரை ஒரு மாநில முதல்வர் அழைப்பதுடன் அந் நாட்டின் அதிபர் (சஞ்சீவரெட்டி) அல்லது தலைமை அமைச்சரே (இந்திரா காந்தி) அழைத்தல் வேண்டும். அவ்வாறு, செங்கோர், தில்லி மைய அரசினின்று முறையான அழைப்பைத் தமிழக அரசின் தூண்டுதலின் பேரில் பெற்றிருத்தல் வேண்டும். அங்ஙனம் அவர் அழைப்பைப் பெறவில்லை (ஆனால் செங்கோர், மதுரைத் தமிழ் மாநாட்டில் கலந்து கொள்ளாததற்கு அது காரணமன்று. அச்சமயத்தில் அவர் பதவி விலகி இருந்தார். வேறு உள்நாட்டு அரசியல் காரணங்களும் இருந்தன).

எனவே, தமிழ்நாட்டு அரசுகள், மொழி, இனம் தொடர்பான அடிப்படைகளில் உரிமையுடனும் தலை நிமிர்ந்தும், கட்சி வேறுபாடின்றியும் இயங்குதல் வேண்டும் எக்காரணம் கொண்டும், தம் மொழி, இன உரிமைகளில் விட்டுக் கொடுக்கலாகாது. தமிழர் வாழ் வெளிநாடுகளில், குறிப்பிட்ட தொகையினர் வாழும் இடங்களில் தமிழர் பண்பாட்டு மையங்களை வைத்தல் வேண்டும். அவற்றின் வழி, அவ்வந் நாட்டு மொழிகளில், தமிழரைப் பற்றிய துண்டு வெளியீடுகள், தமிழிலக்கியம், தமிழர் வரலாறு பற்றி செய்தியறிக்கைகள், சுற்றுலாப் பயணிகளை ஈர்க்கும் படங்கள், திரைப்படங்கள், செய்திப் படங்கள், சிறுசிறு

கருத்தரங்குகள்இவற்றைத்தொடர்ந்து நடத்த வழிவகை செய்தல் வேண்டும். பிரான்சும், பிரிட்டனும், அமெரிக்காவும், செர்மனும், அராபிய நாடுகளும் இவ்வாறே ஆங்காங்குச் செய்துள்ளன. அண்மையில் கேரள அரசு, இதுபோன்றதோரமைப்பை வெளி நாடு வாழ் மலையாளிகளுக்காக உருவாக்கியுள்ளது.

செங்கோரின் செனகால் அரசு இதுவரை நான்கு ஆப்பிரிக் கரைத் தமிழகத்திற்கு மொழியாய்வு செய்ய அனுப்பியுள்ளது. ஐந்து இந்தியரைத் (அவருள் மூவர் தமிழர், ஒருவர் துளுநாட்டுப் பிராமணர், பிறிதொருவர் தெலுங்கு நாட்டுப் பிராமணர்) தம் நாட்டிற்கு அழைத்துள்ளது. அதிபர் 1974 லிலும், உயர் கல்வி யமைச்சர் 1976லிலும், தமிழகம் வந்துள்ளனர். 40 இலக்கம் மக்கள் தொகை கொண்ட ஒரு நாடு இந்த அளவு செயல் புரிந் துள்ளது. பதிலுக்கு ஐந்துகோடித் தமிழரை ஆளும் தமிழக அரசு ஏதேனும் செய்தல் வேண்டும். 1980 இல் தமிழகச் சட்டப் பேரவைத் தலைவர் க. இராசராம் செனகால் வந்ததைப்போல மேலும் பலர் வருதல் வேண்டும். தமிழக ஆராய்ச்சியாளர்களைத் தேர்ந்தெடுத்து, எகிப்து, கிழக்கு ஆப்பிரிக்கா, மேற்கு ஆப்பிரிக்கப் பகுதிகளுக்கு அனுப்பி ஆய்வு நிகழ்த்தச் செய்தல் வேண்டும்.

## அடிக்குறிப்புக்கள்

1. அமெரிக்கா, தாசுமானியா.

   ஆப்பிரிக்காவில் புஸ்மன்கள்ஆங்கிலக்காலனி ஆட்சியாளர் களால் முழுமையாகக் கொன்றழிக்கப்பட்டார்கள். ப.147 ஆஸ்திரேலியாவை ஒட்டியுள்ள ஒரு தீவு 1642 ஆம் ஆண்டு டாஸ்மன் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது. அப்போது 15 ஆயிரம் பழங்குடிகள் இருந்தனர். அனை வரும் ஆங்கிலக் காலனிப் படையினரால் கொல்லப்பட்ட னர். ஆஸ்திரேலியாவில் வாழ்ந்த அந்நாட்டு பழங்குடி யினருள் பலர் கொல்லப்பட்டதுடன், எஞ்சியோர் பாலை வனப்பகுதிக்கு விரட்டப்பட்டனர். அமெரிக்காவில் சிவப்பிந்தியர்கள் அவ்வாறே கொல்லப்பட்டும் விரட்டப் பட்டும் அழிக்கப்பட்டனர்.

   —மனித இனங்கள் ப. 147, 155.

2. ஆறு திங்கள் வேலைசெய்துவிட்டு ஆறுதிங்கள் கட்டாய ஓய்வு எடுத்துக் கொள்ளும் இவ்வழக்கத்திற்கு, தென் னாப்பிரிக்கச் சூலுமொழியில் 'புமூலா' என்று பெயர்.
3. India Today, Sep. 15, 1980
4. L'e poesie de L'action.
5. Ref. Aravaanan Edition Dravidians and Africans pp. 1-14.

# இலங்கையில் தமிழ்

இ. பாலசுந்தரம்

காலத்திற்குக் காலம் தமிழ்மொழியின் கலை, இலக்கியத் துறைகளின் வளர்ச்சிக்கு ஈழத்தமிழ் மக்களும் தமது பங்கையும் செலுத்திவந்துள்ளனர். ஆக்க இலக்கியங்கள், இலக்கணம், மற்றும் விமரிசனம் முதலிய துறைகளிலும் ஈழத் தமிழ்ப்புலவர் களும், கலைஞர்களும், அறிஞர்களும் குறிப்பிடத்தக்கதோர் இடத்தைப் பெற்றுள்ளனர். பதினான்காம் நூற்றாண்டு முதலாக இடம்பெற்றுவந்த இப்பங்களிப்பு இருபதாம் நூற்றாண்டில் துரித கதி பெறுவதாயிற்று. இலங்கை மக்கள் சுதந்திரம் பெற்ற பின்பு சுதேசிய விழிப்புணர்ச்சியுடன் வளரத் தொடங்கிய ஈழத் தமிழ் இலக்கியம், அரசியல் துறையில் ஏற்பட்ட தேசிய உணர் வினாலும், நாட்டில் ஏற்பட்ட சுதேசியக் கலாச்சார விழிப் புணர்ச்சியினாலும் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்தாறாம் ஆண்டுக்குப்பின்பு ''மண்வாசனை'' கொண்டதாக மலரத் தொடங்கிற்று. இதன் பயனாக அறுபதுகளிலும், எழுபதுகளிலும் ஈழத்தில் மண்வாசனையுடைய இலக்கியங்கள் பல்வேறு துறைகளி லும் மலர்ந்து, தமிழ் இலக்கியச் சோலையிலே மணம் வீசலாயின.

அடுத்துவந்த எண்பதில் தோன்றிய ஆக்க இலக்கியங்கள். அது பற்றிய விமரிசனங்கள், ஆய்வுகள், நூல் வெளியீடுகள், சஞ்சிகைகள் முதலியவற்றை நோக்கும்போது எண்பதாம் ஆண்டு, ஈழத்து இலக்கிய வளர்ச்சியில் ஒருபடி முன்னேற்றம் பெற்றுள்ளது என்றே கூறவேண்டும். தமிழகத்தோடு ஒப்பிடத்தக்க வகையில் எண்ணிக்கையில் குறைந்து காணப்படினும், குறிப்பிடத்தக்க வகை

யில் நாவல்கள், சிறுகதைத் தொகுப்புக்கள், கவிதைகள் நூல்கள், இலக்கிய விமரிசனக் கட்டுரை நூல்கள், ஆய்வு நூல்கள் முதலியன வும் எண்பதில் வெளிவந்துள்ளன. இவற்றைவிட தினசரிப் பத்திரிகைகள், வார இறுதிப் பத்திரிகைகள், சஞ்சிகைகள் முதலி யனவும் இப்பணியில் தமது பங்கைச் செலுத்தியுள்ளன.

இவ்வாண்டில் எழுத்தாளர்களை எதிர்நோக்கிய பிரச்சினை களில் பிரசுரச்சிக்கல் பிரதானமானதாகும். இதனால் ஆக்க இலக்கியங்களை வெளியிடுவதற்கென்றே சில வெளியீட்டுக் கழகங்கள் தோன்றின. ஏனைய எழுத்தாளர்கள் பத்திரிகை நிறுவனங்களை நம்பியே தமது ஆக்க இலக்கியப் பணியினைத் தொடரலாயினர்.

**எண்பதில் சிறுகதை இலக்கியம்**

புதுமைப் பித்தனில் இருந்து இன்றுவரை சிறுகதைக்குப் பல் வேறு பட்ட விளக்கங்கள் கூறப்பட்டு வந்துள்ளன. அத்தனை விளக்கங்களையும் ஒன்று சேர நோக்கினாலும், இதுதான் சிறுகதை என்று முழுமையாகக் கூறிவிட முடியாது என்று கூறத்தக்க வகை யில் இதுவரை வெளிவந்த சிறுகதைகள் காணப்படுகின்றன. புனை கதை இலக்கியத்துறையினை ஆராயும்போது ஈழத்திலே சிறு கதைத்துறை, புதிய வேகமும் வளர்ச்சியும் கண்டுள்ளது. எண்பதில் வெளிவந்த ஆக்க இலக்கியங்களில் சிறுகதைத் துறையே முன்னணி யில் காணப்படுகின்றது.

தெளிவத்தை ஜோசேப்பின் ''**நாமிருக்கும் நாடே**'' சதானந் தனின் '**மட்டம்**', காவலூர் ஜெகநாதனின் ஈழத்துச் **சிறுகதை மஞ்சரி**', மாத்தளை தமிழ் எழுத்தாளர் ஒன்றிய வெளியீடாகிய '**தோட்டக்காட்டினிலே**' எம். எஸ். எம். இராமையாவின் '**ஒரு கூடைக் கொழுந்து**', க சட்டநாதனின் '**மாற்றம்**' என்ற சிறு கதைத் தொகுதிகள் எண்பதில் வெளிவந்துள்ளன.

இவற்றைவிட வார இறுதியில் வெளிவரும் வீரகேசரி வார மஞ்சரி, தினகரன் வார மஞ்சரி, ஈழநாடு வார மஞ்சரி, சிந்தாமணி ஆகிய பத்திரிகைகள் ஒவ்வொன்றிலும் தவறாமல் ஒவ்வொரு வார மும் ஒவ்வொரு சிறுகதை வெளிவந்திருக்கின்றது. பத்திரிகை களுக்கு அனுப்பப்படும் சிறுகதைகளைப் பத்திராசிரியர்கள் தரம் கண்டே பிரசுரித்து வந்திருக்கிறார்கள். அக்கதைகள் சமூக ஏற்றத் தாழ்வுகளையும் அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளையும் சமூகத் தேவைகளையும் அடிப்படையாகக் கொண்டே எழுதப்

பட்டுள்ளன. மேற்குறிப்பிட்ட பத்திரிகைகளுக்கு எழுதிய சிறு கதை ஆசிரியர்களுள் செ. யோகநாதன், காவலூர் ஜெகநாதன் திக்குவெல்லைக் கமால், நெல்லை க. பேரன், ஞானரதன், செ. குணரத்தினம், அன்பு மணி, காவலூர் எஸ். யோகநாதன், மாத்தளை சோமு, மலரன்பன், கே. விஜயன், தமிழ்ப்பிரியன், கோகிலா-மகேந்திரன், தாமரைச்செல்வி, யூ எல். ஆதம்பாவா முதலியோரைக் குறிப்பிடலாம் இவர்களுள் பாராட்டும் பரிசும் பெற்றவர்களாக கே.ஆர். டேவிட், எம்.எல்.எம். மன்சூர், சுதராஜ், தெணியான், செ. யோகநாதன், ஞானரதன் முதலியோர் சிறப்பிடம் பெறுகின்றனர்.

வாசகர்களின் மத்தியில் சிறுகதைகளுக்கு நல்ல வரவேற்பும், ஆர்வமும் காணப்பட்டமையால் சிறுகதைகளை வெளியிடுவதில் பத்திரிகைகள் முக்கிய கவனம் செலுத்தின. சிறுகதைத் துறையைப் பொறுத்தமட்டில் இப்பண்பு தொடர்ந்து காணப்பட்டு வந்துள்ளது. இப்பின்னணியில் வீரகேசரிப் பத்திரிகையின் தொண்டு தனித்துவம் பெறுகின்றது. எண்பதில் வீரசேகரி வார மஞ்சரியில், ஒவ்வொரு மாதமும் வெளிவந்த சிறுகதைகளைப் பற்றிய விமரிசனம் அடுத்த மாத வீரகேசரியில் இடம்பெற்று வந்துள்ளது. சிறுகதை வெளியீடும் அதனைத் தொடர்ந்து, அதுபற்றிய விமரிசனமும் ஒரே பத்திரிகையில் இடம்பெற்று வந்தமையால் சிறுகதை இலக்கியத்துறையில் வாசகர் கூடிய கவனமும், ஆர்வமும் கொள்ளலாயினர். மேலும், சிறுகதைகளைப் பொருத்தமான கவர்ச்சியான விளக்கப் படங்களுடன் வெளியிட்டு வாசகர்களைக் கவர்ந்திழுக்கும் உத்தியையும் இப்பத்திரிகைகள் கையாண்டு வந்துள்ளன.

எண்பதில் வெளிவந்த சிறுகதைத் தொகுதிகளுக்குரிய நூல் விமரிசனங்களும் இப் பத்திரிகைகளில் இடம்பெற்றன. இத்தகைய விமரிசனங்ளைப் பிரசுரித்து சிறுகதைத் துறையில் சுவைஞர்களின் கவனத்தைத் திசை திருப்பும் பணியில் இப்பத்திரிகைகள் பணி யாற்றி வந்துள்ளன. இவற்றைவிட மாதவெளியீடுகளாக வெளி வந்த இலக்கிய சஞ்சிகைகளிலும் மாதந்தோறும் ஒன்றுக்கு மேற்பட்ட சிறுகதைகள் வெளிவந்து கொண்டிருந்தன. பத்திரிகை களைவிடத் தரமான சிறுகதைகள் சஞ்சிகைகளில் காணப் பட்டன என்று கூறுதல் விதப்புரையாகாது.

எண்பதில் ஈழத்துச் சிறுகதைகள் தமிழகத்துச் சஞ்சிகை களான இதயம் பேசுகிறது, குங்குமம், தீபம், பசுங்கதிர், காயிதே

மில்லத் முதலியவற்றிலும் இடம்பெறலாயின. ''தீபம்'' சஞ்சிகையில் ''பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை'' என்ற தலைப்பில் எழுதப்பட்ட தொடர் கட்டுரையில் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பது ஜனவரி இதழிலே ஈழத்து எழுத்தாளர்கள் பற்றி எழுதியிருந்தமையையும் ஈண்டு குறிப்பிடுதல் பொருத்தமானதாகும். தமிழகத்துப் பத்திரிகைகளில் எழுதிய ஈழத்துச் சிறுகதை எழுத்தாளர்களில் தமிழ்ப்பிரியா, கோகிலா மகேந்திரன், தாமரைச்செல்வி முதலியோரைக் குறிப்பிடலாம்.

எண்பதில் வெளிவந்த வார இறுதிப் பத்திரிகைகளிலும், வார, மாத சஞ்சிகைகளிலும் சுமார் ஐந்நூறு சிறுகதைகள் வெளிவந்திருக்கின்றன. இவற்றை எழுதியோரில் பலர் அத்துறையில் நீண்ட காலமாக உழைத்து வருவோரும் உளர் அதே வேளையில் புதிய ஆக்கங்கள் மூலம் சிறுகதை இலக்கியத்துறையில் அடி எடுத்து வைப்போரும் காணப்படுகின்றனர். புதிய எழுத்தாளர்களை அறிமுகம் செய்து வைப்பதில் இப்பத்திரிகைகள் பெருந் தொண்டாற்றின. சிறுகதை எழுத்தாளர்களிடையே பொதுவாகப் பிரதேச உணர்வையே பெரிதும் காணக்கூடியதாக இருந்தது.

மலையக எழுத்தாளர் பலர் ஈழத்து எழுத்தாளர் வரிசையில் முன்னணியில் திகழ்கிறார்கள். அவர்களுள் தெளிவத்தை ஜோசேப்பும் ஒருவராவார். நாவல், சிறுகதை, விமரிசனம் ஆகிய துறைகளில் ஈடுபாடு கொண்டு உழைத்துவரும் ஜோசேப் அவர்கள் 1963 முதல் 1977 வரை எழுதிய சிறுகதைகளின் தொகுதியே **''நாமிருக்கும் நாடே''**யாகும். சிறுகதைத் துறையில் காணப்பட்ட விழிப்புணர்ச்சியின் காரணமாக, யாழ்ப்பாணத்து 'வைகறை வெளியீட்டினர்' இதனை எண்பதில் வெளியிட்டார்கள். இத் தொகுதியினைப் படிக்கும்போது, ஜோசேப் அவர்களின் எழுத்தாற்றல் எவ்வாறு படிப்படியாக வளர்ந்து வந்துள்ளது என்பது புலனாகின்றது. இக் கதைகளில் யதார்த்தப் பண்புகளைவிட கலையழகே மேலோங்கிக் காணப்படுகின்றது என்ற விமரிசனக் கருத்தையும் நாம் நினைவு கொள்ளுதல் தகும். **''நாமிருக்கும் நாடே''**, 'ஒரு தோட்டத்துப் பையன் படம்பார்க்கப் போகிறான்'' என்ற கதைகள் தோட்டத்து மக்களின் வாழ்வில் காணப்படும் சீரழிவுகளைக் கிண்டல் செய்வதாக அமைகின்றன. மலையக மக்களின் இனவுணர்வைப் பிரதிபலிப்பது அதிலிடம் பெறும்

''தீட்டுரொட்டி'' என்ற கதை. நாமிருக்கும் நாடு நமதே என்ற உணர்வினை மக்களுக்கு ஊட்டுவதாக இத்தொகுதி அமைகிறது. மேலும் இத் தொகுதி மலையக மக்களின் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகளை உள்ளடக்கிய வரலாற்றுப் புனைகதைகளாகவும் அமைகின்றன.

மாத்தளை தமிழ் எழுத்தாளர் ஒன்றிய வெளியீடாக ''தோட்டக்காட்டினிலே'' என்ற சிறுகதைத் தொகுதியும் இவ்வாண்டில் வெளிவந்தது. மலரன்பன், மாத்தளை சோமு, மாத்தளை வடிவேலன் என்ற மூன்று இளம் எழுத்தாளர்களின் படைப்புக்களைக் கொண்டதே இச் சிறுகதைத்தொகுதி. இதில் ஒன்பது சிறுகதைகள் உள. சிறுகதை எழுத்தாளர்களைப் பொறுத்தவரையில் அவர்களை முழுமையாக இனங்கண்டு கொள்வதற்கு இத்தகைய தொகுப்புக்கள் துணையாக அமைகின்றன. இத் தொகுப்பில் இடம்பெற்ற கதைகளில் மலரன்பனின் ''உறவுகள்'', சோமுவின் ''நாய்கள் மனிதராவதில்லை'', வடிவேலனின் ''வெட்டு மரங்கள்'' அவரவர்களின் திறமையைக் காட்டுவதோடு காலத்தையும் கடந்து நிற்கும் தகுதியும் வாய்ந்தவை. 'மனித உணர்வுகள் எல்லோருக்கும் பொதுவானவை என்று சிலர் தத்துவம் போதித்தாலும், கூர்ந்து நோக்கினால் அவையும் மனிதரது வர்க்க நிலைகளுக்கும், நிலைப்பாடுகளுக்கும் அமையவே செயற்படுகின்றது தெளிவாகும்' எனப் பேராசிரியர் கைலாசபதி அவர்கள் அத்தொகுப்புக்கு அளித்த முன்னுரையில் கூறப்பட்டிருக்கும் கருத்தினை அடிநாதமாகக் கொண்டனவாகவும், அவற்றை விளக்குவனவாகவும் இத்தொகுப்பிலுள்ள சிறுகதைகள் காணப்படுகின்றன.

கலை, இலக்கியங்கள் தான் மனிதனை, சமூகத்தை அடையாளம் காட்டுகின்றன. வியட்நாமுக்கும் நமக்கும் எத்தனை தூரம்? அவர்கள் எங்கே நாம் எங்கே? ஆனால் அவர்களின் வீரத்தை—சொந்த மண்ணை ஆட்சிசெய்யவந்த அந்நியனை எதிர்த்துப் போராடிய தீரத்தை, கலை இலக்கிய கலாசாரம் காக்கப்பட வேண்டும் என்ற இலட்சியத்தை அறிந்திருக்கின்றோம் அதைப்போலவே நம்மை அடையாளம் காட்டத் தேவை கவிதைத் தொகுதிகள், சிறுகதைத்தொகுதிகள்! நம்மை உலகிற்கு எடுத்துக்காட்டச் சிறுகதைதொகுதிகள் தேவை என்ற இலட்சிய வெறியில் இந்தச் சிறுகதைத்தொகுதியை வெளி

யிடுகிறோம்—என்று கூறுகிறார் அதன் தொகுப்பாளர் சோமு. இத்தொகுதியில் இடம்பெற்ற கதைகள் வெறும் பொழுது போக்குக் கதைகள் அல்ல. மாறாக நசுக்கப்பட்ட ஓர் இனத் திற்குப் புதிய இரத்தம் பாய்ச்சும் முயற்சி.

**குறுங்கதை/மினிக்கதை/மணிக்கதை/குட்டிக்கதை/ உருவகக்கதை**

ஈழத்துப் புனைகதைத் துறையில் நாவல் சிறுகதைகளுக்கு அடுத்தபடியாக மேற்குறிப்பிட்ட கதை இலக்கிய வடிவங்களும் எண்பதில் பத்திரிகைகளில் வாரந்தோறும் வெளிவரலாயின. முக்கியமாகத் தினகரன் வார மஞ்சரியில் வாரந்தோறும் ஒரு சிறுகதையும் மேற்குறிப்பிட்ட ஐந்து வடிவங்களில் ஒன்றோ அல்லது இரண்டோ இடம்பெற்றமையைச் சிறப்பாகக் குறிப்பிட்டே ஆகவேண்டும். குறுங்கதை, மினிக்கதை என்பன புதிய இலக்கிய வடிவங்கள் என்ற சருத்து நிலைபெற்று விட்டது. 'இலக்கியத்துறைக்குப் புதிதாக வருபவர்களிடம் இப்படிப் பல மயக்கங்கள் உள. பிரசுர வசதி கருதி சின்னஞ்சிறு கதைகளைப் பிரசுரித்து, கவர்ச்சி கருதி 'மினிக்கதை' என்று பெயர் சூட்டினால் அதுவே ஓர் இலக்கிய வடிவம் என்று கூறுதல் அபத்தம்; ஆபத்து' —என்ற கருத்தும் ஈழத்து விமரிசகர்களிடையே காணப்படுகின்றது.

**எண்பதில் நாவல் இலக்கியம்**

ஈழத்தில் தமிழ் நாவல் இலக்கிய வளர்ச்சி அறுபதுகளில் வேகம்பெற்ற அளவுக்குப் பின்பு காணப்படவில்லை என்றே கூற வேண்டும். தமிழகத்தில் இருந்து இறக்குமதியாகும் தமிழ் நாவல் களின் மத்தியில் ஈழத்து நாவல் வெளியீடு எதிர்நீச்சல் போட வேண்டியிருந்தது. இத்தகையதொரு பின்னணியில் தரமான நாவல்களை வெளியிட்டு வரும் வீரகேசரி நிறுவனம், ஈழத்து நாவலாசிரியர்களின் ஆக்கங்களை வெளியிடுவதில் முதலிடம் பெறுகின்றது.

எண்பதில் ஞானசேகரனின் **'குருதிமலை'**, பி. நல்லரத்தினத் தின் **'கோவும் குயிலும்'**, கே. வீ. எஸ். வாசின் **'மலைக்கன்னி'** (மறுபிரசுரம்) முதலிய நாவல்கள் வெளிவந்தன. இவற்றுள் குருதிமலை தனிச்சிறப்பு வாய்ந்தது. கொழும்பு தகவம் இலக்கியக் குழுவினர் நடத்திய ''எண்பதில் நாவல் போட்டி''யிலும் இதுவே முதற்பரிசைப் பெற்றுக் கொண்டது

குருதிமலை என்ற நாவல் மலையகத் தோட்டத் தொழிலாள மக்களின் வாழ்க்கையைத் தளமாகக் கொண்டது. இதற்கு முன்பு "**தூரத்துப் பச்சை**" (1964), "**மலைக்கொழுந்து**" (1964), "**சொந்தக்காரன்**" (1968), "**தாயகம்**" (1969), "**காலங்கள் சாவதில்லை**" (1974), "**வரலாறு அவளைத் தோற்றுவிட்டது**" (1976) என்ற ஆறு நாவல்கள் மலையக மக்களின் பொருளாதாரத் தன்னிறைவு அற்ற நிலையினையும், வாழ்க்கையின் அடிப்படைத் தேவைகளில் பெறமுடியாத அவலநிலைகளையும் பகைப்புலமாக வைத்து, தனி மனித உணர்வுகளையும் சமூக வர்க்கப் போராட்டங் களையும் அடிப்படையாகக் கொண்டிருந்தன. இவற்றில் சித்தரிக்கப்படும் போராட்டங்கள் தோட்ட நிர்வாகத்திற்கு எதிரானவையாகவே காணப்பட்டன. ஆனால் "**குருதிமலை**' என்ற நாவலில் இடம்பெறும் போராட்டம், தோட்ட நிர்வாகத் தலைமையை எதிராகக் கொண்டமைவதோடு, தோட்டத் தொழிலாளரின் அண்மைக்கால வரலாற்றுச் சம்பவங்களையும் கோடிட்டுக் காட்டுகின்றது.

ஈழத்தில் சிறுகதை ஆசிரியர்களே நாவல் துறையிலும் ஈடுபட்டு வந்துள்ளனர். அவ்வழியில் ஞானசேகரனின் "**காலதரிசனம்**" என்ற சிறுகதைத்தொகுதி குறிப்பிடத்தக்கது. தொகுத்து நோக்கும்போது ஈழத்தில் நாவல் வளர்ச்சி இவ்வாண்டில் எண்ணிக்கையில் மிகக் குறைவாகவே காணப்படுகின்றது. அதற்குப் பிரசுர வசதி இன்மை காரணமாகலாம்.

**எண்பதில் நாடக இலக்கியம்**

ஈழத் தமிழ் மக்களது நாடகக் கலையை சிங்கள மக்களுடன் ஒப்பிடும்போதோ அல்லது தமிழகத்தவருடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போதோ மிகவும் பின்தங்கிய நிலையிலேயே காணப் படுகின்றது—என்ற கருத்து மிக நீண்டகாலமாக இருந்து வந்தது. ஆனால் எண்பதில் இக்கருத்துக்குச் சவால் கொடுக்கும் வகையில் ஈழத் தமிழ் நாடகத்துறை பெருவளர்ச்சி பெறுவதாயிற்று.

தமிழ் நாடகத் துறையில் புதுப் பரிமாணங்கள் ஏற்படலாயின. வளமையான நாடகங்களைப் பார்த்து வந்த சுவைஞர்களுக்கு "அபத்த—நாடகங்களையோ" (absurd drama) அல்லது பேர்டோல்ட் பிரெஷ்ட் போன்றோரின் அந்நிய மொழி நாடகங் களையோ ஆர்வத்துடன் பார்க்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டிருந்தமையை எண்பதில் கவனிக்கக் கூடியதாக இருந்தது

நாடகத்தில் வரும் உணர்ச்சியின் உச்சக்கட்டம் சுவைஞர்களுக்கு நேரடித் தாக்கத்தை ஏற்படுத்துகிறது. இதனால் நடிகர்களுக்கும் சுவைஞர்களுக்கும் ஏக காலத்தில் பிணைப்பு ஏற்படுகிறது. பார்வையாளரின் அதீத கவனம் நாடகத்தால் ஈர்க்கப்படுவதாலும், நாடகக்கலை ஏனைய கலைகளைவிட ஆற்றல் மிக்க சாதனமாகத் திகழ்வதாலும் இயக்கரீதியான ஆக்க இலக்கிய கர்த்தாக்களும், கலை வல்லுனர்களும் இவ்வாண்டில் நாடகத் துறையில் அதீத கவனம் செலுத்தியுள்ளனர்.

ஜேர்மானிய நாடக ஆசிரியரான பேர்டோல்ட் பிரெஷ்ட் இந் நூற்றாண்டின் முன்னணி நாடக ஆசிரியர்களில் ஒருவரும் பொதுவுடமைச் சித்தாந்த வாதியுமாவார். உலக நாடக அரங்கில் இவரது நாடகங்கள் தனித்துவம் வாய்ந்தவை. வழமையான நாடகவியற் கோட்பாடுகளின் அடிப்படையில் இவரின் நாடகங்களைக் கணிப்பது பொருந்தாது என்பதை மேனாட்டு இலக்கிய விமரிசகர்களும் ஏற்றுக்கொள்வர். பிரெஷ்ட் ஜேர்மானிய மொழியில் எழுதி, ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட **''தி எக்ஸ்செப்ஸன் என்ட் த ரூல்'** (The exception and the rule) என்ற நாடகத்தினைத் தமிழாக்கம் செய்த **''யுகதர்மம்''** என்ற நாடகமும், தமிழக எழுத்தாளராகிய ந முத்துசாமி எழுதிய **''நாற்காலிக்காரர்''** என்ற நாடகத்தை யாழ்ப்பாணத்துப் பேச்சு வழக்கில் அமைத்து நடித்த நாடகமும் இளம் நாடகத் தயாரிப்பாளரான க. பாலேந்திராவின் நெறியாள்கையில் பல இடங்களில் மேடை ஏறிச் சாதனை புரிந்தன.

''ஒரே விதமான மாமூல் விசயங்களைப் பார்த்து அலுத்துப் போய்விட்ட மக்களுக்கு எமது முயற்சிகள் ஒரு வித்தியாசமான அநுபவத்தை ஏற்படுத்தும் என்பதனால் நாடகத் துறையில் ''விஷப்பரீட்சை'' செய்து பார்த்துக் கொண்டிருக்கின்றோம். ஓரளவு வெற்றியும் கண்டு வருகின்றோம். சிறிய நாடகங்களுக்குப் பத்திரிகை, வானொலி போன்ற சாதனங்களின் ஆதரவும் கிட்டுகின்றது''—என க. பாலேந்திரா கூறியமை (தினகரன் வார மஞ்சரி 3-2-80, பக். 7) ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

பிரெஸ்டின் நாடகங்கள் பல வருடங்களுக்கு முன்பு சிங்கள இலக்கியத்தில் இடம்பிடித்தபோதும் எண்பதில்தான் தமிழில் பிரபல்யம்பெறத் தொடங்கிற்று. 'இலங்கை அவைக் காற்று கலைக் கழகத்தினர்' இவ்வரிய பணியை மேற்கொண்டனர்,

அந்நியக் களத்தில் இயங்கும் பாத்திரங்களை உருவாக்கி உலகப் புகழ்பெற்ற ஒரு நாடக ஆசிரியரின் நாடகத்தினை இன்னொரு மொழியில் வெற்றிகரமாக நிகழ்த்திக் காட்டுவதற்குத் திறமை அவசியமாகிறது. இதற்கு நாடக ஆசிரியரின் அடிப்படை நோக்கு, மேடை அமைப்பு, பாத்திர இயக்கம், உருவ ஒப்பனை, இசை— இவை பற்றிய முழுமையான அறிவும் நீண்ட உழைப்பும் பயிற்சியும் தேவை. இவை அனைத்தும் எண்பதில் நாடகத் தயாரிப்பாளர் சிலரிடம் காணப்பட்டன.

தமிழ்ச் சுவைஞர்களுக்குத் தூரத்துப் பெயராக இருந்த பிரெஷ்ட் இன்று வெகு நெருக்கமாகவும், நாடகத்தில் அந்நியமாதல் பற்றிய அவரது நாடகக்கொள்கை சர்ச்சிக்கப்படுவதொன்றாகவும், அவரது ஏனைய உலகப் புகழ்பெற்ற ஆக்கங்களையும் அறியவேண்டும் என்ற ஆர்வம் தூண்டிவிடப்பட்டதுமான நிலைமைகளை உருவாக்கி இருப்பதில் **'யுகதர்மம்'** முக்கியத்துவம் பெறுகின்றது (வீரகேசரி 13-6-80). 'ஈழத்தில் அரும்பிக் காணப்படும் நாடக விழிப்புணர்வினைத் தொடர்ந்த இயக்கமாக்கும் தீவிரப்பயணத்தில் இலங்கை அவைக்காற்றுக் கலைக் கழகத்தினர் பதித்த புதிய காலடிகளான **''யுகதர்மம்''**, **'நாற்காலிக்காரர்கள்''** என்ற இரு நாடகங்களும் அழுத்தமாகவே புரிந்துள்ளன' என்கிறார் அ யேசுராசா.

கொழும்பு, யாழ்ப்பாணம், மட்டக்களப்பு, மன்னார் ஆகிய பகுதிகளில் ஆங்காங்குள்ள நாடகமன்றங்கள் நாடகங்களை மேடை ஏற்றுவதில் முயன்று வந்துள்ளன. எனினும் கொழும்பிலே நாடக மேடை ஏற்றம் நவீனத்துவமும் புதிய பரிமாணங்களும் கொண்டதாகச் சிறப்பாக வளர்ந்து வருகின்றது. அதேவேளையில் புதுமைக்காகவும் உத்திச் சிறப்பிற்காகவும், 'செக்ஸ்'' கவர்ச்சிக்காகவும், சில சுலோகங்களைத் திணிப்பதற்காகவும் நாடகங்களும் மேடை ஏறின. ஆனால் அவை நிலைபெற்றில. பொதுவாக எண்பதில் சமூக விழிப்பு நாடகங்களே பெரிதும் காணப்பட்டன.

ஈழத்து இலக்கியத்துறையில் அறுபதுகளில் ஏற்பட்ட புதிய திருப்பங்கள் எழுபதுகளிலும், எண்பதிலும் பெரும்மாற்றம் ஏற்படுத்தியது. அக் காலக்கட்டத்தில் தோன்றிய புரட்சிகர கலை இலக்கிய சிருஷ்டிகள் வெகுஜனத்தன்மையும், புரட்சிகரச் சிந்தனையும் கொண்டிருந்தன. இப் பின்னணியில் தோன்றியனவற்றில் **சங்காரம், அபசுரம், கடூழியம் சூரலும் சிவக்கிறது** என்ற

நான்கு நாடகங்கள் குறிப்பிடத்தக்கவை. இந் நாடகங்களில் தேசியப் பிரச்சினைகள் முன் வைக்கப்பட்டன. நவீன நாடக மரபும் பாரம்பரியக் கூத்து மரபுகளும் நெறிகளும் கலக்கப்பட்டன. பிரதேச மண்வாசனையும் கலந்திருந்தது. அத்தகைய இன்றி யமையாத் தன்மையாலும் அவற்றுக்கு நிலையான வடிவம் கொடுக்கும் நோக்குடனும் எண்பதில் இந் நாடகங்களை '**நாடகம் நான்கு**' என்ற தலைப்பில் தனிநூலாக வெளியிட்டுள்ளனர்.

திருக்குறளை அடிப்படையாகக் கொண்டு கட்டுரை இலக்கி யங்கள் எழுதப்பட்டன போன்று நாடகங்களும் ஆக்கப்பட்டன. அவ்வகையில் அமுதன் எழுதிய நாடகங்கள் ''**வாழும் வழி**', என்ற பெயரில் வெளிவந்தன. இவை இலக்கியத்தரம் உடையன வாகவே அமைந்தன.

இலங்கைக் கலாசாரப் பேரவையின் நாடகக்குழு எண்பதில் பெப்ரவரி 6-16 வரை பதினொரு நாட்கள் தேசிய அடிப்படையில் தமிழ் நாடக விழாவைக் கொழும்பில் நடாத்தியது. பிரதேச ரீதியாக நாடகப் போட்டிகளை நடாத்தி, அவற்றில் இருந்து தெரிவுசெய்த பதின்மூன்று நாடகங்கள் தேசிய நாடக விழாவில் இடம்பெற்றன. இவ்வாண்டு முன்னரிலும்விட அதிகமான நாடக மன்றங்கள் போட்டியிற் கலந்து கொண்டன. போட்டியில் வெற்றி பெற்றோருக்கு ஜனாதிபதி விருதுகள், பிரதமர் விருதுகள், ரொக்கப் பரிசில் என்பன கொடுக்கப்பட்டன. இவ்வாறான ஆக்கபூர்வமான ஊக்கங்கள் தமிழ் நாடகத் துறைக்கு எண்பதில் கிடைத்தன.

இவற்றைவிட பல்கலைக்கழகங்கள், கல்லூரிகள் முதலிய வற்றிலுமுள்ள தமிழ் மன்றங்கள் கலைவிழாக்கள், நாடக விழாக்களை நடாத்தி நாடகத்துறையில் ஊக்கம் காட்டி வர லாயின. எண்பதில் கொழும்புப் பல்கலைக் கழக கலைக்கழகத்தின் சார்பில் நடாத்தப்பட்ட தமிழ் நாடக விழாவில் ஆறு நாடகங்கள் போட்டியடிப்படையில் மேடை ஏற்றப்பட்டமையும் அதில் வெற்றிபெற்ற நாடகங்கள் தொடர்ந்து எண்பத்தொன்றில் கொழும்பு மாநகரில் மேடையேற்றப்பட்டு வருகின்றமையும் குறிப்பிடத்தக்கது. கொழும்புப் பல்கலைக் கழக மாணவர்கள் நாடகத்துறையில் முன்னணியில் திகழ்வதோடு தாளலய நாடகத்தில் (இசை நாடகம்) ஆர்வமும் கொண்டுள்ளனர். பொது வாகப் பல்கலைக்கழக மாணவர்களே ஈழத்து நாடகக் கலையை வழி நடத்துகின்றனர் எனலாம்.

இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத்தாபனம் நாடகக் கலையை வளர்ப்பதிலும் அதில் மக்களுக்கு அமோக ஆர்வத்தை ஏற்படுத்துவதிலும் அதிகக்கவனம் எடுத்து வருகின்றது தேசிய சேவையிலும், வர்த்தக சேவையிலும் வழமைபோல் எண்பதிலும், முப்பது நிமிட, பதினைந்து நிமிட தொடர் நாடகங்கள், தனித்தனி நாடகங்கள் என்பன இடம்பெற்றன. அத்தோடு வானொலிக் கலைஞர்களின் நாடக நிகழ்ச்சிகளும் வெளி அரங்குகளிலும் செல்வாக்குப் பெற்றிருந்தன. இவ்வாறாக எண்பதில் ஈழத்தில் நாடகக் கலை புது வளர்ச்சியும் வேகமும் பெறுவதாயிற்று

**எண்பதில் கவிதை இலக்கியம்**

ஆயிரத்துத்தொள்ளாயிரத்து எண்பதில் நான்கு கவிதைத் தொகுதிகள் வெளிவந்தாலும் இவ்வாண்டில் பத்திரிகை களிலும், சஞ்சிகையிலும் வெளிவந்தனவும், வெளிவராதனவுமாக எண்ணற்ற கவிதைகள் எழுதப்பட்டன.

கவிதை ஒரு தொடர்புச் சாதனம். அதன் மூலமாகக் கவிஞன் பிறருடன் அநுபவங்களைப் பகிர்ந்து கொள்கின்றான்; உணர்வு களையும் கருத்துப் படிமங்களையும் உணர்த்துகின்றான் அவ்வாறு செய்யும் பொழுதே தனிமனிதனது அனுபவப்பொறி பொதுமை பெற வாய்ப்பு உண்டாகின்றது. உவமை, உருவகம் முதலியன இதற்கு ஏதுக்களாய் அமைகின்றன. இதன் அடிப்படையில் நோக்கும்போது எண்பதில் வெளிவந்த கவிதைத் தொகுப்புக்கள் கவிஞர்களின் சமூகநோக்கைக் காட்டுவனவாகவும் சமூக சீர் திருத்தக் குறிக்கோளுடையனவாகவும் காணப்படுகின்றன. யாழ்ப் பாணத்துக் கவிஞர் கல்வயல் வே. குமாரசாமி அவர்களின் கவிதை கள் '**சிரமம் குறைகின்றது**' என்றதொகுப்பாக வெளிவந்துள்ளது. மக்களிடை வழங்கும் பேச்சுவழக்குப் பிரயோகங்களைக்கூட யாப்பின் வரம்புகளுக்கு உட்படக் கோவைசெய்து எடுப்பாகவும் எழிலாகவும் பொருந்தும் வண்ணம் பாடியிருக்கிறார். ஓசைப் பெருக்கும் தெளிவும் நிறைந்த கவிதைகளே இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன இவரது பாடல்களில் கவிஞரின் இலட்சிய வேட்கையைக் காணலாம். சிறுமை கண்டு பொங்கிய பாரதியின் வழித்தோன்றல் குமாரசாமி என்று கூறத்தக்க அளவுக்கு இவரது பாடல்கள் வேகம் கொண்டனவாக அமைந்துள்ளன.

கவிதைக்குத் தெளிவும் ஓசைச்சிறப்பும் அவசியமாகின்றன. பேச்சு மொழியில் ஓசைச்சிறப்பு இருந்தாலும் அது சகல இடத்து

மக்களுக்கும் புரியுமாறில்லை. எனினும் பேச்சு வழக்கினைக் கையாண்டு, பல கவிஞர் பரிசோதனைகள் புரிந்துவெற்றியும்கண்டனர். இவ்வரிசையில் யாழ்ப்பாணப் பேச்சு வழக்கைக் கையாண்ட கவிஞர் குமாரசாமி, அதில் வெற்றியும் கண்டுள்ளார் என்பதற்கு அவரது 'சகுனம்', 'புழுத்த சமுதாயம்' என்ற இரு கவிதைகளும் சான்றாகின்றன.

பாரதி மரபில் வரும் நவ தமிழ்க் கவிதைப் பரப்பில் சமுதாயப் பிரக்ஞை பொதுளிய பாடல்களுக்கு தனியானதோர் இடமுண்டு. நமது கவிஞரும் சமுதாய அநீதிகளையும் கொடுமைகளையும் சுரண்டலையும் கண்டு கொதித்துப் பாடியிருக்கிறார் ''அழைத்துச் செல்லும்'', ''அழிவொன்று தேவை'', ''காலம் வரும்'', 'மௌன சத்தியம்'', ''வாழ்வு'' முதலிய கவிதைகளில் ''முழுதான புதியதோர் உலகமைக்க முன்னின்றே உழைப்போம் வாரீர்'' என்று கூவும் குரலையும் நாம் தரிசிக்கலாம். கொடுமை அழிக்கும் காலம் ஒன்று வரும்' என்ற உறுதியான நம்பிக்கை கலைஞரிடத்தில் நிலை கொண்டுள்ளமை கவனிக்கத்தக்கது. செழுமையான சொல்வளம், தமிழ்மொழியோடியைந்த யாப்புக் கோலங்கள், உள்ளத்தை ஈர்க்கும் ஒத்திசை, உறுதியான நம்பிக்கை, உலகளாவிய நோக்கு இவை உயர் கவிதைக்கு இன்றியமையாதவை. நமது கவிஞரது ஆக்கங்களில் இப்பண்புகள் போதியஅளவு பொருந்தியுள்ளன என்று பேராசிரியர் க. கைலாசபதி அவர்கள் அந்நூலின் முன்னுரையிற் குறிப்பிட்டுள்ளமை நோக்கற்பாலது.

**''வானம் சிவக்கிறது''**, **''ஒரு தோழனின் காதல் கடிதம்''** என்ற தொகுதிகளை வெளியிட்ட புதுவை இரத்தினதுரை, **'இரத்த புஷ்பங்கள்''** என்ற கவிதைத் தொகுதியை எண்பதில், வெளியிட்டார். வேகமாகவும். வெட்டும் வாள்போல் வீரமாகவும் போராட்டம் மூலமாகவே இன்றைய கொடுமைகளுக்கு முடிபு காண முடியும் என்ற துடிப்போடும் பாட்டு எழுதியுள்ளார். தன் கவிதை யாருக்காக என்றும், நான் ஏன் கவிதைபாடத் தொடங்கினேன் என்றும் கூறும்போது,

'பற்றி எரிகின்ற பசி வயிற்றினோடு
பல குடும்பங்கள் என்னயலிற் பசியால் வாடக்
குற்றமென்ன அவர் செய்தார் என்றே கொஞ்சம்
கூடுதலாகச் சிந்தித்தேன் கவிஞனானேன்'

என்று பாடுகின்றார். இவரது பாடல்களில் புரட்சிக்கவியும் செறிந்து காணப்படுகின்றமைக்கு உதாரணமாக வரும் பாடலைக் குறிப்பிடலாம்:

'அலையடிக்கும் கடலுடனே முகிலைப் பார்த்து
ஆடி வரும் தென்றலுடன் நிலவைப் பார்த்து
சிலைகளுடன் பெண்களையும் பார்த்துப் பார்த்து
சிந்திய உம் கவிதைகளை நெருப்பில் போடும்'

எண்பதில் புலவர் பாண்டியனார் காலமானபோது அவரது நினைவாஞ்சலிக்குழு அவர் பாடிய'' திருவருட் செற்றம்'', ''நெடுமால்பெயர்ஆயிரம்'' என்ற இரு நூல்களையும் வெளியிட்டனர். இவர் தமிழுக்கும் சைவத்திற்கும் உழைத்தவர். கொழும்பில் வாழ்ந்த பாண்டியனாரிடம் தமிழறிந்தோர் தம் ஐயங்களைத் தீர்த்துக் கொண்டனர் இக்கவிதை நூல்கள் சைவத்தையும், வைஷ்ணவத்தையும் பாடுவன

''குறுங்காவியம்'' என்ற தலைப்பின்கீழ் தொடர் கவிதை எழுதும் மரபும் எண்பதில் காணப்பட்டது. இதற்குத் தினகரன் வார மஞ்சரி களம் அமைத்துக் கொடுத்தது. இக்காலத்தில் துரை எங்கரசு என்ற கவிஞர் 'தோப்பினிலே' என்ற குறுங்காவியத்தை எழுதி வந்தார்.

**புதுக் கவிதை**

யாப்பில்லாப் புனைவுகளே இக்காலத்தில் புதுக்கவிதை என்று சொல்லப்பட்டு பத்திரிகைகளாலும், சஞ்சிகைகளாலும் வர வேற்றுப் பரப்பப்பட்டு வருகின்றன. யாப்பின்மையைக் கவிதைக் கலையின் இன்றியமையாத இலக்கணமென நாட்ட முயலும் புதுக் கவிதையாளருட் பலர், வரலாற்றின் தொடர்ச்சியை மறுப்பது ஒரு புறமிருக்க, தம் மொழி வறுமை காரணமாகவே இவ்வாறான வறிய, வரட்சி மிக்க கோட்பாடுகளைத் தஞ்சம் புகுகின்றனர் என்று கூறுதல் தகும். இத்தகைய பொதுவான கருத்து ஈழத்துப் பெரும்பாலான பெரும் கவிஞர்களிடையே நிலவி வருகின்றது. எண்பதில் பத்திரிகைகளுக்குப் புதுக்கவிதை அனுப்பியோரிற் பலர் விளம்பரம் கருதியோராவர். அவர்களை நாம் கவிஞர்கள் வரிசையில் சேர்க்கலாமா? அல்லது புதுக்(வித க் கவிதை படைத்த புதுமைக் கவிஞர்கள் என்று சொல்லலாமா? புதுக்கவிதையின் வளர்ச்சி எண்பதில் வேகம்பெற்றுக் காணப்பட்டது. ஆனால் கவிதை மரபு தெரியாதவர்களும் புதுக்கவிதை எழுத ஆரம்பித்து

விட்டார்கள். மரபை மீறிச் செல்லவேண்டும், எழுத வேண்டும் என்று நினைப்பது தவறு. மரபை மீறுவதாயின் மரபைத் தெரிந்து கொள்ளவேண்டும்தானே! சிலர் புதுக்கவிதையை அற்புதமாக எழுதுகிறார்கள். ஆனால் பழமொழிகளும் நாட்டார் பாடல் களும் புதுக் கவிதைகளாக மாறும் பரிதாபத்தை என்னென்று சொல்வது?

**எண்பதில் இலக்கிய விமரிசனம்**

ஈழத்து இலக்கிய வரலாற்றில் 1956க்குப் பின்பு ''தேசிய இலக் கியம்'', ''ஈழத்து இலக்கியம்'' என்ற இலக்கியக் குரல்கள் தொனித்ததன் பயனாகத் தத்துவார்த்த ரீதியான திறனாய்வு தோன்றத் தொடங்கலாயிற்று. அதற்கு முற்பட்ட காலங்களில் தரமான ரசனை இலக்கிய விமரிசகர்களே காணப்பட்டனர். ஐம்பத்தாறுக்குப் பின்பு காணப்பட்ட அரசியல் சக்திகளும் இலக் கிய ஆக்கங்களும் ஆற்றல்மிக்க இலக்கிய விமர்சகர்களைத் தோற்றுவித்தன. இவ்வரிசையில் க. கைலாசபதி, பிரேம்ஜி, கா. சிவத்தம்பி, கே எஸ். சிவகுமாரன், சண்முகலிங்கம், எஸ்.எம்.ஜே. பைஸ்தீன் தெளிவத்தை ஜோசேப், க சச்சிதானந்தன் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

இவ்வாண்டில் குறிப்பாக நாடகத் துறையில் காணப்பட்ட வளர்ச்சியின் எதிரொலிப்பாக விமர்சகர்களுடைய கவனம் நாடகத் துறையில் திசை திரும்பியிருந்தது. கலாச்சாரப் பேரவையின் நாடகவிழா விமரிசனங்கள் சகல பத்திரிகைகளிலும் காரசாரமான முறையில் வெளிவந்து கொண்டிருந்ததோடு, நாடகக் கலைஞ ரிடையே பெரும் பரபரப்பையும் ஏற்படுத்தின. இதுபோன்றே இலங்கையின் எப்பாகத்திலும் நாடகம் மேடை ஏற்றபட்டாலும் அவை விமரிசனத்திற்குள்ளாயின. இத்தகைய நாடக விமரிசனங் களின் மூலம் எண்பதில் ஈழத்தில் நாடகக்கலை துரித வளர்ச்சி பெறுவதாயிற்று.

பத்திரிகைகளில் நூல் விமரிசனம் செய்தோர்களில் கே.எஸ் சிவகுமாரன், க. சச்சிதானந்தம், நா. சுப்பிரமணியம், இ. பால சுந்தரம், தெளிவத்தை ஜோசேப் முதலியோரைக் குறிப்பிடலாம். விமரிசனத்துறை மூலம் ஈழத்து இலக்கியம் கலை முதலியன நல்ல முறையில் நெறிப்படுத்தப்பட்ட நிலையினை எண்பதில் காண்கி றோம்.

விமரிசனத்தைக் கட்டுரை இலக்கியத்தில் அடக்குவதா? அல்லது தனியாக வகுப்பதா? கட்டுரை இலக்கியம் என்று ஒன்று தமிழில் இருக்கிறதா? அப்படியாயின் அதுபற்றி இலக்கிய வர லாற்றாசிரியர்கள் விரிவாகவோ அல்லது ஒரு வரியிலோ ஏன் எழுத வில்லை என்ற ஒருவரின் கேள்விக்கு கே.எஸ். சிவகுமாரன் 'கட்டுரை' இலக்கியம்' தமிழில் இருப்பது பற்றிக் குறிப்பிட்டு விளக்கம் கொடுக்கிறார் (வீரகேசரி 3-3-80). இலக்கியக் கட்டுரை களைக் 'கட்டுரை இலக்கியம்' என்பதா என்பது இன்னெரு கேள்வி. இலக்கியம் பற்றிய கட்டுரைகளை மாத்திரம் இலக்கியம் என்பதா? அல்லது இலக்கியப்படைப்புக் கொடுக்கும் அறிவும் அநுபவமும் கலந்த சுவையைத் தரும் கட்டுரையை இலக்கியக் கட்டுரை என்பதா? இவையாவும் விமரிசிக்கப்பட வேண்டியவை. இத் தகைய இலக்கிய சர்ச்சைகளும் எண்பதில் இலக்கியத் திறனாய் வாளர்களிடமும், விமரிசகர்களிடமும் காணப்பட்டமையும் குறிப் பிடத்தக்கது.

**எண்பதில் இலக்கிய ஆய்வு நூல்கள்**

பல்கலைக்கழகப் பேராசிரியர், விரிவுரையாளர், தமிழ்ப் பண்டிதர், கல்லூரி ஆசிரியர், தமிழ் அறிஞர் என்ற வரிசையில் பலர் இவ்வாண்டில் இலக்கிய ஆய்வு நூல்களை வெளி யிட்டுள்ளனர். இவற்றுட் சில நூல்கள் பிரசுரப் பிரச்சினையின் காரணமாக தமிழகத்தில் வெளியிடப்பட்டன. இத்தகைய நூல்கள் இங்கு கிடைப்பதும் அரிது. இவ்வாறு வெளிவந்த நூல்களில் பல, கட்டுரை நூல்களாகவே காணப்படுகின்றன. இவற்றுட் சிலவற்றை இங்கே நோக்குவோம்!

**கம்பராமாயணக் காட்சிகள்**

ஆறுமுகநாவலர் காட்டிய வழியிலே, அதே பாரம்பரியத்தில் தமிழ்த்தொண்டு புரிந்து வருபவர் பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளை. அவர்களின் இலக்கியப்புலமை கண்டு, யாழ்ப்பாணப் பல்கலைக்கழம் அவருக்கு இலக்கிய கலாநிதிப் பட்டம் (D. Lit) வழங்கிக் கௌரவித்தது. பழந்தமிழ் இலக்கியங்களிலும், காப்பியங் களிலும் ஈடுபாடு கொண்ட பண்டிதமணி அவர்கள் காலந் தோறும் அந்நூல்கள் பற்றிய அளவிறந்த கட்டுரைகளைப் பத்திரிகைகளுக்கு எழுதினார்கள். கம்பராமாயணம் பற்றி எழுதிய கட்டுரைகளில் தாடகை வதத்துடன் தொடர்புடைய முப்பத் தெட்டுக் கட்டுரைகளைத் தொகுத்து முத்தமிழ் வெளியீட்டுக் கழகத்தினர் ''கம்பராமாயணக்காட்சி'' என்ற நூலாக வெளி யிட்டனர். பண்டிதமணியின் உரைநடை தனிச்சிறப்பு வாய்ந்தது.

'எமது கலாநிதி அவர்கள் தமிழ் இலக்கியங்களிலே மூழ்கியிருந்த போது அதற்கேற்ற ஒருநடை அவருக்கு கைவரப் பெற்றிருந்தது. இலக்கியப் பாடல்களை விளக்கமுற்படும்போது, கண்ணப்பன் தான் சுவைத்துப் பார்த்துச் சிவனுக்கு இறைச்சியைப் படைத்தது போல பண்டிதமணியும் அப்பாடற்சொற்கள் ஒவ்வொன்றையும் தாம் சுவைத்துச் சுவைத்தே எமக்கு வழங்கினார்'' என அவரது நடைச்சிறப்புப் பற்றி அ. சண்முகதாஸ் அந்நூலிற் கூறுகின்றார். பண்டிதமணியின் உரைநடையில் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் களிநடம் புரியும். குறிப்பாக மு. வ. வின் நடையைப் போன்று பண்டிதமணியின் உரைநடையிலும் திருக்குறளின் தனி ஆதிக்கம் காணப்படும். அவரது உரைநடைக்கு ஆரமாக ஆங்காங்கே பழமொழிகளும் கையாளப்பட்டிருக்கும்.

### தமிழ்மறை விருந்து

பண்டிதர் க. பொ. இரத்தினம் தமிழ்மறைக் கழகம் நிறுவி. திருக்குறளைப் போதிக்க ஓர் இயக்கமே நடாத்தி வருகின்றார் அதன் விளைவாகப் பல நூல்களை, கட்டுரைகளை, மகாநாடுகளை. ஈழத் தமிழ்மக்கள் கண்டனர். இதன் தொடர்பாக க.பொ. இரத்தினம் அவர்கள் எண்பதிலும் பதினாறு திருக்குறள் பற்றிய கட்டுரைகளை எழுதி, 'தமிழ்மறை விருந்து' என்ற பெயரில் வெளியிட்டார். இந்நூல் திருக்குறள் கூறும் நன்னெறிகளை மக்களது வாழ்க்கையுடன் ஒப்பிட்டு அறநெறி போதிப்பதாக அமைகின்றது. ஈழத்துக் கட்டுரை இலக்கிய வரிசையில் இந்நூலுக்குத் தனியிடமுண்டு.

### வன்னிவள நாட்டுப் பாடல்கள்

ஈழத்தில் நாட்டார் பண்பாட்டியல் பற்றிய விழிப்புணர்ச்சி கடந்த சகாப்தமாக வேகம் பெற்று வருகிறது. அறுபதுகளில் பல தரப்பட்ட தொகுப்புநூல்களும், எழுபதுகளில் அவை பற்றிய ஆய்வும் நடைபெற்றன. எண்பதில் வவுனியா மாவட்டத்தில் வழக்கிலுள்ள நாட்டார் பாடல்களை செ. மெற்றாஸ்மயில் சேகரிக்க, அவற்றை 'முல்லை இலக்கிய வட்டத்தினர்' வெளியிட்டனர். இத்தொகுப்பிலே பண்டிப்பள்ளு, குருவிப்பள்ளு முதலியனவும் பல்வேறு தெய்வங்களின் மீது பாடப்பட்ட வழிபாட்டுச் சிந்துப் பாடல்கள், வேலப் பணிக்கன் ஒப்பாரி (Ballad Songs) மற்றும் கும்மி, வசந்தன் முதலான பாடல்களும் இடம் பெற்றுள்ளன. வன்னிப் பிரதேச மக்களது வாழ்வில் மலர்ந்து,

இன்று வழக்கருகிக் காணப்படும் இப்பாடல்களுக்கு நூலுருக் கொடுத்தமை சிறப்பான பணி என்றே கூறவேண்டும்.

**மாருதப்புரவல்லி கப்பற்பாட்டு**

மறுமலர்ச்சிப் பாதையில் மக்கள் கலைகள் என்ற தொடரில் சிறு நூல்களை எழுதிவரும் த. சண்முகசுந்தரம் அவர்கள், யாழ்ப்பாணப் பகுதியில் வழங்கும் மாருதப்புரவல்லி கப்பற்பாட்டைப் பதிப்பித்து அதற்கு இலக்கியக் குறிப்புகளடங்கிய ஒரு முன்னுரையும் எழுதியுள்ளார். அம் முன்னுரையில் கிராமிய இசையின் முக்கியத்துவம், மாருதப்புரவல்லிக் கப்பற்பாட்டு, பழந் தமிழகத்தில் நெய்தல் நிலமக்கள், ஈழத்தில் நெய்தல்நில மக்கள், வடபருத்தித் துறைமுகங்களின் வீழ்ச்சி, கடல் சார்ந்த வாழ்க்கை, மாருதப்புரவல்லி கதை முதலிய விடயங்கள் பற்றிய தகவல் களைத் தந்திருக்கிறார். இச்சிறுநூல் யாழ்ப்பாணப் பகுதியின் நாட்டார் பண்பாட்டியல் பற்றிய ஆய்வுக்குத் துணையாகக் கூடிய தாகும்.

**மட்டக்களப்பு மக்கள் வளமும் வாழ்க்கையும்**

இந்நூலிலே பதினொரு அறிஞர்களின் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. மட்டக்களப்பு மாநிலத்தின் வரலாறு 'சமூகம்' சமயம், கலைகள், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், சைவாலய வரலாறு, மட்டக்களப்புத் தமிழ் முதலான விடயங்கள் பற்றிய கட்டுரைகள் இந்நூலிலே திரட்டித் தரப்பட்டுள்ளன.

**வையாபாடல்**

பழந்தமிழர் நாகரிகத்தை வரலாற்று முறைப்படி அணுகி அறிந்துகொள்ளும் ஆவல் அறிஞரிடையே இன்று மேலோங்கி யுள்ளது. அப்பின்னணியில் ஈழத்துப் பழந்தமிழரது வரலாறு கூறு கின்ற இந்நூலைக் கொழும்புத் தமிழ்ச்சங்கம் பதிப்பித்துள்ளது. க. செ. நடராசா அவர்களின் முதுகலைமாணிப் பட்ட ஆய்வு நூலாகவே இது வெளியிடப்பட்டுள்ளது.

**சஞ்சிகைகளும் பத்திரிகைகளும்**

சஞ்சிகைகளும் பத்திரிகைகளும் காலத்தின் போக்கை ஒட்டிக் கருத்தின் வளர்ச்சிக்கேற்ப, எளிய நடையில் மெருகேற்றி, எண்ணங் களை வெளிப்படுத்தப் புதிய சொற்களையும் கையாண்டு தமிழை வளமாக்குவதில் அதிக ஈடுபாடு காட்டி வருகின்றன. எண்பதில்

சுமார் இருபது இலக்கிய சஞ்சிகைகள் வெளிவந்தன. 'இந்தியாவி லிருந்து கட்டுப்பாடின்றிப் பத்திரிகைகளும் சஞ்சிகைகளும் வந்து குவிந்து ஈழத்துத் தமிழ் இலக்கிய சஞ்சிகை வளர்ச்சிக்குப் பாதிப்பைக் கொடுத்தன. இதனால் இந்திய ஏகபோகப் பத்திரிகை களின் கடும்போட்டிக்கு முன்னால் தாக்குப்பிடிக்க முடியாமல் சில சஞ்சிகைகள் ஓரிரு இதழ்களோடே நின்று விட்டன. இவற்றை வென்று வெளிவரும் சஞ்சிகைகளும் உயிருடன் பல்லாடுகின்றன'' என்று கூறும் பிரேம்ஜி அவர்களின் கருத்தையும் ஈண்டு கருத்திற் கொள்ள வேண்டும்.

மல்லிகை, அலை, சமர், அனல், சுடர் முதலான பத்திரிக்கை களில் இலக்கியச் சர்ச்சைகளும், காரசாரமான இலக்கிய விமரி சனங்களும் இடம்பெற்றன. இப்பத்திரிகைகள் நல்ல நோக்கங் களுடன் இயங்கின. சமர் என்ற பத்திரிகையின் நோக்கத்தினை உதாரணமாகக் காட்டலாம்: ''ஆரோக்கியமான சூழ்நிலையில் விவாதங்களையும், விமரிசனங்களையும் வழிநடத்தல், திறந்த மனப்பான்மை கொண்ட விசாரணைகளையும், சுயபரிசீலனை களையும் வரவேற்றல், அறிவு சார்ந்த தளத்தில் நின்று விமரிசன பூர்வமாகத் தங்கள் பார்வையை முன்வைக்க விரும்புவோரது கலை இலக்கிய முயற்சிகளை அரசியல் சமூகத் தளத்திற்கு நகர்த் திச் செல்லுதல்''.

இந்த இலக்கியப் பத்திரிகைகளில் அரசியல் சிந்தாந்த ரீதியி லான பத்திரிகைகள், தீவீரமான விமரிசனத்துறையில் நாட்டம் கொண்டு இருந்தன. இவை அரசியல் சித்தாந்த விளக்கம், கலை இலக்கிய விளக்கம், மண் வாசனை, சுதேசியம் என்ற பண்பு களையும் வளர்த்து வந்தன.

வார இறுதிப் பத்திரிகைகளில் சபா ஜெயராசா, ஆராஅமுதன், முல்லைமணி, க. சச்சிதானந்தன் முதலியோர் தொடர்ந்து இலக்கிய ஆய்வுக் கட்டுரைகளை எழுதி வந்தார்கள். 'இலக்கிய உலகம்' என்ற தலைப்பில் தினகரனில் எழுத்தாளர்களைப் பற்றிய தகவல்கள் வாரந்தோறும் கொடுக்கப்பட்டன. அப்பகுதியில் இலக்கியத் தகவல்கள், எழுத்தாளர்களிடையே நிகழ்ந்த இலக்கிய சித்தாந்த ரீதியான சர்ச்சைகள், விமரிசனக் கடிதங்கள் முதலியன வெளிவந்தன. தினகரனில் அந்தனி ஜீவா ''சில நேரங் களில் கலைஞர்கள்'' என்ற தலைப்பில் சினிமாக் கலையுலகச் செய்திகளையும் நாடகக் கலைஞர்கள் பற்றியும் எழுதிக் கொண்

டிருந்தார். வீரகேசரி இராஜகோபால் ஈழத்தின் தலைசிறந்த எழுத்தாளர்கள் —கலைஞர்களைச் சந்தித்து அவர்களைப் பற்றியும் எழுதிக் கொண்டிருந்தார்.

மொழிபெயர்ப்புக் கலை, இலக்கியப் படைப்புக்களும் பத்திரிகைகளில் இடம்பெறலாயின. தம்பி ஐயா, ஷம்ஸ், பைஸ்தீன், த. கனகரத்தினம் முதலியோரை இவ்வரிசையிற் குறிப்பிடலாம். தமிழ் சிங்கள இன ஒற்றுமைக்குக் கலாச்சாரப் பரிவர்த்தனை மிகவும் இன்றியமையாத சாதனமாகும். இதனைப் பத்திரிகைகளும் ஊக்கப்படுத்தி வந்தன. இவ்வகையில் சிங்கள சினிமா. நாவல், நாடகம், சிறுகதை பற்றிய தமிழாக்கங்களும் விமரிசனங்களும் தமிழில் பத்திரிகையில் வெளிவரலாயின. இவ்வாறாக ஈழத்துத் தமிழ் இலக்கியப் போக்கில் எண்பதில் பெரும்பணியைப் பத்திரிகைகளும், சஞ்சிகைகளுமே மேற்கொண்டன என்று துணிந்து கூறக்கூடியளவிற்கு அவற்றின் பணிகள் அமைந்தன.

**எண்பதில் நிறுவன அடிப்படையான தமிழ் முயற்சிகள்**

இலங்கையின் கலை இலக்கிய வளர்ச்சிக்கென அரசாங்கம் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்திரண்டில் இலங்கைக் கலைக் கழகம், இலங்கைச் சாகித்திய மண்டலம் என இரு நிறுவனங்களைத் தாபித்து அவற்றை நெறிப்படுத்தி வந்தது. பின்பு அவ்விரு நிறுவனங்களும் ஒன்றாக இணைக்கப்பட்டு இலங்கை கலாச்சாரப் பேரவை என்ற பெயரில் பல குழுக்களின் அடிப்படையில் இயங்கி வந்தன. இக்குழுக்கள் இலக்கியம், நாடகம், இசை, நடனம் முதலியனவற்றை வளர்ப்பதில் ஒவ்வோராண்டும் நடவடிக்கைகளை மேற்கொண்டன. அப் பின்னணியில் ஒப்பீட்டாயும்போது, எண்பதில் தமிழ் நாடகக் குழுவே ஆக்கபூர்வமான பணியில் செயற்பட்டது.

கொழும்பு, பேராதனை, யாழ்ப்பாணம் ஆகிய இடங்களிலேயுள்ள பல்கலைக்கழகத் தமிழ் மாணவரின் கலை, இலக்கிய மன்றங்கள் ஆண்டுதோறும் கலை, இலக்கிய சஞ்சிகைகளை வெளியிடுவதிலும், நாடக விழாக்களை நடாத்துவதிலும் ஈடுபட்டு வந்துள்ளன. கொழும்பிலிருந்து ''இளந்தென்றல்'', பேராதனையிலிருந்து ''இளங்கதிர்'', யாழ்ப்பாணத்திலிருந்து ''போதிகை' என்ற சஞ்சிகைகள் வெளிவந்தன கொழும்புத் தமிழ்ச்சங்கம்

எண்பதில் அகில இலங்கை ரீதியாக கவிதை, சிறுகதைப் போட்டி ஒன்றையும் நடாத்தியது. இவ்வகையில் ஒவ்வோராண்டும் பல்கலைக்கழக மாணவர்களின் பங்களிப்பும் ஈழத்தமிழ் கலை இலக்கியத்துறையில் இடம்பெற்றே வந்துள்ளது.

அடுத்ததாக, பல்கலைக்கழகங்களில் தமிழ் ஆய்வு என்ற அடிப் படையில் நோக்கும்போது மேற்குறிப்பிட்ட மூன்று பல்கலைக் கழகங்களிலும் முதுகலைமாணி மாணவர்கள் தமிழியல் பற்றி ஆராய்ந்து வந்திருக்கிறார்கள். முக்கியமாக இவர்களது ஆய்வுகள் ஈழத்து இலக்கியம், மொழி, கலை என்பனவற்றுடன் தொடர் புடையனவாகவே அமையலாயின. அதேபோன்று தமிழ்த்துறைப் பேராசிரியர்களும், விரிவுரையாளர்களும் தமிழ் ஆய்வுக் கட்டுரை களை எழுதியுள்ளனர். குறிப்பாக இவ்வாண்டில் கைலாசபதி அவர்களின் இரு நூல்கள் வெளிவந்துள்ளன.

நிறுவன அடிப்படையில் நோக்கும்போது கொழும்புத் தமிழ்ச் சங்கத்தின் பணியும் குறிப்பிடப்பட வேண்டியதாகும். ஒவ்வோராண்டும்போல எண்பதிலும் நூல் வெளியீட்டு விழா, இலக்கியச் சொற்பொழிவுகள், ஞாயிறுதோறும் பழந்தமிழ் இலக்கிய, இலக்கண வகுப்புக்கள், அகில இலங்கை ரீதியான கட்டுரை, பேச்சுப்போட்டிகள் முதலியவற்றை நடாத்தித் தமிழ் வளர்ச்சிக்குத் தனது பங்கையும் செலுத்தியது.

கொழும்பில் இயங்கும் 'தகவம்' என்ற இலக்கிய வட்டமும் சிறுகதை மதிப்பீடு, நாவல் மதிப்பீடு ஆகிய துறைகளில் ஈடுபட்டு எழுத்தாளர்களுக்கு பரிசில் வழங்கி, அவர்களை ஊக்குவித்து வந்திருக்கிறது.

இலங்கை வானொலியில் வழமைபோல் எண்பதிலும் இலக்கியப் பேச்சுக்கள் நூல் விமரிசனங்கள், கவிதை, சிறுகதை, நாடகம் முதலியன இடம்பெற்றன. தொடர்நாடகங்களின் மூலம் வானொலி இரசிகர்களின் கலை ஆர்வத்தை வளர்க்கும் பணி யினை வானொலி ஆற்றி வருவதாயிற்று. குறிப்பாக இவ்வாண்டில் நாட்டுக்கூத்து, நாட்டார் பாடல் என்பனவற்றுக்கும் வானொலி கவனம் அளித்து வந்தது. பிரதேச அடிப்படையிலான ''குன்றின் குரல்'', ''உதய மஞ்சரி'' முதலான நிகழ்ச்சிகளின் மூலம் மண் வாசனையுள்ள இலக்கிய ஆக்கங்கள் வானொலியில் இடம் பெற்றன. அதேபோன்று ''இளைஞர் வட்டம்'' நிகழ்ச்சியின் மூலம் இளம் எழுத்தாளர்களின் எழுத்தார்வமும் தூண்டப் பட்டது.

இதுபோன்றே ஈழத்து முற்போக்கு எழுத்தாளர்கள் சங்கத்தினரின் இலக்கிய ரீதியான கருத்தரங்குகளும் அவர்களது இலக்கியப் பணிகளும் நிறுவன அடிப்படையில் குறிப்பிடப்பட வேண்டியனவாகும்.

**நிறைவு**

தமிழ் இலக்கிய வரலாற்றிலே எண்பதாம் ஆண்டின் முக்கியத்துவம் பற்றிய மதிப்பீட்டை உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் மேற்கொண்டுள்ளது. அந்த மதிப்பீட்டின் அடிப்படையில் ஈழத்தில் இவ்வாண்டில் மேற்கொள்ளப்பட்ட ஆக்கரீதியான இலக்கிய முயற்சிகள் பற்றிய தகவல்கள் இங்கே தரப்பட்டுள்ளன. இவை பற்றிய முழுமையான மதிப்பீட்டை ஆராயப்புகும் ஆய்வாளருக்குத் துணையாக எண்பதில் ஈழத்தில் வெளியான நூல்கள், சஞ்சிகைகள் பற்றிய விபரமான அட்டவணை இங்கே தரப்பட்டுள்ளது.

## எண்பதில் இலங்கையில் வெளிவந்த தமிழ் நூல்கள்

1 அபுபக்கர், ஏ. எம்., நான் (கவிதை)(சாவகச்சேரி, திருக்கணித அச்சகம், 10-6-80) பக். 60, ரூ 5

2. ———, அறிவியல் வளர்த்த முஸ்லிம்கள் (சாவகச்சேரி, திருக்கணித அச்சகம், 5-10-80) பக். 220, ரூ 20

3. அமுதன், வாழும் வழி (நாடகம்) (கொழும்பு, சிலோன் நியூஸ் பேப்பர்ஸ், 5-3-80).

4. அருளானந்தம், என் வேதமும் நானும் (கொழும்பு, சங்கர் சன்ஸ் அச்சகம், 9-2-80).

5. அன்பு முகைதீன், மாதருக்கு வாழ்வளித்த மகான் (கவிதை, (கல்முனை, குட்வின் அச்சகம், 25-2-80).

6. ஆறுமுகம், எஸ்., திருக்கேதீஸ்வர நாதர் வண்டு விடுதூது (யாழ்ப்பாணம், விவேகானந்தா அச்சகம், 14-11-80) பக். 15, ரூ 3.

7. இரத்தினதுரை (புதுவை), இரத்த புஷ்பங்கள் (கவிதை) (கொழும்பு, மெய்கண்டான் அச்சகம், 14-4-80) பக். 40 ரூ 3.

8. இரத்தினம், க. பொ , தமிழ் மறை விருந்து (யாழ்ப்பாணம், சிறிகாந்தன் அச்சகம்), பக். 120, ரூ ᵔ.

9. ———————, பச்சை மனம் (மேடைப்பேச்சு) (யாழ்ப்பாணம், சைவப்பிரகாச அச்சகம்).

10. இராமநாதன், ரி., இந்து நாகரிகமும் பண்பாடும் (பருத்தித் துறை, ஊழியன் அச்சகம், 28-2-80).

11. இராமையா. எம். எஸ். எம்., ஒரு கூடைக் கொழுந்து (சிறுகதை)(யாழ்ப்பாணம், திருக்கணித அச்சகம் 23-4-80), பக். 124 ரூ 10.

12. கணபதிப்பிள்ளை, சி. பாரத நவமணிகள் பகுதி 2 (இந்து சமயம்) (சாவகச்சேரி, திருக்கணித அச்சகம் 10-10-80), பக். 93, ரூ 6.

13. ———, சைவ நற்சிந்தனைகள், (சுன்னாகம், திருமகள் அச்சகம், 26-3-80).

14. — ——, கம்பராமாயணக் காட்சிகள் முத்தமிழ் வெளியீட்டுக் கழக வெளியீடு, (யாழ்ப்பாணம், ஆசீர்வாதம் அச்சகம்) பக். 199, ரூ 20.

15. — - ——, கோயில் (கொழும்பு, அன்டர்சன் தொடர்மாடி நிரை, சைவ கலாசாலை மன்ற வெளியீடு).

16. கணபதிப்பிள்ளை, எம்., மாரியம்மன் தாலாட்டு (யாழ்ப் பாணம். ஸ்ரீகாந்தா அச்சகம், 14-6-80), பக் 32, ரூ 1-75.

17. கதிர்காமத் தம்பி, வி. ஆர் , ஆபுத்திரனும் அமுதசுரபியும் (கொழும்பு, செட்டியார் அச்சகம், 19-10-80). பக். 137.

18. கல்யாணசுந்தரன், கதிர்காமமும் தெய்வயானை அம்மன தேவஸ்தானம் பற்றிய சிறுவரலாறும், (கொழும்பு, குகன் அச்சகம், 1-10-80) பக். 66, ரூ 10.

19. கனகரத்தினம், ஆர்., மொறிஸியஸ் தீவில் எங்கள் தமிழர் (சுன்னாகம், சக்தி அச்சகம், 28-12-80) பக்கம் 34, ரூ 2.

20. காத்தான்குடி பௌஸ், பா (காத்தான்குடி, பாவலர் பண்ணை வெளியீடு).

21. காமதேவன், காமசாஸ்திரம் பகுதி-1, 11, (கொழும்பு, ஆனந்தா அச்சகம்).

22. ——— காமலீலை (கொழும்பு, ஆனந்தா அச்சகம், 2-6-80), பக். 100, ரூ 5-90.

23. குமாரசாமி, கல்வயல். வே., சிரமம் குறைகிறது, (கவிதை) (சாவகச்சேரி, அறிவழகுப் பதிப்பகம், 15-8-80) பக். 96, ரூ 7.75

24. குலரத்தினம், கே. சி., இந்து நாகரிகம், (யாழ்ப்பாணம் ஸ்ரீசுப்பிரமணிய அச்சகம், 23-8-80, - பக். 292, ரூ 18.

25. கைலாசபதி, க., சமூகவியலும் இலக்கியமும், (சென்னை, நியூசெஞ்சரி புக் கவுஸ் வெளியீடு).

26. ———, நவீன இலக்கியத்தின் அடிப்படைகள் (சென்னை, மக்கள் வெளியீடு).

27. சச்சிதானந்தன், கே., தமிழ் எழுத்தின் வரிவடிவங்கள் மாற்று நோக்கு (யாழ்ப்பாணம், ஸ்ரீகாந்தா அச்சகம் 26-11-80) பக். 24.

28. சண்முகசுந்தரம், த., மாருதப்புரவீகவல்லி கப்பற்பாட்டு (தெல்லிப்பளை, குகன் அச்சகம், 20-11-80), ரூ 4.

29. சதாசிவம், எஸ்., நாணயம் (நாவல்) (யாழ்ப்பாணம் திருமகள் அச்சகம்.

30. சதானந்தன், கே., மட்டம் (சிறுகதைகள்), (திருக்கணித அச்சகம் 21-6-80), பக். 106, ரூ 6.

31. சபாபதி, கொக்கோ விளக்கம் (கொழும்பு, ஆனந்தா புத்தக நிலையம், 28-6-80) பக் 88, ரூ 5. 90.

32. சிவநாதன், ஆர்., நாடகம் நான்கு (சாவகச்சேரி, திருக்கணித அச்சகம் 21-6-80) பக். 106, ரூ 6.

33. சிவநேசராசா, எம். (பதிப்பு) புலவர்மணி கவிதைகள் (மட்டக்களப்பு, கத்தோலிக்க அச்சகம், 20-12-80), பக். 108.

34. சிவராசா, ஏ., எண் சாஸ்திரம் (யாழ்ப்பாணம், கலைவாணி அச்சகம், 26-8-80) பக். 22, ரூ 2.

35. சிவராசா, ஆ., இலங்கையில் அரசியல் திட்ட வளர்ச்சியும் மாற்றங்களும் (கொழும்பு, திருமகள் அச்சகம், 15-8-80) பக். 142, ரூ 12.

36. சிறிதரன், ஈ., பாலர் மணி வாசகம் (யாழ்ப்பாணம், ஸ்ரீசுப்பிரமணிய அச்சகம் 27-10-80), பக். 52, ரூ 4.95

37. சுந்தரராஜன், ஏ. எஸ்., இராமகதை, (யாழ்ப்பாணம், ஸ்ரீசுப்பிரமணிய அச்சகம், 27-10-80) பக் 154, ரூ 6 30.

38. சாமிநாதன், எம். வி. (பதிப்பு) திருக்குறள் விழாச் சிறப்பிதழ் (கொழும்பு, சிலோன் நியூஸ் பேப்பர்ஸ், 13-6-80).

39. செபமாமூலதாசர்சபை, சிந்தனைத்திரட்டு (Biography) (யாழ்ப்பாணம், பஸ்தியான் அச்சகம் 31-10-80) பக். 112, ரூ 8.

40. செபஸ்தியான், ஏ., நாட்டார் கீதங்கள் (சிலாபம், மிகிர அச்சகம், 24-3-80).

41. ஞானசேகரன், ரி., குருதிமலை (நாவல்), (கொழும்பு, வீரகேசரி வெளியீடு, ஏப்ரல், 80) பக். 260, ரூ 6.50.

42. தம்பு, வி., 58 ஆண்டு இல்வாழ்க்கை நிறைவு நூல் (யாழ்ப்பாணம், சக்தி அச்சகம் 16-3-80).

43. திருக்கணித அச்சகம் (பதிப்பு), மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ், (30-6-80) பக். 56.

44. துரைராஜா, என்., ஆணும் பெண்ணும் (கொழும்பு, ஆனந்த புத்தகசாலை, 5-6-80) பக் ரூ 112, 5.90.

45. நடராசா, எவ் எக்ஸ். ஸி. (பதிப்பு), மட்டக்களப்பு மக்கள் வாழ்வும் வளமும் (மட்டக்களப்பு, கத்தோலிக்க அச்சகம் 9-2-80) பக். 171, ரூ 15.

46. ————, நாவலர் பெருமான் வாழ்க்கைக் குறிப்புகள் (களுவாஞ்சிக்குடி, மனேகரா அச்சகம்).

47. நடராஜா, க. செ (பதிப்பு), வையாபாடல் (கொழும்பு கொழும்பு, தமிழ்ச்சங்க வெளியீடு, (16-12-80) பக். 76, ரூ 10.

48. நடராசா, எம். (பத்திரிகை ஆசிரியர்), பொதிகை (யாழ்ப்பாணப் பல்கலைக்கழக வெளியீடு, ஆகஸ்ட் 80) பக். 100.

49. நடராசா., ஸி. (பதிப்பு), கோண்டாவில் நெட்டிலுப்பைப் பிள்ளையார் கோயில் கும்பாபிஷேக மலர் (யாழ்ப்பாணம், சாந்தி அச்சகம் 21-8-80) பக். 98.

50. நல்லரத்தினசிங்கம், பி., கோவும் குயிலும் (வரலாற்று நாவல்), மறுபிரசுரம் (யாழ்ப்பாணம், செட்டியார் அச்சகம், ஜூன் 80), பக். 120,

51. நவரட்ணசாமி, சதா., கிழக்கின் பேரொளி புலவர் மணி (களுவாஞ்சிக்குடி, மனோகரா அச்சகம், 12-2-80) பக் 37, ரூ 2.

52. நவரத்தினம், கே. என்., எண் சோதிட மறுமலர்ச்சி (யாழ்ப் பாணம், டிசெம்பர்.80) பக் 22, ரூ 3.

53. பரஞ்சோதிநாதர், கே. எஸ்., லங்கா சித்தாயுர்வேத வைத் தியக் கல்லூரி பொன்விழா மலர்— 1080 (யாழ்ப்பாணம், தங்கராஜா அச்சகம்).

54. பலாலி சித்திவிநாயகர் ஆலய கும்பாபிஷேக மலர் (சுன்னாகம், சக்தி அச்சகம், 21-8-80) பக் 32.

55. பாண்டியனார், புலவர் , திருவருட் செற்றம் (பாடல்), நெடு மால் பெயராயிரம் (பாடல்), (கொழும்பு, பாண்டியனார் நினைவாஞ்சலிக்குழு வெளியீடு).

56. பார்வதிநாத சிவம், புலவர்., இருவேறு உலகம் (கவிதை) (தெல்லிப்பளை, குகன் அச்சகம், 14-9-80) பக். 72, ரூ 5.

57. பாலசிங்கம், ஏ. எஸ்., தமிழ் தேசிய விடுதலைப் போராட்டம் (கொழும்பு, லக்ஷ்மன் அச்சகம், 20-8-80).

58. பூலோகசிங்கம், பொ., (பதிப்பு) பாவலர் சரித்திர தீபகம் 11 (கொழும்பு தமிழ்ச் சங்க வெளியீடு, திருமகள் அச்சகம், 20-1-80) ரூ 20.

59. மதுரம், புள்ளி (சிறுவர் கதைகள்). (கொழும்பு, எம் டி. குணசேனா வெளியீடு, 30-9-80) பக். 12, ரூ 10.50

60. முத்துலிங்கம், எஸ்., கல்வி உளவியல் (கொழும்பு, ஆசீர் வாதம் அச்சகம்) பக் 468.

61. முத்தையா, நா., ஈழத்துச் சித்தர்கள் (நாவலப்பிட்டி, ஆத்ம ஜோதி அச்சகம், 13-12-80) பக் 161, ரூ 10.

62. மெற்றாஸ்மயில், செ. (தொகுப்பு) வன்னிவள நாட்டுப் பாடல்கள், முல்லை இலக்கிய வட்ட வெளியீடு, (யாழ்ப் பாணம், செட்டியார் அச்சகம், ஏப்ரல், 1980) பக். 130, ரூ 15.

63. மொக்வவ், அப்துல்லா., சோவியத் யூனியனில் முஸ்லிம்கள் (கொழும்பு, பிரகதி பிரஸ், மார்ச் 80)

64. லோகநாதன், கே., இலங்கையின் பொருளாதாரம் (யாழ்ப் பாணம், விவேகானந்தா அச்சகம், 9-1-80).

65. வாஸ், கே. வி. எஸ்., மலைக்கன்னி (நாவல்), (கொழும்பு, எக்ஸ்பிரஸ் நியூஸ் பேப்பர்ஸ், ஆகஸ்ட் 80, மறுபிரசுரம்) பக. 290, ரூ 7 90

66. ———, சிவஜோதி (நாவல்), (கொழும்பு, வீரகேசரி வெளியீடு, 1-10-80) பக் 208, ரூ 7.90.

67. வினோதன், லீலா., மனைவியைத் தெரிவது எப்படி? (எண் சாஸ்திரம்), (சிலாபம், சென் பீற்றர் அச்சகம், 28-6 80).

68. வெள்ளி விழா சிறப்பு மலர், சைவ சமய அபிவிருத்திக் கழகம், (யாழ்ப்பாணம். செட்டியார் அச்சகம்),

69. வைத்திலிங்கம், கே., ஊஞ்சல், (யாழ்ப்பாணம், நிரஞ்சனா அச்சகம் 1-1-80).

70. வைரமுத்து, எம்., என் நெஞ்சில் இடம் கொண்ட பெரியார்) (யாழ்ப்பாணம், ஸ்ரீசண்டகானந்தா அச்சகம், 10-6-80, பக். 124, ரூ 10.

71. றிலுவான், ஏ. ஸி. எம்., நேர்வழி (இஸ்லாம்) (பஸ்ஸியால, ரகுமான் அச்சகம் 10-10 80) பக்கம் 36, ரூ 2.

72. ஜெகநாதன், காவலூர்., ஈழத்துக் சிறுகதை மஞ்சரி (யாழ்ப் பாணம், விவேகானந்நா அச்சகம், 19-8-80), பக். 55.

73. ஜோசேப், தெளிவத்தை, நாமிருக்கும் நாடே (சிறுகதைத் தொகுதி), (யாழ்ப்பாணம், வைகறை வெளியீடு).

74. ஸ்ரீகாந்தா அச்சகம் (பதிப்பு), அவ்வையார் அருளிய நீதி நூல்கள் (யாழ்ப்பாணம், 16-1-80).

**எண்பதில் ஈழத்துச் சஞ்சிகைகள்**

1. அக்கினிக் குஞ்சு, ஏ. மொஹிடீன் (கொழும்பு, செட்டியார் அச்சகம்

2. அலை, எம். புஷ்பராசன் (மாத வெளியீடு), (சாவகச்சேரி, திருக்கணித அச்சகம்).

3. அனல், எம். இன்பரூபன் (யாழ்ப்பாணம், குமாரி அச்சகம் )

4. ஆத்மஜோதி, நா. முத்தையா (மாத வெளியீடு (நாவலப் பிட்டி, ஆத்மஜோதி அச்சகம்).

5. ஆசிரியன் (மாத சஞ்சிகை), (யாழ்ப்பாணம், ஆர்ட்ஸ் பிரஸ்).

6. இந்து, ஜெ. நாகேஸ்வர சர்மா, (யாழ்ப்பாணம் , நிரஞ்சனா அச்சகம்).

7. இடதுசாரி, ஏ.கே. அண்ணாமலை (யாழ்ப்பாணம், செட்டி யார் அச்சகம்).

8. இலங்கைத் தூதன், டி. எஸ். ஆரியரத்தினம் (நுகேகொட, லக்பகான பிரஸ்).

9. இலட்சிய இளைஞன், ஏ ஜி. இராசேந்திரன் (மட்டக்களப்பு கத்தோலிக்க அச்சகம்).
10. இஸ்லாமிய ஆசிரியன், ஏ. எம். கே. அகமட் (நீர்கொழும்பு, இஸ்லாமி பன்ஸ் பிரஸ்).
11. உதயசூரியன், கே. க. யோகநாதன் (யாழ்ப்பாணம், வட மாநில அச்சகம்).
12. உள்ளம், பட்டிருப்பு மகா வித்தியாலயம் (மட்டக்களப்பு கத்தோலிக்க அச்சகம்).
13. கதம்பம், கே. வி. எஸ். மோகன் (கொழும்பு, இராஜேஸ்வரி அச்சகம்).
14. காந்தீயம், எஸ். கே. வேலாயுதபிள்ளை (கொழும்பு, சங்கர் அன் சன்ஸ் அச்சகம்)
15. கீதா, ஜோ ஜீ. ஜெயசீலன், (கொழும்பு, சங்கர் அன் சன்ஸ் அச்சகம்).
16. சமர், டானியல் அன்ரனி (யாழ்ப்பாணம், திருக்கணித அச்சகம்).
17. சிரித்திரன், சி. சிவஞானசுந்தரம் (யாழ்ப்பாணம், கபீர் அச்சகம்).
18. சுடர் 1980, பலாலி ஆசிரியர் கல்லூரி (யாழ்ப்பாணம் செட்டியார் அச்சகம்).
19. செங்கொடி, இலங்கை தோட்டத்தொழிலாளர் சங்கம் (மஸ்கெலியா, மஸ்கெலியா அச்சகம்).
20. சோதிடமலர், கே. சதாசிவ சர்மா (சாவகச்சேரி திருக்கணித அச்சகம்).
21. சோசலிசம், இலங்கை சோவியத் நட்புறவுக் கழகம், (கொழும்பு).
25. சோவியத்நாடு, யு. எஸ். எஸ். ஆர். தகவல் நிலையம் (கொழும்பு, அட்கின்ஸ்பென்ஸ்).
23. தமிழன் குரல், எஸ். பாலசிங்கம் (யாழ்ப்பாணம், ஸ்ரீ பார்வதி அச்சகம்).
24. திருவருள், ப. சதாசிவம் (கொழும்பு விபுலானந்தா அச்சகம்).
25. தீர்த்தக்கரை, எல். சாந்திக்குமார் (யாழ்ப்பாணம் விவேகானந்தா அச்சகம்).
26. தூதன், ஈ. என். லோறன்ஸ் (கொழும்பு சுதந்திரன் அச்சகம்).
27. தேன்கூடு, நெல்லை நடேசன், (பருத்தித்துறை).

28. தேன்மதி, மருதூர்வாணன் (தேத்தாத்தீவு, மனோகரா
29. தொடுவானம், வண எஸ். டபிள்யூ அரியராஜா, (யாழ்ப்பாணம், ஆசீர்வாதம் அச்சகம்).
30. தொண்டன், வண. ஏ. அழகேசன் (மட்டக்களப்பு, கத்தோலிக்க அச்சகம்).
31. தொழிலாளி, எஸ். தியாகராசா, (யாழ்ப்பாணம், நாவலர் அச்சகம்).
32. நவ உதயம், வி. திருநாவுக்கரசு (கொழும்பு, ஜி. ஸி. எஸ். யூ அச்சகம்).
33. மனிதன், ஏ. விமலநாதன் (யாழ்ப்பாணம், புனித பிலோமினா அச்சகம்).
34. மல்லிகை, டொமினிக் ஜீவா (யாழ்ப்பாணம், ஸ்ரீலங்கா பிரின்ரிங்ஸ் வேக்ஸ்).
35. மாணவர் குரல், எம். சிவகுமாரன், (யாழ்ப்பாணம், ஸ்ரீகாந்தா அச்சகம்).
36. முரசு (கொழும்பு, சிலோன் நியூஸ் பேப்பர்ஸ்)
37. முஸ்லிம் மாணவன் (கொழும்பு. இஸ்லாமிய வெளியீட்டு நிலையம்).
38, மெய்கண்டான் நெறி, எஸ். பரமசாமி (கொழும்பு, சிலோன் நியூஸ் பேப்பர்ஸ்).
39. பொருளியல் நோக்கு, மக்கள் வங்கி வெளியீடு (கொழும்பு, திஸ்ஸரா அச்சகம்).
40. போராட்டம், எம். தம்பிராசா. (கற்றன், சிலோன் நியூஸ் பேப்பர்ஸ்).
41. போராளி சி. சுப்பிரமணியம் (யாழ்ப்பாணம், ஸ்ரீபார்வதி
42. யாழ், ந பாலசண்முகநாதன் (யாழ்ப்பாணம், ஸ்ரீலங்கா அச்சகம்.
பிரின்ரிங்ஸ் வேக்ஸ்)
43. யாழ் செய்தி ஊடல், ந. பாலசுப்பிரமணியம் (யாழ்ப்பாணம், ஸ்ரீகாந்தா அச்சகம்).
44. வாகை, நந்தினி சேவையர் இளங்கோவன்.
45. வான்சுடர், எஸ். எஸ். அப்துல்றகுமான் (கொழும்பு' றகுமான் அச்சகம்).
46. ஹரே கிருஷ்ணா, ஆர். நவசீலன் (கொழும்பு, சிலோன் நியூஸ் பேப்பர்ஸ்).
47. ஹிஜ்ரா, கட்டுகஸ்தோட்டை, இஸ்லாமிய நலன்புரிச் சங்க வெளியீடு, கட்டுகஸ்தோட்டை).

# ஆஸ்திரேலியாவில் தமிழ்

**எஸ். தாஸ்**

பல்வேறு தொழில் காரணமாக ஆஸ்திரேலியாவிற்குச் சென்ற தமிழ்பேசும் மக்கள் ஒன்றுகூடித் தொடக்கி வைத்தது 'சிட்னி தமிழ்ச்சங்கம்'. இது ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்தியெட்டாம் ஆண்டு சி. சுப்பிரமணியத்தின் தலைமையில் ஆரம்பித்து வைக்கப்பட்டது. இச்சங்கத்தின் முழுநோக்கமும் தம் தாய் மொழி மீதுள்ள தொடர்பும், தமிழ்க்கலாச்சாரமும் விடுபட்டுப் போய் விடக்கூடாது என்பதேயாம்.

இச்சங்கத்தோர் முயற்சியால் சிட்னி ஸ்டிராத்பீல்ட்ப ப்ளிக் பள்ளியில்(StratfieldPublic School)தமிழ்க்குழந்தைக்கட்குத்தமிழ் கற்றுக்கொடுக்கும். பணியும்4-2-80இல் இருந்துஆரம்பித்துவைக்கப் பட்டுள்ளது.இதுதவிரஆஷ்வீல்ட(Ashfield)என்றஊரிலும்தனியார் சிலரின் ஆர்வத்தால் தமிழ் கற்றுக்கொடுக்கப்படுகிறது. தொடக்க நிலையில் தமிழ் கற்றுக் கொடுக்கப்படுகிறது தொடக்க நிலையில் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தால் வெளியிடப்பட்ட பாட நூல்களையே இவர்கள் தங்கள் மாணவர்களுக்குத் தமிழ்புகட்டப் பயன்படுத்தினர். ஆனால், தற்போது சிங்கப்பூரில் வெளியாகும் **தமிழ் வாசகம்** என்ற முதலாம் வகுப்பு முதல் ஆறாம் வகுப்புவரை உள்ள நூல்களையே பயன்படுத்துகின்றனர். இத்தமிழ் வாசகத்தைத் தேர்ந்தெடுத்தமைக்குக் காரணம், இங்கு தமிழ் பயிலும் மாணவர்களுக்கு அவர்கள் கல்விபயிலும் மொழி, பேச்சுமொழி, ஏனையோருடன் தொடர்பு கொள்ளும் மொழி எல்லாமே ஆங்கில மாக இருப்பதேயாம்,

சமயம் தொடர்பான விழாக்களையும், மற்றும் பல கலைகளையும் வளர்க்கும் நோக்கமாக ஒழுங்கு செய்யப்படுகின்ற விழாக்களையும், தமிழ், இந்தியப் பண்பாடு முதலியவற்றை வளர்க்கும் - பரப்பும் நோக்கத்தோடு இங்குள்ள தமிழ்மக்கள் கொண்டாடுகின்றனர் இதனால் தமிழ் மணம் தமிழர் சென்ற இடமெல்லாம் பரவுகின்றது.

சிட்னித் தமிழ்ச்சங்கம் மேற்கூறிய செயல்களுடன் 'சந்திப்பு' என்ற இதழையும் வெளியிடுகின்றது. இவ்விதழில், கதை, கட்டுரை, கேலிச் சித்திரங்கள் போன்றவற்றை நாம் காணமுடிவதுடன், பல்வேறு வகையான இந்திய மக்களின் தேவைகளை நிறைவுசெய்யும் பொருட்களின் விளம்பரங்களும் இடம்பெறுகின்றது. சந்திப்பு ஆசிரியர்கள் கூற்றில், சந்திப்பு 'ஒரு சிட்னித் தமிழரின் கலாச்சாரச் சந்திப்பே'யாம் (A cultural rendezvous to the Tamils in Sydney). இவ்விதழ் வெளியீட்டுக்கு வி. சி ஜெயராம், திருமதி. எஸ். தாஸ், ஆர். எஸ். முத்துக்கிருஷ்ணன் போன்றோர் பெரிதும் உழைக்கின்றனர்.

கடல்கடந்து பிறநாடு சென்றிடினும், தமிழரின் பண்பாட்டையும் தமிழ்க்கல்வியையும் விடாது பரப்பிவரும் சிட்னித் தமிழ்ச்சங்கத்தின் தொண்டு பாராட்டற்குரியதே!

# நூலகர் பார்வையில் நூல்கள்

ந. சிவகாமசுந்தரி

நூல்கள் என்றாலே பொதுவாகவும் சிறப்பாகவும் பல்வேறு துறைகளில் உள்ள இலக்கியங்களையே குறிப்பதாகும். வாசகர் களை அடைவதே அதன் முக்கியத்துவம். நூலக இயற்கோட் பாட்டின்படி ''புத்தகங்கள் படிப்பதற்கே'' என்பதும் ''ஒவ்வொரு புத்தகமும் அதற்குரிய வாசகர்களை அடைய வேண்டும்'' என்பதும் நூலகத்தின், நூலகரின். நூல்களின் கோட்பாடு ஆகும் வாசகர்களுக்காக வாசகர்களைக் கொண்டே பலவித நூல்களும், வார, மாத, வருட இதழ்களும், மலர்களும் உருவாகின்றன.

### நூலகத் தேவை

தனிமனிதன் பல வேறுபட்ட துறைகளையும் அறிய வேண்டு. மாயின் ஒவ்வொரு நூலையும் தன் உடைமையாக வாங்க இய லாது. அதற்கெனவே நூலகங்கள் பலதரப்பட்ட துறைகளைச் சார்ந்த நூல்களை வாங்கிப் படிப்போர்க்கு உதவுகின்றன. உலகியல் அறிவு, பொது அறிவு இவற்றில் முழுமையான அறிவு பெற நூல்கள் உதவுகின்றன. எழுத்தாளர், அச்சிடுவோர், வெளி யிடுவோர் எனப் பல படிநிலைகள் நூலாக உருப் பெறத் துணை நிற்கின்றன.எல்லோருக்கும் பயன்படவே சில ''இரவல் கொடுக்கும் நூலகங்கள்'' (lending libraries) அமைக்கப்படுகின்றன. இது போன்ற நூலகங்கள் சமுதாய முன்னேற்றத்திற்கு அடிப்படை யாக விளங்குகின்றன.

### நூல்கள் பொதுத்தன்மை

ஒரு நூலின் தரத்தை அளவிட நூலகர் என்ற நிலையில் இருந்து அளவிட வேண்டுமாயினும் வாசகர்களின் நிலையையும்

அவர் உணர்ந்திருத்தல் வேண்டும். ஏனெனில் பலவகைப்பட்ட நூல்கள் இருப்பதுதான் காரணம் (1) ஒருசில முக்கிய கொள்கைகளை விளக்கும் (books with Purposo) இலக்கிய, சமய, தத்துவ நூல்கள் பல உள. (2) உள்ளார்ந்த நுண்ணறிவூட்டுவனவும், உள்ளத்தில் பதியக் கூடியனவும் (books rich in flair) மேலும் மேலும் படிக்கத்தூண்டும் ஆற்றல் உடையனவுமாக அமைந்த அறிவியல் நூல்கள் பல உள. (3) மூன்றாவதாக அமைவன பொருளாதார, அறிவியல் புத்தகங்கள் (orientation books). ஆராய்ச்சியும் அறிவியலும் முன்னேற்றமடைந்துள்ள நிலையில் இருவேறு நிலையிலுள்ள பொருள்களின் ஒப்பாய்வுத் திறன்களை ஆராய்ந்து தெளிவுபடுத்தும் வகையில் இவை அமைகின்றன. பொது நிலையில் இவை இலக்கியத்தில் மிகுதியாக அமைகின்றன. (4) நான்காவதாக பொதுஅறிவு நூல்கள் (General Knowledge books). இவை பொதுநிலையில் அனைத்துத் துறைகளைப் பற்றி அறிய உதவும். இது இலக்கண, இலக்கிய, அறிவியல், தத்துவ, பொருளாதாரத்துறைகள் அனைத்தும் கலந்த கலவை. இவை பெரும்பான்மையும் தொகுப்பு நூல்களாக அமைகின்றன. (5) ஐந்தாவதாக அமைவது பொழுதுபோக்குக்கென உதவும் நூல்கள். நாவல்களும் சிறுகதைகளும் வேடிக்கை வினோத விளையாட்டுக்களும் இதனுள் அடங்கும்.

**நூல் தேர்வு**

எடுத்துக்கொண்ட பொருள், கொள்கை, உணர்த்தும் வகை முதலானவற்றில் ஒவ்வொரு எழுத்தாளனும் வேறுபட்டு நிற்கிறான். அதனால் எந்தவிதப் புத்தகத்தையும் குறிப்பிட்ட அளவுகோலைக் கொண்டு அதன் தரத்தை நிர்ணயிக்க முடியாது. எந்த நூல்களையும் விரும்பிப்படிக்கும் மக்கள் இருப்பதால்தான் சில கீழ்த்தரமான பொருள்கொண்ட புத்தகங்களும், பாலுணர்வூட்டும் புத்தகங்களும் அச்சேறுகின்றன. அதனால் இவை தேவையற்றவை என ஒதுக்க இயலாது.

குறிப்பிட்ட சில ஆசிரியர்களின் நூல்கள் சிந்தனைக்கு இடமின்றி வாங்குவதற்கு ஏற்புடைத்தாக அமைகின்றன. புதிய ஆசிரியரின் நூல்களை அவரது முன்னுரை அந்நூலுக்குப் பிறர் வழங்கியிருக்கும் ஆய்வுரைகள் போன்றன் தரத்தை நிர்ணயிக்க உதவுகின்றன. முன்வந்த நூல்களின் மறுபதிப்புகளாயின் நூலாசிரியர் ஏதேனும் மாற்றங்கள் அல்லது விரிவு செய்திருப்பின் தயக்கமின்றி மறுமுறையும் வாங்கினால் ஆய்வாளர்களுக்குத் துணைபுரியும்.

**இயல்பு**

நூல்களின் இயல்பைப் பொறுத்தவரையில் அகம், புறம் என இரு நிலைகளில் காணலாம்.

**புற இயல்பு**

எழுத்தாளர்களின் கடமைதான் எடுத்துக்கொண்ட பொருளை விவரிப்பதில் மட்டும் அமையாது அவை அனைத்தையும் ஒருமுகப் படுத்திக் கொடுக்கும் நூல்பற்றிய குறிப்பில்(Bibliographical data) அமைகிறது. இவை பெரும்பான்மையானவற்றில் குறிக்கப்பட வில்லை. இது மிகவும் இன்றியமையாதது. தலைப்புப்பக்கமும் (Title Page) அதன் பின்புறமும் (back of the title page) முதன்மையானதும் அவசியமானதும் ஆகும். இது நூலகருக்கும். நூலைப் பொருள்வாரியாகத் துறைப்படுத்துபவருக்கும் (Classi-ficationist) இன்றியமையாத பக்கங்கள். இவர்களுக்குப் பகுப்புக் குறிப்புப்பட்டி (Classified Catalogue) தயாரிப்பதற்கு இவ்விரு பக்கங்களும் குறுக்கிணைப்புக் குறிப்புப் பதிப்பு (Cross reference index entry) தயாரிப்பதற்குப் பொருளடக்கமும் தேவை. நூல் களைப் பகுக்க நூல் வெளிவந்த தேதியும், ஆசிரியரின் பிறந்த தேதியும் தேவைப்படுகிறது. அதனால் ஒவ்வொரு புத்தகத்திலும் நூல் பற்றிய குறிப்பு அட்டவணையில் தலைப்பு, ஆசிரியர், பதிப்பாளர் இருப்பின் அவர் பெயர்,எழுத்தாளரின் பிறந்த தேதி, படைப்பு எண் வரிசை, நூல் வெளிவரும் ஆண்டு, பக்கம், விலை, மொழி, பொருள் இவற்றைக் கண்டிப்பாகக் குறிப்பிட வேண்டும். உலகத்தமிழாராய்ச்சி நிறுவன நூல்கள் பெரும்பாலானவற்றில் இவை குறிப்பிட்டுள்ளமை வரவேற்கத்தக்கது.

பெரும்பாலான நூல்களில் இவை புலப்பட்டாலும் சிலவற்றில் தெளிவாக ஒருமுகப்படுத்தி அமைக்கப்படவில்லை. உதாரணமாக

(அ) ஸ்ரீப்ரியா படைத்த ''யாகம்''

(ஆ) முத்து சண்முகமும் சிவனுப்பாண்டியனும் படைத்த ''தமிழ்வழிக் கல்லூரிக் கல்வி''

(இ) மு. அ எழிலன் எழுதிய, ''கல்லறைப்பூக்கள்''

இவற்றில் நூல் வெளிவந்த வருடம் குறிப்பிடப்படவில்லை. இது கவனக்குறைவினாலும் இருக்கலாம். அதனால் இவை 1980 - இல் வெளிவந்த நூல்களா அல்லது அதற்கு முற்பட்ட ஆண்டுகளில் வெளி வந்தனவா என்பதை உணர்வதில் இடர்ப்பாடு உள்ளது.

உள்ளே எழுதப்பட்ட முன்னுரை, அறிமுகம் போன்றவற்றில் சிலர் கையொப்பத்தோடு நாளைக் குறிப்பிடுவதிலிருந்து ஆண்டை அறிய முடிகிறது. அல்லாதவற்றில் இதனை அறிவது இயலாத தாக உள்ளது.

எழுத்தாளர்களின் பிறந்த தேதிகளைத் ''தமிழ் எழுத்தாளர் யார் எவர்?'' ''Writers Directory''Who's Who'' ''Biographical dictionary'' போன்ற நூல்களிலிருந்து அறிய வாய்ப்பிருந்தாலும் தற்பொழுது புற்றிலிருந்து உருவாகும் ஈசல்போன்று எண்ணற்ற எழுத்தாளர்கள் நிறையநூல்கள் படைப்பதனாலும், பெயர் ஒன்று பட்டிருப்பதாலும், ஒருவரே பல பெயர்களில் எழுதுவதாலும், புதிய படைப்பாளர்களை உடனடியாக ''யார் எவர்?'' நூலில் இணைக்க இயலாததாலும், எழுத்தாளரின் பிறந்த தேதியையும் நூல் படைப்பு வரிசை எண்ணையும் குறிப்பிட்டால் ஏதுவாக இருக்கும். நூலின் கருத்து எந்த அளவிற்கு முக்கியமோ அந்த அளவிற்கு ஆசிரியர் பற்றிய அறிமுகமும் இன்றைய சூழலில் ஆய்வாளருக்கும் வாசகருக்கும் தேவையாகிறது,

**அக இயல்பு**

புற இயல்பினைத் பின் தொடர்வது பொருள் (Subject-matter). இதனை நூலின் அக இயல்பு (nature)எனலாம். பொருள் நிலையில் புத்தகங்களைத் தேர்ந்தெடுக்கும்போது வாசகர்கள் இருதலைக்கொள்ளி களாகின்றனர். காரணம் நூல்கள் எண்ணிக் கையில் மலிந்துகிடக்கின்றன. சில நூல்கள் வாசகர்களுக்கு எரிச்ச லூட்டுவனவாகவும், சில வேண்டாதவற்றை விளக்குவனவாகவும், சில புற அமைப்பிலும் தலைப்பிலும் கவர்ச்சியுடையனவாகவும் உட்புறம் பொருள் பொருத்தமற்றனவாகவும் இருக்கின்றன.

1980-இல் வெளியான நூல்களைப் பொதுவாக,

1. படைப்பிலக்கியங்கள் (creative literature)
2. திறனாய்வு நூல்கள்
3. மொழிபெயர்ப்பு நூல்கள்
4. பிறதுறை நூல்கள்

என நான்காகப் பகுக்கலாம். கதை, கவிதை, நாடகங்கள் முதலான வற்றை படைப்பிலக்கியங்களுள் அடக்கலாம்.

நாவல், கவிதை ஆசிரியர்களில் பெரும்பாலானோர் தன்னை மற்றவர்களுக்கு அறிமுகப்படுத்தும் வகையில் எழுதுகின்றனர். தன் வாழ்க்கையில் நடைபெறும் அல்லது தனக்குத் தெரிந்த

ஒருவரின் அனுபவங்களை மையமாகக்கொண்டு எழுதுகின்றனர். சில நாவலாசிரியர்கள் சரித்திர நாவல்களையும் சிலர் சமுதாய நாவல்களையும் சிலர் இரண்டையும் படைக்கின்றனர். சிலர் தம் சமுதாயச் சூழலிலிருந்து விலகி வேறு ஒரு சமுதாயச் சூழலில் தன்னை ஐக்கியப்படுத்தி, அவர்களோடு வாழ்ந்து பிற சமுதாய வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு நாவல் எழுதுகின்றனர். அந்த வகையில் ராஜம்கிருஷ்ணன் போன்றோர் முதல் நிலையி லிருக்கின்றனர். இதனால் பிற பல சமுதாய வாழ்க்கை நிலை களையும் நாம் அறியமுடிகிறது. லக்ஷ்மி போன்றோர் நாவல்களில் படைக்கப்பட்ட பாத்திரங்கள் உயிருடன் நடமாடுவதுபோல் இருப்பினும் ஒரு சில குடும்பச்சூழலை அடிப்படையாகக் கொண்டே அமைகின்றன. இந்துமதி எழுதும் நாவல்கள் ஓரளவுக்கு ஆடம்பரமான குடும்பத்தில் எழும் பிரச்சனைகளை உணர்த்து கின்றன. சில உள்ளத்தை உருக்குவனவாகவும் அமைகின்றன.

சுஜாதாவின் நடையே தனி. தற்காலக் கம்ப்யூட்டர் உலகினைத் தன் கதைகளின் மூலம் வாசகர்களுக்கு நன்கு அறிமுகப்படுத்து கிறார். காலத்தோடு ஒருமித்து அறிவியல் உணர்வினைத் தருவ தால் பொழுதுபோக்கிலும் பொது அறிவினை நல்குவதிலும் சிறப்பிடம் பெறுகிறார். தமிழ்வாணன் போன்ற சிலர் அவரைப் போலவே துப்பறியும் நாவல் எழுதுகின்றனர். புஷ்பா தங்கத்துரை போன்றோர் பாலுணர்வூட்டும் நாவல்களை மட்டுமல்லாது சிறப்பாகச் சரித்திர நாவல்களையும் படைக்கும் ஆற்றல் பெற் றுள்ளனர்.

நாவல்கள் அனைத்தும் பொதுவாகப் பொழுதுபோக்குக்காக வாசிக்கப்படுகின்றன. சிலர் தன்னைச் சூழ்ந்த சுமையைக் குறைப் பதற்காகவும், தம் கவனத்தைச் சிறிது மாற்றுவதற்காகவும் நாவல் படிக்கின்றனர். மேலும் நாவல் படிக்க தனித்திறமையோ திறனாய்வு செய்யும் அறிவு வளமையோ தேவையில்லாததால் நாவல்களே அதிகமானோரால் படிக்கப்படுகின்றன. எனவே அதிகமாக நாவல்களே வெளியாகின்றன. இவ்வாண்டு வெளியான சுமார் 820 புத்தகங்களில் பெரும்பான்மை எண்ணிக்கை நாவல்களே.

நாவல்களுக்கு அடுத்த நிலையில் நிற்பது கவிதைகள். உள்ள உணர்வுகளை மிக அழகுபடுத்திக் கொடுக்கவல்ல நடை கவிதைக்கு உண்டு. கவிதைகள் மரபுக் கவிதைகள், புதுக் கவிதைகள் என

இருவகைப்படும். தற்காலத்தில் புதுக்கவிதைகளே அதிகம் வெளி வருகின்றன. மரபுக்கவிதைகளில் கருத்தாழமும் நடையும் இலக்கணம் பிறழாது எழுதப்படுகின்றன. புதுக்கவிதைகள் அப்படியில்லை. எண்பதில் வெளிவந்த மரபுக்கவிதைகளில் கரு. நாகராசன் இயற்றிய ''தமிழே எல்லாம்'' என்பது நெடிய கவிதையாகவும் நூலே உருவில் பெரியதாகவும் அமைந்துள்ளது. பழைய மரபுக் கவிதைகளில் எல்லாம் வரி எண்கள் குறிக்கப்பட்டிருந்தன. மரபானாலும், புதுமையானாலும் எண் குறிக்கும் முறை பின்பற்றப்பட்டால் நல்லது. மேற்கோள் காட்ட வரி எண்களைக் குறிப்பிடுவதற்கு இது இடர்ப்பாடின்றி இருக்கும். நாச்சியப்பன் பாடல்களும் மரபுக் கவிதையே.

புதுக் கவிதைகளில் சில கேட்பதற்கு இனிமையாக இருப்பினும் கருத்தைப் புரிந்துகொள்வது கடினமாக உள்ளது. சிலர் பாடலுடன் படத்தையும் (Picture Poetry) எழுதுகின்றனர். படத்தின் மூலம் தன் குறிப்பை உணர்த்துகின்றனர். உதாரணம் ''நட்சத்திரப் பூக்கள்''—தமிழ்நாடன் எழுதியது. இது ஒரு புது வகை.

நாடக ஆசிரியர்களுக்கு நாவல், கவிதை ஆசிரியர்களினின்று தனித்தன்மை தேவைப்படுகிறது. தன் உணர்ச்சிகளை நாடகமாக்குவது என்பது சிறிது கடினமே. படிப்பதற்கு ஆற்று ஒழுக்கு இல்லாது தடைப்படுகின்ற நிலை நாடகத்திற்கு உண்டு. அதன் காரணமாகவே நாடக நூல்கள் குறைந்த அளவில் வெளிவருகின்றன.

திறனாய்வுகள், சங்க இலக்கியங்கள், நீதி இலக்கியங்கள், காப்பியங்கள், இலக்கணம் முதலானவற்றிற்கு ஓரளவு சமமான முக்கியத்துவத்துடன் நூல்கள் எழுந்துள்ளன. கவிதையும் நாவல்களும் அதிகமானதாலும் பலரை ஈர்ப்பதாக அமைவதாலும் அவற்றில் திறனாயும் பணியும் அதிகமாகக் காணப்படுகிறது. வாழ்க்கை வரலாற்று நூல்களும் பயண நூல்களும் எண்ணிக்கையில் குறைவாகவே உள்ளன. பயணநூல்களுக்குப் பயணம்செல்லும் எழுத்தாளர்கள் எண்ணிக்கை அதிகரிக்கவேண்டும். வாழ்க்கை வரலாறு எழுதுவதற்கும் உண்மையாக நேரும் நிகழ்ச்சிகளை அறிந்திருத்தல் வேண்டும். சமய தத்துவ நூல்களும் புராண நூல்களும் சம இடம் பெறுகின்றன. அறிவியல் நூல்கள் தமிழில் இன்னும் அதிகமாக வெளிவரவேண்டும். இவற்றுள் முதன்மை இடம் பெரும்பாலும் பாடநூலுக்கு அளிக்கப்பட வேண்டும்.

மொழிபெயர்ப்பு நூல்கள் குறைவாகவே அமைகின்றன. அவற்றுள் இலக்கிய மொழிபெயர்ப்புக்களே அதிகமாக உள்ளன. மொழிபெயர்ப்புக்கு முக்கியத்துவம் தரப்பட வேண்டும். மொழி பெயர்ப்பாளர்களை மிகவும் ஊக்குவிக்கவேண்டும். தாம் எடுத்த நூலை மொழிபெயர்க்கும்போது மூலநூலின் பொருள் மாறு படாது மொழிபெயர்ப்புச் செய்யவேண்டும். வார்த்தைக்கு வார்த்தை மொழிபெயர்க்க இயலாத இடத்தில் கருத்து மாறாமல் மொழிபெயர்த்தல் நல்லது. புத்தகப்பற்றாக் குறையை நீக்கு வதற்கு மொழிபெயர்ப்பும், மொழித்தழுவல்களும் சிறந்த உதவி புரியும். மொழிபெயர்ப்பாளர்கள் மொழிவரையறையை மீறிப் பொதுமக்களையும் எழுத்தாளர்களையும் இணைக்கும் பாலமாக அமைகின்றனர். பண்பாட்டின் தனித்தன்மையைஅவரவர் நாகரிகத் தின்மூலம் உணர்த்தலாம். அதைப் பிறநாட்டினர்க்கும் பிறமொழி யினர்க்கும் உணர்த்த மொழிபெயர்ப்பு அவசியம். பிறநாட்டு விலைமதிப்பிற்குரிய இலக்கியங்களைக் குறிப்பிட்ட வகையில் மக்களிடையே பரப்ப உதவுவதும் மொழிபெயர்ப்பேயாகும். மேலும் மொழிபெயர்ப்பில் ஒருமித்த நிலையைக் கையாள வேண்டும். தொழில்நுட்ப அறிவியல் நூல்களை மொழி பெயர்க்கும்போது கலைச்சொல் அகராதியைப் பயன்படுத்தி ஒரே மாதிரி மொழிபெயர்ப்புக்களைப் படைக்க வேண்டும். இவை கற்பாரிடையே ஐயப்பாடுகளும் குழப்பங்களும் நீங்கித் தெளிவு பெற உதவும்.

**அமைப்பு** (Physical appearance)

பொருள் நன்றாக அமைவதுடன் நூலின் புற அமைப்பும் (physical appearance) அனைவரையும் தன்பால் ஈர்க்கக்கூடிய தாக அமையவேண்டும். உதாரணமாக ''நேஷனல் புக் டிரஸ்ட்'' ''க்ரியா'',''அகரம்வெளியீடு''''நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்''போன்ற, நூல் வெளியீட்டாளர்கள் உருவாக்கும் நூல்கள் பாதுகாப்பான, அழகான, முன்பின் அட்டைகளையும், கண்ணுக்குக் குளுமையான வண்ணங்களையும், அழகான அச்சுப்பிரதிகளையும் கொண்டு அனைத்து வாசகர்களையும் கவர்வதாக அமைகின்றது.

''ஏஷியன் எஜீகேஷனல் சர்வீஸ்'' பதிப்பகத்தால் பழைய நூல்களை மறுபதிப்புச்செய்து சிறந்த அட்டைகளுடன் நூல்களைத் தயாரிப்பினும், டதுப்பிக்கப் பட்ட நூல் என்பதனாலும் அரிய நூல் என்பதாலும் மதிப்பை அதிகப்படுத்தி விடுகின்றனர். இது சில நூல்

களின் விற்பனையையும் பாதிக்கிறது. பல மொழி தெரிந்த ஒருவர் பலமொழி அகராதிகளையும் தன் சொந்த உபயோகத்திற்கென வாங்க இயலாது அதனால் சில அகராதிகளைக் குறைந்த மலிவுப் பதிப்புக்கள் மூலம் தனிநபர் தன் உரிமையாக்க உதவலாம். 1980-ஆம் ஆண்டு வெளியான மறுபதிப்பான ''அபிதான சிந்தாமணி'' எனும் நூல் ஒவ்வொரு தமிழ் ஆய்வாளருக்கும் உதவுவது. இதனை ரூ 200/- கொடுத்து வாங்கும் அளவு தமிழன் நிலை இன்னும் உயர வில்லை. அதேபோல் கலைக்களஞ்சியமும் மறுபதிப்பில் விலை ஏறாது கவனிக்கவேண்டும் இதுபோன்ற நூல்கள் மறுபதிப்புப் பெற அவசியம் முயலவேண்டும். அதனால் இதுபோன்ற நூல்களை மறுபதிப்பிலாயினும் சிறுசிறு தொகுதிகளாகவும் மலிவுப் பதிப்பாகவும் வெளியிட்டால் கூடுமானவரை அனைவரும் வாங்கி உபயோகிக்கலாம். பதிப்பகங்களுக்கும் இது உதவி புரியும்.

மெல்லிய அட்டை (Paper back), மலிவுப்பதிப்பு (Cheap Edition) என்றால் தரக்குறைவாகக் கருதக்கூடாது. பொருள் மதிப்புள்ளவற்றை, நிறைய எண்ணிக்கையில், சிறிது விலை குறைந்த காகிதத்தில் பலரும் வாங்கித் தன் உடைமையாக்கி உபயோகிக்கும் வகையில் விலை மலிவாக இருப்பதையே இங்கு மலிவுப்பதிப்பு எனக் குறிப்பிடுகிறோம். இதனால் மக்களிடையே வாசிக்கும் விருப்பத்தை அதிகப்படுத்தமுடியும். இந்த முறையில் மாணவர்களின் கல்வித்திறனையும் பொது அறிவினையும் வளர்க்கும் பாடப்புத்தகங்களும், தொழில்நுட்ப நூல்களும், சரித்திர பூகோள நூல்களும், வாழ்க்கை வரலாறு போன்றனவும் மற்ற பல துறை நூல்களைவிட எண்ணிக்கையில் அதிகமாக அச்சேறி கல்லூரி, பள்ளி மாணவர்கள் எளிதில் வாங்கும் அளவு மலிவு விலையில் கிடைக்கும்படி உதவவேண்டும். தற்போது மலிவு விலையில் அதிகம் கிடைப்பன புதினங்களே.

**முடிவுரை**

மொத்தத்தில் இலக்கியங்களும் மற்ற பிறதுறை நூல்களும் எழுத்தாளர்களின் ஊக்கமுள்ள உழைப்பால் மட்டும் மற்றவர்களுக்கு அறிமுகப்படுத்தப்படாது மற்ற பல காரணகர்த்தாக்களும் இவர்களுக்கு நன்கு துணைபுரியவேண்டும் என்பது தெளிவாகிறது ஒவ்வொரு நூலும் ஒரு எழுத்தாளரின் உயர்ந்த ரகசியங்களையும், திறமைகளையும் வெளிப்படுத்தும் தனித்தன்மை வாய்ந்ததாக அமைகின்றது பாடநூல் எழுத்தாளர்களுக்கும், ஓவியர்களுக்கும் பதிப்பாளர்களுக்கும் தனிக்குணமும், தனிக் கற்பனைத்திறனும்

ஆக்கமும், பயிற்றுமுறையும் தேவை இவை எளிமையான காரியம் அன்று. இது ஒரு ஆராய்ச்சியோ அறிவியலோ மட்டுமன்று. கலையும்கூட. ஏனெனில் எதற்கும் ஒரு சட்டதிட்டம் இருப்பது போல் இவைகளுக்கும் உருவாக்கும் விதத்தில் ஒரு சட்டமும் வரையறையும் இருக்கின்றன. அரும்பாடுபட்டு உருவான நூல்களை வாசகர்கள் பாதுகாப்பது எல்லாவற்றையும்விட தலையாய கடமை. தனக்குத் தேவையான நூல்களை எடுத்து ஒழிப்பதிலும், பக்கங்களைக் கிழிப்பதிலும் எந்தப்பயனும் இன்றி நூலும் அழகு கெட்டுப் பிறர்க்கும்; உதவாமல் போய்விடும்

ஒரு எழுத்தாளரின் மன அமைதி அவர் தன் எண்ணங்களுக்கு முழு உருக்கொடுத்து அதனை நூல் வடிவாக்கி மக்களிடையே நன் மதிப்பைப் பெறுவதிலேயே அடங்குகிறது. ஆய்வு நூல்கள் அதிகம் வளர எழுத்தாளர்கள் மேலும் ஊக்கமளிக்கப்படவேண்டும். ஒரு முழுநூல் அதிக ஆயுளைப்பெறுவதோடு மறுபதிப்பிற்கும் வழி வகுக்கிறது.

இலக்கிய உலகு படைத்த பழந்தலைமுறையினரான பாரதி, வ. வே. சு. ஐயர், மறைமலையடிகள் வி. கல்யாணசுந்தரனார், ரா. பி. சேதுப்பிள்ளை, மு. வரதராசனார் ஆகியோர் நம்மிடையே இன்றும் நின்று நிலவுகின்றனர். இவர்கள் வாடி உதிர்ந்துவிட்டாலும் இவை இன்றும் மணம்பரப்பி அழியாப்புகழ் பெறுகின்றன.

## 1980-இல் வெளியான தமிழ் நூல்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | நூலக இயல்/இதழியல் | 3 | 13. | கவிதை | 157 |
| 2 | பொறியியல் | 4 | | கவிதை ஆய்வு | 18 |
| 3. | அறிவியல் | 17 | 14. | நாடகம் | 29 |
| 4. | மருத்துவம் | 16 | 15. | புதினம் | 227 |
| 5. | சோதிடம் | 10 | | புதினம் ஆய்வு | 6 |
| 6. | இசை | 11 | 16. | மொழி பெயர்ப்பு நூல்கள் | 17 |
| 7. | கலை | 15 | | | |
| 8. | சங்க இலக்கியத் திறனாய்வு | 17 | 17. | குழந்தை இலக்கியம் | 83 |
| | | | 18. | கட்டுரைகள் | 39 |
| 9. | நீதி நூல் இலக்கியத் திறனாய்வு | 18 | 19. | இலக்கணம் | 23 |
| | | | 20. | பக்தி இலக்கியம் | 65 |
| 10. | காப்பியங்கள் திறனாய்வு | 9 | 21. | தத்துவம் | 41 |
| 11. | கம்பன்-திறனாய்வு | 8 | 22. | மனநூல் | 10 |
| 12. | சிற்றிலக்கியத் திறனாய்வு | 14 | 23. | பிரயாண நூல் | 8 |

| | | | | |
|---|---|---|---|---|
| 24. வரலாறு | 11 | 27. நாட்டுப்புற இலக்கியம் | 13 |
| 25. அரசியல் | 6 | 28. மலர்கள் | 10 |
| 26. பொருளாதாரம் | 9 | 29. வாழ்க்கை வரலாறு | 37 |
| | | மொத்த நூல்கள் | 854 |

**நூலக இயல்—இதழியல்**

1. இதழியல், கோதண்டபாணி, இரா., கற்பக நூலகம், 21-ஏ. ஆசாரித் தெரு, தல்லாகுளம், மதுரை, 625002, ரூ 13-50.
2. தமிழ்க்கலை நூற்றொகை, அர்த்தநாரீசுவரன், பெ., கொங்குவேள் பதிப்பகம், 38-H. பீமண்ண முதலி தோட்டத் தெரு, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-18, ரூ 3-00.
3. நூலகம் வளரும் கதை, சுப்பு ஆறுமுகம், கலைஞன் பதிப்பகம், சென்னை-17, ரூ 10-00.

**பொறியியல்**

4. ஓர்க்ஷாப் பிராக்டிஸ்: மெட்டல் அண்டு ஷீட்மெட்டல், மின்னணு, புனை, பாலாஜி பப்ளிகேஷன்ஸ், 103. பைகிராப்ட்ஸ் சாலை, சென்னை-14, ரூ 5-50.
5. ஓட்டுநர் விளக்கக் கையேடு, நாராயணசாமி, லெ., 54-எ, வ. உ. சி. சாலை, காரைக்குடி, முகவை மாவட்டம்.
6. சைக்கிள் ரிப்பேர் செய்தல், சூசைராஜா, எஸ்.ஏ., இலக்குமி நிலையம், 59. முத்து முதலி தெரு, சென்னை-14 ரூ 4-25.
7. லேத், மின்னணு, புனை, பாலாஜி பப்ளிகேஷன்ஸ், 103. பைகிராப்ட்ஸ் சாலை, சென்னை-14, ரூ 6-50.

**அறிவியல்**

8. அறிவியல் என்றால் என்ன? தில்லைநாயகம், வே., சாந்திமலர் பதிப்பகம், 46. ரெங்கநாதன் தெரு, சென்னை-17, ரூ 6-00.
9. அறிவுக் கருவூலம், ராஜன், எஸ். என். கே., தமிழரசி பதிப்பகம், 85. சல்லிவன்ஸ் கார்டன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4, ரூ 5-00.
10. அறிவுக்கு உணவு, (பதி). விசுவநாதம், கி ஆ.பெ, பாரி நிலையம், சென்னை-1, ரூ 2-00.
11. அறிவுச்சுரங்கம், (பதி. 2). ராஜன், எஸ். என். கே., மீனா புத்தக நிலையம், அபிராமபுரம், சென்னை-18, ரூ 4-00.

12. ஆழ்கடல் அளப்போம், ஜகன். (புனை), தமிழ் எழுத்தாளர் சங்கம், 107. பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5, ரூ 2-00.

13. உலகத்துப் பறவையினங்கள், மணிமேகலை பிரசுரம் (வெளி), 4. தணிகாசலம் செட்டி ரோடு, சென்னை-17, ரூ 5.90.

14. எலுமிச்சை மரம், சூசை ராஜா, எஸ். ஏ., ஸ்டார் பப்ளிகேஷஸ், சென்னை-5, ரூ 3-00.

15. கண் சிமிட்டும் விண்மீன்கள், தமையந்திரன். வே., புகழ் பப்ளிகேஷன்ஸ், 34. பி.வி. கோயில் தெரு, சென்னை-4 ரூ 9-75.

16. காய்கறித் தோட்டம், (பதி. 2). சாரதி, எஸ். வி., வைரம் பதிப்பகம், 143. பெல்சு சாலை, திருவல்லிக்கேணி சென்னை-5, ரூ 3-00.

17. கோழிப்பண்ணை, (பதி.2). மாருதிபதிப்பகம், 173. பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14, ரூ 6-60.

18. தம்பிக்கு விவசாயம், துமிலன், (புனை), ராமு புத்தக நிலையம், மீனாட்சி இல்லம், பிளாட் 150, ஏவி. எம். காலனி 5-வது தெரு, விருகம்பாக்கம், சென்னை-92, ரூ 17-25.

19. தாவரங்களும் பறவைகளும், கணபதி, ச. கு., வானவில் பிரசுரம், 16. இரண்டாவது குறுக்குத் தெரு, மேற்கு சி.ஐ.டி நகர், சென்னை-35, ரூ 5-00.

20. நாய் வளர்க்கும் முறை, நரசிம்மன் டி.வி. மாருதி பதிப்பகம், 173. பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14. ரூ 6-00.

21. பப்பாளிமரம், சூசைராஜா, எஸ்.ஏ., ஸ்டார் பிரசுரம், சென்னை-5, ரூ 3-00.

22 புள்ளியியல், சங்கர நாராயணன், எம்., கழகம், சென்னை-1, ரூ8-00.

23. வைட்டமின்களும் அவற்றைப் பெறும் முறைகளும், மணிமேகலைப் பிரசுரம், தியாகராயநகர், சென்னை-17.

24. வையகமெங்கும் விஞ்ஞானப் பணி, நித்யானந்தம், திருமகள் நிலையம், சென்னை-17, ரூ 5.00.

மருத்துவம்

25. ஆரோக்கியம் அழைக்கிறது, தம்பி சீனிவாசன், பூம்புகார் பிரசுரம், சென்னை-1, ரூ 6-90.

26. இரகசிய நோய்கள் (பதி. 2), தமிழ்வாணன், புனை, மணிமேகலை, சென்னை-17, ரூ 3-00.

27. என் கதை காது, கோபாலகிருஷ்ணன், கல்வி., கிறிஸ்துவ இலக்கியச் சங்கம், த. பெ. எண். 501, சென்னை-3.

28. கண் பாதுகாப்பு, சுந்தரம், என். எஸ்., கழகம், சென்னை-1, ரூ 6-00.

29. கருவில் வளரும் குழந்தை, (பதி. 4), தூரன், பெ., புனை, கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம், வேதாரண்யம், தஞ்சை மாவட்டம்.

30. கிராமப்புற மருத்துவம், வியாஸ், ந. ஸ., நாட்டுநலப் பணித்திட்டம், சென்னை மருத்துவக் கல்லூரி, சென்னை-3, ரூ -00.

31. குடும்ப வைத்தியம், சுவாமி, எஸ்., துர்காதாஸ், பூம்புகார் பிரசுரம், சென்னை-1, ரூ 9-90.

32. குழந்தை வளர்ப்பும் நோய் தடுப்பும், இராமாராவ், யு. பூம்புகார் பிரசுரம், சென்னை-1, ரூ 7-90.

33. தோல் பாதுகாப்பு, நடராசன். எம்., கழகம், சென்னை-1, ரூ 4-00.

34. நோயற்ற வாழ்வுக்கு, நம்பி, வே., தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5, 5-00.

35. பிள்ளைகள் மறக்காமலிருக்கச் சிலவழிகள், தமிழ்வாணன், புனை, மணிமேகலை பிரசுரம், சென்னை-17, ரூ 4-00.

36. பெண்களுக்கு யோகாசனம், ராஜன், என் & ராஜசுந்தரி, தி., 1 வேதகிரி மேஸ்திரி தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-600002, ரூ 7-00.

37. மலர்கள் காய்கள் மருத்துவம், இரத்தின சண்முகனார், அறிவு நிலையம், 60/2. பைகிராப்ட்ஸ் சாலை, சென்னை-5, ரூ 6-00.

38. யோகத்தின்அடிப்படைகள்,அரவிந்தர் ஆசிரமம்(புதுச்சேரி).

39. வெங்காயம் வெள்ளைப் பூண்டு மஞ்சள் மருத்துவம், இரத்தின சண்முகனார். அறிவு நிலையம், சென்னை-5, ரூ 7-00.

40. வைத்தியக்களஞ்சியம், (பதி. 2) சூசைராஜா,எஸ்.ஏ., தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5, ரூ 3-50.

ஜோதிடம்

41. அங்கத் துடிப்புக்களும் பலன்களும், கந்தகிரிதாசன், ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ், 23, கோபாலகிருஷ்ணய்யர் தெரு. த.பெ.எ. 1404, சென்னை-17, ரூ 1-75.

42. உங்கள் பிறந்த தேதி அதிர்ஷ்டம்-மே, ஜுன் மாதங்கள், முத்துக்குமரன், பி எல், வைரம் பதிப்பகம், 51, பெல்சு சாலை, சென்னை-5, ரூ ?-50.

43. எண் கணித ஜோதிடம், மயிலை பூபதிராஜன், புனை யமுனா பிரசுரம், 85. சல்லிவன்ஸ் கார்டன் ரோடு, சென்னை- 4, ரூ 4-50.

44. சோதிட விதி விளக்கம், முத்துக்குமரன், பி.எல்., திருமகள், நிலையம், 13. எர்ரபாலு தெரு, சென்னை-1, ரூ 5-00.

45. தமிழ் நியூமராலஜி. (பதி. 2) சூசைராஜா, அறிவுச்சுடர் நிலையம், 144. பெல்ஸ் சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-5, ரூ 4-50.

46 திருமணத்திற்கு ஜாதகப் பொருத்தங்கள்,கேசிகன், புலியூர்., மாருதி பதிப்பகம், 173. பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14, ரூ 12-50.

47. நர்மதா கைரேகைக் களஞ்சியம், ஆர்.வி.பி., நர்மதா பதிப்பகம், 1. வியாசாராவ் தெரு, சென்னை-17, ரூ 10-00.

48. யோகாதி யோகங்கள், பூபதிராஜன், மயிலை, யமுனா பிரசுரம், 85. சல்லிவன்ஸ் கார்டன் ரோடு, மயிலை, சென்னை-4 ரூ 4-50.

49. ருது ஜாதக பலன்கள், பூபதிராஜன், மயிலை., யமுனா பிரசுரம், சென்னை-4,ரூ 5-50.

50. ஜாதகப் பலாபலன், இளையபெருமாள், சுப., சோமு புத்தக நிலையம், 9-எ, செட்டி குருநாதன் கோவில் தெரு, மதுரை—1, ரூ 12-00.

இசை

51. அமுதத் தமிழிசை: தமிழிசைப் பாடல்கள்—சுரதாளக் குறிப்புடன், முத்தமிழ்ப்பண்ணை, 5, சாரதாபுரம் சென்னை-4. ரூ 15-00.

52. இசைவழி இறைபணி, தனபாண்டியன், டி. ஏ, வேதாகம மாணவர் பதிப்பகம், 66/7. அசோசியேசன் சாலை, மாதவரம், சென்னை-60.

53. ஓவியக்கனல், முகம்மது செரீபு. நா., முன்னேற்றம் வெளியீடு, கன்னார் தெரு, மானாமதுரை, ரூ 5-00.

54. கீதமாலா-3, அம்புஜம் கிருஷ்ணா, தி லிட்டில் பிளவர் கம்பெனி, 8. ரங்கநாதன் தெரு, சென்னை-17, ரூ 9-00.

55. கீர்த்தன மாலை, பாகம்-2, 101 கீர்த்தனங்கள், சிவன், பாபநாசம், ருக்மணி ரமணி, 4. மகாலட்சுமி தெரு, சென்னை-17, ரூ 15-00.

56. தமிழகக் கலைகள், (பதி. 3) இராசமாணிக்கனார், பாரி நிலையம் 184. பிராட்வே, சென்னை-1, ரூ 7-00.

57. தமிழகக் கவின்கலை-மாட்சி, வைத்தியலிங்கன், செ., செல்ல முத்தகம், 2. பாப்பான்கோடித் தெரு, பரங்கிப் பேட்டை, ரூ 9-00.

58. தமிழில் கீர்த்தனை நாடகங்கள், புஷ்பா, பி., முத்துப் பதிப்பகம், மாதவி, ஆழ்வார் நகர், மதுரை-19, ரூ 7-50.

59. துணுக்குத் திரட்டு, மோகன், இரா., ஏரக வெளியீடு, 263-சி, சதாசிவ நகர், மதுரை, 20, ரூ 5-00.

60. நட்சத்திர நகைச்சுவை, நவீனன், குமரன் பதிப்பகம், 33. கணபதித் தெரு, சென்னை-33, ரூ 4-00.

61. வண்ணப் பூக்கள் III, நீலகண்டன், ப, வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 15-00.

கலை

62. அச்சும் பதிப்பும், சம்பந்தன், மா சு, தமிழர் பதிப்பகம், 24, லிங்கிசெட்டித் தெரு, சென்னை-1, ரூ 30-00.

63. உயர்தரமான மாமிசச் சமையல், (பதி. 2,) தமயந்தி தேவி, புனை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 41-பி, சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை-98, ரூ 5-00.

64. ஊசி வேலையும் உடை தயாரித்தலும், (பதி. 9) வெற்றிச் செல்வி, ஆர்., பாரி நிலையம், 184. பிராட்வே, சென்னை-1, ரூ 9-00.

65. காலந்தோறும் நாட்டியக் கலை, கார்த்திகா கணேசர், பாரி புத்தகப் பண்ணை, 58. டி. பி. கோயில் தெரு, சென்னை-5, ரூ 9-00.

66. கிரிக்கெட் ஆட்டத்தின் கதை, நவராஜ் செல்லையா, எஸ்., ராஜ்மோகன் பதிப்பகம், 10. ரங்கநாதன் தெரு, சென்னை-17, ரூ 5-50.

67. கிரிக்கெட் கற்கலாம், மணி, பி. எஸ்., வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 5-00.

68. குடும்ப அசைவ சமையல், செல்வி, இலக்குமி நிலையம், 59. முத்து முதலித் தெரு, இராயப்பேட்டை, சென்னை-14, ரூ 5-80.

69. சடுகுடு ஆட்டம், நவராஜ் செல்லையா, எஸ், ராஜ்மோகன் பதிப்பகம், 10. ரங்கநாதன் தெரு, சென்னை-17, ரூ 7-00.

70. சமைக்கலாமே, (பதி. 4) ஜெமினி மகாதேவன், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-14,0

71. சாரணியம், இராமலிங்கம், து., முத்துப் பதிப்பகம், வளவனூர்.

72. செட்டிநாட்டுப் பலகாரங்கள், கல்யாணி, அரு., அருணோதயம், சென்னை-14, ரூ 2-50.

73. தையற்கலை : பெண்கள் உடைகள். பகுதி 1, (பதி. 12, சுந்தரம், கே. பி., பாரி நிலையம், சென்னை-1, ரூ 7-50.

74. நவீனத் தையற்கலை : ஆண்கள் உடை, பாலகுமார், ஆர் எஸ்., பாலாஜி பப்ளிகேஷன்ஸ், 103 பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-14, ரூ 6-75.

75. போட்டோ எடுப்பது எப்படி?, பரணீயன், யமுனா பிரசுரம், 85. சல்லிவன்ஸ் கார்டன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4.

76. வேடிக்கைக் கணக்கு, (பதி. 6,) முத்தையா, நாக., தமிழ்ப் புத்தகாலயம், 58. டி. பி. கோயில் தெரு, திருவல்லிக் கேணி, சென்னை-5, ரூ 1-50.

**சங்க இலக்கியத் திறனாய்வு**

77. அகமும் புறமும், அரங்க. சீனிவாசன், வானதி பதிப்பகம், தியாகராயநகர், சென்னை-17, ரூ 7-50.

78. இருமொழி இலக்கிய இன்பம், தர்மா ரெட்டி, ந., இராஜேஷ் வெளியீடு, 802 சி. கோட்ட கொம்மல் தெருவு, திருப்பதி, ஆந்திரப் பிரதேசம், ரூ 6-00.

79. இலக்கியத் தூதர்கள், நவநீத கிருட்டிணன், அ. க., கழகம், சென்னை-1, ரூ 4-00,

80. இலக்கிய மலர்கள், இஸ்மாயில், மு. மு., வானதி, பதிப்பகம், சென்னை-17, ரூ 25-00.

81. ஒரு கைக்கிளை, பழனி, வில்லியனூர்., தமிழ்ப் புத்தகாலயம் திருவல்லிக்கேணி, சென்னை-5, ரூ 4-00.

82. சங்க இலக்கியத்தில் கற்பனை, மாயாண்டி, இரா., எழிலகம், 4, இந்திராணி தெரு, அய்யாவு நாயுடு குடியிருப்பு, சென்னை-29, ரூ 20-00.

83. சங்க இலக்கியத்தில் மலர்கள், தாணம்மாள், இல , வானதி, பதிப்பகம், சென்னை-17, ரூ 10-00.

84. சங்ககாலச் சிறப்புப்பெயர்கள் : இலக்கியச் சிறப்புப்பெயர்களும் குழுப் பற்றிய சிறப்புப்பெயர்களும், (பதி 2,) துரை அரங்கசாமி, மொ. அ , பாரி நிலையம், சென்னை-1, ரூ20.00.

85. சங்க காலம், முத்துராசன், கு , தேன்தமிழ்ப்பதிப்பகம், 85, சுப்பிரமணியம் பிள்ளைத் தெரு, சேலம்-626 001, ரூ 19-50.

86. சங்க நூல்களில் தேசியம், சீனிவாசன், அரங்க., தேசிய சிந்தனைக் கழகம், 118. பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5, ரூ 4-00.

87. சங்க நூல்களில் மணிகள், சாமி, பி எல் , சேகர் பதிப்பகம், 66. பெரியார் தெரு, எம். ஜி. ஆர். நகர், சென்னை-78, ரூ 10-00

88. தமிழ் இலக்கியத்தில் இயற்கை ஓவியம் : உயிர்கள் இளங்குமரன், இரா., கழகம், சென்னை-1, ரூ 4-00.

89. நற்றிணை 201-400 செய்யுட்கள், கேசிகன், புலியூர்., பாரி, நிலையம், சென்னை-1. ரூ 12-00.

90. பரிபாடல் மூலமும் பரிமேலழகருரையும், (பதி. 5,) நல்லந்துவனார் முதலியோர், உ. வே. சா. நூல்நிலையம், சென்னை-41, ரூ 15-00.

91. புகழ்பெற்ற சங்க இலக்கியப் பொன் மொழிகள், மோகன், இரா., ஏரக வெளியீடு, 263.C சதாசிவ நகர், மதுரை-20, ரூ 5 50.

92. புறநானூற்றுப் பூந்துணர், கோவிந்தன், மு., தேன் மொழி பதிப்பகம், 10/18, பீட்டர்ஸ் சாலை காலனி, இராயப்பேட்டை, சென்னை-14, ரூ 5-60.

93. புனையா ஓவியம்: நெடுநல்வாடை விளக்கம், (பதி. 4) வேங்கடராமச் செட்டியார், செ., 26. கனகசபை நகர், சிதம்பரம்-608 001, ரூ 7-50.

94. பொதுமறை, வன்மீகநாதன்., கா, ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள்-612 504, ரூ 3-00.

நீதி இலக்கியத் திறனாய்வு

95. அகப்பொருள்மரபும்திருக்குறளும் (திருக்குறள் ஆராய்ச்சி-6), சண்முகம் பிள்ளை. மு., சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை-5, ரூ 22-00.

96. அறிவுக்கு விருந்தாகும் 1000 நீதிகள், சோலையப்பன், அரு., அருணோதயம், சென்னை-14, ரூ 10-00.

97. ஆத்திசூடி, பாரதிதாசன், பூம்புகார் பிரசுரம், சென்னை-1, ரூ 3-00

98. இனியவை 200, சோலையப்பன், அரு., அருணோதயம், இராயப்பேட்டை, சென்னை-14, ரூ 4-50.

99. ஒப்புமை ஒளியில் வள்ளுவம், மோகனராசு, கு, வள்ளுவர் கழகம், 69. வேங்கடரங்கம் தெரு, சென்னை-5, ரூ 4-00.

100. ஔவையார் அருளிச் செய்த கல்வியொழுக்கம், சிவஞானம், ம பொ., பூங்கொடி பதிப்பகம், சென்னை-4, ரூ 3-00.

101. கல்வெட்டு எழுத்துக்களில் திருக்குறள், சிரோமணி, ஜி. முதலியோர், புள்ளியியல் துறை, சென்னை கிறித்துவக் கல்லூரி.

102. குறள் காட்டும் காதலர் (பதி. 3), வரதராசன், மு., பாரி நிலையம், சென்னை-1, ரூ 5-00.

103. குறள் தரும் ஆத்திசூடி, மோகனராசு, கு., வள்ளுவர் கழகம், சென்னை, ரூ 2-50.

104. திருக்குறள் ஒரு சமுதாயப்பார்வை, இராமகிருஷ்ணன், எஸ்., மீனாட்சி, புத்தக நிலையம், மதுரை-1, ரூ 8-50.

105 திருக்குறள் பரிமேலழகர் உரை—நுண்பொருள் மாலை சுந்தரமூர்த்தி, இ, தேன்மொழி நூலகம், கோவை 2, சென்னை, ரூ 12-00.

106. திருவள்ளுவர் (பதி. 2,) வேலாயுதம், என். ஏ, அன்பு நிலையம், வடிவீஸ்புரம், நாகர்கோவில் - 639 002, ரூ 9-75.

107. திருவள்ளுவர் திருவுள்ளம், அப்துல் கறீம், மு., வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ. 5-00.

108. திருவள்ளுவரும் கால்மாக்சும், சிவஞானம், ம. பொ., பூங்கொடிப் பதிப்பகம், சென்னை-4, ரூ. 6-00.

109. தெய்வப்புலவர் திருவள்ளுவர், ராஜேந்திரன், பி. எல்., பூவழகி பதிப்பகம், 31. எஸ். பி. சன்னதி தெரு, இராயப்பேட்டை, சென்னை-14, ரூ. 5-00.

110. முப்பாலில் முச்சீர் முத்துக்கள், மோகனராசு, கு., வள்ளுவர் கழகம், சென்னை, ரூ 2-50.

111. மூன்றும் நான்கும், திரிகடுகம், நான்மணிக்கடிகை, செல்லப்பன், சு., பூம்புகார், சென்னை-1, ரூ. 4-50.

112. வளர்புகழ் வள்ளுவம், இளங்குமரன், இரா., கழகம், சென்னை-1, ரூ. 2-00.

**காப்பியங்கள்—திறனாய்வு**

113. உலகக் காப்பியங்கள், காசிராசன், இரா., தமிழ்ப்பதிப்பகம், 33. திருமலைநகர் அனெக்ஸ், பெருங்குடி, சென்னை-96, ரூ. 20-00.

114. காவியங்கள் பிறந்த கதைகள், (பதி. 2) தேவராசன், மாவண்ணா, முருகன் நிலையம், 12. தேசிகர் தெரு, வடபழனி, சென்னை-26, ரூ. 7-00.

115. கூத்தும் சிலம்பும், அறிவுநம்பி, அ., அறிவகம், 2ஆம் தெரு, திருவள்ளுவர் திருநகர், இந்திராநகர், காரைக்குடி-623001.

116. காதம்பரி, நடராசன், அ. ச., திருமகள் நிலையம், சென்னை-4, ரூ 5-75.

117. சிலப்பதிகார உரையாசிரியர்கள் சிறப்பு, சிவஞானம், ம. பொ., பூங்கொடி பதிப்பகம், 22. வி. எஸ். வி. கோயில் தெரு, சென்னை-4.

118. சீறாப்புராணச் சொற்பொழிவு - உமறுப்புலவர், சீதக்காதி நூல் வெளியீட்டகம், 21. பச்சையப்பச் செட்டித் தெரு, சென்னை-2, ரூ 8-00.

119. சீறாப்புராணத் திறனாய்வு, அப்துல் கறீம், மு., ஆயிஷா பதிப்பகம், 112-ஜி, பழஞ்செட்டித் தெரு, அதிராமபட்டினம் 614701, தஞ்சை மாவட்டம், ரூ 12-00.

120. தேம்பாவணி வசனம், ஜோசப் ராயர், புலவர் மணி, புதுவை மாநிலத் தமிழ் எழுத்தாளர் பேரவை வெளியீடு, புதுவை-11,

121. நளதமயந்தி (பதி. 2) லலிதாம்பாள், வானதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை-17, ரூ 3-00.

கம்பன்—திறனாய்வு

122. அனுமார் புராணம், மணிமேகலை பிரசுரம், 4. தணிகாசலம் செட்டி ரோடு, சென்னை-17, ரூ 9-90.

123. கம்பர் காட்சி, நடராசன், ஔவை., சேகர் பதிப்பகம், 66 பெரியார் தெரு, எம். ஜி. ஆர். நகர், சென்னை-78, ரூ 13-00.

124. கம்பரின் உவமை விளக்கம் : அகர வரிசையில், துரைசாமி, தெ., அருளகம், 19. வைத்தியலிங்கம் பிள்ளை குடியிருப்பு, கிராப்பட்டி, திருச்சி 620012. ரூ 9-00.

125. கம்பன் ஓர் ஒப்பீடு, தகடூரான், புனை. தேன்தமிழ்ப் பதிப்பகம், 85. சுப்பிரமணியம் பிள்ளை, சேலம், ரூ 17-00.

126. கம்பன் கலைக்கோயிலுக்கு ஒரு கைவிளக்கு, ஆசாரியா, பி. ஸ்ரீ., சரசுவதி ராமநாதன், வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 7-00.

127. கம்பன் சுவை, செவ்வேள், சேகர் பதிப்பகம், 66. பெரியார் தெரு, எம். ஜி. ஆர். நகர், சென்னை-78, ரூ 6-00.

128. கம்பனின் உவமைகள், இலக்குமி நாராயணன், மா., கண்ணம்மை (பதி) 54. எப். ஜாபர் ஷா தெரு, திருச்சி 620008, ரூ 5-00.

129. காவியக் கம்பன், வேலன், ஏ. கே., வி.எஸ். கே., வெளியீடு அருணாசலம் சாலை, சென்னை-93, ரூ 3-00.

சிற்றிலக்கியத் திறனாய்வு

130. இராமச்சந்திரன் பிள்ளைத்தமிழும் மறுநெறித் திருநூலும் (மறுபதிப்பு), கந்தசாமி அடிகள் & தண்டபாணி அடிகள், கழகம், சென்னை-1 ரூ 2-75.

131. இலக்கியக்கோவை, செயராமன், ந. வீ., இலக்கியப் பதிப்பகம், 12. அப்பாத்துரையார் தெரு, தேனாம் பேட்டை, சென்னை-18, ரூ 7 00.

132 உயிரட்டவணை எனும் பூப்பிள்ளை அட்டவணை, கழகம், சென்னை-1, ரூ 0-75.

637. நல்லொழுக்கப் பாடம், தமிழ் இலக்கியக் கழகம், திருச்சி-1, ரூ 1-80.

638. நன்னெறி நூல், தமிழ் இலக்கியக் கழகம், திருச்சி-620001, ரூ 2-00.

639. பழந்தமிழ் (பதி.4), இலக்குவனார், சி., வள்ளுவர் பதிப்பகம், 856,857. வடக்கு ராசவீதி, புதுக்கோட்டை, 622001, ரூ 8-00.

640. பேச்சாளராக (பதி. 5), பரந்தாமனார், அ கி., அல்லி நிலையம், 19. முத்து முதலித் தெரு, வேப்பேரி அஞ்சல், சென்னை-7, ரூ 7 00.

641. மொழி வழிச் சிந்தனைகள் (பதி. 2), தமிழண்ணல், சோலை நூலகம், சதாசிவநகர், மதுரை 62-020.

642. யாப்பியல் ஆய்வுக்கோவை, செயராமன், ந, வீ., இலக்கியப் பதிப்பகம், 12. அப்பாத்துரையார் தெரு, சென்னை-18, ரூ 5-50.

## பக்தி இலக்கியம்

643. அண்ணல் நபி பற்றி அறிஞர் அண்ணா, சாலி, ஜே. எம். இக்பால், இரவாஞ்சேரி, தஞ்சை மாவட்டம், ரூ 2-00.

644. அணுசக்தியும் ஓம் சக்தியும், சேகரன், மு., விசாலாட்சி பதிப்பகம், இராமசாமி கார்டன் தெரு, சென்னை-14, ரூ 7-50.

645. அநாஹத நாதம், ஸேண்டஸ்-ஸி. டப்ள்யு., ராமசாமி, ஸத் ஸங்க் பியாஸ், பஞ்சாப்.

646. அப்பரடிகள் வாழ்வும் வாக்கும், பழனியப்பன், சாமி., திருமகள் நிலையம், சென்னை-1, ரூ 5-00.

647. அரசியாரும் அம்மையாரும் (பதி.2,) லலிதாம்பாள், சு., வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ3-00.

648. அருட்பெருஞ்ஜோதி அட்டகம், சரவனானந்தா, இராமலிங்கர் நற்பணி மன்றம், 31. போயசுத்தோட்டம், சென்னை-86, ரூ 3-00.

649. அன்னை எனும் அற்புதப் பேரொளி, விஜயா சங்கர நாராயணன், ஸ்ரீ அரவிந்த ஆசிரமம், புதுச்சேரி-2.

650. ஆய்வுலகம் போற்றும் ஆசிரிய மணிகள், ஞானப்பிரகாசம், வி.எம்., கமலையா, க.சி., பாரி நிலையம், 184. பிராட்வே, சென்னை-1, ரூ 25-00.

651. ஆலய வழிபாட்டில் தமிழ், தண்டாயுதம், இரா., தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-5, ரூ 4-00.

652. ஆவிமுதல் ஆண்டவன் வரை, பாண்டிமாதேவி, ரா., பாவலர் பண்ணை, முத்துராமலிங்கபுரம், அருப்புக் கோட்டை வழி, இராமநாதபுரம் மாவட்டம் 626105, ரூ 10-00.

653 இந்து மதம் அழைக்கிறது, கணேசன், பி. சி., வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 3-50.

654. இமாம் ஹீசைன், ஜமால், பயனீர் பப்ளிஷிங் ஹவுஸ், 67. மண்ணடித் தெரு, சென்னை-1, ரூ 6-60.

655. இருக்கு வேதம் பாகம். 2, ஜம்புநாதன், எம். ஆர்., திருமதி சாந்தி ஜம்புநாதன், ராமாநிவாஸ், 375. முதல் தெரு, தார், பம்பாய் 400052, ரூ 50-00.

656. இறைவனே ஒளி விளக்கு, குலசேகரன், எஸ்.,மாப்பிள்ளைப் பதிப்பகம், 14. 4-ஆம் குறுக்குத் தெரு, யுனைட்டெட் இந்தியா காலனி, சென்னை-24, ரூ 4-00.

657. உறவு ஒரு தொடர்கதை, அருள்சாமி,ச., தூய இராயப்பர், பாப்பிறை இறையியல் கல்ச்சர், பெங்களூர்-55.

658. கந்தபுராணம், மணிமேகலை பிரசுரம், சென்னை- 17, ரூ 23-00.

659. கந்தவேள் கதையமுதம், ஜகந்நாதன், கி. வா., கந்தவேள் பதிப்பகம், 146. சூளைமேடு நெடுஞ்சாலை, சென்னை-94.

660. கல்கி அவதாரம், மிச்ரா பிரகாஷ் நாராயண், பஹாய் பப்ளிஷிங் டிரஸ்ட், த பெ.எண். 89. புதுதில்லி 110001, ரூ 3-00.

661. கோவிந்த பஜனை கீர்த்தனா மாதம், ஸ்ரீநம்மாழ்வார் சபை, 80. வ.உ.சி. தெரு, திருநெல்வேலி-6, ரூ 2-00.

662. சக்தி சாந்தம் சுந்தரம், வியட்நாம்வீடு, சங்கப்பலகை, 39. சாதுல்லா சாலை, தியாகராய நகர், சென்னை-17, ரூ 2-00.

663. சாமி சரணம், பரந்தாமன், பரந்தாமன் பதிப்பகம், 23. தெற்கு போக் சாலை, சென்னை-17, ரூ 4-00.

664. சிறிய திருமடல், திருமங்கையாழ்வார், இறைக்குருவனார், புலவர்.,உரை, கழகம், சென்னை-1, ரூ 2-00.

665. சிவஞான சித்தியார் சுபக்கம், அருணந்தி தேவ நாயனார், திருவாவடுதுறை ஆதீனம்.

666. சைவமும்தமிழும், சிதம்பரம், இராம, அம்மாள் பதிப்பகம், 1. கக்கன் தெரு, சந்தியா தோட்டம், சென்னை-90, ரூ 2-25.

667. சைவவைணவக் கதைகள், நாராயண வேலுப்பிள்ளை, எம், சாரதி பதிப்பகம், 15. கணபதி தெரு, மேற்கு மாம்பலம், சென்னை-33.

668. ஞாயிறு ஆயிரம், தண்டபாணி சுவாமிகள், வண்ணச் சரபம், தமிழ்ப் பதிப்பகம், 33. திருமலைநகர் அனெக்ஸ், பெருங்குடி, சென்னை-96, ரூ 12-00.

669. ஞானமும் வாழ்வும் (பதி 3,) வேதாத்திரி மகரிஷி, யோகி நாத், உலக சமுதாய சேவா சங்கம், கோயமுத்தூர்.

670. தணிகை வெண்பா, கந்தப்பய்யர் திருத்தணிகை, தி. கி. நாராயணசாமி, 2. சீதாராம நகர், கடலூர் 607001. ரூ 5-00.

671. தமிழர் சமய வரலாறு, வேலுப்பிள்ளை, ஆ., பாரி புத்தகப் பண்ணை, 58. டி. பி. கோயில் தெரு, சென்னை-5, ரூ 10-00.

672. திரு அம்மானை, ஜகந்நாதன், கி. வா., அமுத நிலையம், 46. இராயப்பேட்டை ஹைரோடு, சென்னை-14, ரூ 9-00.

673. திரு ஈங்கோய்மலை யெழுபது, கண்ணப்ப முதலியார், பாலூர்., தமிழ்ப்புத்தகாலயம், சென்னை-5, ரூ 5-00.

674. திருக்களிற்றுப்-படியார், திருக்கடவூர் உய்யவந்த தேவர், ஸ்ரீகுமரகுருபரர் காசிமடம், திருப்பனந்தாள், தஞ்சாவூர், ரூ 1-25.

675. திருச்சபை பாகம் - 1, பீர்முகம்மது, இடலை., திருச்சபை பதிப்பகம், 79. பட்டாரியர் நெடுந்தெரு இடலாகுடி, கோட்டாறு, நாகர்கோயில் 629 002, ரூ 3-00.

676. திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு, கல்யாண சுந்தரம், ந., திருக்குமரன் பதிப்பகம், 66. சபாபதிபுரம் தெரு, திருச்செந்தூர், ரூ 25-00.

677. திருத்தணிகை சந்நிதி முறை; கந்தப்பஅய்யர் திருத் தணிகை, தி. கி. நாராயணசாமி, 2 சீதாராமநகர், கடலூர்-607001, ரூ 20-00.

678. திருமூலர் தவமொழி (பதி.2), ராஜாஜி சோமு, வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 7-00.

679. திருவாசகம் (திருக்கோவையார் திரட்டு, 8ஆம் திருமுறை), மாணிக்கவாசகர், கழகம், சென்னை-1, ரூ 4-00.

680. திருவிடை மருதூர், ஸ்ரீமகாலிங்க தேவஸ்தானம் திருவிடை மருதூர் தெய்வீகச் சிந்தனைகள், நாராயணவேலுப் பிள்ளை, எம்., கவிதா பப்ளிகேன்ஷஸ், ரூ 7 00.

681. தெய்வ வாக்கு, (பதி. 2) ஜயேந்திரன் சரஸ்வதி சுவாமிகள், வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 9-00

682. தெய்வீக மாதர்கள், நாராயண வேலுப்பிள்ளை, எம்., குமரன் பதிப்பகம், 33. கணபதி தெரு, மேற்கு மாம்பலம், சென்னை-33, ரூ 6-50.

683. தேவி பாகவதஸாரம் பாகம் 2, அண்ணா, புனை, ஸ்ரீராம கிருஷ்ண மடம், மயிலை, சென்னை-4, ரூ 18-00.

684. நமச்சிவாய மாலை, மறுபதிப்பு, குருநமச்சிவாயதேவர், கழகம், சென்னை-1, ரூ1-00.

685. நூறு எடுத்துக்காட்டுக் கதைகள், ஜேக்கப், ஆர். எஸ்., கிறிஸ்தவ இலக்கிய சங்கம், த. பெ. எண். 501, சென்னை-3, ரூ 10-00.

686. பக்த விஜயம், மணிமேகலை பிரசுரம், தியாகராய நகர், சென்னை-17, ரூ 11-50.

687. பாவையர் பண்பு (பதி. 3.)கிருபானந்த வாரியார், பாரதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை-17,ரூ 5-50.

688. பெண்குலப் பெருமை (பதி. 2), கிருபானந்தவாரியார், வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 12 00.

689. மதுரைக் கோயில் வரலாறு இளங்குமரன், இரா., கழகம், சென்னை-1, ரூ 6-00.

690. மனிதனாகப் பிறப்பேன் (திருவாசக ஆராய்ச்சி), கீரன், புலவர்., சங்கப் பலகை, 39. சாதுல்லா சாலை, சென்னை-17, ரூ 3-00.

691. மாயை, சரவணானந்தா, சத்திய ஞானக் கோட்டம், திண்டுக்கல், ரூ4-00.

692. சித்தி பஞ்சாக்கரமாலை, ஸ்ரீநமச்சிவாய மூர்த்தி தாராட்டு மற்றும் திருவாவடுதுறைத் தேசிக சோபனம் முதலியன, கணபதி தேசிகர், சொ., திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை.

693. மூவர் தேவாரத்திரட்டு, கழகப் புலவர் குழு (தொகு) கழகம், சென்னை-1, ரூ7-50.

694. வடநாட்டுத் திருப்பதிகள், சுப்பு ரெட்டியார், ந., பாரி நிலையம், சென்னை 1, ரூ9-00.

695. வள்ளலார், பாலசுப்பிரமணியம், மு., குமரி மாவட்ட வள்ளலார் நற்பணி மன்றம், வடசேரி, நாகர்கோவில், ரூ2-50.

696. விவேகானந்தரின் அறிவுரைகள், ஸ்ரீ ராமகிருஷ்ணா மடம் ரோடு, மயிலை, சென்னை-4, ரூ '-00.

667. வைகுந்தம் திறந்தது, சிவஞானம், ம. பொ., பல்லவி, 27. கஜபதிலாலா லேன், திருவல்லிக்கேணி, சென்னை-5. ரூ 5-00.

698. ஜெபமே ஜெயம், தினகரன், டி. ஜி. எஸ்., கிறிஸ்தவ இலக்கிய சங்கம், த. பெ. எ. 501, பூங்கா நகர், சென்னை-3, ரூ 3-00.

699. ஷேத்திர சிவநாமத் தேவாரவிளக்கம், கணபதி தேசிகர், திருவாவடுதுறை ஆதீனம்.

700. ஸத் ஸங்கம்—5 சரண்ஸிங்ஜி, ராதாஸ்வாமி, ஸத் ஸ்ங்க விலாஸ், அமிருதஸரஸ், இந்தியா.

701. ஸந்த மார்க்கம் சரண்ஸிங்ஜி, ராதாஸ்வாமி, ஸத்ஸங்க விலாஸ், திராபாபா ஜெய்மால் சிங் வழி பியாஸ், அமிர்த சரஸ். 143 204.

702. ஹஜ் வழிகாட்டி, தமிழ்நாடு ஹாக் குழு, சென்னை-9.

703. ஸ்ரீ சந்தோஷிமாதா பூஜையும் கதையும், ஸ்ரீனிவாசாச்சாரியார், நாகசண்முகம், கிரி டிரேடிங் ஏஜென்ஸி, 10. கபாலீஸ்வரர் சன்னதி தெரு, சென்னை-4, ரூ 2-00.

704. ஸ்ரீதர்ம சாஸ்தா. (பதி. 4), குளத்து அய்யர், கே. எஸ்., வானதி, பதிப்பகம், சென்னை -17.

**தத்துவம்**

705. அறிவுக்கு விருந்தாகும் 1000 நீதிகள், சோலையப்பன், அரு., அருணோதயம், இராயப்பேட்டை, சென்னை-14, ரூ 10-00.

706. ஆசாரிய ஸ்வாமிகள் உபந்நியாசங்கள், சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள், கலைமகள் காரியாலயம், சென்னை-4, ரூ 7-50.

707. ஆன்மீகமும் அரசியலும், சிவஞானம், ம.பொ., விசாலாட்சிப் பதிப்பகம், 8. இராமசாமி கார்டன் தெரு, சென்னை-14 ரூ 8-00.

708. ஆன்மீகமே அறிவியல், கிருஷ்ணன், ஆர். ஆர்., 19. ஜானகி ராமன் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை 3, ரூ3·00.

709. ஆன்மீக விளக்கு, சுப்பிரமணியன், ஏ. வி, கலைஞன் பதிப்பகம், சென்னை, ரூ 10-00.

710. இந்திய தத்துவஞானம் (பதி.3), லஷ்மணன் கி., பழனியப்பா பிரதர்ஸ் சென்னை-14, ரூ 15-00.

711. இந்திய நாத்திகமும் மார்க்சியத் தத்துவமும் (பதி. 2) வானமாமாலை, நா., நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-98, ரூ 2-00.

712. இலக்கியச் சித்தரின் ஞானப்பூக்கள், லோகிதாசன், தங்க வயல்., ஓரி நிலையம், சென்னை-14, ரூ 4-00.

713. இளைஞர்களே உங்களுக்கு, முத்து. ஆர். எம்., மகிழம்பாடி, புரத்தாகுடி அஞ்சல், லால்குடி தாலுக்கா, திருச்சி மாவட்டம்.

714. ஈச முதலிய ஆறு உபநிஷத்துக்கள், ராமராவ், எம்., 18. ரெட்டி ராவ் குளம் வடக்கு, கும்பகோணம்.

715. உயர்வு உன் கையில், ராவ், வி. எஸ், ஆர்., வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 7-00.

716. ஒழுக்க நெறிகள், வகுப்பு, 9 (பதி.2), மந்திரம், வே., புனை, ஓம் காளி பப்ளிஷர்ஸ், 29. ராஜாபாதர் தெரு, சென்னை-17, ரூ 2-25.

717. காஞ்சிப் பெரியவர்கள் பொன்மொழிகள், சந்திரசேகரேந்திர சரஸ்வதி, வானதி பதிப்பகம் சென்னை-17, ரூ 5-00.

718. ஞானச்செல்வர் நல்லுரைகள், நாராயணன், எம்., செந்தில் பதிப்பகம், 4. மாரியம்மன் கோயில் தெரு, கோடம் பாக்கம், சென்னை-24, ரூ 5-00.

719. ஞானமும் வாழ்வும் (பதி. 3), வேதாத்திரி மகரிஷி, லோகிநாத்., உலகசமுதாய சேவாசங்கம், கோயமுத்தூர்.

720. குடும்பக்கலை அல்லது வாழ்க்கை விளக்கம் (பதி. 2), வேலவன், வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 12-00.

721. குடும்பச் சுடர் (பதி. 5), சரசு சம்பந்தம், வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 6-00,

722. குடும்ப வரவு செலவைவகைப்படுத்துவது எப்படி?கணேசன், பி.சி., வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 4-50.

723. சங்ஷேப சாரீரகம், பா. 1.ஸ்ரீசருவக் ஞானம் முனிவர், கிருஷ்ணசுவாமிகள், கோ. ஆ., மடாலயம், திருக்களர் போஸ்ட், நடுவகளப்பான் (வழி), மன்னார்க்குடி தாலுக்கா, தஞ்சை, ரூ 50-00.

724. சங்ஷேப சாரீரகம், பா. 2. '' ரூ 50-00.

725. சாங்கிய காரிகை, சுப்பிரமணியன், நெல்லை. க, உமா நூலகம், 19. வேம்படித்தெரு, திருநெல்வேலி - 6 ரூ6-00.

726. சைவசித்தாந்தத் திறவு, வச்சிரவேல் முதலியார், க., மதுரை காமராசர் பல்கலைக் கழகம், பல்கலை நகர், மதுரை-625021, ரூ 8-00.

727. தமிழர் மெய்யியல், குணா, பொதுமை வெளியீடு. 16. மங்கேஷ் தெரு, சென்னை-17, ரூ 20-00.

728. திருப்தியாய் இருப்பது எப்படி? முத்துக்காளத்தி. மு., பாரி நிலையம், சென்னை-1, ரூ 4-00.

729. நல்ல எண்ணம் நன்மையைத் தரும், மெர்வின், நர்மதா, பதிப்பகம், சென்னை-17, ரூ5-00.

730. நல்வாழ்வு வாழ, நஞ்சப்பா,சி. யு., முருகானந்த நிலையம், சிக்காரம்பாளையம் அஞ்சல், காரமடை வழி, கோயம்புத்தூர், ரூ 2-50.

731. நன்னெறி நூல் வகுப்பு 9. (பதி. 7), தமிழ் இலக்கியக் கழகம், திருச்சி-620001, ரூ 2-00.

732. நாத்திகர் போர்வாள், ஆனைமுத்து, திருச்சி வே., பெரியார் நூல் வெளியீட்டகம், 27/14. கஜபதிபேகம் தெரு, சென்னை-14, ரூ 5-00.

733. நாளை நமதே, இரத்தின சண்முகனார், அறிவு நிலையம், 62/1. பைகிராப்ட்ஸ் சாலை, சென்னை-5.

734. பணம் வேண்டுமா? (பதி. 6), தமிழ்வாணன் புனை, மணிமேகலைப் பிரசுரம், சென்னை-17, ரூ 6-25.

735. மன அமைதிக்குச் சில வழிகள், கணேசன், பி. சி., வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 4-00.

736. மனக்கவலைக்கு மருந்து (பதி. 4), வேலவன், வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ5-00.

737. மனமும்பிரார்த்தனையும் (பதி.3), உதயமூர்த்தி, எம். எஸ்., வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 5-00.

738. மாயை, சரவணானந்தா, சத்திய ஞானக்கோட்டம், திண்டுக்கல், ரூ 4-00.

739. ரமண மகரிஷி, சுவாமிநாதன், கே , நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா, புதுதில்லி, ரூ 8-50.

740. வள்ளலார், பாலசுப்பிரமணியம், மீ., குமரி மாவட்ட வள்ளலார் நற்பணி மன்றம், நாகர்கோவில், ரூ 2.50.

741. வாழ்க்கைப் படகு, மணவாழ்வு அறிவு நூல், ரதிரா, புனை, அரசுப் பதிப்பகம், கிழவநேரி, நெல்லை, ரூ 2-50.

742 விஞ்ஞான மெய்யறிவுத் திருப்பணி பாகம். 2. கீதை விஞ்ஞானம். நவீனம், ராமன், டி.வி , விஞ்ஞானமந்திர், சேரமஹாதேவி, தென்னிந்திய ரயில்வே, ரூ 3-00.

743. வேதவித்தகர் வியாசர், வானதி, பதிப்பகம், சென்னை-7,

744 ஸ்ரீமத் பகவத்கீதை. (பதி. 2), ஸ்ரீனிவாஸ ராமஸ்வாமி, நல்லான் சக்கரவர்த்தி, அன்னம் பப்ளிகேஷன்ஸ், பிளாட் நெ. 421, 5 வது செக்டார், 26/வது தெரு, கே. கே. நகர், சென்னை-78, ரூ 5-90.

745. ஸ்ரீ விடயபுரம் மகான் சரிதமும் மஹாமாயா விலாச விளக்க உரையும், கல்யாண், த்ரிசக்தி பதிப்பகம், 6- அந்தோணி தெரு, ராயப்பேட்டை, சென்னை-14, ரூ 7-00.

**மன நூல்**

746. இல்லற இன்பம், வெங்கடராவ், கே., மாருதி பதிப்பகம், 173. பீட்டர்ஸ் ரோடு, சென்னை - 14, ரூ 16-50.

747. உடலுறவில் மனைவியை மகிழ்விப்பது எப்படி? தமிழ் வாணன், மணிமேகலைப் பிரசுரம், சென்னை - 17, ரூ 8-00.

748. ஊருக்கு நல்லது, சுந்தரவடிவேலு. நெ. து , வானதி பதிப்பகம், சென்னை - 17, ரூ 7-50

749. ஐம்பொறி அகராதி, சதாசிவம், மு., மீரா நிலையம், 35. பாப்பாத்தி சாடு, ஈரோடு-4, ரூ 20-00.

750. காலத்தைப் பயன்படுத்துவது எப்படி? கணேசன், பி சி , வானதி பதிப்பகம் சென்னை - 17, ரூ 4-00.

751. சாமுத்திரிகா லட்சணம், மணிமேகலை பிரசுரம், சென்னை - 17, ரூ 8-00.

752. சிரித்து மகிழ சிறந்த ஜோக்குகள், மணிமேகலை பிரசுரம், சென்னை- 17, ரூ 8-90.

753. தாழ்வு மனப்பான்மையை போக்குவது எப்படி? கணேசன், பி. சி., வானதி பதிப்பகம், சென்னை - 17, ரூ 4-00.

754. மனைவியுடன் மகிழ்ச்சியாக வாழ்வது எப்படி? நவராஜ் செல்லையா, எஸ்., சாந்திமலர் பதிப்பகம், 46. ரெங்கநாதன் தெரு, சென்னை - 17, ரூ 4-00.

755. ஹாய்ய உலகம் : 1001 ஜோக்ஸ், தஞ்சை குஞ்சித பாதம், புனை, சரோஜா பப்ளிகேஷன்ஸ், 190. பீட்டர்ஸ் ரோடு, சென்னை - 14, ரூ 8-00.

**பயண நூல்**

756. எனது யாழ்ப்பாணமே, சச்சிதானந்தன்., க,காந்தளகம், 72. அய்யாவு நாயுடு வீதி, சென்னை - 3.

757. கோவா செல்வோம், குப்புசாமி, குரும்பூர்.

758. திரைக்கடல் ஓடித்தேடிடும் செல்வம், ஷேக்கோ, பாப்புலர் பப்ளிஷர்ஸ், 12. சேக்மதார் தெரு, இளையான்குடி, இராமநாதபுரம் மாவட்டம், ரூ 2-00.

759. நான் கண்ட ரஷியா, அகிலன், புனை, பாரி புத்தகப் பண்ணை, 58. டி. பி. கோயில் தெரு, சென்னை - 5, ரூ 8-25.

760. புண்ணிய பாரதம், (பதி.2), பரணீதரன், புனை.

761. புண்ணிய பூமியில் புனித யாத்திரை, சிதம்பரம், வி. என்., வானதி பதிப்பகம், சென்னை - 17, ரூ 5-00.

762. ராக்கெட்டுகள் மூலம் விண்வெளியில், கமலா பத்மகிரீஸ்வரன், நர்மதா பதிப்பகம், 1. வியாசராவ் தெரு, தியாகராயநகர், சென்னை - 17, ரூ 8-00.

763. வடநாட்டுத் தலங்கள், முத்துப்பிள்ளை, சி., பைலர் பப்ளிகேஷன்ஸ், 81. வேயப்பச்செட்டித்தெரு, சென்னை - 1, ரூ 5- 00.

**வரலாறு**

764. இந்திய அரசியல் சட்டம் : ஒரு மோசடி, ஆனைமுத்து, திருச்சி வே., பெரியார் நூல் வெளியீட்டகம், 27/14 கஜடிபேகம் தெரு, சென்னை - 14.

765. இன்றைய இந்தியா, சங்கர நாராயணன், கு., பாமதி பதிப்பகம், 4. நம்பி நாயுடு தெரு, ஸ்ரீவில்லிபுத்தூர், முகவை மாவட்டம், ரூ 8-50.

766. சமாதானக் கொள்கையும் அதற்கு எதிரான யுத்த வெறிக் கோட்பாடும், ஆப்கானிஸ்தான் உண்மை விவரங்கள், NCBH, 41. பி. சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை-98, ரூ 1-50.

767. சோவியத்நாட்டில் முஸ்லிம்கள், வஹாபோவ், அப்துல்லா., சோவியத் நாடு அலுவலகம், 115. தியாகராயா ரோடு, சென்னை - 17, ரூ 1-50.

768 தமிழக வரலாறு, 1565—1980, கணபதி, அ., மல்லிகை பதிப்பகம், 53, நியூ எ. ஐ. ஸி. காலனி, அண்ணாநகர், மதுரை - 20, ரூ 16-00.

769. தமிழக வரலாறு, மாசிலாமணி, பா., கஸ்தூரி பாகாந்தி கன்யா குருகுலம், வேதாரண்யம், ரூ 10-00.

770. தலைவன் ஒரு சிந்தனை, (பதி. 2), உதயமூர்த்தி, எம். எஸ்., வானதி பதிப்பகம், சென்னை - 17, ரூ 5-00.

771. புதுக்கோட்டை சமஸ்தான வரலாறு, சிரஞ்சீவி (பதி), அபிராமி பப்ளிகேஷன்ஸ், 307. லிங்கி செட்டித் தெரு, சென்னை - 1, ரூ 7-50.

772. மதுரை மாவட்ட சுதந்திரப் போராட்ட வரலாறு, சோமையாஜீலு, என். ஜி. ஓ. காலனி, திருநெல்வேலி - 7, ரூ 50-00.

773. வகுப்புரிமைபோராட்டம் ஏன்? ஆனைமுத்து, திருச்சி. வே., பெரியார் நூல் வெளியீட்டகம், 27/14. கஜடி பேகம் தெரு, சென்னை - 14, ரூ 8-00.

774. வரலாற்றுப் போக்கில் பழையாறை மாநகர், மகாதேவன், வே., அன்னபூர்ணாபதிப்பகம், திருப்பனந்தாள், ரூ 6-00

**அரசியல்**

775. 1982ல் தமிழ் ஈழம், தமிழ் கோ ஆர் டிரேடிங் கமிட்டி, 55. வாரன்சாலை, லண்டன்-19, ரூ 3-00.

776. தமிழ் ஈழம் கோரி ஐ. நா. பொது மன்றத்தில் முழக்கம், அரங்க முருகையன், குலோத்துங்கன் வெளியீட்டகம் 19. இருபத்தோராவது தெரு, கும்பகோணம்-1, ரூ 5-00.

777. நல்லெண்ண நட்புறவுத்தூதர், எல். ஐ. பிரேஸ்னேவின் இந்திய விஜயம், சோவியத்நாடு ஆபீஸ், 115. தியாகராய ரோடு, சென்னை-17, ரூ 10 00.

778. புரட்சி (பதி.3), சுபாஷ் சந்திரபோஸ் நேத்தாஜி., தமிழ்ப் புத்தகாலயம், 58. டி.பி. கோயில் தெரு சென்னை-5, ரூ 1-50.

779. பொது உடைமைவாதிகளும் பெரியார் கொள்கைகளும், ஆனைமுத்து, திருச்சி வே., பெரியார் நூல்வெளியீட்டகம், 27 14 கஜடி பேகம் தெரு, சென்னை-14, ரூ 5·00.

780. லெனின் வாழ்வும் பணியும், ஜெவின் கொளகேஸ், ஜி., சோவியத் நாடு பிரசுரங்கள், 115 தியாகராய நகர், சென்னை-17, ரூ 2-00.

**பொருளாதாரம்**

781. என்ன செய்யவேண்டும் பாகம்-1 (பதி.2), தமிழ்வாணன், லேனா., மணிமேகலைப்பிரசுரம், சென்னை-17, ரூ 12-00.

782. 1966-ஆம் ஆண்டு இருப்புப்பாதை சொத்துச்சட்டம் சட்ட எண் 29,1966 இந்தியச் சட்டம், நீதி மற்றும் கம்பெனி விவகாரங்கள் அமைச்சகம், இயக்குநர், தமிழ்நாடு எழுது பொருள் அச்சுத்துறை, சென்னை.

783. சட்டமும்தூண்டுவிசையுமேதிட்டம், பிகார்ஸ் கி வியோனத், சோவியத்நாடு பிரசுரங்கள், 115. தியாகராய நகர் ரோடு, சென்னை-17, ரூ 1·00.

784. சிறுதொழில் செய்யுங்கள் (பதி.2), தமிழ்வாணன், மணி மேகலை பிரசுரம், சென்னை-17.

785. சோவியத் யூனியன் பற்றிய அவதூறுகளுக்கு பதில், ஸ்திரல் ராணி, எ., சோவியத்நாடு பிரசுரங்கள், 115. தியாகராய நகர் ரோடு, சென்னை-17, ரூ 1-00.

786. சோஷிலிசம் நனவாகிய கனவு, கோவெஷ்னி கோவ், எ. புகசேவ், போரில் சோவியத்நாடு அலுவலகம், 115, தியாகராயநகர் ரோடு, சென்னை-17, ரூ 1-50.

787. நீங்களும் சிறுதொழில் நடத்தலாம் (பதி.5), சூசை ராஜா, எஸ். ஏ., நியு செஞ்சுரிபுக்ஹவுஸ், 41-பி.சிட்கோ இண்டஸ் டரியல் எஸ்டேட், சென்னை-98, ரூ 3-50.

788. 160 சிறுதொழில் முறைகள், சூசைராஜா, எஸ். ஏ., ஸ்டார் பிரசுரம், 72 பெரியதெரு, சென்னை-5, ரூ 8-50.

789. வியாபாரத்தை செய்வது எப்படி? (பதி. 5), தமிழ்வாணன், புனை, மணிமேகலைப் பிரசுரம், 4. தணிகாசலம் செட்டிரோடு, சென்னை-17, ரூ 5-50.

**நாட்டுப்புற இலக்கியம்**

790. இராமப்பய்யன் அம்மானை-ஓர் ஆராய்ச்சி, கமலையா, க.சி., தமிழ்ப் புத்தகாலயம், 58. டி.பி. கோயில் தெரு, சென்னை-5, ரூ 6-00.

791. உடையார் கதை, நடராசன், தா., கூடல் பப்ளிஷர்ஸ், 121. மேலமாசி வீதி, மதுரை-1, ரூ 10-00.

792. உலக நாடோடிக் கதைகள் (பதி. 3), திருவாணன், வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 12-50.

793. கண்ணீர் வயல்கள், முகமதலி ஜின்ன, மு., சாரதி பதிப்பகம், 15. கணபதி தெரு, மேற்கு மாம்பலம், சென்னை-33. ரூ 55-00.

794. சாஸ்திரப்படி வீடுகட்டுவது எப்படி? மணிமேகலைப்பிரசுரம், சென்னை-17, ரூ 6-25.

795. சோவியத் நாட்டில் முஸ்லீம்கள், வஹாபோவ், அப்துல்லா., சோவியத்நாடு அலுவலகம், 115. தியாகராயா ரோடு, சென்னை-17. ரூ 1-50.

797. தமிழ் பண்பாட்டுப் புரட்சி, ஆனைமுத்து, திருச்சி வே., பெரியார் நூல் வெளியிட்டகம், 27/14. கஜபதிபேகம் தெரு, சென்னை-14. ரூ 20-00.

798. தமிழில் நாட்டுப்புறப் பாடல்கள், சண்முகசுந்தரம், சு., மணிவாசகர் நூலகம், சிதம்பரம், ரூ 13-50.

799. துப்பறியும் கலையில் வல்லவராவது எப்படி? தமிழ்வாணன், லேனா., மணிமேகலைப் பிரசுரம், சென்னை-17, ரூ 7-75.

800. நாட்டுப்புற இலக்கிய வரலாறு, சண்முகசுந்தரம், சு., மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

801. பயனுள்ள பரிசு-குடும்பவாழ்வு, சின்ன அண்ணாமலை, சங்கம் பலகை 39. சாதுல்லா சாலை, சென்னை-17.

802, பழந்தமிழர் வீரப்பண்பாடு! ஒப்பிலக்கியக் கணிப்பு மகாதேவன், கதிர்., இலட்சுமி வெளியீடு, 271 அறிஞர் அண்ணாநகர், மதுரை-20, ரூ 30-00.

803. விளையாட்டுத் துறையில் சொல்லும் பொருளும், நவராஜ் செல்லையா, எஸ்., ராஜ்மோகன் பதிப்பகம், சென்னை-17, ரூ 4-50.

மலர்கள்

804. அமுதசுரபி தீபாவளி மலர், ஸ்ரீராம் டிரஸ்ட், 123 அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை-1.

805. அமுதசுரபி கைத்தறிச் சிறப்பு மலர், விக்கிரமன், புனை, எ.வி.எஸ். ராஜா, ஸ்ரீராம் டிரஸ்ட், 123. அங்கப்பன் நாயக்கன் தெரு, சென்னை-1, ரூ 6-00.

806. அனைத்துக் கல்லூரி மாணவர் தமிழ்ப் பேரவை; ஆண்டு மலர் 1979-80, அனைத்துக் கல்லூரி மாணவர் தமிழ்ப் பேரவை, சென்னை.

807. ஆனந்த விகடன் பொன்விழா மலர், வாசன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிட்டெட், 757. அண்ணாசாலை, சென்னை-2, ரூ 25-00.

808. கல்கி தீபாவளி மலர், பரதன் பப்ளிகேஷன்ஸ், சென்னை-32, ரூ 20 00.

809. கல்கி: விடுமுறை சிறப்பு மலர், ராஜேந்திரன், கே. (பதி) பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிட், கிண்டி, சென்னை-32, ரூ 32-00.

810. கலைமகள்: தீபாவளி மலர், கலைமகள் காரியாலயம், 87 முண்டகக்கன்னி அம்மன் கோயில் தெரு, சென்னை-4, ரூ 15-00.

811. சௌராஷ்டிர மணி: பொங்கல் மலர், கோவிந்தசாமி, பி.ஆர்., சௌராஷ்டிரமணி, 15. நடனகோபாலர் வீதி, கும்பகோணம்-612 001, ரூ 2-50.

812. புதுவை மாநிலக் கூட்டுறவு இயக்க வெள்ளிவிழா சிறப்பு மலர்-1980, புதுவை மாநில கூட்டுறவு ஒன்றியம், 23. மாதா கோயில் வீதி, பாண்டிச்சேரி-605 001.

813. மங்கை: தீபாவளி மலர், டால்டன் பப்ளிகேஷன்ஸ், சென்னை-26, ரூ 6-00.

வாழ்க்கை வரலாறு

814. அண்ணா எனும் இலக்கியவாதி, கணேசன், பி.சி., மாதவி பதிப்பகம், சுபோதயா பில்டிங், 192. ராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை-4, ரூ2-25.

815. அப்பர், நாகசண்முகம், மாதவி பதிப்பகம், 192. ராயப் பேட்டை நெடுஞ்சாலை, சென்னை-4, ரூ 3-75.

816. அரவிந்தர் (பதி.2), நவஜாதா, நேஷனல் புக் டிரஸ்ட், புது டில்லி, ரூ 8-00.

817. அன்னை சாரதாதேவி வரலாறு, நடராஜன், அ. லெ., கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம், வேதாரண்யம், தஞ்சை, ரூ 15-00.

818. ஆறு மகான்களின் கதைகள், கோபிநாத் தல்வல்கர், NBT, புதுடில்லி-16, ரூ 10-00.

819. இந்தியாவில்முகம்மது அலி, சாலி,ஜே.எம்., நூர் பதிப்பகம், 190. பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14, ரூ 3-00.

820. இந்திராகாந்தி (பதி.5), வேதாசலம், அ., வானதி பதிப் பகம், சென்னை-17, ரூ3-00.

821. ஈழத்துச்சித்தர்கள்,முத்தையா, நா., ஆத்மஜோதிநிலையம், நாவலப்பிட்டி, இலங்கை, ரூ 10-00.

822. உடையார் கதை, நடராசன், தா., கூடல் பப்ளிஷர்ஸ், 121. மேலமாசி வீதி, மதுரை-1, ரூ 1-00.

823. உத்தமர் கதைகள், வசந்தா இராமநாதன், அறிவுநிலையம், 60/1. பைகிராப்ட்ஸ் சாலை, சென்னை-5, ரூ 10-00.

824. உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? சுப்பிரமணியன், ச.வே &கடிகாசலம், ந., உலகத்தமிழாராய்ச்சிநிறுவனம், சென்னை-20, ரூ 6-00.

825. உலோச்சனார்,முத்துச்சாமி,க.,ஏரக வெளியீடு,263-சி. சதா சிவ நகர், மதுரை 625020, ரூ 4-00.

826. என் சிந்தனைக் குறிப்பு, மாரப்ப கவுண்டர், வி., லட்சுமி பதிப்பகம், ஜீவன் பிரஸ், தீர்த்தாரப்ப முதலித் தெரு, சென்னை-5, ரூ 16-50.

827. கலைத்தந்தை கருமுத்து தியாகராசர் வாழ்க்கை வரலாறு, குழந்தைநாதன், சு., விசாலாட்சிபதிப்பகம், 140 தெற்கு வெளி வீதி, மதுரை-1, ரூ 10-00.

828. கன்னியாகுமரி அன்னை மாயம்மா, பெருமாள், அ. கா.' எஸ். மோனிந்திரன், 7. பெருமாள் தெரு, ஆர்.வி. புரம், நாகர்கோவில், ரூ 5-00.

829. சமயச் சான்றோர்கள், நாராயண வேலுப்பிள்ளை, எம்., ரேவதி பதிப்பகம், 33. கணபதி தெரு, மேற்கு மாம்பலம், சென்னை-33, ரூ 7-25.

830. சர்தார் வல்லபாய் படேல், விஷ்ணு பிரபாகர், நேஷனல் புக் டிரஸ்ட், ஏ-5. கிரீன்பார்க், புதுடில்லி-16, ரூ 6-25.

831. சிறுவர்களுக்கு விவேகானந்தர் (பதி.2), பார்த்தீபன், வெ., ராமன் பதிப்பகம், சென்னை-18, ரூ 3-25.

832. செட்டிநாட்டரசர் மெய்க்கீர்த்தி மாலை, இளங் கோவன், அ.ப., இளங்கோவன், 58. சித்திரக்குளம் வடக்குத் தெரு, சென்னை-4, ரூ 5-00.

833. ஞானதீபம், கலைவாணன், புனை, கலைவாணர் பதிப்பகம், சேக்கிழார்இல்லம், திருவானைக்கா, திருச்சிராப்பள்ளி-5, ரூ 10-00.

834. தாயுமானவர் வாழ்வும் வாக்கும், நடராஜன், அ. லெ , கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம், வேதாரண்யம், ரூ 7-00.

835. நான் சந்தித்த மனிதர்கள் காமராஜர், பெரியார், அண்ணா, ஈ. வெ. கி. சம்பத், கருணாநிதி, கணேசன், பி.சி , மாதவி பதிப்பகம், 192. இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை-4, ரூ 6-00.

836. பரமன் அடியார் பத்துப்பேர், பண்ணை கோமகன், வேங் கடவன் வெளியீட்டகம், கொங்குவார்பட்டி, பெரிய குளம் வட்டம், மதுரை-624203, ரூ 6-00.

837. பாரத ரத்னா ராஜாஜி, விசுவநாதன், சீனி., புவனேஸ்வரி பதிப்பகம், 2. மாடல் ஹவுஸ்லேன், சி. ஐ டி. நகர், சென்னை-35, ரூ 9-00.

838. பாரதிதாசன் பெருமை, முல்லை முத்தையா, அபிராமி பப்ளிகேஷன்ஸ், 307. லிங்கி செட்டித் தெரு, சென்னை-1, ரூ 1-00.

839. பிரகாசம், சந்தான லட்சுமி, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-14, ரூ 2-00.

840. புதுமைப்பித்தன் வரலாறு, ரகுநாதன், புனை, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை-1, ரூ, 10-75.

841. புரந்தரதாசர், சீதாராமையா, வி., நேஷனல் புக் டிரஸ்ட், புதுடில்லி, ரூ 6·75.

842. பெரியார் ஒரு சரித்திரம், வேணு, ஏ. எஸ்., பூம்புகார் பிரசுரம், சென்னை-1, ரூ 6-90.

843. பேரறிஞர் அண்ணாவின் பெருவாழ்வு (பதி. 4), மறைமலையான், அ., வானதிபதிப்பகம், சென்னை-17, ரூ 10.00.

844. பொது வாழ்வில் எனது அனுபவங்கள், சுப்பையா, கே. சி., கேசியெஸ் பதிப்பகம், பெருந்துறை, ஈரோடு, ரூ 10-00.

845. மகரிஷி தேவேந்திரநாத தாகூர் (இந்திய இலக்கியச் சிற்பிகள்) சௌதுரி, நாராயண், சாகித்திய அகாதெமி, ரவீந்திர பவன், புதுடில்லி-1, ரூ 2-50.

846. வரலாறு கண்ட வைக்கம் வீரர், மங்கையர்க்கரசி, மருதமலையான் பதிப்பகம், 33. பொன்னுசாமி நாயக்கன் தெரு, சென்னை-14, ரூ 12-00.

847. வழிகாட்டும் உத்தமர்கள், (பதி.3), வெங்கடராம், எம். வி., வானதி பதிப்பகம், சென்னை-17, ரூ 4-00

848. வழிகாட்டும் விளையாட்டு வீரர்கள், நவராஜ் செல்லையா, எஸ்., ராஜ்மோகன் பதிப்பகம், சென்னை-17, ரூ 3-25.

849. விடுதலைக்கு வித்திட்ட வித்தகர்கள், (பதி.2), கமலா, எஸ்., மீனா புத்தக நிலையம், மதனகோபால் தெரு, அபிராமபுரம், சென்னை - 18, ரூ 4 00.

850. ஸ்டாலின், இராமகிருஷ்ணன், எஸ்., தமிழ்ப், புத்தகாலயம், 58.டி. பி. கோயில் தெரு, சென்னை-5, ரூ 7-00.

# மலேசியாவில் தமிழ்

இரா. தண்டாயுதம்

தமிழகத்திற்கு வெளியே கடல்கடந்த நாடுகளில் இலங்கையை அடுத்து, தமிழிலக்கிய உருவாக்கத்தில் அதிகக் கவனம் செலுத்தி வரும் நாடுகளில் மலேசியா முதன்மையானது. தனது மக்கள் தொகையில் ஏறத்தாழப் பத்து விழுக்காட்டினரை இந்தியராகக் கொண்டிருக்கும் மலேசியா, தமிழ்க்கல்வி நிலைபெறவும், தமிழிலக்கியம் வளரவும் பல வாய்ப்புக்களை அளித்து வருகிறது. ஐநூற்று அறுபதுக்கும் மேற்பட்ட தமிழ்ப் பள்ளிகள் இந்நாட்டில் உள்ளன. மலாயாப் பல்கலைக் கழக இந்தியப்பகுதி உயர் நிலையில் தமிழ்மொழியும் இலக்கியமும் பயில பல அரிய வாய்ப்புக்களை அளித்து வருகின்றது. இந்தியர் தொடர்பான சமூகவியல், பண்பாட்டியல், வரலாறு முதலிய பல துறைகள் இங்குப் போதிக்கப்படுகின்றன. தென்கிழக்காசியாவில் இராமாயண மரபு இங்குப் போதிக்கப்படும் பாடங்களில் தனிச் சிறப்புப் பெற்றதாகும். தமிழ்மொழி தொடர்பான மொழியியல், இலக்கணமும், தமிழிலக்கியம் தொடர்பான சங்ககால, இடைக் கால, தற்கால இலக்கியங்களும் இங்குப் பாடத்திட்டத்தில் இடம் பெற்றுள்ளன. பத்திரிகைத் துறையில் தமிழ்நேசன், தமிழ்மலர் ஆகிய இரண்டு நாளிதழ்களும், 'புதிய சமுதாயம்', 'உதயம்' என்ற இரண்டு திங்களிதழ்களும், 'வானம்பாடி' என்ற வார இதழும் வெளிவருகின்றன. இவற்றில் 'உதயம்' திங்கள் இதழை அரசின் செய்தி-தொடர்புத்துறை அமைச்சகமே வெளியிடுகின்றது. மலேசிய வானொலியும் தமிழில் பல நிகழ்ச்சிகளைப் படைத்து வருகின்றது. மலேசியாவெங்கும் பரந்துள்ள பல தமிழர் அமைப்புக்களும் அவ்வப்போது தமிழிலக்கிய வளர்ச்சியில் கவனம் செலுத்தி வருகின்றன.

இச்சூழலில் கடந்த ஒரு நூற்றாண்டுகால வரலாற்றைப் பெற்றிருக்கும் மலேசியத் தமிழ் இலக்கியம் 1980-இல் எப்படி இருந்தது என இனிப் பார்ப்போம்.

மலேசியாவில் தமிழ்ப் பத்திரிகைகளே தமிழிலக்கியத்தைப் பேணிக்காக்கும் செவிலித்தாய்களாக உள்ளன. கவிதை, சிறுகதை முதலிய படைப்பிலக்கிய வகைகள் அவ்வளவும் பத்திரிகைகளின் ஞாயிறு இதழ்களிலும், பிற வார மாத இதழ்களிலுமே வெளி வருகின்றன. இதற்குமேல், இவற்றை நூலாக்கி முறையாக வெளி யிடும் பதிப்பகங்கள் இங்கு இல்லை. அப்படியே யாராவது நூலாக்க முயன்றாலும், தம் சொந்த முயற்சியில்தான் செய்ய வேண்டும். அப்படிச் செய்தாலும், விற்பனைக்குரிய வாய்ப்புக்கள் குறைவு. நூல்களை வெளியிட்ட எழுத்தாளர்களே முயன்று அவற்றை விற்கவும் வேண்டும். தொடர்ந்து பல ஆண்டுகளாக எழுதி வருபவர்கள் கூட, தங்கள் படைப்புக்களை நூல்களாக்கிப் பார்க்க முடியாத இந்நிலை, இலக்கிய வளர்ச்சிக்கு ஒரு பெரிய தடைக்கல் என்பதில் ஐயமில்லை. இச்சூழலில் இப்பெருந்தடை யையும் மீறிப் படைப்பிலக்கிய ஆசிரியர்களே பல துன்பங்களுக் கிடையில் தங்கள் படைப்புக்களை நூலாக்கி வருகின்றனர். இவற்றை அறிமுகப்படுத்தும் நூல் வெளியீட்டு விழாக்கள் கடந்த ஆண்டுகளில் பெருகி வருகின்றன. இந்நிலைக்கு அடுத்த நிலை யாக, வெளியிடப்படும் நூல்கள் வாசகர்களை எளிதில் அடைய வழிவகைகள் செய்யப்படுமானால், இலக்கிய வளர்ச்சிக்குத் தூண்டுதலும் கிடைக்கும்; எண்ணிக்கையும் பெருகும்.

இத்தகைய ஒரு முயற்சி 1980-இல் இங்கு நடந்தது மலேசியலத் தமிழ் வார ஏடான 'வானம்பாடி' இவ்வாண்டுத் தொடக்கத்தில் 'மாத நாவல் திட்டம்' ஒன்றை அறிவித்தது. இத்திட்டத்தின் முதல் நாவலான 'தூரத்து நிலவு' பிப்ரவரி மாதம் வெளிவந்தது. இதன் ஆசிரியரும், இத்திட்டத்தின் பொறுப்பாளருமாகிய ஆதி. குமணன் தம் முன்னுரையில் இதன் நோக்கத்தைத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். "நம் நாட்டில் நூல் வெளியீடு என்பது, பணவசதி படைத்த ஒரு சிலரின் தயவில் சில புத்தகங்களைப் போணியாக்குகிற, அதன் மூலம் ஓரளவு பணம் பண்ணுகிற ஒரு வியாபாரமாகவே பெரும்பாலும் இருந்து வந்திருக்கிறது. இதற்கு விதிவிலக்குகளும் உண்டு. ஆனால் அது மிகவும் சொற்பமே... அப்படிப்பட்ட நிலைமையோ அதற்கான வழிவகைகளோ நம் நாட்டில் ஏன் இல்லை என்று எழுந்த கேள்வியின் பயனாகத்தான்

இந்த மாதம் ஒரு நாவல் திட்டம் பிறந்தது'' என்பது அம் முன்னுரைப் பகுதி. வெளியீட்டு வாய்ப்பு-வசதிக் குறைவின் காரணமாகப் பலவீனப்பட்டிருக்கும் மலேசியத் தமிழ் நாவல் வரலாற்றில் சிறப்பாகவும், இலக்கிய வரலாற்றில் பொதுவாகவும் குறிப்பிடப்பட வேண்டிய நிகழ்ச்சி இது. இத்திட்டத்தின் கீழ் இவ்வாண்டில் ஒன்பது நாவல்களும், தனிப்பட்ட முறையில் ஒரே யொரு நாவலுமே வெளிவந்திருக்கின்றன என்ற உண்மையும் இங்குக் கவனத்தில் கொள்ள வேண்டிய ஒன்றாகும்.

இனி, ஒவ்வொரு இலக்கிய வகையாகப் பார்ப்போம்.

**நாவல்**

'வானம்பாடி' இதழின் 'மாதம் ஒரு நாவல்' திட்டத்தின்படிப் பிறந்த முதல் நாவல் 'தூரத்து நிலவு' நட்பையும் அன்பையும் மையமாகக் கொண்டு பின்னப்பட்ட ஒரு கதை. சக்கரவர்த்தி, அசோகன், நீலா என்ற மூன்று கதைமாந்தர் களைச் சுற்றிக் கதை படர்கிறது. சிறுவனாக இருக்கும்போதே தாய் ஓடிப்போன செய்கையால் சமுதாயத்தின் ஏளனத்திற் குள்ளாகும் சக்கரவர்த்தி, பார்வை இழந்த அசோகனுடன் நட்புக் கொள்வதும், நீலாவிடம் அன்பு கொள்வதும், இடையில் எழும் சில சிக்கல்களும் இங்குக் கதையாகி உள்ளன.

எம். துரைராஜ் எழுதிய 'நேரம் வந்து விட்டது' இத் திட்டத்தின் இரண்டாவது நாவலாக மார்ச் மாதம் வெளி வந்தது. கடுமையான உழைப்பின் மூலமே ஒரு சமுதாயம் முன் னேற முடியும் என்பதை வற்புறுத்தி எழுதப்பட்ட நாவல் இது. அமுதன் என்ற கதைமாந்தர் வழி ஆசிரியர் இதனை வற்புறுத்து கிறார். தான் முன்னேறுவதோடு, தன்னைப் போன்ற இளைஞர்கள் முன்னேறுவதற்கும் இதில் அமுதன் வழிகாட்டு கிறான்.

மூன்றாம் நாவலான 'துறவி'யின் தெருக்கூத்து, ஒரு பெண்ணின் சோக வாழ்க்கையை மையமாகக் கொண்டது. தமிழ் நாட்டிலிருந்து ஆசைகாட்டி மணம்புரிந்து அழைத்துவரும் இளம் பெண்ணான காந்திமதியை அவளுடைய தாய்மாமன் எப்படிப் பட்ட கொடுமைகளுக்கெல்லாம் உட்படுத்தி நிர்மூலமாக்குகிறான் என்பதை இயற்கையாகச் சொல்லிச் செல்கிறது இந்நாவல். நாகப்பட்டணத்தில் கப்பலேறுவதில் தொடங்கும் இந்த நாவல் காந்திமதி படும் துன்பங்களைப் படிப்படியாகக் காட்டிச் செல் கிறது.

மலேசியத் தமிழ் வாசகர்களுக்கு நன்கு அறிமுகமான எம். ஏ. இளஞ்செல்வனின் 'மோகங்கள்' என்ற நாவல் அடுத்து மே மாதத்தில் வெளியானது. ஒரு குடும்பத்தை மையமாகக் கொண்டு பின்னப்பட்ட இக்கதை, சில சமுதாயப் போக்குகளையும் உள்ளடக்கி நிற்கிறது குடும்பத்தலைவராய்ப் பொறுப்போடு செயல்படாமல் 'அரசியல் அரசியல்' என்றலையும் சிவசங்கரன், ஆடம்பரமும் பகட்டுமே வாழ்க்கை எனக் கண்மூடி வாழும் அவர் மனைவி ஜானகியம்மாள், உணர்ச்சிகள் ஆட்டி வைத்தபடி ஆடித் தன் வாழ்க்கையைப் பாழாக்கிக் கொள்ளும் மூத்தமகன் விஜயன், அவனுக்கு வாழ்க்கைப்பட்டு அல்லலுறும் சிந்திக்கத் தெரிந்த நிர்மலா, எழுத்தாளனாகிக் குடும்பத்தோடு ஒட்டாமல் ஒதுங்கி நிற்கும் இளையமகன் மனோகரன், பெற்றோர்களின் பொறுப் பின்மையால் வழிதவறிச் செல்லும் மகள் மஞ்சுளா ஆகியோர் இந்நாவலின் முக்கியக் கதைமாந்தர்கள். ''புரட்சி புரட்சின்னு கறுப்புக்கொடியை உயர்த்திப் பிடித்துக்கிட்டு தேசியக்கொடியை அரைக்கம்பத்திலே பறக்க விடற நோக்கம் என் எழுத்துக்கு இல்ல... காரணம் புரட்சி ரத்தம் என்ற முறையில் சாதிக்க முடியாததைக் கூட சாத்விகத்தினால் சாதிக்க முடியும்...'' என்பதைப் போன்ற நறுக்குத் தெறித்த கருத்துக்கள் ஆசிரியரின் சமுதாய உணர்வினைக் காட்டும்.

இதனையடுத்து ஜூன் மாதத்தில் வெளிவந்த ந.மகேஸ்வரியின் 'புதிய வாரிசு' ஒரு பெண்ணின் அவலங்களையும், அவற்றைக் கண்டு துவண்டு விடாமல் துணிந்து வாழ முற்படும் அவள் மனப் போக்கையும் காட்டும் ஒரு கதை. பிரியாவின் அம்மாவிடம் உள்ள சொத்தைக் கருத்தில் கொண்டே அவளை மணக்கும் வசந்தன் அவளுக்கிழைக்கும் கொடுமைகளையும், அவற்றிலிருந்து விடுபட்டுத் தன் கல்வியின் துணைகொண்டு தனித்து வாழ முற்படும் அவள் துணிவையும் கதை சொல்லிச் சுவையாகச் செல்கிறது.

சீ. முத்துசாமியின் 'விதைகள் பாலைவனத்தில் முளைப்பதில்லை', 'புதிய வாரிசை'த் தொடர்ந்து ஜூலை மாதத்தில் வெளிவந்த நாவல். இவ்வெழுத்தாளர் தமக்கென ஒரு தனி நடையைக் கொண்டவர். புதுக்கவிதையில் சாதாரணமாகக் காணப்படும் சொற்களும் சொற்சேர்க்கைகளும் இவருடைய சிறுகதைகளிலும் காணப்படும். இத்தகைய சொற்களில் தம் கண்ணில்படும் ஒரு சிறு சம்பவத்தையும் காட்சியையும் கூட விடாமல் வருணிப்பது இவர் இயல்பு. இவ்வியல்பை இந்த

நாவலிலும் காணலாம். இதுவும் ஒரு குடும்பக் கதையே! வெவ்வேறு இயல்புகள் கொண்ட அம்மா, அப்பா, அண்ணன், தம்பி ஆகியோருக்கு இடையில் வாழும் சிவகாமி, அவர்களுக்காகத் தன் வாழ்க்கையையே தியாகம் செய்வதுதான் கதை. கதை சாதாரணமாய் இருந்தாலும், மனப்போக்கின் கண்ணோட்டத்தில் சம்பவங்களைப் பார்த்து வருணிக்கும் முறையால் தனித்து நிற்கிறது.

இதனையடுத்து வெளிவந்த நூல் இரண்டு குறுநாவல்களை உள்ளடக்கியது 'வெளிச்சங்கள் வெளிறுவதில்லை' 'உறவுகள் புனிதமானவை' என்பவையே அவை இவற்றை எழுதியவர் எல். முத்து. முதல் குறுநாவல், அரசியலைத் தேடிப்போய் அது கானல்நீர் என உணர்ந்த ஒருவன் கதை. அடுத்தது அறிவாளியாய் இருந்தும் தன் மன ஆழங்களை இனங்கண்டு கொள்ளமுடியாத ஒருவனைப் பற்றியது.

கம்பார் எஸ். வேலுமதி எழுதி அடுத்து வெளிவந்த 'இதயங்கள்' அன்பின் வலிமையைக் காட்டும் ஒரு கதை. மனைவியாகும் நேரத்தில் விபத்தில் உயிரிழந்த காதலியின் நினைவால் விரக்தியையே வாழ்க்கையாக்கிக் கொள்ளும் ஆனந்தனின் இரும்புக்கோட்டையாகிய இதயத்தில் தன் அன்பாலும் பணிவிடைகளாலும் இடம் பெறும் வசந்தியின் செயல்கள் இக்கதையை வளர்த்துச் செல்கின்றன.

'மாதம் ஒரு நாவல்' திட்டத்தில் இவ்வாண்டு இறுதியில் வெளிவந்த அக்கினியின் 'பட்டுப்புழுக்கள்', முதிய தலைமுறைப் பெண்ணுக்கும் இளைய தலைமுறைப் பெண்ணுக்கும் இடையில் ஏற்பட்டு வரும் மாறுதல்களை வெளிப்படுத்தும் ஒரு கதை. ஊரார் பழிச் சொல்லுக்குப் பயந்து தற்கொலை செய்து கொள்கிறாள் லெட்சுமி. அவள் மகள் சிவனேஸ்வரியோ காதலனால் கைவிடப்பட்டுத் தாய்மையடைந்த நிலையிலும், அவளிடம் அன்புகொண்ட ஒருவரோடு வாழ முற்படுகிறாள். தாய்-மகள் இருவருடைய வாழ்க்கையிலும் ஏற்படும் போராட்டங்களே கதையின் அடிப்படை.

இத்திட்டத்தைச் சாராமல் இவ்வாண்டு வெளிவந்த ஒரே நாவலான கொம்பனின் 'சிறை தப்பிய பறவை', சூழ்நிலைகளால் கொடியவனாக மாறிய ஒருவனுடைய கதை. இக்கதையின் நாயகனான சிங்காரமே இவ்வாறு மாறியவன். தன் சூழலிலிருந்து

விடுபட்டுத் திருந்தி வாழ முற்பட்டும், விடுபட முடியாதவாறு அவனுடைய பிணைப்புக்கள் இறுகி நிற்பதைக் கதை காட்டிச் செல்கிறது,

மலேசியத் தமிழிலக்கியத்தைப் பொறுத்தமட்டிலும் நாவலின் வளர்ச்சி தவழ்நிலையிலே உள்ளது. 1917-ஆம் ஆண்டிலேயே இங்கு முதல் நாவல் தோன்றியிருப்பினும், தொடர்ந்து நாவல்கள் வெளிவரும் போக்கை இங்குக் காண முடியவில்லை. இன்றும் தமிழ் நாளிதழ்கள் தொடர்கதைகளுக்குத் தமிழகத்தையே பெரும்பாலும் எதிர்பார்த்துள்ளன. இந்தச் சூழ்நிலையில், பத்து நாவல்கள் தொடர்ந்து வெளிவந்த ஒரே ஆண்டு இதுவாகத்தான் உள்ளது. அவ்வகையில் மலேசியத் தமிழ் நாவல் வளர்ச்சியில் இவ்வாண்டை ஒரு முக்கியத் திருப்பு முனையாகக் கொள்வது பொருந்தும்.

சிறுகதை

மலேசியத் தமிழிலக்கிய வகைகளில், இன்று மலேசியத் தமிழ்ச் சமூகத்துடன் இரண்டறக் கலந்துவிட்ட இலக்கிய வகையாகச் சிறுகதையைக் கொள்ளலாம். மலேசிய இந்தியர்கள்-குறிப்பாகத் தமிழர்கள்-ஒவ்வொரு துறையிலும் எதிர்நோக்கும் பிரச்சினைகள், அவர்களுடைய மனப்போக்குகள் முதலிய யாவும் இன்று சிறுகதைகளிலேயே பெரும்பாலும் பிரதிபலிக்கின்றன. மலேசியத் தமிழ் எழுத்தாளர்கள் தங்களுடைய சமுதாய உணர்வினை வெளிப்படுத்தச் சிறுகதையையே வெளியீட்டுச் சாதனமாகக் கொண்டு விட்டனரோ என்று எண்ணும் அளவிற்கு இங்குச் சமுதாய உணர்வு சிறுகதைகளில் பொங்கி நிற்கக் காணலாம். சிறுகதையின் கட்டுக்கோப்பையும் சொற்செறிவையும் மீறிக்கூட இவ்வுணர்வு மேலோங்கி நிற்பதைப் பல கதைகளில் காண முடியும்.

மலேசியத் தமிழிலக்கியத்தில் சிறுகதை இவ்வளவு முக்கியத்துவம் பெறுவதற்குப் பல காரணங்கள் உண்டு முதலாவது அதன் குறுகிய வடிவம். இரண்டாவது தமிழ்ப் பத்திரிகைகள். புத்தக வெளியீட்டுச் சாதனக் குறைவால் பத்திரிகைகளையே சார்ந்திருக்கும் எழுத்தாளர்கள் அவற்றின் தேவைக்கேற்ப எழுதுவது இயல்பான ஒன்றே! இன்றும் மாதத்திற்குச் சுமார் முப்பதிலிருந்து நாற்பது சிறுகதைகள் வரை பத்திரிகைகளில் வெளியாகின்றன. அடுத்ததாக, சிறுகதை வளர்ச்சிக்காக அவ்வப்போது நடைபெறும் பயிற்சிகள், போட்டிகள் ஆகியவை. இவற்றில் 'தமிழ்நேசன்' நடத்தியகதைவகுப்பு, கு.அழகிரிசாமியின்

இலக்கியவட்டக்கூட்டங்கள், 'தமிழ்நேசனி'ன்பவுன்பரிசுத்திட்டம், தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் மாதாந்திரச் சிறுகதைக் கருத் தரங்குகள் ஆகியவை குறிப்பிடத் தக்கவை. இவற்றின் முடி மணியாக மலாயாப் பல்கலைக் கழக இந்தியப் பகுதி 1978-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் நடத்திய 'மலேசியத் தமிழ்ச் சிறு கதைக் கருத்தரங்கை'க் கூறலாம்.

1980-ஆம் ஆண்டில் சிறுகதை என்று பார்க்கும்போது, பத்திரிகைகளில் வெளிவந்த சிறுகதைகளைத் தவிர்த்து, நூலுரு வாக வந்த சிறுகதைத் தொகுதிகள் ஐந்து. இவற்றில் தனிப்பட்ட எழுத்தாளர்கள் வெளியிட்டவை நான்கு. எழுத்தாளர்-வாசகர் இயக்கம் வெளியிட்டது ஒன்று.

பி. கோவிந்தசாமியின் 'மனங்கள்' ஒன்பது சிறுகதைகளைக் கொண்ட ஒரு தொகுதி. மலேசியத் தமிழர்களில் பெரும் பகுதியினர் வாழும் தோட்டப்புறப் பின்னணியில் அமையும் கதைகளும், பிற பிரச்சினைகளைத் தழுவி நிற்கும் கதைகளும் இத்தொகுதியில் உள்ளன. கணவன் இறந்த செய்தி வந்தும் அதனை உடனே மனைவியிடம் தெரிவிக்காத ஒரு கிராணியின் செயலைக் கண்டித்துக் குமுறும் ஒரு பெண்ணின் குமுறல் 'மனங்கள் மரத்தால் செய்யப்பட்டவை அல்ல' என்ற சிறுகதை யாகியுள்ளது. தோட்டப்புறத்தையே உலகமாகக் கொண்டு விட்ட பள்ளிச் சிறுவர்கள் தலைநகரைக் கண்டு பெறும் அனுபவங்கள் 'எரு' கதையில் காட்டப்பட்டுள்ளன. சீர்திருத்தப் போர்வையில் பெண்கள் கடத்தப்பட்டு விற்கப்படுவதை 'ஒரு ரோஜாப்பூ உதிர்கிற'தில் காணலாம். தமிழ்ப்பள்ளியின் நிலையை 'மனங்கள்' விளக்குகிறது. காரில் அடிபட்டவன் வாயில் சாராயம் ஊற்றித் தாங்கள் தப்பித்துக் கொள்ளும் சிலரின் செய்கை 'தீர்ப்பு வழங்கப்பட்டு விட்டது' என்ற சிறுகதையாக உருவம் பெற்றுள்ளது. தலைமறைவுப் படையில் சேர்ந்து பின் காவலரிடம் சரணடைந்த ஒரு பெண்ணின் கதை 'புதிய வாழ் வா'க மலர்ந்துள்ளது.

அடுத்த சிறுகதைத் தொகுப்பான 'புறத்தின் ராகங்கள்' தொகுதியிலும் ஒன்பது சிறுகதைகளே உள்ளன. இவற்றின் ஆசிரியர் சிரம்பான் சா. கமலநாதன். இச்சிறுகதைத் தொகுதி மற்ற சிறுகதைத் தொகுதிகளிலிருந்து சற்று வேறுபட்டு நிற்கும் தொகுதியாகும். மலேசிய எல்லையைத் தாண்டிப் பிற நாடுகளின் சூழலில் நிகழும் சில கதைகளே இவ்வேறுபாட்டினைத்

தோற்றுவிக்கின்றன எனலாம். 'நாற்பதாவது தெரு', 'நோவிமிர்' 'பாரிஸ் அமைதி ஒப்பந்தம்' ஆகிய மூன்றும் இவ்வாறு அமையும் கதைகள். முதலாவதும் மூன்றாவதும் வியட்னாம் பின்னணியில் அமைந்தவை. போரால் விளைந்த அவலங்கள் இவற்றில் கதைப் பொருளாகியுள்ளன. ஒரு ரஷ்யப் பெண்ணுக்கும் தமிழ் இளைஞன் ஒருவனுக்கும் இடையில் மலர்ந்த காதலையும் அதன் சோக முடிவையும் மற்ற கதை காட்டுகிறது. பாலியலின் மென்மை யையும் நளினத்தையும் நசுக்கி அருவருப்பின் எல்லைக்குக் கொண்டு போகும் சில சிறுகதைகளும் இத்தொகுதியில் அடங்கியுள்ளன.

க. கிருஷ்ணசாமியின் 'உள்ளக் கோவி'லில் அடங்கியுள்ள எட்டுச் சிறுகதைகளும் மனித உணர்வுகளை அடிப்படையாகக் கொண்டு பின்னப்பட்டவை. மனைவி மக்களாகி ஆண்டுகள் பல கடந்த பின்பும் இளமைக் காதல் ஏற்படுத்திய ஆழமான வடுவைக் காட்டும் சிறுகதை 'உள்ளக் கோவில்'. இதே இளமைக்காதலே 'கண்மணி' என்ற கதையையும் உருவாக்கியுள்ளது. நடுத்தரக் குடும்பத்தின் பொருளாதாரப் போராட்டங்களை அடிப்படை யாகக் கொண்டுள்ள 'அமைதி ஆட்கொண்டது' கதையும் ஒரு குறிப்பிடத்தக்க சிறுகதை.

அமரர் கு. அழகிரிசாமி இங்கு 'தமிழ்நேசனில்' பணியாற்றிய காலத்தில் அவரால் தூண்டப்பட்டு எழுதத் தொடங்கிய பி. எஸ். பரிதிதாசனின் ஏழு சிறுகதைகள் 'பறந்து சென்ற பைங் கிளிக்கு' என்ற தொகுதியாக உருவம் பெற்றுள்ளன. இவர் மொழியாக்கம் செய்த மூன்று மாப்பசான் சிறுகதைகளும் இத்தொகுதியில் இடம்பெற்றுள்ளன. கனகலிங்கத்திற்குப் பூணூல் போட்டு அந்தணனாக்கிய பாரதியின் துணிவை இவர் 'பாரதி செய்த புரட்சி' என்ற பெயரில் சிறுகதையாக்கியுள்ளார். மனித உணர்வில் ஏற்படும் போராட்டங்கள் பிற சிறுகதைகளின் அடிப்படையாகியுள்ளன.

அடுத்த தொகுப்பான 'ஊமைக் காயங்கள்' கெடா மாநில எழுத்தாளர் வாசகர் இயக்கம் வெளியிட்ட தொகுப்பாகும். இவ் வியக்கம் பல ஆண்டுகளாக எழுத்துத்துறையில் பணியாற்றிவரும் ஒரு இயக்கம். தன் உறுப்பினர்களை எழுத்துத்துறையில் ஊக்குவிப்பதற்காக இது பல முயற்சிகளை மேற்கொண்டுள்ளது. அதன் ஒரு பகுதியாகவே இச்சிறுகதைத்தொகுதி வெளிவந் துள்ளது. இதில் பன்னிரெண்டு சிறுகதைகள் உள்ளன. இதே

முயற்சியின் அடிப்படையில் சில ஆண்டுகளுக்கு முன் இவ்வியக்கம் வெளியிட்ட 'பட்டினிக்குருவி' என்ற சிறுகதைத் தொகுதியும் இங்கு நினைவுகூரத் தக்கது.

'ஊமைக்காயங்கள்' தொகுதியில் காணப்படும் கதைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிரச்சினையைத் தழுவி நிற்கின்றது. தைப் பூசத்தில் அருள்வந்து ஆடும் பிரச்சினையை 'முருகன் ஆட்டுவிக்கிறான்' அலசுகிறது. குருடனை ஏமாற்றும் ஒரு தலைவனை 'அட பிச்சைக்கார நாய்களே' இனங்காட்டுகிறது. தோட்டப்புற உருவாக்கத்திற்கும் பொருளாதார வளத்திற்கும் தமிழ்ச் சமூகம் வழங்கிய உழைப்பை 'ரப்பர் மரங்கள்' சுட்டிக் காட்டுகிறது. குடியின் கொடுமைகளைக் காட்டும் சிறுகதை 'விடுதலை' இளைஞர் சமுதாயத்தின் சீரழிவை சிறைப்படும் சிட்டுக்குருவிகள்' படம்பிடிக்க, தவணைக்குப் பொருள்கள் வாங்குவதால் ஏற்படும் தொல்லைகளை 'ஒரு குடும்பம் தேய்கிறது' விளக்குகிறது.

**கவிதை**

சிறுகதையை அடுத்து மலேசியத் தமிழிலக்கியத்தில் கவிதை சிறப்புப் பெற்று விளங்குகிறது. தமிழ்ப் பத்திரிகைகளும் தம் ஞாயிறு பதிப்பில் கவிதைக்கெனத் தனிப் பக்கம் ஒதுக்கிச் சிறப்புச் செய்கின்றன. தமிழகத்துப் பத்திரிகையுலகில் கூடக் காணமுடியாத தனிச்சிறப்பு இது.

ஒவ்வொரு ஆண்டும் நூற்றுக்கணக்கான கவிதைகள் பத்திரிகைகளில் வெளிவந்தாலும், கவிதை நூல்கள் எண்ணிக்கையில் குறைந்தே வெளிவருகின்றன. 1980-இல் இவ்வாறு நான்கு கவிதைத் தொகுப்புக்கள் வெளிவந்துள்ளன. கவிஞர் காரைக் கிழாரின் 'பூச்சரம்', எல்லோனின் 'முத்தாரம்' டி.வி.ஆர் பி.யின் 'சரவணப் புகழ்மாலை' பி.கே. கருப்பையாவின் 'இதயகீதம்' ஆகியவையே அவை.

கவிஞர் காரைக்கிழார் மலேசியத் தமிழ்க்கவிஞர்களில் குறிப்பிடத் தக்கவர். 'அலையோசை' என்ற குறுங்காவியத்தின் மூலமும், 'கணைகள்' என்ற தொகுப்பின் மூலமும், பிற பத்திரிகைக் கவிதைகள்—கவியரங்குகள் மூலமும் இவர் நன்கு அறிமுகமானவர். இவருடைய தமிழுணர்வும் நாட்டுணர்வும் வெளிப்படும் முறையிலேயே 'பூச்சரத்'தின் கவிதைகளும் அமைந்துள்ளன. இப் பிறப்பில் தமிழ் பேசும் வாய்ப்புக் கிடைத்ததற்கே பெருமைப்படும் கவிஞர் அப்பெருமையை,

"முன்னர் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகள்
பண்ணிய தவத்தின் பலனோ அன்றியும்
பாண்டியன் நடத்திய பைந்தமிழ்ச் சங்கத்தை
யான்துடைப் பத்தால் பெருக்கிய கூலியோ
கலவைச் சந்தக் கம்பனுக் கந்தாள்
சலவைக் காரனாய் இருந்ததன் விளைவோ
இந்தப் பிறப்பில் என்நாப் பரப்பில்
சுந்தரத் தமிழ்நீ சுவையாய்ப் படிந்தனை!"

என்று பாடும் போது அவருடைய தமிழுணர்வு நன்கு வெளிப்படு கிறது.

கவிஞர் காரைக்கிழாரின் கவிதைகளில் சந்த உணர்வு சிறந் திருப்பதுடன், அழகிய உவமைகளும் ஆங்காங்கு காணப்படும்.

"தகதக தக்கத் தகவென ஆடும் மயிலோ-எம
தகமகிழ் வுக்குத் தகவிசை பாடும் குயிலோ-தளிர்
நகையது பக்கத் துணையோ-எமதுளம்
நலிவுறப் பாய்விழி கணையோ"

என்பது அவருடைய சந்தப் பாடலுக்கு ஓர் எடுத்துக்காட்டு.

"நீர்க்குமிழி நிமிடத்தில் நொறுங்கிடலாம்! ஆனால் அந்
நீர்க்குமிழி சித்திரத்தில் நூறாண்டு வாழாதோ?"

என்பது அவருடைய உவமைத்திறம் காட்டும்.

கவிஞர் காரைக்கிழாரைப் போலவே பல ஆண்டுகளாகக் கவிதை யுலகில் இருந்து வந்தாலும், 'முத்தார'மே எல்லோனின் முதல் கவிதைத் தொகுதி. கற்பனையழகும் உணர்ச்சிச் சாயல் களும் சரளமான நடையும் கொண்ட பல கவிதைகள் இத் தொகுப்பில் உள்ளன. 'தமிழ்நேசன்' திரட்டிய தமிழ்க்கல்வி நிதிக்காகக் கவிஞர் பாடிய,

"ஊழி முதற்கொண்டே ஊறுகளி லூர்ந்துவந்து
ஆழி புடைப்பினிலும் அஞ்சவில்லை அம்மானை!
ஆழி புடைப்பினிலும் அஞ்சாத தேந்தமிழை
நாழிக் கிணறா நனைத்துவிடும் அம்மானை?
நண்டு செலவேறிக் கொண்டகதை அம்மானை!"

என்ற பாடற்பகுதி அவருடைய சொல்லழகையும் சந்தச் சிறப் பையும் நன்கு எடுத்துக்காட்டும். 'கணக்கு' என்ற பகுதியில்,

"ஒன்றும் ஒன்றும் ஒன்றி வாழ
ஒன்று பிறந்தது—காலம்
சென்ற போக்கில் நின்று நின்று
தேவை வளர்ந்தது!—உயிர்க்
கன்றும் இன்றும் என்று மந்த
ஆவல் நிலைத்தது!—இதைக்
கண்டு கண்டு தெளிந்த படைப்பில்
கணக்கும் முளைத்தது"

என்று வரும் பகுதியும் குறிப்பிடத்தக்கது. 'பிணம் ஒன்று பேசினால்...' என்ற கவிதையில், அது என்னென்ன பேசும் என அழகாகக் கற்பனை செய்துள்ளார் கவிஞர்.

"பணத்தால் பிழைத்தேன்; பணத்தால் உயிர்த்தேன்
பணமே வாழ்வாய்ப் பணமானேன்!
குணத்தால் விலகிக் கயமையில் உழன்று
கூட்டற் கழித்தலில் பிணமானேன்"

என்பது அக்கவிதையின் ஒரு சுவையான பகுதியாகும்.

டி. வி. ஆர். பி. யின் 'சரவணப் புகழ்மாலை' ஒரு சிறிய பக்திப் பாடல் தொகுப்பாகும். சிவசங்கரப் பதிகம் என்ற சிவபெருமான் துதியுடன் காளிதுதி, விநாயகர் துதிப் பாடல்களும் முருகப் பெருமானைப் பற்றிய சில பாடல்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

"பத்துமலை மீதமரும் வேலா...வேல்வேல்!
பக்தர்களைக் காத்துநலஞ் சேர்த்திடவே வாவா...வேல்வேல்!
தத்துவத்தின் நாயகனே வேலா...வேல் வேல்!
சித்தமெலாஞ் சுத்திசெய்யும் வித்தகனே வாவா...வேல்வேல்!

முதலிய பக்திமணம் கமழும் பாடல்கள் பக்தர்களைக் கவரும் ஆற்றல் வாய்ந்தவை.

பி. கே. கருப்பையாவின் 'இதயகீதம்' ஒரு இசைப்பாடல் தொகுப்புநூல். சமயம், சமூகம், கலை, கல்வி, ஒழுக்கம் முதலியவை பற்றிப் பல்வேறு பண்களில் பாடப்பட்ட பாடல்கள் இந்நூலில் உள்ளன. இப்பாடல்களை இசையோடு பாடிப் பதிவுநாடாக்களாகவும் ஆசிரியர் கொண்டுவந்துள்ளார்.

யாப்பை வேலியாகக் கொண்டு பாடப்பட்ட இம்மரபுக் கவிதைகளுடன், யாப்பைச் சிறையாகக் கருதிப் புனையப்படும்

புதுக்கவிதைகளும் அண்மைக் காலத்தில் மலேசியாவில் பெருகி வருகின்றன. 'வானம்பாடி' வார இதழ் இதற்குப் பெரும் தூண்டுதலாக விளங்கி வருகின்றது. சி. கமலநாதன், அக்கினி, இராஜகுமாரன், கனலன், தம்போய் முனியாண்டி கலாராமு முதலிய பலர் இத்துறையில் தனிக்கவனம் செலுத்தி வருகின்றனர் 'விழல் நீர்' என்ற தலைப்பில் அமைந்த,

''கர்த்தரின்
மேய்ச்சல் ஆடுகள்
கருத்தில்
மேய்கின்றன!
விஷப்பூண்டுகள்
மட்டுமே வளரும்
தரிசு நிலத்தில்
அவைகளுக்கென்ன
வேலை?
தற்கொலை
முயற்சியா?''

என்ற கனலனின் புதுக்கவிதை குறிப்பிடத் தக்கதாகும். 'ஓடிப் போன மகளை நினைந்து !'' பாடும் பாட்டில்,

''பருவத்தீ
உன்னைப் பற்றாதிருக்க
நான் தெளித்த
நீர்த்துளிகள்
நெய்யானது
எவ்விதம்?''

என்று வே. இராஜேஸ்வரி கேட்கும்போது அதில் கருத்துக் கூர்மையும் ஓர் அசாதாரணமான அழுத்தமும் இயல்பாகவே படிந்து விடுகின்றன.

**குழந்தை இலக்கியம்**

இலக்கியத்தின் மற்ற வகைகளுக்கு இடமளிக்கும் மலேசியத் தமிழ்ப் பத்திரிகைகள், குழந்தை இலக்கியத்திற்கும் உரிய இடம் அளிக்கின்றன. இவற்றில் திங்கட்கிழமை 'தமிழ்நேசன்' சிறுவர் அரங்கமாக வெளியிடும் ஒரு பக்கம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. தொடக்கநிலைப்பள்ளி மாணவர்களே எழுதும் கதை, கட்டுரை, கவிதை ஆகியவை இங்கு இடம்பெறுகின்றன. இத்துடன் சிறுவர்களுக்காகவே

நடைபெறும் 'திருமகள்' என்ற மாத இதழையும் இங்குக் குறிப்பிட வேண்டும். தொடக்கநிலைப் பள்ளிச் சிறுவர்களையே கருத்தில்கொண்டு இவ்விதழ் செயல்படுகின்றது. அவர்களுக்கு வேண்டிய கதை. கட்டுரை, கவிதை, அறிவுச் செய்திகள் முதலிய பலவும் இவ்விதழில் இடம்பெறுகின்றன. 1969-டிசம்பர் மாதம் முதல் வெளிவரும் இவ்விதழைப் பல சோதனைகளுக்கிடையிலும் விடாது நடத்தி வருகிறார் கவிஞர் சி. வேலுசுவாமி. இவர் கோலாலம்பூர் அப்பர் தமிழ்ப்பள்ளியின் தலைமையாசிரியராகப் பணியாற்றி வருகின்றார்.

'திருமகள்' என்ற இதழை வெளியிடுவதுடன், இவருடைய திருமகள் வெளியீடு, சிறுவருக்கான பல நூல்களையும் அவ்வப்போது வெளியிட்டு வருகின்றது. எளிய நடையில் தரமாகத் தயாரிக்கப்படும் நூல்கள் இவை. இவ்வாண்டில் வெளிவந்த நூல்களில் பொன்முடியின் 'பறவைக்கப்பல்', ந. மகேஸ்வரியின் பிறந்தநாள் பரிசு' சி. வேலுசுவாமியின் 'பழமொழியும் விளக்கமும்' ஆகியவை குறிப்பிடத்தக்க நூல்கள். முதல் நூல் குழந்தைகளுக்கான பத்தொன்பது பாடல்களைக் கொண்டது இரண்டாவது நூல் ஐந்துசிறிய கதைகளின் தொகுப்பு. மூன்றாவது நூல் அன்றாடம் பயன்படுத்தும் 108 பழமொழிகளை எளிய விளக்கத்துடன் சிறுவர்களுக்கு அறிமுகப்படுத்துகிறது.

**கட்டுரை**

மற்ற இலக்கிய வகைகளோடு ஒப்பிடும்போது கட்டுரை இங்கு மிக அரிதாகவே காணப்படுகின்றது. எனினும் இவ்வாண்டு இரு கட்டுரை நூல்கள் வெளிவந்துள்ளன. முதலாவது மு. திருவேங்கடம் எழுதிய 'கோ. சாரங்கபாணி' என்ற வாழ்க்கை வரலாற்று நூல். இரண்டாவது, நாரண. திருவிடச் செல்வன் எழுதிய 'தமிழில் பெயரிடுவோம்' என்ற நூல்.

தமிழவேள் என்று சிறப்பாக அழைக்கப்பெறும் அமரர் கோ. சாரங்கபாணி நாற்பத்தைந்து ஆண்டுகள் மலேசிய-சிங்கப்பூர் தமிழர்களின் வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டவர். ஒரு சிறந்த பத்திரிகையாசிரியராகவும், சீர்திருத்தச் செம்மலாகவும், சமுதாயத் தலைவராகவும் விளங்கிய இவர் பல அருஞ்செயல்களை இங்கு ஆற்றியுள்ளார். எனினும் அவரைப் பற்றிய ஒரு வரலாற்று நூலும் இந்த எழவில்லை. மு. திருவேங்கடத்தின் இந்நூலே அவரைப் பற்றிய முதல் நூல். மிக விரிவாக அமையாவிட்டாலும் தமிழவேளை முறையாக அறிமுகம் செய்து வைக்கிறது இந்நூல்.

அடுத்த நூல், தமிழில் பெயரிட வேண்டியதன் இன்றியமை யாமையை வற்புறுத்தி எழுதப்பட்ட நூல். வழக்கிழந்த சங்க காலத் தமிழ்ப் பெயர்கள், மறைமலையடிகளார் பெயர் மாற்றம், கனியிருப்பக் காயை நாடும் கொடுமை, தவிர்க்க வேண்டிய பெயர்கள் முதலிய பல பொருள்களை உள்ளடக்கியுள்ள இந்நூல், அகர வரிசையில் அழகான தமிழில் அமைந்த மகளிர்-ஆடவர் பெயர்களையும் இறுதியில் பட்டியலிட்டுத் தருகிறது. ஆசிரியரின் தமிழுணர்ச்சி நூல் முழுக்க மணக்கிறது.

நாவல், சிறுகதை, கவிதை, குழந்தை இலக்கியம், கட்டுரை ஆகிய துறைகளில் இவ்வாண்டுப் படைப்புக்களைக் கடந்த ஆண்டுப் படைப்புக்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, மலேசியத் தமிழ் இலக்கியம் வளர்ச்சிப் படியில் ஓர் அடியை எடுத்து வைத்துள்ளதாகவே தோன்றுகிறது. தரமான வாசகர் எண்ணிக்கை பெருகும்போது இது இன்னும் உறுதியையும் பெறும் எண்பதில் ஐயமில்லை.

## மலேசியாவில் 1980-இல் வெளியான தமிழ் நூல்கள்

### நாவல்கள்

'வாளம்பாடியின்' 'மாதம் ஒரு நாவல்' திட்டத்தில் வெளி யானவை:

அக்கினி பட்டுப்புழுக்கள்.
இளஞ்செல்வன், எம். ஏ., மோகங்கள்.
குமணன், ஆதி., தூரத்து நிலவு.
துரைராஜ், எம்., நேரம் வந்துவிட்டது.
துறவி, தெருக்கூத்து.
மகேஸ்வரி. ந., புதிய வாரிசு.
முத்து, எல்., வெளிச்சங்கள் வெளிறுவதில்லை.
முத்துச்சாமி, சீ., விதைகள் பாலைவனத்தில் முளைப்பதில்லை.
வேலுமதி, கம்பார் எஸ்., இதயங்கள்.

### பிற

கொம்பன், சிறை தப்பிய பறவைகள், சாரிகாட் மாசிசன்ஸ், கோலாலம்பூர்.

### சிறுகதைத் தொகுதிகள்

ஊமைக்காயங்கள், கெடா மாநில எழுத்தாளர் வாசகர் இயக்கம், சுங்கைப்பட்டாணி, கெடா.

கமலநாதன், சிரம்பான், சா., **புறத்திண் ராகங்கள்,** சரீனா அச்சகம், கோலாலம்பூர்.

கிருஷ்ணசாமி, க., **உள்ளக்கோவில்,** மலேசியப் புத்தகாலயம், கோலாலம்பூர்.

கோவிந்தசாமி, பி., **மனங்கள்,** சிலாங்கூர் மாநில கூட்டரசு வளாகத் தமிழ் எழுத்தாளர் வாசகர் இயக்கம், கோலாலம்பூர்.

பரிதிதாசன், பி. எஸ்., **பறந்து சென்ற பைங்கிளிக்கு...** மோனா பப்ளிகேஷன்ஸ், சென்னை

**கவிதை**

எல்லோன், **முத்தாரம்,** தமிழ்நேசன் அச்சகம், கோலாலம்பூர்.

கருப்பையா, பி. கே., **இதய கீதம்,** சங்கமணி அச்சகம், பெட்டாலிங் ஜெயா.

காரைகிழார், **பூச்சரம்,** தமிழ்நேசன் அச்சகம், கோலாலம்பூர்.

டி. வி. ஆர். பி., **சரவணப் புகழ்மாலை,** முத்தமிழ் வெளியீடு, கோலாலம்பூர்.

**குழந்தை இலக்கியம்**

பொன்முடி, **பறவைக் கப்பல்,** திருமகள் வெளியீடு, பெட்டாலிங் ஜெயா

மகேஸ்வரி, ந, **பிறந்தநாள் பரிசு,** திருமகள்வெளியீடு, பெட்டலிங் ஜெயா.

வேலுசுவாமி, சி., **பழமொழியும் விளக்கமும்,** திருமகள் வெளியீடு, பெட்டலிங் ஜெயா.

**கட்டுரை**

திருவிடச் செல்வன், நாரண., **தமிழில் பெயரிடுவோம்,** அமுத இல்லம், கூலிம், கெடா.

திருவேங்கடம், மு., **கோ. சாரங்கபாணி,** தமிழ்நேசன் அச்சகம், கோலாலம்பூர்.

கமலநாதன், சிரம்பான், சா., **புறத்தின் ராகங்கள்**, சரீனா அச்சகம், கோலாலம்பூர்.

கிருஷ்ணசாமி, க., **உள்ளக்கோவில்**, மலேசியப் புத்தகாலயம், கோலாலம்பூர்.

கோவிந்தசாமி, பி., **மனங்கள்**, சிலாங்கூர் மாநில கூட்டரசு வளாகத் தமிழ் எழுத்தாளர் வாசகர் இயக்கம், கோலாலம்பூர்.

பரிதிதாசன், பி. எஸ்., **பறந்து சென்ற பைங்கிளிக்கு...** மோனா பப்ளிகேஷன்ஸ், சென்னை

**கவிதை**

எல்லோன், **முத்தாரம்**, தமிழ்நேசன் அச்சகம், கோலாலம்பூர்.

கருப்பையா, பி. கே., **இதய கீதம்**, சங்கமணி அச்சகம், பெட்டாலிங் ஜெயா.

காரைகிழார், **பூச்சரம்**, தமிழ்நேசன் அச்சகம், கோலாலம்பூர்.

டி. வி. ஆர். பி., **சரவணப் புகழ்மாலை**, முத்தமிழ் வெளியீடு, கோலாலம்பூர்.

**குழந்தை இலக்கியம்**

பொன்முடி, **பறவைக் கப்பல்**, திருமகள் வெளியீடு, பெட்டாலிங் ஜெயா

மகேஸ்வரி, ந, **பிறந்தநாள் பரிசு**, திருமகள்வெளியீடு, பெட்டலிங் ஜெயா.

வேலுசுவாமி, சி., **பழமொழியும் விளக்கமும்**, திருமகள் வெளியீடு, பெட்டலிங் ஜெயா.

**கட்டுரை**

திருவிடச் செல்வன், நாரண., **தமிழில் பெயரிடுவோம்**, அமுத இல்லம், கூலிம், கெடா.

திருவேங்கடம், மு., **கோ. சாரங்கபாணி**, தமிழ்நேசன் அச்சகம், கோலாலம்பூர்.

## 1980-இல் பரிசு பெற்ற நூல்கள்

| | நூல் | நூலாசிரியர் | பதிப்பகம் |
|---|---|---|---|
| **1. கவிதை** | | | |
| முதற்பரிசு | மலையும் ஜீவநதிகளும் | நா. காமராசன் | தமிழ்ப் புத்தகாலயம், 58. டி. பி. கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. |
| இரண்டாம் பரிசு | மனித தெய்வம் காந்தி காதை | அரங்க சீனிவாசன் | திருவள்ளுவர் பதிப்பகம், அம்மாக்கண்ணு அம்மையார் திருமணமாளிகை, சின்னச்செட்டி தெரு, திருச்சி. |
| **2. நாவல்** | | | |
| முதற் பரிசு | ஊருக்குள் ஒரு புரட்சி | சு. சமுத்திரம் | மணிவாசகர் நூலகம், 241. லிங்கிச்செட்டி தெரு, சென்னை-1. |
| இரண்டாம் பரிசு | கோடுகளும் புள்ளிகளும் | மாரி அறவாழி | அருணோதயம், இராயப்பேட்டை, சென்னை-14. |
| **3. மொழி இலக்கியம் பற்றிய ஆராய்ச்சி நூல்கள்** | | | |
| முதற் பரிசு | ஷெல்லியும் பாரதியும் | ஜி. ஜான்சாமுவேல் | மணி பதிப்பகம், 18. மன்னப்ப நாயக்கர் தெரு, கோட்டூர், சென்னை-85. |
| இரண்டாம் பரிசு | பழந்தமிழர் வீரப் பண்பாடு | கதிர் மகாதேவன் | இலட்சுமி வெளியீடு, 271. அறிஞர் அண்ணா நகர், மதுரை-20. |
| **4. மானிடவியல், சமூகவியல், பூகோளம், அரசியல் சட்டம்,** | | | |
| முதற் பரிசு | தமிழர் ஆடைகள் | கே. பகவதி | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை-20. |

| | | | |
|---|---|---|---|
| இரண்டாம் பரிசு | தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும் | க. காந்தி | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை-20. |
| 5. குழந்தை இலக்கியம் | | | |
| முதற் பரிசு | அறிவியல் கதைகள் | தமிலன் | அன்பு இல்லம், சென்னை-14. |
| இரண்டாம் பரிசு | எலிகடித்த பூனை | குழ. கதிரேசன் | மீனாட்சி புத்தக நிலையம், 223. திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை-5. |
| 6. தத்துவம், சமயம், அளவியல், அறவியல் | | | |
| முதற் பரிசு | தமிழர் கண்ட மனம் | கரு. நாகராசன் | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை-20. |
| 7. கட்டுரை, வாழ்க்கை வரலாறு, சுயசரிதை, பயண நூல்கள் | | | |
| முதற் பரிசு | அச்சும் பதிப்பும் | மா.சு. சம்பந்தன் | தமிழர் பதிப்பகம், 243. லிங்கிச் செட்டி தெரு, சென்னை-1. |
| இரண்டாம் பரிசு | இலக்கிய மலர்கள் | மு.மு. இசுமாயில் | வானதி பதிப்பகம், தியாகராயநகர், சென்னை-17. |
| 8. கவின் கலைகள் | | | |
| முதற் பரிசு | காலந்தோறும் நாட்டியக்கலை | கார்த்திகா கணேசன் | பாரி புத்தகப் பண்ணை, 58. டி.பி. கோயில்தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. |
| இரண்டாம் பரிசு | தமிழக நாட்டுப்புறக் கலைகள் | ஏ.என். பெருமாள் | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை-20 |

| | | | |
|---|---|---|---|
| 9. வேளாண்மை, கால்நடை வளர்ச்சி, கால்நடை மருத்துவம் முதற் பரிசு | கோழிபராமரிப்பு | செ.க. கோபால கிருஷ்ணன் | நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட், லிமிடெட், 41, பி. சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை-98. |
| முதற் பரிசு | தோட்டவளம் | அருணா இராசகோபால் கா.ஞா. சண்முகவேல் | பாப்புலர் புக் டெப்போ, 37, பாலாஜி சிங் தெரு, சைதாப்பேட்டை, சென்னை-15. |

குறிப்பு : தமிழ் நூல்களில் சிறந்தனவற்றிற்குப் பரிசு வழங்கும் தமிழ் வளர்ச்சி இயக்கத்தின் திட்டத்தின் படி 1975-முதல் 1980 வரை வெளியான நூல்களுக்கு 15-2-1981 திருவள்ளுவர் திருநாள் தினத்தன்று பரிசு வழங்கப்பட்டது. அவற்றில் நிறுவன நூல்கள் நான்கில் இரண்டிற்கு முதற்பரிசும் இரண்டிற்கு இரண்டாம் பரிசும் கிடைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

